# முருக இலக்கிய ஆய்வுக்கோவை

## தொகுதி – I

பதிப்பாசிரியர்கள்

முனைவர் **மோ. கோ. கோவைமணி**
பெரும்புலவர் **ப. வெ. நாகராஜன்**

T 28378



**தமிழ்ப் பல்கலைக்கழகம்**
**தஞ்சாவூர்**

# முருக இலக்கிய ஆய்வுக்கோவை

## தொகுதி 1


பதிப்பாசிரியர்கள்

முனைவர் மோ.கோ. கோவைமணி

பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்





தமிழ்ப் பல்கலைக்கழகம்,

தஞ்சாவூர் - 613 010.

மே 2018

(தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையும் சிரவையாதீனத் தவத்திரு கஜபூசைச் சுந்தரசுவாமிகள் தமிழாய்வு மையமும் இணைந்து நடத்திய அனைத்துலக முருக இலக்கிய மாநாடு மற்றும் கருத்தரங்கக் கட்டுரைகள்)

**தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு எண்: 441**
திருவள்ளுவராண்டு 2049, சித்திரை - மே 2018.

நூல் : முருக இலக்கிய ஆய்வுக்கோவை - தொகுதி 1

பதிப்பாசிரியர்கள்: **முனைவர் மோ.கோ. கோவைமணி**
**பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்**

ISBN : 978-81-936876-3-5

மொழி : தமிழ்

பொருள் : இலக்கியம்

பதிப்பு : முதற்பதிப்பு மே 2018

பக்கம் : xx+560=580

தாள் : மேப்லித்தோ 18.6

அளவு : 1/8 டெம்மி

நூல் கட்டுமானம்: சாதாரண கட்டுமானம்

படிகள் : 450

விலை : ரூ.500/-

கணினியச்சு : பாமொழி கணிப்பொறி வடிவமைப்பகம்
1421, பாரதி நகர்,
தமிழ்ப் பல்கலைக்கழக அஞ்சல்
தஞ்சாவூர் - 613 010.
அலைபேசி : 8903447547

அச்சு : திருவள்ளுவர் ஆப்செட் பிரிண்டர்ஸ், தஞ்சாவூர்.
அலைபேசி : 9892491204

வெளியீடு : தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி அச்சகம்,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.





முனைவர் **க. பாஸ்கரன்**
துணைவேந்தர்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 010.

---

# அணிந்துரை

சங்க கால மக்கள் நிலங்களைப் பிரித்து ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு தெய்வம் என்று நெறிப்படுத்தி வைத்திருந்தனர். தொல்காப்பியர் இதனை,

*மாயோன் மேய காடுரை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலெனச்*
*சொல்லிய முறையால் சொல்லவும் படுமே*

என்கின்றார். இந்த நிலப்பரப்பு முறையில் மைவரை உலகம் என்பது மலையையும் மலையைச் சார்ந்த இடத்தையும் குறிக்கும். இந்தக் குறிஞ்சி நில மக்கள் கொண்டாடிய தெய்வமே முருகன்.

உலகில் மதங்கள் எவ்வளவோ இருந்தாலும் இந்தியாவில் இந்து மதம் தழைத்தோங்கியது. இந்த இந்து மதம் ஆறு பிரிவுகளைக் கொண்டது. இவ்வகையில் சிவனை வணங்குபவர்கள் சைவர்கள் எனவும், விஷ்ணுவை வணங்குபவர்கள் வைணவர்கள் எனவும், சூரியனை வணங்குபவர்கள் செளரர் எனவும், சக்தியை வணங்குபவர்கள் சாக்தர்கள் எனவும், கணபதியை வணங்குபவர்கள் காணாபத்தியர்கள் எனவும், முருகனை வணங்குபவர்கள் கௌமாரர்கள் எனவும் அழைக்கப்பட்டனர்.

குறிஞ்சி நிலத்தில் வாழும் மக்கள் தங்களைக் கொடும் விலங்குகளிடமிருந்தும் இயற்கையின் சீற்றங்களிலிருந்தும் தங்களைக் காக்க வல்லவன் வேலனே என்ற உணர்வில் முருகனைக் காவல் தெய்வமாகவே வழிபட்டு, அவன் கையில் கொண்டிருந்த வேலையும் போற்றி வழிபடலாயினர். எனவே, மலைகளில் வேல்களை நட்டும், மலர் சூட்டி வழிபட்டு வேட்டை ஆடுவதற்கும் அந்த வடிவேலையே பயன்படுத்தி வந்துள்ளனர். இதன்வழி தமிழர்களின் போர் ஆயுதங்களில் வேல் ஓர் சிறப்புமிக்க இடத்தைப் பெற்றுள்ளது.

*தாமரை புரையும் காமர் சேவடி*
*பவளத் தன்ன மேனி திகழொளி*
*குன்றி ஏய்க்கும் உடுக்கை குன்றின்*
*தெரிந்த பசுஉறிந்த அந்தசுடர் நெடுவேல்*
*சேவலன் கொடியோன் காப்ப*
*ஏம வைகல் எய்தின்றால் உலகே*

என்று குறுந்தொகையில் குறிப்பிட்டுள்ளதால் அறியலாம்.

அடியார்கள் தூய்மையான மனத்துடன் ஒருமுறை முருகா என்று நினைக்கினும் அவ்வடியாரது துன்பமாகிய இருமுறை விரைவில் நீங்கும் விரிசுடர் ஞானபானுவாக முருகப் பெருமான் விளங்குகின்றான். முருகனின் பெயரை அன்புடன் ஓதுகின்ற அடியார்களுக்கு அஞ்சுந்தன்மை உண்டான காலத்திலே அப்பெருமானுடைய ஆறுதலையளிக்கும் ஆறுமுகந் தோன்றும், பகைவர்களாலே கடும்போர் தோன்றினால் உடனே அவனது பண்ணவர் பயங்கெடுத்த படைக்கல நாயகமாகிய வேலாயுதந் தோன்றும், அக்குமர நாயகனை மனத்தில் ஒருமுறை நினைத்தவுடன் அப்பரம பிதாவினது அரவிந்தத் தாள்களிரண்டுந் தோன்றும். இதனை நக்கீரர்,

*அஞ்சு முகந்தோன்றில் ஆறு முகந்தோன்றும்*
*வெஞ்ச மரந்தோன்றில் வேல்தோன்றும் - நெஞ்சில்*
*ஒருகால் நினைக்கில் இருகாலுந் தோன்றும்*
*முருகா வென்றோதுவார் முன்*

என்கின்றார். இவ்வாறான முருகப் பெருமானுக்குச் சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, அமெரிக்கா, கனடா, ஸ்விட்சர்லாந்து, இங்கிலாந்து, டென்மார்க், ஸ்வீடன், ஸ்பெயின், ரஷ்யா, சூரிநாம், பிரான்சு, ஹாலந்து, பெல்ஜியம், ஆஸ்திரேலியா, ஜெர்மனி, தாய்லாந்து, வியட்நாம், நேபாளம், பர்மா, ஜப்பான், இந்தோனேசியா, மஸ்கட், கம்போடியா, ஜாம்பியா, தென்னாப்பிரிக்கா, மொரிஷியஸ், போட்ஸ்வானா, கென்யா போன்ற அயலகங்களில் அவனுக்கான கோயில்கள் தோன்றி வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய இலக்கியங்கள் முதல் நடைமுறைக் கால இலக்கியங்கள், பழக்கவழக்கங்கள், வழிபாட்டு முறைகள் ஆகியவற்றில் முருகன் புகழ் பலவாறாகப் பேசப்படுகிறது. இவற்றை ஒருங்கே ஆணவப்படுத்த வேண்டும் என்ற உயரிய நோக்கத்தோடு இத்தகைய மாநாடுகளும் கருத்தரங்களும் நிகழ்த்தப்படுகின்றன. இந்நிலையில் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையும் கோவை சிரவணபுரம் கௌமார மடாலய தவத்திரு கஜபூசைச் சுந்தரசுவாமிகள் தமிழாய்வு மையமும் இணைந்து அனைத்துலக முருக இலக்கிய மாநாடு மற்றும் கருத்தரங்கை 04, 05, 06.05.2018 ஆகிய

மூன்று நாள்களில் கோவையில் நடத்துகின்றனர். இதில் பல்வேறு நாட்டுத் தமிழறிஞர்களும், தமிழகத் தமிழறிஞர்களும், பேராசிரியர்களும், ஆய்வு மாணாக்கர்களும் வழங்கும் இருநூற்று நாற்பத்திரண்டு ஆய்வுரைகளைத் தொகுத்து முருக இலக்கிய ஆய்வுக் கோவை என்ற தலைப்பில் வெளிவந்துள்ள இரண்டு தொகுதிகளும் ஆய்வாளர்களுக்கு முருகனைப் பற்றித் தெரிந்து கொள்ள சிறந்ததொரு ஆவணமாகத் திகழும் என்று உறுதியாக நம்புகிறேன். இந்த முதல் தொகுதியில் 121 ஆய்வுக் கட்டுரைகள் இடம்பெற்றிருக்கின்றன.

இம்மாநாட்டுக் கருத்தரங்கை கோவைக் கௌமார மடாலய வளாகத்தில் மிகச் சிறப்பாக நடத்துவதற்கு உதவிகள் பல நல்கிய சிரவையாதீன முதல்வர் **தவத்திரு குமரகுருபர சுவாமிகள்** அவர்களுக்கு மனமுவந்து நன்றியறிதலைத் தெரிவிப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

கருத்தரங்க நிகழ்வுகளை நன்கு திட்டமிட்டு உருவாக்கி ஆய்வுக் கட்டுரைகளைச் சிறப்பாகப் பதிப்பித்து அளித்துள்ள ஓலைச்சுவடித்துறைத் தலைவர் **முனைவர் மோ.கோ. கோவைமணி** அவர்கள் நம் அனைவரின் பாராட்டுக்குரியவர் ஆவார். இவ்வரிய பணிகளில் உடனிருந்து உதவிகள் நல்கியுள்ள **பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்** அவர்களுக்கும், பல்கலைக்கழகப் பணியாளர்களுக்கும், மடாலய அன்பர்களுக்கும் என்னுடைய பாராட்டுதல்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

20.04.2018

20/4/18

**(முனைவர் க. பாஸ்கரன்)**
துணைவேந்தர்





முனைவர் தவத்திரு
குமரகுருபர சுவாமிகள்
சிரவையாதீனம்
கௌமார மடாலயம்
கோவை - 641 049.

## ஆசியுரை

*திருவிளங்கு முகமதியும் கருணைபொழி விழியும்*
*செங்குமுத மலர்முறுவல் சிறந்தகனி வாயும்*
*மருவிளங்கும் கடப்பமலர்த் தொடைப்புயமும் அபய*
*வரதம்அயிற் படைசூலம் வச்சிரம்சேர் கரமும்*
*உருவிளங்கும் துவர்வடிவம் கமலபதத் துணையும்*
*ஒளிர்தரஅன் னைவர்நாப்பண் ஓங்கும் மயில்பரிமேல்*
*குருவிளங்கும் காட்சிநல்காய் சிரவணமா புரத்தில்*
*குஞ்சரிவள் ளிக்கொடிதோய் குமரகுரு பரனே*

எனத் தமிழர்தம் தனிப்பெருங் கடவுளான முருகப் பெருமானின் வடிவழகையும், கருணையையும் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் குமரகுருபரக் கடவுள் தோத்திரப் பதிகத்தில் பாடியுள்ளார்.

"மும்மணிக் கோவைபல மாலைபல அந்தாதி மூவகைப்பல, இன்னவா முதுநெறிப் பனுவல்பல, புதுநெறிப் பனுவல்பல முத்தமிழ் சுவை வழாமல்" வழங்கியவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார்.

சுவாமிகளை ஞானகுருவாக ஏற்றுக்கொண்டு கோவையில் கௌமார மடாலயத்தைத் தோற்றுவித்தவர் தவக்கடல், தவத்திரு இராமானந்த சுவாமிகள்.

கொலைபுலை தவிர்த்து கௌமார நெறியைப் பரப்பியவர் தவத்திரு இராமானந்த சுவாமிகள். அதில் சதுர்வேத சித்தாந்த சண்மத சமயாதீத அத்துவித கௌமார சபையைத் தோற்றுவித்தர்.

*"சேயைச் சந்ததம் சிந்தனை செய்பவர்*
*வாயை மீறியும் வண்டமிழ் வருமே"*

என்பதற்கேற்பக் கவிக்கடல் கொங்கு நாட்டுக் கச்சியப்பர் எனப் போற்றப்படும் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் இரண்டாம் சந்நிதானங்களாக அருளாட்சி நடத்தியவர்.

முருகப் பெருமானிடம் முறையிடுவோருக்குத் "திருஅளிக்கும்; பெரும் கல்வியும் நல்கிடும்". அதுமட்டுமல்லாமல் "தொண்டர் எண்ணிய யாவும் உடன் அளிக்கும்" என மருதமலை அலங்காரத்தில் முருகனின் கருணையைக் குறிப்பிடுவார்.

உலகப் பெருவேள்வி கண்ட நாயகர் தவத்திரு. கஜபூசைச் சுந்தர சுவாமிகள் ஆவார்.

"வேண்டுநர் வேண்டியாங்கு எய்தருளும் வள்ளல்" எனத் திருமுருகாற்றுப்படையிலும், முன்னியது முடிக்கும் முருகனின் திருவருள்" எனப் பரிபாடல் கூறுகதைப்போல் நம் சுவாமிகள் "எண்ணம் முற்றவும், நிறைவெய்திடப் புரிவான்" எனவும், "எண்ணிய எண்ணியாங்கு செய்திடப் புரிவான்" எனவும் தண்டபாணிக் கடவுள் திருப்பள்ளியெழுச்சியில் கூறுவதைப்போல சந்நிதானங்களை நினைத்துச் செயலைத் தொடங்கும் பொழுது எடுத்துக்கொண்ட செயல் இனிதே நிறைவடையும்.

குருவருளால் சிரவையாதீனமும் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் ஓலைச்சுவடித்துறையும் இணைந்து இதுவரை மூன்று கருத்தரங்குகளை நடத்தியுள்ளோம்.

1998 சூன் திங்களில் தண்டபாணி சுவாமிகள் ஆய்வுக் கருத்தரங்கம் நடைபெற்றது. அதில் 171 ஆய்வாளர்கள் தங்கள் ஆய்வுக் கட்டுரைகளை வழங்கினார்கள். அவை இரு தொகுதிகளாக வெளியிடப்பட்டன.

2007 திசம்பர் திங்களில் முருகன் இலக்கிய ஆய்வுக் கருத்தரங்கம் நடைபெற்றது. 170 ஆய்வுக் கட்டுரைகள் இரு தொகுதிகளாக வெளியிடப்பட்டன.

2013இல் திருக்குறள் ஆய்வுக் கருத்தரங்கம் நடைபெற்றது. அதில் 144 ஆய்வுக் கட்டுரைகள் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக வெளியிடப்பட்டது. அடுத்ததாக நான்காவது கருத்தரங்கம் அனைத்துலக முருக இலக்கியக் கருத்தரங்கம் நடைபெறவுள்ளது. 242 ஆய்வுக் கட்டுரைகள் இரு தொகுதிகள் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடுகளாக வெளியிடப்பட்டுள்ளன.

இவை தவிர 1999இல் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் நினைவுப் பொன்விழாக் கருத்தரங்கமும், 2003இல் தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் 75ஆவது அவதார விழாக் கருத்தரங்கமும் நடைபெற்றது.

2001இல் சுவடியியல் பயிலரங்கம் ஒன்று நடத்தப்பட்டது. பல்வேறு கல்லூரிகளில் இருந்து ஆசிரியப் பெருமக்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது. 2007ஆம் ஆண்டு தேசியச் சுவடிகள் பாதுகாப்பு இயக்ககம், தஞ்சாவூர் சரசுவதிமகால் நூலகம் ஆகியவற்றுடன் இணைந்து சுவடியியல் பயிலரங்கம் நடத்தப்பட்டது.

தமிழக வரலாற்றில் தமிழ்ப் பல்கலைக்கழகத்துடன் ஆதீனம் இணைந்து முதல் முதலில் கருத்தரங்கம் நடத்திய பெருமை சிரவையாதீனத்திற்கு உண்டு என்பதில் மகிழ்வடைகிறோம்.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர் க. பாஸ்கரன் அவர்கள் இக்கருத்தரங்கம் செம்மையாக நடைபெறுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துள்ளார்கள்.

அனைத்துலக முருக இலக்கிய மாநாட்டில் கலந்துகொண்டு ஆய்வுக் கட்டுரைகளை வழங்கிய ஆய்வாளர்களுக்கும், இந்த நற்பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு சிறப்பாகப் பணியாற்றிய கருத்தரங்கக் குழுவினர் அனைவரையும் பாராட்டுவதோடு அவர்கள் அனைவரும் வாழ்வில் எல்லா நலன்களும் நிறைவாகப்பெற்று நீடு இனிது வாழ எல்லாம் வல்ல முருகப்பெருமானின் திருவடிகளை வணங்கி வாழ்த்துகிறோம்.

20.04.2018 தவ. குமரகுருபர சுவாமிகள்

ஆதீன முதல்வர்

முனைவர் **க. இரவீந்திரன்**
இயக்குநர்

பதிப்புத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 010.

# பதிப்புரை

தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை அரிய நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது. இதுவரை 500க்கும் மேற்பட்ட நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. தமிழ்மொழி, இலக்கியம், இலக்கணம், சுவடிப் பதிப்புகள், கலைகள், அறிவியல், தொழில்நுட்பம், மொழிபெயர்ப்புகள், அகராதிகள், களஞ்சியங்கள், சுவடி விளக்க அட்டவணைகள் எனத் துறை சார்ந்த இந்நூல்கள் அனைத்தும் அரிய கருவூலங்களாகத் திகழ்கின்றன. இவ்வகையில் தற்போது முருக இலக்கிய ஆய்வுக்கோவை - தொகுதி 1 எனும் இவ்வரிய நூல் உங்கள் கைகளில் தவழ்கிறது. தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையும், கோவை கௌமார மடாலய தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் தமிழாய்வு மையமும் இணைந்து நடத்திய அனைத்துலக முருக இலக்கிய மாநாடு மற்றும் கருத்தரங்கில் படிக்கப்பட்ட தமிழ்க் கடவுளாம் முருகனைப் பன்முக நோக்கில் ஆராய்ந்து எழுதப்பட்ட 121 ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பாக இந்நூல் வெளிவந்துள்ளது.

இந்நூல் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக வருதல் வேண்டும் என அறிவுறுத்தியதோடு நூல் சிறந்த முறையில் வெளிவருவதற்கு அனைத்து ஒத்துழைப்பையும் நல்கி ஆற்றுப்படுத்தி உதவிய தமிழ்ப் பல்கலைக்கழக மாண்பமை துணைவேந்தர் **முனைவர் க. பாஸ்கரன்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்பணிக்கு ஆக்கமளித்த பதிவாளர் **முனைவர் ச. முத்துக்குமார்** அவர்களுக்கும், அனைத்துலகக் கருத்தரங்கினை நடத்தித் முருகனுக்கு மேலும் பெருமை சேர்த்துள்ள கோவை கௌமார மடாலயத் தலைவர் **தவத்திரு முனைவர் குமரகுருபர சுவாமிகள்** அவர்களுக்கும், கட்டுரைகளைப் பெற்று, வல்லுநர்கள் வாயிலாக நுண்ணாய்வு செய்து, வடிவமைத்து, நூல் உருவில் அளித்த பதிப்பாசிரியர்கள் **முனைவர் மோ.கோ. கோவைமணி** மற்றும் **பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்** ஆகியோர்களுக்கும், அச்சுக்கோப்புப் பணியை முடித்தளித்த தஞ்சாவூர் பாமொழி கணிப்பொறி வடிவமைப்பகத்தினர் மற்றும் நூலினை நன்முறையில் குறுகிய காலத்தில் அச்சிட்டளித்த தஞ்சாவூர் திருவள்ளுவர் ஆப்செட் பிரிண்டர்ஸ் நிறுவனத்தார் ஆகியோர்க்கும் என் நன்றி உரியதாகும்.

முருகனைப் பற்பல கோணங்களில் ஆய்ந்துரைக்கும் இந்நூல் தமிழ் ஆய்விற்கும் முருகனின் சிறப்பை மேலும் நன்கறிந்து கொள்ளுவதற்கும் பெரிதும் உதவும். தமிழுலகம் இதனை நன்கு பயன்படுத்திக் கொள்ளும் என நம்புகிறேன்.

# பதிப்பாசிரியருரை

முருகன் தமிழரின் தனிப்பெரும் கடவுள், கொற்றவையும் கொற்றவை சேயான முருகனும் தமிழர் பண்பாட்டு வாழ்வியலில் நீங்கா இடம்பெற்றவர்கள். தமிழில் முருகன் பற்றிய இலக்கியங்கள் ஏராளமாக உள்ளன. அவை அனைத்தும் பன்முக ஆய்வுகளுக்குக் களமாக அமைவன.

தமிழகத்திலுள்ள சமய மடங்களில் சிரவை ஆதீனம் மட்டுமே கௌமாரத்தை - முருக வழிபாட்டை - முழுமுதற் பொருளாகக் கொண்டு துலங்குகிறது. இங்கே அறு சமயங்களுக்கும் திருக்கோயில்கள் உள்ளன. இம்மடாலயத்தின் தலைவர்கள் தமிழும், சமயமும், திருக்கோயில்களும் செழித்து வளர அயராது அரும்பாடுபட்டு வருகிறார்கள்.

சிரவை ஆதீன ஆதி குருமுதல்வர் தவத்திரு இராமானந்த அடிகளார், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் வகுத்த கௌமார இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர்; தமிழறிவு மிக்கவர். இவ்வாதீனத்தின் இரண்டாவது குரு முதல்வராக விளங்கியவர் தவத்திரு கந்தசாமி சுவாமிகள். தமிழ்ப் பெருங்கவிஞராக விளங்கியவர் இவர். இவருடைய தலைமாணாக்கர் தவத்திரு சுந்தர சுவாமிகள் மூன்றாவது குரு முதல்வராகப் பெரும்புகழோடு விளங்கியவர். மிகச் சிறப்பான உலகப்பெரு வேள்வியாகிய 108 கஜபூசையைச் சிரவைக் கௌமார மடாலயத்தில் செய்ததால் கஜபூசைச் சுந்தர சுவாமிகள் என அன்பர்களால் கொண்டாடப் பெற்றவர். சிறந்த இலக்கியச் சொற்பொழிவாளராகவும் கவிஞராகவும் திகழ்ந்தவர். தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையுடன் நெருங்கிய அன்பு கொண்டவர்.

இவர்கள் காட்டிய அருள்நெறியில் இப்பொழுது இந்த ஆதீனத்தின் நான்காவது குரு முதல்வராகத் திகழ்பவர் முனைவர் தவத்திரு குமரகுருபர சுவாமிகள். திருமுருகனின் திருநாமம் கொண்ட இவர் தலைசிறந்த தமிழ்ப் பற்றாளர். தஞ்சாவூர்த் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் 1997ஆம் ஆண்டு நடைபெற்ற ஆறாவது உலகச் சைவ மாநாட்டிற்கு இவர்கள் வருகை புரிந்த பொழுது ஓலைச்சுவடித்துறைக்கும் வருகை தந்து சிறப்பித்தார்கள். அதன் தொடர்ச்சியாக இதுவரை மூன்று மாநாடுகள் நடத்தப்பெற்றுள்ளன.

முதலாவதாக, வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இலக்கிய ஆய்வு மாநாடு மற்றும் கருத்தரங்கினை 19,20,21.06.1998 ஆகிய மூன்று நாள்கள் நிகழ்த்தி 171 ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய தண்டபாணி சுவாமிகள் ஆய்வுமாலை இரண்டு தொகுதிகள் தண்டபாணி சுவாமிகளின் நினைவு நூற்றாண்டு விழா வெளியீடாக வெளியிடப்பெற்றன. இரண்டாவதாக, தமிழ்க்

கடவுள் முருகன் இலக்கிய ஆய்வு மாநாடு மற்றும் கருத்தரங்கினை 27,28,29.12.2007 ஆகிய மூன்று நாள்கள் நிகழ்த்தி 170 ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய முருகன் இலக்கிய ஆய்வுமாலை இரண்டு தொகுதிகள் தமிழ்க் கடவுள் முருகன் இலக்கிய ஆய்வு மாநாட்டு வெளியீடாக வெளியிடப்பெற்றன. மூன்றாவதாக, திருக்குறள் பதிப்பின் 200ஆம் ஆண்டு ஆய்வுத் தேசியக் கருத்தரங்கை 26,27,28.04.2013 ஆகிய மூன்று நாள்கள் நிகழ்த்தி 144 ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய திருக்குறள் ஆய்வுமாலை தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக (வெளியீட்டு எண்:392) வெளியிடப்பெற்றன.

தற்போது அனைத்துலக முருக இலக்கிய மாநாடு மற்றும் கருத்தரங்கை 04,05,06.05.2018 ஆகிய மூன்று நாள்கள் நடத்திட சிரவையாதீனக் குருமுதல்வர் தவத்திரு குமரகுருபர சுவாமிகள் பேருதவி அருளியிருக்கிறார்கள். இம்மாநாட்டில் 242 ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய முருக இலக்கிய ஆய்வுக்கோவை இரண்டு தொகுதிகள் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக வெளியிடப்பெறுகின்றன (வெளியீட்டு எண்:441 மற்றும் 442). முதல் தொகுதியான இந்நூலில் 121 ஆய்வுக் கட்டுரைகள் இடம்பெற்றிருக்கின்றன. நூற்றுக்கணக்கான பேராளர்களும், பார்வையாளர்களும் கலந்து கொள்ளும் இம்மாநாட்டுக் கருத்தரங்கை அனைத்து நிலைகளிலும் போற்றத்தக்கதாகும்.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் மட்டுமே உள்ள சிறப்பான புலங்களுள் ஒன்று சுவடிப்புலம். இதில் அடிப்படையாக உள்ளது ஓலைச்சுவடித்துறை. பழந்தமிலுள்ள இலக்கியங்களைப் பாதுகாத்தும் பதிப்பித்தும் வெளியிடுவது இத்துறையின் தலையாய நோக்கமாகும். வெளிவராத நூல்களையும் ஆவணங்களையும் தேடித் தொகுப்பதும் இத்துறையின் பணியாகவுள்ளது. இவ்வகையில் பல்துறை சார்ந்த மாநாடுகளையும் கருத்தரங்குகளையும் இத்துறை தொடர்ந்து நடத்தி வருகிறது. தமிழ்க் கடவுள் முருகன் தொடர்பான இலக்கியங்களைத் தொகுத்து ஆய்வது என்பது ஒரு பெரும் பணியாகும். அதன் தொடக்க நிகழ்வாக இம்மாநாட்டுக் கருத்தரங்கு அமைந்துள்ளது.

சங்க இலக்கியங்களில் முருகன், காப்பியங்களில் முருகன், பன்னிரு திருமுறைகளில் முருகன், வைணவ இலக்கியங்களில் முருகன், முருகனைப் போற்றும் சிற்றிலக்கியங்கள், புராணங்களில் முருகன், முருகன் தலபுராணங்கள், இலக்கணங்களில் முருகன், கௌமாரத் தத்துவம், இசைத்தமிழில் முருகன், நாடகத் தமிழில் முருகன், நாட்டுப்புறப் பாடல்களில் முருகன், குமரகுருபரர், அருணகிரிநாதர், பாம்பன் சுவாமிகள், தண்டபாணி சுவாமிகள், கந்தசாமி சுவாமிகள், வாரியார் சுவாமிகள் போன்றோர் பற்றிய முருகன், முருகன் வழிபாட்டு முறைகள், திருமுருகன் திருவிழாக்கள், பழமொழிகளில் பாலமுருகன், அச்சில் வராத ஆறுமுகன் பாடல்கள், அயல்நாடுகளில் அறுமுகன் வழிபாடுகள், செவ்வேளின் சிற்ப வடிவங்கள், நெஞ்சையள்ளும் முருகன் ஆலயங்கள்,

சைவமும் முருக வழிபாடும், முருக வழிபாட்டில் ஆதீனங்கள், முருகன் அடியார்கள் போன்ற பல அமர்வுத் தலைப்புகளின் அடிப்படையில் 242 கட்டுரைகள் அமைந்துள்ளன. இக்கட்டுரைகளை வழங்கியுள்ள பேராளர்கள் அனைவரும் மிகவும் பாராட்டுக்குரியவர் ஆவர். பலரும் ஆர்வமும் ஈடுபாடும் கொண்டு மிகச் சிறப்பாக எழுதியுள்ளனர். கட்டுரைகள் ஆசிரியர் வரிசையில் அகரவரிசைப்படி இரண்டு தொகுதிகளிலும் தனித்தனியாக அமைக்கப்பட்டுள்ளன. இவற்றை அமர்வு வாரியாகவோ பொருள் வாரியாகவோ பிரிக்க இயலாத சூழல். இயன்றவரையில் பிழைகளில்லாமல் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

இவ்வாய்வுக் கோவையில் இடம்பெற்றிருக்கும் கட்டுரைக் கருத்துகட்குக் கட்டுரையாசிரியர்களே பொறுப்பாவர். குறையும் நிறையும் அவர்களைச் சார்ந்தனவே. பல கட்டுரைகள் மேலாய்விற்குரியன. பல செய்திகள் ஆழமான சிந்தனைக்குரியன. தமிழ்க் கடவுள் முருகன் இலக்கிய ஆய்வுக் களஞ்சியமாக உருவாக இவை பெருந்துணை புரிவன.

இம்மாநாட்டுக் கருத்தரங்கின் புரவலர்களாக விளங்கும் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மாண்புநிறை பேராசிரியர் **முனைவர் க. பாஸ்கரன்** அவர்களுக்கும், சிரவை ஆதீன முதல்வர் **முனைவர் தவத்திரு குமரகுருபர சுவாமிகள்** அவர்களுக்கும் எங்கள் பணிவான வணக்கங்களை உரித்தாக்கி மகிழ்கின்றோம். இம்மாநாட்டின் ஒருங்கிணைப்பாளராக விளங்கும் தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிவாளர் **முனைவர் ச. முத்துக்குமார்** அவர்களுக்கும் எங்கள் அன்பும் பாராட்டும் என்றும் உரித்தாகும். சுவடிப்புல ஆசிரியர்கள், ஆதீன ஆய்வு மையத்தின் ஆய்வாளர்கள், பல்கலைக்கழக அலுவலக அன்பர்கள், ஆதீன அலுவலர்கள் ஆகிய அனைவருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். தனித்தனியாக மலர்ந்த கட்டுரை மலர்கள் எழிலும் மணமும் பெற்றதொரு கோவையாக உருப்பெறுவதற்கு எல்லா நிலைகளிலும் உழைத்த அனைத்து அன்புள்ளங்களுக்கும் எங்கள் நன்றியை உரித்தாக்கி மகிழ்கிறோம். முருக இலக்கிய ஆய்வுக்கோவைக்கு இறுதி வடிவம் கொடுத்துப் பொலிவூட்டிய தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை இயக்குநர் **முனைவர் க. இரவீந்திரன்** அவர்களுக்கும், இவ்ஆய்வுக்கோவைத் தொகுதியை மிகக் குறுகிய காலத்தில் அழகுற அச்சிட்டு வழங்கித் துணைபுரிந்த தஞ்சாவூர் திருவள்ளுவர் ஆப்செட் பிரிண்டர்ஸ் நிறுவனதினருக்கும் எங்கள் மனம் நிறைந்த பாராட்டினையும் நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இம்மாநாடும் கருத்தரங்கமும் நூல் வெளியீடும் வெற்றி பெறப் பல்வேறு நிலைகளில் உடனிருந்து ஒத்துழைப்பு நல்கிய அனைத்து அன்புள்ளங்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகும்.

- **பதிப்பாசிரியர்கள்.**

# பொருளடக்கம்

# முருகனுக்கு மூவாறு கண்கள்

சிரவை ஆதீன கர்த்தர்
**தவத்திரு. குமரகுருபர சுவாமிகள்**
கௌமார மடாலயம், கோவை.

நம் தமிழ் நாட்டில் குறிஞ்சி நிலத் தலைவனாகவும் மொழிக்கும் வாழ்க்கை நெறிக்கும் முதல்வனாகவும் கருதப்படுவதுடன் முருகப்பெருமான் பரம்பொருளாகவே போற்றப்படுகிறார். சைவ சமயம் ஆறுமுகனை ஐந்து முகச் சிவனாகவே பாவிக்கிறது. தமிழ்ப் பக்தி இலக்கியத்தில் கணிசமான பகுதி கந்தவேளின் புகழ்பாடுவதாகவே உள்ளது.

பொதுவாகக் குமரவேள் ஒரு தலை, 2 கண்கள், 2 கைகளை உடையவராகவும் சில இடங்களில் நான்கு கைகள், ஆறுதலை 12 கண்கள் 12 கரங்களை உடையவராகவும் வணங்கப்படுகிறார். ஆகம சிற்ப நூல்களில் இவற்றைத் தவிர வேறு சில வடிவங்களும் கூறப்பட்டுள்ளனவாயினும் வழக்கில் மேற்கண்ட இருவடிவங்களே மிகுதி.

திருமுறைகள் முதல் இன்றுவரை இந்த ஆறுமுக வடிவமே பன்னிரண்டு கண்களை உடையதாகப் பெரும்பான்மையாகக் கூறப்பட்டுள்ளது.

*"பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்"*(தேவாரம் 6-18-4)

என்பது வாகீச வேதம்.

*"முழுமதி அன்ன ஆறு முகங்களும். முந்நான்கு*
*ஆகும் விழிகளின் அருளும்"* (கந்தபுராணம் 1-20-126)

என்பார் கச்சியப்ப சிவாசாரியார்.

*"தண்ணளி தரும் ஒரு பன்னிரு விழிபயில்*
*சண்முக அழகிய பெருமாளே"* [1135]

என்பது திருப்புகழ் அமுதம்.

*"காணாயோ பன்னிரண்டு கண்கள் கொண்டோய்"* [1-6-4]

என்பது திருவருட்பா.

தேவார காலத்திலிருந்து இன்றுவரை இந்த வடிவமே பெரும்பான்மையாக வழிபாட்டில் இருந்தாலும் முகத்திற்கு மூன்று கண்கள் வீதம் மொத்தம் பதினெட்டுக் கண்களை உடையவராக முருகப் பெருமானைச் சில சாத்திரங்கள் கூறுகின்றன. முருகவேளின் வழிபாட்டுமுறைகளைக் கூறும் குமாரதந்திரம் என்னும் வடமொழி நூல் கந்தனின் பல வடிவங்களுள் ஒன்றாகிய சிகிவாகனர் என்னும் விக்கிரக அமைப்பை,

*"ஆறுமுகங்களும் முகங்கள் தோறும்*
*மும்மூன்று கண்களும் முகங்கள் தோறும்*
*கேடகம், கட்கம், சூலம், அபயம், தீ, வில்*
*சக்கரம், பாசம், குக்குடம், அங்குசம், வரதம்*
*இவற்றை ஏந்திய பன்னிரு கைகளும் உடையவர்*
*செம்பட்டுடுத்திச் செம்மலர் செம்மணி*
*மாலைகளை அணிந்து, பிறை சூடி மயில்*
*வாகனத்தின் மீது வீற்றிருப்பவர்"*

என வருணிப்பதாக மகாவித்வான் சு. தண்டபாணி தேசிகர் தம் முருகன் என்னும் அரிய நூலில் குறிப்பிட்டுள்ளார். (பக்கம் 77. முருகன் - திருவாவடுதுறை ஆதீனப் பதிப்பு 2008). தமிழில் திருச்சிற்றம்பல நாடிகள் தம் திருச்செந்தூர் அகவலுள்,

*"முளரி முந்நான்கும் மூவிரு குமுதம்*
*வளர்மதி உதயத்திடை வளர்ந்தன போல*
*முகந்தொறும் கருணை உகந்த கண்களும்"* (அடிகள் 53-55)

எனக் குறிப்பிட்டுள்ளார். இவர் காலம் கி.பி.14 ஆம் நூற்றாண்டு.

கௌமாரம் என்னும் புதிய மெய்யியல் கோட்பாட்டோடு கூடிய வழிபாட்டு முறையை வகுத்தருளியுள்ளவர் முருகதாச அடிகள் எனவும் வழங்கப்படும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார் (இவர் காலம் 1839 - 1898). இச்சுவாமிகள் முருகக்கடவுளை முழுமுதற் கடவுளாகக் கொண்ட ஒரு கௌமாரர். இவர் கந்தவேளைப் பற்றிப் பல்லாயிரம் செய்யுட்களை இயற்றிள்ளார். அவை தோத்திரம், சிற்றிலக்கியம், புராணம், சாத்திரம் எனப் பல வடிவங்களுள் உள்ளன. இவர் முருகப் பெருமானைப் பதினெட்டுக் கண்களை உடையவராகவே சித்திரித்துள்ளார். அத்துடன் அவரை பன்னிரு விழிகளை உடையவராகக் காட்டுதல் சிறப்பற்றது ஆகும் என்றும் சொல்லுகிறார்.

சிவ குடும்பத்தில் ஈசன், அம்பிகை, விநாயகர் ஆகிய மூவருக்கும் நெற்றிக்கண் இருக்கும் போது அவ்வில்லத்தின் செல்வக்குமாரனாகிய முருகப்பெருமானுக்கு அந்தக் கண் இல்லை எனில் அது அறிவுக்குப் பொருந்தாதது என்பது சுவாமிகள் கருத்து. மேலும் சண்முகப் பெருமான் அரனின் அழல்விழியாலேயே தோன்றியவர் என்பதை விதந்துரைக்கிறார்.

முருகப்பிரானின் நெற்றிக் கண்களைக் கணக்கில் கொள்ளாததற்குக் காரணம் அவை அழித்தற்குரிய தீக்கண்களாக இருத்தல் பற்றித்தான் என்பதனையும் அவர் சுட்டியுள்ளார். ஆனால் அவற்றை மறைக்க வேண்டியது இல்லை என்பது வண்ணச்சரபர்தம் கருத்து.

*அக்கினிக் கண்ணால் அரன் ஈன்ற மைந்தனுக்கு அச்*
*சக்கு இலை என்பாரும் தவத்தரோ?*

(பழனித் திருவாயிரம், வெண்பாமாலை 49)

*"அட்சம் ஆறு இரண்டு உள்ளாய் எனத் துதி செய்து*
*அழல்விழி ஆறையும் மறைப்பார்*
*புள்ச்சரபம் போல் பொலிவதால் அடியேன்*
*புழுங்குவது உணர்ந்து அருள் புரிவாய்"*
(மேலது, குருபரமாலை 23)

*பாலத்து உறும் கண்கள் ஆறும் கரந்தார் தமக்கும் சில்சீர்*
*ஞாலத்தில் எய்தச் செய்தாய்; என்னை ஆளாதல் ஞாயம் கொலோ?*
(மேலது, பதிற்றுப்பத்தந்தாதி 89)

*"வம்பராய், நீ எரிக்கண் இலி என்றவரும் அன்பர் போல்*
*நீடு உவப்புறல் உணர்ந்து மிக வெம்புவேன்"*
(மேலது, நவமணிமாலை 63)

*"ஓர் ஆறு நுதல் விழி உண்டு உனக்கு எனவும் தெரியார்பால்"*
(குன்றக்குடிக் கலம்பகம், 1 தாழிசை 2)

என்பன போல வண்ணச்சரபர் தம் இக்கருத்தை பலப்பல இடங்களில் வெளிப்படுத்தி உள்ளார். இவை யாவும் எதிர்மறை அணுகு முறை.

நேரடியாக ஆறுமுகப் பெம்மானை வருணிக்கும் போது மட்டுமே சுவாமிகள் பதினெட்டுக் கண்களைக் குறிப்பிடுகிறார். ஆறுமுகமும் பன்னிரண்டு கரங்களும் என ஏராளமான பாடல்களுள் பதிவு செய்யும் வண்ணச்சரபர் மிக மிகச் சில இடங்களில் மாத்திரம் மூவிரு விழிகளைக் கூறுகிறார்.

தன் குறி வழக்கம் மிக எடுத்துரைத்தல் என்னும் இலக்கிய உத்திப்படி, வண்ணச்சரபர் "முருகனுக்குக் கண்கள் மூவாறு" என்னும் தம் கோட்பாட்டை வாய்ப்புக் கிட்டும்போது எல்லாம் வலியுறுத்தி இருப்பார் என எதிர்பார்க்கலாம். ஆனால் நிலைமை அப்படி இல்லை மிகமிகக் குறைந்த செய்யுள்களிலேயே இக்கருத்து இடம்பெற்றுள்ளது. சேதுபதி சமத்தானத்தில் சுவாமிகளுக்குச் சமஸ்தி ஆகக் "கண்விண் பெண் பொன்பன் கனி" என்னும் வெண்பா ஈற்றடி கொடுக்கப்பட்டபோது அவர்,

*"முருகனுக்கு மூவாறு, முன்புதொட்டுக் காத்தல்,*
*உருகும் மயல் ஈதல், உறு பூண்ட பெருகு செவி*
*யுள் மகிழ்ச்சி சேர்ப்பது, உலகதனைச் சூழவிடல்*
*கண்விண் பெண் பொன்பண் கனி"*

எனப் பாடினார். நிரனிறை அமைந்த இந்த வெண்பாவில் முருகனுக்கு மூவாறு கண் எனத் தெளிவாகவும் அழுத்தமாகவும் சொல்லப்பட்டுள்ளது.

மயிலாசலக் கலம்பகத்துள் அத்தலத்தின் மணக்கோல முருகன் ஒரு தலை உடையவர் ஆதல் பற்றி அவ் வடிவத்தை,

*"முகன் ஒன்றும், விரி கருணை விழி மூன்றும்"* (செய்யுள் 1,தரவு 2)

எனச் சுட்டுகிறார். இதனைப் போலவே சுவாமிகள் தம் ஏழாயிரப் பிரபந்தப் பகுதியாகிய முருகன் ஆயிரப் பனுவலுள்,

*"மூன்று கண் முகம் தோறும் உடைய சண்முக!"*

(முருகன் ஆயிரம் 20;11)

என்கிறார். அறுமுக வொருவனைப் பற்றி வண்ணச்சரபர்,

*"விழி மலர் மூவாறு உடைய வேதியனே"*

(செந்தினாயக சதகம் 81)

*"அங்கிவிழி ஆறும் அருள் துன்னுவிழி பன்னிரண்டும்"*

(திருச்செந்தூர் உலா. கண்ணி 42)

*"கனல் ஆர்தரு மூவிரு கண்களொடு*
*அருள் வழிதரு விழி பத்தோடு இரண்டும்"*

(சாந்தமாலிகைத் திருப்புகழ் 95)

எனக் குறிப்பிட்டுள்ளார். இவையாவும் திருச்செந்தூர் பற்றியன என்பது கவனிக்கத் தக்கது.

இவ்வாறே சண்முகநாதப் பெருமான் எழுந்தருளியுள்ள குன்றக்குடியைப் போற்றும் போதும்,

*"கனல்விழி இலங்கும் குளம் ஓர் ஆறு உடைக் குரவனை"*

(கலம்பகம், 53)

*"மண்டலம் மூன்றா மலர் விழி வனப்பும்"* (மேலது, 65)

*"மன்னும்மா முகங்கள் ஆறும் மலர் விழித் தொகை மூவாறும்"*

(மேலது 71)

*"பொழிதரும் கருணை விழிகள் ஈர் ஆறும்*
*பொறி உமிழ் கண்கள் ஓர் ஆறும்"* (மேலது 79)

எனப் பதினெட்டுக் கண்களை விதந்துரைக்கிறார்.

வண்ணச்சரபரின் இந்த இலக்கியமரபை உற்று நோக்கினால் முருகனுக்குக் கண்கள் மூவாறு என்னும் தம் கோட்பாட்டை ஆறுமுகனாகக் கூறும் போது அதிகமாக வலியுறுத்துவதாகவும், பிறவடிவ வர்ணனைகளில் விழித்தொகையைக் கூறாமல் விட்டுவிடுவதையும் காணலாம். ஆனால் எந்த ஓர் இடத்திலும் பன்னிரண்டு கண்களை உடையவன் எனக் கூறப்படவே இல்லை.

# முருகனருள் பெற்ற அருளாளர்கள்

**முனைவர் இரா. அகிலா**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை
தாகூர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி
இலாசுபேட்டை.

சேயோன் மேய மைவரை உலகம் என்கிறார் தொல்காப்பியர். குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருப்பான் என்பது சான்றோர் கருத்து. எனவே, பாரத நாட்டில் முருகன் வழிபாடு தொன்றுதொட்டு நிகழ்ந்து வருகிறது. முருகன் என்ற சொல்லுக்கு இளமை, அழகு என்று பொருள்.

*முருகனின் மறுபெயர் அழகு - அந்த*
*முறுவலில் மயங்குது உலகு*
*குளுமைக்கு அவன் ஒரு நிலவு - நீ*
*குமரா என சொல்லி பழகு*

என்ற பாடல் முருகனின் அழகினையும், கருணையினையும், பற்றிக் கூறுகிறது. எனவே, குறிஞ்சி நிலக்கடவுளாகிய முருகன் அறுபடை வீடுகளைக் கொண்டுள்ளான் என்பதை இலக்கியங்கள் பறை சாற்றுகின்றன. இந்து மதம் ஆறு பிரிவுகளையுடையது. சைவம், வைணவம், சாக்தம், கணாதிபத்யம், சௌரம், கௌமாரம் ஆகும்.

இவ்வாறு 'சமயத் தத்துவங்களில்' கௌமாரம் முருகனை வழிபடும் தெய்வமாகக் கொண்டது. முருகன் இத்தத்துவத்தின் ஒளிச்சுடராய் விளங்குபவனாவான். இதில் மூலவர் ஒருவனே அவன்தான் இந்த உலகத்தைப் படைத்து, காத்து, அழித்து நிற்கின்றான். மக்களின் இன்பமயமான வாழ்க்கைக்கு வழி வகுக்கின்றான். சிவ சோதியில் இருந்து வெளிப்பட்ட ஆறு பொறிகள் தான் ஆறுமுகன். எனவே, சக்தியும், சிவனுமாய் இருக்கின்ற சிவசோதிப் பிழம்பே முருகனாக, அழகனாக அவதரித்தான்.

எனவே, மனிதன் ஆறறிவுடையவன். அறிவாகிய இறையுணர்வு 'அன்பு' என்னும் விளக்கத்திற்கு நிலைக்களனாக விளங்குகிறது. இந்த இறையுணர்வுதான் மக்களையும், விலங்குகளையும் வேறுபடுத்திக் காட்டுகிறது. ஆனால் முருகனின் தத்துவமோ பலவாகப் பெருகி ஞான நிலையை அருள்கிறது. எனவே, இந்த முருகனின் ஞான அருளைப் பெற்றவர்கள் பலர் இருப்பின் இங்கு அருணகிரிநாதர், குமரகுருபரர், முத்துசாமி தீட்சிதர் போன்றோர் முருகனின் ஞான அருள் பெற்றதால் தான் இசைத்தமிழை, இசைப் பாடல்களைப் பாடும் ஆற்றல் பெற்றார்கள் என்பதை மட்டுமே இக்கட்டுரை எடுத்துரைக்கிறது.

**அருணகிரிநாதர்**

கி.பி.15ம் நூற்றாண்டில் விஜயநகர குறுநில மன்னன் 'பிரபுட தேவராயன்' காலத்தவர். இவர் திருவண்ணாமலை ஊரைச் சார்ந்தவர். முத்தம்மையின் மகனாகப் பிறந்த இவர் இளமையில் தம் பெற்றோரது செல்வத்தை விருப்பம் போல் செலவிட்டார். சின்றின்பத்தில் திளைத்தார். இறுதியில் தொழுநோயால் பீடிக்கப்பட்டு சாக்காட்டை அடையும் நிலையில் மிகவும் வருந்தினார். திருவண்ணாமலை கோபுரத்தின் உச்சியில் ஏறி 'முருகா' என்று அழைத்து கீழே உருண்டார். அப்போது ஆறுமுகக் கடவுள் தடுத்தாட்கொண்டு 'சும்மா இரு சொல்லற' என்று உபதேசம் செய்து மறைந்தார். உடனே, அருணகிரிநாதர் அங்கேயே சிவயோக நெறியில் அமர்ந்தார். கந்தவேள் காட்சி தந்து 'முத்தைத்தரு' என்று முதலடி தந்து 'திருப்புகழ்' பாடுக என்று அருள் புரிந்தார். உடனே, அருணகிரிநாதர் திருப்புகழ் பாடினார். அருணகிரிநாதர் இளமையிலேயே தமிழையும், வடமொழியையும், இலக்கண இலக்கியங்களையும் கற்றவர். இசைத் தமிழ் நுட்பங்களை அறிந்தவர். திருப்புகழ் பாடி தமிழிசையை வளர்த்தவர். நூற்றியெட்டு மேளகர்த்தா பண்ணிற்கும் அவர் திருப்புகழ் பாடினார்.

'கவிதை என்பது இயலிசை நாடக உணர்வோடு அமையவேண்டும். சொற்செட்டு, ஓசைநயம், பொருட்செறிவு தமிழியல்வு, புதுமை, நன்மை என்பதையாகிய இயல்புகளைக் கொண்டிருக்க வேண்டும்[1] என்று ச.வே. சுப்ரமணியன் அவர்கள் வரையறுத்துக் கூறியுள்ளார்.

அதுபோல திருப்புகழ் என்னும் அவரது முருக துதிப்பாடலில் சுவையுணர்ந்த மறைமலையடிகள் அதனைச் சமுதாய வாழ்வின் அறநெறி மதிப்புகளையும் கொண்ட படைப்பு என்ற புகழ்கிறார். எடுத்துக் காட்டாக,

*'தத்தத்தன தத்தத் தனதன*
*தத்தத்தன தத்தத் தனதன*
*தத்தத்தன தத்தத் தனதன - தனதான*

*முத்தைத்தரு பத்தித் திருநகை*
*யத்திக் கிறை சத்திச் சரவண*
*முத்திக்கொரு வித்துக் குருபர னெனவோது[2]*

இந்தப் பாடலை அழகான சந்த நடையோடு பாடுகிறார். இன்று கருநாடக அரங்கிசையிலும் சரி, தமிழிசை அரங்கங்களிலும் சரி இப்பாடலை இன்று 'ஷண்முகப்பிரியா' இராகத்தில் பாடி வருகின்றனர். 72 தாய் இராகங்களில் இந்த இராகம் ஐப்பத்து ஆறாவது தாய் இராகமாகும். இந்த இராகம் முருகனுக்கு பிடித்த இராகமாகும். ஏனெனில் அவனுடைய திருநாமத்தைக் கொண்ட ஒரே இராகம் இதுதான் என்றே சொல்லலாம். அதுபோல முருகனின் ஆறுதலைகள் போன்று ஆரோகன, அவரோகண ஸ்வரங்களை கொண்டது மோகனராகம் (ஸ ரி க ம ப த ஸ - ஸ் த ப க ரி ஸ) மோகனம்

என்பதற்கு அழகு என்ற பொருளும் உண்டு. அழகு என்றாலே 'முருகன்' என்று இலக்கியங்கள் கூறுகின்றன. இந்த அழகு தெய்வத்தின் மீது எல்லா சமயத்தவரும் பாடத்தக்க சர்வ சமய பொதுப் பண்புகளால் முருகனது பெருமையைப் பாடுகிறார் அருணகிரிநாதர்.

*உருவாய் அருள்வாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்*
*கருவாய் உயிராய் கதியாய் விதியாய்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே*

என்று பாடுகின்ற இப்பாடலை மோகன ராகத்தில் இசைக் கச்சேரிகளில் பாடி வருகின்றனர். சில சமயங்களில் கச்சேரியில் முடிக்கின்ற தருவாயில் திருப்புகழ் பாடிவிட்டு (ஷண்முகப்பிரியா இராகம்) இப்பாடலை மத்தியமாவதி இராகத்தில் பாடி முடித்து, எல்லோரும் முருகனின் இன்னருளைப் பெறவேண்டும் என்று வேண்டி பாடலை முடிக்கின்றனர்.

திருப்புகழைப் பற்றிச் சதுரர் சே.து. இராமலிங்கப் பிள்ளை 'திருப்புகழின் தெய்வ இசைமாட்சியினைப் புலப்படுத்தும் இவர், 'பழங்கால வண்ணப் பாக்களைப் போலன்றி, பாட்டின் முற்பாதியில் சின்றின்பநிலை கொண்டலையும், தீவினை தீர வேண்டுதலான விண்ணப்பப் பகுதியும், பிற்பகுதியில் பன்னிருகையன் பரத்துவத்தில் முடிப்பது என்ற அற்புத புரட்சியையும் திருப்புகழ் தன்னத்தே கொண்டுள்ளது[3] என்கிறார். அருணகிரிநாதர் திருப்புகழ் மட்டுமல்லாது கந்தரனுபூதி, கந்தர் அலங்காராம், கந்தரந்தாதி, திருவகுப்பு, வேல்விருத்தம், மயில் விருத்தம் போன்ற பாடல்களைப் பாடியுள்ளார். எனவே, வாக்கிற்கு அருணகிரி, கருணைக்கு அருணகிரி என்று கூறுவதோடு இவரின் பாடல்கள் இசைக் கச்சேரிகளில் கலைஞர்கள் பாடி மகிழ்கின்றனர். இவரை இசை வாக்கேயகாரர் என்றும் கூறலாம். திருப்புகழ் பாடி இசைத் தமிழை வளர்த்த பெருமை இவரையேச் சாரும்.

**குமரகுருபரர்**

17ம் நூற்றாண்டில் திருமலைநாயகர் மதுரையை ஆட்சி செய்து வந்தார். அக்கால கட்டத்தில் திருநெல்வேலி மாவட்டத்திற்கு அருகிலுள்ள ஸ்ரீவைகுண்டம் என்னும் ஊரில் சண்முக சிகாமணி கவிராயர், சிவகாமி ஆகியோருக்கு மகனாகத் தோன்றியவர் குமரகுருபரர். இவர் ஐந்து ஆண்டு வரை வாய் பேசாது ஊமையாகவே விளங்கினார். இதனால் வருத்தமடைந்த பெற்றோர் குழந்தையை அழைத்துக் கொண்டு திருச்செந்தூர் சென்றனர். அங்கு முருகனின் சன்னிதானத்திற்கு முன்பு குழந்தையைக் கிடத்தி தம் மகவுக்குப் பேச்சாற்றல் தந்தருளமாறு மன்றாடினர். முருகனின் அருளால் பேச்சாற்லைப் பெற்ற குமரகுருபரர் கந்தனின் மீது 'கந்தர் கலிவெண்பா' பாடினார். பின்னர் இவருக்கு சிவஞான உபதேசம் பெறவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. தமக்குரிய குருவைத் தேடினார்.

தருமபுரி ஆதினத்து நான்காம் பட்டத்து மூர்த்தியாக விளங்கிய 'மாசிலாமணி தேசிகரைத்' தம்முடைய குருவாக ஏற்றுக் கொண்டார். குரு இவரைத் தலபயணம் மேற்கொண்டு வருமாறு பணித்தார். இவரும் அக்கட்டளையைச் சிரமேற் கொண்டு ஒழுகினார். சிதம்பரத்துக்குச் செல்லுகையில் 'வைத்தீஸ்வரன்' கோயிலில் தங்கி அங்கு வீற்றிருக்கும் முருகப் பெருமாள் மீது முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் பாடினார். பின்னர் திருத்தல பயணமெல்லாம் மேற்கொண்டு தீட்சைப் பெற்றார்.

இவர் பாடிய பாடல்கள் கந்தர் கலிவெண்பா, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மதுரைக் கலம்பகம், நீதிநெறி விளக்கம், திருவாரூர் மும்மணிக் கோவை, முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பர செய்யுட்கோவை, பண்டார மும்மணிக்கோவை, காசிக்கலம்பகம், சகலகலா வல்லிமாலை, மதுரை மீனாட்சி இரட்டை மணிமாலை, மதுரை மீனாட்சி குளம், தில்லை சிவகாமியம்மை இரட்டைமணிமாலை போன்றவையாகும்.

இவர் சிற்றிலக்கியங்களை மிகுதியாகப் பாடுவதால் 'பிரப்ந்த வேந்தர்' என்ற சிறப்புப் பெயரும் பெற்றார். இவர் பண்ணை வெறுத்தவர் அல்லர். சகலகலாவல்லி மாலையில் இவர் கலைமகளை நோக்கி தமக்குப் பண்ணும் பரதமும் கல்வியும் இனிய சொல்லமைதியுடைய பாட்டும் தாம் வேண்டும் போது எல்லாம் வந்தடைய வேண்டும் என்று வேண்டுவதைக் காணலாம்.

*'பண்ணும் பரதமும் கல்வியும்*
*தீஞ்சொல் பனுவலும் யான்*
*எண்ணும் பொழுது எளிது எய்த நல்காய்'*[4]

என்று பாடுகிறார். ஆக இவரும் இசைத் தமிழை நன்கு கற்றதால் இசையோடு இன்தமிழ்ப் பனுவல்களைப் பாடினார் என்பதையும், இந்த ஆற்றல்கள் அனைத்தும் முருகனின் அருளால் பெற்றவை என்பதையும் அறியலாம்.

### முத்துசாமி தீட்சிதர்

உலக நாடுகளின் வரலாறுகளில் சில குறிப்பிட்ட கால கட்டத்தில் மறுமலர்ச்சித் தோன்றுவதுண்டு. அத்தகைய காலங்களில் கலையும், இலக்கியமும், புத்தொளி பெறுவதுண்டு. அத்தகைய மாற்றம் தென்னாட்டில் ஏற்பட்டது. இம்மாற்றம் கி.பி. 18ம் நூற்றாடிற்கு இடைப்பட்ட காலம் என்றே சொல்லலாம். இக்கால கட்டத்தைக் கர்நாடக சங்கீதத்தின் பொற்காலம் என்றே கூறலாம் என்கிறார் டி.எல். வெங்கட்ராம ஐயர்.

இத்தகைய கால கட்டத்தில் மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துஸ்வாமி தீட்சிதர் தோன்றினார். திருவாரூரில் வாழும் ஸ்ரீராமசாமி சுப்பம்மாள் என்பவர்களுக்கு நீண்ட காலமாக மகப்பேறில்லை. எனவே, இவர்கள் 'வைத்தீஸ்வரன் கோவிலில்' இருக்கும் பாலம்பிகையைப் பூஜித்து 'ஸ்ரீவித்யா உபாசனையும் செய்தார். இங்கு நாற்பது நாட்கள் தங்கி பூஜைகள் பஜனைகள்

செய்து கொண்டே இருந்தார். தேவி தீட்சிதர் கனவில் ஒரு முத்துமாலையை அணிவித்தார். இது நல்ல சகுணம் என்று எண்ணிய தீட்சிதருக்கு ஒரு ஆண்டிற்குப் பின் 1775-ஆம் ஆண்டு ஒரு மகன் பிறந்தான். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாக இருப்பதோடு மட்டுமல்லாமல் சுப்ரமண்ய கடவுளின் நட்சத்திரமான கிருத்திகை நட்சத்திரத்தில் பிறந்ததாலும், அம்பாள் முத்து மாலையை அணிவித்ததாலும் இக்குழந்தைக்கு இக்கோயிலில் உறையும் முருகனின் திருநாமமாகிய முத்துஸ்வாமி என்று பெயரிட்டார்.

முத்துஸ்வாமி இளமையில் கல்வி, இசை, புலமை பெற்றதோடு மட்டுமல்லாமல் தமிழ், வடமொழியையும் நன்கு கற்றார். அதோடுமட்டுமல்லாமல் காவியம், ஆகம புராணங்களையும் கற்ற இவர், முருகனிடம் அளவற்ற பக்தியும், ஈடுபாடும் கொண்டார். இரண்டு திருமணங்கள் செய்தும் இவருக்கு வாழ்க்கையில் பிடிப்பில்லை. இவரை மணலியிலுள்ள அவரது பரம்பரை வீட்டிற்குச் செல்லுமாறு பெரியவர்கள் வற்புறுத்தினார்கள். இவரும் சென்று விட்டார். அங்கு இவர்களின் வீட்டில் சிதம்பரயோகி தங்கியிருந்த காலத்தில் அவருக்குப் பணிவிடை செய்தார். உபதேசமும் பெற்றார்.

அவருடன் காசிக்குச் சென்று 5 வருடம் தங்கினார். மந்திர, வேத, வேதாந்த, நாதவித்யாமர்மங்கள், தேவி உபாசன மர்மங்கள் ஆகியவற்றில் கற்றுத் தேர்ந்தார். ‘மகாஷோடசாக்ஷி’ என்ற மந்திரத்தை உபதேசம் பெற்று ஐந்து வருடங்கள் விடாமல் தியானித்தார். பொதுவாக குருவிடம் ஸ்ரீவித்யா உபாசகர்கள் ஈடுபட தீட்சை பெறுவது வழக்கம். சிதம்பரநாத ஸ்வாமிக்குத் தீட்சை நாமம் ‘ஸ்ரீநாதனந்தா’ இவரிடம் உபதேசம் பெற்ற முத்துஸ்வாமிக்கு தீட்ஷா நாமம் ‘சிதானந்த’ராக தீட்ஷையும் பெற்றார்.

**திருத்தணி செல்லுதல்**

சித்தரின் கட்டளைப்படி மணலிக்கே திரும்பினார். முருகனிடம் பக்தி கொண்ட முத்துஸ்வாமி, தன் தம்பியுடன் முருகனின் அறுபடை வீடுகளுள் ஒன்றான் ‘திருத்தணிகை’குச் சென்றார். அங்குள்ள சரவண பொய்கையில் நீராடிவிட்டு மலையேறினார். முருகன் சன்னதி முன்பு அமர்ந்து ‘ஷடாட்சரிஜபம்’ செய்தும் பஜனைகள் செய்தும் வழிபட்டார். அப்போது அவர் என் தந்தை பாலாம்பிகையை ஒரு மண்டலம் வழிபட்டு அருள் பெறும்போது நாம் ஏன் முருகனை வழிபடக்கூடாது என்று நினைத்து தனிமையிலேயே நாற்பது நாட்கள் தங்கினார்.

**முருகனருள் பெறுதல்**

நாற்பதாம் நாள் திடீர் மாற்றம் ஏற்பட்டது இவர் கண்களை மூடிக்கொண்டு ஜபம் செய்யம் போது முதியவர் வேடத்தில் முருகப் பெருமாள் முத்துஸ்வாமி..... வாயைத் திற என்று கூற நாம் இந்த ஊருக்குப் புதியவன், இந்த முதியவருக்கு எப்படி நம் பெயர் தெரியும்? என்று சிந்தித்தார். திரும்பவும் முத்துஸ்வாமி.....கண்களைத் திறக்காமல் வாயைத் திற என்று கூறி வாயில்

கற்கண்டு போட்டார். பின்னர் நான் உன் வாயில் போட்டது என்ன? என்று கேட்க கண்களை மூடியவாறே கற்கண்டு ஸ்வாமி என்று கூறி கண்களைத் திறந்தார். அப்போது முதியவர் மறைந்து வள்ளி தேவ சேனாபதியோடு காட்சியளித்ததாகச் சொல்லப்படுகிறது. தீட்சிதர் அந்த உருவத்தை நோக்கிச் செல்ல செல்ல அது கருவறையில் சென்று மறைந்தது. தீட்சிதர் ஆனந்தக் கண்ணீர் பெருக்கோடு ஆஹா.... வந்திருப்பது முருகப் பெருமான் அவனே நமக்கு கற்கண்டை ஞானப் பிரசாதமாக அளித்தான் என்று அகம் மகிழ்ந்து முருகப் பெருமான் மீது கீர்த்தனைகள் பாடினார். அதோடுமட்டுமல்லாமல் தாம் பாடுகின்ற கீர்த்தனைகளுக்குக் 'குருகுஹ' என்ற முத்திரையையும் பதித்தார். எனவே, குருகுஹ கிருதிகள் எல்லாம் திருத்தணி கிருதிகள் என்றே அழைக்கப்படுகின்றன. இவர் திருத்தணி முருகன் மீது எட்டுப் பாடல்களைப் பாடியுள்ளார்.

அறுமுகன் அருணகிரியாரின் துயரைப் போக்கி 'திருப்புகழைப்' பாட வைத்தான். குமரகுருபரர்க்கும் 'பேசும் ஆற்றலைத் தந்தருளினான், முத்துஸ்வாமிக்குக் 'கற்கண்டாகிய ஞானத்தை அளித்துப் பாடவைத்தான். ஆக மூவருமே இசை பாடி இனிமைத் தமிழுக்குத் தெய்வமான அழகனை முருகனை வழிபட்டதை இக்கட்டுரை மூலம் அறியலாம்.

**அடிகுறிப்புகள்**

1. சுமூகவியல் நோக்கில் இலக்கிய வரலாறு
2. திருப்புகழ்
3. தமிழ் பண்பாட:டு வரலாறு 3-வது பாகம்.
4. சகலகலாவல்லிமாலை

**ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள்**

1. சமூகவியல் நோக்கில் இலக்கிய வரலாறு
2. முத்துஸ்வாமி தீட்சிதர் டி.எல். வெட்கட்ராம ஐயர்
3. திருப்புகழ்
4. குமரகுருபரர் பகுதி 1-2.

# வெறிப்பத்தில் வேலன் வழிபாடு

முனைவர் து. அமரதீபா
உதவிப்பேராசிரியர்
ஸ்ரீமத்.சி.பா.சு.த.க.அ.கல்லூரி,
மயிலம்.

## குறிஞ்சிக் கிழவன்

குறிஞ்சி நிலத் தெய்வம் முருகன். மக்கள் தோன்றிய இடமும் வாழ்வு தொடங்கிய இடமும் இதுவே எனக் கருதப்பெறுகிறது. இந்நிலப் பகுதியைத்தான் முருகன் இடமாகக் கொண்டான். அவன் வேலினைப் போர்க்கருவியாகவும் சேவலைக் கொடியாகவும் கொண்டான். தமிழ் இலக்கியங்களில் காணப்படும் முருக வழிபாட்டில் வெறியாடல் மிகப் பழமையானது. சமுதாயக் கூட்டு வாழ்க்கையின் அடிப்படையில் இது தோன்றியது எனலாம். இவ்வழிபாடே தமிழகத்தின் முருக வழிபாட்டிற்குத் தோற்றமாய் இருந்தது எனலாம். இது ஓர் இனக்குறி வழிபாட்டுமுறை எனக் கூறலாம். இவ்வழிபாட்டில் உருவங்கள் வைத்து வழிபடவில்லை என்றாலும் முருகனுக்குரிய அடையாளமாகிய வேலாயுதம் வைத்து வழிபாடு செய்யப் பெற்றது எனலாம்.

## வெறியாட்டு

தமிழரின் வழிபாட்டு முறையில் மிகவும் பழமையானது வெறியாட்டு என்பதாகும். மனிதரின் மேல் தெய்வம் ஏறி வருவதுண்டு. இத்தகைய நம்பிக்கை மக்களிடையே இருந்து வந்துள்ளது. தெய்வ அணங்கு ஏறப் பெற்றவர் ஆவேசம் கொண்டு ஆடுவதும் உண்டு. சங்க காலத்தில் முருகனோடு தொடர்புடையதாக இவ்வெறியாடல் நிகழ்ந்தது. முருகனுக்குரிய வேலினை கையில் ஏந்தி ஆடியவன் வேலன் எனப்பட்டான். இவ்வெறியாடல் நிகழ்வுகள் அகப்பாடல்களில் இடம்பெறுகின்றன.

*வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்*
*வெறியாட் டயர்ந்த காந்தளும்*

(தொல்.பொருள்.நூ.60)

எனக் கூறியதனால் தொல்காப்பியத்திற்கு முன்பே வெறியாடல் நிகழ்ந்துள்ளது எனலாம்.

## வேலன் வழிபாடு

சங்க இலக்கியங்களில் இயற்கை வழிபாட்டு முறைகள் காணப்பட்டன. இவ்வியற்கை வழிபாட்டுமுறை காலந்தோறும் வளர்ச்சியடைந்தும் வந்துள்ளன. முற்காலந் தொட்டு தமிழ்க் கடவுளாய் முருகனை வழிபட்டு வருகின்றனர். காதல் வயப்பட்ட தலைவியின் மேனி மாற்றத்தினைத் தீர்க்க வேலன் வெறியாட்டு

நிகழ்த்தப்பட்டுள்ளது. தங்கள் குலத்துக்கு ஏற்படுகின்ற துன்பங்களை நீக்குபவன் முருகனே யன்றி பிறர் இலர் என நம்பிக்கை கொண்டவர்களாய்த் திகழ்ந்தனர்.

ஊரில் வாழும் அகவை முதிர்ந்த வேலனைக் கொண்டு அன்னை வெறியெடுக்கத் துணிந்தாள். அப்பொழுது கழங்கு மெய்ப்படுத்தி தலைவிக்கு உண்டாகிய நோய் தெய்வத்தால் ஆகியதா? அல்லது பிறிதொன்றால் ஆகியதா? எனத் தெய்வத்தைப் பரவி கழற் காய்களை எண்ணிப் பார்த்து அறிதலும், அக்கழற்காய்களைத் தொகுத்து அவற்றிற்கு மஞ்சள் காப்புக் கட்டி அத்தலைவிக்குற்றமையல் தீரும் வரை இக்காப்பினை அணிந்திருக்க வேண்டும் எனக் கட்டுவது கன்னந் தூக்கல் என்பதாகும். இவ்வாறு கழங்குகளைப் பரப்பி எண்ணி ஒற்றையாயின் இன்னது என்றும் இரட்டையாயின் இன்னது என்றும் துணிந்து கூறுதலும் உண்டு. மேலும், கழற்காய்களை முருகன் முன் வைத்து அள்ளி எடுக்கும்போது அதனைக் கண்டு கூறும் ஒருவகைக் குறியினை வேலன் கூறத் துணிவான்.

*பொய்யா மரபின் ஊர்முது வேலன்*
*கழங்குமெய்ப் படுத்து,கன்னம் தூக்கி,*
*முருகு,என மொழியும் ஆயின்*
*கெழுதகை கொல்-இவள் அணங்கி யோற்கே?* (ஐங். 245)

என்ற பாடலின் வழி இவன் நோய்க்குக் காரணம் முருகனே! என வேலன் கூறினால், இவளைக் கூடிப்பிரிந்து அதனால் இவளை மெலியச் செய்த தலைவனுக்கு அவன் சொன்னது உரிமையுடையதாமோ? எனத் தோழி கூறுவதாக இப்பாடல் கருத்து அமைகிறது. இடுக்கண் யாவற்றிற்கும் முருகனே காரணம் என்று கூறுவது வேலனுடைய இயல்பு என்றாலும் அம்மலை நாட்டினது பெயரைக் குறிப்பால் அறிந்தும் வெளிப்படுத்தியிருந்தான் என்பதை தோழியின் கேள்வியின் வாயிலாக அறியலாம். இதனை,

*அன்னை தந்தது ஆகுவது அறிவென்*
*பொன்நகர் வரைப்பில் கன்னம் தூக்கி*
*'முருகு'என மொழியும் ஆயின்*
*அருவரை நாடன் பெயர்கொலோ அதுவே?* (ஐங். 247)

என்பதனால் உணரலாம்.

**வேலன் ஆடும் களம்**

புதியதாகக் கொண்டுவரப்பட்ட மணல் நிரப்பிய முற்றத்தில் மலர் மாலைகள் முதலியவற்றால் மேலும் அழகுபடுத்தி அங்கே, மாறுபாட்டுடன் போரிடுதலின் பொருட்டு முருகக்கடவுள் ஏந்திய வேலினைத் தன் கையில் ஏந்தி வெறியாடுபவன் கழங்கினை இட்டு அறிந்து அவனால் கூறப்பெறும்.

*பெய்மணல் முற்றம் கவின்பெற இயற்றி*
*மலைவான் கொண்டசினை இயவேலன்* (ஐங். 248)

என்றதனால் வெறியாடல் களத்தின் சிறப்பினை அறியலாம். மேலும் இதனை (அகம். 22) ஆம் பாடலினாலும் (மேலது, 242)வது பாடல்களாலும் அறியலாம். அதனை,

*களன் நன்கு இழைத்துக் கண்ணி சூட்டி*
*வளநகர்சிலம்பபாடி*
*அறியா வேலற் றரீஇ அன்னை*
*வெறியயர் வியன்களம் பொலிய ஏத்தி*

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. வெறியாடல் களத்தில் வேலன் அணங்கு ஏறப்பெற்று சினத்துடன் ஆடுவான். அந்நிலையில் வேலைக் கையிலெடுத்து ஆடுதலும் குறிப்பிடப்பெற்றுள்ளதால் வீரம் மிக்க தெய்வமாகவும், போருக்குரிய கடவுளாகவும் முருகன் காட்சிப்படுத்தப்பட்டுள்ளான் என்பதனை மேற்சுட்டிய ஐங்குறுநூற்றுப் பாடலின் வழி அறியமுடிகிறது. மேலும் இதனை,

*சூர்மருங்கு அறுத்த சுடர்இலை நெடுவேல்*
*சினம்மிகு வேந்தன் தண்பரங் குன்றத்து* (அகம். 59)

என்ற பாடலும் புலப்படுத்துகிறது.

### குலப்பெருமை காத்தல்

வெறியாடும் களத்தில் எல்லா மக்களும் கூடி நின்று வெறியாட்டு அயர்வோனைக் காணுவார்கள் அவனைக் கண்ட மாத்திரத்தில் அவர்கள் மனதில் ஏற்படும் அச்ச உணர்வால் அவன் கூறுவதை அப்படியே நம்பியும் இருந்தனர். இதனால் வேலனாகிய முருகப் பெருமானை முன்னிறுத்தி தானே அம்முருக வேலனாக அணங்கேறப்பட்டு மாறும்போது உண்மை யறியாதவனாய் இல்லை, அப்பெண்ணுக்குரிய சூழலை உணர்ந்து உண்மையறிந்தவனாய் இருந்தாலும் ஒரு பெண்ணிற்குரிய கற்பின் நிலையைப் பலரறிய எடுத்துக் கூறக் கூடாது என்பதற்காக தானே அதற்கு காரணம் என பழியேற்று குலப் பெருமையைக் குலதெய்வமாய் நின்று காப்பவனாய் வேலன் இருந்துள்ளான்.

### வெறியாடலும் அறத்தொடு நிற்றலும்

தலைவியின் மெலிவிற்கான காரணம் அறிந்து அதன் மூலமாகத் தலைவியின் துயரம் நீங்குதலின் பொருட்டு அமைக்கப்பட்டுள்ளது. ஐங்குறுநூற்று வெறிப்பத்தில் வரும் பாடல்கள் அனைத்திலும் வேலன் உண்மைக் காரணம் அறியாதவனைப் போலக் குறிப்பிடப்படுகின்றான். அவனுடைய சொல்லிலும் அவன் செயலிலும் ஊர்மக்கள் நம்பிக்கை கொண்டவர்களாய் உள்ளனர். எனவே, ஊர் மன்றத்தின் நடுவே வேலன்தான் இவள் மெலிவிற்குக் காரணம் என்று உரைத்தாலும் அதன் பிறகே தோழி அறத்தோடு நிற்கும் தருணம் ஏற்படுவதாயிற்று. எனவே வெறியயர்தலும் தலைவியின் களவை வெளிப்படுத்தும் களமாக அமைந்துள்ளமையைச் சுட்டலாம்.

### முடிவுரை

முருக வழிபாட்டின் மூலமாக தாயின் துயரம் நீங்குதலும், தலைவியின் மறையொழுக்கத்தைத் தோழி செவிலித் ஙய்க்குத் தெரிவிக்க முயற்சித்தலும் நடைபெறுகிறது. எனவே தலைவியின் உள மெலிவு நீங்கி வரைவிற்கான சூழல் ஏற்படுகிறது. எனவே, வேலன் வழிபாடு எல்லோருக்குமான மனத்துயரை நீக்கும் வழியாகி இருந்துள்ளமையை ஐங்குறுநூறு, வெறிப்பத்து பாடல்களின் வழி அறிய முடிகிறது.

# KANDAPURANAM - A Study

**Dr. D. Amutha**
Assistant Professor
Dept. of History
KunthavaiNaachiyaar Arts College (W)
Thanjavur-613007

Murukan, who is one of the two sons of Shiva, is one of themost persistent and popular Hindu gods of South India, whose main temples are confined in avery distinct territory Tamil Nadu. He is believed to be a powerful god, and a protector ofTamil people. As his name suggests (from "*muruku*" in Tamil), he is a teenager who embodies and refers to youthfulness, beauty, but also to courage and power. A peacock is hisvehicle, and a lance (*vel*) is his main attribute. Like this there are number of variations in the birth myths of the TamilMurugan and his northern counterpart Skanda Karthikeya. Nakkirar in hisTirumurugarruppadai has mentioned Murugan as the son of six celestialwomen (Aruvarpayandaaranar celvan), the son of the God of the banyan tree(Alanar Kadavul Pudalvan), the son of the lady of the mountains (Malai Magalmahane), the son of the war goddess Korravai (Korravai Ciriva) and son ofprestigious Palayol (Polayol Kulavi).[1]

During the early part of the ninth century A.D. no many temples of anymajor Gods. Such as Siva or Vishnu were available in Tamil Nadu. The Kannanur Balasubramanya temple, was one of the earliest structural templesconstructed by Aditya I (871-901 A.D),26 exclusively for Subramanya, whowas none other than Murugan. The Imperial Cholas, who devoted attention tothe Temple architecture based on Agama principles, considered Subramanya, (the one who was known for his wisdom, Subrahmanyam) the name assigned to Murugan, as a Parivara Devata or a secondary deity and placed that God in theirtemples at the north eastern corner or just behind the primary deity in the nextprakara. At the same time the Tamil works

such as Tiruvirattai Manimalai of Nambiyandar Nambi and Adhiravadigal's Tirumummanikkovai which areincluded in the 11th Tirumurai of Saiva canonical works, prove thatVinayaka, the MuttaPillayar occupied the first place before Murugan as hiselder brother. Such facts reveal that the popular Tamil deity of the Sangam agehad lost his significance after the termination of the Sangam. Not only that, hewas relegated back to the secondary position as the son of Siva. These facts tooreveal that the Murugan cult lost its value due to the outcome of the Kalabhrainterregnum and the Bhakthi movement introduced by the Saiva Nayanmarsand Vaisnava Alvars. The development of Saivism too was another cause forhis backwardness. Any how the availability of the facts relating to Murugan insmaller forms in the ninth and eleventh Tirumurais suggest that, thoughMurugan worship met with an eclipsed state that God never disappeared butattained a secondary position next to Siva. There arose a necessity to take up new ventures for Kachchiyappar to revive the qualities and worship of Murugan[2].

During a long gap of nearly ten centuries from the third to the twelfth century there emerged no specific or particular literary work especially onamil God Murugan. There arose a need and necessity for reviving that cult. At this critical juncture in the 12th century KachchiyappaSivachariyar, born atKanchipuram in a Saiva family, produced his Kandapuranam based on the facts about Skandam referred to by Kambar the author of Ramayana andVirasoliyam, a Buddhist work of Buddhamitra in the 12th century A.D. TamilKalaikkalanjiyam too acknowledges this fact and approves this period. Thecomplete work of Kandapuranam comprises of six cantos (Kandams). Each canto has its own sub divisions. 1. UrpathiKandam (origin) , 2. Asura Kandam (demons), 3. MahendraKandam, 4. PorpuriKandam, 5. Deva Kandam, 6. DakkaKandam, Altogether there are , 345 songs in Vriddham form of Tamil poetry. Being a Tamil poet, Kachchiyappar had given importance to the Sangam traditions associated with Murugan. The Kuravai Dance, VelanVeriyadal, etc., are all mentioned by him. By that it could be inferred that he

hadendeavoured to rejuvenate and revive the Murugan Cult in Tamil Nadu after alapse of ten centuries. Being a deity of indigenous origin, even from the days ofthe Sangam age, Kachchiyappar, a Murugan devotee had adopted a freshtechnique of writing a complete work exclusively on Murugan under the titleKandapurnam on par with the northern traditions employed on Skandam.

As in Paripadal and Tirumurugatruppadaiwhich had stressed theimportance to the six faces and twelve hands of Murugan, Kandapuranam had assigned importance to many aspects relating to the six faces and twelve hands of Murugan in many places[3]. By such descriptions Kachchiyappar hadsuccessfully ventured in imposing the northern epic qualities over the nativedeity Murugan without much difficulty in harmonious way. Further it is evidentthat Kandapuranam in a different perspective and in a new dimension hadexplicated the development of Murugan cult in Tamil Nadu in Puranic or Epicstyle. Further Kachchiyappar being a staunch devotee of Murugan had justifiedthe amalgamation of Tamil Murugan with Skanda Karthikeya by exhibiting thequalities of both the devotees in a compromising way in his own nativelanguage Tamil by adopting a Sanskritic method of writing.[4]

While Murugan informed Indra, the king of the celestials, that thecelestials would be his army and himself would be their commander, one couldeasily infer that Kachchiyappar, without making a black spot to the prestige ofMurugan, had brought out the superior virtue of Murugan. [5]This fact assists one.to estimate that the author had employed the epic qualities by highlighting theheroic qualities of Murugan. This treatment of Kandan is another unique featureemployed by Kachchiyappar to widen the popularity of that deity as theDevasenapathy and protector of the celestials. There are scholars who callMurugan as Devasena'sPaty or the husband of Devasena, the daughter ofIndra. Thus by linking Murugan with other deities by blood relationship,Kachchiyappar tried to uplift Murugan cult. Again, as Siva had attained prominence during that period,achchiyappar had even made that Siva to attest that Murugan would also beequal to

him in maintaining a primary position[6]. This suggests a compromisingventure or Kachchiyappar. The celestials, by accepting the highness of Kandanequal to Siva, gave equal veneration and treatment to Kandan and his consortDeivayanai[7]. In the same way Vinayaga, the elder brother of Kandan, hadinfluenced Narada to undertake fasting on the day of Karthigai (The asterismPleades), the day prominent and significant in the worship of Murugan.

The treatment of Murugan as a God equal to Siva and the consideration of Muruganas a pioneering God will attest the fact that Kachchiyappar through his magnumopus has left no stone unturned for promoting the status of Murugan and alsothe superior nature of his worship. In the same way from Kandapuranam, the14th subdivision of the first canto, while narrating the sportive activities ofMurugan, one can estimate the tactics adopted by Kachchiyappar in bringingthe past glory of that Tamil deity. The appreciation of Murugan by the celestialsafter his slaying the demon Surabanman will corroborate the above fact[8]. Thedistinctive qualities of Murugan as narrated by Kachchiyappar disclose theprime objective of the author in bringing out the work Kandapuranam. Thesame ideas are reflected in 22 songs in the evolution of Murugan in the UrpathiKandam (canto) on the origin of Murugan.

Kandapuranam was released at the place called Kumarakkottam in Kanchipuram[9]. This place is still now treated as a Murugan temple. Kandapuranamt is a conspicuous Tamil work, worth to be considered as an epic,to which the Tamils offer a great veneration[10]. From Kandapurnam one is ableto obtain the various divine activities of Murugan harmoniously blended withthe exhibition of the cultural traits of the families. Further the author hadproduced his work in a continuous narrative form by mentioning the differentstories related with the life the deity Murugan. It is believed thatKachchiyappar commenced writing this work after getting the first line from themouth of the deity Murugan himself.[11]

Kanadapuranam is historically a significant work because it traces thecustomary practices of life of the Tamils which were prevalent

in the Tamilcountry of the contemporary period of Kachchiayppar. Madalerudal orMadalurdal was a custom among the lover to express his love[12]. InKandapuranam, Murugan informs that he would adhere to that practice ofMadaluradal if he was not able to get the hands of his lady love Valli[13].

Veriyadal was another custom, popularduring the Sangam Age and that was executed mainly to notice the lovesickness and the distresses of the ladies and to appease the wrath ofMurugan[14]. This custom of Veriyadal was a belief oriented one. The Tamils,while giving importance to chastity had assigned greater stress to arrangedmarriages and acknowledged love marriages. It means that Kalavau andKarppu marriages which were popular during the Sangam age continued tosurvive.

Kachchiyappar had also narrated the various customary practices such as tying the tali seeing the northern star i.e. Aruntadi etc., during theceremony of arranged marriages. Kachchiyappar being a poet, had faith overmonogamy and arranged marriages. He condemned the love marriages carriedout after the first arranged marriage. The above facts not only exposecertain Tamil customs but also throws greater light on the fact thatKachchiyappar had estimated the values of customary practices and rituals.Being a proficient Tamil scholar, known for his versatility he had detailedmany things about fine arts. 16 kinds of musical notes or pan are described byhim.

Kachchiaypparwas a sociologist and artist and was able to depict that the Tamils were fond ofdance and music. It cannot be skipped that a devotional work pertaining to aspecific deity will be dealing with fine arts. He was an expert astrologer.The fixation of the asterism of Panguniuddhiram was an auspiciousone[15] and the reference about the time of the birth of Markkandeya indicatenot only the wisdom of Kachchiyappar but also the social history of thecontemporary period. It is worth to note that, from the different aspects of the Tamilsexposed in Kandapuranam assist the possibility to treat that work as an epichaving historical details. The critical analysis of that work further will highlightthe work in a historical perspective. As no

other work of Tamil literaturecontains such an aspect it is must to estimate Kachchiayppar'sKandapuranamin historical perspective.

**Footnotes**

1. Tirumurugatruppadai, p. 255-259
2. N.Ramalingam, KandapuranaAraichchi, p.33
3. Kandapuranam,1:14:105,1:20:18,1:70:30,22,4:13:240 etc.
4. S. Vidhiyanandhan, TamilarSalbu, pp.137-138.
5. Kandapuranm, TiruvilayattuPadalam, 106:1-4
6. Kandapuranm, Deivayanai Ammai Tirumana Padalam, 255:1-4.
7. Kandapuranm,DakkanThavamSeiPadalam, 10:1-2
8. DevargalPorruPadalam, 1:26:15-17, 3:11:23, 3:21:126-131 etc.
9. Kandapurnam, CirappuPayiram 5
10. M. Arunachalam, Tamil IlakkiyaVaralaru, Tiruchitramablam, , p.14.
11. VamadevaMurugaPattaragar, Sri Kachchiyappa Sivachariyar Puranam, , Song No.38.
12. Tolkappiyam ,Porul, 60:1-2; 100
13. Kandapuranam, ValliyammaiTirumanaPadalam, , 136:3
14. K.A. NilakantaSastri, Development of Religion in South India, p.33
15. Kandapuranam, VaraiPunai Padalam, 35:3.

## 'புள்ளிருக்குவேளிர்' முருகக் கடவுளின் அற்புதங்கள்

நா. அருண்குமார்
முனைவர்பட்ட ஆய்வாளர்
ஓலைச்சுவடித் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

வைத்தீஸ்வரன் கோயிலுக்குத் திருப்புள்ளிருக்கும் வேளூர் என்று பெயர். இத்திருத்தலம் சிதம்பரத்திற்கும் மயிலாடுதுறைக்கும் நடுவே உள்ளது. இத்தலம் பல ஆயிரக்கணக்கான குடும்பங்களுக்குக் குல தெய்வமாக விளங்குகிறது. மேலும் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் அம்புலிப் பருவத்தில் வானத்தில் உள்ள நிலவைக் குழந்தையாகிய முருகக் கடவுளுடன் விளையாட அழைக்கின்ற உவமை நயங்களும், தலப்பெருமை, நோய் தீர்த்த நிகழ்வுகள் போன்ற செய்திகளை இக்கட்டுரையில் காணலாம்.

### தலப்பெருமை

வைத்தீஸ்வரன் கோயில் என்று இன்று அழைக்கப்படுகின்ற "இத்தலத்தில்தான் முருகப்பெருமான் சிவபெருமானையும், சக்தியையும் வழிபட்டார். அதனால் இத்தலம் கந்தபுரி எனவும் வழங்கப்படுகிறது"[1] என்பதை அறியலாம். மேலும், "வைத்தீஸ்வரன் கோயிலுக்குத் திருப்புள்ளிருக்கும் வேளிர் என்று பெயர். இதன் காரணம் என்ன? புள் என்றால் ஜடாயு, இருக்கு என்றால் ரிக் வேதம். வேள் என்றால் முருகன். ஊர் என்றால் சூரியன் இவர்கள் நால்வரும் பூஜித்த தலம் ஆகும். கந்தன் பூஜித்ததால் கந்தபுரி என்றும், அங்காரகன் பூஜித்ததால் அங்காரகபுரி என்றும், அம்பிகை பூஜித்ததால் அம்பிகாபதி என்றும், ஜடாயு பூஜித்ததால் வேதபுரி என்றும் பெயர். இத்தலத்து இறைவன் மந்திரமும், மருந்துமாகி உயிர்களின் வினைகளைத் தீர்ப்பதால் வினைதீர்த்தான் கோயில் என்ற பெயரையும் பெருகிறது."[2] இத்தலத்தில் உள்ள முருகப்பெருமானின் பெயர் செல்வ முத்துக்குமாரசுவாமி ஆவார்.

### அம்புலிப் பருவம்

அம்புலி என்பது சந்திரன் "விண்ணில் விளக்கும் வெள்ளி நிலவைக் குழந்தையுடன் விளையாட வருமாறு அழைக்கும் பருவம் அம்புலிப் பருவம் ஆகும். இது நடக்கக் கற்ற குழந்தை அங்குமிங்கும் சென்று காட்சி இன்பங்களைக் காண மிகுதியாக விரும்பும் நிலையில் குழந்தையின் பதினைந்தாம் மாதத்தில் பாடப்பெறும் பருவமாகும்."[3] இப்பருவத்தில் "சாம, பேதம், தானம், தண்டம் அமைத்துப் பாடுவர்.

1. சாமம் - குழந்தையும் மதியும் சமம் எனல்.
2. பேதம் - மதியைக் காட்டிலும் குழந்தை உயர்ந்தது எனல்.

3. தானம் குழந்தையுடன் விளையாட வந்தால் மதிக்குக் கிடைக்கக் கூடிய வெகுமதிகளைக் கூறல்.
4. தண்டம் வராவிடின் மதிபெறும் தண்டலங்களைக் கூறுவது"[4]

என்று வகைமை நோக்கில் தமிழ் இலக்கியவரலாற்றில் முனைவர் பாக்கியமேரி அவர்கள் பொருள் கூறியுள்ளதை அறியலாம்.

**உவமை நயம்**

குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு என்னும் நூலில் பேராசிரியர் அ. மாணிக்கம் அவர்கள் சுட்டிக் காட்டியுள்ள பாடல்,

*தன்னொத்த தெய்வச் சிறாருமிளவீரரும்*
*தாள் நிழல் கீழ் நிற்ப இச்*
*சகதண்ட மண்டல மடுக்ககழியு நாளமரர்*
*தமை ஆழக் காண்பவனின்...* (அம்புலிபருவம், 419:1-2)

தன்னைப் போன்ற தெய்வச் சிறுவரும் இளைய வீரரும் திருவடியில் சேர்ந்து நிற்க. இந்த உலகமும் தேவர் உலகமும் மற்ற உலகங்களும் நிலை குலையும் நாளில் தேவர்களை அழக் காண்பவன் இம் முருகப்பெருமான்.

அன்னப் பறவைகளின் கூட்டங்கள் முழுகி ஆடுவதற்கு இடமான சோழநாடனான இம் முருகனுடன் சந்திரனே விளையாடற்கு வருவாயாக! அழகு விளங்கும் கந்தபுரிப் பதிவாம் கொண்டு விளங்கத் தோன்றியவனுடனே விளையாடுதற்கு வருவாயாக! என்று இயற்கையோடு முருகக் கடவுளை ஒப்பிடும் நயம் இன்புறத்தக்கன. மேலும் இதே பாடலுக்கு வித்துவான் எம். நாராயண வேலுப்பிள்ளை கூறும் விளக்கமாவது "சந்திரனே தனக்குத் தக்க தெய்வச் சிறுவர்களும் இளைய வீரர்களும் தனது பாத நிழலில் ஒதுங்கியிருக்க இந்த உலக உருண்டைக் கட்டம் அடுக்கடுக்காக அழியும் காலத்தில் தேவர்களையெல்லாம் அழுமாறு பார்ப்பவனாகிய இந்த குமாரன் உன்னை ஒரு பொருளாக மதித்து ஒரு விரலின் நுனியினால் குறித்துக் காட்டி நீண்டுள்ள வீரக் கழலையணியும் பாதங்களைப் பூமியில் மோதி நீண்ட தாமரை மலர் போன்ற கண்களைக் கையாள் பிசைந்து கொண்டு விடாமல் அழுத வண்ணம் அழைத்தனர்"[5] என்று கூறியுள்ளதை ஒப்பிட முடிகிறது.

**பிணி நீங்கு தலம்**

இன்று வைத்தீஸ்வரன் கோயில் என்றழைக்கப்படும் இவ்வூரில் அருள் பாவித்து வரும் முருகக் கடவுள் "பழந்தமிழ் மக்கள் வழிவழி வந்த இக்காலத் தமிழ் மக்களிற் சிலர் நோயால் பீடிக்கப்படும் போதும், வேறு பல குறைகளால் வருந்தும் போதும், முருகனை நோக்கி வேண்டுதல் செய்து அவன் திருக்கோயில் சென்று தொண்டு புரிந்து, நோயும் குறைகளும் நீங்கப் பெறுகின்றனர்"[6] என்பதை அறிய முடிகின்றது. மேலும் இத்திருத்தலத்தில் முருகப்பெருமான் சகல பிணிகளையும் தீர்த்தருளும் வைத்தீஸ்வரனாய் சிவலிங்க வடிவில்

காட்சியளிக்கிறார். இவரே மூலவரான வைத்தியநாதப் பெருமான் ஆவார். சிவலிங்க வடிவில் முருகப்பெருமான் காட்சிதருவது இத்தலத்தில்தான் என்பதை அறியமுடிகின்றது.

**முடிவுரை**

இத்தலத்தில் சூரியனும், அங்காரகனும் வழிபட்டு நற்பேறு பெற்றனர். அதனால் பரீதபுரி, அங்காரகபுரி எனவும் வழங்கப்டுகிறது. பிணி தீர்க்கும் இவ்வாலயத்திற்கு வேம்பு தலமரமாக இருப்பது மிகவும் விசேடம். இங்குள்ள அழகிய திருக்குளத்தின் பெயர் 'சித்தாமிர்த தீர்த்தம்' இத் தீர்த்தத்தின் ஒரு சொட்டு நீர் கூட நோய் தீர்க்கும் தன்மை உடையது. இத் தலத்திற்கு நாமும் சென்று நம் உடல் பிணிகளை நீக்கிக்கொள்ளலாம் என்பது இக்கட்டுரையின் மூலம் அறியமுடிகின்றது.

**சான்றெண் விளக்கம்**

1. முருகப்பெருமான் அவதாரமும் திருத்தலப் பெருமையும், கெம்பு ஆறுமுகம் இரண்டாம் பதிப்பு ப.128
2. முருகப் பெருமான் கோயில்கள், லட்சுமி ராஜரெத்தினம், மு.ப.2013 ப.56
3. குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு இரண்டாம் பதிப்பு, அ. மாணிக்கம்.எம்.ஏ
4. வகைமை நோக்கில் தமிழ் இலக்கியவரலாறு, முனைவர் பாக்கியமேரி ஐந்தாம் பதிப்பு, 2013, ப.398
5. குமரகுருபரர் பிரபந்த சாரம், வித்துவான் எம்.நாராயண வேலுப்பிள்ளை, மு.பதிப்பு, 2012 ப.140
6. முருகன் அல்லது அழகு, திரு.வி.க., 2008, ப.267
7. முருகன் அவதாரமும் திருத்தலப் பெருமையும், ப.129.

# பரிபாடலில் முருகன்

**அ. அலர்மேலுமங்கை**
உதவிப் பேராசிரியர் தமிழ்த்துறை,
ஜெயாகலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருநின்றவூர்.

பாட்டும், தொகையும் ஆகிய சங்க இலக்கியம் தோன்றிய காலம் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு பொற்காலம் ஆகும். சங்கத்தொகை நூல்களில் யாப்பால் பெயர் பெற்ற பரிபாடல் ஓர் இசைப்பாடல் தொகுதியாகும். தொல்காப்பியர் காலத்தில் குறிஞ்சி நிலத்தெய்வமாக இருந்த "சேயோன்" சங்க காலத்தே நிலங்கடந்த பெருங்கடவுளாக எல்லா நிலத்தினராலும் போற்றப்பெற்றார். செவ்வேளைப் பற்றிப் பரிபாடலில் எட்டுப் பாடல்கள் உள்ளன. அவற்றைப் பாடினோர் கடுவன் இளவெயினனார், ஆசிரியன் நல்லந்துவனார், குன்றம் பூதனார், கேசவனார், நல்லழிசியார், நப்பண்ணனார், நல்லச்சுதனார் என்போராவர். பரிபாடலில் முருகப்பெருமானின் பிறப்பு, தோற்றம், வீரம், சிறப்பு, வழிபாடு, வரம் வேண்டுதல் ஆகியவைக் குறித்து புலவர்கள் குறிப்பிட்டுள்ளதைப் பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

**முருகப்பெருமானின் பிறப்பு**

சிவபெருமான் வேதமாகிய குதிரை பூட்டிய உலகமாகிய தேரில் ஏறி, வாசுகிப்பாம்பை நாணாகவும், மேருமலையை வில்லாகவும் கொண்டு முப்புரங்களை அழித்தவர். மேலும் தேவர் அளிக்கும் அவர் பாகத்தை உண்ட சிவன் உமாதேவியுடன் அமையாப் புணர்ச்சியில் உண்டான கருவை இந்திரனுக்குக் கொடுத்த வரத்திற்காக சிதைத்தார். சிதைத்த கருவை வேள்வியில் இட்டு, தெய்வ முனிவர்கள் தம் மனைவியராகிய அருந்ததி தவிர கார்த்திகை மகளிர் அறுவர்க்குக் கொடுத்தனர். அக்கார்த்திகை மகளிர் அறுவரும் கருவுற்று இமயமலையில் உள்ள சரவணப் பொய்கையில் தாமரை மலரில் முருகனை ஈன்றனர். இம்முருகப்பெருமானின் பிறப்பு பற்றிக் கடுவன் இளவெயினனார் மற்றும் குன்றம் பூதனாரும் தம்முடைய பாடலில் அழகாக கூறியுள்ளதைக் கீழ்கண்ட வரிகள் மூலம் அறியலாம்.

*"ஆதி அந்தணன் அறிந்துபரி கொளுவ,*
*வேத மாபூண் வையத்தேர் ஊர்ந்து,"* (பரி.5:22-54)

*"உயர்ந்தவர் உடம்பட மதிஆரல் பிறந்தோய்"* (பரி;9:3-7)

**முருகனின் தோற்றம்**

முருகப்பெருமான் ஆறுமெல்லிய தலைகளையும், பன்னிரண்டு மத்தளம் போன்ற தோள்களையும், இளங்கதிரவன் போன்ற நிற அழகையும் கொண்டு தாமரைப்பூவில் தோன்றியவன் என்றும், முருகப்பெருமான்

கடம்பப்பூமாலை அணிந்து, சூரனை அழித்து, மலையை பிளந்த வேலைக் கையில் ஏந்தி, பிணிமுகம் என்னும் யானையை ஊர்த்தியாகக் கொண்டு, மயிற்தோகையால் அலங்கரிக்கப்பெற்ற தோற்செருப்பை அணிந்து நிலத்தில் இருந்து விண்நோக்கி உயர்ந்தோங்கிய திருபரங்குன்றத்தில் அமர்ந்து இருக்கும் அழகினை கடுவன் இளவெயினனார் மற்றும் நல்லச்சுதனார் ஆகிய இருவரும் தம்முடைய பாடல்களில் அழகாக எடுத்துக் கூறியுள்ளதைக் கீழ்கண்ட வரிகள் மூலம் உணரலாம்.

*"மூவிரு கயந்தலை, முந்நான்கு முழவுத்தோள்,*
*ஞாயிற்றேர் நிறத்தகை, நளினத்துப் பிறவியை!"* (பரி. 5: 10-12)

*"புள்ளொடு பெயரிய பொருப்புப் புடைதிறந்தவேல்"*
*தரைவிசும்பு உகந்த தண்பரங்குன்றம்"* (பரி, 21:1-17)

**முருகனின் வீரமும் சிறப்பும்**

**வீரம்**

முருகன் "பிணிமுகம்" என்னும் யானையை ஊர்தியாகக் கொண்டு மாமர உருவில் கடலில் மறைந்த சூரபன்மனை அழிக்கக் கடலில் புகுந்து பாறைகள் தூளாகுமாறு விரைந்து சென்று வேலைச் சுழற்றி எறிந்து போர்புரிந்து சூரனாகிய மாமரத்தை அடியோடு வெட்டினான். மேலும் இந்தியாவின் வடபகுதியில் உள்ள கிரௌஞ்சகிரி என்னும் பெருமலையைப் பிளந்து வழி செய்தான் என்று முருகனின் வீரத்தை கடுவன் இளவெயினனார் தம் பாடலில் நயம்பட உரைத்ததைக் கீழ் உள்ள வரிகள் மூலம் அறியலாம்.

*"நாவலந் தண்பொழில் வடபொழில் ஆயிடைக்*
*குருகொரடு பெயர்பெற்ற மால்வரை உடைத்து"* (பரி, 5:1-12)

**சிறப்பு**

முருகப்பெருமானே! உன்னிடத்தில் அருள்பெற்றவர்கள் அறம் செய்தவர்கள், நிலையான குணம் கொண்டவர்கள், மாதவரை வழிப்பட்டவர்கள் ஆகிய இத்தகையவர்கள் உன் திருவடி நிழலை அடைவார்கள். மேலும் நெஞ்சில் சினம் கொண்டவர்கள், அறத்தைப் பின்பற்றாதவர்களும், தவநெறியை மறந்தோறும், மறுபிறவி இல்லை என்று சொல்லும் அறிவில்லாதவரும் உன் திருவடி நிழலை அடையமாட்டார்கள் என்று கடுவன் இளவெயினனார் தம்முடைய பாடலில் கீழ்க்கண்ட வரிகளில் முருகனின் சிறப்பை அழகாகக் கூறியுள்ளார்.

***"மறுபிறப்பு இல்லெனும் மடவோரும் சேரார்"***
***நின்நிழல் அன்னோர் அல்லது இன்னோர் சேர்வார்"*** (பரி, 5:71-78)

முருகபெருமானே! வான் உலகத்தில் நீ வானவர்களுக்கு இன்பம் கொடுத்ததைப் போன்று இம் மண் உலகத்தில் உள்ள மக்களுக்கும் இன்பம் அளிக்க விருப்பம் கொண்டு திருப்பரங்குன்றத்தில் எழுந்து அருளினாய்.

மேலும் வானவர் மகளை மணந்து விண்ணோர் தன்னைத் தொழுது வழிபட்டு இன்பம் பெறுவதற்காக தேவர் உலகப் பெண்ணான தெய்வயானையை மணந்தாய், அதுபோல மண்ணில் வாழும் மக்கள் அனைவரும் தொழுது வழிபட்டு இன்பம் அடைய மண்ணுலகப் பெண்ணான வள்ளியை மணந்தாய் என்று நப்பண்ணனார் தம் பாடலில் கீழ்க்கண்ட வரிகளில் முருகனின் சிறப்பை நயம்பட எடுத்துக் கூறியுள்ளார்.

*"இருநிலத் தோரும் இயைகென ஈத்தநின்*
*தண்பரங் குன்றத்து,"*
*"மாறுகொள் வதுபோலும், மயிற்கொடி, வதுவை"* (பரி, 19:1-7)

*முருகனிடத்தில் அன்பர் வழிபாடும், வரம் வேண்டுதலும்*
*கடுவன் இளவெயினனார் முருகப்பெருமான் இடத்தில்*
*"பொருளும் பொன்னும் போகமும் அல்ல; நின்பால்*
*அருளும் அன்பும் அறனும் மூன்றும்*
*உருள் இணர்க் கடம்பின் ஒலிதா ரோயே"* (பரி, 5:79-81)

என்ற வரிகள் மூலம் கடம்பப்பூ மாலை அணிந்த செவ்வேளே! நாங்கள் உன்னிடத்து வேண்டிப் பெறக் கருதுபவை பொருளும், பொன்னும், போகமும் அல்ல எமக்கு முக்தி கிடைக்க உன் அருளும், உன்னிடத்தில் நாங்கள் செய்யும் அன்பும், இவற்றின் காரணமாத் தோன்றும் அறமும் ஆகிய இம்மூன்றுமே எமக்கு அருள்வாயாக! என்று கூறுகிறார்.

பெண்கள் முருகனிடத்தில் கனவில் கணவனுடன் வையையாற்று நீரில் ஆடியது நனவில் நிகழ புதுநீர் வருக எனவும், சிலர் எம்முடைய வயிறு கருப்பம் அடைந்தால் முருகப்பெருமானே உனக்கு இன்ன இன்ன பொருட்களைத் தருவேன் என்றும், பொருள் வேண்டிச் சென்ற கணவனுக்கு மிகவும் அதிகமாகப் பொருள் கிடைக்க முருகனிடத்தில் மெல்லமாக சொல்லுவதும், தம் கணவர் போரில் பகைவரை வென்று வெற்றி பெறவும் அருச்சனைச் செய்து வேண்டி வழிப்பட்டு வரம் வேண்டியதைக் கீழ் உள்ள ஆசிரியன் நல்லந்துவனார் வரிகள் மூலம் அறியலாம்.

*"கனவில் தொட்டது கைபிழையாகாது"*
*"கருவயிறு உறுக எனக் கடம்படுவோரும்"* (பரி, 8:103-108)

*""துன்னித் துள்ளி வழிபடு வதன்பயம்*
*இன்னும் இன்னும் அவை யாகுக!"* (பரி, 14:30-32)

என்று கேசவனார் போர் செய்து சூரனை அழித்த ஒளியுடைய வேற்படை உடையவனே! அகில் முதலியவற்றால் புகைந்த நறும்புகையை விரும்பியவனே! ஆறுமுகங்களையும் பன்னிரண்டு கைகளையும் உடைய மலர் போன்ற வள்ளியை விரும்பிய அழகனே! கணவனுடன் என்றும் பிரியாமல் இருக்க யாழ் இசைத்து உன்னைப்பாடிய பாடல்களை விரும்பியவனே! உன்னை சிறுவயதிலேயே கண்டு இந்திரன் மற்றும் தேவர்கள் அஞ்சுவதற்குக் காரணமான

சிறப்புமிக்கவனே! அந்தணரின் அறத்தையும் கொண்டவனே! என்றும் முருகனே உன்னிடத்தில் நாங்கள் விரும்பி வழிபாடு செய்யவும், மேலும் வழிபாடுகள் அமைய அருள்புரிவாயாக! என்று வழிபாடும் வேண்டுதலைப் பற்றி கூறியுள்ளார்.

நீலமயிலும், உயர்ந்த கோழிக்கொடியும், பிணிமுகம் என்ற ஊர்தியும் கொண்டு வெற்றி பெறுகின்ற போரினை உடைய இறைவனே! யாமும் எம் சுற்றமும் மனிதரைப் புகழ்ந்து பாடாமல் உன்னைப் புகழ்ந்து பாடுவதற்குக் காரணம் யாம் பிறவித் துன்பம் இன்றி இன்பம் நிறைந்த நாளைப் பெறுவதற்காகும் என்று வேண்டுவதை நல்லழிசியார் கீழ்க்கண்ட வரிகளில் கூறியுள்ளார்.

*"பணிஒரீஇ நின்புகழ் ஏத்தி*
*அவை, யாமும் எம் சுற்றமும் பரவுதும்*
*ஏமவைகல் பெறுகயாம் எனவே"* (பரி, 17: 50-53)

செவ்வேளே உன் பூசையில் நரம்பின் இசையும், புலவர் பாடலும், வேத ஒலியும், பூவும் தீபமும், தீயில் உருகும் அகில் மற்றும் சிந்தனை மணம் கமழும் உன் திருவடியில் வாழ்வதை யாமும் எம் சுற்றத்தோடு ஊரில் வாழ்வதைப் போல் பிரியாமல் உன்னிடத்தில் இருப்போம் என்றும் அப்படி இருக்க முருகப்பெருமானே! அருள்புரிவாய் என்று மக்கள் வழிபட்டு வேண்டுவதைக் குன்றம் பூதனார் தம்முடைய பாடலில் கூறுவதைக் கீழே காணலாம்.

*"உரிதினின் உறைபதிச் சேர்ந்தாங்கும்*
*பிரியா திருக்க எம் சுற்றமோடு உடனே"* (பரி, 18:51-56)

*"நன்றுஅமர் ஆயமோடு ஒருங்குநின் அடியுறை*
*இன்றுபோல் இயைகெனப் பரவுதும்"* (பரி, 21:66-70)

என்ற நல்லச்சுதனார் பாடல் வரிகள் மூலம் அறிவது பகைவரை அழித்து வெற்றி வேலை கையில் சுழற்றுபவனே! பன்னிறு தோளும், அழகிய ஆறுமுகமும் கொண்டவனே! நாங்கள் எங்கள் சுற்றத்தோடு நின் அடியில் போற்றி வாழ்தல் இன்று போல் என்றும் வாழ உன்னைக் கை கூப்பித் தொழுது வேண்டுகிறோம் எமக்கு இந்த பேற்றை அருள்வாயாக என்று கூறியுள்ளார்.

**முடிவுரை**

இவ்வாறு சங்க இலக்கியத்தில் அமைந்துள்ள பரிபாடலில் முருகப் பெருமானைப் பற்றிப் பல அரியச் செய்திகளையும், முருகப்பெருமானின் பிறப்பு, சிறப்பு, வழிபாடு, வரம் வேண்டுதல் ஆகியவற்றைப் பற்றி மிகவும் அழகாக அக்காலப் புலவர்கள் எடுத்துக் கூறிய செய்திகளின் மூலம் அறிந்துக் கொள்ளலாம், மேலும் தமிழர்தம் பக்தி இலக்கியம் தொன்மை வாய்ந்தது என்பதைச் சங்க இலக்கிய நூலான பரிபாடல் உணர்த்துகிறது.

# திருமுருகாற்றுப்படையில் முருகன்

**B. அனுசுயா**
தமிழ்த்துறைப் பேராசிரியர்
D.L.R கலை மற்றும் அறிவியல் கல்லூரி
விளாப்பாக்கம்

முருகன் என்றால் “அழகு” என்று தமிழ்மொழி கூறும். அத்தகைய முருகன் அன்னை பார்வதி தேவியின் குமரன் தந்தைக்கு உபதேசம் செய்து “தகப்பன்சாமி” என்று உலகத்தவரால் புகழப்பட்டவன்.

“சுட்ட பழம் வேண்டுமா சுடாத பழம் வேண்டுமா என்று கேட்டு ஔவைக்குக் கனி கொடுத்தவன். தன்னை நம்பும் பக்தர்களை ஓடி வந்து காப்பவன். முருகா! முருகா! என்று அழைக்கும் ஆன்மீக அன்பர்களின் குறைகளை நொடிப்பொழுதில் தீர்த்து வைப்பவன். “*வேலுண்டு வினையில்லை மயிலுண்டு பயமில்லை*” என்ற குறுவாசகத்திற்கு இணங்க காவலாய் நிற்பவன். “யாமிருக்க பயமேன்” என்ற நம்பிக்கை ஊட்டும் வாசகம் முருகன் மீது பக்தி கொள்ள வைக்கிறது. அதனால் தான் தமிழ் கடவுளாக முருகப் பெருமானை முதலில் கூறுகின்றனர். முருகனுக்கு விரதம் இருந்து சஷ்டி நோன்பு இருந்தும் ஆடி கிருத்திகை விரதம் போன்ற பல்வேறு விரதங்களை பக்தர்கள் மேற்கொள்கின்றனர். கந்த சஷ்டிக் கவசம் தம் குடும்பத்தின் தலைகவசமாக கருதி தினமும் காலையும் மாலையும் வீடுகளில் பாடலின் இசையைக் கேட்டும் தொலைக்காட்சியில் பார்த்தும் மக்கள் மகிழுகின்றனர். அத்தகைய முருகனின் அழகைச் சொல்ல வார்த்தைகளே இல்லை. முருகனின் கருணை கொண்ட பார்வையும் மதி போன்ற முகமும் பன்னிரு கையும் பார் போற்றும் தன்மை உடையது. அன்னை பார்வதி தேவியின் மடியில் அமர்ந்தும் தந்தை தாய் சகோதரர் விநாயகருடன் கொண்ட காட்சியும், வள்ளி, தெய்வானை சமேத காட்சி தரும் குடும்ப காட்சியும் காண கண் கோடி வேண்டும். அத்தகைய அழகும், சிறப்பும் மிக்க முருகனின் பெருமைகளைக் கூறும் திருமுருகாற்றுபடையில் முருகன் என்ற தலைப்பை இவ்வாய்வு கட்டுரையில் காண்போமா?

**பெயர்க்காரணம்**

ஆற்றுப்படை என்றால் என்ன? பரிசில் பெற்று வரும் புலவன் பரிசு பெற வரும் மற்றொரு புலவனுக்கு வழியைக் கூறி இந்த இடத்தில் இந்த நாட்டில் உள்ள ஒரு வள்ளலையோ, கொடைத்தன்மை கொண்ட அரசனையோ நாடிச் சென்று பரிசு பெருவாயாக என்று கூறி ஆற்றுப்படுத்துவதே ஆற்றுப்படை என்று கூறப்படுகிறது. இதில் முருகனின் அருள்பெற்ற ஒருவன் அருள்பெறாத ஒருவனை முருகனிடம் ஆற்றுப்படுத்துவதே திருமுருகாற்றுப்படை என்று பெயர்க் காரணம் கூறப்படுகிறது. எ.கா.

*"யாம் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம்"*

என்ற கருத்திற்கு இணங்க திருமுருகாற்றுப்படையில்,

*"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடல்கண்டா அங்கு* (திருமுரு., 1-2)

என்று தொடங்கும் இரண்டு வரிகளும், கடைசி வரிகளான,

*"இழுமென இழிதரும் அருவிப்*
*பழமுதிர் சோலை மலைகிழ வோனே"* (திருமுரு., 316-317)

என்ற வரிகளும் புகழ் பெற்றவையாக அமைந்து மேலும் திருமுருகாற்றுப்படையில் ஈடு இணையில்ல. இறைவனே உன்னை வணங்குபவருக்குக் கிடைத்தற்கரிய பரிசிலை நல்குவாயாக! என முருகனிடம் இரந்து கேட்கும் பகுதி அழகாக சிறப்புற அமைந்துள்ளது. இதனை,

*"ஒருநீ யாகித் தோன்ற விழுமிய*
*பெறலரும் பரிசில் நல்குமதி பலவுடன்"* (திருமுரு., 294-295)

என்று வரும் வரிகள் அழகுடன் விளக்குகிறது

**ஆற்றுப்படை**

ஆற்றுப்படை என்பது ஓர் அரச வள்ளலிடம் பரிசில் பெற்ற ஒருவன், பரிசில் பெற விரும்பிய மற்றொருவனை அவனிடம் ஆற்றுப்படுத்தியதைப் பாடிய பாட்டு ஆற்றுப்படுத்தல், வழிப்படுத்தல், பரிசில் பெறுதற்குரியவர்கள் புலவர், பாணர், பொருநர், கூத்தர் விறலியர் என்பர். கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் ஆற்றிடைக் காட்சியுறழத் தோன்றிப் பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச் சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும் என்று தொல்காப்பியம் கூறுகிறது. ஆற்றுப்படை ஆற்றுப்படுக்கும் (அல்லது) படுக்கப்படும் வகுப்பாரால் புலவராற்றுப்படை, பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப்படை, விறலியாற்றுப்படை எனப் பெயர் பெறும்.

**திருமுருகாற்றுப்படை**

திருமுருகாற்றுப்படையின் மற்றொரு பெயர் புலவராற்றுப்படை ஆகும். பத்துப்பாட்டில் முதலாவதாகக் கூறப்படும் நூல் இது 317 அடிகளைக் கொண்டது. நெடுநல்வாடையைப் பாடியவர் நக்கீர். அவரே திருமுருகாற்றுப்படையைப் பாடியுள்ளார். பாட்டுடைத் தலைவன் முருகன். திருமுருகாற்றுப்படை முருகன் எழுந்தருளி இருக்கும் இடங்களையும், வழிபடுமுறைகளையும் விரிவாக விவரிக்கின்றது. இதன் அடிப்படையில் ஆறு பிரிவுகளாகப் பகுக்கலாம். அவை:

முதற்பகுதியில், திருப்பரங்குன்றம் மலை, அதனைச் சூழ்ந்த இயற்கை வளம், முருகனின் திருக்கோலம், சூரனுடன் செய்த போர் ஆகியன இப்பகுதியில்

இடம் பெற்றுள்ளன. இரண்டாம் பகுதியில், முருகனின் ஆறு திருமுகங்களின் சிறப்பு, பன்னிரு கைகளின் செயல் திருச்செந்தூர் சிறப்பு. ஆகியன கூறப்பட்டுள்ளன. மூன்றாம் பகுதியில், முருகனை வழிபடும் முனிவர்களின் பெருமை, பழனியில் வழிபாட்டிற்கு வரும் மகளிரின் இயல்பு ஆகியன கூறப்பட்டுள்ளன. நான்காம் பகுதியில், திருவேரகத்தில் முருகனை வழிபடுவோரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஐந்தாம் பகுதியில், மலைநாட்டு மக்கள் குரவைக் கூத்தாடி வணங்கும் முறைகள் முதலியன கூறப்பட்டுள்ளன. ஆறாம் பகுதியில், முருகன் எழுந்தருளும் இடங்களும், அவனிடம் சென்று அருள்பெறும் முறைகளும் பழமுதிர்ச் சோலையின் அருவிச் சிறப்பும் கூறப்பட்டுள்ளன.

**பக்தி உணர்ச்சித் ததும்பிய நூல் திருமுருகாற்றுப்படை**

சங்க காலத்தில் பக்தியுணர்ச்சி நிரம்பிய முழுநூல் திருமுருகாற்றுப்படை எனலாம். பரிபாடலில் முருகன், திருமால் ஆகியோரைப் பற்றிச் சில பாடல்கள் உள்ளன. ஆயினும் திருமுருகாற்றுப்படையே நீண்ட பக்திப் பாடலாகச் சங்க இலக்கியத்துள் உள்ளது. இன்றும் சில குடும்பங்களில் முருகனை வழிபடுவோர்க்கு அது பாராயணத்துக்கு உரியதாக உள்ளது. அக்காலத்தில் இருந்த முருகன் கோயில்களைப் பற்றியும், வழிப்பாட்டு முறைகளைப் பற்றியும் அறிவிக்கும் குறிப்புகள் இதில் உள்ளன. இதில் அமைந்துள்ள இயற்கை வருணனைகளும் சிறப்பானவை.

முதல் பகுதியில் திருப்பரங்குன்றம் என்னும் மலைக்கோயில் பற்றியும், அதைச் சூழ்ந்த இயற்கை வளம் பற்றியும் முருகன் திருக்கோலம் பற்றியும், சூரனுடன் செய்த போர் பற்றியும் விளக்கங்கள் உள்ளன. இரண்டாம் பகுதியில் முருகனுடைய ஆறு திருமுகங்களின் குறிப்புகளும், பன்னிரண்டு கைகளின் செயல்களும் திருச்செந்தூர் என்னும் உலகத்தின் சிறப்பும் விளக்கப்படுகின்றன. மூன்றாம் பகுதியில் முருகனை வழிபடும் முனிவர்களின் பெருமையும் பழனியில் வழிபாட்டுக்கு வரும் மகளிரின் இயல்பும் கூறப்பட்டுள்ளன. நான்காம் பகுதி திருவேரகம் என்னும் தலத்தில் வழிபடுவோரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஐந்தாம் பகுதியில் மலைநாட்டு மக்கள் குரவைக் கூத்து ஆடிச் சேவிக்கும் முறைகள் முதலியன எடுத்துரைக்கப்படுகின்றன. இறுதியில் ஆறாம் பகுதியில் முருகன் எழுந்தருளும் இடங்களும் அவனிடம் சென்று அருள்பெறும் முறையும் பழமுதிர்ச்சோலையின் அருவியின் சிறப்பும் விளக்கப்படுகின்றன.

மார்பின் என்பெழுத்தியங்கும் யாக்கையத் நண்பகல் பலவுடன் கழிந்த உண்டியர் இகலொடு செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும் கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர் காமமொடு கடுஞ்சினம் கடிந்த காட்சியர் இடும்பை யாவது அறியா இயல்பினர் என்னும் அடிகள் முருகனை வழிபடும் முனிவர்களைப் பற்றி விளக்குவன. "மார்பின் எலும்புகள் எழுந்து தோன்றும் உடம்பை உடையவர் பல பகல் உண்ணாமலே நோன்பால்

கழித்தவர்கள் பகையையும் சினத்தையும் நீக்கிய மனம் உடையவர்கள். எல்லாம் கற்றவர்களும் அறிய முடியாத மெய்யறிவு பெற்றவர்கள்.

கற்றவர்களுக்கு எல்லையாக வல்ல தலைமை உடையவர்கள் ஆசையையும் கடுங்கோபத்தையும் நீக்கிய ஞானம் உடையவர்கள் துன்பம் சிறிதும் அறியாத மன உறுதி இயல்பாகப் பெற்றவர்கள் என்று அவர்களின் இயல்பினை எடுத்துரைக்கிறார். நக்கீரர் இயற்கையின் அழகில் மிகவும் ஈடுபட்டவர் என்பதைத் திருமுருகாற்றுப்படை விளக்குவது போலவே அவர் பாடிய மற்றொரு நீண்ட பாட்டாகிய நெடுநல்வாடையும் விளக்குகிறது. திருமுருகாற்றுப்படையின் தொடக்கத்தில் கதிரவன் கடலில் எழும் காலை காட்சியைக் காண்கிறோம். பிறகு திருப்பரங்குன்றம் முதலான மலைகளின் விளக்கங்களைக் காண்கிறோம். பாட்டின் முடிவில் மலையிலிருந்து விழுந்து பாயும் அருவியின் காட்சி நம் உள்ளத்தைக் கவர்கிறது. கடைசி 22 அடிகளில் அந்த அருவி வருணனை அழகாக அமைந்துள்ளது. முருகு என்ற சொல்லுக்கு முருகனாகிய தெய்வம் என்ற பொருளோடு அழகு என்னும் பொருளும் உண்டு. அந்தப் பொருத்தம் பாட்டைப் படிப்பவரின் மனதை விட்டு நீங்காமல் நிலைத்து நிற்கும்.

**திருமுருகாற்றுப்படையின் இயற்கை அழகு**

ஆற்றுப்படையானது சங்க காலத்திற்குப் பின்பு கிபி 300-600க்கு இடையில் எழுந்தது இயற்கையின் அழகை விளக்கும் இனிய வரிகள் இதோ,

*"இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த*
*முட்டாள் தாமரைத் துஞ்சி வைகறைக்*
*கட்கமழ் நெய்தல் ஊதி எல்படக்*
*கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்*
*அஞ்சிறை வண்டினம் அரிக்கணம் ஒலிக்கும்"* (திருமுரு.,72-76)

என்ற இயற்கை வருணனை இணையற்றது. அருவிக் காட்சியும் (296-317) அருமையாக அமைந்துள்ளது.

*முருகனை வணங்குவோர் வினையினின்று நீங்குவர்*

முருகப் பெருமானை வணங்குபவர்கள் பிறவிப் பயனை அடைந்ததோடு தங்களுடைய வினையினின்றும் நீங்கிவிடுவர் என்று நக்கீரர் கூறுகின்றார்.

*"சேவடி படரும் செம்மல் உள்ளமொடு*
*நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்*
*செலவு நீ நயந்தனை ஆயின், பலவுடன்*
*நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப,*
*இன்னே, பெறுதிநீ முன்னிய வினையே!"*

இத்தகைய சிறப்புடைய இந்நூல் வழிபாட்டுக்கு உரியதாகப் பாராயணம் செய்து மகிழ்கின்றனர்.

## முடிவுரை

பழனி சென்னிமலை, மருதமலை போன்ற மலைவாழ் முருகனை மக்கள் வழிபடுகின்றனர். வள்ளி முருகன் என்ற அளவில் மக்கள் தெரிந்து வைத்திருக்கின்றனர். பேயோட்டுவதற்கு உதவி செய்பவனாகவும், வருவதுரைக்கும் தெய்வமாகவும் பக்தர்களின் வழிபாட்டுக் கூறுகள் இடம் பெற்றிருக்கின்றன. சைவ மதப்பெரும் கடவுளின் திருக்குமாரன் என்று சேர்த்துவிட்டதால் கொற்றவையின் மைந்தன் என்ற நிலையிலிருந்து பிரித்துவிட்டதாக முருகன் நாட்டுப்புற மக்களிடமிருந்து சிறிது சிறிதாக விலகி வருகிறார் எனக் கருதலாம். இருப்பினும் முருக பக்தர்கள் இறைவனுக்கு விரதம் இருந்தும், காவடி எடுத்தும் தங்கள் பக்தியை வெளிப்படுத்துகின்றனர். தமிழ்க் கடவுளான முருகக் கடவுளின் பெருமை என்றும் நிலைத்து இருக்கும் என்று கூறலாம். அவரின் பெருமைகளை விளக்குவதற்கு வார்த்தைகளே இல்லை என்று இக்கட்டுரை மூலம் அறிய முடிகிறது எனலாம்.

## துணைநூல் பட்டியல்


1. நாட்டுப்புற இலக்கியம் - க.கிருட்டிணசாமி பதிப்பு – சீதை பதிப்பு சென்னை – 600 005.
2. தமிழ் இலக்கிய வரலாறு – கே.இரா.கமலாமுருகன் - சாரதா பதிப்பு சென்னை – 14.
3. தமிழ் இலக்கிய வரலாறு – மது.ச.விமலானந்தம் - முல்லை நிலையம் சென்னை – 600 017.
4. பத்துப்பாட்டு மூலமும் உரையும் - கதி.முருகேசன் - சாரதா பதிப்பு சென்னை – 14.
5. தமிழ் இலக்கிய வரலாறு – மு.வரதராசன் - சாகித்திய அகாடமி அலுவலகம்.
6. தமிழ் இலக்கிய வரலாறு –சி.சேதுராமன் - பாவை பப்ளிகேஷன்ஸ் சென்னை – 14.
7. தமிழ் இலக்கிய தகவல் களஞ்சியம் - தேவிரா - நந்தினி பதிப்பகம் சென்னை -101.
8. தமிழ் இலக்கிய செய்திகள் - கு.கனகரத்தினம் - அடோன் பப்ளிஷிஸ் குருப் திருவனந்தபுரம்.
9. தமிழக வரலாறும் பண்பாடும் இராச மாணிக்கம் - சாரதா பதிப்பு சென்னை – 6.
10. தமிழ் இலக்கிய வரலாறு – சி.பாலசுப்பிரமணியன்- பாரி புத்தகப் சென்னை-600 108.

# முருகனும் தமிழும்

முனைவர் **இரா. அனுராதா**
இராணிமேரி கல்லூரி (தன்னாட்சி),
சென்னை - 600004

ஆதிசங்கரர் உருவாக்கிய ஷண்மதங்களில் (காணாபத்தியம், சைவம், வைணவம், சௌரம், சாக்தம், கௌமாரம்) கௌமாரமும் ஒன்று. கௌமாரம் என்பது முருகனை முழுமுதற் கடவுளாக கொண்ட சமயமாகும். 'கௌ' என்ற எழுத்திற்கு மயில் என்றும் பொருள். முருகன் மயில்வாகனன் என்பதால் இச்சமயம் கௌமாரம் எனப் பெயர் பெற்றது.

முருகன் தமிழரின் இயற்கைக் கடவுள். நிலங்களை ஐந்து பகுதிகளாகப் பகுத்து தெய்வத்தை உண்டாக்கித்தொழத் தமிழனின் வழியில் குறிஞ்சித் தெய்வமாக முருகன் ஆகிறான். முருக வணக்கம் குறித்த சான்றுகள் ஆதிச்ச நல்லூர் அகழ்வாய்வுப் பொருள்களிலிருந்து அறிய வருகிறது. சங்க காலத் தமிழர் முருகனைச் சேயோன் என்றனர். சேயோனின் மறுபெயர் செவ்வாய். முருகனுக்கு உகந்த கிழமையாகக் கருதப்படுகிறது. முருகனின் பன்னிரண்டு கைகள் பன்னிரண்டு மாதங்களாகவும், ஆறுமுகங்கள் ஆறு காலங்களாகவும், இரண்டு கண்களைச் சந்திர, சூரியர்களாகக் கருதுவோரும் உளர். தொல்காப்பியர் தொடங்கி முருகனை ஏற்றுப் போற்றிய பாங்கினை ஒரு பருந்துப் பார்வையில் பார்ப்போம்.

தமிழில் முருகனைப் பற்றி பாடும் பரிபாடல், திருமுருகாற்றுப்படை, திருப்புகழ், கந்தபுராணம் என ஏராளமான நூல்கள் உள்ளன. சங்க இலக்கியங்களில் வேலனுக்கு வெறியாடல் நிகழ்த்தப்பட்ட பாடல்களும் காணப்படுகின்றன.

சங்க நூல்களில் தெய்வத்திற்கென்று ஒரு தனி நூல் உண்டு எனில் அது முருகனின் புகழ் பாடும் திருமுருகாற்றுப்படை என்ற நூலாகும். பரிபாடலில் காணப்படும 22 பாடல்களில் 8 பாடல்கள் முருகனுக்கு உரியதாக உள்ளன. முருகன் குறிஞ்சி நிலக் கடவுளாவான். இளமை, அழகு, மணம், செம்மை என்னும் பொருள்களால் போற்றப்படும் தனிப் பெருந்தெய்வத் தன்மை உடையவன்.

முருகன் என்ற பெயரே சங்கப் புலவர்களால் பெரிதும் ஆளப்பட்டு உள்ளதைப் பின்வரும் சான்றுகளால் அறியலாம்.

*"அரும்பெறல் மரபின் பெரும் பெயர் முருக"*
(திருமுருகாற்றுப்படை, 6)

*"முருகன் சீற்றத்து உரு கெழு குரிசில்"* (பொருநா., 131)

*"முருகென மொழியும் வேலன்"* (ஐங்குறு. 129:2)

*"பெரும் பெயர் முருக"* (பரிபாடல் 5:50)

*"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்*
*சினமுரு முருகன் தண்பரங் குறைத்து"* (அகம். 59:10-11)

*"முருகன் ஆரணங் கென்றலின்"* (அகம். 98:10)

*"சூர்நவை முருகன் சுற்றத் தன்னநின்"* (புறம். 23)

*"முருகென மொழியுமாயின்"* (ஐங்குறுநூறு)

முருகன் கடம்ப மலரை உடையவன் என்பதும் போர் உண்மையை உடையவன் என்பதும்

*கடம்பமலர் நெடுவோர்* (பெரும். 75)

*'செருமிகு சேய்'* (புறம்.120)

புலனாகிறது. மேலும் முருகன் முருகு என்னும் சொல்லால் பாராட்டப்படும் பெருமையை உடையவன். மஞ்ஞையன், சேவலின் கொடியோன் (திருமுருக. 205, 206), அறுவர் பயந்த செல்வன் (திருமுருக. 255), ஆல்கெழ கடவுப் புதல்வர் (திருமுருக. 256), கொற்றவைச் சிறுவன் (திருமுருக 260), சேவல்அம் கொடியோன் காப்ப" (குறுந்தொகை), குறிஞ்சிக் கிழவன் (திருமுருக 267),

*"மலர்ந்த வள்ளியங் கானக் கிழவோன்*
*ஆண்டகை விறல்வேள்"* (ஐங்குறுநூறு : 250 :3-4)
*"சூளுடை முழுமுதல் தடிந்த பேரிசைக்*
*கடுஞ்சின விறல்வேள் கந்தூர்ந்தாங்கு"* (பதிற். 2-ம் பத்து :1:5-6)

திருமுருகாற்றுப்படை முருகப் பெருமானை வெண்சுடர் வெல்வேள் என்றும், பரிசிலிர்த் தாங்கும் உருகெழ நெடுவேள் என்றும் குறிப்பிடுகிறது.

*"மணிமயில் உயரிய மாறா வென்றிப்*
*பிணிமுக வூல்தி யொன் செய்ய யோனும்"* (புறம். 56:7-81)

எனப் பல பெயர்களைத் தருகிறார்கள் புலவர்கள்.

காலங்காலமாக முருக வணக்கம் தமிழகமெங்கும் பரவியிருந்தது. போர்க் கடவுளாக முருகனைப் போற்றினர். வேல் அவனுடைய ஆயுதமாக விளங்கியது. எனவே இவனை வேலன் எனவும் அழைத்தனர். ஆலமர் செல்வனின் மகனாதலால் சேய் என்றழைத்தனர். முருகன் கோயில் பூசாரியின் பெயர் வேலன் (வெறியாட்டில் வேலனின் பங்கு மிகப் பெரிது) முருகன் கோவில்கள் மலை மீது மட்டுமின்றி கடற்கரையிலுள்ள திருச்சீரலைவாயிலும் இருந்தது. இது அக்காலத்திலேயே திணை நிலைத் தெய்வம் மற்ற நிலங்களுக்குரிய தெய்வமாகப் பரவியதொரு பொதுநிலையைக் காட்டுகிறது. இருந்த போதிலும் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குறவர்கள் முருகனை வணங்கி குரவைக் கூத்தாடினர். குறவர், கானவர், ஆண், பெண் எனப் பலர் கூடிக்

குரவைக் கூத்தாடி முருகனை வழிபட்டனர். இவ்வழிபாடு பெரும்பாலும் வேங்கை மரத்தடியிலேயே நிகழ்ந்தது. இது வள்ளியை மணம் புரியவந்த முருகன் வேங்கை மரமாக வந்தனிலா எனத் தெரியவில்லை. இது தவிர போருக்குச் செல்லும் வீர்ர்களுக்குப் போர் உணர்வினை ஊட்டுவதற்காகப் போராடல் என்ற ஆட்டத்தை ஆடினர். முருகனுக்குத் தேன், தினை, கடம்பமலர் மாலை ஆகு ஆகியவை படைக்கப்பட்டது.

தமிழ் மக்கள் தொன்றுதொட்டே கடவுட் கொள்கை உடையவராய் வாழ்ந்திருக்கின்றனர் என்பதற்குப் பழைய இலக்கண இலக்கியங்களில் சான்றுகள் பல உள்ளன. தொல்காப்பியம் கருப்பொருள்களும் முதலாவதாகத் தெய்வத்தையே கூறுகின்றது.

**தொல்காப்பியம்**

தமிழ்க் கடவுளாம் முருகன் வழிபாடு வடவேங்கடம் தென்குமரி ஆயிடை தமிழ் வழங்கும் நாட்டில் தொன்றுதொட்டு நிகழ்ந்து வருகிறது. மாந்தரினம் முதலில் தோன்றிய இடம் கடல் கொண்ட குமரிக் கண்டமே என்றும், அதன் கண்ணும் மலையும் மலை சார்ந்த குறிஞ்சித் திணைப் பகுதியே யாகும் என்றும், ஆராய்ச்சியாளர் ஆய்ந்து கூறியுள்ளனர். இன்றைக்குத் தோராயமாக ஈராயிரம் ஆண்டுகட்கும் முற்பட்டதெனக் கருதப்படும் தொல்காப்பியம் என்னும் பழந்தமிழ் இலக்கண நூல் முருகனைச், சேயோன் மேய மைவரை யுலகமும் எனக் குறிஞ்சித் திணைக்குரிய தெய்வம் என்று குறிப்பிடுகின்றது. இதனின்றும் முருக வழிபாடு மிகச் தொன்மைக் காலந் தொட்டுத் தமிழ்நாட்டில் நிகழ்ந்து வந்துள்ளது என்பது தெள்ளிதின் விளங்குகின்றது.

**முருகன் இயற்கைத் தெய்வம்**

இயற்கையெழில் தெய்வம் முருகன், இயற்கையோடு இயைந்து வாழ்ந்த தமிழர் முருகனை இயற்கையில் வாயிலாக இனிதறிந்து அவன்றன் மாட்சியை உள்ளுள் உணர்ந்து அனுபவித்தனர். முருகனின் உள்ளங்கவர் திருவுருவை மக்கள் இயற்கைக் காட்சியின் வாயிலாகக் கண்டு மகிழ்ந்தனர். நீலமாக் கடலில் காலையில் எழுஞ் செங்கதிரோன் எழில்மிகு காட்சியைக் கண்டுவந்த பண்டைத் தமிழ்ச் சான்றோர் அக்காட்சியின் வாயிலாக, நீலமயில் மீது இவர்ந்துவரும் செந்நிறம் வாய்க்கப் பெற்ற கந்தனை நினையாமல் நினைந்து, வரலாற்றுக் காலம் முதலே வழிபடத் தொடங்கியிருப்பர், திருமுருகாற்றுப் படையில்,

*உலகம் உவப்ப ஏர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு*
*ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி*

எனப் பகர்கிறார் நக்கீரர். இவர் இளஞாயிற்றினொடு முருகப் பெருமானின் அழகொளியினை ஒப்பிட்டுரைத்துள்ளார். மேலும் காட்சிப் பொருளான

செஞ்ஞாயிற்றின் எழில் கொண்டு கருத்துப் பொருளான முருகனின் இளமை, அழகு, இனிமை, வனப்பு ஆகியவற்றையும் உணர்ந்து அனுபவிக்கத் தூண்டியுள்ளார்.

திருமுருகாற்றுப்படையில் முருகனின் திருவுருச் சிறப்பு, மாலை, சூரனை அழித்த தன்மை ஆகியவை முதற் பகுதியில் அமைந்துள்ளது. முருகனின் யானை இயல்பு, அவனது ஆறுமுகங்களின் செயல், பன்னிரு கரங்களின் ஆற்றல் ஆகியன இரண்டாம் பகுதியில் அமைந்துள்ளது. மூன்றாம் பகுதியில் முருகனை வணங்கும் முனிவர், தேவ மகளிர் போன்றோரின் இயல்புகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. நான்காம் பகுதியில் அந்தணர் செயலும், ஐந்தாம் பகுதியில குரவைபாடி வணங்கும் செய்திகளும் அமைந்துள்ளது. ஆறாம் பகுதியில் முருகன் எழுந்தருளியிருக்கும் இயற்கைச் சூழல்கள், இடம்பெற்று உள்ளன. அவனை வணங்கும் முறை ஆகியவை முக்திப் பெற்ற ஒருவன் பெறுவதற்குப் பக்குவமான ஒருவனை முருகனிடம் வழிபடுத்துவே இதன் நோக்கமாகும்.

பரிபாடலில் முருகனைப் பற்றி பல கதைகள் கிடைக்கின்றன. முருகனிடம் இரப்பவை பொருளும் பொன்னும் போகமுமல்ல, நின்பால் அருளும் அன்பும் அறனும் மூன்றும் என்று வேண்டுகிறார். மேலும் முருகன் தாமரையில் அவதரித்தல் (பரி. 8) தமிழாராய்தல் (பரி. 9) இந்திரனை முருகன் வெல்ல்ல் (பரி. 5) போன்றவற்றையும் பற்றி விரிவாக கூறுகிறது பரிபாடல். சங்கப் பாடல்கள் பலவற்றில் முருகனைப் பற்றிய குறிப்புகள்பல வருகின்றன. இம்முருகனுக்குக் கடம்ப மாலை அணிவித்து மறியறுத்து வெறியாடிய பூசாரியும் 'வேலன்' எனப்பட்டான். 'வெறிபாடிய காமக் கண்ணியார்' என்பது ஒரு புலவர் பெயர்.

*செங்களம் படக்கொன்ற வுணர்த் தேய்த்த*
*செங்கோ லம்பின் செங்கோட்டு யானைக்*
*கழல்தொடிச் சேஎய் குன்றம்....*

என்ற குறுந்தொகையின் முதற்பாடலில் திப்புத்தோளார் என்னும் புலவர் முருகப் பெருமானைப் பற்றிய குறிப்பினைப் பேசுகின்றார்.

மாலைப் போதில் சிவந்த வானத்தில் ஒரே சீரான அழகுடன் வளைவாகப் பறந்து செல்லும் கொக்குக் கூட்டத்தினைக் கூற முற்பட்ட நக்கீர்ர்,

*நெடுவேள் மார்பினாரம் போலச்*
*செவ்வாய் வானத் தீண்டி மீனருந்தும்*
*பைங்காற் கொக்கின நிறைபரை யுகப்ப*

என்கிறார்.

*யாஅம் இரப்பவை*
*பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்*

*அருளும் அன்பும் அறனும் மூன்றும்*
*உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே!*

என்ற பரிபாடல் அடிகள் முருகப் பெருமானை நோக்கி வேண்டுவனாக அமைந்துள்ளன. சங்ககாலச் சமய நெறியின் விழுமிய நோக்கம் அருளும் அன்பும் அறனும் என்பது இவ்வெடுத்துக்காட்டு ஒன்றினாலேயே இனிது புலப்படும்.

**தமிழ்க் கடவுள்**

கந்த புராணத்தில் சிறப்பிக்கப்பட்டுள்ள கடவுள் முருகன் தமிழ்க் கடவுள். தந்தை சிவபிரானுக்கும் பிரணவப் பொருளைப் பைந்தமிழில் முருகன் உபதேசித்தான் என்பதை அருணகிரியார் தம் திருப்புகழில்,

*கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத் தெரியப்*
*கொஞ்சித் தமிழால் பகர்வோனே*

எனச் சிறப்புறக் குறிப்பிடுகின்றார். மேலும் அவர்,

*முத்தமிழால் வைதாரையும்*
*வாழவைப்போன் முருகன்*

எனவும் மொழிகின்றார்.

கக்சியப்பர் முருகனின் பேரெழிலினை அவனுடைய பகைவர் வாய்மொழியாகவே பல்வேறிடங்களில் பாராட்டிப் பேசுகின்றார். கார்த்திகை மைந்தரின் கட்டழகில் கச்சியப்பர் தன்னையே இழந்து வீடுகின்ற பக்தி அனுபவத்தினைக் கந்தபுராணத்தினைக் கற்பவர் உறுதியாக உணரலாம். பெருவலிச் சூரனை அழித்தற்பொருட்டு அவன் முன்நின்ற விரிசடைக்கடவுள் மைந்தனின் கேசாதிபாதத் திருவினைக் கச்சியப்பர்,

***முண்டக மலர்ந்த தன்ன மூவிரு முகமும் கண்ணும்***
***குண்டல நிரையும் செம்பொன் மவுலியும் கோல மார்பும்***
***எண்தரு கரம்ஈர் ஆறும் இலங்கெழில் படைகள் யாவும்***
***தண்டையும் சிலம்பும் ஆர்க்கும் சரணமும்***

என்றும்,

***இன்னமும் முனிவர் தேவர் யாவரும் இனியன் எறே***
***உன்னருந் தலைமைத் தாரும் ஒருதனிக் குமரன்***

என்றும் பாராட்டி மகிழ்கின்றார்.சஙக காலத் தமிழரிடம் கடவுளைப் பற்றிய சிந்தனைகளும் சமயக் கோட்பாடுகளும், சடங்குகளும் எழுந்திருக்கின்றன. சிலப்பதிகாரத்தில், 'குன்றாக் குரவை' முருக வழிபாட்டைச் சுட்டுகின்றது. முருகப் பெருமான் தமிழினத்தின் தனிப்பெரும் தெய்வம். "செந்திவாழ் செந்தமிழ்ப் பெருமானே" என்பார் அருணகிரியார். மேலும் முருகன் சிவபெருமானுக்கு பிரணவ விளக்கத்தைத் தமிழ் மொழியில் உபதேசித்தான் என்கிறார்.

*"கொன்றைச் சடையார்க்கு கொன்றாத் தெரிய கொஞ்சித்*
*தமிழ்ப் பகர்வோனே"*

முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன் என கந்தர் அலங்காரம் பேசுகிறது. தமிழில் வழிபட்டவற்கு மிக அறியவனாய் உள்ளான் என்பதைத் திருப்புகழ் வியந்து பேசுகிறது.

தமிழ்ச் சங்கத்தின் தலைமைப் புலவனாய் எழுந்த முருகப் பெருமான் சங்கத்தில் வீங்றிருந்து தமிழாய்ந்து இறையனார் அகப்பொருளுரைக்கு உரை கண்டான் என்று அருணகிரிநாதர் குறிப்பிடுகிறார்.

*"சேந்தனை வேல் வேந்தனை செந்தமிழ் நூல்விரித்தோனை"*

என்றும்,

*"செந்தமிழ் நூலோன் குமரன் குகன்*
*இனிதான முத்தமிழை ஆயும் விரிசைக்கார"*

என்ம்; குறிப்பிடுகிறார்.

கடவுளுக்கும் உயிராகிய மனித இனத்திற்கும் உறவு கொள்ள அறிவார்ந்த சிந்தனை அடிப்படையில் அன்பினைப் புலப்படுத்தும் வெளிப்பாடே கடவுள் நம்பிக்கை. இதற்கு கந்தழி எனறு பெயர் சூட்டி மனத்தால் நினைந்து வாயால் துதித்து கரத்தால் மலர் தூவி வழிப்டடு வந்தனர். ஆற்றல் மிக்க கந்தழி அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருப்பதை உணர்ந்து அப்பரம் பொருளை முருகு என்று அழைத்தனர். உலகில் எந்த மொழிக்கும் இல்லாத சிறப்பு தமிழுக்கு உண்டு. சங்கம் வைத்து மொழியை வளர்த்த பெருமை அத்தகைய மக்கள் நிலத்தை நான்கு பகுப்பாக்கி நிலத்திற்கு ஒரு கடவுளை முன்னிலைப்படுத்தும் போது குறிஞ்சி நிலத்திற்கு முருகனைக் குறிப்பிடுகிறது. முருகன் மாசு மருவற்ற குழந்தைகளுக்குக் குழந்தை வேலானவும், இளைஞர்களுக்குப் பாலமுருகனாகவும், கலைஞர்களுக்குக் கருணைகூர் முகமாறும் கொண்ட அண்ணலாகவும், மறம் போற்றும் வீர்ர்களுக்குச் சேனாதிபதியாகவும, மந்திர உபதேசம் பெற விரும்பி வழிபடும் அன்பர்களுக்குச் சுவாமிநாதனாகவும், இல்லற நிலையினர்க்கு வள்ளி தெய்வயானையுடன் கூடிய சுப்பிரமணிய சுவாமியாகவும், பற்றற்ற ஞானத் துறவற நிலையினர்க்குப் பழனியாண்டவராகவும் விளங்கி அருளுகிறார் பன்னரு தடதோன் வள்ளல் என்னும் நம்பிக்கை தமிழ் மக்களின் மனதில் வாழையடி வாழையெனக் கால்கொண்டுள்ளது.

# வெள்ளிமலை பாலசுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

**முனைவர் த.ஆதித்தன்,**
இணைப்பேராசியரிர்,
அரிய கையெழுத்துச் சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613010.

இந்திய தீபகற்பகம் தொடங்கும் இடம் குமரி மாவட்டம். இது தமிழகத்தில் உள்ள மாவட்டங்களுள் சிறியதாகும். ஆனால் கோயில்கள் ஏராளமாக உள்ள மாவட்டங்களுள் இதுவும் ஒன்று. தமிழ்நாடு அரசின் இந்து சமய அறநிலையத் துறையின் கட்டுப்பாட்டின் கீழ் உள்ள குமரி மாவட்ட கோயில்கள் மட்டும் 398 ஆகும். அவற்றுள் ஒன்றே வெள்ளிமலை பாலசுப்பிரமணிய சுவாமி கோயில். இக்கோயில் கன்னியாகுமரி மாவட்டத்தில் கல்குளம் வட்டத்தில் அமைந்துள்ளது.

வெள்ளிமலை நாகர்கோவிலிருந்து சுமார் 10 கி.மீ தொலைவில் உள்ளது. இங்கு அமைந்துள்ள பாலசுப்பிரமணியசுவாமி கோயிலின் அமைவிடம் குறித்து, நாகர்கோவில் வெள்ளிச்சந்தை சாலையில் 4 கீ.மீ தொலைவிலும் திங்கள் நகரில் இருந்து 7 கி.மீ தொலைவிலும் இருக்கிறது. கோயில் 250 அடி உயரமுள்ள 16 ஏக்கர் பரப்புள்ள சிறுமலையில் அமைந்துள்ளது. இம்மலை மரங்களும், செடிகளும் நிறைந்தது. மலையின் சுற்றுப்புற காட்சிகளின் அழகைக் காணவே இவ்விடத்திற்குச் செல்லலாம். இம்மலையின் மேலே செல்ல 101 படிகள் உள்ளன. இம்மலையைச் சுற்றி தோட்டங்களே அதிகம். இங்கே உணவு விடுதிகளோ, தங்கும் வசதிகளோ கிடையாது. (பக்கம் எண்: 169, திருக்கோயில்கள் வழிகாட்டி கன்னியாகுமரி மாவட்டம்) என்று தமிழ்நாடு அரசு இந்துசமய அறநிலையத்துறை வெளியீட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**கோயில் அமைப்பு**

கோயில் கிழக்குப் பார்த்து அமைந்துள்ளது. கோயில் இருக்கும் குன்றைச் சுற்றி ஒரு சாலை உள்ளது. குன்றின் மேலே செல்வதற்குக் கிழக்குப் பக்கத்தில் இருந்து செல்லும் படிக்கட்டுகள் வழியாகவும் செல்லலாம், மலை அடிவாரத்தில் அமைந்துள்ள ஸ்ரீவிவேகாநந்த ஆசிரமத்தின் முன் பகுதியில் ஆரம்பமாகும் படிக்கட்டுகள் வழியாகவும் செல்லலாம். ஆசிரமம் முன் அமைந்துள்ள பாதையில் சென்றால் கோயிலின் வலது பக்கம் உள்ள வாயிலை அடையலாம். கிழக்குப் பக்கம் அமைந்துள்ள பாதையில் சென்றால் கோயிலின் முன்பக்கம் செல்லலாம். முன்பக்கத்தில் அமைந்துள்ள அதாவது கிழக்கு வாசல் பாதை குறித்து வெள்ளிமலை ஸ்ரீவிவேகாநந்த ஆசிரமம் என்கிற நூலில், “கிழக்குப் பக்கத்திலுள்ள 90 படிகளும் நம்மை ஆலயத்தில் முன்பக்கம் அழைத்துச் செல்கின்றன. 22-ஆவது படியில் ஒரு பெரிய அலங்கார

வளைவு அமைக்கப் பெற்றுள்ளது. மேலும் 55 மற்றும் 71-ஆவது படியில் களைத்து வரும் பக்தர்கள் சிறிது ஓய்வு கொள்ள சிறு அலங்கார மண்டபம் அமைக்கப் பெற்றுள்ளது.

ஆலய மண்டபத்திற்குச் செல்ல மேலும் 15 படிகளைக் கடந்தால் ஆலயத்தை அடையலாம். ஆலய கிழக்கு வாசலுக்கு ஒரு சிறப்புத்தன்மை உண்டு. கிழக்கு வாசலில் இருந்து முருகப் பெருமானின் திருஉரு சுமார் 50 அடி தூரத்தில் உள்ளது'' (பக்கம் எண்:4, வெள்ளிமலை ஸ்ரீவிவேகாநந்த ஆசிரமம்) என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

கருவறையினுள் பாலசுப்ரமணியர் மயிலுடன் நிற்கும் உருவம் உள்ளது. மூலவர் இவரே. கருவறையின் முன் சிறு மண்டபம் உள்ளது. மண்டபத்தின் தென்மேற்கு மூலைச் சுவரில் ஒரு பிள்ளையாரின் உருவம் உள்ளது. கருவறையும் அதனோடு இணைந்த மண்டபமும் கருங்கற்களால் ஆனவை. மண்டபத்தின் முன்பக்க கிழக்கு வாயில் தவிர்த்து மண்டபத்தின் வடக்கு, தெற்குப் பக்கங்களில் தலா இருவாயில்கள் வீதம் நான்கு வாயில்கள் உள்ளன.

கோயிலின் தென்மேற்கு பகுதியில் விநாயகருக்கு தனியாக ஒரு பிரகாரம் உள்ளது. அதன் அருகில் வடக்கே சாஸ்தா ஆலயம் என ஒரு பிரகாரமும் உள்ளது. இவற்றின் முன் சிறு மண்டபங்களும் உள்ளன. கர்ப்பக்கிரக மண்டபத்திற்கு வடக்கே மேற்கே பார்த்தபடி சிவன் கோயில் ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளது. அதற்கு முன்பும் சிறு மண்டபம் உள்ளது. வடகிழக்குப் பகுதியில் நவகிரகங்களின் திருஉருவங்கள் நிறுவப்பட்டுள்ளன. கர்ப்பக்கிரக மண்டப வாயிலின் வெளியே மணி மண்டபமும், மடப்பள்ளியும் (சமையல் அறை) அமைந்துள்ளன.

**காலம்**

கோயிலின் காலத்தைப் பற்றிய கல்வெட்டு, தொல்லியல் சான்றுகள் எதுவும் இதுவரை கிடைக்கப்பெறவில்லை. அவ்ஊரில் உள்ளவர்களுக்கும் அதன் தொன்மை குறித்த தெளிவான கருத்து இல்லை. வெள்ளிமலை ஸ்ரீவிவேகாநந்த ஆசிரமம் என்னும் நூலில், "இந்த மலையில் சில இடங்களிலிருந்து முற்காலத்தில் முதியோர்களை நிலத்தில் சமாதிவைக்கும் முதியோர் தாழி கண்டெடுக்கப் பெற்றுள்ளது. எனவே மிகப் பழங்காலத்திலிருந்தே இப்பகுதியில் மக்கள் வாழ்ந்து வந்தது புரிகிறது. இத்தகு காரணங்களால் ஆலயம் 1200 வருடங்கள் பழமை வாய்ந்ததென நம்பப்பெறுகிறது'' (பக்கம் எண்:9, வெள்ளிமலை ஸ்ரீ விவேகாநந்த ஆசிரமம்) என்று குறிப்பிட்டுள்ளதன் மூலம் இக்கோயில் பழமையானதாக இருப்பதற்கு வாய்ப்புள்ளது எனலாம்.

"கருவறை கட்டுமானப்படி 17 அல்லது 18ஆம் நூற்றாண்டாக இருக்காலம் என தெரிகிறது. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நீலகண்ட

ஆச்சாரியார் என்னும் தமிழ் அறிஞர் இக்கோயிலைப் பாடியிருக்கிறார். இப்பாடல்கள் அச்சில் வரவில்லை. இக்கோயில் ஒருமுறை ஏதோ காரணத்தால் அடைப்பட்டு விட்டது. பக்தர்களால் திறக்க முடியவில்லை. ஆச்சாரியார் முருகனைத் துதித்து பாடினார். உடனே கதவுகள் திறந்தன என்னும் செய்தியைச் சதாசிவம் என்பவர் எழுதியுள்ளார்" (பக்கம் எண்:170 திருக்கோயில்கள் வழிகாட்டி - கன்னியாகுமரி மாவட்டம்) என்கிற கூற்றையும் அதற்கு முன்னர் குறிப்பிடப்பட்டுள்ள கருத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது குன்றின் மேல் முருகன் வழிபாடு வெகு காலத்திற்கு முன்னரே ஆரம்பமாகி இருக்க வேண்டும். அதற்கும் கருவறை கட்டப்படுவதற்கும் பலநூறு ஆண்டுகள் இடைவெளி இருந்திருக்க வேண்டும் என்பதும் புலனாகிறது. மேலும் அறிஞர்களால் பாடப்பட்ட கோயில் இது என்பதையும் தெரிந்து கொள்ள முடிகிறது.

### கோயில் குறித்த பழம் கதை

கோயிலின் தோற்றம் குறித்த செவிவழிக் கதை ஒன்று தமிழ்நாடு அரசின் இந்து சமய அறநிலையத்துறை வெளியீடான திருகோயில்கள் வழிகாட்டி "கன்னியாகுமரி மாவட்டம்" என்னும் நூலில் கீழ்க்கண்டவாறு இடம்பெற்றுள்ளது. ஒரு இளம் பெண் வெள்ளிமலை அடிவார பகுதியில் பதநீர் காச்சிக் கொண்டிருந்தாள். அப்போது சிறுவன் ஒருவன் வந்தான். அவன் கொஞ்சம் குடிக்க நீர் வேண்டும் என அவளிடம் கேட்டான். அவள் அவனைப் பார்த்து அந்த மலை மேல் ஒரு ஊற்று இருக்கிறது. அங்கே போய் தண்ணீர்குடி என்றாள். அதற்கு அவன் நீயும் என்னுடன் வந்து சுனையைக் காட்டு என்றான். அவள் அவனை அழைத்துக் கொண்டு குன்றில் மேல் குறிப்பிட்ட இடத்தில் வந்தபோது சிறுவனைக் காணவில்லை. இந்த விசயத்தை ஊர் மக்களிடம் சொன்னாள் அந்த பெண். பின் அங்கே பாலசுப்பிரமணியனுக்கு கோயில் எடுத்தனர். இந்த கதையைக் கூறும் தற்போதைய பெரியவர்களுக்கும் கோயில் தோன்றிய காலம் பற்றி தெளிவாக எதுவும் தெரிந்திரிக்கவில்லை.

### பெயர்க் காரணம்

வெள்ளிமலை என்னும் பெயர் பிற்காலத்திலேயே வந்துள்ளது என்றும் முன்னர் இவ்விடத்தை "குறுங்கட்டிப் பொத்தை" என்றே அழைத்திருக்கின்றனர் என்றும் கன்னியாகுமரி மாவட்டம் அகத்தீசுவரத்தில் உள்ள விவேகானந்தா கல்லூரியின் மேனாள் முதல்வர் பேராசிரியர் ஈ.பொன்னுலிங்கம் அவர்கள் குறிப்பிடுள்ளார். குறுங்கட்டி என்பது குறுங்கட்டில் என்பதன் சுருங்கிய வடிவம். வீடுகளில் அமர்வதற்கு முன்னர் பயன்படுத்தி வந்தனர். பொத்தை என்பது மேடான பகுதி. மணல் திட்டையோ, உயர்ந்த பாறைகளையோ கூட பொத்தை என்பர்.

இயற்கை எழில் கொஞ்சும் வெள்ளிமலை சுற்றுப் பகுதி முழுவதையும் கண்டு களிப்பதற்கு உகந்த இடமாக இக்குன்றம் இருப்பதன் காரணமாக இதனை குறுங்கட்டிப் பொத்தை என அழைத்திருக்கலாம்.

வெள்ளிமலை என இக்குன்றம் பெயர் பெற்றிருப்பதற்கு "1.இமயத்தில் சிவபெருமான் குடியிருக்கும் கயிலைக்கு வெள்ளிமலை என ஒரு பெயர் உண்டு. அத்தகைய சிறப்பு மிக்கது என இம்மலைக்கும் வெள்ளிமலை எனப்பெயரிட்டிருக்கலாம். 2. இம்மலையைச் சுற்றிலும் குறிப்பாக வடக்குப் பாகத்தில் "காக்காய் பொன்" எனப்படும் "அப்ரகம்" அதிகமாயிருந்தது. அது சூரிய ஒளியில் மின்னும் போது வெள்ளிபோல் தோற்றமளித்ததால் வெள்ளிமலை எனப் பெயர் வந்ததாகவும் கருத்து உள்ளது. 3. நூறாண்டுகளுக்கு முன் ஒரு பக்தர் இப்பெயரைச் சூட்டினார் எனக் கூறுவாரும் உள். 4. முன்பு சரியான போக்குவரத்து இல்லாததால் மக்கள் வெள்ளிக் கிழமைகளில் மட்டும் அதிகமாக வந்து சிறப்புப் பூசைகளில் கலந்து கொள்வர். அந்தக் காரணத்தால் (வெள்ளிக் கிழமை மலை) வெள்ளிமலை எனப்பெயர் வந்திருக்கவும் வாய்ப்பு உள்ளது" இவையே காரணங்களாக இருக்கலாம் என (பக்கம் எண்: 7, வெள்ளிமலை ஸ்ரீ விவேகாநந்த ஆசிரமம்) நூலில் குறிப்பிட்டுள்ளனர்.

**கோயில் மரம்**

இக்கோயிலுக்குரிய மரமாக (தல விருட்சம்) ஜோதி மரம் என்கிற மரத்தினைக் குறிப்பிடுகின்றனர். இம்மரம் பல்வேறு மருத்துவ குணங்களை உடையது என்று அங்குள்ளவர்கள் குறிப்பிடுகின்றனர். உடலில் ஏற்படும் வெண்புள்ளிகள் போன்றவற்றிற்கு அதன் இலைகளை அரைத்துப் பூசினால் குணமாகிவிடும் என்கின்றனர். சென்ற வருடம் கி.பி.(2017) ஒக்கி புயல் குமரி மாவட்டத்தையே புரட்டிப் போட்டதை அனைவரும் அறிவோம். அதில் இம்மரத்தின் பெரும் பகுதியும் முறிந்து விழுந்திருக்கிறது. இம்மரம் குன்றின் மேல், கோயிலின் பின்புறம் வடமேற்கில் உள்ளது.

**ஜோதி மரம்**

கோயிலின் வலதுபுறம் அதாவது தென்திசையில் ஒரு வேப்பம்மரம் உள்ளது. பொதுவாக வேம்பு கசக்கும். ஆனால் இதன் இலைகள் கசக்காது என்றனர் அங்குள்ளவர்கள். ஆய்வாளரும் இலைகளை மென்று பார்த்துள்ளார். துவர்ப்பு சுவையுடன் உள்ளது. இத்தகைய இயல்புடைய வேம்பு வேறு எங்கேனும் உண்டா என்பதும் தெரியவில்லை. இது அதிசய வேம்பாகவேபடுகிறது. இவ்வேம்பும் பல மருத்துவ குணங்களை உடையது என அங்குள்ளவர்கள் நம்புகின்றனர்.

**கிணறு பற்றிய கதை**

குன்றின் மீது கிணறு ஒன்று உள்ளது. இக்கிணறு குறித்து, சுமார் 60 ஆண்டுகளுக்கு முன்னர் இம்மலையில் விசுவநாத சுவாமிகள் என்ற பக்தர் தங்கி வந்ததாகவும், இந்த பக்தருக்காக முருகனே கனவில் தோன்றி ஒரு இடத்தில் வேலால் குத்த, அதிலிருந்து தண்ணீர் வந்ததாம். இதைக் கனவில் கண்ட பக்தர் மறுநாள் ஊர் மக்களின் துணை கொண்டு அவ்விடத்தைத் தோண்டினார். 8 அடி அழத்தில் தண்ணீர் வந்தது என்று கூறுகின்றனர் என்று

கன்னியாகுமரி மாவட்ட சுற்றுலாத்தலங்கள் என்னும் (பக்கம் எண்:143) நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. கோயில் பூசைக்கும், பக்தர்கள் பயன்பாட்டிற்கும் இக்கிணற்றுநீர் பயன்படுத்தப்படுகிறது. அங்குள்ளவர்கள் இந்தக் கிணற்று நீரினை புண்ணியத் தீர்த்தமாகவும் கருதுகின்றனர்.

இக் கோயிலின் மேற்குப் பக்க வாயில் வழியாக கீழே இறங்கி வரும்போது பாறையில் தற்கால எழுத்துகளுடன் சில அடையாங்களும் காணப்படுகின்றன. இதனை நந்தியின் பாதச்சுவடு என மக்கள் நம்புகின்றனர். அதனை தான்டி கீழே இறங்கி வந்தால் மலை அடிவாரத்தில் விவேகாநந்த ஆசிரமம் அமைந்துள்ளது.

இவ்வெள்ளிமலை முருகன் கோயிலைக் குறித்து புதிய ஆய்வுகள் நிகழ்த்தினால் பல முடிவுகள் கிடைக்கக்கூடும். தொன்மைக் குறித்தும் தெளிவான முடிவிற்கு வரமுடியும்.

அங்குள்ள துவர்ப்பு சுவை உடைய வேம்பு, ஜோதிமரம் ஆகியவற்றைப் பற்றி மருத்துவத்துறை சார்ந்த ஆய்வுகள் செய்ய வேண்டியதும் அவசியம். அவ்வாறு ஆராயும்போது புதிய மருத்துவ முடிவுகள் கூட கிடைக்கலாம்.

மொத்தத்தில் இக்கோயில் குறித்து தொடர்ந்து பல ஆய்வுகள் மேற்கொள்ள வேண்டியது அவசியமாகிறது.

**துணைநூற்பட்டியல்**

1. அய்யப்பன் பிள்ளை, ப., நல்லதம்பி.மு.மே2001. கன்னியாகுமரி மாவட்ட சுற்றுலாத் திருத்தலங்கள்., குயில் பண்ணை, 525A1, உடையார் குடியிருப்பு, திரு.வி.க.சாலை, சேலம்-3.

2. பெருமாள் அ.கா. (தொர்) ஜீலை 2015., திருக்கோயில்கள் வழிகாட்டி கன்னியாகுமரி மாவட்டம்., தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலையத்துறை.

3. ஜனவரி 2015, வெள்ளிமலை ஸ்ரீ விவேகாநந்த ஆசிரமம்., ஸ்ரீ விவேகாநந்த ஆசிரமம், வெள்ளிமலை, கல்படி அஞ்சல், கன்னியாகுமரி மாவட்டம்- 629 204.

## தமிழரின் வாழ்வியலில் முருக வழிபாடு

**சு. ஆனந்த்குமார்.**
முனைவர்பட்டஆய்வாளர், சிறப்பத்துறை,
தமிழ்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

முருகன் வழிபாடு என்பது மிகப் பழமை வாய்ந்தது. இந்தியாவின் தென்மாநிலமான தமிழ்நாட்டைப் பொறுத்தவரை எந்த பக்தி மார்க்க முறையாக இருந்தாலும், அவை முருக வழிபாட்டை உள்ளடக்கிக் கொண்டிருக்காமல் இருக்க முடியாது. ஏனெனில் தமிழ்நாட்டைப் பொருத்தவரை மற்ற கடவுள்களின் மீதான பக்தியைவிட முருகன் மீது பக்தி கொண்டவர்கள் அதிகம் எனலாம். இவ்வாறான முருக வழிபாடு தமிழரின் வாழ்வில் கலந்துள்ளது என்பதனை விளக்கமாக காணலாம்.

### முருகவழிபாடு தோற்றம்

முருகு என்றால் அழகு முருகன் என்றால் அழகானவன் என்று பொருள். முருகன் தமிழ் நாட்டிற்குரிய தமிழ் கடவுளாகும். நாடோடியாக திரிந்து பல இன்னல்களை அனுபவித்து வந்த மக்கள், நிரந்தரமாக ஒரே இடத்தில் தங்கி வாழும் பண்பாட்டில் இறைநம்பிக்கை என்பது ஓர் வாழ்வியல் கூறாகும். மக்கள் வழிபடுவதற்கு சிறுதெய்வங்கள் அணங்கு என்றும் இறைபொருள், தெய்வம் என்றும் தொல்காப்பியத்தில் விளக்கப்பட்டுள்ளது.

தமிழகத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் மற்றும் பாலை என ஐந்து வகையான நிலங்கள் பிரிக்கப்பட்டு அதற்கான ஐந்து வகையான கடவுள்கள் நிறுவப்பெற்றனர். இவ்ஐந்து வகையான நிலங்களில் முதன்மை நில வகையான குறிஞ்சி நில வகையான மலையும் மலைசார்ந்த இடமும் வகைப்படுத்தப்பட்டு, அதற்கான தெய்வமாக முருகனை நிறுவப்பட்டு உள்ளது. 'குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடமாகும்' என்பர். இக்கூற்றிற்கேற்ப நாடோடியாக வாழ்ந்த மக்கள் தங்களின் வாழ்விற்காக, தாங்கள் பயணித்த இடங்களிலேயே குடியேறி வாழ்ந்திடத் தொடங்கினர். இவ்வாறாக வழிபாடு மக்கள் இனம் பிரிந்துக்கொண்ட நிலப் பகுதி தங்கள் உணவிற்காக திணை விளைவிக்க ஏற்ற வகையில் அமைந்தது. இதனையே தொல்காப்பியர்,

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெரும்புனல் உலகமும்*

என குறிப்பிட்டுள்ளார். இச்சான்றினைக் கொண்டு, மலையும் மலை சார்ந்த இடமும் கொண்ட குறிஞ்சி நிலவாழ் மக்களின் கடவுளாக சேயோன் (முருகன்

அல்லது சிகப்பு நிறத்தைக் கொண்ட கடவுள்) விளங்கியுள்ளான் என்பதனையும், முருகனைக் குறித்து இயற்றப்பட்ட பழங்குடி பாடல்களில் முருகனை மலைக்குடி கடவுள் எனவும் வேடர்களின் கடவுளாகவும் கருதியதனால் முருகனை வேலன் என்று அழைத்து வந்துள்ளனர் என்பதனை அறியமுடிகிறது. தமிழரின் வாழ்வியலில் முருக வழிபாடு முருகன் வழிபாட்டின் முதிர்ச்சியாக முருகன் வள்ளி இடையேயான காதல் நிகழ்வுகள் என்பவை வழிபாட்டில் ஏற்பட்ட மாற்றம் என்பவை மட்டுமின்றி, சங்க கால சமுதாய செயல்பாட்டின் வெளிப்பாடாகவும் அமைந்துள்ளது. முதன்மையான முருக வழிபாட்டிற்கு 'வேலன் வெறியாட்டு' என்ற வழிபாட்டுமுறை சான்றாக அமைகிறது. வேலன் வெறியாட்டு என்பது மக்களின் மேன்மையான இயற்கை வழிபாட்டு முறையாகும். முருகன் பெண்களின் மனதில் தீராத காதலை உருவாக்குபவர் எனக் கருதி வழிப்படுதலினால் முருகன் அருள் கிடைக்க மந்திர சக்திகளைக் கூடப் பயன்படுத்தினர். அதற்காக ஆண் மற்றும் பெண் பக்தர்கள் தேன்சொட்டும் தமிழரின் வாழ்வியலில் முருக வழிபாடு "வேங்கை" மலர் மலையை அணிந்துக் கொண்டு பாடல்களை இசைத்தபடி வெறியாட்டம் அல்லது 'குராவை' என்ற நாட்டியம் ஆடுவது உண்டு.

**வேலன் வெறியாட்டு**

வேலன் வெறியாட்டு என்பது வேல் வழிபாடாகும். இதை வெறி ஆய்தல் என்பர். இவ்வழிபாட்டில் வேல் ஒரு முக்கிய பூசைப் பொருளாகும். இவ்வழிபாட்டில் தலைவியின் காதல் நோய் இன்னாதென்று தெறியாததாய் தலைவியின் மீது ஏதே தீய சக்தி இறங்கி விட்டதாக நினைத்து அதை போக்க முருகனுக்கு எடுக்கும் பூசை அல்லது தலைவியே தன் காதலனை சேர முடியாது ஒதுங்கியதால் அவனையே எண்ணியெண்ணி அன்பு மிகுதியாகி முருகனை முன்னிட்டு ஆடிய வெறிக்கூத்து. இதனை ஆண்கள் மற்றும் பெண்கள் வேல் பிடித்து ஆடின செய்திகள் சங்கத் தமிழில் உள்ளன. ஆண்கள் ஆடும் போது பூசையின் போது கிடாவெட்டி பலிகொடுத்து அதன் குருதியினை அரிசியோடு கலந்து தூவுதல் மற்றும் பெண் ஆடும்போது காதல் வலி வெறியில் முருகனையே திட்டிப் பூக்களைத் தூவுவாள். தொல்காப்பியரும் இதனை,

*'வெறிஅறி சிறப்பின் செவ்வாய் வேலன்*
*வெறியாட்டு அயர்ந்த காந்தலும்'* (களவியல்)

**கற்குடி மலைக்கோயிலில் முருகன் வழிபாடு**

கற்குடி கோயில் சிராப்பள்ளி எனப்படும் திருச்சிராப்பள்ளி வட்டத்தில் உள்ள மலைக்கோயில்களில் ஒன்றாகும். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள சைவக் கோயில்களில் ஒன்றான கற்குடி கோயில் சைவ சமயத் தலைவர்களால் தேவாரம் பாடப்பெற்ற 274 தளங்களில் ஒன்று. "குன்றாத புனல்வள முடைய பொன்னி" என்னும் காவிரி நதி பாயும் சோழ நாட்டில், காவிரிக்குத் தென்திசையின் கரையில் தென்கயிலாயம் எனப்படும் திரிசிராமலை

என்னும் மலைக்கோட்டையின் மேற்குத் திசையில் இக்கற்குடி மலைக்கோயில் அமைந்துள்ளது.

கற்குடிகோயில் 64 நாயன்மார்களில் மூவர் அப்பர், திருஞானசம்பந்தர், சுந்தரர் பாடல் பெற்ற சிறப்பு மிக்க கோயிலாக அமைந்துள்ளது. இக்கற்குடி கோயில் சோழர் காலத்தில் கட்டப்பட்டு பராமரிப்புக்கு உட்பட்டவையாகும். ஐந்து நிலைகளில் கட்டுமானங்களைப் பெற்று சிற்பங்களும் கல்வெட்டுகளும் நிறைந்து காணப்பெற்று வரலாற்றுப் பதிவுகளை நிலைநிறுத்துகின்றன. இவ்வாறாக சிறப்பு மிக்க இக்கற்குடி கோயில் மூன்று முருகன் சன்னதிகளைக் கொண்டுள்ளது.

கோயிலின் மேற்கு திசையில் மலைக்கோயிலின் தரைத்தளத்தில் சண்முகர் சன்னதி உள்ளது. கோயிலின் நான்காம் திருச்சுற்றில் உள்ள அம்பாள் சன்னதி திருச்சுற்றில் இரண்டாம் முருகன் சன்னதியும், கோயிலின் ஐந்தாவது திருச்சுற்றில் உள்ள உஜ்ஜீவநாதர் சன்னதிச் சுற்றில் மூன்றாவது முருகன் சன்னதி உள்ளது.

கற்குடி மலைக்கோயிலில் உள்ள முருகன் சன்னதிகளில் நாள்தோறும் காமிக்க ஆகம முறைப்படி வழிபாடு நடைபெற்று வருகிறது. இருப்பினும் மாதம் தோறும் வரும் சஷ்டி மற்றும் கிருத்திகை வழிபாடு மற்றும் வருடந்தோறும் தைப்பூச வழிபாடு நடைப்பெற்று வருகிறது.

கற்குடி மலைக்கோயிலில் மூன்று முருகன் சன்னதிகள் இருப்பினும், அதில் சண்முகர் சன்னதி மற்ற கருவறைகளுடன் அல்லாமல் தனியாக வசந்த மண்டபத்துடன் கூடிய சன்னதியாகவும் ஞான தீர்த்தக் குளத்திற்கு அருகே சன்னதி இருப்பது சிறப்புமிக்கதாகக் கருதப்படுகிறது. இவ்வாறாக சிறப்புமிக்க சண்முகர் சன்னதியில் தைப்பூச தினத்தில் 'ஒளி வழிபாட்டுவிழா' ஒவ்வொரு ஆண்டும் படிபூஜையாக நடைபெற்று வருகிறது. இவ்வழிபாட்டுமுறை 'என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம் தானே' என இறவாமைக்கு வழிக் கூறிய வள்ளலாரை நினைவுபடுத்தும் நாளாகவும், இந்நாள் முருகனுக்கு உகந்த நாள் என்பதால் சைவத் திருத்தலங்களில் சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

சந்திரனை அடிப்படையாகக் கொண்ட கணக்கிற்குச் சந்திரமானம் என்றும், சூரியனை அடிப்படையாக கொண்ட கணக்கிற்குச் சவுரமானம் என்றும் பெயர். பூச நட்சத்திரத்தின் அடிப்படையில் தான் தை மாதத்திற்கு அப்பெயர் வந்தது. சங்க இலக்கியங்களில் "தை இயந்திங்கள்" எனத் தை மாதம் குறிப்பிடப்படுகிறது. தைப்பூசத்தன்று முழுநிலா நாளில், நிலத்தின் நீர் ஊறும் என்பது சங்க கால மக்களின் நம்பிக்கை. தமிழ் கடவுளான முருகனின் திருவிழாக்களில் முக்கியமானது தைப்பூசத் திருவிழாவாகும். 27 நட்சத்திர மண்டலங்களில் எட்டாவது நட்சத்திரம் பூசமாகும். அன்றைய தினத்தில கற்குடி மலைக்கோயில் சண்முகர் சன்னதியின் வாயிற் படிகளில் அனைத்திற்கும் தீபங்கள் ஏற்றப்பட்டு, வெற்றிலை பாக்கு மற்றும் மலர்களைக் கொண்டு 'ஒளிவழிபாடு' விழாவாக படிபூசை செய்து முருகனுக்கு அர்ச்சனை செய்து

மக்கள் சமூக வேறுபாடின்றி வழிபடுகின்றனர் என்பது இக்கோயிலின் தனிச் சிறப்பாகும்.

**முடிவுரை**

முருக வழிபாடு என்பது தமிழரின் வாழ்வியலோடு மட்டுமல்லாமல், கலாச்சாரத்தோடு ஒன்றிணைந்ததே ஆகும். பெரும்பாலான சைவக் கோயில்களில் ஆகம வழிபாடுகளை பின்பற்றினாலும், தமிழ் மக்கள் அவர்களது தமிழ்க் கடவுளாகிய முருகனைத் தங்கள் வாழ்க்கையுடன் சார்புடைய 'வேலன் வெறியாட்டு' போன்ற கூத்துக் கலைகளின் வாயிலாகவும், சஷ்டி, கிருத்திகை, ஒளிவழிபாடு போன்ற வழிபாட்டின் வாயிலாகவும் மக்களின் வாழ்க்கை 'பக்தி' என்ற மூன்று எழுத்து மந்திரத்தால் நெறிபடுத்தப்படுகிறது என்பதனை நன்கு அறியமுடிகிறது.

**துணைநூல்பட்டியல்**

1. முனைவர் கி.கந்தன், தமிழக சிற்பக்கலை வரலாறு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்- 2017.

2. முனைவர் மௌனகுமாரசாமி தம்பிரான், திருக்கற்குடித் திருக்கோயில் வரலாறு, தருமை ஆதினம்- 2010.

3. மு.நளினி, தவத்துறையும் கற்குடியும், டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வுமையம், திருச்சி,2016.

## வண்ணச்சரபரும் வடிவேல் முருகனும்

**இரா. ஆனந்தஜோதி,**
முனைவர்பட்ட ஆய்வாளர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - தரமணி - 113.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் திக்கெட்டும் புகழும் திருநெல்வேலி மாவட்டத்தில் 1839 ஆம் ஆண்டு செந்திநாயகம் பிள்ளைக்கும் பேச்சிமுத்தம்மாளுக்கும் மூத்த மகனாகப் பிறந்தார். இவருக்குச் சங்கரலிங்கம் என்று பெற்றோர் பெயரிட்டழைத்தனர். ஐந்து வயதில் ஏட்டுக் கல்வி கற்கத் தொடங்கினார். ஏடும் எழுத்தாணியும் அன்றைய எழுது பொருளாகும். ஆறரை வயதாகும் போது தந்தையை இழந்தார். அதனால் படிப்பு தடைபட்டது. தென்காசிக்கு அருகிலுள்ள சுரண்டை என்ற ஊரிலே சங்கரலிங்கத்தின் பெரிய தகப்பனார் சிதம்பரம் பிள்ளை என்பவர் சங்கரலிங்கத்தின் கூர்த்த அறிவாற்றலை வியந்து தம்மோடு அழைத்துச் சென்று கல்வி கற்க ஏற்பாடுகள் செய்தார். 'விளையும்பயிர் முளையிலேயே தெரியும்' என்ற பழமொழிக் கேற்ப நுண்ணறிவும் நூலறிவும் பெற்று விளங்கினார். அவ்வாறு விளங்கிய சங்கரலிங்கம் ஆறுமுகப் பெருமானின் அருள் திறத்தால் முருகப் பெருமானின் மீது கொண்டிருந்த பக்தியையும், அவரின் அருட்தொண்டினையும் விளக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

### வண்ணச்சரபரின் கவித்திறம்

சுரண்டையில் சித்திராநதி ஓடிச் செழிப்பாக்கிக் கொண்டிருந்த ஆற்றங் கரையில் பூமிகாத்தாள் என்ற ஒரு அம்மன் கோயில் உள்ளது. அக்கோயிலுக்குச் சுற்றுலா வந்த பெரியோர்கள் 'பூமிகாத்தாள் அம்பாளுக்கு வழிபாடு நடத்தினர். அங்குக் கூடியிருந்த பெரியோர்களிடம் 'பூமிகாத்தாள்' என்ற பெயருக்கு விளக்கம் கேட்டனர். அங்குள்ளவர்கள் யாருக்கும் தெரியாமல் விழித்த நேரத்தில், சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்த சங்கரலிங்கம் தானாகவே முன்வந்து,

*"அமுதம் கடையுநாள் ஆலம் வெடித்துத்*
*திமுதமெனத் தீயெறித்துச் சென்றது. அமுதமெனத்*
*தீக்கடவுள் உண்டார் திருக்கண்டத்தைப் பிடித்துக்*
*காத்த தனாற் பூமிகாத்தாள்"* (தனிப்பாடல் திரட்டு -1)

என்று பூமிகாத்தாளுக்கு ஒரு வெண்பாவால் விளக்கம் சொன்னவர் தண்டபாணி சுவாமிகள். மூன்று வயதில் 'தோடுடைய செவியன்' என ஈசனைப் பாடிய திருஞானசம்மந்தர் போல், பேசும் திறனின்றி ஐந்து வயது வரை ஊமையாக இருந்து செந்தூர் முருகப் பெருமானின் அருளால் கந்தர் கலிவெண்பா பாடிய குமரகுருபரைப் போல வண்ணச்சரபரும் எட்டரை வயதினிலே, எட்டாயிரம்

கோடி எழுதிப் படிக்காது தன் மனத்தே எழுதிப் படித்த விரகன் அந்தகக்கவி வீரராகவ முதலியார் புலமை வளம்போல் விளங்கிய புலமைத்திறம்தான் வண்ணச்சரபருடையது.

**குருவருள் நோக்கம்**

கருவிலே திருவாகத் தோன்றிய வண்ணச்சரபர் தந்தையின் நண்பரான சீதாராம நாயுடு என்பவரிடம் இலக்குமி மந்திரம், ஆறெழுத்து மந்திரங்களைக் குருமொழியாகக் கற்றுணர்ந்தார்.

*"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதற் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு*
*அந்தியம் இன்மையின் அரன்கழல் செலுமே"* (சிவஞானபோதம்-8)

என்னும் மெய்கண்ட தேவநாயனாரின் கூற்றுக்கேற்ப வண்ணச்சரபர் குருவருளைப் பெற்று இறைவழிபாட்டில் கடல் மடை திறந்த வெள்ளம் போல் இம்மென்னும் முன்னே எழுநூறும், எண்ணூறும் அம்மென்றால் ஆயிரமும் பாடி முடிக்கும் காளமேகப் புலவரைப்போல் பாடும் திறத்தைக் கண்ட இவருடைய குரு சீதாராமர், இவரை ஓயாமாரி என்று பாராட்டினார். இவருடைய உபாசனையின் பெருமையினையும் சிறப்பினையும் நன்குணர்ந்த ஊர்மக்கள் இவரை முருகதாசர் என்று அழைக்கலனார்கள். பதின்மூன்று வயது நிரம்பியிருந்த சங்கரலிங்கம் அன்று முதல் முருகதாசர் ஆனார்.

**முருகனிருக்கும் இடமெல்லாம் முருகதாசர்**

முருகதாசர் திருநெல்வேலியிருந்து வள்ளியூருக்குச் சென்று அங்கு முருகன் வீற்றிருக்கும் மலையிலே தவமியற்றி அங்குள்ள குகன் சந்நிதியில் கல்லாடை, இலங்கோடு, கௌபீனம் முதலியவற்றை வைத்து வழிபட்டு அவற்றை அணிந்து கொண்டார். முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள திருச்செந்தூர் போன்ற திருத்தலங்களுக்கெல்லாம் சென்று முருகனின் அருட்காட்சி வேண்டினார்.

அருணகிரிநாதர் எப்படி முருகனின் திருத்தலங்களுக்கெல்லாம் சென்று பாடினாரோ! அதேபோல் வண்ணச்சரபரும் குன்றுதோறும் முருகனின் அருங்காட்சி வேண்டித் தலபயணம் மேற்கொண்டார். புழனியில் 'பழனித்திருவாயிரம்' என்ற நூலைப்பாடி மகிழ்ந்தார். திருச்செந்தூரில் வெண்பா அந்தாதி, சிலேடை வெண்பா, திரிபந்தாதி, யமக அந்தாதி, செந்தினாயக சதகம், கௌமார விசயம், சந்த மாலிகைத் திருப்புகழ், போன்ற நூல்களை இயற்றியுள்ளார்.

*"சுக்குக்கு மிஞ்சிய மருந்தில்லை*
*சுப்பிரமணியருக்கு மேலான தெய்வமில்லை"*

என்ற பழமொழியை நன்குணர்ந்தவர் தண்டபாணி சுமாமிகள். ஆகையினால் குமரக் கடவுளையும், கௌமார நெறியையும் குறித்துப் பல பாடல்கள் பாடி அகமகிழ்ந்துள்ளார். கந்தவேள் தம்மைக் காக்கும் வேள் என்ற உறுதிப்பாட்டுடன் நாளும் பூசை செய்திருக்கிறார். இதனை,

*தினம்தினம் பெரிதேத்தும் பெரிதேத்தும்*
*குந்தவேள் கரந்தாங்கும்*
*வேல தேதுணை யெனக்கொடு பற்பல*
*விரைமல ரருஞ்சிக்கும்*
*கோலம் நீடுறு பூசைமிக் காற்றோலே*
*கணமென்க் கொடுவாழ்ந்தேன்* (குருபரத்துவம்-31)

என்று வண்ணச்சரபர் கூறுவதிலிருந்து வேல்பூசை நாள்தோறும் நடத்தி இருக்கிறார் என்பதை அறிய முடிகிறது.

முருகதாசருக்கு முருகப்பெருமான் காட்சி கொடுக்கவில்லையென வருந்தி தென்காசிக்கு அருகிலுள்ள திருமலையில் உருண்டார். மலையிலிருந்து உருண்டவருக்கு உடம்பில் பெருங்காயங்கள் ஏதும் ஏற்படவில்லை. இதனைத் தாம் இயற்றிய குருபரத்துவம் என்ற வாழ்வியல் நூலில்,

*வடதிசையில் தலைவைத்து மறலிதிசைக் கால்நீட்டி*
*உடலையந்தத் திருமலையின் உச்சிநின் றுருட்டிவிட்டேன்*
*விடலையந்தத் தேங்காய்போல் வேறுபட்டுச் சிதறாமல்*
*மடமடெனச் சென்றங்கோர் மண்தரையில் வீழ்ந்ததுவே*
(குருபரத்துவம்-ப.50)

மனச்சலிப்படைந்த முருகதாசருக்கு முருகப்பெருமான் அவர் மனவெளியில் தோன்றி,

*உருண்ட போதுடல் சிதைந்து கைகால் பழுதற் றுயிர்போகாமற்*
*றெருண்ட சிந்தனை யுறுதிமாறா மற்றன் திருவருளாற் காத்தே*
*இருண்ட கங்குலின் கனவிலிப் படியுருண் டிடத்துணிந்தனை வீணே*
*மருண்டிறந்திடி லென்செய்வாய் தாங்கினேன் யானென்றான் வடிவேலன்!*
(தண்டபாணி விஜயம், பூருவபாகம்-43)

என்பது முருகதாசரின் மைந்தர் வாக்கு தமக்கு உடலில் துன்பம் ஏற்படாமல் காத்த கருணையை வியந்து போற்றினார். சுவாமிகள் மலையில் உருண்ட செய்தி தென்காசிக்கு அருகில் உள்ள திருமலைத் திருக்கோயில் முருகன் சந்நிதிக்கு நேர் உள்ள தொண்டுப் பகுதி தற்போது அடைக்கப்பட்டுள்ளது. அங்கே சுமாமிகள் மலையிலிருந்து உருண்ட செய்தி எழுதப்பட்டுள்ளது. என்று ந. சொக்கலிங்கம் அவர்கள் தம் நூலின் குறிப்பட்டுளார்.

**முருகதாசர் முற்பிறப்பறிதல்**

வண்ணச்சரபர் முற்பிறவியில் அருணகிரிநாதரே என்பதையும், வண்ணச்சரபர் ஆறெழுத்து மந்திரத்தை உச்சரித்து தவநிலையில் இருக்கும் போது முருகனருளால் தெரிந்துகொண்டார் என்பதை வண்ணச்சரபரின் வாய்மொழியால் அறிய முடிகிறது.

*வல்லைவந் தன்பரைக் காக்கும் செவ்வேற்கை வரதனைக்கண்டு*
*எல்லையில் லாக்களிப் பாய்மடி மீதில் இருக்குமென்னைத்*

*தொல்லை அருண கிரிதான் என் றன்னவன் சொன்னதுண்மை*
*இல்லையென் றாற்குமுக்கென்று வருங் கோடைஇடிவிழுமே.*
(தனிப்பாடல் திரட்டு-180)

என்பதே அவரின் வாய்மொழிச் சான்றாகும்.

*வானம் இடிந்து தலையில் விழும்படி*
*வம்பு வந்தாலும் என்னை-அந்தக்*
*கானமயில் முருகையன் திருவருள்*
*கைவிட மாட்டாதே!"*

என்று பாம்பன் சுவாமிகள் கொண்டிருந்த நம்பிக்கைபோல் வண்ணசரபரும் வடிவேல் முருகன்பால் அழுத்தமான நம்பிக்கை கொண்டிருந்தார் என்பதை இதன்மூலம் அறிய முடிகிறது.

**பலதுறை வித்தகர்**

தமிழ்நாட்டையும், தமிழ்மொழியையும் விட்டுக் கொடுக்காத பேராற்றல் பெற்றவர் என்பதை அவரின் வரலாற்றைக் கொண்டு அறியமுடிகிறது. ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் தமிழ்மொழியின் பெருமையை நிலைநாட்ட பல்வேறு நூல்களை இயற்றியுள்ளார். அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம், வருக்கக்குறள், மனுநெறித்திருநூல், வண்ணத்தியல்பு போன்ற தமிழன்னைக்கு அழகு சேர்க்கும் நூல்களை எழுதியுள்ளார். பல்வேறு ஊர்களுக்குச் சென்று பல்வேறு மகான்களைச் சந்தித்து நட்பு பூண்டு நூல்களை எழுதி; அரங்கேற்றியுள்ளார். செல்லுமிடங்களில் மக்களின் இடர்களையும், நோய்களையும் நீக்கி அருளாசி வழங்கியுள்ளார்.

செந்தமிழுக்கு அழகூட்டும் மலை இதுவென உலகோர் போற்றும்படி அறுசமயங்களுக்கும் தெய்வம் முருகப் பெருமானே என்று அறிஞர்கள் பலரும் ஏற்கும் வகையில் தக்க எடுத்துக்காட்டுகளுடன் குன்று இருக்கும் இடமெல்லாம் சென்று அமிழ்தினும் இனிய தமிழால் குமரக்கடவுளைப் பாடி மகிழ்ந்தார் இவர் எழுதிய சுவடிகள் அனைத்தும் கௌமாரா மடாலயத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறன என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

வண்ணச்சரபரால் பாடல் பெற்ற தலங்கள் 222 என்றும், தம்மால் எவ்வகை இலக்கியத்தையும் பாடமுடியும் எனப் பாடிக் காட்டிய புலமை வீறு கொண்டவர். வண்ணம் பாடுவதில் சிறந்து விளங்கியதால் வண்ணச்சரபம் என்னும் சிறப்புப் பெயர் பெற்றார். இறையறத்தோடு இல்லறமும் வாய்க்கப்பெற்று, தாமரை இலைத்தண்ணீர் போல் இரண்டையும் கடைப்பிடித்து வாழ்ந்து வந்தார்.

**இறைநெறியில் சமரசம்**

தெய்வத்தை எவ்வுருவில் வணங்கினாலும் அவ்வுருவில் வந்து அருள்புரியும் என்ற கருத்தையுடையவர் வண்ணச்சரபர். அறுவகைச் சமயத்திற்கும் தெய்வம் ஒன்றே! அத்தெய்வமும் குருவே ஆவார். குருவையும்

தெய்வத்தையும் வேறு படுத்துதல் கூடாது. அவ்வாறு குருவைத் தெய்வமாக எண்ணி வழிபட்டால் வாய்மை, நீதி குலக்கருணை குற்றமின்மை, தாளாண்மை என்னும் ஐந்தையும் பெறலாம் என்பது வண்ணச்சரபரின் கருத்தாகும். வண்ணச்சரபர் வாழ்ந்த காலச் சூழல் ஆங்கிலேயர் ஆட்சிக்காலமாகும். அப்போது கிறித்துவம், மக்கள் மனதைக் கவர்ந்தன. அப்படிப்பட்ட காலச் சூழலில் அறுசமங்கள் குறித்த சமரச உணர்வை வலியுறுத்தும் வண்ணம் வண்ணச்சரபர் 'பழனியில் தண்டபாணித் திருமடத்தை நிறுவினார். தண்டபாணி சுவாமிகளால் நிறுவப்பட்ட மடம் தற்போதும் பழனியில் இயங்கி வருகிறது. வண்ணச்சரபரின் அருளாசியுடன் தொண்டை நாட்டில் திருவாமாத்தூரிலும், கொங்கு நாட்டில் சின்னவேடம்பட்டி, சரவணம் பட்டியிலும் இரண்டு கௌமாரமடங்கள் தோற்றுவிக்கப்பட்டு 'ஒன்றாக நல்லது கொல்லாமை எனும் உயரிய குறிக்கோளுடன் செயல்பட்டு வருகிறது.

**நிறைவுரை**

வண்ணச்சரபர் முருகன்பால் கொண்ட பக்தியை நாம் அறிந்துகொள்ள இக்கட்டுரை வழிவகை செய்திக்கிறது. எண்ணிலாப் பாடல்களை வண்ணத்தில் அமைத்துப் பாடும்திறம் மூலம் மொழிப்புலமையும், மொழிப்பற்றும் நிறைந்தவர் வண்ணச்சரபர் என்பதை அறியமுடிகிறது. வண்ணச்சரபர், வடிவேல் முருகனைச் சந்தப் பாடல்களாலும். அந்தாதிப் பாடல்களிலும் படிப்போரின் உள்ளம் உருகுமாறு அருணகிரியாரின் திருப்புகழ்போல அருட்பால்களைத் தந்து தமிழுக்கு இனிமையும் தெய்வீகமும் சேர்த்திருக்கிறார். கந்தன் கழலடி பாடியே இன்புற்று வாழ்ந்திருக்கிறார்.

**பார்வை நூல்கள்**

1. முருகனடியார்களின் வரலாறு
2. இந்திய இலக்கியச் சிற்பிகள் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்
3. திருமுருகன் கலைக்களஞ்சியம்.

## அருணகிரிநாதரின் இலக்கியங்கள்

**ந. இராசேந்திரன்,**
ஆய்வியல் நிறைஞர் மாணவர்,
ஓலைச்சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

*பிள்ளை விளையாட்டில் பேரருள் செய்பவன்*
*வள்ளி மணாளனை வேண்ட – எளியோனின்*
*சிந்தைக் கவர்ந்ததும் சந்தம் தந்ததும்*
*கந்தர் அநுபூதி காண்*

இறைவனை இறையருளை வேண்டிய இறை அன்பர்கள் பலர். அவர்களில் குறிப்பிடக் கூடியவர்களில் ஒருவர் அருணகிரிநாதர். சிந்தை குளிர சந்தப் பாக்களால் சாமனிய மக்களின் உள்ளம் கவர்ந்தவர். அவர் அருளியவை அனைத்தும் சந்தப் பாக்களே. அவை பாடி இன்புறத் தக்கவையாகும். அப்பாடல்கள் இறையோடு நம்மை இரண்டற கலக்கச் செய்யும். பராபரக்கண்ணி பாடிய தாயுமானவர் சுவாமிகளே இதைத் தெள்ளத் தெளிவாகக் கூறுகிறார்.

*"ஐயா அருணகிரி அப்பா உனைப்போல*
*மெய்யாக ஓர் சொல் விளம்பினாயார்"*

பெண் மயலில் உழந்தது போலவும் பிற ஆசைகளால் துன்புற்றது போலவும் அருணகிரியார் கூறியிருப்பதை எண்ணி அவருடைய நிலை அது என்று மயங்கக் கூடாது. அருணகிரியார் திருபுகழ் போன்று பல படைப்புகள் படைத்திருப்பினும் கந்தர் அநுபூதி தான் மனிதனையும், இறைவனையும் இணைக்கும் அனுபவக் கருத்தை அள்ளித் தருகிறது.

**கந்தர் அநுபூதி அமைப்பு**

அருணகிரியார் தனது கடைசி நாள்களில் கிளியாக இருந்து எழுதியதாகக் கூறப்படுகிறது. நூலைத் தொடங்கும் போதே "பாடும் பணியே பணியாய் அருள்வாய்" எனக் கணபதியை வணங்கித் தொடங்குகிறார். பாடலை முடிக்கும் போது "அருள்வாய் குகனே" என முடிக்கின்றார். கந்து – என்றால் பற்றுக்கோடு. அதாவது உயிர்களுக்குகெல்லாம் தனிப்பற்றுக்கோடாய் இருக்கின்றவன். அதாவது அருணகிரியார் கந்தனைப் பற்றுவதற்கான அனுபவத் திரள்களை அள்ளித் தந்ததே கந்தர் அநுபூதியாம். கந்தர் அநுபூதி கலிவிருத்தத்தால் எழுதப் பெற்றது. மொத்தம் ஐம்பதொரு பாடல்கள் இடம் பெறுகிறது. எண்ணியம் - ஓகம் - தத்துவம் பிறந்த மண் தமிழ் நிலம், இருந்த போதும் அருணகியார் சிந்தனைத் தமிழர். சிந்தனை என்பதை விட

சமஸ்கிருதத் தாக்கமே என உரைகாண்பார் பலர். சமஸ்கிரு எழுத்துக்கள் 51 ஆகும். அந்த அடிப்படையிலே அருணகிரியர் 51 பாடலாக அநுபூதி பாடியதாகக் கூறவும்படுகிறது. ஐந்தோடு ஒன்றைக் கூட்டினால் ஆறு (5+1=6) ஆறு என்றால் வழி என்பது தமிழ்மொழி காணும் பொருள். முருகப் பெருமான் தமிழ்க் கடவுள் என்பதால் அவனை அடைவதற்கான வழியைக் கூறும் நூல்

அதனால்தான்,

*"எல்லாம் அற என்னை இழந்த நலம்*
*சொல்லாய் முருகா"*

என்று விண்ணப்பித்துக் கொள்கிறார். அந்த அனுபவம் அறிவும் அறியாமையும் கடந்தது. மனம் இருக்கும் வரையில் அறிதல் உண்டு. அறியாமல் இருத்தலாகிய அறியாமை உண்டு. அறிந்தாலும் அறியாமல் இருந்தாலும் இரண்டு நிலையிலும் மனத்தின் இருப்பு ஒன்று உண்டு. இப்போது அந்த இருப்பே இல்லை மனமே அற்றுவிட்டது. அப்போது அறிதலும் இல்லை. அறியாமையும் இல்லை. இனிமேல் இவ்விரண்டும் தோன்றுவது இல்லை. இந்நிலையாகிய ஆனந்த அனுபவம் அருணகிரி நாதருக்கு வந்தது. மனத்தின் இருப்பு இல்லாமல் போகும் போது ஆன்மா இருப்பு தெளிவாகும். அறிவு அற்றது அறியாமையும் அற்றதுவே. இத்தகைய நிலை நமக்குக் கிடைத்திட இந்த அநுபூதிப் பாட்டிலே சொல்கிறார்.

*"சும்மா இரு சொல் அற என்றாலும்*
*அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலளோ"*

மேலும்,

*"நவிலத் தகுமோ?*
*யானாகிய என்னை விழுங்கி வெறுந்*
*தானாய் நிலை நின்றது".*

யான் எனது யாவும் ஒடுங்கும் யான் எனும் உணர்வை விழுங்கி இரண்டற நிற்கும் பேரானந்தம் என்கிறார். மேலும் சங்கப் பாடல்களின் மெய்யியல் கோட்டுபாடுகள் காணப்படுவதாக ஆராய்ச்சியாளர்கள் கருத்து. இதன் அடிப்படையில்

*"ஆறா றையும்நீத் ததன் மேல் நிலையைப்*
*பேறா அடியேன் பெறுமா றுளதோ?"*

எனத் தத்துவம் முப்பத்தாறு என்கிறார். சமஸ்கிருதத் தாக்கம் அருணகிரியர் காலத்தில் எவ்விதம் இருந்தது என்பதற்கு இப்பாடல்கள் கண் கூடு.

**அருணகிரியாரின் அருள் வேண்டும் அனுபவம்**

*"கந்தர் அநு பூதிபெற்றுக் கந்தர் அநு பூதி சொற்ற*
*எந்தை அருள் நாடி இருக்கும் நாள் எந்நாளோ?"*

எனத் தாயுமானவர் கூறுவதன் மூலம் "கந்தர் அநுபூதியாகிய செல்வத்தை எனக்குத் தந்த தந்தை அருணகிரியார் என்கிறார். அநுபூதி என்ற சொல்லை 43ஆது பாடலில் அளுகிறார்.

*"ஆசா நிகளம் துகள் ஆயின பின்*
*பேசா அநுபூதி பிறந்ததுவே"*

என்கிறார். அது இன்னதென்று சொல்ல இயலாத ஆனந்தம். வேறு ஒருவருக்குச் சார்த்த முடியாது.

*தன்னந் தனி நின்றதுதான் அறிய*
*இன்னம் ஒருவார் கிசைவிப் பதுவோ?*

அதனைத் தானே அடைந்து நுகர வேண்டும் என்கிறார்.

*"அவ்வா றறிவார் அறிகின்றதலால்*
*எவ்வா றொருவர்க்கு இசைவிப் பதுவே"*

அனுபவித்தவர் சொல்ல முடியாத இன்பம் அது"

**முடிவுரை**

"இனி எந்நாளும் இன்பமே அன்றி துன்பம் இல்லை" என்கிறது அப்பர் தேவாரம். பல ஆயிரம் பாடல்களில் சொல்லப்பட்ட ஒரு ஆன்மிக நிலையை மிக எளிமையாக ஐம்பத்தொரு பாடல்களில் தருகிறார் அருணகிரியார். இவ்வளவையும் அருணகிரியார் நம்பால் உள்ள பெருங்கருணையினால் பாடுகிறார். "கருணைக்கு அருணகிரி" என்று ஒரு பழம்பாட்டில் வருகிறது. அந்தக் கருணையை முருகன் திருவருளால் "சும்மா இருந்து சொல்லற்று, அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலேன்" என்ற நிலையில் நெஞ்சக் கனல் நெகிழ்ந்து உருக வேண்டும். முருகன், குமரன், குகன் என்று மொழிந்து உருக வேண்டும்.

அவன் வடிவைப் பார்த்துத் தெளிந்து உண் முகத்தே தரிசித்து அது நம்மை விழுங்கி நிற்க. அந்த அனுபவத்திலே தோய வேண்டும் இறைவனுடைய வடிவம் உண்முக தியானத்துக்கும் பயன்படுவது. புறத்தே கண்டதோடு நிற்கக் கூடாது. அவன் உருவத்தின் உள்ளுறையாக உணர்வதற்கு உரிய வழியாகவே அக்கட்சி இருக்க வேண்டும். உண்முகத்தே தியானிக்க வேண்டும். அதனோடு ஒன்றிக் கரைந்தால் கருவி காரணங்களை இழந்து நிற்கும் இன்பம் கிடைக்கும்.

*குறியைக் குறியாது குறித்து அறியும்*
*நெறியைத் தனிவேல்ஜ நிகழ்த் திடலும்*
*செறிவற்று உலகோடு. உரை சிந்தையும் அற்று*
*அறிவற்று அறியா மையும் அற்றதுவே.*

என்ற அருமையான பாடலில் இந்நக் கருத்தைச் சொல்கிறார்.

மனத்தைப் பண்படுத்திப் புறத்தே செல்லாமல் அகமுகப்படுத்தி இறைவன் தியானத்தில் ஒன்றச் செய்வது இன்றியமையாதது. வாழ்வில் பற்றுக் கொண்டு இது என் உடைமை என்று இருப்பவர்களுக்கு அறவுணர்வு உண்டானால் தம் உடைமையைப் பிறருக்கு வழங்குவார்கள். அதனால் பொருட்பற்று மெல்ல நழுவும் இதனை உணர்ந்து. "கெடுவாய் மனனே கதிகேள் கரவாது இடுவாய்" என்கிறார். இதையே ஔவை, "இயல்வது கரவேல்" என்கிறார். "இடுவாய் வடிவேல் இறைதான் நினைவாய்" என்றும் வழி கூறுகிறார். பொருட்பற்று அறுவதோடு புலன் வழியே செல்லும் போக்கையும் நிறுத்த வேண்டும். அவன் வந்து அருள் செய்யும் கோலம் பலவாக இருப்பினும் அநுபூதி பெறவேண்டுமானால் முருகன் குருவாக வர வேண்டும். ஈற்று பாடலின் ஈற்றடி இதனையே சொல்கிறது.

*'உருவாய் அருள்வாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்*
*கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்.*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே'.*

# திருமுருகாற்றுப்படை சிந்தனைகள்

முனைவர் **இ.மா. இராமச்சந்திரன்,**
28/92, செங்குந்தர் வடக்குத்தெரு,
அம்பாசமுத்திரம் - 627 401,
திருநெல்வேலி மாவட்டம்.

இருநூற்று இருபத்து நான்கு அன்று புவனங்களின் இயக்கத்திற்கும் காரணமாய் விளங்கும் தம்மினும் மேலான பொருள் ஒன்று உண்டு என்பர் சான்றோர். அதுவே நம்மை வழிப்படுத்துகின்றது என்பது ஆன்றோர் கருத்து. அறிஞர்கள் கண்ட ஆய்வியல் சிந்தனை. அவர்கள் அப்பரம்பொருளிடத்து அஞ்சியும், அன்பு செலுத்தியும் வாழ்ந்து வந்தனர். இவ்வாறு வாழ்கின்ற காலத்தில் மண்ணுயிர்கள் தங்களை அதற்குத் தகுதிப்படுத்திக் கொள்ள சிற்றறிவைக் கொண்டு தம்மாலான முயற்சிகளைச் செய்து கொள்கின்றனர். அப்போது பரம கருணாநிதியாகிய சிவபெருமான் நம் வினை நீக்கத்தின் பொருட்டு ஞானம் பெற தம் அடியார்களை அனுப்பி திருமுறைகளை அருளிச் செய்கின்றான். அதன் வழி எல்லாப் பொருளிலும் சிறந்ததாகிய வீடு பேற்றினை அடைய வைக்கிறான். அதனை அடையும் வழிகளில் ஒன்று முருகனை அறிந்து நினைந்து உணர்ந்து தெளிந்தவர், முருகன் திருவருளால் வீடு பேற்றுக்குரிய திருவடி ஞானம் கைவரம் பெற்ற சீவன் முத்தராக வாழ்ந்த நக்கீரனார் என்பவர் முருகப் பெருமானது பேரின்பத்தை எடுத்து உரைத்து அவ்விறைவன்பால் ஆற்றுப்படுத்தும் நிலையில் இத்திருமுருகாற்றுப் படையைப் பாடி அருளினார்.

### படைவீடும் - பொருளும் இயைபும்

திருமுருகாற்றுப்படையில் இடம்பெறும் ஆறு படைவீடுகளாவன: திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவின்குடி, திருவேரகம், குன்றுதோறாடல். பழமுதிர்ச்சோலை என்பவனவாகும். இது மரபாக அமைந்துள்ளது. படைவீடு என்பது சேனைகள் தங்கும் இடம் அல்லது இராஜதானி எனப்படும். இவை தானை, யானை முதலிய சேனைகள் தங்கும் பொருளில் காணப்படுகிறது. இவை கந்தபுராண வரலாறு ஆகும். இப்படிப் பொருள் கொண்டால் திருச்செந்தூர் ஒன்றை மட்டுமே படைவீடு என்ற கணக்கில் கொள்ள முடியும். "செந்தூரில் போய்க் கருணை வெள்ள மெனத் தவசில் வீற்றிருந்து" என்று குமரகுருபரர் கூறுவது சிந்தனைக்குரியது.

பதுமனை வென்றபின் வந்து தங்கிய இடம். திருப்பரங்குன்றம் என்று அறிகின்றோம். ஆதலால் இதனையும் இவ்வகையில் ஒருவாறு கொள்வதற்கு இடமுண்டு. அப்படியானால் எஞ்சிய இடங்கள் இப்படை வீடுகளின் வரிசையில் கொள்வதற்கு இடமில்லை எனலாம். இன்னும் சற்று ஆழ்ந்து சிந்தித்து பார்ப்பின் இராஜதானி எனக் கொண்டால் இதனை தலைமையிடமாகக் கொண்டு

ஆட்சி செய்யும் இடம் என்று எண்ணுவோமானால் ஆறுபடை வீடுகளுக்கும் பொருந்துவதாக அமையும்.

"தருமையும், கமலையும் விரிதமிழ்க் கூடலும் திருநகராக அரசு வீற்றிருக்கும்" என்று உள்ளதால் ஆறிடங்களையும் தலைமை இடமாகக் கொண்டு அருள் புரிவோன் முருகன் என்று கொள்ளலாம். பதுமனைப் பொருதற்கு முன் படையோடு தங்கிய இடம் திருச்செந்தூர். அவனை பொருது வெற்றிக் கொண்டபின் தங்கியதும், தெய்வயானையை மணந்த இடமாகியது திருப்பரங்குன்றமாகும். இறைவற்குப் பிரணவ மந்திரத்தை உபதேசித்த இடம் திருவேரகமாகும். அயனைச் சிறைவிடுக்க அருளிய இடம் திருவாவினன்குடியாகும். முருகன் குறிஞ்சி நிலக் கடவுள் ஆதலால் குன்று தோராடலும் அடுத்து பழமுதிர்ச்சோலையும் ஆகும். இவைகள் முருகன் தங்கிய இடங்களாக அமைந்தன. இவ்வாறன்றி ஆற்றுப்படுத்துவது வீடு என்பது பற்றி இது ஆறு படைவீடு என்றாயிற்று எனக் கொண்டால் அது மேலும் சிறப்பாக அமைகின்றது. இவ்வுலகிற்கு எந்நாளும் அருள் புரிவதற்காக சிவபெருமானிடம் இருந்து வெளிப்பட்ட மின்னல் சக்தியே "முருகு" என்பதாகும். முருகு என்ற சிறந்த தனிச் தமிழ்ச்சொல் அழகு, இளமை, இன்பம் முதலிய உயரிய கடவுட் பண்புகளை உணர்த்தும் ஒரு சொல் ஆகும். அதனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்றது திருமுருகாற்றுப் படையாகும்.

**இன்றைய நிலையில் அறுபடை வீடுகள்**

**1. திருப்பரங்குன்றம்**

இது மூலாதாரமாய் விளங்கும் சரவணபவ என்பதில் முதல் எழுத்தாகிய 'ச'வைக் குறிப்பதாகும். இத்தலத்தின் பெயரால் பதினான்கு திருப்புகழ் பாடப்பெற்றுள்ளது. சஷ்டிக் கவசம் பாடப்பெற்றுள்ள தலம். தினசரி எட்டுக்கால பூஜைகள் நடைபெறுகின்றன. இத்தலத்தின் பெருமையைப் போற்றிப் பரவிய நூல்கள் சுமார் நாற்பது ஆகும். இங்குக் காமிகம் காரணம் என்ற ஆகம முறை பின்பற்றப்படுகின்றது. இங்குப் பக்தர்கள் பிராத்தனையின் சிறப்பாகச் செய்வது காவடி எடுத்தல், முடிக்காணிக்கை செலுத்துதல் ஆகும். இங்குத் தங்கத்தேர் உண்டு. இத்தலத்தைப் போற்றிய வேறு பெயர்களாவன. சத்தியகிரி, சத்திய ஞானக்கிரி, சுமந்தவனம் என்பதாகும். சிறு குன்றின் அடிவாரத்தில் அமைந்தது. குன்றின் உயரம் சுமார் 300 அடிகள். இவற்றிக்குச் சொந்தமாக 350.83 ஏக்கர் நிலம் உள்ளது. மற்றும் பக்தர்கள் செலுத்தும் காணிக்கைகளே வருமானம் ஆகும். இடத்தின் சிறப்பாக அறிவது அசைவில்லாத விவேகம் கொண்டது.

**2. திருச்செந்தூர்**

இது சுவாதிட்டானம் என்பர். சரவணபவ என்பதில் இரண்டாம் எழுத்தாகிய 'ர'வைக் குறிப்பதாகும். இத்தலத்தின் பெயரில் எண்பத்தி நான்கு திருப்புகழ் பாடப்பெற்றது. சஷ்டிக் கவசம் உண்டு. தினசரி 9 கால பூஜைகள் நடைபெறுகின்றன. இத்தலத்தைப் போற்றிப் பாராட்டிய நூல்கள் பதினான்கு

ஆகும். ஆகம விதிமுறையில் எல்லா நிகழ்வுகளும் நடைபெறுகின்றன. இங்குப் பக்தர்களின் சிறப்புப் பிராத்தனைகளான கும்பிடு நமஸ்காரம் என்ற உருள் வலம், முடிக்காணிக்கை, பால்குடம் எடுத்தல், காவடி எடுத்தல் போன்றவை யாகும். தங்கத்தேர் உண்டு. வேறு பெயர்களாய் அழைக்கப்படுவது செந்தில், அலைவாய், இயற்கையாய் கடல் அமைந்துள்ளது. கடற்கரை அமைந்துள்ள ஒரே ஆலயம் திருச்செந்தூர் ஆகும். இங்கு நிலங்கள், கட்டிடங்கள் மற்றும் பக்தர்களின் காணிக்கையின்படி ஆண்டு வருமானம் சுமார் நாற்பத்தைந்து கோடி வருவாய் வருகின்றது. விஷயக் கடல் அலைகள் அடிக்கும் இடம் பக்தர்களின் வேண்டுதல்களில் மலைபோல் வருவது பனி போன்று அகலும் என்பது நம்பிக்கை. இலை விபூதி மிகவும் சிறப்பு வாய்ந்த அருள் பிரசாதம் ஆகும்.

**3. திருவாவின்குடி**

இது மணிபூரகம் என்பர். பழனி என்பது எல்லோராலும் அறிந்த பெயர். இது சரவணபவ என்ற எழுத்தில் மூன்றாவது எழுத்தாகிய "வ"என்ற எழுத்தைக் குறிக்கும். இத்தலத்தின் பெயரால் நூற்றுக்கும் மேற்பட்ட திருப்புகழ் பாடல்கள் பாடப்பட்டுள்ளன. இதனைப் பழனி என்றும் ஆவினன்குடி என்றும் குழந்தை வேலாயுதசாமி கோயில் என்றும் சிவகிரி என்றும் வருகின்ற பாடல்கள் இத்தலத்தைக் குறித்துப் பாடிய பாடல்கள் ஆகும். இதற்கும் சஷ்டிக் கவசம் உண்டு. ஆறுகால பூசைகள் தினசரி நடைபெறுகின்றன. இத்தலத்தைப் போற்றி எழுதப்பட்ட நூற்கள் இருபத்திரண்டு. இங்குப் பூசைகள் குமாரதந்திரம், காரண ஆகம முறையில் நடைபெறுகின்றது. பிராத்தனைகளில் சிறப்பாக நடைபெறுவது அபிஷேகம் செய்தல், பஞ்சாமிர்த அபிஷேகம் செய்தல், காவடிச்சிந்து பாடல், காவடி எடுத்தல், முடிக்காணிக்கை செலுத்துதல் நடைபெறுகின்றன. முதன் முதலில் தங்கத்தேர் ஓடியது இந்தத் தலத்தின் சிறப்பாகும். தங்கக் கவசமும் உண்டு. பஞ்சாமிர்த பிரசாதம் இங்குச் சிறப்பாகக் கருதப்படுகிறது. போற்றி அழைக்கப்படும் வேறு பெயர்களாவன பொதினி, பழனரசி, சித்தன் வாழ்வு என்பனவாகும். குன்றின் உயரத்தில் அமைந்துள்ளது. குன்றின் உயரம் 450 அடிகள் ஆகும். குன்றின் உச்சியை 657 படிகள் ஏறி அடையமுடியும். மேலும் அடிவாரத்தில் இருந்து மலையை நடந்து ஏறி முருகனை வழிபட முடியாதவர்களுக்கு விஞ்ச், ரேப்கார்கள் என்ற மின் சாதனங்கள் மின்சாரத்தால் இயக்கப்படுகின்றது. நடந்து செல்வோர்க்கு யானை வழித்தடம் என்ற வழித்தடத்திலும் படி வழியில் நடந்தும் சென்று மலை உச்சியை அடைந்து பழநியாண்டவரை வழிப்படுவார்கள்.இங்கு ஆண்டு வருமானம் 781. 22 ஏக்கர் நிலத்தில் இருந்தும் கடை வாடகை முடிக்காணிக்கை, காணிக்கைகளின் வழியாகவும் கிடைக்கின்றது. இவ்விடத்தின் சிறப்பாக அறிவது ஆன்ம அறிவு விளக்க இடமாய் அமைந்ததாகும்.

**4. திருவேரகம்**

சுவாமிமலை எனப் பெயர் பெற்ற தலமாகும். இத்தலத்தின் பெயரில் நாற்பது திருப்புகழ் பாடப்பட்டுள்ளது. இத்தலம் அநாகதம் ஆகும். இது

சரவணபவ என்ற மந்திரத்தின் நான்காவது எழுத்தாகிய "ண"வாகும். இதற்குச் சஷ்டிக் கவசம் உண்டு. ஆறு கால பூஜைகள் நடைபெறுகின்றன. இத்தலத்தின் பெருமை குறித்து 17 நூல்கள் எழுதப்பட்டுள்ளன. இது காரண ஆகமம் மற்றும் குமாரதந்திரம் என்ற ஆகம விதிகளில் நடைபெறுகிறது. இத்தலத்தின் பிரார்த்தனையின் சிறப்பாக காவடி எடுத்தல், முடிக்காணிக்கையாகும். இங்கும் தங்கத்தேர் உண்டு. இதனுடைய வேறு பெயராக விளங்குவது குடுமலை என்பதாகும். செங்குன்றமே அடி உயரம் 60 படிகளைக் கொண்டு இயற்கை எழிலில் அமைந்துள்ளது. இதனுடைய ஆண்டு வருமானம் 274 ஏக்கரில் கிடைக்கும் குத்தகைப் பணம் மற்றும் பக்தர்களின் காணிக்கையாக 7 கோடி வருமானம் உள்ளதாக அறிகின்றோம். இவ்விடத்தின் சிறப்பு இங்கு அறிவு பொருந்திய இடமாய் விளங்கி பக்தர்களை அறிவு பெற்று நெறிமுறையில் வாழ வழிகாட்டும் தலமாகும்.

**5. குன்றுதோறாடல்**

திருத்தணி முதலிய தல அமைப்பு துரியம் பெற்ற நிலையில் அமைந்தது. சரவணபவ என்ற மந்திரத்தின் ஐந்தாம் எழுத்தாகிய 'ப' என்பதாகும் இத்தலத்தின் மீது பாடப்பெற்ற திருப்புகழ் பாடல்கள் அறுபத்துமூன்று, இதற்கும் சஷ்டிக் கவசம் உண்டு. ஆறு கால பூஜை நடைபெறுகின்றது. இதனைப் போற்றிப் பரவிய நூல்கள் 12 ஆகும். இங்கு நடைபெறும் ஆகம விதிகள் காமிக காரண சுப்ரபேதம் ஆகமம் பற்றிய குமாரதந்திரமாகும். பிராத்தனைகளின் சிறப்பம்சமாக படித்திருவிழா காவடி எடுத்தல் முடிக்காணிக்கைகள் செலுத்துதல் இங்குத் தங்கத் தேரும் தங்க விமானமும் உண்டு. இதனுடைய வேறு பெயர்களாவன தணிகாசலம் என்று அழைக்கப்படுவதாகும். 400 அடி உயர மலையில் 365 படிகளாகக் கொண்டு விளங்குவது. பேருந்து மலையின் உச்சி வரை செல்லும் வகையில் அமைந்தது. இவற்றின் ஆண்டு வருமானம் 900 ஏக்கர் நிலத்தில் கிடைக்கும் குத்தகை மற்றும் பக்தர்களின் காணிக்கைகள் சேர்ந்து சுமார் 110 கோடி வருவாய் உள்ள தலம். இக்கோயிலுக்கு உபய கோயில்களாக 45 உள்ளன. இடத்தின் சிறப்பு அலையற்ற மனம் சிறக்க அற்புதமான இடமாகும்.

**6. பழமுதிர்ச்சோலை**

இத்தலம் விசுத்தி என்பதாகும். இது சரவணபவ மந்திரத்தின் ஆறாவது எழுத்து "வ" என்ற எழுத்திற்குரியது. இத்தலத்தின் மீது பாடப்பெற்ற திருப்புகழ் பதினாறு ஆகும். இத்தலத்திற்குச் சஷ்டிக் கவசம் உண்டு. மூன்று கால பூசைகள் நடைபெறுகின்றன. இத்தலத்தைப் போற்றிப் பரவிய நூல்களாக ஆறு உள்ளன. காமிக ஆகம முறையில் பூசைகள் நடைபெறுகின்றன. பிராத்தனைகளின் சிறப்பு அம்சமாக காவடி எடுத்தல் முடிக்காணிக்கை செலுத்துதல் ஆகும். இத்தலத்தில் மட்டும் தங்கத் தேர் இல்லை. எதிர்காலத்தில் தங்கத்தேர் ஓடுவதற்கு வாய்ப்புகள் உள்ளன. இதனைப் போற்றிடும் வகையில் அமைந்துள்ள வேறு பெயர்கள் சோலைமலை சோலைவெற்பு குளகிரி

விருஷக்கிரி என்பவனாகும். இது நீண்ட மலையில் அமைந்துள்ளது. இயற்கை எழில் நிறைந்த சூழலில் அமைந்துள்ளது. பக்தர்களின் காணிக்கை மூலமாக வருடத்திற்கு நாற்பத்தைந்து இலட்சம் வருமானம் கிடைக்கின்றது. இவ்விடத்தின் சிறப்பு அம்சம் பட்டறிவு விளங்கும் இடமாய் அமைந்துள்ளது.

மேற்கண்ட ஆறுபடை வீடுகளின் மேலே கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் கோவை கற்பகம் பல்கலைக் கழகத்தின் பன்னிரு திருமுறை ஆய்வுமையம் நடத்துகின்ற பதினொறாம் திருமுறையின் இரண்டாம் தொகுதி பிப்ரவரி 2017-ல் வெளியீடு எண் 52-ல் கொடுக்கப்பட்டுள்ள விபரங்கள் ஆகும்.

**முதற்பகுதி** : திருமுருகாற்றுப்படையின் தொடக்கமாக முதற்படை வீடான திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள முருகனின் தோற்றம் அவனின் அற மறக் கருணைகள் திருவுருவச் சிறப்பு முருகன் அணிகின்ற மாலைகளின் சிறப்பு சூரரமகளிரின் செயல்கள் சூரனை சம்காரம் செய்தல் மதுரையின் பெருமைகள் திருப்பரங்குன்றத்தில் அமைந்துள்ள இயற்கை எழில்களின் அழகுக்காட்சிகளை எடுத்து இயம்புகின்ற காட்சிகளாக அமைந்துள்ள வகையில் "உலகம் உவப்ப வலன்ஏற்பு திரிதரு, பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு" எனத் தொடங்கி 77வது வரியாக "குன்றுஅமர்ந்து உறைதலும் உரியன் அதாஅன்று" என்பது வரை கூறுவதைக் காணலாம்.

**இரண்டாம் பகுதி** : முருகக் கடவுள் அடியார்க்கு அருள்புரிய எழுந்தருளும் யானையினது இயல்பும் அவருடைய ஆறு திருமுகங்களில் ஒன்று ஒளிதரும் முகம். இரண்டாவது ஆர்வலருக்கு அருளும் முகம். மூன்றாவது வேள்வியைக் காக்கும் முகம் நான்காவது மெய்ஞானத் திருமுகம் ஐந்தாவது வீரத்திருமுகம் ஆறாவது திருமுகம் உலகமெல்லாம் இன்ப வாழ்வு பெறுவதற்காக வள்ளி நாயகியோடு அமர்ந்து அருள்புரிந்து மகிழ்ந்து விளங்குகின்றது. அவனை வழிபடுதலின் வழியாக பக்தர்கள் பெறுகின்ற "விழுமிய பெறலரும் பரிசு: ஆகிய சீவன்முக்தி என்ற பரிசினைப் பெற்று உய்வு பெறலாம். "வைந்நுதி பொருத வடுஆழ் வரிநுதல்" தொடங்கி 125 வரியாக அலைவாய்ச் சேறலும் நிலையிய பண்பே அதாஅன்று" முடிய அறியலாம்.

**மூன்றாம் பகுதி** : அவரை வழிபடும் முனிவர்களுடைய பக்தர்களின் ஒழுக்கமும் தேவருடன் அவரைத் தரிசிக்க வரும் மகளிர் இயல்புகளும் திருமால் முதலியவர்களைப் பற்றிய செய்திகளும் அறிய முடிகின்றது. 126வது வரியாகிய "சீரைதை இய உடுக்கையார் சீரொடு" தொடங்கி 176வது வரி ஆவினன்குடி அசைதலும் உரியன் அதாஅன்று வரை உள்ள பகுதியாகும்.

**நான்காம் பகுதி** : அந்தணர் இயல்பும் அவர்கள் முருகனை வழிபடும் முறைமையையும் கூறப்பட்டுள்ளன. 177வது வரி "இருமூன்று எய்திய இயல்பினின் வழா அ(து)" முதல் 189வது வரி "ஏரகத்து உறைதலும் உரியன் அதாஅன்று" வரை உள்ள பகுதியாகும்.

**ஐந்தாம் பகுதி** : குன்றக்குரவையின் நிகழ்ச்சிகளாவன முருகனைத் தொழுது வழிபடும் நிலை. பாடுமகளிர் ஆடுமகளிர் ஆகியவர்களின் இயல்பு. அவர்கள் அணியும் ஆடைகளின் விபரம் செயல்படுகின்ற முறைகள் முதலிய சிறப்புகளை கூறுவதாக அமைந்துள்ளது. 190வது வரி "பைங்கொடி நறைக்காய் இடை இடுபு வேலன்" முதல் 217வது வரி "குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே அதாஅன்று" வரை உள்ள பகுதியாகும்.

**ஆறாம் பகுதி** : முருகன் எழுந்தருளியுள்ள திருவிடங்களையும் தேவராட்டி அவரை ஆற்றுப்படுத்தும் முறைமையும் அவரைத் துதிக்கும் முறைமையும் அவர்பாற் சென்று வழிபடின் கிடைக்கின்ற அருள் பெறும் வழியையும் அவருடைய தொண்டர்களின் நல்லியல்புகளையும் அவர் அருள் புரியும் விதத்தையும் பழமுதிர்ச்சோலையிலுள்ள அருவியின் சிறப்பையும் விவரித்து கூறுவதைக் காணலாம். 218வது வரி "சிறுதினை மலரொடு விரைஇ மறி அறுத்து" முதல் 317வது வரி "பழமுதிர் சோலை மலைகிழவோனே" வரை உள்ள பகுதியாகும்.

**வழிபடும் முறைகளாக காட்டுவது**

யோக வழிபாடு சூரர மகளிர் வழிபாடு அந்தணர் வழிபாடு குறமக்கள் வழிபாடு மறியறுத்து வழிபாடு செய்தல் வெறியாட்டு வழிபாடு கோயில் வழிபாடு பற்றிச் செய்திகள் முழுமையாக அறிய முடிகின்றது. மேலும் திருமுருகாற்றுப்படையில் 227 முதல் 277 வரிகள் வரை முருகப்பெருமானின் புகழ்மொழிகள் கூறப்படுகின்றன. இவை நீ வேண்டியது வேண்டியவாறு கிடைக்க வேண்டுமென்றால் இப்புகழ் மொழியில் முருகனைப் போற்றி வணங்குதல் வேண்டும் என்று முருகன் அருள் பெற்ற ஒருவர் முருகனின் அருள் பெற விரும்பும் ஒருவனுக்கு கூறுவதாக அமைந்துள்ளமை சிறப்பாகும்.

**முடிவுரை**

திருமுருகாற்றுப்படையில் ஆறுபடை வீடுகளின் சிறப்பு அறிய முடிகின்றது. இயற்கையின் அழகினை அறிய முடிகின்றது. வழிபாட்டு நெறிமுறைகள் விளக்கப்படுகின்றன. சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நான்கு நிலையில் சைவ சிந்தாந்தத்தின் வழி காட்டுகின்ற திறம் அறிய முடிகிறது. முருகனுக்குத் தமிழில் வழிபாடு செய்ய போற்றித் திருமொழிகளைத் திருமுருகாற்றுப்படை வழிக் காணலாம். முருகனின் அழகையும் அழகிய இடங்களையும் வழிபட்டமை முருகக்கடவுள் வழிபாடாக மாறியது என்ற பகுத்தறிவின் சிந்தனைக்கும் திருமுருகாற்றுப்படை வாய்ப்பளிக்கின்றது. அவனருளாலே அவன்தாள் வணங்கி என்ற நிலையில் முருகனின் திருவருளால் அவனடைவுகளைப் பாடி பிணி மூப்பு சாக்காடெனும் கட்டுகளை அறுத்துக் கொள்வோம். அவ்வாறு கொள்வது இயற்கையாகும். மாறா இளமையும் அழியா அருளும் கடவுள் தன்மையும் நம்மால் என்றென்று ஒளிரும் ஒளிரும் என்பதை அறிகின்றோம்.

# கந்தபுரிக் கருணாநிதியே!

முனைவர் சீர்காழி வி. இராம்தாஸ்
முருகபவனம்,
#3 காந்திஅடிகள்சாலை, ஆர்பிசிவம்நகர்,
மன்னார்குடி-614001.

**அன்புநெறிகள்**

பக்தியில் உடலை வருத்திக்கொண்டு சிலர் சாதனைகள் செய்கின்றனர்! அன்பே வடிவான இறைவனை, கருணைக் கடலான கடவுளை, அருள்மயமான ஆண்டவனை அடைய கடினப் போக்கு தேவை இல்லை! அன்பே கடவுள் என்றனர் ஆன்றோர்! திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர், என்ற நால்வரும் சற்றே மாறுபட்ட நான்கு நெறிகளைக் கடைப்பிடித்தவர்கள். அந்த நால்வழிகள் ஞான (மகன்மை) மார்க்கம், தாச (தலைவன்-தொண்டன்) மார்க்கம், சக (தோழமை) மார்க்கம், பக்தி (நாயகன்-நாயகி) மார்க்கம், என்றும் கூறலாம். எம்முறையைப் பின்பற்றினாலும் உய்வதற்கு வழியுண்டு என்று வாழ்ந்து காட்டிச் சென்றுள்ளனர்.

**தாய்சேய்முறை**

அம்மையே அப்பா என்றும்; தாயினும் சாலப்பரிபவன் என்று மாணிக்கவாசகரும், ஈன்ற தாய் அகற்றிடினும் மற்று அவள்தன் அருள் நினைந்தே அழும் குழவி அதுவே போன்றிருந்தேனே என்று குலசேகர ஆழ்வாரும்; அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ என்று அப்பரும், தாயும் நீ இன்பத் தந்தையும் நீ என்று தாயுமானவரும்; அகிலாண்ட கோடி ஈன்ற அன்னையே என்று அபிராமிபட்டரும்; எந்தாயும் எனக்கருள் தந்தையும் நீ என்று அருணகிரியாரும் பிறரும் இறைவனைத் தாயாகத் தந்தையாகப் போற்றிடும் முறைமை பக்தி இலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகின்றன.

**குழந்தையும் தெய்வமும்**

பக்தி நெறியில், தெய்வத்தையே குழந்தையாகப் பாவித்து வணங்கிப் போற்றுதல் அன்பின் மேம்பட்ட நிலையாகும். கண்ணனின் தாயாக யசோதைப் பிராட்டியாக பெரியாழ்வார் பாசத்துடனும் உயிர்ப் பிணைப்புடனும் குழந்தையைப் பேணி வளர்க்கும் தாயின் மனநிலையில் மகிழ்ச்சியடைகின்றார். 'மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம்" என்றார் திருவள்ளுவர். மக்களைத் தாம் தீண்டுவதைக் காட்டிலும் மக்கள் தாமாகவே வந்து தம்மைத் தீண்டுதலே பேரின்பம் என்றும், அதிலும் குழந்தைகள் முதுகுப் புறத்தே வந்து தம்மைக் கட்டிப்பிடித்தலே பெற்றோருக்குப் பேரின்பம் விளைவிப்பது என்பதையும் அனுபவமாகக் கண்டவர் பெரியாழ்வார். கண்ணன் முதுகுப் புறத்தே வந்து கட்டிப்பிடிப்பதை 'வந்து என்னைப் புறம்புல்குவான் கோவிந்தன்' என்கிறார்.

**மீள்குழந்தைப் பருவம்**

ஷேக்ஸ்பியரின் 'நீவிரும்பியவாறு' (As you like it) இன்பவியல் நாடகத்தில் உலகையே நாடக மேடையாக உருவகித்து, அதில் பிறப்பு இறப்பு (ஜனனம் ருமரணம்) என்று இரு வாயில்கள் உள்ளதாகவும், நாம் (நடிகர்கள்) கதைமாந்தர்கள் என்றும், ஒவ்வொருவரும் ஏழு (காட்சிகளில்) ஏழு பருவங்களில் ஏழு கதைமாந்தர்களாக நடிக்கிறோம் என்றும் கூறப்பட்டு உள்ளது. எனினும் எரிக்சன் என்னும் உளவியல் அறிஞர் குறிப்பிடும் எட்டு நிலைகளே (Infancy, Early childhood, Play age, School age, Adolescence, Young adult & Maturity) இன்றும் பெரும்பான்மையினரால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. அவை (அ) குழந்தைப் பருவம் (ஆ) தொடக்க குழந்தைப் பருவம்; (இ) பள்ளிக்கு முன்பருவம்; (ஈ) பள்ளிப் பருவம்; (உ) விடலைப் பருவம்; (ஊ) முன் இளமைப் பருவம்; (எ) பின் இளமைப் பருவம்; (ஏ) முதிர்ப்பருவம் என்பனவாகும். முதிர்ப்பருவத்தில் குழந்தை மனம் கொண்டவர்களாகி மீண்டும் குழந்தைப் பருவத்திற்கே திரும்பிவிடுகிறார்கள்; இதனால் தான் வணங்கும் தெய்வத்தையும் குழந்தையாகப் போற்றிடும் முறை பிள்ளைத்தமிழ் போன்ற பக்தி இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன என்றும் கூறலாம்.

**சேய் வடிவினன்**

அருணகிரிநாதரின் திருப்புகழில் வளவாபுரி, செய்கையம்பதி, வீரராஜேந்திர நல்லூர் போன்ற பெயர்களில் சேயூர் பாடப் பெற்றுள்ளது. சிவபெருமானின் சேயாகிய முருகப்பெருமான், அருணகிரிநாதருக்குச் சேய் வடிவில் காட்சி அருளியதால் "சேயூர்" என்று அழைக்கப்பட்டு காலப் போக்கில் செய்யூர் என்றானது. சூரனை அழிப்பதற்காக வந்த சேயவன் முருகப் பெருமான் திருப்பனந்தாள் அருகிலுள்ள சேய்ஞலூர் தலத்தில் சிவனை வழிபட்டு, சர்வசங்காரப் படைக்கலத்தை - உருத்திர பாசுபதத்தைப் பெற்றார் என்று கந்தபுராணம் வழிநடைப்படலமேற் கூற்றுடன் தலபுராணம் விளக்குகிறது. சேய் - முருகன்; சேய் நல் ஊர் என்பது சேய்ஞலூர் என்று பெயர் பெற்றது. தேவாரம் பாடல்பெற்ற திருச்சேய்ஞலூர் சேய்ஞலூர் சத்தியகிரி, குமாரபுரி, சண்டேசுவரபுரம் என்ற வேறு பெயர்களுடனும் இப்போது மக்கள் வழக்கில் சேங்கனூர் சேங்கலூர் என்றும் அழைக்கப்படுகிறது.

பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் சிறப்புத் தன்மைகளுடன் விளங்குபவை குமரகுருபர சுவாமிகளின் வைத்தீசுவரன் கோயில் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழும் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழுமே யாகும். பேசாத குழந்தையாகப் பிறந்து செந்திலாண்டவன் சந்நிதியில் கிடத்தப்பெற்று 'பூமேவு செங்கமல' என்று தொடங்கி கந்தர்கலி வெண்பா பாடியவர், முருகப் பெருமானையே குழந்தையாகப் பாவித்து பாடிய சிறப்புக்குரியது வைத்தீசுவரன் கோயில் (புள்ளிருக்குவேளூர்) முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழாகும்.

**அருமருந்தாகிநின்றவன்**

சடாயுபுரி, பரிதிபுரி, வேளீர், புள்ளிருக்குவேளூர், கந்தபுரி, வைத்திய நாதபுரி போன்ற பல்வேறு பெயர்களுடன் விளங்கும் வைத்தீசுவரன் கோயிலில் சிவன் வைத்தியநாதராகவும், அன்னை தையல் நாயகியாகவும் வீற்றிருக்க இருவருக்கும் அருமருந்தாக எழுந்தருளி இருக்கும் முருகப்பெருமான் செல்வ முத்துக்குமரன் என்று அழைக்கப் பெறுகிறார். அப்பெருமானைக் குமரகுருபர சுவாமிகள் தமது வைத்தீசுவரன் கோயில் பிள்ளைத்தமிழில், "ஆனேறு உயர்த்திட்ட ஐயற்கும் அம்மைக்கும் அருமரு தாகி நின்ற ஆதிபிரான்" என்கிறார்.

**குழந்தையா? கிழவனா?**

உமாதேவியின் ஞானப்பாலுடன் கார்த்திகை மகளிர் அறுவரிடம் பால் பருக விழைந்தவன் குழந்தைவேலன். குழந்தை வடிவத்தின் திருவடிகளின் கிண்கிணி சதங்கையைக் கண்ணில் ஒற்றி தமிழ்ப் பண்ணில் ஒற்றி அருணகிரிநாதர் முருகனருளைச் சுவைத்தது திருப்புகழிலும் அவரின் ஏனைய நூல்களிலும் விரவியுள்ளன. புவனங்கள் அனைத்தையும் ஈன்ற உமையம்மையின் திருமுலைப்பாலை அருந்தி, சரவணப் பொய்கையில் தாமரைத் தொட்டிலில் ஏறி, கார்த்திகைப் பெண்கள் முலைப்பாலையும் விரும்பி அருந்திய பின்னும் அழுகிறான் பிரான்குழந்தை. குழந்தையின் அழுகுரல் கேட்டதும் சில அழுகுரல்கள் தொடர்கின்றன. வற்றிடப் போகிறோமே என்று கடல் அழுதிட, பிளவுபடப் போகிறோமே என்று கிரவுஞ்ச மலை அழுதிட, தாம் அழியப் போகிறோமே என்று எண்ணி சூரர் குலமும் அழுததாம். இந்தக் குழந்தையை உலகத்தவர் குறிஞ்சிக் கிழவன் என்று கூறுவதேன் என்று அருணகிரிநாதர் வியக்கின்றார்.

*"திருந்தப்புவனங்கள் ஈன்ற பொற்பாவை திருமுலைப்பால்*
*அருந்திச் சரவணப் பூந்தொட்டில் ஏறி அறுவர் கொங்கை*
*விரும்பிக் கடல் அழக் குன்று அழச் சூர் அழ விம்மி அழுங்*
*குருந்தைக் குறிஞ்சிக் கிழவன் என்று ஓதும் குவலயமே."*

கந்தரலங்காரம்

**திருவிளையாடல்கள்**

இந்தப் பாட்டில் "திருந்தப் புவனங்கள் ஈன்ற பொற்பாவை திருமுலைப்பால் அருந்தி" என்னும் பகுதி முருகனது ஒரு திருவிளையாடலைக் குறிக்கிறது. "சரவணப் பூந்தொட்டிலேறி" என்பது இரண்டாவது திருவிளையாடல்."அறுவர் கொங்கை விரும்பி' என்பது மூன்றாவது திருவிளையாடல். "கடலழக் குன்றழச் சூரழ விம்மி அழும், குருந்தை" என்பது நான்காவது திருவிளையாடல். இப்படி இந்த நான்கு அடிகளிலும் நான்கு திருவிளையாடல்கள் குறிப்பிடப்பெறுகின்றன. முருகன்என்றும் அகலாத இளமைக்காரன். குழந்தைவடிவில் விளங்கும் குருநாதன்.குமரன் என்ற திருப்பெயருக்கு உரியவன். மலைக் குகைகளில்

குறிஞ்சிக் குமரன் எழுந்தருளியிருப்பதுடன், ஆன்மாக்களின் இதயக் குகைகளிலும் எழுந்தருளிகுகன் என்றுவணங்கப் பெறுகின்றான்.

**பசியும் பாசமும்**

அன்னை உலக நாயகின் அன்பும் கார்த்திகை மகளிர் அறுவரின் அரவணைப்பும் இருந்து சேயோன் அழுவதேன்? அளவுகடந்த செல்லம்; புலவர்கள் பிள்ளைத்தமிழ் பாடித் தாலாட்டுகின்றனர். கொஞ்சிடும் சலுகை கிடைத்த அரவணைப்பில் சண்முகக் குழந்தை அழுகிறது. இத்தனைத் தாயர்கள் தாலாட்டில் வளர்ந்ததால் பசியென்றால் என்னவென்றே அறியாத பிள்ளைக்கு ஒரேயொரு நாள் கொஞ்சமாக எள்ளளவு பசி வந்துவிட்டதாம்; வயிற்றை எக்கிக் கொண்டு இதழ்களைப் பிதுக்கிக் கொண்டு தொட்டிலை உதைத்துக் கொண்டு வெளியில் வந்து தவழ்ந்து அழுத முருகக் குழந்தையை உமையம்மை விரைந்து சென்று மடியில் வைத்துக் கொஞ்சியதும் கண்ணீர் உலராமலேயே கனியிதழ் முறுவல் செய்கின்றான் சக்திபாலன் என்பதை அற்புதப்படுத்துகிறார் பகழிக்கூத்தர்.

**அழகனின் அணிமணிகள்**

முருகப் பெருமானின் குழந்தைத் தோற்றத்தை அழகுடன் காணுகின்றார்; முருகப் பெருமானாகிய மதலையின் சிறிய பொன்னடிகளில் கிண்கிணியும் சலங்கையும் ஒலிக்க, இடுப்பில் அரைநாண் கயிறும் ஒளிரும் மணியும் சரிந்த தொந்தியும், மதிமுகத்தில் பொன்னாலாகிய சுட்டியும். வட்டப்பொட்டின் அழகும் கொண்ட நெற்றியும் செவிகளில் மின்னுக் குழையும் பொற்றோடும் அசைந்தாட செவ்வாய் இதழ்களில்புன்னகையரும் பகீரைமலர்க் கொத்து தென்றலில் அசைந்தாடுவது போல் செம்பவளத் திருமேனி செங்கீரை ஆடியருள்கின்றான் குமரகுருபரரின் வைத்தீசுவரன் கோயில் முத்துக்குமாரசாமிபி ள்ளைத்தமிழ் செங்கீரைப் பருவப் பாடல் அழகாக இயம்புகிறது.

*"செம்பொன்னடிச்சிறு கிண்கிணியோடு சிலம்பு கலந்துஆடத்*
*திருவரை அரைஞாண் அரைமணியொடும்ஒளி திகழரை வடம்ஆடப்*
*பைம்பொநசும்பிய தொந்தியொடும்சிறு பண்டி சரிந்துஆடப்*
*பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச் சுட்டி பதிந்துஆடக்*
*கம்பி விதம்பொதி குண்டலமும்குழை காதும்அசைந்துஆடக்*
*கட்டிய சூழியும் உச்சியும் உச்சிக் கதிர்முத்தொடும்ஆட*
*அம்பவழத்திருமேனியும்ஆடிட ஆடுக செங்கீரை"*

பாடல் குழந்தைகட்குப் பூட்டப்படும் அணிகள் இன்னின்ன என்பதைப் புலப்படுத்துகிறது. குழந்தைகட்கு அணிமணிகளைப் பூட்டி அழகு பார்ப்பது பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் மகிழ்ச்சி தரும் செயலாகும்.

**விம்மலும்வேண்டலும்**

வைத்தியநாதபுரி தலத்தில் எழுந்தருளியிருக்கும் குழந்தைப் பெருமானிடம் புலவர் வேண்டிக்கொள்கிறார். பெருமானே விரல் சூப்பியவாறு,

எச்சிலமுது வழிய, கண்களை மூடிக்கொண்டு, விம்மிப் பொருமி விழுந்து அழுவதால் மென்மையான குரல் கம்மிடும், கண்களில் இட்டமை கரைந்து கண்கள் சிவக்கும்; அருவியாய் வழிந்திடும் கண்ணீரால் உடலில் கறைபடிந்து மேனி கருத்திடும். எனவே இதனை விடுத்து உன் மெல்லிய பாதம் நோகாமல் ஒரு காலினால் தொட்டிலை உதைத்து மற்றொரு காலினால் உந்தி எழுந்து அருள் பொழிகின்ற திருமுகத்தை உயர்த்தி இருபுறமும் அசைத்து செங்கீரை ஆடியருள வேண்டுகிறார் குமரகுருபர சுவாமிகள். (முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் 2.8)

**குமரனின் குறும்பு**

கந்தபுரி எனும் தலத்தில் அம்மை தையல்நாயகி உடனுறை அப்பன் வைத்தியநாதரின் குழந்தையாக மகிழ்விக்கும் செல்வமுத்துக் குமரனின் கனிவாய் அமுதநீரினால் தாயின் மணிவயிறு வெண்துகிலாடையை நனைத்து மடியைக் குளிர்விக்கின்றான்; தவழ்ந்து தந்தையின் மார்பினுக்குத் தாவி அங்கு குரவைக்கூத்து ஆடுகிறான். அங்கு தந்தையின் உடுக்கையைத் தட்டி ஓசை எழுப்புகின்றான்; தீச்சுடரில் கங்கை நீரைப் பெய்விக்கின்றான்; சென்னியில் இருக்கும் பிறை நிலவைப் பிடித்து கழுத்தில் நெளியும் பாம்பின் வாயில் திணிக்கின்றான்; கரமொன்றில் இருக்கும் இளமையான மானுக்குப் பசிதீர அறுகம்புல்லை ஊட்டுகின்றான். பிரான் செம்மேனியில் அணிந்துள்ள திருநீற்றைத் துகளாக்கிப் புழுதி எழச்செய்தபின், விரிசடைக் காட்டின் கங்கையில் மூழ்கி கண்கள் சிவக்க நீரில் விளையாடி அன்னை களிக்க குறும்புகள் செய்த குமரனே குருபரனே உன் அடியவர்களுக்கு அருள் செய்திட வருகவே என்று போற்றி அழைக்கின்றார் குழந்தைக்கவி குமரகுருபர சுவாமிகள். (முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் 6.2)

*"மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல் வெண்துகில்*
*மடித்தலம் நனைப்ப அம்மை*
*மணிவயிறு குளிரத் தவழ்ந்துஏறி எம்பிரான்*
*மார்பினிற் குரவையாடி*
*முழவுமுதிர் துடியினில் சிறுபறை முழக்கிஅனல்*
*மோலிநீர் பெய்தவித்து*
*முளைமதியை நெளியரவின் வாய்மடுத்து இளமானின்*
*முதுபசிக்கு அறுகுஅருத்தி*
*விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு தூள்எழப்*
*புழுதியாட்டு அயர்ந்து*
*விரிசடைக் காட்டினில் இருவிழிகள் சேப்பமுழு*
*வெள்ளநீர்த் துளையம்ஆடிக்*
*குழவுமுதிர் செல்விப் பெருங்களி வரச்சிறு*
*குறும்புசெய்தவன் வருகவே*
*குரவுகமழ் தருகந்த புரியில்அருள் குடிகொண்ட*
*குமரகுருபரன் வருகவே."*

**பிள்ளைத்தமிழ் இன்பம்**

பிறைச்சந்திரனும் கங்கையும் நாகமும் அணிந்த திருமுடி சூடியவனின் முக்கண்ணுடன் கூடிய தாமரையொத்த முகமும் அகமும் மலரும் படியாக மழலை பேசும் இமய முதல்வி புதல்வனே, அருள் செய்யும் புனிதனே என்றும் குமரகுருபரர் பாடுகிறார். கார்த்திகேயனை வளர்த்த கங்கையை முருகக் கடவுளுக்குத் தாயென்றும் அதனால் காங்கேயன் என்றும் கூறுவர். குழந்தையான குமரவேளின் அடியவர்களுக்கு அருளை வழங்கிடும் செல்வமாக செல்வனாக இருப்பதால் குமரகுருபரர் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் அருள் பாலித்திடும் அருள் நிதியை அருட்செல்வனச் செல்லாக, கந்தபுரிக் கருணாநிதியே என்றழைத்துப் போற்றி வணங்குகிறார். 'கங்கை மகட்கு ஒருகான்முளை செங்கோ செங்கீரை கந்தபுரிக் கருணாநிதி செங்கோசெங்கீரை.' (முத்துக் குமரசாமி பிள்ளைத்தமிழ் 2.10) என்றும், 'உள்ளத் தடநிறை புத்தமுதக்கடலே..... தண்ணொளி பொங்கிய கருணாநிதியே தாலோ தாலேலோ சங்கத் தமிழின் தலைமைப் புலவா தாலோ தாலேலோ.'(முத்துக்குமரசாமி பிள்ளைத்தமிழ் 3.8) என்றும் போற்றுவதைக் காணமுடிகிறது; பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையையும் முருகப்பெருமானின் பெருமைகளையும் அறிய முடிகிறது. சிற்றிலக்கியங்களில் தலையாயது பிள்ளைத்தமிழ் என்பர். பிள்ளைத்தமிழ் இலக்கியம் தமிழுக்கே உரியதென்றும், பிறமொழிகளில் காணப்படாத ஓர் இலக்கியவகை என்றும் இதன் தனிப்பெருமையை எடுத்துரைக்கும் என்றார் அறிஞர் மு.வரதராசனார். இக்கூற்றினை மெய்ப்பிக்கும் வகையில் பிள்ளைத்தமிழ் எனும் பக்தி இலக்கியத்தின் பெருமைகளை விளக்கிட சிலசான்றுகளைத் தந்துபாட்டுடைத் தலைவனாகிய முருகப்பெருமானை வணங்கிடும் பேரின்ப நிலையை உணர்த்திட இக்கட்டுரை வழிகோலுகிறது.

**உசாத்துணைநூல்கள் / இணையங்கள்**


1. திருச்செந்தூர்முருகன்பிள்ளைத்தமிழ் (பகழிக்கூத்தர்அருளியது) ஆசிரியர்டாக்டர்துரைராஜாராம், பாரிநிலையம் (2012) வெளியீடு
2. புள்ளிருக்குவேளீர்த் தலவரலாறு, இராமலிங்கத்தம்பிரான்சுவாமிகள், வைத்தீசுவரன்கோயில் (1982) வெளியீடு
3. ஸ்ரீமுத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்- ஓர்ஆய்வு (குமரகுருபர சுவாமிகள் அருளியது) ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் (1969) வெளியீடு
4. LAMB - Selection from Lamb|s Tales from Shakespeare, E.J.Arnold& Son Ltd., Glasgow
5. http://www.projectmadurai.org/pm_etexts/utf8/pmuni0170.html, (,izak;)
6. https://shaivam.org/siddhanta/sp/spt_p_ceynyalur.htm, (இணையம்)

# ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் படைப்புகள்

**K.A.** இராஜீ
50 50பி.ஃ.1 அப்பர்சாமி கோயில் தெரு
திருவொற்றியூர்
சென்னை-19

உலகத் தமிழ் மறையாகிய திருக்குறளில் விளங்கும் "தவம்" என்னும் அதிகாரமானது, "உயர்ந்ததோர் இலட்சியத்தை அடைவதற்கு ஒருவர் மேற்கொள்ளும் சாதனை அல்லது பயிற்சியாவது தவத்தின் பாற்படும்" என விளக்கம் பெற்று நிற்கும். "தவமும் தவமுடையார்க்கு" எனத் தொடங்கும் குறள், இப்பிறவியில் தவம் இயற்றுவார் யாவரும் முற்பிறவியில் தவப் பயிற்சியினை யுடையவராய் விளங்கியிருப்பின், இயல்பாகவே அவர்க்குத் தவப்பயன் இம்மையில் ஏற்படுவதாகும் என்று விளக்குகிறது. பிறர்க்கு மறுமையில் பயன் எனக் கொள்ளலாம். இதற்கு எடுத்துக்காட்டாய் விளங்குபவர் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் ஆவார்.

கி.பி. 1850-52க்கு இடைப்பட்ட காலத்தில் இராமேசுவரத்தில் அவதரித்த சுவாமிகள் பாம்பனில் வளர்ந்து, 1894ல், தவப்பயிற்சியைத் தொடங்கினார். 1895ல், தூய துறவற நெறியை மேற்கொண்டார். இடைப்பட்ட காலம், 23-3-1894ல், ஸ்ரீ அகத்தியர் மற்றும் ஸ்ரீ அருணகிரிநாதர் ஆகிய இருவருடன் பழநி ஸ்ரீபாலதண்டாயுதபாணிப் பெருமான் குழந்தை வடிவில் நேரில் காட்சி அளித்து ஞானோபதேசம் செய்வித்தார். இஃது சுவாமிகளின் முன் தவப்பயன் அன்றோ!

ஆகமங்கள் குறிப்பிடும் சரியை, கிரியை, யோகப் பயிற்சியினைத் தன் முற்பிறவியில் மேற்கொண்டு மீளப் பிறக்கும்போழ்தே ஞானத்துடன் சாமுச்சித்தராய் விளங்கி முருக பாவனை செய்தவர் ஸ்ரீ பாம்பன் சுவாமிகள்.

தொடக்கத்தில் அவரால் படைக்கப் பெற்ற சண்முகக் கவசம், பஞ்சாமிர்த வண்ணம், திருத்தொடையல், திருவலங்கத் திரட்டு ஒன்று மற்றும் இரண்டாம் கண்டங்கள் முதலிய பாடல்களைப் பாடினார். ஸ்ரீ சுவாமிகளின் ஆன்ம ஞான விளக்கம் அவரது இளமைக் காலத்திலேயே பக்குவம் பெற்று விளங்கியது என்பதற்கு அவை சான்றாயிற்று. மேலும் அவரது படைப்புகளில் காணப்பெறும் ஆன்மீக நெறி பற்றிய கருத்துகளும் பன்மொழி அறிவும் ஞானமும் இறையருள் இல்லாது வெறும் பயிற்சியால் மட்டுமே வெளிப்படுவது கடினம் எனலாம்.

ஸ்ரீ சுவாமிகளின் பிள்ளைத் திருநாமம் அப்பாவு. பின்னாளில் தொடங்கி பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் என்பதாய் வழங்கப் பெற்று வருகிறது. மேலான நிலையாகிய துறவு நிலையை இவர் மேற்கொண்டு விளங்கியவர்,

சுத்த சித்தாந்தம் கூறும் பரமுத்தி நிலையாகிய இரண்டற்ற நிலையில் சீவன் முத்தராய் வேத நெறியையும் நன்குணர்ந்து சுத்த சைவசித்தாந்த நன்நெறியை நண்பகல் சூரிய ஒளி போன்ற தம் ஞானத்தால் உலகுக்கு இவர் உணர்த்தினார்.

"அத்தியாச்சிரம சுத்த அத்துவித வைதிக சைவசித்தாந்த ஞானபானு, பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்" என்று போற்றப் பெறுகிறார். ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் வாழ்ந்த காலத்திலிருந்து இன்றளவும் அவரது ஞானக் கருவூலங்கள் நன்கு உணரப் பெறாமலேயே உளது என்றே கூறலாம். அதற்கு அவரது படைப்புகளின் மொழிநடையே எனக் கருதவும் இடமுண்டு. தென்மொழிப் புலமை மட்டுமல்லாது வடமொழித் திறனும், வேத, இதிகாச, உபநிடதங்களின் நுட்பமும் பெற்றிருந்து, அவர் தம் படைப்புகளில் அவற்றை வெளிப்படுத்தி அனைவரும் உணரச் செய்தார். ஆன்மீக நெறியின் முன்னேற்றத்திற்கு வடமொழி அறிவும் பயன்படுகிறது என்பதை இவரது படைப்புகள் மூலம் அறியலாகிறது.

ஸ்ரீமத் சுவாமிகள் உபய அருணகிரிநாதர் என்றும் புகழப் பெற்றவர். ஸ்ரீ அருணகிரிநாதரின் 'திருப்புகழ்' படைப்பின் தமிழ் நடையையும் இங்கு நாம் நினைவில் கொள்ளலாம். முருகப் பெருமானும் சிவபெருமானும் ஒருவரே; சிவனுடைய குழந்தை வடிவே முருகர் என்பது ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் முடிவாகும். அனைவராலும், எப்பொழுதும் தோத்திரப் பாடலாகப் பாடப்பெறும் பாடல்களாகக் கொள்வது அனவரத பாராயணாட்டகம் ஆகும். ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் பத்துப் பிரபந்தங்களில் ஒன்றாக இதனைக் கூறும்போழ்து வெளிப்படுத்திய பாடல் ஒன்று;

*அள்ளுலை யாப்படை யறுமுக வனுமனந்*
*துள்ளுலை வோட்டுதண் சுடரணி பரமனும்*
*வள்ளுலை யாக்கிரி மகளுமைங் கரனுமெ*
*னுள்ளுலை யாப்பொரு ளொன்றெனத் தொழுதேன்.*

என்பதாம். ஆறுமுகப் பெருமானும், சிவ பெருமானும், உமைப்பிராட்டியும், விநாயகப் பெருமானும் ஒரே பரம்பொருளாகக் கருதி வழிபடுவதாயினார்.

சாத்திரங்கள், தோத்திரங்கள் மட்டுமின்றி, ஸ்ரீமத் சுவாமிகளுக்கு முருகப் பெருமானுடன் நிகழ்ந்த அனுபவங்கள்; உலகியல் நிகழ்வுகளால் அவருக்கு ஏற்பட்ட இன்பதுன்பங்கள், சமுதாய நோக்கு; சமரச சமய நல்லிணக்கக் கோட்பாடுகள் போன்ற அனைத்தும் கூடிய அவரது கருத்துகளுக்கு அகச்சான்றுகளாகவும் ஸ்ரீமத் சுவாமிகளின் பாடல்கள் விளங்குகின்றன. 6666 பாடல்கள் கொண்ட தொகையானது ஆறு மண்டலங்களில் அடங்கின. ஸ்ரீமத் சுவாமிகள் தூய துறவறம் மேற்கொண்ட பின்னர் இயற்றிய 32 வியாசங்களும் உள்ளன. தற்போது இரண்டு வியாசங்கள் மட்டுமே உள்ளன. வரையறுக்கப்பெற்ற ஆறு மண்டலங்களில் முதல் மண்டலமானது ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளின் பாடல்கள்; இரண்டாம் மண்டலம் திருவலங்கள் திரட்டு முதல் மற்றும் இரண்டாம் காண்டங்கள்

ஆகும்; மூன்றாம் மண்டலம் பரிபூரணானந்த போதம், காசி யாத்திரை, தகராலய ரகசியம்; நான்காம் மண்டலம் பத்துப் பிரபந்தங்களையும், சிறுநூல் திரட்டு, சேந்தன் செந்தமிழ், செக்கர்வேள் செம்மாப்பு மற்றும் இறுமாப்பு; ஐந்தாம் மண்டலம் திருப்பா; ஆறாவது மண்டலம் திருமந்திரமாகப் போற்றப் பெறும் குமாரஸ்தவம் உள்ளடக்கிய ஸ்ரீ குமாரசுவாமியம் ஆம். விரிவு கருதி இங்கு, சில நூல்கள் மட்டுமே ஆய்வுக்குட்படும் வகையில் கட்டுரை அமைக்கப் பெறுகிறது. பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் முருகனருள் பெற்று முதலாவதாகப் பாடிய பாடல் “கங்கையைச் சடையில் பரித்து” எனத் தொடங்கும் பாடல் ஆகும்.

முருகப் பெருமான் மீது “கந்தர் ச‘டிக் கவசம்” பாடியவர் தேவராய சுவாமிகள் ஆவார். அப்பாடலை நாள்தோறும் 36 முறை இடைவிடாது ஓதிக் கொண்டிருந்தவர் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள். அது சமயம் அவருக்கு ஏற்பட்ட முருகனருளும் ஊக்கமுமே நூல்களின் படைப்புக்குக் காரணமாயிற்று எனலாம். இறைவன் மேலான பாடல் ஒன்றனைத் தாமும் அவ்வாறே பாடும் துணிவுடன் வடதிசை நோக்கி நின்று ஒரு நாள் செவ்வேள் முருகனைச் சிந்தித்துப் பாடத் தொடங்கினார். அருணகிரிநாத சுவாமிகள் பெயரைக் குறிப்பிட்டுத் தம் பிரபந்தங்களை முடிக்கவும் செய்தார்.

“அருணகிரிநாதருக்கு அருள் தந்த குருநாதனே” என முதல் பாடலை நிறைவு செய்தவர், பிற பாடல்களிலும் இறுதியில் அருணகிரிநாத சுவாமிகளின் பெயரைக் குறிப்பிடச் செய்தார். உணவு கொள்வதற்கு முன் ஒரு பாடலை நாள்தோறும் பாடினார்.

இரண்டாம் மண்டலத்தில் அமைந்த திருவலங்கள் திரட்டு ஒன்று மற்றும் இரண்டாம் காண்டம் என அமையும். முதல் 491 பாக்கள் ஸ்ரீ சுவாமிகள் இல்லறத்தில் இருந்த காலத்தில் பாடப் பெற்றவை ஆம். சிவனைப் பாடுவதற்குரிய ‘பண்’ நிறைந்த தேவாரம் போல், முருகனைப் பாடுவதற்குப் பண்ணோடு அமைந்தது திருவலங்கல் திரட்டு ஆகும். தோத்திரப் பாடலாகவே அமைந்தது. இரண்டாம் காண்டம் திருவலங்கல் திரட்டு ” பல்சந்தப் பரிமளம்” என்னும் வேறு பெயருமுடைத்து. செவ்வேள் கிருபையே உய்தி பெறுவார்க்கு எல்லாம் உயிர்த்துணை என்பதை உபதேசிக்கும் வகையில் அமைந்தது. ஸ்ரீ சுவாமிகள் தம் காசியாத்திரை நூலில்,

*“யாப்பிலக்கணமும் யாத்த இலக்கியமும்*
*யாப்பொலிபல் சித்திரமு நச்சியல்போய் - மூப்போ*
*தலங்கற் றிரட்டினிரண் டாங்கண்டம் பாருன்*
*விலங்கைத் தறித்து விடும்.*

என்று இதனை விளக்கியுள்ளார்.

*“பத்தியும் ஞானமும் பரவிடு மார்க்கம்*
*எத்தனையோ வகை யிருக்கினு மிகத்தில்*

*முத்திதந் தனுதினமு முப் பயனல்கச்*
*சத்தியமா சரவண பவவே.*

மூன்றாம் மண்டலமாகக் காசியாத்திரை, பரிபூரணானந்த போதம் தகராலய ரகசியம் விளங்குகின்றன. ஞானம் பெறுதற்குரிய சாதனங்களை சிவஞான தீபம் எடுத்துக் காட்டுகளுடன் விளக்கி நிற்குங்கால் ஆன்மாவுக்கு உறுதி பயப்பதாகிய ஞானம் உண்டாவதற்கான அக வழிபாட்டு முறை அனுபவங்களையும் காட்டுவதாகும். காசி யாத்திரை யாவது நீதி நூல் சாரம் ஆகும்.

*வானமெல்லாம் ஆளினும் இவ்வையம் புரக்கினும் மெய்*
*ஞானமில்லார் ஏழையன்றோ? நட்பே பரஞ்சோதி*

என்பது போன்ற நீதி சார்ந்த கருத்துகளை அறிவிப்பதாகும். பாம்பன் ஸ்ரீமத் குமர குரு சுவாமிகளால் படைக்கப் பெற்ற பரிபூரணானந்த போதமானது அவராலேயே அருளப்பெற்ற சூரியப் பிரகாசம் என்னும் உரையுடன் கூடியது. இஃது ஒரு ஞானநூல் ஆகும். இந்நூலின் தொடர்ச்சியாக விளங்குவது தகராலய ரகசியம் என்க.

இரண்டு நூல்களும் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளால் தாம் தவநிலை பூண்டிருந்த காலத்தில் ஸ்ரீ குமார பரமேஸ்வரனிடம் பெற்ற அருள் அனுபவத்தால் அருளிச் செய்தார். சுத்தாத்துவிதம் என்னும் சொல்லுக்குப் பொருளை விளக்கிச் செல்வது பரிபூரணானந்தம் ஆம்.

*பலமலர் தோறும் கள்ளைச் சிறை யள்ளிப் பருகு மாபோல்*
*இலகு மெய்ஞ் ஞான நூல்கள் பலவுள்ளும் எடுத்த சாரம்*
*சொல்லு முறை பொலிந்து நிற்பச் சுருக்கமாகச் சொற்ற தாலே*
*மலர்மடல் கைதை யாகா வகுளம தாகு மிந்நூல்*

என்பது நூலின் சிறப்பாகும்

தகராலய ரகசியமாகிய நூல் அகவழிபாட்டின் இன்றியமையாமைச் சிறப்பையும் தன்மையையும் விளக்கும். ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் பிரப்பன் வலசை என்னும் ஊரில் மயான பூமியில் தவம் இயற்றிய போழ்து ஆறுமுகச் சிவபெருமான் அவருக்கு உபதேசித்து அருளிய ஞான உபதேசமே தகராலய ரகசியமாய் மலர்ந்தது. வெளிமுக வழிபாட்டினும் உள்முகவழிபாடே ஆன்மாவின் முன்னேற்றத்திற்குரியது ; இருதயத் தானத்தில் மனதைத் தாரணை செய்து நிற்றல் மேன்மையுடையது என்று விளக்கும். உலக நலன் கருதிப் புறவழிபாடும் ஆன்மாவின் முன்னேற்றத்திற்கு அகவழிபாடும் பின்பற்றக் கூடியதாகும். மனமானது மயக்கத்தில் நின்றால் அனைத்தும் பகையும் துக்கமுமே ஆகும்; மனமானது அருளில் நிற்பின் அனைத்தும் சுகமேயாம் என்பது தோன்ற,

*"மருளென்றிடு நசைதனில் நின்றிடில் அது*
*வலியார் பகை துனிகளை ஈயும்*

*அருளென்றிடு நசைதனில் நின்றிடில் அது*
*அழியா நலம் முழுவதும் ஈயும்"*

என்பார் ஸ்ரீமத் சுவாமிகள். நான்காம் மண்டலமாக, சிறு நூல்திரட்டு, சேந்தன் செந்தமிழ், செக்கர்வேள் செம்மாப்பும் இறுமாப்பும், குமாரஸ்தவம், பத்துப் பிரபந்தம், முதலியன அமைக்கப் பெற்றுள்ளன. சிறுநூல் திரட்டில், அடங்கியுள்ள சண்முக கவசம், பரிபூஜண பஞ்சாமிர்த வண்ணம், மற்றும் பகை கடிதல் ஆகிய பதிகங்கள் நாள் தோறும் தவறாமல் பாராயணம் நியமமாய் படித்தல் செய்ய வேண்டியதாகும். சண்முகக் கவசப் பாராயணம் ஸ்ரீமத் சுவாமிகளின் துன்பத்தைப் போக்கியவாறு அடியார்கள் துன்பத்தை நீக்குவதாகும். பகை கடிதல் பாராயணம் பகைமையை நீக்குவதாகும். பரிபூஜண பஞ்சாமிர்த வண்ணம் பாராயணம் நிகழுமிடத்தில் முருகப் பெருமான் எழுந்தருளியிருப்பான் என்பதுடன் இறைவனுக்குப் பால், தயிர், நெய், சருக்கரை, தேன், அபி'ேகம் செய்ததற்கு இணையாய்ப் பயன்களை அளிப்பதாகும். பரிபூஜணம் என்பது போற்றி, வணக்கம் என்பதின் முழுமையான நிலை ; வண்ணம் என்பது இசைப்பாடல் என்க. ஸ்ரீ குமாரஸ்தவம் இம்மை மறுமைத் துன்பத்தைக் களையும் மந்திரம் என்க. பிரபந்தங்களின் தோத்திரங்கள் தொடங்கும் முன் இதனை இசைத்தல் நலம் என்பர்.

ஸ்ரீமத் பாம்பன் குமரகுரு சுவாமிகள் பின்பற்றிய நெறி ஞானநெறியாகும். ஆகமங்கள் கூறும் சரியை, கிரியை, யோக, ஞான நெறிகளில் ஞானநெறியை அவர் பின்பற்றினார். குகநெறியே சிவநெறி என்னும் நம்பிக்கை கொண்டு விளங்கினார். ஏக தெய்வ வழிபாட்டையே வலியுறுத்தினார்.

*சாதி பேதந் தனை மா துறவுக்கு இல்லை*
*சித்தி விரும்பார் முத்தி வரம் போர்*
*சீவன் உடல்போல் தேவனும் உயிரும்*

என்பன போன்ற ஞானவாக்கியங்கள் ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகளின் சுத்த வாக்கியங்களாகும்.

# திருவருட்பாவில் முருகன்

முனைவர் க. இலட்சுமிதேவி
உதவிப்பேராசிரியர்
ஸ்ரீமத்.சி.பா.சு.த.க.அ.கல்லூரி,
மயிலம்.

மனிதனாயப் பிறந்து வாழ்கின்ற நாளில் வாழ்க்கையில் குறிக்கோள் இல்லாது இறந்து மடியும் மக்களுக்கு மத்தியில் என்னை ஒரு நோக்கத்தோடு இறைவன் வருவிக்க உற்றான் என்று கூறுபவர் வடலூர் இராமலிங்க சுவாமிகள். அகத்தே கறுத்து புறத்தே வெளுத்திருக்கின்ற உலக மக்கள் அனைவரையும் திருத்தி, சன்மார்க்க நெறியில் நிறுத்தி அருளியல் வாழ்வை அவர்களையும் வாழத் தூண்டுமாறு இறைவன் தன்னைப் பணித்ததாகவும் கூறுகிறார். இப்பணியை ஆற்றுவதற்கு இறைவனது அருளைத் தாம் பெற்றதாகவும் கூறுகிறார்.

அருட்பெருஞ்சோதி ஆண்டவரையே தெய்வமாக அறிவித்து அவ்வாண்டவருக்கு மகாமந்திரத்தை உருவாக்கிய இராமலிங்கர் தொடக்கத்தில் கந்தகோட்டத்து முருகனையும், திருத்தணிகை முருகனையும் வழிபட்டு பின் திருவொற்றியூர்த் தியாகேசப் பெருமானையும், வடிவுடைமாணிக்க அம்மையையும் வழிபட்டுவந்தார். பின் திருமாலையும், கணபதியையும் வணங்கி வந்துள்ளார். கருங்குழியில் தங்கியிருந்த காலத்தில் சிதம்பரம் நடராஜப் பெருமானையே பெரிதும் வழிபட்டார். ‘ஒளிவழிபாட்டிற்கு முன் வள்ளலார் கடந்து வந்த பாதையில் இவ்வளவு வழிபாடுகள் நிகழ்ந்துள்ளன.’ என்பது சான்றோர் கருத்து. ஆதியில் மனிதன் இயற்கையை வழிபட்டான். சூரியன், மழை, ஆகாயம், விலங்கு, மரம், நெருப்பு என்பனவெல்லாம் வழிபடு பொருளாக அமைந்திருந்தன. இவையெல்லாம் தனக்கு நல்லவை செய்த போது நன்றி சொல்லும் விதமாகவும் தீயன செய்த போது அச்சத்தின் விளைவாகவும் வழிபாடுகள் அமைந்தன. இவ்விரு வழிபாடுகளையும் விட உயர்ந்த வழிபாடு ஒன்று தோன்றியது. நன்றிமறவா நற்பண்புடைய பெருமக்களே இவ்வழிபாட்டைத் தொடங்கினர். இறைவன் தமக்கு வழங்கிய நலன்களுக்கு உருகியுருகி நன்றி பாராட்டினர். இந்நன்றியுணர்ச்சியை அப்படியே வளர்த்தெடுத்து தமக்காக அல்லாமல் உலக மக்களின் நலன் கருதி இறைவனிடம் முறையிடுவதாகவும் அவர்களது வழிபாடு மாறியது இராமலிங்கர் வழிபாடு மூன்றாவது நிலையில் அமைகிறது.

இவர் பிறரைப்போல் முருகப்பெருமானை உருவச் சிலையாகவோ, சித்திரமாகவோ கண்ணெதிரே வைத்து, அதனை நெஞ்சிலேயும் நினைத்து வழிபடவில்லை. கண்ணெதிரே வெறுங் கண்ணாடியை நிறுத்தித் தம் அகத்திலே கந்தப்பெருமானை உருவகப்படுத்தி அவரது திருக்கோலத்தைக் கண்ணாடியில் கண்டார்.

இது புது விதத்திலான வழிபாடு, புறத்தே கந்தப்பெருமானின் உருவத்தை வைத்து, அதனையே அகத்திலேயும் நிறுத்த முயல்பவர் பக்தர். இராமலிங்கரோ, முதலில் அகத்தில் கந்தப் பெருமானை உருவகப்படுத்தி அந்த வடிவத்தையே புறத்திலேயும் காணமுயன்றார். அதில் வெற்றியும் பெற்றார். கண்ணாடியை எதிரில் நிறுத்திப் பார்த்தால், பார்ப்பவரின் வடிவம் தெரியும். வள்ளலார் தம்மை மறந்து பார்த்ததால், அகத்தே உருவகப படுத்தப்பட்ட கந்தப்பெருமான் புறத்தே கண்ணாடியில் காட்சி தந்தார். அக்காட்சியைக் கண்டவுடன் உள்ளம் உருகி உணர்ச்சி பொங்கப் பாடிய பாடல் ஒன்று.

*சீர்கொண்ட தெய்வ வதனங்கள் ஆறும் திகழ்கடம்பந்*
*தார்கொண்ட பன்னிரு தோள்களும் தாமரைத் தாள்களும் ஓர்*
*கூர்கொண்ட வேலும் மயிலும்நற் கோழிக் கொடியும் அருள்*
*கார்கொண்ட வண்மைத் தணிகாசல மும்எண் கண்ணுற்றதே!* (திரு.47)

தமிழகத்தோடு இணைக்கப்பட்ட திருத்தணிகையைப் புண்ணியப் பதியாகக் கருதினார் இராமலிங்கர். கண்ணாடியில் கந்தப்பெருமானோடு தணிகை மலையையும் கண்டதால்

*அருட்கார்கொண்டவண்மைத் தணிகாசலமும் எண் கண்ணுற்றதே*

என்று பாடினார். உலகியல் கல்வியில் விருப்பம் இல்லாத வள்ளலாருக்குச் சபாபதிப்பிள்ளை ஆசிரியர் ஒருவரை ஏற்பாடு செய்ய அது கண்டு வருந்தியவராய், இறைவனையே தந்தையாகவும் தாயாகவும் பாடுகிறார். இதனைக் கீழ்வரும் பாடல்களால் அறியலாம்.

*கல்லாநாயேன் எனினுமெனைக்*
*காக்குந் தாய்நீ*
*பாரும் விசும்பு அறியவெனைப்*
*பயந்ததாயும் தந்தையும் நீ* (திரு. 52)

இறைவனின் திருமேனியழகைக் கூறவருமிடத்தில், வேல்கொண்ட கையும் விறல்கொண்ட தோளும் விளங்கு மயில் மேல்கொண்ட வீறும் மலர் முகமாறும் விளங்கு மயில் கால்கொண்ட வீரக்கழலும். என்றும்,

வேல்கொளும் கமலக் கையனை எனையாள்
மெய்யனை ஐயனை உலக
மால் கொளும் மனத்தர் அறிவரும் மருந்தை
மாணிக்க மணியினை மயில்மேல்
கால் கொளும் குகனை எத்தையை எனது
கருத்தனை அயரை அறியாச்
சால்கொளும் கடவுள் தனிஅருள் மகனைத்
தணிகையில் கண்டு இறைஞ்சுவனே (திரு.410)

என்றும் பல நிலைகளில் இறைவனின் திருமேனியழகை வியந்து பாடுகிறார். இயற்கை மீண்டும், மாறா இளமையையும் கடவுள் தன்மையும், அழியா அழகும் அறிவிற் சிறந்த எச்சமயத்தவருங் கொள்ளும் ஆண்டவனுக்குரிய இயல்புகளை இராமலிங்கர் பாதாதி கேசமாகப் பாடிப் பாடிக் களிப்படைகிறார்.

முருகப்பெருமானின் திருவடிகளைச் சிந்தித்திருப்பதைத் தவிர சிறப்புக்குரிய செயல் வேறு ஒன்றுமில்லை என்பதைச் 'சிந்தை செய்வது உனது திருவடிக்காம் திறனே' (திரு.209) என்று தெளிவாகச் சுட்டுகிறார். முருகனுக்குரிய பல திருநாமங்களில் ஒன்றை உறுதியாகப் பற்றி ஓயாமல் ஓதுவது துன்பத்திலிருந்து விடுபட உதவும் என்பதை 'உனது திருநாமம் ஒன்றைப் பற்றி நிதம் வழுத்திச் செய்வது' (திரு.209) என்று கூறுகிறார்.

இவ்வாறு இறைவனின் திருவடியைச் சிந்தித்தும், ஓதியும் நல்வாழ்வு பெற்றவர்களையும் இராமலிங்கர்தம் பாடல்களில் பதிவு செய்துள்ளார். சான்றாக ஒருவரை மட்டும் இக்கட்டுரை சுட்டுகிறது.

கடவுளரில் சிவனையும், மனிதர்களில் பாண்டியனையும் தவிர வேறு ஒருவரையும் பாடுவதில்லை என்ற நோக்கத்தோடு வாழ்ந்த நக்கீரரைத் தம்மையும் பாடச் செய்யவேண்டும் என்று கருதியவராய் முருகப்பெருமான், உக்கிரன் அண்டாபரணன் என்பவனை அழைத்துச் சரவணப் பொய்கையில் வரும் நக்கீரரை ஒரு குற்றம் கற்பித்து அம்மலையில் சிறைப்படுத்துக என்று அருளினான். நக்கீரர் அப்பொய்கையிடத்து வந்து சிவவழிபாடு செய்யும் பொழுது அண்டாபரணன் அருகிருந்த அரச இலை ஒன்றைக் கிள்ளியிட அதன் ஒரு பகுதி நீரிலும், மற்றொரு பகுதி நிலத்திலும் வீழ்ந்தது அவ்விரு பகுதியும் அவ்வவ்விடச் சிறப்பால் முறையே மீனும் பறவையுமாகி ஒன்றை யொன்று ஈர்த்தன. அது கண்ட நக்கீரர் இரக்கத்தால் இரண்டையும் பிரிக்க அவை ஆண்டு இறந்தன. சிறப்பினையுடைய திருப்பரங்குன்றத்தில் நிகழ்த்திய கொலைத் தீங்கிற்காக அண்டாபரணன் அம்மலை முழைஞ்சினுள் அவரை ஈர்த்து அடைத்திட்டனன். அதுகாலை திருமுருகாற்றுப்படை பாடி முருகனை இறைஞ்ச அவன் அவரைச் சிறையிலிருந்து விடுதலை செய்தான் என்பார்' இராமலிங்கர் இச்செய்தியை,

*பண்டுறுசங் கப்புலவர் கடுஞ்சிறையைத்*
*தவிர்த்தருளும் பகவனே.*

என்று குறிப்பிடுகின்றார். முருகப் பெருமானுடைய ஆற்றல், பெருமை, அருள் ஆகியவற்றை வெளிப்படுத்தும் வகையில் இராமலிங்க சுவாமிகள் புராணச் செய்திகள் பலவற்றைத் தம் பாடல்களில் குறிப்பிட்டிருக்கிறார். சான்றாக, வேதம் ஓதுவதையே தொழிலாகக் கொண்டபிரமன் வேத மந்திரங்களின் முன்னர் ஓதப்படும் ஓங்காரத்தின் பொருள் அறியாமல் இருந்ததோடு முருகனையும் அவமதித்தான். அதனால் முருகப்பெருமான் அவனைச் சிறையிலிட்டான். பின்பு காத்தற் தொழில் உடைமையால் அருள் செய்து சிறையிலிருந்து விடுவித்து அருளினான். முக்கண் பெருமானாகிய தன் தந்தை

சிவபெருமானுக்குப் பிரணவத்தின் பொருளைப் பரம குருவாக இருந்து முருகர் உபதேசித்தார் என்பன போன்ற பல புராணச் செய்திகளைத் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளார்.

இராமலிங்க சுவாமிகள் இளமைக் காலத்தில் முருகப் பெருமான், அவருக்குக் கல்வி கற்பித்ததாகவும், அவனிடத்தில் தம் பால் அன்பும், உறவும் உண்டாகச் செய்ததாகவும் இவ்வுலகம் கானல் நீர் போன்று நிலையில்லாதது என்றும் அவரது உள்ளத்தில் நின்று அறிவித்ததாகவும், தன்னருளைத் தடையில்லாது என்றும் வழங்கியதாகவும், பிறரிடம் சென்று எதையும் இரந்துகேட்டுப் பெறாத வண்ணம் முருகப் பெருமானே அனைத்தையும் வழங்கித் தனக்கு உயர்வை நல்கியதாகவும், செல்வ அருட்குருவாகித் தன்னை ஆட்கொண்ட தேவதேவனாக முருகப்பெருமான் விளங்குவதாகவும் தெரிவிக்கிறார்.

*கல்வியெலாங் கற்பித்தாய் நின்பால் னேயம்*
*பாணவைத்தாய் இவ்வுலகங் கானலென்றே*
*ஒல்லும்வகை யறிவித்தாய் உள்ளேநின்றென்*
*னுடையானேநின்னருளும் உதவுகின்றாய்*
*இல்லையெனப் பிறர்பாற்சென் றிரவாவண்ணம்*
*ஏற்றமளித் தாய்இரக்கம் என்னேயென்னே*

*செல்வரும் குருவாகி நாயினேனைச் சிறுகாலை யாட்கொண்ட* தேவதேவ என்றபாடல் இதனை மெய்ப்பிக்கும்.

**நிறைவாக**

இராமலிங்க சுவாமிகளின் திருப்பாடல்களைக் காணும்போது, இறைவனுடைய திருவருள் நலத்தைப் பெறும் நோக்கம் முதன்மை பெற்றுத் திகழ்கிறது. எனவே, இறைவனின் திருவடிப்பேறு ஒன்றே கருதி வழிபட்டார் என்று கூறலாம். கற்றதனால் ஆய பயன் இறைவன் நற்றாளைத் தொழுவது. தாளை வணங்குவதே தலையின் பணி எனவும் கூறுவதற்கு இணங்க இராமலிங்கர் முருகப்பெருமானின் திருவடிகளையே அனுதினம் மனதில் நினைந்து வழிபட்டு வந்துள்ளார். அவரது பாடல்களில் முதல் ஐந்து திருமுறைகளில் பெரும்பகுதி முருகப்பெருமானின் வணக்கமாக அமைந்துள்ளது. அவ்வணக்கத்தில் முருகனின் திருவடிவழகும், முருகன் முன்னோருக்கு அருள் வழங்கிய விதமும், புராணச் செய்திகளும், முருகன் தனக்கு குருவாக வந்தது, முழுமுதற் கடவுளாக முருகனை நினைத்தது, முருகனும் சிவனும் ஒன்றேஎனல், இறுதியில் அவ்விறைவனுக்கு திருப்பள்ளியெழுச்சி பாடுவது எனப் பல நிலைகளில் பாடல்கள் பாடிதாம் முருகர் தொண்டர் உறவோங்கும் நின்பதம் என்னுளமோங்கி வளமோங்க உய்கின்ற நாள் எந்தநாள்? என்று ஏங்கும் அடியாராகவே இருந்தார். ஆகவே அவரது மார்க்கம் தாசமார்க்கத்தில் தொடங்கிப் படிப்படியாக வளர்ந்து இறுதியில் சன்மார்க்கத்தை அடைந்தது எனலாம்.

# திருமுருகாற்றுப் படையில் முருகன்

பேரா. இரா. உமாராணி
உதவிப் பேராசிரியர்
ஜெயா கலை மற்றும் அறிவியல் கல்லூரி
திருநின்றவூர்.

தமிழர்கள் வணங்கிய தெய்வங்களில் மிகவும் பழமையானவர் முருகனே ஆவார். தமிழ் இலக்கியங்களில் முதன்மையானதும் 'திரு' என்ற சிறப்பைப் பெற்றதுமாகிய நூல் 'திருமுருகாற்றுப்படை' என்று நக்கீரர் கூறுகிறார். எக்காலத்தும், எவ்விடத்தும், அனைத்துயிர்க்கும் உயிராய் விளங்குவோனாகிய முருகனின் ஆன்மீக வாழ்வினைப் பற்றி இக்கட்டுரையில் காணலாம்.

**ஆற்றுப்படை**

ஆற்றுப்படை இலக்கணத்தைத் தொல்காப்பிய பாடாண் திணையில் "தாவில் நல்லிசை" எனத் தொடங்கும் நூற்பாவில்,

*"கூத்தரும், பாணரும், பொருநரும், விறலியும்*
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
*சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்"* (தொல்1036)

என்ற அடிகளால் அறிய முடிகிறது.

**திருமுருகாற்றுப்படை**

திருமுருகாற்றுப்படை 'புலவராற்றுப்படை' (அ) 'முருகு' எனவும் அழைக்கப்படுகிறது. இந்நூல் நேரிசை ஆசிரியப்பாவால் ஆனது. இது 317 அடிகளைக் கொண்டது. திருமுருகாற்றுப்படை என்பது "வீடு பெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடு பெற்றான் ஒருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்துவதாகும்." இதனை "முருகாற்றுப்படுத்த உருகெழு நடுநாள்" என்று அகநானூறு (22) கூறுகிறது.

**திருமுருகாற்றுப்படை பற்றிய புராணக்கதை**

'கற்முகி' என்னும் புடைத்துண்ணும் பூதம் 1000 பேரை சிறையில் அடைத்தது. அப்பொழுது நக்கீரர் "திருமுருகாற்றுப்படை" பாடி சிறையில் இருந்து வெளியில் வந்தார் என்ற கருத்தும் நிலவுகிறது.

**திருமுருகாற்றுப்படையின் உள்ளடக்கம்**

திருமுருகாற்றுப்படை முருகன் இருக்கும் இடங்களையும், வழிபடும் முறைகளையும் விளக்குகிறது. "திருமுருகாற்றுப்படையில் தொடக்கத்திலுள்ள 2 வரிகளும், கடைசியில் உள்ள 2 வரிகளும் புகழ் பெற்றவை.

*"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு*
*பலர் புகழ் ஞாயிறு கடல் கண்டாங்கு*
*ஓஅற இமைக்கும் சேண் விளங்கும் அவிரொளி"*

என்பது தொடக்கம் ஆகும்.

*"இழுமென இழிதரும் அருவிப்*
*பழமுதிர் சோலை மலைகிழவோனே"*

என்பது நிறைவுப் பகுதி ஆகும்.

**முருகப் பெருமான் உறையும் திருத்தலங்களின் சிறப்பு**

**1. (திருப்பரங்குன்றம்) முருகனின் தோற்றமும், பெருமையும் (1-7)**

முருகன் வீரம் மிக்க கடவுளாகவும், போர்க்கடவுளாகவும் சங்க நூல்களிலே இடம் பெறுகிறார். "வெல்போர்ச் சேஎய், வெல்போர்க் கொற்றவை சிறுவர், "கடம்பர் நெடுவேள்" திருத்தகு சேஎய்", செருவெம் சேஎய் என்றும் முருகன் புகழப்படுகின்றார். மன்னருடைய வீரத்திற்கும், சீற்றத்திற்கும், முருகனின் வீரமும், சீற்றமும் உவமையாக்கப்படுகிறது. சூரபதுமன் அழிவு, சூரரமகளிர் செயல்கள், இயற்கை வளம், அணியும் மாலைகள் இடம்பெறுகின்றன.

**2. திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்) (78-125)**

முருகனின் 6 திருமுகங்களின் செயல்கள், திருக்கை செயல்கள், முருகன் ஊர்ந்து செல்லும் யானையின் இயல்பு கூறப்படுகிறது.

*"விண் செல்ல மரபின் ஐயர்க்கு ஏந்தியது*
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
*ஆங்கு அப் பன்னிரு கையும் பாற்பட இயற்றி"*
(திருமுருகு.107-118)

இப்பாடலின் முருகனின் சிறப்பு இடம் பெறுகிறது.

**3. திருஆவினன்குடி (பழநி) 126-176**

தேவ மகளிர் இயல்புகள், திருமால் முதலிய தேவர்கள் பற்றிய குறிப்புகள் இடம் பெறுகின்றன.

*"என்பு எழுந்து இயங்கும் யாக்கையர், நன்பகல்*
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
*கற்றோர் அறியா அறிவனர்"* (திருமுருகு. 130-133)

விருப்பு, வெறுப்பு அற்ற துன்பத்தை அறியாத ஞானத்தை உடையவர்கள் முனிவர்கள் என்று சிறப்பாகக் கூறப்படுகிறது.

**4. திருவேரகம் (திருப்பதி) சுவாமிமலை 177-189**

திருவேரகத்திலுள்ள முருகனின் சிறப்பு இடம் பெறுகிறது. திருமுருகாற்றுப்படையின் சிறப்புக்கருதி சைவத் திருமுறைகளுள் 11 ஆம் திருமுறை கூறப்படுகிறது. இதனால் சைவர்கள் திருமுருகாற்றுப்படையை நாளும் ஓதும் மந்திர நூலாகப் போற்றுகின்றனர். நக்கீரர்,

*"தாமுரைத்த நன் முருகாற்றுப் படையைத்*
*துான் நினைத்தது எல்லாம் தரும்"*
என்ற பாடல் மூலம் குறிப்பிடுகிறார்.

**5. குன்று தோறாடல் (திருத்தணி) 190-217**

ஆடுமகளிர், பாடு மகளிர் இயல்புகள் முருகனுடைய ஆடை, அணிகலன், குன்றக்குரவை நிகழ்ச்சி இடம் பெறுகிறது.

*"உலறிய கதுப்பின், பிறழ்பல் பேழ்வாய்*
*. . . . . . . . . . . . . . . . . . . .*
*நிணம்தின் வாயள் துணங்கை தூங்க"*
அச்சம் தரும் தோற்றத்தையுடைய பேய் மகளிர், முருகனை வழிபடும் முறை இடம் பெறுகிறது.

**குன்று தோறாடல் (குரவைக் கூத்து)**

*"பைங்கொடி, நறைக்காய் இடை இடுபு, வேலன்,*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . .*
*குன்றுதொறு ஆடலும்நின்ற தன்பண்பே, அதாஅன்று"*
(திருமுருகு. 190-217)
இதில் முருக வழிபாடு இடம் பெறுகிறது. முருக வழிபாட்டால் மலைவாழ் மக்கள் பசியும், பிணியும் இன்றி வாழ்வர் என்றும் கூறப்படுகிறது.

**6. பழமுதிர்ச் சோலை (218-317)**

சங்க கால முருகனோடு தொடர்புடையதாக முருகனுக்குரிய வேலைக் கையில் ஏந்தி ஆடுபவன் வேலன் எனப்பட்டான்.

**வெறியாடல் திருவிழா**

சிறிய திணையினை மலரோடு விரவிச் சிதறுவதும், ஆட்டுக்கிடாயினை அறுப்பதும் திருமுருகாற்றுப்படையில் கூறப்பட்டுள்ளது.

*"மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி"* (திருமுருகு.290)
வீற்றிருக்கும் முருகப் பெருமானை வழிபட்டால் அடையும் நன்மையினை

*"ஒருநீயாகித் தோன்ற விழுமிய*
*பெறலரும் பரிசில் நல்குமதி"* (திருமுருகு. 294-295)
என்று நக்கீரர் கூறுகிறார்.

**முடிவுரை**

இக்கட்டுரையின் மூலம் முருகப் பெருமானின் சிறப்புகளை அறியலாம். தமிழர்கள் திருவிழா பலியிடுதல், உருவ வழிபாடு போன்றவற்றை செய்தனர் என்பதையும் அறியலாம். திருமுருகாற்றுப்படை பக்திச்சுவை மிகுந்த காவியமாக நமக்குக் கிடைத்துள்ளது. பழந்தமிழருடைய பண்பாடு, நாகரித்தைப் பற்றி அறியும் நூலாகவும் திருமுருகாற்றுப்படை விளங்குகிறது. திருமுருகாற்றுப்படை வறிய நிலையை வெளிப்படுத்தாமல் வீடுபேறு அடையத் துடிக்கும் ஆன்ம வேட்கையையும் வெளிப்படுத்துகிறது.

# திருப்புகழில் பண்பாடும் தாளங்கள்

முனைவர் **ரெ. எழில்ராமன்**
உதவிப்பேராசிரியர்(தவில்)
இசைத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

பண்கள் இல்லையேல் பக்தி இலக்கியங்களுக்கு நுண்கலை தன்மை சார்ந்த அணிகள் வலுவிழந்து போகும் என்னும் நிலையில் தமிழிசையில் சந்தப் பாடலமைப்பைச் சுவைபட இசைக்கும் புதுமையை உணர்த்திக்காட்டிய பெருமை அருணகிரிநாதரையே சேரும். தேவாரப் பாடல்கள் சிலவற்றில் சந்தங்களின் சாயல் தோன்றுகிறது. அவை, அருணகிரிநாதருக்குச் சந்தப் பாடல்களைச் சிறப்பாக அமைக்கும் உணர்வைத் தூண்டியிருக்க வேண்டும். இசையுணர்வு, தாளக்கட்டுப்பாடு, விறுவிறுப்பான ஒலியுணர்வு, உறுதியான தமிழறிவு, துணிவான நடைப்போக்கு ஆகியன கொண்டு அவர் சந்தப் பாடல்களைப் பாடியுள்ளார். மேலும் தாளங்களை ஒட்டி, தாள இசைக்கருவிகள் எவ்வாறு இசைக்குமோ அதைக் கருத்தில்கொண்டு, ஒலிச்சொற்களையே அருணகிரிநாதர் பாடலாக்கித் தருகின்றார். இவர் சந்தங்களின் அமைப்பில் புதுமையான தாளங்களைப் படைக்கின்றார். இதனைப் பண்பாடும் திருப்புகழ் வழி நின்று சித்தரிப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**திருப்புகழில் பண்கள்**

இவர் தனது 'பூதவேதாள வகுப்பில்' (பாடுதுறை) என்ற இரண்டு கூறாகப் பகுக்கின்றார். மேலும் 'குறிஞ்சிப்பண், இந்தளம், சிகண்டி, சீகாமரம், மாளவிபஞ்சிகை (விபஞ்சி), கவுட (கௌடி), லளிதை (லலிதா), கைசிகை (கௌசிகம்), கவுளி (கௌளை), சாதார், பவுளி (பௌளி), வராடி, தேசி (தேசாளி)'' ஆகிய பதின்மூன்று தமிழ்ப் பண்களையும், 'பயிரவி (பைரவி), வராளி, மலகரி, படமஞ்சரி, தனாசி (தன்னியாசி), பஞ்சமி (பஞ்சமம்)' ஆகிய ஆறு இராகங்களையும் குறிப்பிடுகின்றார். 'வீணை, விபஞ்சி, யாழ்' ஆகிய தந்திக் கருவிகளையும், 'குழல், சங்கு, காளம், தாரை' ஆகிய காற்றுக் கருவிகளையும், 'பேரிகை, முரசு, பதலை, திமிலை, துடி, தம்பட்டம், தபு (தப்பு), தடாரி (தவில்), குடபஞ்சமுகி (குடமுழவு), படகம், தவண்டை, உடுக்கை, இடக்கை, கரடிகை, சந்திரவளையம், கனப்பறை, மத்தளி (மத்தளம்), தபலை (தபேலா), தசலிகை (தக்கை), துந்துமி ஆகிய தோற்கருவிகளையும், 'தாளம், கஞ்சதாளம், கிண்ணத்தாளம், கைத்தாளம்' ஆகிய தாளக் கருவிகளைப் பற்றியும் குறிப்பிடுகின்றார்.

இவர் 'சச்சபுடம், சாசபுடம், சட்பிதாபுத்திரிகம், கண்டச் சம்பதி (சம்பொற் கட்டம்) உற்கட்டிதம்' ஆகிய நைந்து தாளங்களைப் 'பஞ்சகத்தாளம்' என்று வகைப்படுத்துகின்றார். மேலம் நூற்றெட்டுத் தாளத்தில் இடம்பெறும் 'தர்ப்பணம், சச்சரி, கங்காளம், அபங்கம், சேகரமிகுந்த சைவம் (லகுசேகரம்), கருணையதி, கந்துகம், கோகுலப்பிரியம்', ஆகிய எட்டு தாளங்களையும், 'உற்சவம்' என்ற அன்னிய தாளத்தையும் இவர் தனது பூதவேதாள வகுப்பில்

குறிப்பிடுகின்றார். இவரது "யொற்றிறுப்பன" என்னும் பாடல் வரியின் குறிப்பிலிருந்து இவர் தாளங்களைப் போடும் (கிரியை செய்யும்) முறைகளையும் நன்கு அறிந்தவராக இருந்திருக்கு வேண்டும் என்று கருதத் தோன்றுகின்றது.

**திருப்புகழ் பாடல்களில் அமைக்கப்பெற்றுள்ள தாளங்கள்**

'சந்தப் பாவலர் பெருமான்' என்று போற்றப்படும் அருணகிரிநாதர் கி.பி.15 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் இயற்றிதாகக் கருதப்படும் 16,000 திருப்புகழ் பாடல்களில், தற்பொழுது கிடைத்துள்ள 1,324 பாடல்கள் தல அடிப்படையில் தொகுக்கப்பட்டு பதிப்புக்களில் வெளிவந்துள்ளன. இவரது திருப்புகழ் பாடல்களின் சிறப்பால் இவர் 'தாளச்செல்வர், இசைஞானி, முத்தமிழ் அரசர் என்றெல்லாம் பாராட்டப் பெற்றுள்ளார். 'சந்தம் என்னும் தமிழ்ச் சொல்லுக்கு 'அழகு' என்றும், 'கவியின் வண்ணம்' என்றும் அகராதியில் பொருள் குறிக்கப்பெற்றுள்ளது. இத்தகைய சந்தம் 'ச்சந்தஸ்' என்னும் வடமொழிச் சொல்லின் திரிபாகவும் கூறப்படுகின்றது. வேதங்கள் நான்கிலும் முதலாக உள்ள 'ரிக்' வேதத்தில் ஒவ்வொரு மந்திரத்திற்கும் ஒருவகைச் சந்தம் உண்டு. இந்தச் சந்தம் ஏற்பட்ட வரலாற்றைக் குறிப்பிட்டு வேதகாலத்திலேயே ஓர் கதை காணப்படுகின்றது.

தேவர்களும் அசுரர்களும் ஒருசமயம் யுத்தம் செய்தபோது தேவர்கள் மந்திரங்களைத் தங்கள் ஆயுதங்களாகப் பிரயோகித்தார்கள். அசுரர்கள் அவற்றை மாறுபாடு அடையும்படிச் செய்துவிட்டார்கள். அவைகள் அவ்வாறு மாறாமல் இருப்பதற்காக, அவை ஒவ்வொன்றுக்கும் ஓர் கவசம் தயாரித்தார்கள் தேவர்கள். அந்தக் கசவங்களுக்கு 'ச்சந்தஸ்' என்று பெயரிட்டார்கள். ஏனெனில் 'சாதனம்' என்றால் 'மறைத்துக் காப்பாற்றல்' அல்லது அதற்கு உபயோகிக்கப்படும் கருவி என்று பொருள். அதனடியாகப் பிறந்த 'சந்தஸ்' என்னும் சொல் மந்திரங்களின் குறில், நெடில், அளபெடை முதலிய மாத்திரைகளைக் கட்டுப்படுத்தி, அசை மாறுபாடடைந்து கெட்டுப் போகாமல் காப்பாற்றுவதையே முக்கியமாகக் கொண்டது. வேதத்தில் தேவர்கள் என்றால் பண்பட்ட மனத்தின் போக்கு என்றும், அசுரர்கள் என்றால் நினைத்தபடி போகும் மனப்போக்கு என்றும் உரையாசிரியர்கள் உரைவரைந்திருக்கின்றார்கள். எனவே பாட்டுக்களில் உள்ள 'எழுத்துக்கள், இசைகள்' இவைகளில் நீட்டல், குறுக்கல் முதலியவை கெடாமல் பாதுகாப்பதற்குத் தாளம் போன்று இத்தகைய சந்தங்களை அமைத்திருக்கின்றார்கள். சந்தங்களையே தன்னகத்துக் கொண்டு இலங்குவது 'சந்தப்பா' எனப்படும். இசைத்தமிழ் இலக்கியத்தில் சந்தப்பாவிற்கு ஆதிகுருவாக விளங்கியவர் திருஞானசம்பந்தப் பெருமான் ஆவர். அவர் வழியில் அருணகிரிநாதரும், சந்தங்களின் வடிவில் தமது திருப்புகழ் பாடல்களைப் பாடியுள்ளார்.

**திருப்புகழில் சந்தங்கள்**

ராவ்பகதூர் வ.சு. செங்கல்ராயப் பிள்ளை அருணகிரிநாதரின் 'திருப்புகழ்' முழு நூலுக்கும் உரை எழுதியுள்ளார். இவர் திருப்புகழின் 1307 பாடல்களை ஆய்வு செய்து அதில் 1008 சந்தங்கள் உள்ளனவென்றும் குறிப்பிட்டுள்ளார். இதில் மூன்று எழுத்துக்களைக் (அட்சரம்) கொண்டவை. 'தனன, தன்ன, தான, தத்த, தாத்த, தந்த, தாந்த, தய்ய'என்ற எட்டு

சந்தங்களாகும். நான்கு எழுத்துக்களைக் (அட்சரம்) கொண்டவை 'தனதன, தனனா, தானன, தன்னா, தானா, தத்தா, தனத்த, தந்தா, தனந்த, தய்யா' என்னும் பத்து சந்தங்களாகும். ஐந்து எழுத்துக்களைக் (அட்சரம்) கொண்டவை தனதனன, தனதனா, தனாதன, தானதன, தனத்தா, தனதய்யா என்னும் ஆறு சந்தங்களாகும். இந்த 24 அடிப்படைச் சந்தங்களைக் கொண்டே திருப்புகழில஌்ள எல்லா சந்தக்குழிப்புக்களும் அமைக்கப் பெற்றுள்ளன. அருணகிரிநாதர் சந்தம் பாடுவதில் வல்லவர். இவர் தனது திருப்புகழில்

*"முத்தைத்தரு பத்தித்திருநகை*
*அத்திக்கிறை சக்திச்சரவண*
*முத்திக்கொரு வித்துக்குருபர – என வோதும்*

குலை, தொங்கல், துள்ளல் மூன்றையும் அமைத்துச் சந்தம் வைத்துப் பாட்டில் சந்தவோசை அமையும் விதமாய் பாடியுள்ளார்.

யாப்பு தொடர்பான இலக்கணத்தில் ஓசையைத் தேமா, புளிமா, தேமாங்காய், புளிமாங்காய், தேமாங்கனி, புளிமாங்கனி முதலிய வாய்ப்பாடுகளால் அளந்தனர். இவ்வாய்ப்பாட்டைக் கொண்டு சந்தப்பாடல், வண்ணப்பாடல் முதலானவற்றை அளக்க முடியாது. மேலும் சிலவகைச் சந்தப் பாடல்களை மாத்திரை முறையால் அளந்தனர். சந்தம் பாட்டிற்குத் தனியழகு தருவதால் சந்தம் என்ற சொல்லிற்கு அழகு என்ற பொருளைப் பொருத்தினர். எனவே தான் தி.செல்வக்கேசவராயர் 'சந்தமில்லாக் கவிக்கு அந்தமில்லை' என்றார். இங்ஙனம் ஓசையை இனிமையபட உரைப்பதும், வடிவத்தால் பாட்டை அழகு செய்வதும், ஓசை வேற்றுமையை அளவிட்டு வரையறுப்பதும் ஆகிய ஓசையுடைமை, அழகுடையமை அளவுடைமை, என்னும் பண்புகளைச் சந்தம் காட்டுகிறது என்பதை கூறமுடிகிறது.

முடிவுரை

சந்தத்தை ஆயும் வகையில் பல்வேறு முடிவுகள் கிடைக்கப்பெற்றன. சந்தம் என்பது வண்ணம் எனப்படும். இதனைச் சூடாமணி நிகண்டு, சேந்தன் திவாகர நிகண்டு, அகராதி போன்றவை குறிப்பிடுகின்றன. 'ஓசை நலம் வழங்கும் சந்தம் ஒசைகளின் சந்திப்பு ஒலிகள், ஆடுகின்ற அரங்கம்' எனப் பொருள்படுகிறது. சந்தம் என்னும் சொல் சந்து அம் என்னும் வேர்ச்சொல்லிருந்து பிறந்த தமிழ்ச் சொல்லாகும். தண்டபாணி சுவாமிகள், சந்தம் அமைப்பதற்கு அடிப்படையானவைகளாகத் துள்ளல், குழிப்பு, தொங்கல், கலை எனப் பல பொருள் தருகின்றார். வண்ணமும் சந்தமும் சொற்கால் வேறுபட்டாலும் செய்யுளுக்கு இனிமையான ஓசையைத் தரக்கூடியவைகளாகக் கருதப்படுகிறது. மேலும் ஒரு செய்யுளோ, திரையிசைப் பாடல்களோ சந்தமின்றி இனிமை பெறாது. இதனை நினைவுப்படுத்துமிடத்து 'சந்தமில்லாக் கவிக்கு அந்தமில்லை' என்பது தெளிவாகிது. இத்தகையத் தெளிவுக்கு சந்தப் பாவலரின் தாளங்களின் இலக்கணப் புலமையே சான்றாகத் திகழ்கிறது.

# அணங்கு வெறியாடலில் இராசலீலை கோட்பாடு - ஓர் சிறப்பு நோக்கு

**முனைவர் கி. கந்தன்,**
இணைப்பேராசிரியர், சிற்பத்துறை.
தமிழ்ப்பல்கலைக்கழகம்,, தஞ்சை

இந்து மதம் என்பது அடிப்படையில் லௌகிகமதம் என்னும் உலக நடைமுறைக்கு ஏற்ற வகையில் தொன்மம் மற்றும் தத்துவங்களைத் தெளிவுபடுத்தும் தன்மை பெற்றது. இந்து மதத்தில் பக்தி என்பது ஈடுபாடு அல்லது அர்ப்பணிப்பு என்ற நிலையில் அமைகிறது. பக்தி என்ற சொல்லை விளக்கிடும் Monier Williams என்பவர் Attachment devotion to fondness for homage faith or love, worship (Sanskrit Dictionary) என்ற பல்வேறு வகையில் விளக்குகிறார்.[1] பக்தி என்பது மனிதன் இறைவனுடன் கொண்டிருக்கும் மகிழ்ச்சி மற்றும் நம்பிக்கை மற்றும் அர்பணிப்பாகவே அமைகிறது. இதனை வைணவத்தில் ஆழ்வார்கள் "பிரபத்தி" என்ற சொல்லால் விளக்குகின்றனர் இவ்வடமொழிச் சொல் ஆங்கிலத்தில் "Total surrender" என்றும் தமிழில் முழுமையாக "ஒப்பளித்தல்" என்றும் பொருள் கொள்ளப்படுகிறது. இத்தகைய இறைவனுக்கும், பக்தனுக்கும் இடையே உள்ள இத்தகைய உறவு முறையினை வடமொழி இலக்கியங்களின் யோகம் என்ற நிலையில் வரையறுக்கிறது. பகவத்கீதை யோகத்தினைக் கருமயோகம், ஞானயோகம், பக்தியோகம் என்னும் மூன்று வகையில் விளக்குகிறது. சுவாமி விவேகானந்தர் பக்தியோகம் தொடர்பாக The bath systematized Devolution for the attainment of union with absolute என்று விளக்குகிறார்.[2] தத்துவ நிலையில் இறைவனுடன் இணைதல் அல்லது இறைவனுக்கு ஒப்பளித்தல் என்று பெருமைப்படுத்தப்படுகிறது.

பக்தி என்பது அழகியல் நோக்கில் விளக்கிடும் போது 5 வகை பாவங்களில் (Bhavas) ஒன்றாக வைக்கப்படுகிறது. இவை முறையே சாந்த, தாஸ்ய, சாக்ய, வாத்சல்ய, மதுர பாவங்கள் (Bhavas) போன்றவையாகும். இதில் "சாந்த" என்பது இறைவனின் மீது அமைதியான உறவினைக் கொள்ளுதல், "தாஸ்ய" என்பது பக்தன் இறைவனிடம் தன்னை அடிமையாக்கிக் கொள்ளும் உறவாகும், "சாக்ய" என்பது பக்தன் இறைவனுடன் தோழன் என்ற நிலையில் தன்னை ஒப்பளித்து உறவு கொள்ளுதல், "வாத்சல்ய" என்பது தாய்சேய் போன்று இறைவனுடன் உறவு கொள்ளுதல், "மதுர" என்பது ஒரு பெண் தனது காதலனுடன் கொண்ட உறவின் தன்மையினை ஒத்த உறவு போன்றது.

இவ்வுறவின் அடிப்படை கோட்பாட்டில் சிருங்காரத்தின் தன்மை இயைந்து காணப்படும். இத்தகைய மதுர சிருங்கரரசம் அல்லது பாவத்தினைப்

பெற்ற இறைவன் மற்றும் பக்தனுக்கு இடையேயான உறவு இந்து மதத்தின் தொன்மங்களில் காணக் கூடிய ஒன்றாகும்.

பொதுவாக கண்ணன் அல்லது கிருஷ்ணன் கோபியர்களுடன் பெற்றிருந்த பக்தி -உறவு என்பது "மதுர" என்ற தன்மையின் அடிப்படையாக அமைகிறது. இதனை ஒத்த தன்மையினை மீரா மற்றும் கண்ணனின் உறவிலும், "கைதளம் பற்ற கனாகண்டேன் தோழி" என்று உரைத்த ஆண்டாள் கண்ணன் மீது கொண்ட உறவிலும் அறியமுடிகிறது. இந்து மதத்தின் ஷண்மத பிரிவுகளில் வைணவத்தில் காணப்படும் மதுர பாவத்தினை உள்ளடக்கிய பக்தி இரசம் என்பது சைவம், சாக்தம், காணாபத்யம் போன்றவைகளில் இடம்பெறாமல் கௌமாரத்தில் காணக் கூடிய ஓர் வழிபாட்டு முறை அல்லது பக்தி முறை எனலாம். கௌமாரம் (கி.பி 8ம்) என்னும் பிரிவு தோற்றம் பெறுவதற்கு முன்னரே தமிழகத்தில் "முருகு" வழிபாடு என்னும் முருகன் வழிபாடு கி.மு3 மற்றும் கி.பி 3-ம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்தில் தமிழ்ச் சமுதாயத்தில் நிலவி வந்ததினைச் சார்ந்த வழிபாடாகும்.[3] தொல்காப்பியத்தில் முருகன் என்பவர் சேயோன் என்ற பெயரில் குறிக்கப்பட்டுள்ளது.[4] மேலும் சங்க இலக்கியத்தில் முருகன் தொடர்பான பதிவுகள் பலவும் முருகன் சினத்திற்குரியவன் என்றும் சீற்றம் உடையவன் என்றும் குறிபிடுகின்றன.

*முருகன் சீற்றத் உருகெழு குருசில்*
*தாய்வயிற் றிருந்து தாய மெய்தி* [5]
*முருகன் சீற்றத்து உருகெழு குரிசில்* [6]

மேற்கூறிய சான்றுகள் போன்று பதிற்றுப்பத்து, நற்றிணை, அகநானூறு, மதுரைக்காஞ்சி உள்ளிட்ட சங்க இலக்கியத்தில் முருகன் சினம் கொண்டவன், சீற்றம் எனும் போர்க்குணத்தைப் போற்றிடும் வரிகளையும் உள்ளடக்கியதாகக் காணப்படுகிறது. இதனடிப்படையில் குறிஞ்சி நிலக்கடவுள் எனப் பெயர் பெற்ற முருகனின் வீரம் குறிஞ்சிநிலப் பெண்களின் "உள்ளம் கவர்கள்வன்" என்ற வகையில் முருகன் தன்வயப்படுத்திடும் நிலைக்கு இட்டுச் சென்றது. குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குரவர் இனப் பெண்கள் வேலனுடன் பெற்ற ஈர்ப்பின் வெளிப்பாடாக "முருகு" தங்களின் உடலில் உட்புகுந்ததாகக் கருதி செயல்பாடுகளில் மாற்றம் பெற்றனர். இம்மாற்றத்தைத் தொல்காப்பியம், புறநானூறு, குறிஞ்சிப்பாட்டு, அகநானூறு, உள்ளிட்ட சங்க இலக்கியங்கள் பலவும் புலப்படுத்துகின்றன. இவ்வீர்ப்புக்கு ஆளான பெண்கள் அணங்குகள் என்று அழைக்கப்பட்டனர். "அணங்கு" என்பது அச்சம் தரக்கூடிய வடிவம், காதல் வயப்பட்ட வடிவம் (மையல் நோய்) என்று திவாகர நிகண்டு குறிப்பிடுகிறது.[7]

இந்துமத வரலாற்றில் இவ்வகையில் பக்தை இறைவனிடம் மையல் கொள்ளல் என்பது கி.மு 4000-ம் ஆண்டுகளுக்கு முன்னரே நிலவி வந்த ஓர் மரபு எனலாம். பாகவத புராணம் இதற்குரிய சான்றாகவும் உதாரணமாகவும் அமைகிறது. பாகவத புராணத்தில் கண்ணனிடம் கோபிகள் கொண்டிருந்த

உறவு அல்லது பக்தி சிருங்காரம் இரசத்தை உள்ளடக்கியது ஆகும்.[8] இந்நிலைப்பாட்டினைத் தொல்காப்பியர் குறிப்பிடும் உவகை என்ற மெய்ப்பாட்டுடன் தொடர்புடையது எனலாம். தொல்காப்பியர் மெய்ப்பாட்டியல் தொடர்பாக விளக்கிடும்போது

*நகையே அழுகை இளிவரல் மருட்கை*
*அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்பது*
*அப்பால் எட்டே மெய்பாடு என்ப[9]*

இவ்வகை மெய்ப்பாட்டில் "உவகை" என்பது ஒன்பான் இரசங்களில் சிருங்காரத்துடன் இணைப்படுத்தப்படுகிறது. இதனடிப்படையில் பாகவத புராணம் குறிப்பிடும் "மதுரபாவம்" சிருங்காரம் குறிப்பிடும் உவகை என்ற தன்மையைப் பெற்றுள்ளது எனலாம். இப்பாகவத புராணம் பிருந்தாவனத்தில் இருந்த 108 கோபிகள் உடல் மற்றும் உள நிலையில் மூன்று வகையாக பிரித்துள்ளது. இதில் பக்தி, காதல், பணி என்ற வகையில் அவர்களின் உறவுநிலை பெற்றிருந்ததாக பதிவு செய்யப்பட்டுள்ளது.[10]

மேலே குறிப்பிட்டது போன்று உடல் அல்லது உளநிலையில் கண்ணனுடன் தங்களை ஒருங்கிணைந்துக் கொண்ட கோபிகள் "வரிட்டா" (Varishta) கோபிகள் என்றழைக்கப்படுகின்றனர்.[11] கண்ணனிடம் பெற்றிருந்த மோக அல்லது காதல் என்பது மதுரபாவம் என்ற வகையில் அமைகிறது. இதனைச் சிருங்காரத்துடன் தொடர்புபடுத்தலாம். சிருங்காரத்துடன் கண்ணன் கோபிகள் ஆடிய நடனம் இராசலீலை (Amusment) அல்லது இராசகிரிடை என்றழைக்கப்படுகிறது. இராசலீலையில் "இராச" என்பது சுவையானது, மதுரமானது மகிழ்ச்சியானது என்ற நிலையிலும் "லீலை" என்பது விளையாட்டு அல்லது செயல்பாடு என்ற வகையில் அமைந்தள்ளது. இந்நிலையில் கோபிகளின் மனநிலை என்பது Psychical Passion எனப்படும். மன எழுச்சி பேரார்வம் நிலை என்பது கிருட்டிண மாயா என்று அழைக்கப்படுகிறது. மேற்கூறிய இராசலீலை என்ற நிகழ்வு பரமாத்துமா எனக் கருதப்படும் இறைவனும் ஜீவாத்துமாவும் தன்னை ஒருங்கிணைத்துக் கொண்ட நிகழ்வின் வெளிப்பாடாகவே அமைகிறது. இதனை Lord is an embodiment of rasa என்றும் கூறலாம்.[12]

பாகவத புராணம் விளக்கிடும் இராசலீலை மற்றும் கிருஷ்ண மாயா என்ற கோட்பாடு போன்றவை Pan Indian Idiom or concept என்ற வகையில் இந்தியா முழுமையிலும் இந்து மதத் தொன்மங்களில் இடம்பெற்றுள்ள ஒன்றாகும். முன்னர் கூறியது போன்று தமிழ்க்கடவுள் எனப் போற்றப்படும் அழகன், எளிமையானவன், இளையவன், வீரன், சினம்கொண்டவன் என்ற பெயர்களைப் பெற்ற முருகனின் வழிபாட்டின் சங்ககாலம் தொடங்கி இன்று வரை மேற்கூறிய தன்மை பெற்ற நிகழ்வுகள் தொடர் நிகழ்வாக இருந்து வருகிறது. இந்நிகழ்வில் வெறியாடல் என்பது இவ்வழிப்பாட்டுடன் ஒன்றிணைந்து வரும் ஒருவழிபாட்டு முறை என்பதைவிட முருக வழிபாட்டுடன் இணைந்து காணப்படும் ஆடல் அல்லது கூத்து என்று சங்க இலக்கியங்களில் பதிவு

செய்யப்பட்டுள்ளது. அணங்கு வெறியாடல் நிகழ்வுகள் இதனை முன்னர் குறிப்பட்டது போன்று திவாகர நிகண்டு மையல் நோய் என்றும் பிங்கல நிகண்டு வருந்து கொல்லும் தெய்வமகள் என்றும் குறிப்பிகின்றன.[13] மேலும் திருக்குறளில் அணங்கு தொடர்பான செய்திகளைக் கீழ்கண்டவாறு இடம்பெறுகிறது.

*அணங்குகொல் ஆய்மயல் கொல்லோ கனங்குழை*
*மாதர்கொள் மாலும் என்நெஞ்சே*[14]

*நோக்கினான் நோக்(கு) எதிர்நோக்குதல் தாணக்(கு)அணங்கு*
*தானைக்கொண்(டு) அன்ன(து) உடைத்து*[15]

*ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப*
*மாயம் மகளிர் முயக்கு*[16]

மேற்கூறிய குறிப்புகள் அனைத்தும் "அணங்கு" என்பது முருகு வாழிபாட்டுடன் தொடர்பு பெற்றதாகும். அணங்கில் மனநிலை ஆகும். இதனை ஆங்கிலத்தின் யுஅடிைையடநஉெந என்று பொருள் கொள்ளலாம். சலனம் கொண்ட மனப்போக்கு என்ற உளவியல் மனநிலை ஏறக்குறைய Erotic Mood என்ற நிலையை ஒத்ததாகும்.

அணங்குடைய நங்கையின் மனநிலையில் ஓர் நிலைப்பாட்டினை உருவாக்கிட நடத்தப்பட்ட வெறியாடல் அல்லது வேலன் வெறியாடல் என்ற நிகழ்வு அகத்துறையுடன் தொடர்புடைய கூத்தாகவே அமைகிறது. அணங்குடை நெடுவரை உச்சியின் இழிதரும் எனத் தொடங்கி, நோய்தணி காதலர்வர ஈண்டு ஏந்தி வேலற்கு உலந்தமை கண்டே என முடியும் பாடலிலும் அதன் தொடர்ச்சியாக பனிவரை நிவந்த பயம்கெழு கவாஅன் எனத் தொடங்கிடும் (வெறி பாடிய காமக்கண்ணியாரின் பாடலிலும்,

*யான்உயிர் வாழும் அதனினும் அறிதே*[17] அகத்தினண (குறிஞ்சி-98)

சங்க கால புலவர்களில் பெண்பால் புலவர்களாக வெறி பாடிய காமகண்ணியார் என்பவர் குறிஞ்சி திணையில் அகப்பொருள் பாடல்கள் இரண்டில் மேற்கண்டவாறு இந்நிகழ்வில் காணப்படும் ஈர்ப்பு அல்லது இச்சையுடம் தொடர்புடைய நிகழ்வாக இது அமைகிறது என்பதை உறுதி செய்யும் வகையில் விளக்கியுள்ளார். இக்கருத்தினை மையப்படுத்தி முத்தொள்ளாயிரத்தில் ஓர் பாடல் ஒன்று அமைகிறது.

*காராட்டு திரம்தூஉய் அன்னைகளன் இழைத்து*
*நீராட்டி நீங்கென்றால் நீற்புமோ போராட்டு*
*வென்று களங்கொண்ட வெஞ்சினவேற் கோதேக்கன்*
*நெஞ்சங் களங்கொண்ட நோய்*[18] (முத்தொள்ளாயிரம்-11)

இப்பாடலில் தலைவன் தன்நெஞ்சில் கலங்குண்டதால் ஏற்பட்ட மையல் நோய் வெறியாடல் என்றும் நிகழ்வினால் நீங்கிடுமா? என்று அணங்கு கொண்ட பெண் தன்மனதிற்குள் நகைத்திடுவது போன்று அமைகிறது.

சங்க இலக்கியங்கள் முருகு, அணங்கு, வெறியாடல் தொடர்பாக தந்துள்ள சான்றுகளை உற்று நோக்கிடும் போது முந்தைய பக்கங்களில் விளக்கப்பட்ட பாகவத புராணம் வர்ணிக்கும் கண்ணன் கோபியர்களின் இராசலீலை என்ற நிகழ்வில் பெற்றுள்ள மதுரபாவம், சிருங்கார இரசம் ஆகியவற்றினைத் தன்னகத்தே பெற்ற நிகழ்வாகவே முருகன் வழிபாட்டில் காணப்படும் அணங்கு வெறியாடல் நிகழ்வுகள் அமைகிறது. இதனைப் பக்தி நிலையில் இதனை மதுர பக்தி மற்றும் தாஸ்யநிலை என்று வரையறுக்காலம். பாகவத புராணம் குறிப்பிடும் இராசலீலை நிகழ்வுகள் தமிழ்ச் சமுதாய மரபிற்கு இயைந்து போகாதவை என்ற பண்பாடு சார்ந்த கோட்பாட்டின் அடிப்படையில் முருகன் வழிப்பாட்டில் இடம்பெற்றுள்ள இந்நிகழ்வுகளும் பாகவத புராணத்தில்... நிகழ்வு போன்று அதிகளவில் தமிழ்ச் சமுயத்தில் வெளிக்கொணரபடவில்லை. சங்க இலக்கியச் சான்றுகளின் அடிப்படையில் உற்று நோக்கிடும்போது அணங்கு - வேலன் வெறியாடல் என்பது இராசலீலைக்கு ஒப்பான ஓர் நிகழ்வு என்ற வகையில் கருதத் தோன்றுகிறது.

**அடிக்குறிப்பு**

1. Monier Williams, A Sanskrit- English Dictionary.
2. Swami vivekananda, On Bhakti- yoga jems from Vol Six, p. 90.
3. Arvind Sharma, Classical Hindu thought an Introduction, p.125.
4. தொல்காப்பியம், பொருளதிகாரம் 5.
5. பெருநாராற்றுப்படை 131-132.
6. புறநானூறு -16.
7. திவாகரநிகண்டு.
8. பாகவதப்புராணம்-10.33.39.
9. தொல்காப்பியம், பொருளதிகாரம்-247.
10. Ravi Gupta, The Bhagavatapuranam>Sacred text and living tradition p.268.
11. Dubey Vinita, Merging with the Beloved: Mystical path to oneness Chapt.7.
12. CatheribeRobison(edit), Encyclopedia of Hinduism, p1050.
13. பிங்கல நிகண்டு.
14. குறள் - 1081.
15. குறள் - 1082.
16. குறள்-918.
17. அகத்திணை (குறிஞ்சி -98).
18. முத்தொள்ளாயிரம்-11.

## முருகன் மீதமைந்த நாட்டியப் பதவர்ணங்கள்

முனைவர் செ.கற்பகம்
உதவிப்பேராசிரியர்
இசைத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்

செந்தமிழ்க் கடவுள் முருகன் மீது செவ்வியல் நாட்டிய இசை வகைகள் ஒன்றான பதவர்ணங்கள் பல படைக்கப்பட்டு நாட்டிய அரங்குகளில் ஆடப்பட்டு வருகின்றன. மலர்வழிபாடு (புட்பாஞ்சலி), அலாரிப்பு, சதீச்சுவரம், சப்தம் (வணக்கப்பாட்டு), பதவர்ணம், பதம், நாமாவளி, தில்லானா, வாழ்த்துப்பா என்ற நிலைகளில் அமையும் நாட்டிய இசை வகைகளில் பதவர்ணமும் ஒன்றாகும்.

வர்ணம் என்ற சொல் இசை, நாட்டியக் கலைகளில் பயன்படுத்தப் பெறும் ஒன்றாகும். வர்ணம், நிறம், ஓவியத்திற்கு உயிரோட்டம் தரும். நிறங்களைப் போல் பாடலுக்குப் பொலிவு தரும் இசையும், தாள நுட்பமும் அமைந்த இசைப்பாடல் வர்ணமாகும். இது தானவர்ணம், பதவர்ணம் என இரு வகைப்படும். தாள வர்ணம் இசைப் பயிற்சிக்குரியது. பதவர்ணம் நாட்டியப் பயிற்சிக்குரியது. எழுத்தோசைகளின் நீளம், தன்மை, காலவேகம், யாப்பு, பாடல் பொருள் நிலைகளில் அமையும். இருபது வண்ணங்களைத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

**பதவர்ணம்**

நாட்டியப் பதவர்ணம் எடுப்பு (பல்லவி), தொடுப்பு (அனுபல்லவி), முத்தாயிசுவரம், முத்தாயிசுவர சாகித்தியம், சிட்டைச்சுவரம், சிட்டைச்சுவர சாகித்தியப் பகுதிகளோடு அமைந்திருக்கும். இவைகள் சௌக்கத்திலும், மத்திம, துரித காலங்களில் அமைந்திருக்கும். எடுப்பு, தொடுப்புப் பகுதிகள் வர்ண இசைமெட்டுக்களுடன் அமைந்திருக்கும். மெட்டுக்களும் அமைந்த இசையலகுகளுடன் அமைந்த பாடல் பகுதியாக அமைந்திருக்கும். முதலில் சௌக்க முதல் நடையிலும், பின்பு வார நடையிலும் (மத்திம) பாடப்பெறும். பின்பகுதி திரள்நடையிலும் அமையும். சிட்டை இசையலகுகளும் இடம்பெறும். இவற்றிற்குரிய இசைப்பாடல்கள் இடம்பெறும். இவை முடிப்புப் பாடல் பகுதிகளாக அமையும். அடுக்கடுக்காக மேலிருந்து கீழே விரிந்து செல்லும் கோபுரப் பகுதி போல் அமைந்திருக்கும். நுட்பமிகு தாள அமைதியும், இராகத்திற்கேற்ப பல அடுக்கு இசையலகுகளும் இவற்றுடன் ஒருங்கிணைந்த நிலையில் நாட்டியச் சொற்கட்டுக்களும் அமைந்திருக்கும். இது முன்பகுதி, பிற்பகுதி என இரு நிலைகளில் அமையும். இந்நாட்டிய உருப்படி பதவர்ணம் என்று அழைக்கப்பெறும். பதம் = பொருள். அதிலும் அகப்பொருள் தழுவிய நாட்டிய உருப்படி இது. சங்க அகமரபை ஒட்டி அமைந்தாலும் சுட்டிக்கூறும்

முறையிலிருந்து வேறுபடும். பொதுவாகத் தேவபாணிப் பாடல்களில் அமையும். சுட்டிக் கூறும் மரபை ஈண்டும் காணலாம். இதனை நாயக நாயகி பாவனையில் அமைந்த மதுரபக்திப் பாடல்களாகக் கருதுவர். இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப் பெறும். ஜீவாத்மா பரமாத்மா உறவை மையமிட்ட நிலையில் அமையும். பரமாத்வை அடைய விழையும் ஜீவாத்மாவின் நிலையை உவகைச் சுவையுடன் கூறும். பாட்டுடைத் தலைவன் பரமாத்மா படைப்போர் அல்லது ஆடுபவர் ஜீவாத்மா. ஜீவாத்மாவை ஆற்றுப்படுத்தும் குருவாக தோழி பாத்திரம் அமையும். தலைவன், தலைவி, தோழி சில நேரங்களில் பாங்கன் பாத்திரமும் இடம்பெறும். சிவபெருமான், விநாயகர், முருகன், அம்பிகை மீது பாடப்பெற்ற சைவநெறிப் பதவர்ணங்களும், கண்ணன் மீது இயற்றப்பெற்ற வைணவநெறிப் பதவர்ணங்களும் உள. அம்பிகை மீது அமையும் பதவர்ணங்கள் தாயை நோக்கிப் பாடும் நிலையில் அமைந்திருக்கும்.

இத்தகு நாட்டிய இசை இலக்கியத்தைத் தஞ்சை நால்வரான சின்னையா, பொன்னையா, சிவானந்தம், வடிவேலு வடிவமைத்துத் தந்தார்கள். அவிநயத்திற்கு முக்கியத்துவம் தந்து ஞானநெறியாகிய நாயக நாயகி பாவனையில் அமைத்துத் தந்தனர். பின்பு வந்த அவிநயப் பேரரசி த. பாலசரஸ்வதி நாட்டிய இசை வகைகளைத் திருக்கோயில் வழிபாட்டோடு தொடர்புபடுத்தி உரைத்துள்ளார். “மகத்தானதோர் ஆலயம் போல் தீர்மானிக்கப்பட்ட பரதக் கச்சேரி கிரமத்தில் அலாரிப்பு என்ற கோபுரவாயில் வழியே பிரவேசித்து ஜதீஸ்வரம் என்ற அர்த்த மண்டபத்தையும் சப்தம் என்ற மகாமண்டபத்தையும் கடந்து வந்தால் புனிதத்திலும் புனிதமான தெய்வ சந்நிதானத்தில் வர்ணம் வருகிறது. இலய ஜதிகளைக் கொட்டவும், பாவ அவிநயங்களைப் பொழியவும் விஸ்தாரமாக இடம் கொடுக்கும் தெய்வ சந்நிதானம் அது. நடிகையானவள் தன் மனோதர்மத்துக்கும் நாட்டிய தர்மத்திற்கும் பூரணமாக இடம்கொடுத்துத் தன்னில் தானே நிறைந்து இருப்பதற்கு வர்ணமே விரிந்து இடமளிக்கிறது” என்கிறார். (மேற்கோள். முனைவர் சண்முக. செல்வகணபதி, இந்தியப் பண்பாட்டுத் தூதுவர்கள் தமிழ்நாட்டிய ஆசிரியர்கள், ப.133)

**முருகன் மீது பதவர்ணங்கள்**

முருகன் மீது நாட்டிய இலக்கியப் படைப்பாளர்கள் பலர் பதவர்ணங்களைப் படைத்துள்ளனர். தெய்வானையின் கணவனாகவும், வள்ளிமணவாளனாகவும் விளங்கும் முருகனின் திருவிளையாடல்களை மையமிட்டு எழுதியுள்ளனர். நற்றாய் இரங்கல், வெறியாடுதல், தழை கொண்டு சேறல், மாலை தந்தருள வேண்டல், தலைவி பிரிவால் வருந்துதல் என்ற நிலைகளில் பாடல் பொருள்கள் அமையும். இதில் சிறப்பு, மூர்த்தச் சிறப்புகளும் முருகனது திருவருட் செயல்களும் இடம்பெறும். பாபநாசம் சிவன், திருவீழிமிழலை கல்யாணசுந்தரம்பிள்ளை, குத்தாலம் கணேசன் பிள்ளை, மதுரை என். கிருஷ்ணன், இலால்குடி ஜெயராமன், தஞ்சாவூர் சீனிவாசன், கே.என். தண்டாயுதபாணிப் பிள்ளை, திருவிடைமருதூர் பி.எஸ்.வீ. இராசா,

மதுரை முரளீதரன் போன்றோர் முருகன் மீது பதவர்ணங்களைப் படைத்துள்ளார். இன்றைய நாட்டிய அரங்குகளில் இவை ஆடப்பெற்று வருகின்றன.

**குத்தாலம் கணேசன் பிள்ளை (1906-1976) - வர்ணம்**

குத்தாலம் என்ற தலம் பாடல் பெற்ற திருமுறை தலமாகும். உத்தாலவனம் குத்தாலம் என்று மருவி வழங்குகிறது. இவ்வூரில் வாழ்ந்த கணேசன் பிள்ளையின் முன்னோர் பந்தணை நல்லூர் மரபினர். பந்தணை நல்லூரில் பாடுவார் குடும்பம் என்று அழைக்கப்பெற்றது. இக்குடும்பத்தில் தோன்றியவர் சின்னையா, இவர் குத்தாலத்தில் வந்து தங்கினார். இவர் கணேசன் பிள்ளையின் தந்தையாவார். கணேசன் நாகசுரப் பயிற்சியும், மிருதங்கப் பயிற்சியும், நாட்டியப் பயிற்சியும், நட்டுவாங்கப் பயிற்சியும் பெற்றவர். சென்னை மயிலாப்பூரில் தங்கி பலருக்கு நாட்டியப் பயிற்சி அளித்து வந்தார். இவரிடம் கற்றோர் பலர். பத்மஸ்ரீ பி.ஆர். திலகம், கலைமாமணி திருநள்ளாறு இந்திராராஜன், சிங்கப்பூர் சாந்தாபாஸ்கர், மாலதி டொமினிக் போன்றோர் பலர். இக்கட்டுரையாளரின் தாயார் திருமதி மாரிக்கண்ணுவின் தாய்மாமன். என் தாயார் கணேசன் பிள்ளையிடம் நாட்டியப் பயிற்சி பெற்றவர். குத்தாலம் கணேசன் பிள்ளையின் முன்னோர் மரபில் இக்கட்டுரையாளரும் ஒருவராவார்.

**பதவர்ணப் படைப்பு**

சென்னையில் கணேசன் பிள்ளை தங்கி இருந்தபொழுது எனது பாட்டிமார் இருவரிடையே ஏற்பட்ட பிணக்கின் பொழுது "வட்டமிட்ட பொட்டழகன்' என்று தொடங்கும் முருகன் மீது பாடப் பெற்ற பதவாணம் தோற்றம் பெற்றது. இச்சண்டையைப் பார்த்துக் கொண்டிருந்த சிதம்பரம் நடராச சுந்தரம்பிள்ளை இப்பாடலை எழுதினார். இப்பாடலுக்குக் கணேசன் பிள்ளை பல்லவி, அனுபல்லவி, சரணம், சரணசாகித்தியம், இசையமைப்பு, தாள அமைதி, பதவர்ணத்திற்கேற்ப ஜதிக்கோர்வைகள் அமைத்துப் பதவர்ணமாக அமைத்து அரங்கேற்றினார். இப்பதவர்ணம் மிகப் பலரால் போற்றப்பட்டது. கணேசன் பிள்ளையின் அடையாளமாகத் திகழ்கிறது. எனது நாட்டிய அரங்கேற்றத்தின் பொழுது எனது தந்தையார் இப்பதவர்ணம் நமது குடும்பத்தின் சொத்து என்று எனக்குக் கூறி அரங்கேற்றம் செய்து வைத்தார். தெய்வயானையும் வள்ளி நாச்சியாரும் முருகனை மணந்தவர்கள். தம் கணவன் மீது கொண்ட உரிமையினால் இவர்களுக்குள் அடிக்கடி பிணக்கு ஏற்படுகிறது. இப்பிணக்கின் காரணமாக உரிமை மணாளன் தனக்கு மட்டுமே சொந்தம் என்ற நிலையில் இப்பதவர்ணம் அமைந்துள்ளது. இது இராக மாலிகையில் ஆதி தாளத்தில் அமைந்துள்ளது. இதனைக் காண்போம். இப்பதவர்ண அமைப்பையும் இதில் இடம் பெற்றுள்ள ஜதிக்கோர்வைகளையும் மயிலைக் கபாலிமகன் மீது கொண்ட உரிமையையும் ஈண்டு காண்போம்.

## குத்தாலம் கணேசப்பிள்ளை அமைத்த வர்ணம், பாடல் அமைப்பு சிதம்பரம் நடராச சுந்தரம்பிள்ளை

**இராக மாலிகை** **ஆதி தாளம்**

**பல்லவி**

*வட்டமிட்ட பொட்டழகன் கட்டழகன் கந்தசாமி*
*சட்டப்படி என் மணாளன் தானடி – தோழி*

**அனுபல்லவி**

*தொட்டநாளன்று எனை விட்டகலேன் என்று சொல்லி-கைப்*
*பட்டயம் வரைந்தது என் பெட்டிக்குள்ளே இருக்குது*

**சரணம்**

*காண கண்கள் தேடுதே காலம் வீணாகுதே*
*நேரம் என்னிடம் சற்றுநேரம் பேசநல்ல நேரம்*
*வளர்ந்தா திந்த நேரம் வரச்சொல்லடி (காண)*

*இந்தோளம்*

*மாதெனது மனம் மாறு தலடையுமா இனும் சந்தேகமா*
*நினைக்கத்தகுமா கோபமா கொள்வதாகுமா மனமே*
*செய்த மாமான் மகனை (காண)*

*கானடா*

*ஏமாந்தவள் நான் அல்லடி*
*அவர் எங்கு சென்றாலும் போக விடேனடி*
*பூமான் மகனாயிருந்தாலும்*
*எனக்கு என்ன போடி*
*இன்றே அழைத்து வாடி*
*ஏன்தன் சேடி*

*அம்சாநந்தி*

*இரவும் பகலும் இங்கே வந்து என்னைக்கூடி*
*உறவு கொண்டாடிய உண்மையை மறந்து*
*துறவு கொண்ட ஒரு பெரியார் போலவே*
*ஊரை ஏய்க்கப் பார்ப்பவரை (காண)*

*ஆபேரி*

*மயிலை கற்பகத்தை மணம்புரிந்த*
*உயர் கயிலை கபாலி மகன்*
*கைவரிசை என்னிடம்*
*காட்டி மிட்டி என்னை ஓட்டிட*
*அவுங்க பாட்டியாலும் ஆகாதென்று சொல்லடி*
*அயிலைக் கேட்டால் சொல்லும் அதுகண்ட காட்சி*
*அடுத்தாற் போலிருக்குது சேவலும் காட்சி*
*வஞ்சி எனது கோபம்*
*மிஞ்சிப் போகுமே யானால்*
*அஞ்சுதலையிடம் சொல்லி ஆறுதலையடை வேன்(காண)*

பரிபாடலில் வரும், தெய்வயானையும் வள்ளியும் சண்டையிட்டுக் கொள்ளும் காட்சியை இவ்வர்ணம் நினைவுபடுத்துகிறது. இப்பதவர்ணத்தில் நாட்டிய ஜதிக்கோர்வைகள் பின்கண்டவாறு அமைக்கப்பட்டுள்ளன.

**பல்லவி**

*வட்டமிட்ட பொட்டழகன் கட்டழகன் கந்தசாமி*
*சட்டப்படி என் மணாளன் தானடி – தோழி*

**தீர்மானம்**

தகி தக நக | ஜொம் தரி | கிடதக ||
தகி தக நக | ஜொம் தரி | கிடதக || | காலம்
ததி தக நக ஜொம்தரி கிடதக |தகதி தக நக|ஜொம்தரி கிடதக || காலம்
ததி தகநக ஜொம்தரி கிடதக, திதக நக ஜொம்தரி கிடதக |
தகதி தகநக ஜொம்தரி கிடதக | திதக நகஜொம்தரி கிடதக ||
ததி தகநக, திதக நக தகதி தகநக, திதகநக |
ஜொம் தகநக, நிதகநக, தகநக, திதகநக
ததி நகரநக தகதிதகநக ஜொம்தி தகநக நம்தி தகநக
ததிதக தகதி தக ஜொம் தி |தக நம் தி தக ||
ததிதகதி ஜொம்தி நம்தி
ததிங் கிணதொம்
ததிங் கிணதொம்
தகதிகி கிடதக தரிகிட தொம் ||

**அனுபல்லவி**

தொட்ட நாளன்று எனை விட்டகலேன் என்று சொல்லி – கைப்
பட்டயம் வரைந்தென் பெட்டிக்குள்ளே இருக்குது

தீர்மானம்

தீனுத தத்திமி தாத ஜம்தரித்த ஜம்தரித்த குகுந்தரித்த |
தகுந்தரித்த தக்கிடதக தரி கிடதொம் தத் |
ஜகுதரித்த குகுந்தரித்த தகுந்தரித்த தக்கிடதகதரிகிடதொம் தீனுத தத்தமிமி|
தாதக ஜம்தரி தத்தீனுத திமி | தாக்கு ஜம்தரி தத்தீ னுது திமி ||
தாகத ஜம் தரி தீனுத திமி தாகத ஜம்தரி தீனுதிமி தக|
தா திமிதகிடத தக தா கிடததகன தகதா தனதஜனுத தகதா||
தீனு திமிதக திமிதகிட தனதக கிடததனததக தனத ஜனுத தக|
தீத் தாம் தரிகிடதொம் திமி தாம் தரிகிடதொம்;:,தித்தாம் தரிகிடதொம் ||

தீர்மானம்

தாகிட தன ததிகிடதக ஜொம்ஜொம் தஜொம்த தரம்த கெதிம் தகிடதக|
ததகிடதக ததிகிடதக ஜொம்ஜொம் | தஜொம்த தரம்த கெதிம் தகிடதக ||
தாகிடதக ஜொம்தா ஜொம் தரம் கெதிம் தகிட ததகிடதக |
ஜொம்தா தஜொம் தரம் கெதிம் தகிட |தாகிடதக தஜொம் தரம் தீ ||
கிடதக தஜொம் தரம் தொம் கிடதக தஜொம் தரம் நம்கிடதக தஜொம் தரம்|
தாகிடதகநா தீகிடதகதா |தொம் கிடதகதா நம் கிடதகதா|
தாகிடதக தீகிடதக தொம்கிடதக நம்கிடதக தாகிட தீகிட
தொம் தொம்கிட நம்நம்கிட தகததீகிட தொம் |
தகததீகிட தொம் தகததீகிட தொம்

தீர்மானம்

தாம் ததித – தி தீங் தக்க | தாம் ததி |த-தி தீங்தக்க|| மி காலம்
தாம் ததி தாம் தாம் ததி தீந்தக்க|தாம்ததி தாம் தாம்|ததி தீந்தக்க ||

மிமிகாலம்

தாம் ததி தக தாம் ததி தக தாம் ததி தக தகுந்தரிகிடதக |
தாம் ததி தக தாம் ததி தக| தாம் ததி தக தகுந்தரிகிட தக|| மிமிமி காலம்
தத் தெய்யா தெய்யா தெய்யா தாதாதாதீ ||
தத் தெய்யா தெய்யா தெய்யா தாதாதாதீ ||
தத்தெய்யா தகதெய்யா தொம் தெய்யா நம் தெய்யா |
ததைய்யா தெய்யா தைய்யா தாதாதீ |
ததைய்யா தெய்யா தைய்யா தாதாதீ ||
தகததி கிடஅதாம் ததிகிடதொம் த-தி தகிடதொம்

# கந்தர் அனுபூதியில் பக்தி நெறி

முனைவர் நீ. காஞ்சனா
உதவிப்பேராசிரியர்
ஸ்ரீமத்.சி.பா.சு.த.க.அ.கல்லூரி,
மயிலம்.

கந்தனருள் பெற்று அருணகிரிநாதரால் பாடப்பெற்றது கந்தர் அனுபூதி. அனுபூதி என்னும் சொல்லினை அனு பூதி என்று பிரிக்கலாம். அனு என்பது அனுபவம். 'பூதி' என்பது புத்தி என்பர். அனுபவ அறிவின் பூரிப்பே அனுபூதி. திருமூலர் திருமந்திரம் போல் மந்திர ஆற்றல் மிக்கதாய் மிளிர்வது கந்தர் அநுபூதி. திருமூலர் இடையன் உடலுக்குள் புகுந்து திருமந்திரம் சொன்னது போல அருணகிரிநாதர் கிளி உடலுக்குள் இருந்து கொண்டு இந்த நூலைக் கூறுவர். இந்நூலில் 51 பாடல்கள் நிலைமண்டில ஆசிரியப்பாவால் ஆனது. இந்நூலில் உள்ள பாடல்களைப் பாசத் தளையில் கலங்கிய நிலை. மனம் அமைதி பெற்று தவத்தில் ஒன்றிய நிலை, முருகன் திருவருள் பெற்ற ஞானநிலை, உபதேச நிலை என்னும் நான்கு பிரிவுகளில் ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**பாசத் தளையில் கலங்கிய நிலை**

பாச வழியிலிருந்து உயிரை மாற்ற வேண்டுமானால் ஐம்பொறி களையும் உட்கருவிகளையும் ஒடுக்கி மனதினை இறைவனிடம் தங்கச் செய்யவேண்டும். ஐம்பொறிகளின் இயக்கம் காரணமாக மனதிலே ஆசை பிறக்கும். ஆசைகள் பாசத்திற்கு வித்திடும். ஆசையைக் குறைக்க வேண்டும். ஆசையை முழுவதும் ஒடுக்கி விடுவது என்பது தேவர்களாலும் இயலாத காரியம். ஆசைமேல் ஆசைப்படாது வாழ முயலவேண்டும். ஆசைகள் உயிருக்குத் துன்பம் தருகின்றன என்பதை உணர்ந்து கொண்டால் அவற்றை நீக்கிக் கொள்ளும் ஆற்றலைப் பெறலாம். அவ்வாறு செய்யும் போது உள்ளத்திலே ஒரு நடுநிலைமை தோன்றும். அதே நேரத்தில் ஒன்றின் மீது பற்றுக் குறையும் போது மற்றதின் மீது பற்றை வளர்ப்பது உயிரின் இயல்பாகும். உலகப் பொருள்கள் மீது ஆசையைவிட்ட உயிர் இறைவன் மீது மிகுந்த ஆசை வைக்கத் தொடங்கும். அதுவும் நமக்கு ஒருவகைத் துன்பத்தை அளிக்கும் என்பது திருமந்திரக் கருத்தாகும். ஆசைப்படுவது துன்பம், ஆசை விடுவது இன்பம் என்பதனை,

*ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்*
*ஈசனோபாயினும் ஆசை யறுமின்கள்*
*ஆசை படப்படஆய்வருந் துன்பங்கள்*
*ஆசை விடவிடஆனந்த மாமே.*[1]

என்னும் பாடல் உணர்த்துகிறது.

அருணகிரிநாதரும் பாசத் தளையில் கட்டுப்பட்டு கலங்கிய நிலையைக் காணமுடிகிறது. சுற்றத்தினர் சூழ போருக்கு எழுந்த, சூரபத்மனின் மார்பையும், கிரவுஞ்ச மலையையும், தொளைத்து ஊடுறுவிப் போகும்படி, தொடுத்த வேலாயுதத்தை உடையவனே, வளை பொருந்திய கைகளை உடைய மனைவி மக்கள் என்ற விலங்கில் அகப்பட்டு கட்டுண்டு அழிவதை,

*வளைபட் டகைமாதொடுமக் கள்ளனும்*
*தளைபட்டுஅழியத் தகுமோ! தகுமோ!*
*கிளைபட்டுஎழுசூர்உரமும் கிரியும்*
*தொளைபட்டுஉருவத் தொடுவேலவனே!* (பா.எண்.4)

என்று பாடியுள்ளார்.

சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை ஆகிய பெரிய மாயைகளைப் போக்கவல்ல முருகக் கடவுளின் ஆறு முகத்தையும் நினைந்து வணங்கிப் புகழ்ந்தும், வீடு, பொன், பெண்கள் என்று நினைத்து மனம் சோருகிற மாயா காரியங்களுள் அகப்பட்டு வாடுகின்றேன் என்பதை,

*மகமாயை களைந் திடவல் லபிரான்*
*முகம்ஆறும் மொழிந் தும்ஒழிந் திலனே!*
*அகம்மா டைமடந் தையர்என்றுஅயரும்*
*சகமாயை யுள்நின் றுதயங் குவதே!* (பா.எண்.5)

என்னும் பாடல் உணர்த்துகிறது. மேலும், கெட்ட வழியில் சென்று வாடாமல் அடியேனுக்கு வரம் கொடுக்க வேண்டும் என்பதை,

*சிங்கார மடந்தையர்தீ நெறிபோய்*
*மங்காமல எனக் குவரம் தருவாய்* (பா.எண்.34)

என்னும் அடிகள் உணர்த்துகிறது.

**மனம் அமைதி பெற்று தவத்தில் ஒன்றிய நிலை**

இவ்வுலகில் பிறக்கும் ஒவ்வொருவரும் பாசத்தால் கட்டுண்ட உறவினை வளர்ப்பது இயல்பாகவே அமைகின்றது. பெற்றோர், மனைவி, மக்கள், சுற்றம், உலகம் இவை யாவையுமே நமக்கு உறவெனும் தொடர்பைக் கொடுத்து பாசத்தை வலுப்படுத்துகின்றன. அன்றாட வாழ்விற்கு இந்த உறவு அத்தியாவசியமாகின்றது. இதைத் தவிர்த்து உலக நெறியில் நம்மை வெற்றியுடன் ஈடுபடுத்திக் கொள்வது மிகவும் கடினம். எனவேதான் அருணகிரிநாதர் மனத்தை நோக்கி! உடல், வாய், கண், மூக்கு, காது ஆகிய ஐம்பொறிகளின் வழியே செல்லும் ஆசைகளை முற்றிலும் ஒழித்துவிடு. திருக்கரத்தில் விளங்கும் ஒளிவீசும் வேலாயுதத்தை உடைய முருகப்பெருமானின் திருவருளைப் பெற்று, உயர்வு பெற்று வாழ்வாய் என்பதை,

*கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்று*
*உய்வாய் மனனேஒழிவாய் ஒழிவாய்*

*மெய்வாய் விழிநாசியொடும் செவிஆம்*
*ஐவாய் வழிசெல்லும் அவாவினையே* (பா.எண்.14)

எனும் அடிகள் உணர்த்தும். காளைப் பருவம் கொண்ட குமரன், ஈசன் என தியானம் செய்து அவனுடைய திருவடிகளை வணங்கும் படியான, தவத்தினை அடியேன் அடைந்ததை,

*காளைக் குமரேசன்எனக் கருதித்*
*தாளைப் பணியத் தவம்எய் தியவா!* (பா.எண். 22)

எனும் அடிகள் உணர்த்துகிறது.

**முருகன் திருவருள் பெற்ற ஞானநிலை**

ஆணவம், கன்மம், மாயை என்கின்ற மூன்று மலங்கள் ஆனபாசம் கால வரம்பின்றி உயிருடன் பொருந்தி உயிரை அறியாமை நிலையில் நிற்க வைக்கின்றது. இறைஞானம் இல்லாத போது தனக்குத்தான் நிகரில்லை என்ற எண்ணமும், பிறருடன் தொடர்பு கொண்டு உறவினை வளர்ப்பது தனது இயல்பு என்றும் உயிரானது எண்ணிக் கொள்கின்றது. அறிவு பெற்ற நிலையில் உயிர் தன்னை மற்ற தத்துவங்களிலிருந்து பிரித்துக் கொண்டு பாசத்தளை அகற்றியதாக இறைவனைச் சேருகின்றது. இறைநிலை அறிவும், ஒளியும் தங்கிய நிலையாகும். படைப்பின் நோக்கமே பதி, பசு, பாசம் என்கிற தத்துவங்களை வேற்றுமை நிலையில் நிறுத்தி, பிறகு அந்த வேற்றுமையையும் அகற்றுவதாகும். இதனை,

*பதிபசுபாசம் எனப்பகர் மூன்றிற்*
*பதியினைப் போற்பசுபாசம் அனாதி*
*பதியினைச் சென்றணுகாப்பசுபாசம்*
*பதியினைகிற்பசுபாசம் நிலாவே.*[2]

என்பார் திருமூலர். தியானிக்கப்படுகின்ற பொருளை, காலம், இடம் முதலியன பற்றி நினைக்காமல் தியானிக்கப்படும் பொருளைப் பற்றி எண்ணிக் கொண்டு பசு, பாசு ஞானங்களை விட்டு, பதி ஞானத்தால் அறியும் உண்மை வழியை, ஒப்பற்ற வேலாயுதத்தை உடைய கடவுள் மௌன குருவாய் வந்து உள் நின்று உணர்த்திய உடனே, உலகத்தாரோடு நெருங்கும் உறவு நீங்கி வாக்கும் அற்று, நினைவும் அற்று, சுட்டி அறிகின்ற அறிவும் அற்று, அறியாமையும் முற்றிலும் நீங்கிவிட்டன என்பதை,

*குறியைக் குறியாது குறித்துஅறியும்*
*நெறியைத் தனிவேலை நிகழ்ந்ததிடலும்*
*செறிவுஅற்று உலகோடு வரைசிந்தையும் அற்று*
*அறிவுஅற்று அறியாமையும் அற்றதுவே* (பா.எண்.42)

என்னும் பாடலில் முருகன் திருவருள் பெற்ற ஞானநிலையை உணர்த்தியுள்ளார். முருகப் பெருமான் காட்டிய அன்புடன் கூடிய அருளினால் ஆசையாகிய

விலங்கு, தூள்தூளாக பொடியான பின் மௌன நிலையுடன் கூடிய அநுபூதி நிலை தனக்குக் கிடைத்ததை,

*தூசாம் அணியும் துகிலும் புனைவாள்*
*நேசாமுருகா நின்றுஅன்பு அருளால்*
*ஆசாநிகளம் துளள் ஆயினபின்*
*பேசாஅநு பூதிபிறந் ததுவே.* (பா.எண்.43)

என்று உணர்த்தியுள்ளார். பகைவர்களையும், மாயை மற்றும் மலங்களையும் அழிக்கின்ற ஒப்பற்ற வேலாயுதக் கடவுளின் திருவடிகளை என் தலைமேல் சூடும்படி தந்தருளிய கருணையை,

*சாடுந் தனிவேல் முருகன் சரணம்*
*சூடும் படிதந்ததுசொல் லுமதோ?*
*வீடும் சுரர்மாமுடிவேதமும்வெம்*
*காடும் புனமும் கமழுங் கழலே* (பா.எண்.44)

என்று பாடியுள்ளார்.

**உபதேசநிலை**

நாம் பிறந்ததிலிருந்து இன்றுவரை நமது சுற்றம், தாய், தந்தை, நண்பர்கள், ஆசிரியர்கள் மற்றும் இயற்கை நமக்கு பல விசயங்களைக் கற்று கொடுத்துள்ளது. இவைகள் எல்லாம் ஆண்டவனிடம் நம்மை அழைத்து செல்லாது. யார் ஒருவர் நம்மை இறைவனிடம் கொண்டு சேர்க்கிறாரோ அவரே ஒருவருக்கு குரு ஆவார். மாதா, பிதா, குரு, தெய்வம் என்பார்கள். தாய் தந்தை பெற்ற நாம் ஒரு குருவை அடைந்து உபதேசம், தீட்சை பெற்று தவம் செய்தே இறைவனை அடைய வேண்டும்.

*குருவின் அடிப்பணிந்து கூடுவது அல்லார்க்கு*
*அருவமாய் நிக்கும் சிவம்*[3]
*குருவில்லா வித்தைபாழ்*
*குரு பிரம்மா குரு வி·ிணு*
*குரு தேவாமகேஸ்வரா*
*குரு சாட்சாத் பரம் பிரம்மா*
*துஸ்மை ஸ்ரீ குருவேநமஹா!*

எனும் அடிகள் குருவின் பெருமையை உணர்த்தும். குருவின் முக்கியத்துவத்தை உணர்த்தவே அவதாரங்களான ஸ்ரீ ராமரும். கிரு·ிணரும், குருவைத் தேடிச் சென்று நல்ல சீடர்களாக இருந்தார்கள். வள்ளலார், மாணிக்கவாசகர் போன்ற பிறவி ஞானிகளுக்கு இறைவனே குருவாக வந்தார். அவ்வாறே அருணகிரிநாதருக்கும் முருகப் பெருமானே குருவாக வந்தார். பிறப்பு வாராத வண்ணம் மெய்ப்பொருள் அருளினான் என்பதைக்,

*கூகா! எனஎன் கிளை கூடியழப்*
*போகா வகைமெய்ப் பொருள் பேசியவா* (பா.எண்.11)

என்று உணர்த்தியுள்ளார். குருவேகுமரப் பெருமானே! தெரிந்ததை மறைப்பதாகிய கல்வியுடையார் வாயிலில் சென்று கல்வியை இராவாத வகை, கல்வியால் கிடைக்கத் தகும் உண்மைப் பொருளை உபதேசித்து அருள்வாய் என்பதை,

*கரவாகிய கல்வியுளார் கடைசென்று*
*இரவா வகைமெய்ப் பொருள்ஈகு வையே* (பா.எண்.45)

என்னும் அடிகள் உணர்த்தும். நான்முகன் முதலியதேவர்கள் தலையில் சூடிக்கொள்ளும் தாமரைமலர் போன்ற திருவடியை உடையவனே! சிவபெருமானுக்கு உபதேசித்து அருளியதை அடியேனுக்கும் அருளவேண்டும் என்பதை,

*நாதா குமரா நமஎன்று அரனார்*
*ஓதாய் எனஓதியதுஎப் பொருள்தான்?*
*வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்*
*பாதா குறமின் பதசேகரனே!* (பா.எண்.36)

என்னும் அடிகள் உணர்த்தும். குருமூர்த்தியாக எழுந்தருளி வந்து அடியேனுக்கு அருளவேண்டும் என்பதை,

*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே* (பா.எண்.51)

என்றுபாடியுள்ளார்.

**முடிவுரை**

எல்லா ஞானிகளும் இறைவனின் திருவடியைப் பற்றுங்கள் என்றே பறை சாற்றுகின்றனர். திருவடியை மறவாதமனம் தாஎன்று இறைவனை வேண்டுகின்றனர். அவ்வகையில் அருணகிரிநாதர், பாசத்தளையில் கட்டுண்டு கலங்கி, பின் மனம் அமைதி பெற்று தவத்தில் ஒன்றி, முருகப் பெருமானே குருவாக வந்து உபதேசம் செய்து திருவருள் பெற்ற ஞான நிலையைப் பாடியுள்ளார் என்பதை அறியமுடிகிறது.

**சான்றெண் விளக்கம்**


1. திருமந்திரம், பா.எண்.2615.
2. திருமந்திரம், பா.எண்.115.
3. ஔவைக்குறள், 203.

# வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் திருச்செந்தூர் சந்தமாலிகைத் திருப்புகழ் - ஒரு பார்வை

**ச. காயத்ரிதேவி,**
ஆய்வியல் நிறைஞர், இசைத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் முத்தமிழுக்கான படைப்புகள் லட்சக்கணக்கானவைகள் உள்ளன. இப்போது கைவசம் உள்ள பாடல்களின் தொகை 50,000கும் மேற்பட்டவையாம். ஒரு குறிப்பைத் திருவருள் ஆணை, தமது குறிக்கோள் இவற்றைத் துணையாகக் கொண்டு பாடி வந்துள்ளார் என அறிய முடிகிறது. அதில் அவருடைய திருப்புகழ் படைப்புகள் அனேகம் உள்ளன. அவைகள் நமக்கு அருணகிரிநாதரின் திருப்புகழ் அமைப்புகள் போலவே காணப்படுகின்றன. சரபம் போல வண்ணப் பாடல்கள் பாடுவதில் வல்லவரானதால் அவரை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் எனவும் திருப்புகழ் சுவாமிகள் எனவும் மக்கள் அழைத்தனர். அவற்றில் திருச்செந்தூர் சந்தமாலிகைத் திருப்புகழ் பற்றிய விளக்கங்களை இங்கு காணலாம்.

**பாமாலையின் சிறப்பு**

*சந்தனாசலச் செநதூர்ச் சண்முகவேல் மீதுரைத்த*
*சந்தமாலி கைப்பெயர்நூல் சாற்றினான் - சந்தமிகு*
*வண்ணச் சரபதண்ட பாணியெனும் மாதவன்றான்*
*விண்ணத் தமுதில் உயர்வே.*

'சந்தமாலிகை' என்ற இந்நூறு பாக்களும், சந்தப்பாக்களால் அமைக்கப் பற்ற மாலை என்ற பொருளில் அமைந்துள்ளது. பூக்களால் தொடுக்கும் மாலை போல, பாக்களால் யாக்கப் பெறுவதும், மாலையென்று அமையும். பாவாலான மாலை கடவுளுக்குச் சூடியெடுத்ததும் ஒதுக்கப் பெறும். பாவாலான மாலை – பலர் பல காலம் பாடினாலும் இயல்பு குறையாது சிறப்புறும். மேன்மேலும் அழகுபெற்று, எங்கெங்கும் சிறப்பானதாக பரவி என்றென்றும் அழியாதிருக்கும்.

*நாவெடுக்கும் சொன்மலரோ நானெடுக்கும் பொன்மலரோ*
*தேவையுனக் கெதுவோ சேப்பாய் பராபரமே*

என்று பாமாலையின் சிறப்பினை தாயுமானவர் விளக்கியுள்ளார்.

**சந்தமாலிகைத் திருப்புகழ் விளக்கங்கள்**

மாலிகை என்ற வடசொல், மாலை என்று தென்மொழியில் நிலவியது. சந்தம் என்பது அழகைக் குறிக்குமாயினும் ஈண்டும் வண்ணத்தையே

குறிக்கின்றது. சந்தம் என்பதும் வண்ணம் என்பதும் ஒரு பொருளையே குறிக்கின்றது. சந்தம் : தந்த – தாந்த – தத்த – தாத்த – தன – தான – தன்ன –தய்ய என்று எட்டானாது போல, இந்த சந்தமாலிகைத் திருப்புகழும் திருச்செந்திற் ப்ரபந்தங்கள் என்ற நூலில் எட்டாவதாக இடம் பெறுவதைக் காணலாம்.

திருச்செந்திற் ப்ரபந்தங்கள் என்ற நூலின் தொகுப்பின் வரிசையில் 16 நூல்கள் உள்ளன. அவையாவன : 1. திருச்செந்தில் வெண்பா, 2. திருச்செந்தூர்ச் சிலேடை வெண்பா, 3. திருச்செந்தில் திரிபந்தாதி, 4. யமக அந்தாதி, 5. திருச்செந்தில் பதிற்றுப் பத்தந்தாதி, 6. செந்தினாயக சதகம், 7. திருச்செந்திலுலா, 8. திருச்செந்தில் சந்தமாலிகைத் திருப்புகழ், 9. திருச்செந்தில் நவரச மஞ்சரி, 10. திருச்செந்தில் தசாங்க வகுப்பு, 11. திருச்செந்தில் குஞ்சரிமாலை, 12. வீரவாகு வானலங்காரம், 13. வீரவாகு வண்ணப்பதிகம், 14. திருச்செந்தில் அகப்பொருட் கோவை, 15. கௌமார விஜயம், 16. திருச்செந்தூர் வள்ளி நாயகி பிள்ளைத்தமிழ். இங்கு 8வது தலைப்பாக திருச்செந்தில் சந்தமாலிகை திருப்புகழ் இடம் பெறுவதைக் காணலாம். மேலும் திருப்புகழ் அமைப்பும் 8 அடிகளைக் கொண்டே அமைவதும் இங்குச் சிறப்பாகக் கூறலாம்.

சமயாச்சாரியர்கள் பாடல்களான தேவாரம் (திருமுறைகள்), திருவாசகம் என்பது போல் திருப்புகழ் என்பது அருணகிரிநாதர் பாடிய சந்தப்பாடல்களுக்கு அமைந்த சிறப்புப் பெயராகும். புகழ் யாவருக்கும் உரியதொன்றாயினும், இறைவனைப் பற்றிய புகழே திரு என்ற சொல் சேர்த்து வழங்கப்பெறும். தோன்றியிருந்து இறந்தொழிவோர் புகழ் புகழாகாது. அதுவும் பெறாது வாளா வாழுமவரினும் இவர் சிறந்தோர் என்று கூறிப் புகழ்வது உபசாரமேயாகும். இதனையே வடலூர் வள்ளலார், அம்பலப்பாட்டே அருட்பாட்டு அல்லாதார் பாட்டெல்லாம் மருட்பாட்டு என்று பாடியதைக் கூறலாம்.

நாயன்மார்கள், ஆழ்வாராதிகள் சென்று வணங்கிப் பாடிய தலங்களையே திரு என்ற சொல்லோடு கூட்டி அழைத்து வருகின்றோம். மற்றவை எவ்வித மேம்பாடுடையதாயினும் அதனோடு ஒப்பிடமுடியாததாகும். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் திருப்புகழை, அருணகிரிநாத சுவாமிகளின் திருப்புகழுடன் ஒப்பிடும் பொழுது, 'பெருமாளே' என்று ஈற்றிலமைக்க ஒருபடாது, தமது சந்தப்பாட்டில் இறுதியில் ஷகுகவேளே' என்று முதலில் பாடினார். இங்கு திருச்செநதூர் சந்தமாலிகை திருப்புகழில் 'தம்பிரானே' என்று பாடியுள்ளதைக் காணமுடிகின்றது.

முருகப்பெருமான் இவரை முற்பிறப்பில் அருணகிரிநாதராயிருந்தார் என்ற விவரத்தைக் கூறி 'பெருமாளே' என்றழைக்கும்படி ஆணையிட்டார் என்று அறியமுடிகின்றது. இக்கருத்தை திருச்செநதூர்ப் பதினாறுள் முன்னரே பதித்து வெளிவந்த 'கௌமார விஜயம்' (சுவாமிகளின் மைந்தனான செந்தில்நாயகனார் இயற்றியது) என்ற நூலில் 'செவிகொடு வினவல்' என்று

ஒரு பகுதியின் முதற் பாடலில் அருணகிரிநாதர் பாடிய திருப்புகழின் உயர்வையும் தான் அப்பெயரில் பாடும் சந்தப் பாடலின் நிலையையும், பல உவமைகளைத் தொகுத்துக் கூறி தன் பணிவையும், அருணகிரிநாதரின் திருப்புகழின் பண்பையும் பாராட்டிக் கூறுயிருக்கிறார். இதிலிருந்து சுவாமிகளின் தற்பெருமை இன்றி திருவருள் முன்னிலையில் இத் திருப்புகழ் கவிகளை பாடுவதாக இவரின் மன நிலையைக் காண முடிகின்றது.

திருப்புகழின் சிறப்பு சந்தம். திருப்புகழ் பாக்களைச் சந்தப்பாடல்கள் என்றும் கூறுவர். வண்ணம் என்ற சந்தத்துக்கெனத் தனியிலக்கணம் சுவாமிகள் காலம் வரை இருந்தது இல்லை. எனவே முருகனின் திருவருள் துணை கொண்டு, வண்ணத்தியல்பு என்று ஓரிலக்கணம் இற்றியதையும் அதில் சந்தங்களின் பிறப்பு, ஒலிவகை ஆகியன பற்றியும் விரிவுறக் காணமுடிகின்றது.

சுவாமிகள் திருச்செந்தூர் முருகன் மீது பல சந்தப்பாடல்களை இயற்றியுள்ளதைக் காணமுடிகின்றது. இங்கு திருச்செந்தூர் சந்தமாலிகைத் திருப்புகழ் என்ற நூலில் 100 பாடல்களை திருப்புகழுக்குண்டான நெறிமுறைகளுடன் இயற்றியுள்ளார். முதலில் நான்கு வரிகள் கொண்ட காப்பு, பின்னர் சந்த அமைப்புடன் விநாயகர் காப்பு எனப் பிரார்த்தனையுடன் ஆரம்பித்துள்ளார். முடிவில் வெண்பா அமைப்பில் ஒரு சிறிய பாடலான பயன் என்பதனையும் இயற்றியுள்ளார். எனவே இந்நூலில் மொத்தம் 103 பாடல்கள் காணப்படுகின்றன.

அருணகிரிநாதர் இயற்றியுள்ளதைப் போலவே திருப்புகழ் அமைப்பு நெறிமுறைகளைக் கையாண்டதைக் காண முடிகின்றது. முதலில் பாடல்களுக்கு முன் சந்த அமைப்புகளை அமைத்துள்ளார். 8 அடிகளை ஒவ்வொரு பாடல்களுக்கும் அமைத்துள்ளார். ஒவ்வொரு அடியும் தொங்கல் அமைப்பில் முடிவடைகின்றது. மேலும் அருணகிரிநாதர் திருப்புகழ் பாடல்களில் முற்பகுதி, பெரும்பான்மையான பாடல்களில் உலகியலைப் பற்றியதாகவும், மங்கையர் மையலில் உழன்றுபடும் துன்பங்களைப் பற்றியனவாகவும், பின்பகுதி முருகப் பெருமானின் சிறப்புகளையும், பெருங்கருணையையும், வீரத்தையும், அருட்கொடையையும் எடுத்து இயம்புவதாக அமைத்துள்ளார். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும் இங்கு 100 பாடல்களிலும் கருத்துக்களை அவ்வாறே கையாண்டுள்ளதைக் காணமுடிகின்றது.

தொங்கல் அமைப்புகள் 'தந்ததானா' என்ற சந்தக் குழிப்புடன் அனைத்துப் பாடல்களும் முடிவடைவதைக் காணமுடிகின்றது. தொங்கலை ஒரு வரியில் அமைத்து 8 வரிகள் கொண்ட பாடல்களாகவும், இரண்டு வரிகளில் தொங்கல் அமைத்து 16 வரிகளும், 8 அடிகள் கொண்ட பாடல்களாகவும், மூன்று வரிகளில் ஒரு தொங்கல் அமைத்து 24 வரிகளைக் கொண்ட பாடல்களாகவும் இயற்றியுள்ளார். 6 வரிகளுக்கு ஒரு தொங்கல் எனவும், 12 வரிகளுக்கு ஒரு தொங்கல் எனவும், 32 வரிகளுக்கு ஒரு தொங்கல் என 8 அடிகளாக அமைத்து வீதம் ஒரு பாடலாக பாடியுள்ளதைக்

காண முடிகின்றது. திருப்புகழைப் போலவே தொங்கல் அமைப்பை, ஒரு தாளத்திற்குள் அடக்கியும் பாடலாம் அல்லது தனி ஒரு தாளத்திற்கு நீட்டியும் பாடலாம். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அறுசமயங்களை ஆதரித்து வந்தததையும், அவற்றுள் முருகனையே (கௌமார சமயத்தை) உயர்வாகக் கருதியதையும் அவர் பாடல்களில் காண முடிகின்றது. சிவக்குமாரா, சக்திபாலா, யானைசோதரனே, மால்மருகனே என்ற சொற்களின் மூலம், புராணங்களில் வரும் கதைகளைக் கூறி அவர்களுடன் முருகனுக்கு உண்டான உறவினைக் கூறி முருகனை முன் நிறுத்தி உள்ளதை ஒவ்வொரு பாடலிலும் காண முடிகின்றது.ராமாயண கதைகளில் வரும் நிகழ்ச்சிகள், மகாபாரதத்தில் வரும் பாண்டவர்களின் கதைகள், புராணக் கதைகள் மேலும் உபநி'த் வாக்கியங்கள், சித்தர்களின் செயல்கள் போன்றவற்றை தன் பாடல்களில் கூறியுள்ளார்.

**சந்தமாலிகைத் திருப்புகழில் கையாண்டுள்ள கருத்துக்கள் சில**

இத்திருப்புகழ் பாடல்களில், 4வது பாடலில் அந்து உண்ட நெல் போல என்று வழங்கும் பழமொழியை கூறியுள்ளார்.

*அந்து ணுஞ்சிறு சாலி என்றுளம்*
*வங்கிற் றோய்தரு கிழட்டு நாயொரு*
*சந்தைக் கூடுறில் அதற்கு நேர்துயர்*
*வந்திட்டூர்தொறும் அலைப்ப தால்மனம் -*
*நொந்துபோனேன்*

என்ற வரியில், 10வது பாட்டில் நாய் சந்தைக்குப் போனது போல என்று பாடியுள்ளார். ஆறுபடை வீட்டினுள் உயர்ந்த செந்திற் - றம்பிரானே' என்ற வரியில், படைவீடுகள் ஆறில் முதன்மையானது திருச்செந்தில்பதி என்ற கருத்தை 6ம் பாட்டில் கூறியுள்ளார். பெறுமவற்றுள் யாமறிவதில்லை என்ற திருக்குறளை 80வது பாட்டில் எடுத்துக் கூறியுள்ளார்.

*வினைபோ கமதால் வரும் உடற்கே யிரைதேடிநின்*
*வறற்கூ றியபாடல்உ ணர்ந்திடாதே*

என்ற வரியில், 'வினைப் போகமே ஒரு தேகம்' என்ற பட்டினத்தார் வாக்கை 93வது பாடலில் கூறியுள்ளார்.

*அருகாதியர் பரம் - எனவோ திடும்நெறி*
*அடியோ டறநின்மு — கங்களாலே*
*அருளோ டவிர்தரும் - இருமூ விதநெறி*
*அழியா துயரவி — ரும்பிலேனோ*

என்ற வரியில், பரசமயமான சமண நெறிகள் முற்றிலும் அழிந்து வைதிகச் சமயங்கள் உயர விளங்க வேண்டும் என்று 91வது பாட்டில் கூறுகிறார்.

*கறுவியெதிர் வந்து வாதுசெய்*
*பரசமயம் அஞ்ச நான்மறை*
*கழறியம தங்கள் மேலிடல் - கண்டிடேனே*

என்ற வரியில், பரசமயம் அழிய, நான்மறைகள் ஓங்க என 12வது பாட்டில் கூறியுள்ளார்.

*சம்பர னைக்கொன் றுயர் மதனப்*
*புங்கவ னைக்கண் கொடு கொலும்அச்*
*சங்கர னுக்கும் பிரணவஅர்த் தஞ்சொல்வோனே*

என்ற வரியில், சிவனுக்கு உபதேசம் செய்ததை, 'ஓம்'காரத்தின் வேதக் கருத்தை முருகன் கூறுவதை 90வது பாட்டில் கையாண்டுள்ளார்.

*கொன்றுடற் கொண்டு கூறுசெய்(து)*
*உண்டுவக் கும்பொ லார்நெறி*
*குன்றுறக் கொண்ட ஞாயம — றந்திடாதே*

என்ற வரியில், புலால் உண்ணுதலை, பொல்லாதவர்கள் என்று சாடியுள்ளார். இதிலிருந்து இவர் ஜீவகாருண்யத்தை ஆதரித்தது 81வது பாட்டில் வெளிப்படுகின்றது.

*ஐந்து பூதமும்இ லாதிருக்கும் அங்கு*
*நின்ற தானமுதல் மூலசத்தி யென்றும்*
*அந்த மாயையும்இ லாதுவந்து வென்றும் - இந்த*
*வாறாய்*
*அன்பர் கூறும்இரு பேதமற்ற தென்றும்*
*ஒன்ற தாய்அளவில் கோலமுற்ற தென்றும்*
*அம்பு யாதனன் நாள்பிதற்ற நின்ற-விஞ்சையூடே*
*உந்தும்நீ உனைய லாதுமற்றொர் தஞ்சம்*
*இன்று, வேதமுடன் ஆகமத்தும் இந்த*
*ஒன்றை யேபகர்வ தாமெனத்து ணிந்து-*
*கொண்டுளேன்யான்.*

என்ற வரியில், பஞ்சபூதங்களையும், வேதாந்த ஆகமங்களையும், ஆதரித்தும், த்வைத, அத்வைதக் கருத்துக்களையும் 53வது பாட்டில் கையாண்டுள்ளார். 95ம் பாட்டில், 6வது கலையாக பராசக்தியைப் பற்றிக் கூறும் வரலாற்றில் புகழ் வரிசையில் தனது தந்தை செந்திநாயகம் பிள்ளை மகப் பேறின்றி வருந்தியதும், தமது வழிபாட்டுக்குரிய காந்திமதி (திருநெல்வேலி அம்மன்) திருக்கல்யாணத் திருவிழாவில் அருள் வாக்குப் பெற்ற காரணத்தால்தான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் மகவாகப் பிறந்ததுமான கருத்தைக் குறிப்பாக உணர்த்தி பாடியுள்ளார். மிகப்பெரிய சந்தப் பாட்டாகவும் இப்பாடல் உள்ளது. ஒவ்வொரு கலையும் 32 வரிகளைக் கொண்டுள்ளது.

*.... .... .... எனக்கொரு*
*மகனரு ளிக்கண் பாரென வேய்வன*
*நகரில டுத்துய்ந் தான்உள மேயவள் - செங்கையானே*

இதில் வேய்வனம் (திருநெல்வேலி) முன்பு மூங்கிற் காடாயிருந்தது என்பது புராண வரலாறு. (சுவாமிகளின் வரலாற்று குறிப்பில் பல இடங்களில் வருகின்றது). மேலும், வேதாந்த, சித்தாந்த கருத்துக்களும், தமது கௌமாரக் கொள்கையும், முருகன் அருள் தன்மைகளும், சிறப்புக்களையும், சுவாமிகளுக்குக் கிட்டிய அநுபூதிகளையும், அடியவர்களின் வரலாற்றையும், செந்தூரின் சிறப்புகளையும், பெருமைகளையும், பாடல்களில் கையாண்டுள்ளார். மேலும் உலகியல்புகளையும், உலகத்தின் போக்கு, பெண் மேல் மோகம், செல்வந்தர்களின் இயல்புகள், உலோபப் பண்புகளையும், ஆசை, கோபம், குரோதம், போன்ற மனித இயல்புகளையும், அதனால் உண்டான விளைவு களையும் கருத்தாகக் கொண்டு இவற்றிலிருந்து விடுபட அருள் வேண்டியும் பாடியுள்ளார். ஜீவகாருண்யத்தை போற்றியுள்ளார். பரசமயமான சமணர்களை இவர் ஆதரிக்கவில்லை எனத் தெளிவாகின்றது. அறுசமயத்தை உய்விக்க வேண்டும் என்றும் கூறியுள்ளார்.

ஒற்றையடி திருப்புகழாக 10 பாடல்களைக் காண முடிகின்றது. (7, 17, 27, 37, 46, 56, 66. 76, 87, 96 போன்ற பாடல்கள் ஒற்றையடித் திருப்புகழாகும்). இரண்டு கலை கொண்ட திருப்புகழ் பாடல்கள் 35. மேலும் மூன்று கலை கொண்ட திருப்புகழ் பாடல்கள் 52. 6 கலை கொண்ட பாடல் ஒன்றும், 12 கலை கொண்ட பாடல் ஒன்றும், 32 கலை கொண்ட பாடல் ஒன்றும் என 100 திருப்புகழ் பாடல்களை இயற்றியுள்ளார்.

இப்பாடல்களை இன்றும் கோவை மாவட்டத்தில் உள்ள சரவணம்பட்டி கௌமார மடாலயத்தில் ஒவ்வொரு வருடமும் "வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் திருப்புகழ் விழா" எனக் கொண்டாடும் பொழுது சுவாமிகளின் பாடல்கள் பாடப்பட்டு வருகின்றது. மேலும் தண்டபாணி சுவாமிகளுக்கு ஆவணி மாதம் திருவோண நட்சத்திரத்தில் குருபூஜை விழா ஒவ்வொரு வருடமும் கொண்டாடப்படுகிறது. 2017ம் ஆண்டு ஜுலை மாதம் 11-ம் நாள் சுவாமிகளுக்கு குரு பூஜை விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மேலும் திருவண்ணாமலையில் "அருணகிரிநாதர் திருப்புகழ் திருவிழா" ஆகஸ்டு மாதம் 15-ம் நாள் கொண்டாடப்படுகின்றது. அதில் தண்டபாணி சுவாமிகளின் திருப்புகழ் பாடல்கள் பாடப்பட்டு வருகின்றது.

**முடிவுரை**

*திருப்புகழைக் கற்க திருப்புகழைக் கேட்க*
*திருப்புகழை நித்தஞ் செபிக்கத் திருப்புகழை*
*அர்ச்சிக்க முத்தியெளி தாகுமே - கூற்றை வென்று*
*கெர்ச்சிக் லாமே கெடீ*

என்ற நூற்பயன் மூலம் திருப்புகழைப் பாடி திருவடியைக் கைதொழுது முருகனின் திருவருளைப் பெற்று மறுப்பிறப்பில்லா உயர்ந்த விடுபேற்றை அடைவோமாக! இப்பிறப்பை உய்வடையச் செய்வது திருப்புகழே! திருப்புகழே! திருப்புகழே!

# முருகனின் ஆறுபடை வீடுகளுடன் திருவிடைக்கழி ஸ்தலம் - ஓர் ஒப்பீடு

**அ. கார்த்திகேயன்,**
இசைத்துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
சிதம்பரம்.

தமிழ்நாட்டில் எத்தனையோ கடவுள் உண்டு, தெய்வங்கள் உண்டு, தேவதைகள் உண்டு, அவ்வளவு தெய்வங்களுக்கும் இல்லாத தனிச் சிறப்பு ஒன்று முருகனுக்கு உண்டு. வேறு எந்த தெய்வத்தையும் "தமிழ்க் கடவுள்" என வழங்குவதில்லை. அன்று முதல் இன்று வரை முருகன் ஒருவனைத் தான் தமிழுக்குரிய தனிப் பெருங்கடவுளாகச் சான்றோர் போற்றி வருகின்றனர். தமிழ் இலக்கியங்களும் அவ்வாறே குறிப்பிடுகின்றன. இவ்வகையில் தமிழ்நாட்டில் திருவிடைக்கழி ஸ்தலம் சிறப்பு பெற்றது. இத்தலத்தை முருகனின் ஆறுபடை வீடுகளுடன் பின்வருமாறு ஒப்பிட்டுப் பார்ப்போம்.

**திருவிடைக்கழி**

திருவிடைக்கழி ஸ்தலம் நாகை மாவட்டம், தரங்கம்பாடி வட்டத்தில் தில்லையாடியிலிருந்து இரண்டு கிலா மீட்டர் தொலைவில் உள்ளது. திருவிடைக்கழிக் கோயிலின் மூர்த்தி திருமுருகனாய்க் குராமரத்தின் நிழலில் எழுந்தருளியுள்ளார். அவருக்குள்ள தனிச் சிறப்புக்களை நோக்குகையில் படைவீட்டுச் சிறப்பிற்குரிய மூர்த்தியாகவே கொள்ள முடிகின்றது. அம்மூர்த்தி "சுப்பிரமணியர்" என்ற திருப்பெயரால் அழைக்கப்படுகிறார். "சுப்பிரமணியன் என்னும் சொல்லுக்கு, அந்தணருக்கும், வேதத்திற்கும் முதன்மை மிக்க தேவன் என்று பொருள் தரும். "சுப்ரமண்யம்", இன்பத்தினையே இயல்பாக உடைய சிவபரம் பொருளின்றி வேறன்றி விளங்குபவன். சு + பிரம்ம + (நயம்) ண்யம், எனப் பொருள் கூறுவர்" எனவே "பிரமண்யம்" என்று சொல்ல பிரம்ம ஞானத்தில் விருப்பத்தை வளர்ப்பது எனப் பொருள்படும். "க" அடை மொழியாக வந்துள்ள வடமொழியாகும்.

**முருகனுக்குரிய பல்வேறு பெயர்கள்**

1. முருகன் - அழகுடையவன்
2. குமரன் - இளையவனாய் எழுந்தருளியிருப்பவன்
3. குகன் - அன்பர்களின் இதயமாகிய குகையில் எழுந்தருளியிருப்பவன்.
4. காங்கேயன்- கங்கையால் தாங்கப்பட்டவன்.
5. சரவணபவன்- சரவணப் பொய்கையில் உதித்தவன்

| | | |
|---|---|---|
| 6. சேனாபதி | - | தேவர்களின் துன்பம் போக்கச் சேனைகளைத் திரட்டி அவற்றிற்குத் தலைமை தாங்கிச் சென்றவன். |
| 7. சுவாமிநாதன்- | | தந்தைக்கு உபதேசித்தவன் |
| 8. வேலன் | - | வேலினை ஏந்தியவன் |
| 9. கந்தன் | - | ஒன்று சேர்க்கப்பட்டவன். (ஆறு உருவங்களையும் உமாதேவி ஒன்று சேர்க்க ஓருருவமாயினவன்) |
| 10. கார்த்திகேயன்- | | கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டவன். |
| 11. சண்முகன்- | | ஆறு முகங்களை உடையவன் |
| 12. ஆறுமுகன்- | | ஆறு முகங்களை உடையவன் |
| 13. தண்டபாணி- | | தண்டாயுதத்தைக் கரத்தில் ஏந்தியவன் |
| 14. சுப்பிரமணியன்- | | மேலான பிரம்மத்தின் பொருளாக இருப்பவன். |
| 15. வடிவேலன்- | | அழகுடைய வேலை ஏந்தியவன் |
| 16. குருநாதன் - | | தந்தைக்குக் குருவாக இருந்து உபதேசித்தவன். |

இப்படிப் பல்வேறான பெயர்களைக் கொண்ட முருகன் திருவிடைக்கழியில், மேலான பரபிரம்மத்தின் பொருளாக "சுப்பிரமண்யன்" என்னும் திருப்பெயர் கொண்டு வீற்றிருக்கிறார்.

ஆகம நூலான குமார தந்திரத்தில் கூறப்பெற்றுள்ள அமைப்பில் ஒரு முகமும், இரு கைகளும் பெற்றுள்ளார். வலதுகை, அபயம் அளிக்கும் நிலையில் உள்ளது. இடதுகையைத் தொடையில் வைத்த நிலையில் காட்சி தருகின்றார். இத்தலத்திலுள்ள திருமுருகன் ஐந்தரை அடி உயரத்தில் நின்ற திருக்கோலத்தில் அருள் செய்கின்றார். முருகனின் சிலை கிழக்குத் திசை நோக்கி அமைக்கப்பட்டுள்ளது. அச்சிலையின் இடதுகையில் சேவல் கொடியும், வலது கையில் வச்சிர வேலாயுதமும், வலது காலில் பூணும், திருப்பாதங்களில் வீரக் கழலும், மார்பில் வாகுவலயம் என்ற ஆபரணமும் அணிந்த திருமேனி யழகை வருணிக்க இயலாது. தம்மை வணங்கும் அடியவர்களுக்கு அருள் பொழிகின்ற கண்களுடன் இறைவன் அருள் செய்கின்றதை அகத்தியரின் பாடல் மூலம் அறியலாம். முருகனுக்குப் பின்புறம் (மேற்கில்) ஸ்படிகலிங்கமும், முன்புறம் (கிழக்கில்) பாபநாசப் பெருமான் லிங்க வடிவில் தனிக் கருவறையில் காட்சியளிக்கும் அதிசயம் கருவறைக்குள் மற்றொரு கருவறையாக முருகனும் சிவனும் சேர்ந்து சிவகுமாரனாக குமார சிவமாக காட்சியளிக்கின்றனர். இனி ஆறுபடை வீடுகளுடன் எவ்வெவ் வகையில் இத்தலம் ஒன்றுபட்டு விளங்குகின்றது என்பதனை இப்பகுதி விளக்குகின்றது.

**திருப்பரங்குன்றமும், திருவிடைக்கழியும்**

சிவபெருமானின் நெற்றிக்கண் தீட்ஷையைப் பெற்றவர் நக்கீரர். சிவனருள் பெற்ற பின் திருமுருகாற்றுப்படை (பதினோராந்திருமுறை) நூலை நக்கீரர் அருளினார். முருகன் புகழ் விரிக்கும் முருகாற்றுப்படை பாடலை அருளிச் செய்த பெருமை உடைய தலம் திருப்பரங்குன்றம்.

சிவபெருமானுக்குக் களி உணவு அளித்தவர் சேந்தனார். இவர் சிவனருள் பெற்றபின் திருவிசைப்பாமலை அருளிச் செய்த பெருமை உடைய தலம் திருவிடைக்கழியாகும்.

**திருச்செந்தூரும், திருவிடைக்கழியும்**

திருச்செந்தூரில் சூரசம்காரம் நடந்தது. சூரனைச் சம்கரித்த பின்னர் முருகன் திருச்செந்தூரில் சிவனைப் பூஜித்தார். திருச்செந்தூரில் கருவறையில் முருகனின் பக்கமாக சிவபெருமான் எழுந்தருளி இருக்கிறார். மூலவரான பாலசுப்பிரமணியருக்கு முன் யானை தான் வாகனமாக உள்ளது.

திருவிடைக்கழியில் சூரனின் குமாரன் இரண்யாசூரனை முருகன் சம்கரித்தார். பின்னர், திருவிடைக்கழியில் குராமர நிழலில் சிவனைப் பூஜை செய்தார். திருவிடைக்கழியில் கருவறையில் முருகனின் பக்கமாக சிவபெருமான் எழுந்தருளியிருக்கிறார். மூலவரான பாலசுப்பிரமணியருக்கு முன் யானை தான் வாகனமாக உள்ளது.

**பழனியும், திருவிடைக்கழியும்**

பழனியில் இடும்பனுக்கு அருள் புரிந்த குராவடி வேலர் இன்றும் பழனிமலைப் பாதையில் குராவடிக் குமரன் சந்நிதியும், குராமரமும் உள்ளன. மலை ஏறிச் செல்பவர்கள் இதனை வணங்கிச் செல்ல வேண்டும் என்பது மரபு. திருவிடைக்கழியில் மூலமூர்த்தி குராவடிவில் கோயில் கொண்டுள்ள குமரன், குராவடி வேலன் ஆவார்.

**சுவாமிமலையும், திருவிடைக்கழியும்**

அடியார்களின் ஆணவ இருளை அகற்றி ஆத்ம ஆனந்தம் அளிக்கும் முருகன் தலங்களாக சுவாமி மலையையும், திருவிடைக்கழியையும் அருணகிரி நாதர் குறிப்பிடுகிறார். இதனை,

*“ஆணவ அழுக்கு அகற்றி*
*ஆவியை விளக்கி அநுபூதி*
*விளைவித்ததொரு பார்வைக்காரன்*
*ஏரகம், இடைக்கழி.... வாசக்காரன்”*

என்ற பாடல் வாயிலாக அறிய முடிகின்றது.

**திருச்செந்தூரும், திருவிடைக்கழியும்**

*“பதியான திருத்தணிமேவு பெருமானே*
*பலகாலும் உனைத் தொழுவோர்கள்*
*மறவாமல் திருப்புகழ் கூறி...”*

*“இடைக்கழி மேவு பெருமாளே*
*உள கமலப் பதம் நாடி உருகி உளத்து*
*அமுது ஊற உனது திருப்புகழ் ஓத அருள்வாயே”*

என்ற பாடல்களில் அருணகிரிநாதர் திருப்புகழ் ஓத அருள் பாலிக்கும் திருக்கோயில்களாக திருத்தணிகையையும், திருவிடைக்கழியையும் விளக்குகின்றார். இவ்வகையில் ஒன்றுபடக் கூடிய செய்திகள் சில எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இனி வேறுபடக் கூடிய இடங்கள் சுட்டப்படுகின்றன.

இக்கோயில் கொடிமரத்தின் முன்புறம் விநாயகப் பெருமானும், முருகப் பெருமானும் வீற்றிருந்து காட்சி தருகின்றனர். வேறு எவ்விடங்களிலும் கொடி மரத்தில், விநாயகப் பெருமானும், முருகப் பெருமானும் இணைந்திருப்பதாகத் தெரியவில்லை. திருப்பரங்குன்றத்தில் கொடிமர மண்டபத்தின் முன்புறம் மயில், நந்தி, மூசிகம் ஆகிய மூன்றும் அமைந்து விளங்குகின்றன திருச்செந்தூரில் கொடி மரத்தின் அருகே கம்பத்தடி விநாயகர் காட்சித் தருகின்றார்.

திருவிடைக்கழியில் முருகப் பெருமானுக்குக் கீழே மகாமண்டபத்தில் முருகனுக்குரிய யானையும், சிவபெருமானுக்குரிய நந்தியும் அமைக்கப்பட்டுள்ளன.

திருப்பரங்குன்றத்தில் முருகப் பெருமானின் திருவடியில் எம்பெருமானது வாகனங்களாகிய யானை, ஆடு ஆகியவற்றின் உருவங்கள் உள்ளன.

கருவறையில் திருவருள் பொழியும் முருகனின் கோலம் வேறெங்கும் அமைந்திராத ஒன்று. முதலில் இக்கோயில் சிவன் கோயிலாக இருந்துள்ளது. அக்கோயிலின் இரண்டாம் பிரகாரத்தின் தென்புறத்திலுள்ள சிற்றம்பலமே இதற்குச் சான்றாகும். மேலும் திருச்சுற்று மாளிகையின் மேல் காளை வாகனச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளதும் கண்கூடாகும். மற்றொன்று இக்கோயில் அமைவதற்குக் காரணமாக இருந்த முசுகுந்த சக்கரவர்த்தி என்ற மன்னனைப் பற்றி குறிப்பிடும் போது இவன் சிவனருள் பெற்று பூவுலகில் மானிடராக அவதரித்தவர் என்று கலைக் களஞ்சியம் குறிப்பிடுகின்றது.

**திருவிடைக்கழியில் வழிபடும் முறை**

ஆறுபடை வீடுகளுள் ஒன்றாக வைத்து எண்ணத்தக்கப் பெருமைகள் கொண்டது திருவிடைக்கழித்தலம். இத்தலத்தில் ஊரின் முதலிலுள்ள ஐந்நூற்று விநாயகரை வழிபட்ட பின்னரே முருகப் பெருமானை வழிபட வேண்டுமென்பது மரபாகும்.

**முடிவுரை**

ஒவ்வொரு படைவீட்டினையும் இலக்கிய, புராண அடிப்படையிலும் திருவிடைக்கழித் தலத்தோடு ஒப்பிட்டும் விளக்கப்பட்டுள்ளது. திருவிடைக்கழி இறைவனை வழிபடும் முறை தெளிவாக்கப்பட்டது. மேலும் இக்கட்டுரையில் திருவிடைக்கழி மூர்த்திக்கு உரிய தனிச் சிறப்பும், ஆறுபடை வீடுகளுள் ஒன்றாக வைத்து எண்ணக் கூடிய சிறப்பும் விவரிக்கப்பட்டுள்ளது.

## திருப்புகழில் திருமுறைகள்

**பு. கிருஷ்ணவேணி ராமச்சந்திரன்**
ப.எண்.100, பு.எண்.65 L.M.S. வீதி
பாப்பநாயக்கன் பாளையம்
கோயமுத்தூர்

ஐந்து முகச்சிவனே, அதோமுகம் என்ற ஆறாவது முகத்தோடு கூடி ஆறுமுகனாகிறான். நாம் உய்ய நம் உள்ளத்தில் ஓங்காரமாய் நின்று நம்மைச் செலுத்தும் மூத்த பிள்ளையார், நாம் பக்குவமுற்ற காலத்து ஆறுமுக குருவாக வந்து நம்மை ஈடேற்றுகிறார். "முருகன் தனிவேல் முனி நம் குரு" என்று கந்தர் அநுபூதியில் நமது பரமகுருநாதர் அருணகிரியார் போற்றுவது இங்கு நினைக்கத்தக்கது. ஐம்முகச் சிவனை பன்னிரு திருமுறைகள் போற்றி செய்கின்றன. ஆறுமுகச் சிவனைத் திருப்புகழ், கந்தர் அலங்காரம், அநுபூதி, கலிவெண்பா போன்ற நூல்கள் போற்றி செய்கின்றன.

*"பெற்று முகந்தது கந்தனையே பிரமபுரம் உகந்தனையெ்"*
(சம்பந்தர் 3-113-1) என்று சம்பந்தரும்,
"ஆறு கொலாம் அவர் தம் மகனார் முகம்" (4-18-16) என்று அப்பரும்
"*பொன்னனை மயிலூர்தி முருகவேள் தாதை*" (7-38-8) என்று சுந்தரரும்

முருகப் பெருமானைப் போற்றி செய்கின்றனர். வழிபடும் நெறி சைவம், கௌமாரம் என்று இரண்டாக இருப்பினும் வழிபடப்படும் பொருள் ஒன்றே ஆதலால், திருப்புகழில் பன்னிரு திருமுறைகளின் தாக்கம் இருக்கும் என்பதில் ஐயமில்லை. மேலும் திருப்புகழ் காலத்தால் பிற்பட்டது என்பதும் நினைக்கத் தக்கது. திருப்புகழ், திருமுறையோடு இயைந்து செல்லும் நயத்தை இக்கட்டுரையில் காணலாம். இங்கு முதலில் திருமுறையும் அடுத்து திருப்புகழும் முறையே இடம்பெற்றுள்ளன.

1. *"பொன் பொதி மத்தமாலை புனல்சூடி வந்து"* (சம்பந்தர் 2-85-2)
1. *"மத்தப் பொற்போது பகீரதி மதிசூடும்"*
(மக்கட்கு கூறரிதானது எனத் தொடங்கும் காஞ்சிபுரம் திருப்புகழ்)

2. *"திருவான்மி யூருறையும் அறிவே உன்னை யல்லால்*
*அடையாடி தனதாதரவே"* (சம்பந்தர் 3-55-9)
அறிவே நின்னையல்லால் இனியாரை நினைக்கேனே(சுந்தரர் 7-24-9)
2. *"அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே"*
(குமர குருபர குணதர எனத் தொடங்கும் திருவருணைத் திருப்புகழ்)

3. *"கூற்றை அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே"*
*"ஏத்துவார்க்கு இடரான கெடுப்பன அஞ்செழுத்துமெ"*(சம்பந்தர் 3-22-1,3)
3. *"செருவெங்க ளத்தில் வந்த அவுணன் தெறித்து மங்கசிவ*
*மஞ்செழுத்தை முந்த விடு வோனே"*

(பருவம் பணைத்திரண்டு எனத் தொடங்கும் சிதம்பரம் திருப்புகழ்)

4. *"நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்*
*ஆறுகோடி நாராயணர் அங்ஙனே"* (அப்பர் 5-100-3)

4. *"அரிய சமய ஒருகோடி அமரர்*
*சரணர் சதகோடி அரியும் அயனும் ஒருகோடி"*
("சுருதி மறைகளிருநாலும்" எதைத் தொடங்கும் உத்தரமேரூர் திருப்புகழ்)

5. *"பாடக மெல்லடி பாவையோடு நாடகமாடு நம்பெருமான்."* (சம்பந்தர் 1-7-1)
*வரைமகளோடுடனாடுதிர்* (சம்பந்தர் 3-124-2)

5. *"தற்பரனோடு ஆடு அபிராமி"*
("தத்தை மயில் போலும்" எனத் தொடங்கும் சிதம்பரம் திருப்புகழ்)

6. *"என்னுடைய தோழனுமாய்"* (சுந்தரர் 7-51-10)

6. *எமக்கமிர்த தோழா"*
(நாடாப்பிறப்பு எனத்தொடங்கும் சிதம்பரம் திருப்புகழ்)

7. *"உனையே நினைந்திருந்தேன் வந்தாய் போயறியாய் மனமே புகுந்து நின்ற"* (சுந்தரர் 7-21-1)
*"பொற்திருவடி என்குடிமுழுதாளப் புகுந்தன போந்தன இல்லை"*
(நெற்றியில் கண் எனத் தொடங்கும் கருவூர்த் தேவர் திருவிசைப்பா)

7. *நினைவோர் சித்தமொடு அகலாமற் புகு"*
(பனி போலத்துளி எனத் தொடங்கும் சிதம்பரம் திருப்புகழ்)

8. *"பாளைபடு பைங்கமுகு செங்கனி உதிர்த்திட,*
*நிரந்து கமழ்பூ வாழை குதிகொள மடல் விரிய"*(சம்பந்தர் 3-70-3)

8. *"கமுகினிற் குலையறக் கதலியிற் கனியுகக் கழையின் முத்தமுதிரத்"*
("ஒருவரைச் சிறுமனை" எனத் தொடங்கும் திருவிரிஞ்சபுரம் திருப்புகழ்)

9. *"காலை எழுந்து தொழுவார் தங்கள் கவலை*
*களைவாய் கறைகண்டா"* (சுந்தரர் 7-41-5)

9. *"காலையில் எழுந்து உன் நாமம் மொழிந்து*
*காதலுமை மைந்த எனவோதி"*
(மாலை தனில் வந்து எனத் தொடங்கும் கும்பகோணம் திருப்புகழ்)

10. *"என்தன் வாழ்முதலே எனக்கு எய்ப்பினில் வைப்பே"*
(திருவாசகம் - நீத்தல் - 39)

10. *"புவியில் அன்றைக்கற்று எய்;ப்பவர் வைப்பு என்று உருகா"*
("கனி தரும் கொக்கு" எனத் தொடங்கும் காஞ்சிபுரம் திருப்புகழ்)

11. *"சமயவாதிகள் தம்தம் மதங்களே அமைவதாக அரற்றி மலைந்தனர்"*
(திருவாசகம் - போற்றித் திருவகவல் 52-53)

11. *"வம்பறாச் சில கன்னமிடுஞ் சமயத்துக் கத்து திரையாளர்*
(வம்பறா எனத் தொடங்கும் காஞ்சிபுரம் திருப்புகழ்)

12. *"பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி*
*நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி*
*தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி*
*வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி*
*வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி*
(திருவாசகம் - போற்றி திருவகவல் - 137 - 141)

12. *மதிய மண்குண மஞ்சு நால்முக நகர முன் கலை கங்கை நால்குண மகரமுன் சிகர அங்கி மூணிடை தங்கு கோண மதன முன் தரி சண்டமாருதம் இருகுணம் பொறி... அகன்படாகம் ஒன்று சேரும்*
(மதிய எனத் தொடங்கும் சிதம்பரம் திருப்புகழ்)

13. *"காயத்துள் அமுது ஊற ஊற நீ கண்டு கொள் என்று காட்டிய"*
(திருவாசகம் 42-5)

13. *"உன் கமலப்பத நாடி உருகி உளத் தமுதூற*
*உனது திருப்புகழோத அருள்வாயே"*
(பழியுறு சட்டகமான எனத் தொடங்கும் திருவிடைக்கழிஇ திருப்புகழ்)

14. *"சிறு நாயினும் கடையாயவெம் கட்டனேனையும் ஆட்கொள்வான்"*
*(திருவாசகம் 30-2)*

14. *"துட்டனெனக் கட்டனெனப் பித்தனெனத் திரிவேனை*
*பத்தரில் வைத்தருள்வாயே"*
("பட்டுமணிக் கச்சிறுக" எனத் தொடங்கும் கொட்டையூர் திருப்புகழ்)

15. *"நரியைக் குதிரைப் பரிஆக்கி ஞாலம் எல்லாம் நிகழ்வித்து"*
(திருவாசகம் 50-7)

15. *"நரிமிகுக் கிளைகளைப் பரியென*
*கடிவளக் கையில் பிடித்தெதிர் நடத்திடு மீசன்"*
("கரிமுக டக டகளிறு" எனத் தொடங்கும் திருவருணைத் திருப்புகழ்)

16. *"அழல் கான்ற நஞ்சை எனத்தாவென வாங்கியதுண்ட கண்டன்"*
(சம்பந்தர் 2-19-10)

16. *"கொடுவிட மதுதனை வாங்கியே திருமடறினியிரு வென ஏந்தும் ஈசர்"*
("தரையினில் வெகுவழி" எனத் தொடங்கும் கூந்தலூர் திருப்புகழ்)

17. *"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே....*
*காண்பார் ஆர் கண்ணுதலாய் காட்டாக்காலே"*
(திருநாவுக்கரசர் 6-95-3)

17. *"என்னால் பிறக்கவும் என்னால் இறக்கவும்....*
*என்னால் தரிக்கவும் இங்கு நான் யார்?"*
(என்னால் பிறக்கவும் எனத் தொடங்கும் வயலூர் திருப்புகழ்)

18. *"ஓசை ஒலியெல்லாம் ஆனாய் நீயே"* (அப்பர் 6-38-1)

18. *"நாதத் தொனியோனே"*
(நீ தத்துவமாகி எனத் தொடங்கும் (மதுரை திருப்புகழ்)

19. *"ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க"* (திருவாசகம் - சிவபுராணம்)

19. *"ஏகமாய்ப் பலவாய்ச் சிவ போகமாய்"*
(ஏகமாய் எனத் தொடங்கும் பொதுத் திருப்புகழ்)

20. *"மும்மதிலும் நொடியளவிற் பொடிசெய்த முதல்வன்"*
(சம்பந்தர் 1-131-4)

20. *"திரிபுரமதனை ஒரு நொடியதனில் எரிசெய்தருளிய சிவன் வாழ்வே"*
(திரிபுரமதனை எனத் தொடங்கும் பொதுத் திருப்புகழ்)

21. *"பூதமொடு பேய்கள் பல பாட நடமாடி"* (சம்பந்தர் 2-32-6)

21. *"அலகையுடன் பூதம் புல கவிதம் பாடும் அடைவுடன் நின்றாடும்"*
(கலகமதன் காதும் **எனத்** தொடங்கும் பொதுத் திருப்புகழ்)

22. *"கானப்பேர் கைதொழல் கருமமே"* (சம்பந்தர் 3-26-10)

22. *"வேளைப் போற்றுகை, கருமமென வந்து தொழ*
("பரதவித புண்டரிக" எனத் தொடங்கும் பொதுத் திருப்புகழ்)

23. *"ஒன்று உண்டு, இல்லை என்ற அறிவு ஒளித்தும்"*
(திருவாசகம் 3-139)

23. *"அகில வாதிகளும் சமயங்களும் அடைய*
*ஆமென அன்றென நின்றதை அறிவிலேன் அறியும்படி"*
(புகரில் சேவல எனத் தொடங்கும் பொதுத் திருப்புகழ்)

24. *தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று*
*அழுது காமுற்று அரற்றுகின்றாரையும்*
*பொழுது போக்கிப் புறக்கணிப்பாரையும்*
*எழுதுங் கீழ்கணக்கு இன்னம்பர் ஈசனே* (அப்பர் 5-21-8)

24. *"கலக்குண்டாகு புவிதனில் எனக்குண்டாகு பணிவிடை*
*கணக் குண்டாதல்"* (புவிக்குன் பாதமன எனத் தொடங்கும் திருப்புகழ்)

25. *"வேழக்கைபோல் வாழைகாய் குலையீனும் கலிக்காழி"*
(சம்பந்தர் 1-102-2)

25. *"வாங்கு கை யானையென ஈன் குலை வாழை"*
("சாங்கரி பாடியிட" எனத் தொடங்கும் திருப்புகழ்)

26. *"நீறது பூசித் தக்கை கொள் பொக்கணமிட்டு உடனாக"*
(சம்பந்தர் 1-75-5)

26. *பொக்கணத்து நீற்றையிட்டு ஒருத்தனார்க்கு*
(மச்ச மெச்சு எனத் தொடங்கும் பொதுத் திருப்புகழ்)

27. *"கண்ணீர் அருவிபாய"* (திருவாசகம் 27-7)

27. *"விழிபுனல் தேக்கிட"*
(விரகற நோக்கியும் என்று தொடங்கும் எழுகரை நாடு திருப்புகழ்)

28. *"அடியார்க்கு அடியேன்"* (திருத்தெண்டத் தொகை - சுந்தரர்)

28. *"மறவாது உன்நாமம் தொழுபர் பாதம் தொழ"*
(ஊனுந்தசையுடல் எனத் தொடங்கும் பொதுத் திருப்புகழ்)

சம்பந்தப் பெருமான் தான் பாடிய பதிகங்கள் முழுவதிலும் 9வது பாடலில் நான்முகனும், திருமாலும் அடிமுடி தேடிய கதையைப் பாடியுள்ளார். அருணகிரியார், திருவருணைத் திருப்புகழில் (செய செய சரணாத்திரி எனத் தொடங்கும்) "திருமுடி யடி பார்த்திடுமென இருவர்க்கு அடி தல தெரியா படி நிண அருணச் சிவச்சுடர்" என்று பாடியுள்ளார். பொன், பொருள், கல்வி, செல்வம், இடர் நீங்குதல் முதலிய நம் தேவைகளை அடைவதற்கு தமிழ் வேத பன்னிரு திருமுறைப் பதிகங்களை பாராயணம் செய்வது போல திருப்புகழை முருகனடியார்கள் பாராயணம் செய்து மகிழ்கின்றனர்.

முருகப் பெருமானை வரவேற்று மகிழ, வருவாயே, வரவேணும் என்று வரும் பாடல்களும், அவனருளைப் பெறுவதற்கு அருள்வாயே, அருள்தாராய் என வரும் பாடல்களும் பாடப் பெறுகின்றன. முருகப் பெருமானுக்குப் புஷ்பாலங்காரம் செய்யும் போது "ஆசைகூர் பத்தனேன"; எனத் தொடங்கும் பாடலும், அர்ச்சனை செய்யும் போது "நாதவிந்து கலாதி நமோ நமா" போன்ற பாடல்களும், தீபாராதனையின் போது "மூலா நிலமதின் மேலே மனதுறு", "இத்தரணி மீதிற் பிறவாதே" என்று தொடங்கும் பாடல்களும் பாடி முருகனை வழிபடலாம். திருமுறைகள் மெய்கண்ட சாத்திர கருத்துக்கள் நிறைந்து இலக்கியமாகத் திகழ்வது போல, அருணகிரிப் பெருமானின் நூல்களும் சாத்திரக் கருத்துக்கள் நிறைந்து மகிழ்வை ஊட்டுகின்றன. சிவபெருமானுக்கு பன்னிரு திருமுறைகள் போல முருகவேளுக்கும், "முருகவேள் பன்னிரு திருமுறை" என்று வகுத்துக் கொடுத்துள்ளார் டாக்டர் தணிகை மணி வ.சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள். திருத்தொண்டர் புராணம் போல, வரகவி தேனூர் சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் அருளிய சேய்த் தொண்டர் புராணம் பன்னிரண்டாம் திருமுறையாகத் திகழ்கிறது. சேய்த் தொண்டர்த் தொகை, "செந்தில் வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்று தொடங்குகிறது என அறியும் பொழுது இன்பம் மிகுகிறது. கந்தர் அநுபூதி சொல்லி கந்தனடி வாழ்த்துவோர்க்குக் கந்தன் அருளும் சொந்தமாக வந்திடும் அவர்க்கு கலியுகத்தின் துன்பமெல்லாம் தீர்ந்திடும் என்ற ஆன்றோர் வாக்கு இங்கு நினைந்து இன்புறத்தக்கது.

# தமிழ் இலக்கியங்களில் முருகன்

முனைவர் ம. கீதா
உதவிப்பேராசிரியர் - தமிழ்த்துறை,
அவினாசிலிங்கம் மனையியல் மற்றும்
மகளிர் உயர்கல்வி நிறுவனம்,
கோயம்புத்தூர் - 641 043.

தமிழ் நாட்டில் எத்தனையோ கடவுள்கள், சிறுதெய்வங்கள் உண்டு. அவ்வளவு தெய்வங்களுக்கும் இல்லாத தனிச்சிறப்பு முருகனுக்குண்டு. 'முருகு' எனப்பட்ட ஓர் ஆற்றலையே தமிழர் முதலில் வணங்கினர். பின்னர் தனிமனிதச் சிந்தனை வளர்ந்த போது முருகு 'முருகன்' ஆக்கப்பட்டார். முருகனே தனித்தமிழ் கடவுளாகப் போற்றப்படுகிறான். தமிழ் மக்களின் நெஞ்சத்தில் பண்டு தொட்டே நீங்காது நிலைப்பெற்றிருக்கும் அன்பு தெய்வமாக விளங்குபவன் முருகப்பெருமான். அவனுடைய அருள்சுரக்கும் தோற்றமும், கருணையோடு அனைவரையும் காத்து நிற்கும் தன்மையுமே மக்கள் அவனை வழிபடுவதற்கு முக்கியக் காரணமாகும். அத்தகைய முருகப்பெருமானைப் பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## சிவபெருமானும் முருகனும் ஒன்றே

சிவபெருமானும் முருகனும் வேறல்ல ஒன்றே என்ற தத்துவக் கருத்தை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. ஒருகுலம், ஒரு வடிவம், ஒரு குணம் என ஒன்றும் இல்லாதவன் சிவபெருமான். அவனை வழிபடும் மெய்யடியார்கள் அவனை ஆயிரம் நாமம் கொண்டு ஏற்றிப் போற்றி வணங்கி மகிழ்வர். அவனது நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிய முருகப் பெருமானுக்கு வழங்கப்பெறும் பெயர்களோ அத்துணையும் தத்துவத் தொடர்புடைய காரணப் பெயர்கள் என்பதை, "வெகு கோடி நாம சம்பு குமாரா நமோநம" என அருணகிரிநாதர் போற்றுவதில் இருந்து அறியமுடிகின்றது. இருவரும் ஒரே கடவுள். ஒவ்வொரு பொருளுக்கும் தோற்றம், வாழ்வு, ஒடுக்கம் என்ற மூவகை நிலைகளைக் கொடுப்பவன் இறைவன். தொடங்குவதற்காக விரிப்பதைத் 'தோற்றநிலை' என்றும் மூடுவதற்காகக் குவிப்பதை 'ஒடுக்கநிலை' என்றும் கூறுவர். உயிர்களாகிய நமக்காகவே உலகம் முதலியவற்றைச் சிவபெருமான் தானே சிவபிரமனாக இருந்து தோற்றுவிக்கிறான். சிவ விட்டுணுவாக இருந்து காப்பாற்றுகின்றான். இறுதியில் அவற்றைச் சிவ உருத்திரனாக இருந்து ஒடுக்கவும் செய்கிறான் என்பது சித்தாந்தம்.

## சங்க இலக்கியங்களில் முருகன்

சங்க நூல்களில் முருகு, முருகன் என்ற சொற்கள் பயின்று வந்து உள்ளன. நற்றிணை முதல் புறநானூறு ஈறாக உள்ள எட்டு நூல்களிலும் முருகன் என்ற சொல் வழங்கப்பட்டுள்ளதைக் காணலாம். எனவே சங்க காலத்தில் வாழ்ந்த மக்களிடையே முருக வழிபாடு பெருவழக்காக இருந்தது.

சங்க இலக்கியங்கள் பெரும்பாலும் அக இலக்கியங்கள் காதல் கடவுளாகவும், புற இலக்கியங்கள் போர்க்கடவுளாகவும் வைத்துப் பார்க்கின்றன. இலக்கிய நெறியில் நிலங்கள் ஐந்து வகையாகப் பிரிக்கப்படுகிறது. மலையும் மலைசார்ந்த பகுதி 'குறிஞ்சி' என அழைக்கப்படுகிறது. குறிஞ்சி நிலக் கடவுளான முருகனை வீரத்தின் வடிவமாகப் போர்க்கடவுளாக வைத்து வழிபடலாயினர். மலைவாழ் மக்களின் வழிபடு தெய்வமாக முருகன் விளங்கினான். முருகனை 'மலைக்கிழவோன் என்றும் 'குன்றநாடன்' என்றும் தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடுவதை,

*"பழமுதிர் சோலை மலை கிழவோனே"* (திருமுரு. 317)
*"விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிமவ"* (திருமுரு.267)
*"கறிவளர் சிலம்பின் கடவுள்"* (ஐங். பா-243)
*"அருந்திறற் கடவுள் காக்கு முயர்சிமைப் பெருங்கல்"* (புற. பா-158)

எனவரும் பாடலடிகள் மூலம் அறியலாம்.

அகப்பொருளின் ஒவ்வொரு துறையிலும் முருகனுக்குப் பங்குண்டு. அக இலக்கியத் தலைவனை முருகனாக வைத்துப் பேசும் இடங்களும் உண்டு. முருகு, முருகன், வேள் என்ற சொற்களை வழங்காத அக இலக்கியங்களே இல்லை என்று கூறலாம். காதல் மிகுந்து தலைவனைக் காணப்பெறாத காரணத்தால் தலைவி உடல் மெலிந்து வருந்துவதைக் கண்ட தாய் ஏதோ தெய்வக் குற்றம் ஏற்பட்டுவிட்டதாகக் கருதுகின்றாள். மகளின் களவொழுக்கம் காரணமாக உடல் மெலிந்திருக்க, உண்மையுணராத பெற்றோர் முருகனுக்கு மறியறுத்து வெறியாட்டுதலை மேற்கொள்வர். இது நெடுங்காலந் தொட்டு வழங்கி வந்த ஒரு வகை தெய்வ வழிபாடு. இது முருகனைக் குறித்து ஆடப்படுவது. முருகனுக்குப் பூசை செய்யும் பூசாரியாகிய வேலனால் நிகழ்த்தப்படுவது. வேலைக்கையில் தாங்கி இவன் தெய்வ ஆவேசம் வரப்பெற்று, வெறிகொண்டு ஆடும் ஒரு வகை ஆடல்தான் வெறியாடல். இதை, "வெறியறி சிறப்பின் செவ்வாய் வேலன் வெறியாட்டயர்ந்த காந்தாரம்" (புறத்திணை) எனத் தொல்காப்பியர் சுட்டும் அளவிற்கு 'வெறியாடல்' அந்நாளில் செல்வாக்குப் பெற்றிருந்ததை அறிய முடிகின்றது.

தொல்காப்பியர் செக்கர் வண்ணனான முருகனைச் 'சேயோன்' எனக் குறிப்பிடுவதை, "சேயோன் மேய மைவரை உலகமும்" (தொல். பொருள். அகத். நூ.5) என்ற நூற்பா மூலம் அறிய முடிகின்றது. முருகனுக்குரிய பொருட்கள் எல்லாம் சிவப்பாகவே வைத்து வழங்கப்பட்டது என்பதை, "செய்யன், சிவந்த ஆடையன்" (திருமுரு. 206) என்ற பாடலடியின் மூலம் அறியலாம்.

### தனித்தமிழ்க் கடவுள்

தமிழர்தம் வழிபாட்டில் பல தெய்வங்கள் இருந்தாலும் தனிச்சிறப்பு முருகப் பெருமானுக்கு உண்டு. அன்று முதல் இன்று வரை 'முருகன்'

ஒருவனைத்தான் தமிழுக்குரிய தனிப்பெருங்கடவுளாகச் சான்றோர்கள் போற்று கின்றனர். தமிழ் இலக்கியங்களும் அவ்வாறே குறிப்பிடுகின்றன. இதை,

*"சங்கத் தமிழின் தலைமைப் புலவா*
*தாலோ தாலேலோ"* *(முத்துக்குமார. பி.த.பா.375)*

*என்றும்,*

"*பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே*" (திருமுரு. 268)

என்றும்,

*அருமறை தமிழ் நூலடைவே! தெரிந்துரைக்கும் புமலவோனே"*
(திருப்புகழ், பா-211)

என்றும் பாடுவதால் அறியலாம். தமிழ்நாட்டில் முருகனே முதன்மைக் கடவுள் முருகனால் தமிழ் வளர்ந்தது. தமிழை அவர் அகத்தியருக்குக் கற்றுக் கொடுத்தார் என இலக்கியங்கள் கூறுகின்றன.

**தமிழர் மணம் காதல் மணமே**

சங்க காலத்தில் பலதாரமணம் இல்லை. அன்பும், பண்பும் உடைய ஒருவனும் ஒருத்தியும் கூடிவாழ்வதே இல்லறமாக அமைந்திருந்தது. தமிழ் மக்களின் வழிபடு கடவுளான முருகன் ஒரே மனைவியை உடையவன். அதிலும் தமிழரின் முறைப்படி களவொழுக்கத்தில் காதல் மணம் புரிந்தவன். அக்காதலியின் பெயர் வள்ளி இதை, "முருகு புணர்த்தியன்ற வள்ளி போல" (நற். 82) என்ற பாடலடியின் மூலம் அறிய முடிகின்றது. ஆரியக்கதை வந்த பிறகே தேவ சேனைக்கு மணாளனாக முருகன் ஆக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது. வள்ளி தெய்வானை திருமணம் வானுலகத்தின் தலைவனாகிய இந்திரன், சூரபதுமனை வென்றதன் பொருட்டு முருகப்பெருமானுக்குத் தன் மகளாகிய தெய்வானையை மணம் முடித்தான் என்றும், காட்டில் வாழும் குறவர்கள் தலைவனின் மகளான வள்ளியைக் களவு நெறி நின்று மணம் முடித்தான் என்றும் புராணங்கள் கூறுகின்றன.

**முருகனின் நாமங்கள்**

முருகன் என்றால் அழகு, முருகன் அழகிய வடிவமுடையவன். தெய்வங்களிலெல்லாம் அழகிலும், வீரத்திலும் மேம்பட்டவன். அழகில் சிறந்த மயிலை வாகனமாகவுடையவன். இறைவன் அருவமாயும், உருவமாயும் இருப்பவன் என்பது தத்துவநிலை. முருகனுக்கு சிவகுமரன், சரவணன், கந்தன், கடம்பன்,குமரன், சேனாதிபதி, ஞானபண்டிதன்,சுவாமிநாதன், பாலசுப்பிரமணியன், வெற்றிவேலன்,வேலாயுதம், வேலன், கங்கையின்மைந்தன், கார்த்திகேயன், பார்வதிபாலன், சூரசம்ஹாரன், தேவசேனாதிபதி, மயில் வாகனன், சேவற்கொடியோன், வள்ளி மணாளன் முதலிய பல அழகிய பெயர்களால் அழைக்கப்படுவதோடு 'தண்டாயுதபாணி' என்ற சிறப்புப் பெயரும் வழங்கப்படுகிறது.

**கோயில்கள் - ஆறுபடைவீடுகள்**

சங்க கால மக்கள் தத்தம் தெய்வத்தை அமைத்து வழிபடுவதற்கு என்று திருக்கோயில்களை அமைத்திருந்தனர் என்பதை,

*"அணங்குடை முருகன் தோட்டம்"* (புறம். 299)

என்றும்,

*"தாழ்நீர் வெண்டலைப் புணரியலைக்குஞ் செந்தில் நெடுவேள்*
*நிலைஇய காமர் வியன் துறை"* (புறம். 85)

எனவரும் பாடலடிகளின் மூலம் அறிய முடிகின்றது.

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர் திருவாவினன்குடி, திருவேரகம், சுவாமிமலை, பழமுதிர்சோலை எனத் திருமுருகாற்றுப்படை ஆறுபடை வீடுகளை வகுத்துரைக்கின்றது. ஆற்றுப்படையே ஆறுபடை என ஆனதாகக் கருதுவதற்கும் இடமுள்ளது. குன்றிருக்கும் இடமெல்லாம் குமரனிருப்பான் எனும் கருத்தில் ஓதலாந்தையார் 'முருகமர் மாமலை' எனக் குறிப்பார். எனினும், வெறியயோர்களன் காடு, சோலை, துருத்தி, ஆறு, குளம், சதுக்கம், சந்தி, கடம்பமரம், மன்றம், பொதியில், கந்துடைநிலை எனப் பல இடங்களிலும் அவன் விரும்பி உறைவான் எனத் திருமுருகாற்றுப்படை விரித்துக் கூறுகின்றது.

**முருகனிடத்தில் மக்களின் வேண்டுதல்கள்**

குறிஞ்சி நில மக்களான குறவர்கள் தங்களுக்கு மழை வேண்டும் காலங்களில் மழை பெய்வதற்காகவும், மழை மிகுதியாகப் பெய்யும்போது அதனை நிறுத்துவதற்காகவும் முருகனுக்குப் பொங்கலிட்டு பூசை செய்தனர் என்று புறப்பாடல் குறிப்பிடுகின்றது. பிள்ளை இல்லாத குறவர்கள் முருகனை, வேண்டிப் பிள்ளைப்பேறு அடைந்தனர். இதை, "குன்றக் குறவ கடவுட்பேணி இரந்தனள் பெற்றவெள்விலைக் குறுமகள்" என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் மூலம் அறியலாம். பெண்கள் பிரிந்து சென்ற கணவன் மீண்டும் வர வேண்டும் என்றும், தன் வயிற்றில் கருப்பம் உண்டானால் இன்னன்ன செய்வேன் என நேர்த்திக்கடன் பூண்டும் கணவன் தேடும் பொருள் அவர்க்கு நிறையக்கிட்ட வேண்டுமென்றும், சிலர் தமது கணவர் போரில் பகைவரைக் கொன்று வெற்றி பெறுக என்றும் அருச்சனை செய்து வழிபட்டனர். பக்தர்கள் சந்தனம், பால், தேன், நந்தா விளக்கு, மணி, கயிறு, மயில் கரும்பு, யாழ், வீணை, குழல், முரசம் போன்ற பலவகைக் காணிக்கைப் பொருட்களைச் சுமந்து சென்றனர் என்பதை பரிபாடல் மூலம் அறிய முடிகின்றது.

**முருகப்பெருமானின் ஆறுமுகங்கள் - பன்னிரு கைகளின் செயல்கள்**

முருகப் பெருமானின் ஆறுமுகங்களும் ஆறுவிதமாக, பன்னிரு கைகள் பன்னிரு விதமாகவும் பக்தர்களுக்கு அருள்மழை பொழிந்து வருகிறது. முருகனின் திருவடிகள் அன்பர்களைத் தாங்கி நிற்பன் திருக்கரங்கள் பகைவரை அழிக்கும்இடிபோலும் வலிமையுடையன, அவனது ஆறுதிருமுகங்களுக்கேற்ப முறையே பன்னிரு கரங்களும் செயல்புரியும் பாங்கினை இங்கே காணலாம்.

1. உலக இருள் நீங்குமாறு திகழும் ஒளிமுகம். ஒருகை சூரியனின் அனலால் உலகு நிலைகுலையாதவாறு செல்லும் அந்தணரைக் காக்கும். அடுத்த கை இடுப்பில் பொருந்தியிருக்கும்.
2. ஆர்வலர்க்கு வரமளிக்கும் முகம். ஆடையமைந்த தொடைமீது ஒருகை அங்குசம் கடாவி யானையைச் செலுத்துவது ஒருகை.
3. வேள்வி புரியும் அந்தணர்க்கு உதவும் முகம். வேல்ஏந்திய ஒரு கை கேடயம் ஏந்திய ஒரு கை.
4. கல்வியைக் கசடற விளக்கும் ஞானமுகம். ஒரு கை மார்பொடு திகழும் ஒரு கை தாரொடு பொலியும்.
5. பகைவரை அழித்துக் களவேள்வி நிகழ்த்தும் முகம். வேள்வி நிகழ்த்துமாறு மேலெழுந்து சுழன்ற நியில் ஒரு கை. மணியை ஒலிக்கும் ஒரு கை.
6. (வள்ளியம்மையுடன் கொஞ்சுகின்ற முகம்) தேவியருக்கு மகிழ்வைத் தருவது ஒருமுகம். ஒரு கை மழை பெய்விக்கும் மற்றொரு கை வானுலக மகளிர்க்கு மணம் புரிவிக்கும்.

இவ்வாறான ஆறுமுகங்களிலும் மணிமுடிகள் ஒளிவீசும். திருச்செவிகளில் குண்டலங்கள் பொலிவுறும். திருமார்பில் ஆடவர்க்கு இலக்கணமாகிய மூன்று கோடுகள் திகழும் குன்றிமணியையொத்த செவ்வாடை உடுத்தவன், வெண்ணிற ஆடையும் தரிப்பவன், வண்டு மொய்க்காத காந்தள் மலரையும், வெட்சி மலரையும் தொடுத்த தலைக் கண்ணியையும், மார்பில் தவழும் செங்கடம்பு மாலையையும் அணிந்திருப்பவன். மேகத்தின் மின்னலையொத்த வேலாயுதம் ஏந்தியவன். கோழி ஓங்கிய வென்று அடு விறல் கொடி உடையவன். களிறு, மயில், ஆடு இவற்றை ஊர்தியாகக் கொண்டவன் என்றெல்லாம் இலக்கியங்கள் பறை சாற்றுகின்றன.

குறிஞ்சி நிலக்கடவுளாக முருகனை மக்கள் வழிபட்டனர். தமிழ்க் கடவுள் என்றால் முருகன் என்றும் தமிழை அகத்தியருக்கு கற்றுக்கொடுத்தார் என்றும் கூறப்படுகிறது. சங்க காலந்தொட்டே முருக வழிபாடு முதன்மை நிலைபெற்றிருந்ததையும் அகப்பொருள் துறையில் முருகனுக்கு முக்கியப் பங்குண்டு என்பதையும், முருகன் மீது மக்கள் மிகுந்த அன்பு பூண்டு தமது வேண்டுதல்களைக் கூறி வழிபட்டனர் என்பதையும் இலக்கியங்கள் வழி அறிந்து கொள்ள முடிகின்றது. முருகப்பெருமான் திரு அவதாரத்தின் நோக்கமே மிகப் புனிதமானது என்றும் அசுரர்களின் தீய ஆற்றலை எல்லாம் அழித்துத் தேவர்களைக் காத்ததற்காகவே சிவபெருமான் தன் இளங்குமரனை தோற்றுவித்தார் என்றும் சிவபெருமானும் முருகனும் ஒன்றே என்ற தத்துவக் கருத்தையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

## திருச்செந்தூரும் செந்தில்நாதனின் திருவருளும்

முனைவர் **மு.கோமதி,**
இணைப்பேராசிரியர்,
துறைத்தலைவர், தமிழ்த்துறை
சி.கந்தசாமி நாயுடு மகளிர் கல்லூரி, கடலூர்.

உலக உயிர்கள் எல்லாம் தன்னையும் தன்னைச் சுற்றியுள்ளவர் களையும் அறிந்துகொண்டு அறிவில் தெளிந்த நிலையில் இறைவனைக் காண்பதற்கு வகுத்துக் கொண்ட வழிமுறையே வழிபாடு. அவ்வழிபடு முறையில் பல மாறுபாடுகள் உண்டு. தம்மை ஏதோ ஒரு சக்தி இயக்கிக் கொண்டிருக்கிறது என்பதனை அறிந்த மக்கள் தமக்குப் பிடித்த தெய்வங் களையும் வழிபடுவதில் வேறுபடுகின்றனர். அம்மையை அப்பனை அவன் பிள்ளைகளை என இறைவழிபாட்டினை மேற்கொண்டு வாழ்வியல் நெறிகளைப் பின்பற்றுகின்றனர். அந்நிலையில் திருச்செந்தூரில் வீற்றிருக்கும் செந்தில் வேலநாதனை வணங்கி வாழ்க்கையில் தோன்றும் இன்னல்களை அகற்றி வாழும் மனிதர்கள் ஏராளம். முருக வழிபாடு என்பது மிகவும் தொன்மைக்கால முதலே இருந்து வருவது. திருமுருகாற்றுப்படை இலக்கியத்தின் வாயிலாக முருகனே முதற்கடவுளாகவும் தமிழ்க் கடவுளாகவும் தமிழர்க் கடவுளாகவும் இருந்து வருவதை நம்மால் அறியமுடிகிறது. ஆறுபடை வீடுகளில் குடிகொண்ட முருகனின் இரண்டாவது படைவீடாகத் திகழ்வது திருச்செந்தூர் - இதனைத் திருச்சீரலைவாய் என்றும் குறிப்பிடுவர்.

*'திருச்செந்தூரின் கடலோரத்தில்*
*செந்தில்நாதன் அரசாங்கம்*
*தேடித்தேடி வருவோர்க்கெல்லாம்*
*தினமும் கூடும் தெய்வாம்சம்'*

என்ற திரையிசைப் பாடலை கேட்கும் பக்தர்களுக்கெல்லாம் தெவிட்டாத இன்பங்களைத் தரும் இறைவன் முருகனையும் அவன் இருப்பிடமான திருச்செந்தூரையும் அவனால் பெறும் அருளையும் இவண் காண்போம்.

### திருச்செந்தூர் தலப்பெருமை

யாதுமாகி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் முருகக் கடவுள் எழுந்தருளி இருக்கும் இடம் திருச்செந்தூர். அடியவர்களுக்கெல்லாம் திருவருள் புரியும் ஆறுபடை வீடுகளில் திருவருள் மணக்கும் முருகப்பெருமான் தன் அவதார நோக்கத்தை நிறைவேற்றியருளிய பெருஞ்சிறப்புடைய திருத்தலமே இத்திருச்செந்தூர். தோற்றப்பொலிவாலும் திருவருட் சிறப்பாலும் விளங்கும் இத்தலமானது திருநெல்வேலிக்குக் கிழக்கில் 56 கி.மீ. தொலைவில் கடற்கரை மீது அமைந்து சிறக்கின்றது.

*"சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்டு*
*ஈரலை வாயிடு மெ.்.கம் ஏந்திய*

*வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீஇச்*
*சீரலை வாய்வரு சேயைப் போற்றுவோம்"*

என்கிறது கந்தபுராணம். திருமுருகாற்றுப்படையிலும் தொல்காப்பியத்திலும் அகநானூறு, புறநானூறு ஆகிய சங்க இலக்கியங்களிலும் இத்திருத்தலம் போற்றப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தில், 'முருகன் தீம்புனல் அலைவாய்' எனவும், 'வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில் நெடுவேல் நிலைஇய காமர் வியன்துறை' எனப் புறநானூற்றிலும் சிறப்பித்துப் பேசப்படுகின்றது. 'திருமணி விளக்கனலை வாய்ச்செரு மிகுசேஎய்' என்று அகநானூற்றிலும் 'உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர் அலைவாய்' என்று திருமுருகாற்றுப் படையிலும் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**அருள் மணக்கும் ஐயனின் இத்திருத்தலப் பெயர்கள்**

சங்க காலத்தும் அதற்குப் பின்னரும் இத்தலம் 'அலைவாய்' என்னும் பெயரால் அழைக்கப்பட்டு வந்தது. பின்னர் செந்தில், செந்தூர் என்றும் வழங்கப்பட்டது. இக்காலத்தில் திரு என்னும் அடைமொழியுடன் 'திருச்செந்தூர்' எனச் சிறக்கிறது. திருச்செந்தூர் என்னும் திருப்பெயருக்குப் புனிதமும் வளமும் பொருந்திய வெற்றிமாநகர் என்று பொருள்.

**அலைவாய்**

அருள்மிகு சுப்பிரமணியசாமி திருக்கோயில் மன்னார் வளைகுடா கடற்கரையில் அருள் பெருக்கித் திகழ்கின்றது. கடல் அலைகள் மோதப்பெற்று விளங்குகின்ற காரணத்தால் இத்தலம் பழங்காலத்தில் 'அலைவாய்' என்னும் திருப்பெயர் பெற்றுத் திகழ்ந்தது. மேலும், பழந்தமிழ் நூல்கள் இத்தலத்தைப் போற்றுமிடத்து 'அலைவாய்' என்றும், 'சீரலைவாய்' என்றும், 'விழுச்சீரலைவாய்' என்றும் போற்றுகின்றன. விழுச்சீரலைவாய் என்பதனையே திருச்சீரலைவாய் என்று வழங்கினார்கள்.

**ஜெயந்திபுரம் (வெற்றிமாநகர்)**

ஜெயம் என்பது வெற்றி என்னும் பொருள் குறிப்பது. முருகன் சூரனை வென்ற இடமானதால் இத்திருத்தலத்திற்கு ஜெயந்திபுரம் என்னும் திருப்பெயர் வழங்கப்படுகின்றது. 'செயந்திரபுர மகாத்மியம்' என்னும் பெயரில் ஒரு நூலும் இத்தலத்தின் சிறப்புகளை விளக்கும் வகையில் எழுந்தது.

**படைவீடு**

மன்னன் படைகளோடு சென்று தங்கும் இடத்திற்குப் 'படைவீடு' என்று பெயர். குமரக்கடவுள் தம்படைகளோடு சென்று தங்கிய இடங்கள் ஆறு என்பர். ஆறுபடை வீட்டுத் தலங்கள் என்றும் போற்றப்படுகின்றன. முருகப் பெருமான் சூரபன்மனை வெல்வதற்காகப் படைகளோடு இங்கு வந்து தங்கியதால திருச்செந்தூருக்குப் 'படைவீடு' என்றும் திருப்பெயர் உண்டாயிற்று.

**செந்தூர்**

முருகன் சிவந்த மேனியை உடையவர். எனவே, அப்பெருமானுக்குச் செம்பொருள் என்றும் செவ்வேள் என்றும் சேயோன் என்றும் திருப்பெயர் பல உண்டு. செம்பொருளான அப்பெருமான் எழுந்தருளி இருப்பதால் இதற்குச் செந்தில் என்ற பெயர் உண்டாயிற்று. செயந்திபுரம் என்னும் திருப்பெயரே காலப்போக்கில் செயந்தி-செந்தி-செந்தில்-செந்தூர் என வழங்கப்பெற்று வருகிறது.

**வீரவாகுபட்டினம்**

குமரன் இத்தலத்தில் எழுந்தருளி சூரபன்மனுக்கு அறவுரைகள் கூறும்படி வீரவாகு தேவரைத் தூது அனுப்பினார். இதனைக் குமரகுருபர சுவாமிகள்,

*"சூரனைச் சோதித்து வருகென்று தடந்தோள் விசய*
*வீரனைத் தூதாக விடுத்தோனே"*

என்று கந்தர் கலிவெண்பாவில் பாடுகின்றார். முருகன் வீருவாகுவைத் தூது அனுப்பியமையால் இத்தலம் வீரவாகுப்பட்டினம் எனப்பெயர் பெற்றது.

**வியாழ சேத்திரம், சந்தனமலை**

முருகப்பெருமான் இங்கு வியாழ பகவானால் பூசிக்கப் பெற்றதால் இத்தலம் வியாழ சேத்திரம் என்ற திருப்பெயரைப் பெற்றது. மேலும், அங்கு சந்தன மரங்கள் அப்போது பைம்பொழிலில் இருந்ததால் 'சந்தனமலை' எனும் திருப்பெயரைப் பெற்றது. இத்திருத்தலத்தில்தான் அதிகமாகக் சந்தனம் வழங்கப்படுகின்றது. இவ்வாறு முருகன் உறைந்த இந்தத் திருத்தலத்திற்குப் பல்வேறு பெயர்கள் வழங்கப்படுகின்றன.

**பக்தர்களுக்கு அருளும் பண்பாளன்**

பல நாட்கள் விரதம் பூண்டு முருகனையே முழுமையாக எண்ணி வாழ்வோருக்கு முருகன் பல சோதனைகளை முதலில் கொடுத்து இறுதியில் மிகப்பெரிய சுகத்தைத் தந்து அருளுவான். அரோகரா, அரோகரா என்று ஆனந்த மொழிபேசி காவடி எடுத்துச் சென்று வழிபாடு செய்யும் பக்தர்களுக்குக் கருணையே வடிவாக நின்று காத்து நிற்பவன் திருச்செந்தூரின் செந்திலாண்டவன். முருகனின் புகழை நாவாரப் பாடி மனதார சிந்திப்பவர்களுக்கு எந்நாளும் பக்கபலமாக நின்று அருள்புரிகின்றான் குமரன்.

கடற்கரையில் வீற்றிருந்து கருணை நோக்கோடு காட்சியருளும் பொலிவும் அவ்விடத்தின் அழகும் பக்தர்களின் மனதில் என்றும் நீங்காமல் நிலைபெற்றிருக்கும். ஞானத்தைப் பெறவிரும்புவோர் பழனியில் தண்டாயுதபாணியையும், செல்வத்தைப் பெற விரும்புவோர் வைத்தீஸ்வரன் கோயிலில் செல்வமுத்துக் குமரனையும், வெற்றியைப் பெற விரும்புவோர் செந்தூர் வேலவனையும் கண்ணாரக் கண்டு கரங்குவித்துச் சிந்தனையுடன் வழிபடுதல் சிறப்பாகும். வெற்றித் திருநகரில் வீற்றிருக்கும் செந்திலாண்டவன் வெற்றிவேலைத் தாங்கி தீயசக்திகளை எல்லாம் ஒழிக்க வல்ல வீரதீரப்

பெருமாளாகத் திகழ்கின்றார். நன்மைகளை வாரி வழங்கவல்ல இவ்விறைவனை வழிபாட்டுத் தொழிலிலும் வாழ்விலும் வெற்றிபெற்றுவரும் பக்தர்கள் ஏராளம்.

**கட்டபொம்மனுக்கு அருளிய கந்தன்**

வீரபாண்டிய கட்டபொம்மன் செந்திலாண்டவப் பெருமானிடம் சிந்தையொன்றிப் பக்தி பூண்டவர். அவர் செந்திலாண்டவனுக்கு உச்சிகாலப் பூசை நிகழ்ந்த பின்னரே மதிய உணவு உட்கொள்ளும் விரதம் பூண்டிருந்தார். அதனை அவர் அறிவதற்காக பாஞ்சாலக் குறிச்சியிலிருந்து திருச்செந்தூர் வரையில் தான் 50 மைல்கள் இடைவெளி தூரத்தில் முரசுகளை முழக்கித் தெரிவிக்குமாறு செய்திருந்தார். முரசுகளின் அறிவிப்பைக் கேட்டபின்னரே மதிய உணவு உட்கொள்வது வழக்கம். வீரபாண்டிய கட்டபொம்மனும் தன் தந்தையைப் போலவே செந்திலாண்டவனுக்குத் திருத்தொண்டுகள் பல செய்து பக்தியில் திளைத்தார். அவ்வாறு பக்தி செய்து அவன் வணங்கி வழிபட்ட விக்கிரகமே இன்று கண்ணாடிப் பேழையினுள் காட்சி தருகின்றது.

**பகைவனுக்கருளிய முருகன்**

முருகப்பெருமானது வீரத்தால் சூரபத்மன் வில், வேல், சூலம், முடி, குடை, கொடி, தேர் முதலிய எல்லாமும் இழந்தான். எனவே, சிவனை நினைந்து பாசுபதாஸ்திரத்தை விடுத்தான். அது விண்ணும் மண்ணும் நடுங்கப் புறப்பட்டது. பிரணவ சொரூபியான முருகப்பெருமான் அதைத் தனது திருக்கரத்தால் பற்றினார். சூரபத்மன் செய்வதறியாது திகைத்து நின்றான். அந்நிலையில் முருகப்பெருமான் 'சூரபத்மா! உன்னை இந்நிலையில் கொள்வது அதர்மம். உன் பிழையைப் பொருத்தருள்கின்றோம். தேவர்களை விடுதலை செய்துவிடு உன்னை உயிரோடு விட்டுவிடுகின்றோம் என்று அமுதமொழி கூறினார். மாயையில் வல்ல சூரபத்மனோ உயிருக்கு அஞ்சி மாயமாக மறைந்தான்.

**வினோதங்கள் நிகழ்த்தும் வெற்றி வேலன்**

திக்கெல்லாம் புகழ்பரப்பும் திருச்செந்தூர் பதியின் திருக்கோயில் கொண்டு எழுந்தருளித்திகழும் செந்திலாண்டவனின் திருவருளால் நிகழும் அற்புதங்கள் எண்ணிலடங்காதது. அவற்றுள், வெற்றிலைக்காம்பு வேலாய் மாறி தாசிக்கு உதவியது, எம்பெருமான் மேனியிலிருந்து வியர்வை வழிந்தது, ஊமையை (குமரகுருபரை) பேச வைத்தது, தம்மீது பிள்ளைத்தமிழ் பாடவைத்தது போன்ற அதிசங்களை நிகழ்த்தி பக்தர்களை மகிழ்வித்தார்.

மணல்மேடுகளும் மலர்ச்சோலைகளும் நிறைந்து மயில் ஓசையும், அலையோசையும் கலந்து இயற்கைச் சூழலிடையே எம்பெருமான் செந்திலாண்டவன் வீற்றிருந்து என்றென்றும் பக்தர்களைக் காத்து வருகிறான் என்பது அங்குவரும் பக்தர்கள் கூட்டத்தின் எண்ணிக்கை வைத்துத் தெரிந்து கொள்ளலாம். நாமும் திருச்செந்தூர் சென்று குமரனின் அருள் பெற்று வாழ்வோமாக.

# புறநானூற்றில் முருகன்

**வீ. கோவிந்தராஜ்,**
தமிழ் முதுகலை மாணவர்,
கொக்காட்டிபட்டி, தெற்கு தோட்டம்,
புங்கம்பாடி மேல்பாகம் கிராமம்,
அரவக்குறிச்சி வட்டம்,
கரூர் மாவட்டம்- 639201

முருகன் என்றதும் நம் நினைவில் வருவது ஆறுபடை வீடுகள் தான், ஆறு கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப் பட்டவன், ஆறு முகமாகத் திகழ்பவன், சிவனின் இரண்டாவது மகன், கைகளில் வேலோடும் மயில், சேவல் வாகனத்தோடும் வீற்றிருப்பவன், சரவணபவ என்னும் ஆறெழுத்து மந்திரத்தை கொண்டவன், வள்ளி, தெய்வானையை மனைவியாக அடைந்தவன், குறிஞ்சி நிலத் தலைவன், தமிழ்க் கடவுளாகவே உலகம் முழுவதும் சுற்றி வந்தவர். காவடி எடுத்தல் விழா முருகனுக்கு உகந்ததாகும். ஔவை பாட்டியிடம் தமிழோடு விளையாடியவன், அருணகிரி நாதருக்குத் திருப்புகழை அருளியவர், நக்கீரருக்குத் திருமுருகாற்றுப்படையை அருளியவர், கௌமாரம் என்னும் சமயம் முருகனைப் போற்றுவதாகும். கிருபானந்த வாரியார் முருகனின் பெருமைகளைப் பேசியே சான்றோர் ஆனார். முருகன் என்றால் அழகன், இளையவன் என்று பொருள்படுகிறது. முருகு என்றால் கள், வாசனை, அழகு, திருவிழா, காதணி, தேன் என்று பொருள்படுகிறது. வெறியாட்டுதல் நிகழ்வு முருகனால் சிறப்பு பெற்றது. பழனி மலையில் பஞ்சாமிர்தம் தோற்றுவிக்கப் பட்டது முருகனின் ஆலயம் அமைந்ததால்தான், திருநீறு அணிதல் முருகனால் பெருமை அடைந்தது. மாதம் தோறும் வரும் கார்த்திகை, சஷ்டி விழா, ஆடி மாதக் கிருத்திகை, மாதம் தோறும் வரும் பௌர்ணமி, அமாவாசை சிறப்பு நாட்கள், தைப்பூசம், பங்குனி உத்திரம் போன்ற நாட்களில் முருகனுக்குச் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. முருகனைப் பற்றிப் பாடியவர்கள் ஏராளம். குறிஞ்சிப் பாட்டில் கபிலர், பரிபாடலிலும் முருகனைப் பற்றிப் பாடல்கள் காணப்படுகின்றன. அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்தில் முருகனின் பெருமைகளைப் பாடியுள்ளார். கல்லாடனார் கல்லாடம் என்ற நூலில் முருகனின் பெருமைகளைப் பாடியுள்ளார். வள்ளலாரும் முருக பக்தர்தான். கந்த புராணத்தைக் கச்சியப்பர் இயற்றியுள்ளார். சங்கரதாஸ் சுவாமிகள் வள்ளி திருமணம் என்னும் நாடகத்தை இயற்றியுள்ளார். மருதமலையில் பாம்பாட்டிச் சித்தர் முருக பக்தராக இருந்தார். முருகப் பெருமான் பழனிமலையில் போகர் சித்தருக்கு அருளினார். பழனிமலையில் முருகனுக்கு நவபாஷாண சிலையை உருவாக்கியதும் போகர்தான். முருகனுக்கு காவடி எடுப்பவர்கள் அரோகரா என்று முழங்குவார்கள். சுப்பிரமணிய சித்தர் இறைவனை முருகனாகவே காண்கிறார். பல பாடல்களில் முருகனை மயில் வீரன் எனக் குறிப்பிடுகிறார். இவர் ‘வேல் முனையைத் தியானம் பண்ணிப் பாயவிட, மனதில் இருந்த அசுரர் கூட்டம் பறந்து போயிற்று” என்கிறார். முருகன் சூரனை அழித்துள்ளார்.

மலை நாட்டு மக்கள் குன்றக்குரவைக் கூத்தாடி முருகனை வணங்கினர். "முருகு புணர்ந்து இயன்ற வள்ளி" என்று முருகனின் காதல் மனைவியாக வள்ளியைப் பற்றிச் சங்க நூல் குறிப்பிடுகிறது. முருக வழிபாட்டு முறை மிகப் பழமையானது. அவ்வழிபாடு சமுதாயக் கூட்டு வாழ்க்கை அடிப்படையில் தோன்றியது.

**புறநானூற்றில் முருகன்**

மக்களுக்கு இருக்கும் இயற்கை, செயற்கை பகைகளை வெல்லக் கருதிய போது முதற்கடவுளாக முருகனையே வழிபட்டனர். அவனும் அவர்களுக்கு வெற்றியையே தந்தான் என்ற செய்தியைப் பழந்தமிழ் இலக்கியமான புறநானூறு கூறுகிறது. மக்களின் உள்ளத்தை ஈர்த்த அவனைத் தொடர்ந்து வழிபட்டு வருகின்றனர். அச்சம் தருபவனாக முருகன் இருந்ததால்தான் அவன் வீரம் விளங்கும் என்ற எண்ணம் மக்களிடையே இருந்திருக்க வேண்டும். அதனால் புறநானூற்று பாடல் ஒன்று "அணங்குடை முருகன் கோட்டம்" என்று குறிப்பிடுகிறது. மக்கள் தவறு செய்வதற்கு அஞ்ச வேண்டும் என்பதும், தவறு செய்தவர்களை முருகன் கோவில் வருத்தும் என்பதும் அறிவிக்க வேண்டிதான் முருகன் கோவில் மக்களை அச்சுறுத்தும் என்பதும் மக்களை காப்பவன் என்பதும் நுட்பமாக விளங்கும் கருத்தாகும். குரவை என்பது ஏழு அல்லது ஒன்பது பேர் கூடி ஆடும் ஆட்டம் ஆகும். குறிஞ்சியில் நிகழ்த்தும் மலை நடனமாகும். இது முருகனுக்கு உகந்தது. புறநானுற்றில் முருகப் பெருமானைப் பற்றி கபிலர், பாண்டரங்கண்ணனார், மதுரை இளநாகனார், நக்கீரர் ஆகியோர் பாடியுள்ளனர்.

புறநானூற்றில் 55ஆவது பாடலில் "தாழ்நீர் வெண்டளைப் புணரி அலைக்கும் செந்தில் நெடுவேள்" என்ற வரியில் முருகனின் பெருமைகள் இடம் பெற்றுள்ளன. பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை மதுரை மருதநில நாகனார் பாடியுள்ளார். இதன் விளக்கம் கடலின் கண் திரை அலைக்கும் செந்திலிடத்து நெடிய முருகவேள் நிலை பெற்ற அழகிய அகன்ற துறைக்கண் பெருங்காற்றுத் திரட்டுகிறது. இதில் மதுரையில் வீற்றிருக்கும் திருச்செந்தூர் முருகனை நினைவு படுத்துகிறார். முருகனின் இரண்டாவது படை வீடு திருச்செந்தூர் பாண்டிய மன்னர்கள் வசிக்கும் இடத்தில் இருப்பதை நினைவு படுத்துகிறார். அழகிய கடற்கரையில் வீசும் காற்று குளிர்ந்திருக்கும். இம்முருகனின் பெயர் செந்தில். செந்தில் என்றால் கடலலை என்றும் பொருள் உண்டு. கடல் அமைதியாகவும், அழகாகவும் இருக்கும். அதே வேளையில் பெருங்காற்று வீசினால் சீற்றம் கொள்ளும் என்பதையும் இப்பாடலில் இலைமறை காயாக எடுத்துரைக்கிறார். ஞாயிறு போன்ற வீரம், திங்களைப் போன்ற மென்மை இவைகள் அந்த அரசனுக்கும் பொருந்தும், முருகனுக்கும் பொருந்தும். அருணகிரி நாதர் திருவகுப்பில் "திரைக்கடலை உடைத்து நிறை புனற்கடிது குடித்துடையும்" என்ற பாடலில் திருச்செந்தூர் முருகனைப் பற்றியே குறிப்பிடுகிறார். முருகன் சூர பத்மனை அழித்த இடம் திருச்செந்தூர் ஆகும். அடுத்த 56ஆவது பாடலில் அதே அரசனை நக்கீரர்

பாடியுள்ளார். "மணிமயில் உயரிய மாறா வென்றிப் பிணிமுக ஊர்தி ஒண்செய். யோனும்" என நக்கீரர் பாடியுள்ளார். அதன் விளக்கம் மயில் கொடியை வெற்றியை உடைய மயிலாகிய ஊர்தியைக் கொண்ட முருகன் என்பதாகும். இந்தப் பாடலில் முருகனின் வாகனம் மயில் என்பதை நக்கீரர் எடுத்துரைக்கிறார். நன்மாறன் சினத்தால் இயமனைப் போன்றவன், புகழால் பகைவரைக் கொல்லும் கண்ணனைப் போன்றவன், நினைத்ததை முடிப்பதில் முருகப் பெருமானைப் போன்றவன், "முருகொத்தீயே முன்னியது முடித்தலின்" என்ற வரியில் கருதிய கருமம் முடித்தலில் முருகன் உறுதியானவன் என்பதை அடையாளம் காட்டுகிறார். மருகன் என்றால் மருமகன் என்று பொருள்படுகிறது. மாயோனாகிய திருமாலின் மருமகன் முருகன் என்பதை நக்கீரர் எடுத்துரைக்கிறார். 58ஆவது பாடலில் காரிக்கண்ணனார் முருகனைப் பற்றிய சில குறிப்புகளை வழங்குகிறார். சோழன் குராப்பள்ளித் துஞ்சிய திருமாவளவனையும், பாண்டியன் பெருவழுதியையும் ஒருங்கே புகழ்ந்து பாடல்களைப் பாடும்போது முருகனின் கைகளில் உள்ள வேலின் பெருமைகளைப் புகழ்ந்து பாடியுள்ளார். "வரைய சாந்தமும், திரைய முத்தமும், இமிழ்குரல் முரசம் மூன்றுடன் ஆளும் தமிழ்கெழு கூடல் தண் கோல் வேந்தே" என்கிறார். இதன் விளக்கம் பொதிகை மலையின் சந்தனமும், கடலிடத்து முத்துமென இவற்றை ஒலிக்கும் குரலையுடைய முரசம் முழங்கி ஆளும் தமிழ் வழங்கும் மதுரையில் குளிர்ந்த செங்கோலையுடைய வேந்தன் என்பதாகும். முருகன் தமிழ் கடவுள் என்பதை காரிக்கண்ணனார் மறைமுகமாகக் குறிப்பிடுகிறார். முருகன் கோவிலில் இருக்கும் போது சந்தனத்தால் வழிபாடு நடக்கும், கடலிலுள்ள முத்துவால் ஆன சங்குகளின் ஓசை காதுகளில் கேட்கும், முருகன் கையில் உள்ள வேல் பகைவர்களை அழிக்கும், குடிமக்களை காக்கும் என்பது புரிந்து கொள்ள முடிகிறது. வேலை தாங்கிய கடவுள் முருகப் பெருமானைத்தான் குறிப்பிடுகிறோம். அந்த வேல் உயர்ந்த வலிமையுடைய, ஒளி பொருந்திய வேலாக இருந்ததைப் புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது, தொல்காப்பியர் "சேயோன் மேய மைவரை உலகு" என்று குறிப்பிடுகிறார். முருகனை அவர் சேயோன் என்று அழைக்கிறார். முருகன் செவ்வேள், நெடுவேள், குறிஞ்சிக்கிழவன், வேலன், கொற்றவை சிறுவன், பழையோள் குழவி, மலைமகள் மகன் என்ற பெயர்களால் முருகன் வழங்கப்பட்டான். புறநானூறு தமிழர்களின் பண்பாட்டை எடுத்துக் கூறுவதால் தமிழர்கள் வழிபட்ட தெய்வங்கள் சிவன், முருகன், திருமால் இவர்களைப் பற்றிய குறிப்புகள் பாடல்களில் காணப்படுகின்றன. புறநானூற்றில் முருகனைப் பற்றிப் பாடிய புலவர்கள் மன்னர்களின் பெருமைகளையும் பாடியுள்ளனர். உண்ணுதல் அன்றி வேறு செயல்கள் இன்மையால் புலவர்கள் கைகள் மென்மையாக உள்ளனவாகவும், ஆண் பானையை அங்குசம் கொண்டு செலுத்தியும் குதிரையை செலுத்தியும் தேர்மீது நின்று அம்பு செலுத்தியும், பரிசிலர்க்குப் பரிசுகள் வழங்கியும் சேரனது கைகள் வன்மையாக உள்ளது என்பதனை "இருநிலத்து அன்ன நோன்மைச் செருமிகு சேஎய்நின் பாடுநர் கையே" என்று கபிலர் குறிப்பிட்டுள்ளார். சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் வீரச் செயல்களைக் குறிப்பிடும்

பொழுது அவனின் வீரத்தை மிக்கு உரைக்கின்றார், அவனது சினத்தைக் குறிப்பிடும் பொழுது" முருகன் சீற்றத்து உருகெழு குருசில்" என்று பாண்டரங் கண்ணனார் குறிப்பிட்டுள்ளார். அரசனின் வெற்றி அல்லது அறநெறியை அடிப்படையாகக் கொண்டது. தம்மவர் தவறு செய்யின் செங்கோல் வழுவி நிற்பவர் முருகப்பெருமான்,

**தொகுப்புரை**

முருகன் ஆறுபடை வீடுகளுடன் ஆறு முகமாகத் திகழ்கிறார். பழனிமலையில் இடும்பருக்கு அருளியவர். கிருபானந்த வாரியார் இயற்றிய முருகனின் சொற்பொழிவுகளைக் கேட்கும் பொழுது சங்க இலக்கியங்களில் உள்ள முருகனின் பெருமைகளை அறியலாம். கடவுள் வாழ்த்து பாடல்களில் முருகன் இடம் பெற்றாலும் அவருக்குத்தான் காவடி எடுக்கும் முறை அதிகம் பின்பற்றப்படுகிறது. எனவே முருகனின் பெருமைகளைத் தேடி வெளிக்கொண்டு வருவோம். முருகன் புகழ்பாடி படைப்பிலக்கியங்கள் உருவாக்குவோம்.

## முருகப் பெருமானின் பெயர்க்காரணம்

முனைவர் இரா. கோவிந்தன்,
57/1, மாரியம்மன் கோவில் தெரு
திருவாமாத்தூர் மற்றும் அஞ்சல்
விழுப்புரம் மாவட்டம் - 605 402.

**முருகன்**

முருகு என்ற சொல்லுக்கு மணம், இளமை, அழகு, தெய்வத்தன்மை என்று தமிழ் அகராதி பொருள் கூறுகிறது. முருகு (ம்+உ, ர்+உ, க்+உ) என்பதில் இச்சை, அறிவு, செயல் என்ற மூன்று சக்திகளும் சேர்ந்து அழகு என்ற முருகு அன் விகுதி பெற்று முருகன் என ஆயிற்று எனலாம். இயற்கை மணமும், மாறா இளமையும், அழியா அழகும், கடவுட்டன்மையும் உடையவன் முருகன் எனவும், பெயர்கள் அனைத்திலும் சிறந்த பெரும் பெயர் முருகன் எனவும் இதனை "அரும் பெறல் மரபிற் பெரும் பெயர் முருகு" என்று திருமுருகாற்றுப்படையும் மேலும், "மொழிக்குத் துணை முருகா" என்று கந்தரலங்காரமும் கூறுகின்றன.

**ஆறுமுகம்**

"இறைவனிடத்திலிருந்து இந்திரன் வாங்கிய கருவினைச் சப்த ரிஷிகள் தாங்க முடியாது முத்தீக் குண்டத்திலிட்டும், பிறகு அருந்ததி நீங்கலாக மற்ற ஆறு ரிஷி பத்தினிகளான கார்த்திகைப் பெண்களுக்குக் கொடுத்தும், அதனை அவர்கள் விழுங்கி கருவுற்றுச் சரவணப் பொய்கையிலே பதுமப் பாயலிலே ஆறு வடிவாக ஈன்றனர் என்றும், அறுவர் ஈன்ற குழந்தைகளை அக்கினி தன் கையிலே தாங்கிய ஆறு வடிவும் ஆறுமுகம் என்றும்" கூறுவர். எனவே, ஆறு சக்திகளின் நிலை ஆறுமுகம் என ஆயிற்று எனலாம்.

**ஆறுமுகம் = சண்முகம்**

ஆறுமுகம் என்பது ஆறுமுகங்களை உடையவன் என்பது பொருள். ஆறுமுகம் என்பதனை வடமொழியில் சண்முகம் என்பர். சிவபெருமானின் கண்களிலிருந்து ஆறு தீப்பொறிகள் தோன்றின. அவ் ஆறு பொறிகளும் ஆறு முகங்களாயின, இதனை,

*"வந்திக்கு மலரோனாதி வானவர் உரைத்தல் கேளாப்*
*புந்திக்குள் இடர்செய்யற்க புதல்வனைத் தருவதுமென்னு*
*அந்திக்கு நிகர்மெய் யண்ணல் அருள்புரிந் தறிஞராயோர்*
*சிந்திக்குந் தனதுதொல்லைத் திருமுகமாறுங் கொண்டான்"*

என்று கந்தபுராணம் கூறுகிறது.

இறைவனுக்குள்ள முற்றுறறிவுடைமை வரம்பிலின்பமுடைமை, இயல்பாகவே பாசங்களை நீக்குதல், முடிவிலாற்றலுடைமை, பேரருளுடைமை, தம்வயமுடைமை ஆகிய ஆறு குணங்களுமே முருகப் பெருமானாருக்கு ஆறு முகங்களாயின என்பதனை,

*"ஏவர்தம் பாலுமின்றியயல்லைதீர் அமலற்குள்ள*
*மூவிருகுணனுஞ் சேய்க்குமுகங்களாய்வந்ததென்னப்*
*பூவியல் சரவணத்தண் பொய்கையில் வைகும் ஐயன்*
*ஆவிகள் அருளுமாற்றால் ஆறுமுகங் கொண்டானன்றே"*

எனக் கந்தபுராணமும், "ஐந்துமுகத்தோடு அதோமுகமுந் தந்துதிரு முகங்கள் ஆறாதி" எனக் கந்தர் கலிவெண்பாவும், "முகத்திலொன்றதா அவ்வெழுத் துடையதோர் ஆறுமுகன்" எனக் கந்தபுராணமும், கூறுகின்றது.

| | | |
|---|---|---|
| சூரியனைவழிபடுவது | - | சௌரம் |
| சக்தியைவழிபடுவது | - | சாக்தம் |
| விஷ்ணுவைவழிபடுவது | - | வைணவம் |
| சிவனைவழிபடுவது | - | சைவம் |
| கணபதியைவழிபடுவது | - | காணபத்யம் |
| முருகனை வழிபடுவது | - | கௌமாரம் |

என வழிபடும் சமயங்கள் ஆறு. இவ் ஆறு சமயக் கடவுளரும் வேறுவேறு அல்லர். முருகனே ஆறு சமயத்தும் அங்கங்கிருந்து அருளுகிறான் என்பதன் அறிகுறியாக முருகனுக்குமுகங்கள் ஆறாயின" என்பர். இதனை,

*"ஆறு சமயக் கடவுள் வேறுவே றின்றியான்*
*ஒருவனே அங்கிங் கிருந்து*
*அன்பர்க்கு முத்திதரு வித்தென்று யாவர்கரும்*
*அறிவித்த வதனமணியே"*

என்ற பாடலால் அறியலாம். மேலும்,

*"ஆறு திசையுஞ் சமயங்களாறு மவுணர்களைக்*
*கீறும் வைவேற் பெருமான் முகமாறுங் கிளத்தும்"* எனவும்,

"ஆறுசயமுந் தன்முகமா றென்றறியு மன்பர்
வீறுசிந்தைக் கிடைவீற் றிருக்குங் குகன்"

எனவும் முருகப் பெருமானுக்கு முகங்கள் ஆறு. எனவே, ஆறுமுகம் என்கின்றனர்.

**கந்தன்**

கந்தன் என்பது தமிழ்பெயர். கந்தன் என்ற பெயர் சொல்லுக்குச் சேர்க்கப்பட்டவன், ஒன்றாக்கப்பட்டவன் எனத் தமிழகராதி பொருள் கூறுகிறது. உமையம்மையார் ஆறு குழந்தைகளையும் ஒருசேர எடுத்து ஒன்றாக்கியமையால் அக்குழந்தைக்குக் "கந்தன்" என்று பெயரிட்டு அழைத்தனர். இதனை,

*"சேயவன் வடிவமாறுந் திரட்டிநீயொன்றாச் செய்தாய்*
*ஆயதனாலேகந்தனாமெனுநாமம் பெற்றான்"*

என்று கந்தபுராணம் பாடல் வழி அறியமுடிகிறது. மேலும்,

*"நன்முகம் இருமூன் றுண்டால் நமக்கவைதாமேகந்தன்*
*தன்முகமாகியுற்றதாரகப்பிரமமாகி*
*முன்மொழிகின்றநந்தம் மூவிரண் டெழுத்துமொன்றாய்*
*உன்மகன் நாமத் தோராறெழுத்தெனஉற்றவன்றே"*

இப்பாடலால் முருகப் பெருமானுக்குக் கந்தன் என்ற பெயரும் உண்டு என அறிய முடிகிறது.

**கார்த்திகேயன்**

கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பெற்றவன் கார்த்திகேயன்.

**காங்கேயன்**

கங்கை வளர்த்ததால் காங்கேயன் என்பர்.

**சரவணபவன்**

சரவணப் பொய்கையில் தோன்றியவன். சரவணன் என்பது நாணல் காடு நாணற் காட்டில் உள்ள பொய்கையில் தோன்றியதால் சரவணபவன் என அழைக்கப் பெற்றார்.

**சுப்பிரமணியம்**

"சுப்பிரமணியம் என்பது மனித உடலில் மூலாதாரத்திற்குமேல் மூன்று இடம் தாண்டி விசுத்தியாகிய இருதய ஸ்தானத்தில் இடது புறத்தில் ஆறுதலை உடைய ஒருநாடி இருக்கிறது. இதைச் சுப்பிரமணியம் என்று சொல்லுவார்கள். மேலும், சர்வ தத்துவங்களினது அந்தத்தில் உன்மணிக் கப்பாலில் சாந்த நிறைவாயுள்ள ஆறுதலாகிய சுத்த ஆன்ம அறிவான உள்ளமே சுப்பிரமணியம்" என்று விளக்கம் தருவர்.

**முருகப் பெருமானுக்குவழங்கும் பிறபெயர்கள்**

கடம்பமாலை அணிந்ததால் 'கடம்பன்' எனவும், விசாக (ஞானம்) நட்சத்திரத்தில் தோன்றியதால் 'விசாகன்' எனவும், வேலை ஆயுதமாக உடையவனாதலால் வேலன் எனவும், என்றும் மாறாத இளமையுடைய காரணத்தால் 'குமரன்' எனவும், அன்பர்களின் குறைகளைப் போக்கியதால் 'குகன்' எனவும், சிவந்த நிறமுடைய காரணத்தால் 'சேந்தன்'' சேயோன்' எனவும், தேவர்களின் சேனைக்குத் தலைவனாக இருந்து அசுரர்களை அழித்துத் தேவர்களைக் காத்ததால் 'தேவசேனாபதி' எனவும், எல்லாம் வல்ல சித்தன் என்ற காரணத்தால் 'சித்தன்' எனவும், இன்னும் பல பெயர்களாலும் முருகப் பெருமானை அழைப்பர்.

# முருகாற்றுப்படை நூல்கள்

முனைவர் **மோ.கோ. கோவைமணி**
துறைத்தலைவர், ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 010

பாட்டுடைத் தலைவனின் பெருமை, கொடை, வீரம், ஊரின் சிறப்பு போன்றவற்றையும், அவன் நாட்டுக்குச் செல்லும் வழியும், பெற்ற பரிசுகளைப் பற்றியும் குறிப்பிடுவது ஆற்றுப்படை நூல்கள். ஒவ்வொரு காலத்திலும் முருகன் அடியார்கள் அவதரித்து முருக வழிபாட்டை முறைப்படுத்தி மக்களுக்கு வழிகாட்டி வந்துள்ளனர் என்பதற்கு முருகாற்றுப்படை இலக்கியங்கள் ஓர் சான்றாகும். சித்தாந்தம் இதழ் 1937இல் வெளியிட்டுள்ள முருகாற்றுப்படை நூல்கள் என்னும் தலைப்பில் அருள்முருகாற்றுப்படை, பொருள்முருகாற்றுப்படை, அணிமுருகாற்றுப்படை, வருமுருகாற்றுப்படை ஆகிய நான்கும்; தஞ்சை சரசுவதிமகால் நூலகம் 2001இல் வெளியிட்டுள்ள ஆற்றுப்படை நூல்கள் என்னும் தொகுப்பில் அணிமுருகாற்றுப்படை, அருள்முருகாற்றுப்படை, வேல்முருகாற்றுப்படை, வருமுருகாற்றுப்படை-1, வருமுருகாற்றுப்படை-2, இயல்முருகாற்றுப்படை, பொருண் முருகாற்றுப்படை, சேய்முருகாற்றுப்படை, ஒரு முருகாற்றுப்படை ஆகிய ஒன்பதும் வெளிவந்திருக்கின்றன. சித்தாந்தம் இதழில் (1937) பதிப்பிக்கப்பெறாத ஐந்து நூல்கள் ஆற்றுப்படை நூல்களில் (2001) கூடுதலாக இடம்பெற்றுள்ளன. அந்நூல்களைப் பற்றி இனிக் காண்போம்.

**அணிமுருகாற்றுப்படை**

இந்நூல் 77 பாடலடிகளைக் கொண்டுள்ளது. தொடக்கத்தில் கடவுள் வாழ்த்து வெண்பா ஒன்றுள்ளது. 'அணி' என்றால் அழகு. முருகனின் அழகைக் கூறுவதால் இது அணிமுருகாற்றுப்படை என்ற பெயர் பெற்றிருக்கின்றது. சித்தாந்தம் இதழ்ப் பதிப்பாக வெளிவந்த இந்நூல் அருள்முருகாற்றுப்படை என்னும் பெயர் பெற்றுள்ளது. இந்நூல் 69 பாடலடிகளாலானது. ஆற்றுப்படை நூல்களில் அமைந்துள்ள அணிமுருகாற்றுப்படை வெண்பாவும், சித்தாந்தம் இதழ்ப் பதிப்பில் அமைந்துள்ள அணிமுருகாற்றுப்படை வெண்பாவும் ஒன்றாக அமைந்திருக்க நூலின் பாடலகள் வெவ்வேறாக அமைந்துள்ளன.

முருகனின் தோற்றப் பொலிவு, பன்னிரு கரங்களில் ஏந்தியுள்ள செய்தி, ஆறு முகங்களின் சிறப்பு போன்றவை குறிப்பிடப்படுவதால் இந்நூலுக்கு அணிமுருகாற்றுப்படை என்ற பெயரே பொருத்தமாக அமைகிறது. அடியவர்களுக்கு வீட்டுப் பேற்றினையும், நன்மையினையும் தந்தருள்வாயாக என வேண்டுவதாக அமைந்துள்ளது. முருகனின் உருவ வருணனைகள் கூறப்பட்டுள்ளன. அடியவர்களுக்கு வாக்கு, பொருள், பயன், செல்வம்

கொடுக்கின்ற செய்திகள் இடம்பெற்றுள்ளன. அதனால் எந்த இடத்திலும் முருகனின் அருளை வேண்டுவதாக அமையவில்லை. எனவே, அருள் முருகாற்றுப்படை என்பதைவிட அணிமுருகாற்றுப்படை என்பதே பொருந்தும். முருகனைத் தவிர வாழ்வில் எந்தவித பற்றுக்கோடும் இல்லை என்று அடியவர்கள் கூறுவதாகவே இந்நூலின் மையக் கருத்து அமைந்துள்ளது.

**அருள் முருகாற்றுப்படை**

இந்நூல் 36 பாடலடிகளைக் கொண்டுள்ளது. 'அருள்' என்றால் கருணை என்று பொருள். முருகனின் கருணையை வேண்டிப் பெறுவதால் அருள்முருகாற்றுப்படை என்ற பெயர் பெற்றிருக்கின்றது. ஆனால், சித்தாந்தம் இதழ்ப் பதிப்பாக வெளிவந்துள்ள 'பொருள்முருகாற்றுப்படை' என்ற பெயரில் 35 பாடலடிகளைக் கொண்டு இந்நூல் வெளிவந்துள்ளது. அருளை வழங்கி இவ்வுலகைக் காப்பவனே! எனக்கு அருளை வழங்குவாயாக! என வேண்டுவதாக அமைவதால் அருள் முருகாற்றுப்படை என்று பெயர் பெற்றது போலும்" என்பர்.[1] "அருணா லுலகை அமர்ந்தினி தளிக்கும்"[2] எனத் தொடங்கி "சாற்றுவுன் திருத்தாளைத் தந்தருள் எனக்கே"[3] என நிறைவு பெறுவதாலும் இந்நூலுக்கு அருள்முருகாற்றுப்படை என்ற பெயரே பொருத்தமாக அமைகிறது.

**வேல்முருகாற்றுப்படை**

இந்நூல் 39 பாடலடிகளைக் கொண்டுள்ளது. சித்தாந்தம் இதழில் 42 பாடலடிகளைக் கொண்ட இந்நூல் அணிமுருகாற்றுப்படை என்று விளங்குகின்றது. வேல்முருகாற்றுப்படையின் கட்வுள் வாழ்த்துப் பாடலாக,

*பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதங்*
*கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு - சுருங்காமல்*
*ஆசையால் நெஞ்சே அணிமுருகாற் றுப்படையைப்*
*பூசையாக் கொண்டே புகல்*[4]

என்னும் பாடல் அமைந்துள்ளது. இப்பாடல் திருமுருகாற்றுப்படையில் பாராணயப் பாடல் எட்டாவதாக அமைந்துள்ளதாகும். இப்பாடல் ஆற்றுப்படை நூல்களில் (2001) அணிமுருகாற்றுப்படையில் கடவுள் வாழ்த்துப் பாடலாக அமைந்துள்ளது. இது ஆசையால் நெஞ்சே அருமுருகாற்றுப் படையை என்ற வரியில் அணிமுருகாற்றுப்படை என்று இடம்பெறுவதால் அணிமுருகாற்றுப்படைக்கு இப்பாடலைக் கடவுள் வாழ்த்துப் பாடலாக வைத்து இருக்கலாம்.

**வருமுருகாற்றுப்படை-1**

இந்நூல் 94 பாடலடிகளைக் கொண்டுள்ளது. இந்நூலின் கடவுள் வாழ்த்துப் பாடலின் அகச்சான்றினைக் கொண்டு பார்க்கும்போது இதன் ஆசிரியர் அருணகிரிநாதர் என்று அறிந்துகொள்ள முடிகிறது என்கிறார் இந்நூல் பதிப்பாசிரியர்.[5]

*கருமுரு காருங் குழல்வள்ளி கேள்வன் கருதலரைப்*
*பொருமுரு காதி பனைக்காட் டென மன்னன் போர்ந்து சொன்ன*
*அருமுரு காதிற் பவன்றங் கருணை சிரியுரைத்த*
*வருமுரு காற்றுப்படை கொண்டே செந்தில் மன்னவனே*

என்ற கடவுள் வாழ்த்துப் பாடலின் மூலம் அருணகிரிநாதர் மன்னனின் வேண்டுகோளுக்கு இயைந்து இந்நூலை இயற்றியுள்ளார் என்பதை அறியமுடிகிறது.

*மருக வருக என்பார் வெருவாமுனம்*
*போற்றி போற்றியென் நின்னடி மலரிட்டு*
*ஏற்றி வார்முன் னிமைப்பினில் வருகவே*

என்ற மூன்றடிகளைக் கொண்டு பார்க்கும் போது முருகனை வருக! வருக! என்று வேண்டி அழைப்பதால் இந்நூலுக்கு வருமுருகாற்றுப்படை என்ற பெயர் பெற்றிருக்கின்றது.

சித்தாந்தம் இதழ்ப் பதிப்பாக வந்துள்ள வருமுருகாற்றுப்படையின் பாடலடிகள் 64. இந்நூலின் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்று உள்ளது. ஆற்றுப்படைத் தொகுதியின் கடவுள் வாழ்த்துப் பாடலும் இதுவும் ஒன்றாக அமைந்துள்ளது. பாடலடிகளின் எண்ணிக்கையில் மட்டுமே மாற்றம் பெற்றுள்ளது. இரண்டு பதிப்புகளின் தொடக்கமும் முடிவும் ஒரே மாதிரியாக அமைந்துள்ளன. மேற்காணும் அணி முருகாற்றுப்படை, அருள் முருகாற்றுப்படை, வேல் முருகாற்றுப்படை, வருமுருகாற்றுப்படை ஆகிய நான்கு நூல்களைத் தவிர ஆற்றுப்படைத் தொகுதியில் மேலும் ஐந்து முருகாற்றுப்படை நூல்கள் இடம்பெற்றுள்ளன.

**இயல் முருகாற்றுப்படை**

இந்நூல் 29 பாடலடிகளைக் கொண்டுள்ளது. 'இயல்' என்றால் தன்மை' என்று பொருள். முருகனின் தன்மைகளைப் பற்றிக் கூறுவதால் இந்நூல் இப்பெயர் பெற்றுள்ளது.

**ஒரு முருகாற்றுப்படை**

இந்நூல் 41 பாடலடிகளைக் கொண்டுள்ளது. இந்நூலில் வருமுருகாற்றுப்படையின் பாடலடிகள் இடம்பெற்றுள்ளன. இந்நூலில் வருமுருகாற்றுப்படையின் பாடலடிகள் இடம்பெற்றுள்ளன. இந்நூல் பேய், பிசாசு, பில்லி, சூனியம் முதலானவை தன்னை அணுகாமல் காக்க வேண்டும் என்று முருகனிடம் வேண்டுவதாக அமைந்துள்ளது.

**சேய்முருகாற்றுப்படை**

இந்நூல் 44 பாடலடிகளைக் கொண்டுள்ளது. தன் தாயிடம் ஒரு சேய் உரிமையுடன் கேட்பது போன்று முருகனிடம் தன்னுடைய தீமைகளைத்

துரத்தி, செல்வத்தையும், பெருமையையும் நல்க வேண்டும் என்று உரிமையுடன் வேண்டுவதாக இந்நூற் பொருள் அமைந்துள்ளது. அதனால் இதற்குச் சேய்முருகாற்றுப்படை என்று பெயர் பெற்று இருக்கலாம்.

**வருமுருகாற்றுப்படை-2**

இந்நூல் 85 பாடலடிகளைக் கொண்டுள்ளது. இதில் மயிலை வாகனமாகக் கொண்ட சரவணனே! வருவாயாக என்று கூறப்படுகின்றது.

*வருக முருகா வருக வருக*[8]
*முருகா சரவணா வா வா வா*[9]
*வா வா சகல தோஷங் களையும்*
*சகலபா வங்களையும் சகலவியாதி களையும்*[10]

போன்ற பாடலடிகளைக் கொண்டு பார்க்கும்போது இதற்கு வருமுருகாற்றுப்படை என்ற பெயர் பொருந்துவதாக அமைகின்றது.

**பொருமுருகாற்றுப்படை**

இந்நூல் 54 பாடலடிகளைக் கொண்டுள்ளது. 'பொருதல்' என்பதற்குற் சண்டையிடுதல் என்று பொருள். முருகன் தீயவர்களுடன் போரிடுதல் பற்றிய செய்திகள் இதில் இடம்பெறுவதால் இதற்குப் பொருமுருகாற்றுப்படை என்ற பெயர் பொருத்தமாக அமைந்துள்ளது.

*அசுர சங்காரா அகோர சங்காரா*[11]
*மந்திர சங்காரா சகல தெய்வப்*
*பிரமராட் சங்காரா பிதேத சங்காரா*
*பிசாசு சங்காரா சத்துரு சங்காரா*[12]

என்ற வரிகளால் எதிரிகளைச் சண்டையிட்டு அழித்தவன் என்பது உணர்த்தப்படுவதால் இந்நூலுக்கு இப்பெயர் பெற்றது எனலாம். இதுவரை முருகாற்றுப்படை நூல்களின் அமைப்புகள் பற்றிக் கூறப்பட்டன. இனி அந்நூல்களில் இடம்பெறும் படைக்கலங்கள் பற்றிக் காண்போம்.

**முருகனின் படைக்கலங்கள்**

ஆதி மனிதன் தன்னை விலங்குகளிடம் இருந்து காத்துக்கொள் வதற்காகக் கல்லாலும், மரத்தாலும் கருவிகளை உருவாக்கிக் கொண்டான். அவை காலத்தின் மாற்றத்திற்கும் மனிதனின் தேவைக்கும் ஏற்றாற்போல் உருவாக்கப்பட்டன. மனிதர்கள் மட்டுமன்றி ஒவ்வொரு தெய்வங்களுக்கும் தனித்தனியே கருவிகள் படைக்கப்பெற்றன. அவ்வகையில் காணும்போது முருகப்பெருமானின் படைக்கலங்கள் பற்றி அற இலக்கியங்கள் பலவற்றில் பேசப்படுகின்றன. முருகனது திருக்கரத்தில் உள்ள ஆயுதங்கள் தண்டம், சக்தி, வச்சிரம், அட்சமாலை, கட்கம், கேடகம், வேல், பாணம், சக்கரம், கதை, பாசம், வில், அங்குசம், கலப்பை, மணி, குக்குடம், கமண்டலம்,

தோமரம், சங்கம், வல்லி, மலரம்பு, கரும்புவில், தீயகல், கருவம், கவஸ்திகம், பரசு, தீக்கடைக்கோல், கோழிக்கொடி போன்ற ஆயுதங்களைத் தன் கரத்தில் கொண்டு விளங்குபவன் ஈருகப்பெருமான். திருத்தணிகைப் புராணத்திலும், அருணகிரியின் திருப்புகழிலும், நக்கீரரின் திருமுருகாற்றுப் படையிலும், கந்தர் கலிவெண்பாவிலும், கச்சியப்பரின் கந்த புராணத்திலும் முருகனின் படைக்கலங்கள் பேசப்படுகின்றன. முருகாற்றுப்படையில் குறிப்பிடப்படும் முருகனின் படைக்கலங்களை,

*ஓங்கிய திருக்கையில் வாங்கிய வேலும்*
*ஆவலம் கொண்டு சேவலங் கொடியும்*
*அங்குச மயிலோர் தங்கிய சூலமும்*
*வீசுவில் தண்டும் பாசக் கரமும்*
*வச்சிர மழுவாள் மெச்சிய கடகம்*
*துலங்கிய நேரத்தில் நிலங்களோ டிலங்க*
*ஈராறு உறுப்பு ஈராறு கையும்*[13]

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன. வேல், சேவல்கொடி, அங்குசம், சூலம், வில், தண்டபம், பாசக்கரம், மழு, வாள், சடகம் ஆகியவற்றை உலகம் சிறக்கும் படியாக முருகன் தன்னுடைய கைகளில் ஏந்தி அருள் பாலிக்கின்றான் என்று இப்பாடல் வரிகளின் மூலம் உணரமுடிகிறது.

*பன்னிரு கரத்தில் பதிந்த ஆயுதமும்*
*வேல்வாள் சக்கரம், வெயிலோளி வச்சிரம்*
*பால்நிறக் குக்குடம் பரிசைபொற் தண்டம்*
*வரதம் அபயம் இருதலைச் சூலம்*
*சரமொடு சாபம் தன்கரத் தேந்தி*[14]

என்ற பாடல் வரிகளால் பன்னிரண்டு கரத்திலும் வச்சிராயுதம், வெண்மை நிறமுடைய கோழிக்கொடியும், பொன்னாலாகிய வளைதடியும், அடியார்க்கு வரமளித்துக் காத்து அருள்கின்ற கரத்தையும், அடைக்கலம் என்று வருபவர்களுக்கு அரவணைக்கும் அபையக்கரம் கொண்டு விளங்குபவன் என்றும், அவற்றினை அன்றி இருபிளவுபட்ட சூலமும், அம்பும், சரமும், சர்ப்பமும் கைகளில் ஏந்தியுள்ளவன் முருகப்பெருமான் என்றும் உணர்த்துகின்றது.

*வெற்றிவேல் கரத்தின் வீறுசக் சீராயுதன்*[15]

எனும் சேய்முருகாற்றுப்படையின் வரியில் வெற்றி பொருந்திய வேலேந்திய கரத்தினை உடையவன் முருகன் என்றும், அவன் சக்கரம் ஏந்திய கையையுடைய திருமாலுக்கு ஒப்பானவன் என்றும் அறிவிக்கின்றது.

**முடிவுரை**

இம்முருகாற்றுப்படை நூல்களில் முருகனின் தோற்றப் பொலிவில் முருகனின் மேனிநிறம், ஆறுமுகங்களின் சிறப்பு, தோள்கள் மற்றும் கரங்களின் சிறப்புப் பற்றியும், அணிகலன்களில் குண்டலம், குழை, ஆரம், முப்புரிநூல், செங்காந்தள் மலர்மாலை, கச்சை, வேல், கோழிக்கொடி, தண்டை, மணி, மணிமகுடம், தாமரை, கிண்கிணி, நவமணி, ஒட்டியாணம், சிலம்பு, தண்டலை பற்றியும் எடுத்துரைக்கின்றன. மேலும் இந்நூல்களில் முருகப்பெருமான் தீவினைகள் அழித்து உலகாண்ட செய்திகளும், முருகப்பெருமானின் பெயர்களும் திருமணங்களும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இந்நூல்களை எல்லாம் ஆய்வு செய்யின் முருகின் பெருமை இன்னும் மெருகேறும் என்பதில் ஐயமில்லை.

**அடிக்குறிப்புகள்**

1. ஆற்றுப்படைத் தொகுதி, ப.10.
2. அருள்முருகாற்றுப்படை, வரி.1.
3. மேலது, வரி.36.
4. சித்தாந்தம் இதழ், ஜனவரி 1931, ப.75.
5. ஆற்றுப்படைத் தொகுதி, ப.2.
6. மேலது, ப.24.
7. வருமுருகாற்றுப்படை-2, வரிகள்.92-94.
8. மேலது, வரி.51.
9. மேலது, வரி.61.
10. மேலது, வரிகள்.79-80.
11. பொருமுருகாற்றுப்படை, வரி.26.
12. மேலது, வரிகள்.31-33.
13. அணிமுருகாற்றுப்படை, வரிகள்.42-48.
14. வேல்முருகாற்றுப்படை, வரிகள்.8-13.
15. சேய்முருகாற்றுப்படை, வரி.11.

**ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள்**

1. ஆற்றுப்படைத் தொகுதி, சத்தியபாமா காமேஸ்வரன் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சாவூர், 2001.

2. முருகாற்றுப்படை நூல்கள், துரைசாமி முதலியார் (பதி.), சித்தாந்தம்-மாத இதழ், தொகுதி 10, பகுதி 2, 1937.

# இலக்கியங்களில் முருகன்

சகோதரி செ. சகாயம்
புனித அடைக்கல அன்னை இல்லம்
ஆதிச்சபுரம்,
மன்னார்குடி தாலூக்கா,
திருவாரூர் மாவட்டம்.

தொல்காப்பியம் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நிலப் பரப்புகளில் வாழ்ந்த பைந்தமிழ்ப் பெருமக்களின் வழிப்பாட்டுத் தெய்வங்களைப் பற்றிக் கூறுகிறது. இதில் குறிஞ்சி நிலக் கடவுளாகிய சேயோன் என முருகனைக் குறிப்பிட்டுள்ளது. ஸ்கந்த வழிபாடு வேதகாலம் முன்பே கடைபிடிக்கப்பட்டிருக்கிறது என்பது ஆய்வாளர் செய்தி. வேத காலக் கடவுளான சோமன், அக்கினி, இந்திரன், வருணன், பிரகஸ்பதி, ஹிரண்ய கர்ப்பம் ஆகியோரின் கூட்டுக் கலவையே ஸ்கந்த குமாரன் ஆவான். அதர்வண வேதந்திய குமாரன் அக்கினியின் புதல்வன் எனவும், சதமத பிராமணத்தில் உருத்திரனின் புதல்வன் எனவும் சித்தரிக்கப்பட்டுள்ளான். தமிழனின் தனிப் பெரும் கடவுளான அழகுடை முருகனின் வரலாற்றுப் பெருமைகளை விளக்கும் இலக்கியச் சான்றுகளைக் கட்டுரையாக வடிவமைத்தல் யாம் பெற்ற பேறாகும்.

**வேதகாலம்**

ஆரிய வழிபாட்டு முறையில் முருகன் ஸ்கந்தன், கார்த்திகேயன், சுப்ரமணியன் என வழங்கப்படுகிறான். இருக்கு வேதத்தில் பிரமத்தின் வெளிப்பாடாய்ச் சுப்ரமணியோம் என மும்முறை வருகிறது. சாந்தோக்கிய உபநிடதத்தில் சனற்குமாரர் ஸ்கந்தனோடு வைத்து எண்ணப்படுகிறார். இவை புத்தருக்கு முன் எழுந்த நூல்கள். கி.மு. 400க்கு முன் எழுந்த போதாயன தரும சூத்திரத்தில் ஸ்கந்தன், சனற்குமாரன், விசாகன், சண்முகன், மகாசேனன், சுப்ரமணியன் ஆகிய தெய்வங்களைப் பற்றிக் குறிப்பிடப்படுகிறது.

இதிகாசங்களான மகாபாரதம், இராமாயணம் போன்றவற்றிலும் ஸ்கந்தனைப் பற்றிய குறிப்பு உள்ளது. வியாசர் அருளிய பதிணென் புராணங்களில் ஒன்றான ஸ்கந்த புராணம் ஸ்கந்தனின் வரலாற்றை விரிவாய் கூறுகிறது. கௌடில்யம், பதஞ்சலி, (கி.மு.2 ஆம் நூற்றாண்டு) ஆகியோரும் சுப்ரமணியர் திருக்கோயில் பற்றியும், திருவுருவச்சிலை பற்றியும் கூறியுள்ளனர்.

**திருவுருவச்சிலைகள்**

தொடக்க கால சுப்ரமணியர் சிலைகள் நாகார்ஜீன கொண்டாவில் உள்ளது. இது கி.பி 3ம் அல்லது 4ம் நூற்றாண்டை சேர்ந்தது. யானை மேல் வீற்றிருக்கும் முருகன் உருவம் மாமல்லபுரத்துப் பாறைகளில் செதுக்கப்பட்டுள்ளது.

கி.பி.414ம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டு, சுவாமி மகாசேனன் என்ற கார்த்திகேயன் திருக்கோயிலைப் பற்றிக் கூறுகிறது. யெவ்தேயர்கள் வழிப்பாட்டில் கார்த்திகேயன் சங்கு, கவசம் கொண்டவனாய்க் காணப்படுகிறான். இலங்கை கதிர்காமத் திருக்கோயில் முருகன் வழிபாடு மிகமிகத் தொன்மையும் சாலப் பழமையும் கொண்டது. இவ்வழிபாடு இராம - இராவண போருக்கு (கி.மு. 2387) முன் தோன்றியது என்பர்.

**அறுபடை வீடு**

நமது உடலில் ஆறு ஆதாரங்கள் உள்ளன. ஆறு ஆதாரங்களே ஆறுபடை வீடுகளாக உள்ளன என்பர். மூலாதாரம் - திருப்பரங்குன்றம், சுவாதிட்டானம் - திருச்செந்தூர், மணி பூரகம் - ஆவினன்குடி, அநாகதம் சுவாமிமலை, விசுத்தி - குன்றுதோராடல் திருத்தணி, ஆக்ஞை பழமுதிர்ச்சோலை யாகும்.

**ஆறுமுகம் - ஆறு பொருள்கள்**

- கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, மேல், கீழ் என்ற திசைகளையும் பார்க்கும் முகம் ஆறுமுகம்.
- பராசக்தி, ஆதிசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி, இச்சா சக்தி, குடிலாசக்தி என்ற ஆறு சக்திகளும் உடைய ஆறுமுகம்.
- அ உ ம நாதம் விந்து கலை என்ற ஆறுமுகம்.
- மந்திரம், பதம், வண்ணம், புவனம், கலை, தத்துவம் என்ற ஆறு அத்துவாக்களே ஆறுமுகம்.
- பொருள், வீரியம், புகழ், திரு, ஞானம், வைரக்கியம் என்ற ஆறு குணங்களே ஆறுமுகம்.
- சருவஞ்ஞிதை, திருப்தி, அநாதிபேதம், அனுப்த சக்தி, அகந்த சக்தி, அவதுந்திரத்நிலம் என்ற ஆறு குணங்களே ஆறுமுகம்.

**காப்பியங்களில் முருகன்**

கட்டியங்காரனுடைய பட்டத்து யானையைச் சீவகன் கொன்றுவிட்டு நின்ற நிலையைத் திருத்தக்க தேவர் கிரவுஞ்சமலையைத் துளைத்து, கறைபடாத வேலினைக் கையில் ஏந்தி மயிலின் மீது ஆரோகணித்திருக்கிற முருகனுடைய புருவம் போய் சீவகன் புருவம் வளைந்தது என்று சீவக சிந்தாமணியில் சித்திரிக்கிறார்.

**சிலப்பதிகாரம்**

மங்கல வாழ்த்துப் பாடலில் - மணக்கோலங்கொண்ட கோவலன் ‘கண்டேத்தும் செவ்வேள்’ எனப்படுகிறான். மணிமேகலையில் 4:49-50 , 6: 120–126 ஆகிய இடங்களில் முருகன் குறிப்பிடுகிறான்.

**பரிபாடல்**

*"மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோள்*
*ஞாயிற்றேர் நிறத்தகை நளினித்துப் பிறவியை*
*காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்"* (பரிபாடல் 5:11:3)

*'பெரும் பெயர் முருக...'* (பரிபாடல் 5:5)

**சண்முகநாதன் சர்வ தேசக் கடவுள் :**

முருகன் வழிபாடு ஹரப்பா நாகரிகத்தில் காணப்படுகிறது. 1997ல் அமெரிக்கரான பேட்ரிக்ஹாரிகன் கதிர்காம முருகன் தொடர்பாக ஆய்வு மேற்கொண்டார். தமிழர்கள் பசிபிக், சில்ஸ், பிஜி, மடகாஸ்கர் நாடுகளுக்குக் குடி பெயர்ந்தபோது முருகனைக் கொண்டு சென்று வழிப்பட்டனர். வடநாட்டில் கந்தன் அக்னியின் மைந்தனாக உருவாகிறார். ஏறத்தாழ ஒரு கோடி தமிழர்கள் வெளிநாட்டில் வசிக்கின்றனர். இவற்றில் மலேசியா, இலங்கை, மொரிசியஸ், ரீ – யூனியன், நியூசிலாந்து, ஆஸ்திரேலியா, பர்மா, தாய்லாந்து, அமெரிக்கா, கனடா, ஹாங்காய், சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் முருக வழிபாடு பரவி அங்கு ஆலயங்களும் பிரம்மாண்டமாக கட்டப்பட்டுள்ளன. செக்கோஸ் லோவோசியா நாட்டவரான கமில் சவலிவ் முருகனைப பற்றி "Smile of Murugan" உட்பட மூன்று நாவல்கள் எழுதியுள்ளார்.

**புறநானூற்றில் முருகன்**

'செய்யோன்' எனும் சொல்லாட்சி புறநானூற்றில் காணப்படுகிறது.

*'கார் நறுங் கடம்பின் பாசியைத் தெரியல்*
*சூர் நவை முருகன் சுற்றத் தன்னநின்'* (புறநானூறு 23:3:4)

**அகநானூறு**

*'முருகன் ஆரணங் கென்றலின்'* (அகநானூறு 98:1)
*'முருகன் என்ன சீற்றத்து'* (அகநானூறு 158:16)

**திருமுறைகளில் திருமுருகன்**

திருமுது குன்றத்துத் திருத்தயத்தினை அறிவிக்க வந்த சம்பந்தர் கருங்குழல் மடவார்கள் குறிஞ்சிப் பண்ணைப் பாடி முருகன் பெருமையை மொழிகிறார்

*"தழை மயிலேறவன்"*
*"மாயச்சூர் அன்றத்த மைந்தன்"*
*"வள்ளி முலை தோய் குமரன்"*
*"இளங்குமரன் சேந்தன்"*
*"மட மயிலூர்தி"*

"சாமி" குமரவேல், கந்தன், முருகன் எனப் பல்வேறு இடங்களில் குறிப்பிடப்படுகிறது.

**நாவுக்கரசர் தேவாரத்தில்**

கடம்பன் தந்தை – சேந்தனை மகனாகக் - கொண்டார் - முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி – வள்ளி மணாநரிக்குதிதாதை – குமரன் தாதை – கோழிக் கொடியோன் தன் தாதை போலும் - என மனதார பாராட்டி வாழத்தியுள்ளார்.

**வேதாகமங்களில் முருகன்**

இருக்கு வேதத்தில் சுப்ரமண்யோம் - சந்தோக்கிய உபநிஷத்தில் - மகாபாரத்தில், வால்மீகத்தில், பத்ம புராணத்தில், சிவாகமங்களில், சில்ப சாத்திரங்களில், குமார சம்பவத்தில் என பலவற்றில் முருக நாமம் போற்றப்படுகிறது.

**அருளாளர் பார்வையில் முருகன் - அகத்தியர்**

பொதியமலையில் கந்த மூர்த்தியை வழிபட்டு வந்தார். ஆறுமுகன் அருளால் தமிழுக்கு இலக்கணம் தந்த தமிழின் முதல் ஆசான் ஆனார்.

**நக்கீரர்**

திருமுருகாற்றுப்படை பாடி முருகன் அருள் பெற்றார். முருகனே இவருக்கு இலக்கணம் போதித்தான். நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, திருவள்ளுவமாலை போன்றவற்றில் சில பாடல்களையும் நாலடி நாற்பது என்ற நூலையும் முருகன் திருவருளால் எழுதியதாகக் குறிப்பிடுகிறார்.

**சிகண்டி முனிவர்**

திருவேங்கடமலையில் முருகவேளை நினைந்து தவம் செய்தபோது ஆறுமுகன் அருள்பாலித்து தமிழறிவு ஊட்டி ஆட்கொண்டார். கதிர்காம யாத்திரையின் போது தாக்க வந்த மதயானை மீது வெற்றிலையைக் கிள்ளி எறிய அது முருகனது வேலாகி வேழத்தை மாய்த்ததாம்.

**ஔவையார்**

சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? என்று முருகன் தமிழ்க கிழவியைத் திகைத்திட்டான். சதா காலமும் முருகனை நினைத்து நெஞ்சுருகி தமிழால் பாடிய ஔவைக்கு முருகன் நேரிடையாக காட்சி தந்தான்.

**குமரகுருபரர்**

திருநெல்வேலிச் சீமையில் அவதரித்து ஆறு ஆண்டுகள் ஊமையாக இருந்து முருகன் அருளாய் பேசியவர். நீதிநெறி விளக்கம் தந்தார். காசிக்கலம்பகம் பாடினார். 63வது வயதில் முருகனடி சேர்ந்தார்.

**இராமலிங்க சுவாமிகள்**

ஒன்பதாம் வயதில் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டு 51 ஆண்டுகள் ஞான வாழ்வு வாழ்ந்து சித்தி விளாகத் திருமாளிகைக்குள் சென்று

திருக்காப்பிட்டுக் கொண்ட ஞான வள்ளல். சென்னை கந்தக்கோட்டத்துக் குமரனை வழிபட்டு பேரின்பம் துய்த்தவர். 7ம் வயதிலேயே முருகன் மீது தெய்வமணிமாலை பாடினார். ஒரு நாள் சுவரிலிருந்த நிலைக் கண்ணாடியில் முருகன் தோன்றிக் காட்சியளித்தான்.

**அருணகிரி சுவாமிகள்**

வள்ளி நாயகன் இவருக்கு மயில் மீது காட்சி தந்து நாவில் வேளினால் 'ஓம்' என்றெழுதி 'முத்த முத்தாய் தமிழ்ப்பாடு என்று கருணை புரிந்தார். 'முத்தைத் தரு பதிநிதி திருநகை' எனப் பாடினார்.

**வாரியார் சுவாமிகள்**

இருபதாம் நூற்றாண்டின் முருகனடியார்களில் முதன்மையானவர். நாளெல்லாம் முருகா.... முருகா... என்று நாவசைத்து சொல்லாடல் புரிந்தவர். முருகன் இவருக்குச் சொல்வளம் அருளினார் எல்லாம் முருக உபன்னியாசம் செய்து வாழ அருளினார்.

**முடிவுரை**

முருகன் என்றால் அழகு. அவன் நாமம் உச்சரிப்பதில் உள்ளம் அடையும் ஆனந்தம், வார்த்தையில் வடிக்க இயலாத ஆனந்தம், வார்த்தையில் வடிக்க இயலாத வண்ணக் களஞ்சியம். செல்வம் பெருகும் சிந்தை உயரும். செழுமை உருவாகும்.

# கந்த புராணத்தில் தவம்

முனைவர் **சிவ. சண்முகசுந்தரம்,**
காஞ்சிபுரம்.

சிவபெருமானின் நெற்றிக் கண்ணினின்றும் தோன்றிய இரு தீப்பொறிகளும் வாயுதேவனாலும் அக்கினித் தேவனாலும் கங்கையாற்றில் சேர்க்கப்பட, கங்கையாறு சரவணப் பொய்கையில் சேர்க்க, அப்பொய்கையில் இருந்த தாமரை மலரில் இரு தீப்பொறிகளும் இரு குழந்தைகளாக விளங்கி, அழகிய திருவிளையாடல்களைச் செய்ய, உலகங்களை ஈன்ற அன்னையாகிய உமையம்மை, இரு குழந்தைகளையும் சிவபெருமான் திருவருளால் தன்னிருகரங்களால் அன்புடன் எடுத்து அணைக்க, இரு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களும் கொண்டார் உருவமாகச் செய்தாள். அழகிய திருவிளையாடல்கள் செய்த முருகன் ஒன்று சேர்க்கப்பட்டமையினால் கந்தன் ஆனான்.

**அமுதவல்லி, சுந்தரவல்லியின் தவப்பேறு**

கந்தன், கந்தகிரி மலையில் எழுந்தருளியிருந்த பொழுது, திருமாலின் புதல்வியர்களான அமுதவல்லி, சுந்தரவல்லி இகிய இருவரும் முருகப்பெருமானைத் தழுவும் இசையால் சரவணப் பொய்கையில் அரிய தவம் செய்தனர். ஆவர்களின் தவச் சிறப்பை உணர்ந்த கந்தப் பெருமான், கந்தகிரியினின்றும் நீங்கி இமயமலைச் சாரலில் உள்ள சரவணப் பொய்கையை அடைந்து அவர்களைக் கண்டு, ‘உங்களுக்கு வேண்டிய வரம் யாது’ என, அவர்கள் முருகப்பெருமானை வணங்கி, ‘எம்மை நீ வதுவையால் மருவ இங்கு யாம் தவம் புரிந்தனம்; கருணைபுரியுமாறு’ வேண்டினர். அவர்கள் கேட்ட வரத்தின்படி, மூத்தவளாகிய அமுதவல்லி, இந்திரனின் மகளாக ஐராவதம் என்னும் அவனது யானையால் வளர்க்கப்பட்டுத் தெய்வயானை என்னும் பெயர் உடையவள் ஆனாள். இளையவளாகிய சுந்தரவல்லி மண்ணுலகில் சிவமுனிவரின் மகளாகப் பிறந்து வேடர் தலைவனாகிய நம்பிராசனால் வள்ளிமலையில் வளர்ந்து வள்ளியம்மை என்னும் பெயர் பெற்றாள். சூரபன்மனை வென்ற பிறகு முருகப்பெருமான் தெய்வயானையையும் வள்ளியம்மையையும் மணந்தது அவ்விருவர் செய்த தவப்பயன் அல்லவா.

**காசிபர், தவம் பற்றித் தம் மக்களுக்கு ஊரைத்தவை**

தவத்தைப் பற்றிக் காசிப முனிவர், தம் பிள்ளைகளாகிய சூரபன்மன், சிங்கமுகாசுரன், தாரகாசுரன் ஆகியோர்களுக்கு, ‘அறம் செய்திடின் அன்பு வளர்ந்திடும்; அருள் என்னும் குழவியும் சேரும்; அவற்றால் தவம் என்னும் சிறப்பு உண்டாகும்; தவத்தால் மனத்தெளிவு பெற்று உயிர் சிவத்தைச் சேரும். அத்தவம் முத்திப்பேற்றைத் தருவதுடன் இப்பிறப்பில் பெற விழையும் இன்பங்களை நினைத்தவாறே பெற உதவும். எனவே, இம்மை, மறுமை,

இன்பங்களைப் பெற முழுமுதற் கடவுளான சிவபெருமானின் திருவடிகளை நினைத்துத் தவம் செய்யுங்கள்; தவம் செய்தே திருமாலும் பிரமனும் அவர்களுடைய பதவிகளைப் பெற்றனர். தவத்திற்கு ஒப்பாவது தவமேயாகும்' என்றுரைத்தார். மேலும், 'உடலை வருத்தித் தவம் செய்பவர், உலகமே புகழுமாறு வாழ்வர்; தம்மைச் சார்ந்தவர்களைக் காப்பர்; பகைவர்க்கு அழிவைச் செய்வர்; தாம் விரும்பிய பொருள் அனைத்தையும் பெறுவர்; அழிவின்றி நிலைத்து வாழ்வர். 'அது ஊறுதி' என்று கூறிய காசிபர், அதற்கு எடுத்துக்காட்டாக மார்க்கண்டேயர் வரலாற்றைக் கூறுகின்றார்.

அந்தணர் தலைவராகிய குச்சக முனிவரின் தவச்சிறப்பு, அவர் மகனாகிய கவுச்சிக முனிவர், மிருககண்டுயர் என்னும் பெயர் பெற்ற சிறப்பு, இவரது திருமணம் நடக்கக் குச்சகர் செய்த தவச்சிறப்பு (தருமத்தைத் தத்தம் செய்த தருமதத்தன் வரலாறு அறிந்து கூறல்), மிருககண்டுயரின் மகனாகிய மிருகண்டு முனிவர், தம் தவச்சிறப்பால் பெற்ற மார்க்கண்டேயரின் தவச்சிறப்பினை,

*"அப்பெரும் திருமகன் இற்றும் நோன்பினால்*
*தப்பரும் விதியினைத் தணந்து கூற்றுவன்*
*துப்பினை அகற்றியே தொலைவு கண்டுபின்*
*எப்பொழு தத்தினும் இறப்பின்(று) இயினான்"*

- அசுரகாண்டம், மார்க்கண்டேயப்படலம் : பா.285

என்று கூறித் தம்மக்களுக்கு நல்லறிவுரை வழங்கினார். அந்த அசுரர்கள் மூவரும் தாய், மாயையின் கூற்றுப்படி வேள்வித் தவம் செய்தனரே தவிர, காசிபர் கூற்றாகிய,

*"இதலின் மைந்தர்காள் அறத்தை இற்றுதிர்*
*தீதினை விலக்குதிர் சிவனை ஊன்னியே*
*மாதவம் புரிகுதிர்"* (மேற்படி, காசிபரின் ஊபதேசப் படலம் : பா.24)

என்னும் தந்தையின் சொல்லைச் செயல்படுத்தினாரில்லை.

**அசுரகுரு, சூரபன்மனுக்கு உரைத்தவை**

சூரபன்மன், தாயின் கூற்றுப்படி வேள்வித் தவம் செய்திட, அசுரர் படை வெள்ளத்துடன் சென்றபொழுது, அசுர குருவாகிய சுக்கிராச்சாரியார் அவன் முன் தோன்றி, அசுரர்களின் பகைவர்களாகிய தேவர்களால் வேள்விக்கு இடையூறு வாராதிருக்கச் சிவபெருமானின் ஒப்பற்ற மந்திரம் ஒன்றை உபதேசித்தார். அதனை நாள்தோறும் எண்ணி, மனத்தையும் ஐம்புலன்களையும் ஒரு முகப்படுத்திப் பொய், களவு, காமம் முதலிய பாவங்கள் நெருங்காதபடி காத்துத் தவத்தைச் செய்யுங்கள்" என்று அறிவுறுத்தினார்.

**சூரபன்மன் செய்த வேள்வித் தவம்**

சூரபன்மன், தன் தாய் மாயை கூறியவாறு இலந்தீவில் பெரிய மதிலை, அசுரர்களைக் கொண்டு உருவாக்கினான். இயிரம் யோசனை அளவு நீள, அகல, ஆழமுள்ள வேள்விக்குழியை உண்டாக்கி, அதன் நடுவே வச்சிரக் கம்பத்தினை நிறுவிட, வேள்விப் பொருள்களை மாயை கொண்டு வந்து சேர்த்தாள். அக்குழியைச் சுற்றி நூற்று ஏட்டு ஈமக் குண்டங்களையும் அவற்றைச் சூழ்ந்து ஆயிரத்து எட்டுக் குண்டங்களையும் அமையுமாறு செய்தான். நடுவில் உள்ள பெரிய வேள்விக் குழியைச் சூரபன்மனும் நூற்று எட்டுக் குண்டங்களைச் சிங்கமுகாசுரனும் ஆயிரத்து எட்டுக் குண்டங்களைத் தாரகனுமாக வேள்வியைச் செய்தனர். சிவபெருமானை நினைத்து ஒப்பற்ற வேள்வியைப் பத்தாயிரம் ஆண்டுகள் செய்தும் சிவபெருமான் தோன்றி அருள் செய்யாமையால் சூரபன்மன் ஈமத் தொழிலினைத் தம் தம்பியர்களைச் செய்யச் சொல்லி, விரைந்து வானுலகில் சென்று அங்கிருந்து தசைகளை அறுத்து தானே ஆவியாகவும் இரத்தமே நெய்யாகவும் இட்டான். அரிய அரிய அவை வளர்ந்து கொண்டேயிருக்க அவன் பெருமிதத்துடன் அயிரம் ஆண்டுகள் வானத்தினின்றும் இவ்வாறு யாகம் செய்தான். நிமலன் ஈண்டும் வந்தருள்புரியாமையினால் 'மாண்டு போவதே இனிக் கடன்' என வச்சிரக் கம்பத்தின் மீது விழுந்து இறந்தான். தமையன் இறந்தமையால் சிங்கமுகனும் தன் ஆயிரம் தலைகளை அறுத்து யாகத் தீயில் இட்டான். தாரகனும் தன்தலையை அறுத்து யாகத்தில் இட்டான். அவ்விருவருடைய தலைகளும் உடனுக்குடன் வளர்ந்து கொண்டேயிருந்தன. அதனால் சிங்கமுகன், சூரபன்மன் போல் யாகத் தீயில் விழத் துணிவுகொண்ட பொழுது, சிவபெருமான் அவன் முன்பு தோன்றி அவர்கள் துன்பத்தை அறிந்து, கங்கையாற்றை வரவழைத்து யாகத்தை அழித்துச் சூரபன்மனை உயிர்பெறச் செய்தார். சூரபன்மன், சிவபெருமானின் திருவடிகளில் விழுந்து வணங்க அவர் வானில் காட்சி கொடுத்தார்.

**சிவபெருமான் சூரபன்மனுக்கு அவன் வேண்டிய வரங்கள் அளித்தல்**

அப்பொழுது சூரபன்மன், "பூமியைச் சார்ந்து விளங்கும் பல உலகங்களைக் கொண்ட அண்டக் கூட்டங்கள் எல்லாவற்றுக்கும் நான் அரசனாகவும், நினைப்பதற்கு முன் அந்த அண்டங்களுக்குச் சென்றுவர ஊர்தியும், எப்பொழுதும் அழியாதிருக்கும் வச்சிரயாக்கையும் வேண்டும்" என்று வேண்டினான். எந்தத் தேவர்களையும் வெல்லவல்ல பத்தாயிரம் கோடி நான்கு வகையான படைகளையும் ஆயிரத்தெட்டு அண்டங்களை அரசாளவும், அங்கெல்லாம் சென்று வர, 'இந்திரஞாலம்' என்னும் தேரினையும் தேவர்களுக்கெல்லாம் தலைமைப் பொறுப்பும் தந்தருளினார் சிவபெருமான். அதன்படி சூரபன்மன் திக்குவிசயம் செய்து திருமால் உள்ளிட்ட தேவர்கள் அனைவரையும் வென்றிடவும் அவனது ஏவலுக்கு உட்படவும், நூற்று எட்டுச் சதுர் யுகங்கள் ஆண்ட பிறகு தம் சத்தி தவிர வேறொன்றால் அவனை வெல்ல இயலாத வரத்தையும் தந்தருளினார்.

அதன் பின்னர், சூரபன்மன், வீரமகேந்திரபுரம் என்னும் நகரம் அமைத்து அதனைத் தானும், ஈசுரம் என்னும் நகரைச் சிங்கமுகனுக்கும் மாயாபுரம் என்னும் நகரைத் தாரகனுக்கும் அமைத்துக் கொடுத்து ஆட்சி செய்து வந்தான். அப்பொழுது சுக்கிராச்சாரியார் உபதேசப்படி தேவர்களை வருத்தி அவர்களைச் சிறையிலடைத்துத் துன்புறுத்தினான்.

**வீரமகேந்திரபுரம் மக்கள் குறித்து வீரவாகு எண்ணியவை**

முருகப்பெருமானின் தூதனாக வீரவாகு, சூரபன்மனின் வீரமகேந்திரபுரம் சென்ற பொழுது, இங்குள்ள மக்கள் நரம்புகள் மேலெழ, தசையெலாம் வற்றி உலர்ந்து நரைத்துக் கோல் என்றி முதிர்ந்துத் தளர்ந்தவரையும், இயமனால் அழைத்துச் செல்லப்படுபவரையும், நோயாலும் வறுமையாலும் வருந்தாதவர்களையும், காணாததற்குச் சூரபன்மன் செய்த தவத்தின் வலிமையே காரணம் என நினைத்தான்.

**சூரபன்மன் செய்த தவத்தின் மேன்மை**

இரண்டாம் நாள் போரில் முருகப்பெருமான், வீரவாகு ஊள்ளிட்ட அவர் தம் படைவீரர்கள் தோற்றோடியதும் சூரபன்மன் முன்பு செல்ல, 'முனிவர்களும் தேவர்களும் ஆக யாவரும் இத்தன்மை உடையவன் என்று நினைத்தற்கு அரிய தலைமையுடைய ஒப்பற்ற முருகப் பெருமானைத் தாமரை மலர்ந்தது போன்ற இறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கண்களும் காதுகளில் குண்டல வரிசையும் செம்பொன்னால் இன மகுடமும் அழகிய மார்பும் பன்னிரண்டு திருக்கரங்களும் அக்கைகளில் விளங்கும் படைக்கலன்கள் அனைத்தையும், தண்டையும், சிலம்பும் ஒலிக்கும் திருவடிகளையும்' கண்டான் என்றால் அவன்தான் முற்காலத்தில் செய்த அருந்தவச் சிறப்பினை யாரால் சொல்ல இயலும்?

*'பரத்தின் மேற்படு பண்ணவன்'*

-யுத்த காண்டம், சிங்கமுகாசுரன் வதைப்படலம் பா : 405

*'பரத்தினும் மேதகு பண்ணவன்'*

- மேற்படி, சூரபன்மன் வதைப்படலம், பா : 121

என்று உபசார வழக்கில் கூறப்படும் முருகப்பெருமானை, நான்காம் நாள் பகல் போரில், முருகப்பெருமானின் படை வீரர்களில் ஒருவனான விசயன் என்பவனால், சூரபன்மனின் மைந்தர்களான மூவாயிரர்கள் என்போர் இறந்து உயிர் பெற்றெழுவதும், கைகள், தலைகள், கால்கள், மார்புகள் அறுபட்டவுடன் அவை மறுபடியும் வந்து கூடுதலையும் ஆராய்ந்து பார்த்தால் சூரபன்மன் செய்த தவத்தினும் வேறு சிறப்பு ஒன்று உண்டோ? என்பது அறியலாம்.

ஆறாம் நாள் போரில் சிங்கமுகனின் மாலையணிந்த தோள்கள் எல்லாவற்றையும் முருகப்பெருமான் அறுத்துத் தள்ளத்தள்ள மீண்டும் மீண்டும் அவை வளர்ந்து கொண்டே இருத்தலும் கண்டால், அவர்கள் செய்த தவத்தினும்

பெரியது **உலகில் வேறு** உண்டோ?. **அவ்வாறு** முருகப்பெருமான் 108 முறை **அம்பு மழைகளைப்** பொழிந்து **அவற்றை** அறுத்துத் தள்ளுதலைத் தம் திருவிளையாடலாகக் கொண்டார்.

**இறுதியாகச்** சூரபன்மன், முருகப்பெருமானுடன் செய்த போரில், பலகாலும் பார்த்தாலும் தெவிட்டாத அப்பெருமானின் தோற்றத்தைக் கண்டு, ‘மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும் மூல காரணமாய் நின்ற மூர்த்தி இம்மூர்த்தி அன்றோ’, என்று மொழிந்தான். அந்நிலையில், அவனது சீற்றம் முழுமையாக அகன்றது; போர் செய்யும் ஏக்கம் குறைந்தது; கண்களில் நீர் பெருகியது; உரோமங்கள் சிலிர்த்தன. எலும்புகள் உலையில் இட்ட மெழுகுபோல இளகியது; செருக்கு நீங்கியது; வலப்பக்கத் தோள்களும் கண்களும் துடித்தன. உலகத்திலுள்ள பொருள்கள் அனைத்தும் முழுமையாக அவனிடம் வெளிப்பட்டன. ‘இத்தகைய வானவர் தலைவனின் திருவுருவத்தைக் கண்டது யான் செய்த தவப்பயன்’, என்றான் சூரபன்மன்.

**முருகப்பெருமான் சூரனுக்கு அருள் புரிந்த தன்மை**

மாமர வடிவமாய்க் கடலில் ஈருந்திட்ட சூரபன்மனை முருகப்பெருமான் தம் வேலால் ஈரு பிளவாக்கிட, பிளவுபட்ட உடலின் இரு துண்டுகளும் கோழியும் மயிலுமாக வடிவம் கொண்டு, சினத்துடன் போரிட வர, ‘சிறந்தார் நோக்கால் இருள்கெழு கரும்பொன், செம்பொன் ஈகும் இயற்கைபோல்’ முருகப்பெருமானின் அருள் நோக்கால் சேவற்கோழி, கொடியின் வடிவமாகவும் மயில் வாகனமாகவும் அமையும் பேற்றினைச் அச்சூரபன்மன் பெற்றான் என்றால் சூரபன்மனின் தவச்சிறப்பும் முருகப்பெருமானின் திருவருட் பார்வையும் சொல்ல இயலாத மேன்மை உடையன அன்றோ.

# வள்ளுவர் கூறும் அறமும் ஆசீவகமும்

V.P. Shanmugham(பொன்முத்து)
Northway Drive 8112, Hanover Park,
Illinois 60133, USA

தமிழர் வாழ்வு அறம் சார்ந்தது என்றும் நல்லறமே அவர் வாழ்க்கைக்கு வழிகாட்டி என்பதும் ஆன்றோர் தெளிவு. வள்ளுவனார் தந்த திருக்குறள் தமிழர்தம் வழிகாட்டி நுல் என்றும் இவ்வற நூலே 'உலகப் பொதுமறை' என்னும் பெருமைக்கும் உரியது என்பதும் அவர்தம் ஒருமைப்பட்ட கருத்து. அறம் எனும் சொல்லின் பொருளாய்வு எளிதன்று என்போருமுண்டு. மாற்று மொழியோர் இச்சொல்லின் பொருளறிய இயலாமல் இதற்கு வெவ்வேறு சொல்-பொருள் கற்பித்து மயக்கி வைத்தனர். தமிழரும் இக்கருத்தை உள்வாங்கி அறம் இப்படிப்பட்டதோ என மயங்கினர் என்பது கட்டுரை ஆசிரியர் கருத்து. வள்ளுவனார் சுமார் ஐம்பதுக்குட்பட்ட பாக்களில் 'அறம்' என்ற சொல்லைக் கையாள்கிறார். அவற்றில் 39 அறத்துப் பாலிலும் 9 பொருட்பாலிலும் உள்ளன. இன்பத்துப் பாலில் அறம் எனும் சொல் கையாளப் படவில்லை. இதை ஆய்வு செய்த ஒரு கட்டுரையில் அறத்துப்பாலில் வரும் 39 பாக்களும் பட்டியலிட்டுப் பகுப்பாய்வு முறையில் ஆய்வு செய்யப்பட்டன. இறைவணக்கம் தவிர 38 பாக்களும் இப்படி மலர்ச்சியில் அலர்வது காண முடிந்தது. மேலும் 'ஐம்புலன்கள்' பற்றிய 9 குறட்பக்களில், இன்பத்துப் பாலில் தொடங்கி இறைவணக்கம் முடிய, ஐய்யன் ஆசீவக வாழ்க்கைக்கான கல்வி முறையும் காட்டுகிறார். இவ்விரு ஆய்வுகள் இணைந்து விரிக்கப்பட்டதே இக்கட்டுரை.

**வள்ளுவர் காட்டும் அறத்தின் படிமலர்ச்சி**

மனம், மொழி, செயல், விளைவு என்ற அறத்தின்படி மலர்ச்சி காட்டும் குறள் எண்கள் (34, 35, 36, 93, 321); முதல் மூன்று குறட்பாக்கள் மனம், மனமும்-மொழியும், செயலும்-விளைவும் என்றபடி மலர்ச்சியும், அடுத்த இரண்டு பாக்கள் (முதல் பாவுடன் சேர்ந்து) அவற்றின் இலக்கணம் காட்டுவதும் காண்க. விளைவுக்கு இலக்கணம் இல்லை என்பது தெளிவு.

*மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அனைத்துஅறன்*
*ஆகுல நீர பிற* (குறள் 34)

*அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்*
*இழுக்கா இயன்றது அறம்* (குறள் 35)

*அன்றுஅறிவாம் என்னாது அறம்செய்க மற்றுஅது*
*பொன்றுங்கால் பொன்றாத் துணை* (குறள் 36)

*முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி*
*அகத்தானாம் இன்சொலினதே அறம்* (குறள் 96)

*அறவினை யாதுஎனில் கொல்லாமை கோறல்*
*பிறவினை எல்லாம் தரும்* *(குறள் 321)*

வள்ளுவர் காட்டும் அறத்தின் 'மனம், மொழி, செயல், விளைவு' எனும்படி மலர்ச்சியை ஆயும் போது மனம் மொழியின்றிச் செயல் புரிவதும், மொழி செயலின்றி விளைவு தருவதும் காண முடிகிறது. மொழியும், செயலும் போல, மனமே (மொழியும் செயலும் இன்றி) விளைவு தரும் எனும் உண்மை விளைவது இங்கே காண்க. மனமொழிக் கெட்டா ஞான நிலையில் நம்மனம் தானியங்குவது என முடியும் (நம் உணவை உடல் செரிப்பது போல்). இதுவே ஞானநிலை, ஆசீவக நெறியின் அடிப்படை என்று தெளிவதற்கான சான்றுகள் பலவுமுண்டு.

ஆசீவகம் ஓர் அறிவுசார்ந்த வாழ்வுமுறை. பசிப்பிணிக்கு மருந்தென உழவர் வழி கண்டது உணவகம். உடல் நோய்க்கு மருத்துவரும், செவிலியரும், செய்வோரும் மருந்து தருமிடம் மருந்தகம், மருத்துவகம். உயிர்நோய்க்கு, மனநோய்க்கு, வாழ்க்கை வலிகளுக்கு மருந்தென நல்வழி அறிவுரை, கிடைக்கும் முறையும் இடமுமே ஆசீவகம், அறவழி கற்று அதற்குத்தக நின்று (குறள் 391) ஞான நிலையில் தெளிந்து ஆசையும் அச்சமு மின்றித் தங்கு தடையில்லாது ('ஆசு' கவிபோல்) மாசறு காட்சியால் (குறள் 352) ஐய்யப்படாது தம்முன் துயரடைந்து வருவோரின் அகத்தது உணர்ந்து (குறள் 702) (ஈவு) நல்வழி காட்டுவோர் ஆசீவகர் ஆவர் (குறள் 8) என்பது வள்ளுவனார் கூற்றும், இலக்கியங்கள் காட்டுவதும். இந்தக் கருத்துக்கள் தொடர்ந்து கீழே ஆயப்படுகின்றன.

வள்ளுவம் காட்டும் ஆசீவகப் பயிற்சி முறை: இந்த ஆய்வு வள்ளுவரின் (ஐம்பொறி, ஐம்புலன், ஐயுணர்வு... என) 'ஐம்பொருள்' பற்றிய 9 குறட்பாக்களையும் (8 அறத்துப் பாலிலும், ஒன்று இன்பத்துப் பாலிலும்) ஆய்ந்து கருத்து வளர்ச்சித் தொடர் காட்டியுள்ளது. இங்கு ஐந்து என்ற 'ஐம்புலன்கள்' பற்றிக் கூறும் ஒன்பது குறட்பாக்களும் ஒரு வரிசையில் எடுத்துக்கொண்டு ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இவ்வொன்பது பாக்களின் எண்வரிசைத் தோற்றமும் அதிகாரத் தலைப்பும் காண்க: குறள் எண் - 6,24, 25, 27, 126, 271, 343, 354, 1101; இறைவணக்கம் (1), நீத்தார் பெருமை (3), அடக்கமுடைமை (1), துறவு (1), கூடா ஒழுக்கம் (1), மெய்யுணர்தல் (1), புணர்ச்சி மகிழ்தல் (1).இவற்றின் ஆசீவகத் தொடர்பு இதன்பின் ஆயப்படும்.

இந்தக் கல்வி முறையே பண்டைய தமிழரின் ஆசீவகப் பயிற்சி முறையில் இருத்தல் வேண்டும். ஐம்பொருள் காட்டும் ஒன்பது பாக்கள் தோற்றத்தின் பின்னிருந்து முன்நோக்கி வருவதாக (குறள்: 1101, 354, 343, 271, 126, 27, 25, 24, 6) இந்த ஆய்வு அமைந்துள்ளது (இன்பத்துப் பாலில் இருந்து இறை வணக்கம் முடிய). இதற்கான காரணம், 1101வது குறள் மனிதனின் மெய்யும் உயிரும் இணைந்த தோற்றமுதல் தன்னுள் கொண்டது [(ப்+இ)றப்பு = மெய்யும் உயிரும் இணைந்து தோன்றுதல்]. 6வது குறள்

முடிவு [இறப்பு = உயிர், மெய்யின்றித்தனித்தது] இல்லாத நீண்ட வாழ்வு காட்டுகிறது. இக்குறிப்பின் காரணத்தினால் ஆய்வு இறுதியில் (எண்1101) இருந்து முதற்குறள் (எண்6) நோக்கி அமைந்தது. ஆய்வில் குறட்பாவின மூலமும், பொதுவான ஓர் உரையும், ஐய்யன் சொல்வது போன்ற ஆய்வாசிரியரின் விளக்கங்களும், மாணாக்கன் பொருந்தும் கேள்விகள் கேட்டு ஐய்யனின் பதில் பெறுவது போலவும் அமைக்கப்பட்டுள்ளது. ஆய்வின் போது பாக்களின் கருத்துக்கள் ஒன்றி வருவது காட்டப்படுகிறது.

**புணர்ச்சி மகிழ்தல்**

*கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்*
*ஒண்தொடி கண்ணே உள*

(குறள்: 1101, 354, 343, 271, 126, 27, 25, 24, 6) இங்கு வள்ளுவர் ஐம்புல நுகர்வுகளை, இன்பங்களை மாணவனுக்குக் கூறுகிறார். மனிதப் பிறவியின் தோற்றத்தை மறுக்க முடியாது அல்லவா? பாரதியார், 'எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி இருந்ததும் இந்நாடே' என்பதும் காண்க.

**மாணாக்கன்:** "ஐய்யனே, இல்வாழ்வில் ஐம்புல நுகர்வுகளால் பிறவியின் பயன்களை அடைய முடியுமா?"

**ஐய்யன்** : "கூர்மையான கேள்வி. சொல்லும் கருத்தைக்கேள்."

**மெய் உணர்தல்**

*யுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே*
*மெய்யுணர்வு இல்லா தவர்க்கு*

*(குறள்:1101, 354, 343, 271, 126, 27, 25, 24, 6)* □இல்வாழ்வில் ஐம்புல அறிவு உணர்ந்த பின்பும் மெய்யுணர்வு இல்லையெனில வாழ்க்கைப் பயனில்லையாம்."

மெய்யறிவு என்பது என்ன? 'மெய்' என்பது உடலைக் குறிப்பதும் காண்க. ஒருவகையில் இந்த உடம்பின் உண்மையை, நிலையில்லாமையை அறியவேண்டும் கொல்? சித்தரும், ஞானியரும் சொல்வதென்ன? "உன்னை அறியவேண்டும்" என. இரமண மகரிசி இக்கருத்தையே "நான்யார்?" என்று தெளி என்பார். சித்தர் பலரும் யாக்கை நிலையாமையை விளக்கிய பின்னரே தம் கருத்துக்களை உணர்த்துவதும் காண்க.

**மாணாக்கன்:** "ஐய்யனே! புலன்களின் அறிவெல்லாம் பெற்றபின் மெய்யறிவு அடைய என்ன செய்யவேண்டும்?"

**ஐய்யன்:** "உண்மையறிவில் ஆர்வம் கொண்டவனே, சொல்கிறேன் கேள்."

**துறவு**

*அடல்வேண்டும் ஐந்தன் புலத்தைவிடல் வேண்டும்*
*வேண்டிய எல்லாம் ஒருங்கு*

(குறள்: 1101, 354, 343, 271, 126, 27, 25, 24, 6) "உள்ளத்தில் ஐம்புலன்களின் பிடிப்பிலிருந்தும், புறத்தில் எல்லாப் பற்றுக்களில் இருந்தும் விடுபடவேண்டும்."

**மாணாக்கன்:** "இல்வாழ்வைத துறந்து துறவறம் பூண்டும் வாழ வேண்டும் கொல்!"

**ஐய்யன்:** "இல்லை, துறவறம் பற்றித் தெறிந்து தெளி."

**கூடாஒழுக்கம்**

*வஞ்சமனத் தான்படிற்று ஒழுக்கம் பூதங்கள்*
*ஐந்தும் அகத்தே நகும்*

(குறள்: 1101, 354, 343, 271, 126, 27, 25, 24,6) "மனமாசுகள் அகற்றாது வெளிவேடம்மட்டும் கொண்ட வஞ்சகரை ஐம்பூதங்களும் தம்முள்ளே எள்ளி நகையாடும்." "வெளிவேடங்கள் (பல வண்ண உடைகள், உடைகள் இல்லாமை, மழித்தல், நீட்டல் எனப்) பூண்டாலும் மன மாசுகள் அகற்றா(34, 35) வாழ்வை அவ்வுடம்பை ஆக்கிய ஐம்பூதங்களும தம்முள் எள்ளி நகையாடும்" என்பது விரிவுரை.

**மாணாக்கன்:** "தெளிந்தேன் ஐயனே. பற்று விடவும் துறவு சாராமலும் ஐம்புலன்களை அடக்க என் செய்ய வேண்டும்?"

**ஐய்யன்:** "உண்மை அறிவில் நாட்டம் கொண்டவனே, கேள்."

**அடக்கம்உடைமை**

*ஒருமையுள் ஆமைபோல் ஐந்துஅடக்கல் ஆற்றின்*
*எழுமையும் ஏமாப்பு உடைத்து*

(குறள்:1101, 354, 343, 271, 126, 27, 25, 24, 6) "ஆமைபோல் ஐந்தடக்கி, வேண்டும் போது வெளிக்கொணர்ந்து வாழ்வோர் எழுபிறப்பும் பயனடைவார்கள்." (7 வாழ்க்கைப படிகள்: 12 ஆண்டுகளின் தொகுப்பால் வரும் வாழ்க்கைப் படிகள் காண்க. பெண்- பேதை முதல் பேரிளம் பெண்வரை; ஆண்- பாலன் முதல் முதுமகன் ஈராக).'ஏழு' பிறப்பென்பான் ஒன்றையே தெளியாது ஏழைக்கருதும் அறிவிலி என்க.

**மாணாக்கன்:** "ஐய்யனே! ஆமைபோல ஐந்தடக்கினால் இவ்வுலகத்தோடு எவ்வாறு ஒட்டி வாழ வேண்டும்?"

**ஐய்யன்:** பொருந்திய கேள்வி. பதில் கேள்.

**நீத்தார்பெருமை**

*சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்*
*வகைதெரி வான்கட்டே உலகு*

(குறள்: 1101, 354, 343, 271, 126, 27, 25, 24, 6) "ஐம்புலன்களின் வழிவகை அறிந்தவனை உலகம் பின்பற்றி நடக்கும், அவனிடம் இவ்வுலகம் அடங்கும்."

**ஐய்யன்:** "இப்பறந்த உலகம ஐம்புலன்களின வகையும் வழிகளும் அறிந்தவனிடத்தில் அடங்கும் எனத் தெளிதல் வேண்டும். இவ்வாற்றலின் பயனை மீண்டும் விரிப்பேன் கேள்."

அண்மையில் நம்முடன் வாழ்ந்த ஞானியரை அறிவுரை நாடி வந்தவர் கேட்டது: 'நீவிர் நாடி வருவோருக்கு அவர்தம் துன்பங்களை விளக்காத போதும் பொருந்தும் அறிவுரை தருவது எப்படியோ?' ஞானியரின் பதில் பாருங்கள்: "நான் பார்க்கும் ஒன்றாகவே மாறி அதன் உள்மனமாக ஆகிவிடுகிறேன். இதன் பெயர்தான் அன்பு என உணர்கிறேன். ஆசையும் அச்சமுமில்லாமல் வரும் எண்ணங்கள் (ஈவு) தன்னிறைவு அடைகின்றன. தன்னிச்சையாக (ஆசு) இயல்பான மெய்யாகின்றன"-- நிசர்க்கதத்தா,'I AM THAT| pp. 269, Acorn Press, 1982. ISBN 0-89386-022-0. (குறள் 708 ஒன்றியது காண்க).

தெளிவு நிலை அடைந்த ஞானியர் தரும் அறிவுரைகள் தவறாது அறவிளைவு தரும் என்பதால் மக்கள் ஆசீவகர்களை நாடினர் என்பது தெளிவு. இவ்வறவோர்பல வாழ்க்கைப் படிநிலைகளில் மக்களிடை ஒன்றாக வாழ்ந்தும், மன்னர், வணிகர், உழவோர், மற்று ஊர் மக்களின் கொடையில் வாழ்ந்தும் வானியல், மருத்துவம், இசை மற்று அறிவியல் வழிகளில ஈவு பலகண்டு சேர்த்து மக்களுடன் பகிர்ந்தவர் என எண்ண முடிகிறது.

ஆசீவகர்கள் துறவிகளா? ஆசீவகர் என்போர் மேற்காட்டியவாறு ஆசானிடம் பயின்று அறநிலையில் வாழ்ந்து ஞான நிலையில் தெளிந்தோர், மாசறு காட்சியுடையோர் என்பன ஆய்வில் இதுவரை நாம் கண்ட தெளிவு. தமிழர் படிநிலையில் அறநெறி கற்றுப் பல வாழ்க்கைப் படி நிலைகளில் வாழ்ந்திருக்க வேண்டும். குறள் இறங்கு வரிசையில் கூறும் ஐம்புல ஆய்வு இதைத் தெளிவாக்கியது பார்த்தோம். ஐம்புல நுகர்விலிருந்து படிப்படியாகத் தெளிவுநிலை அடைந்த ஞானியரே ஆசீவகராக, இறைநிலையில், கடவுளர்களாக, தெய்வங்களாக வாழ்ந்திருக்க வேண்டும் என்பதும் தெளிவு. துறவறம் மனம் சார்ந்தது என்பது பார்த்து ஆசீவகர் துறவு வழியினர் அல்லர், அவர் அறவழி ஞானியர் எனவும், இந்தஞான நிலையே துறவின் குறிக்கோள் எனவும் தெளிய முடியும். ஆகவே துறவிகள் துறவுநெறியில் ஞான நிலையடைய 'முயல்வோர்' என்றும் ஆசீவகர் அறவழியால் ஞானியர் என்றும் கொள்ள முடிகிறது. ஞானியரைத் துறவியர் என்பது' தோற்ற மயக்கம்'என்பது தெளிவுபடுகிறது. முரண், ஓர் அறிவொளி முடிச்சென்று கொள்ளலாம்.

தெய்வம், ஞானியர், கடவுள், அறவோர்: சொல் மயக்கங்கள்: காலம் மயங்கிய பல இலக்கிய நூல்கள் தெய்வம், ஞானியர், கடவுள், அறவோர், நீத்தார் என்பவற்றை ஒரே பொருள் மயக்கத்தில் ஆண்டுள்ளனர்:

**சிலப்பதிகாரம்:** கந்தன் பள்ளிக் கடவுளர்க்கெல்லாம் (மதுரைக் காண்டம்): கோவலன்-கண்ணகியுடன், கவுந்தியடிகள் உறையூரில் தங்கித் துறவிகளாகிய கடவுளரிடத்தில் உரையாடினார்.

**சீவகசிந்தாமணி:** சீவக மன்னன் அரசு துறந்து துறவு பூண்டுகேவல ஞானம் பெற்று வீடுபேறு அடையும் நிலையில் விஞ்சையர் (வானவர்) வந்து அவனைத் தொழுது வணங்கினர் (குறள்25).

**கம்பர்:** இந்திரசித்தன் வதை - 'கொல்லாத விரதத்தார்தம் கடவுளர் கூட்டம் ஒத்தார்'. ஐ(ஆசீவகரின்) 'அறவினை யாதெனின் கொல்லாமை'(குறள் 321) விரதம் காண்க. இக்கூற்றினால் கம்பர் வள்ளுவத்தின் ஆசீவக வாழ்வு முறைகளைக் காட்டுவதுடன், இந்திர சித்தன், போரிடலையும், அவன் வதைப்பட்டபின் "கடவுளர் கூட்டம்" அழிக்கப்பட்டதும் உணர்த்துகிறார். தெரிந்த ஒன்றைக் காட்டித் தானே தெரியாத ஒன்றை (தமிழ் இலக்கணத்தால்) விளக்க முடியும்? (இலக்கண நூல்முறை காண்க).இவைபோலவே சூளாமணி, திருக்கலம்பகம் கலித்தொகை ('உடனுறை வாழ்க்கைக் உதவி புறையுங் கடவுளர்கண் தங்கினேன்' என்பன) காண்க. ('சமயங்கள் வளர்த்த தமிழ்'- 1966.). இந்தக் காட்டுகளினால் ஆசீவக நெறியில் ("கடவுள்" மறுப்பு முறையில்) எழுந்த சொற்களே ஆத்திகர்கள் தமதெனக் கையாண்டது காணமுடிகிறது. 'தெய்வம், ஞானியர், கடவுள்'இல்லாது ஆத்திகம் எங்கே?

**முடிவுரை**

இக்கட்டுரையில் வள்ளுவர் கூறும் அறம் (மனம், மொழி, செயல், விளைவு என்ற) படிமலர்ச்சியில், அலர்வதாகக் காட்டப்பட்டது. மனம் மொழியின்றிச் செயல் புரிவதும், மொழி செயலின்றி விளைவு தருவதும் காண முடிகிறது. மொழியும், செயலும் போல, மனமே (மொழியும் செயலும் இன்றி) விளைவு தரும் எனும் உண்மை உணர்த்தப் பட்டது. அறம்சார்ந்த இக்கருத்துக்களே ஆசீவகரின் வாழ்க்கைப் படிகளாக அமைந்திருப்பதும் காணமுடிந்தது. மாணாக்கராக அவர் கற்றகல்வி எவ்வாறு வள்ளுவரின் அறம் சார்ந்து இருந்திருக்க வேண்டும் என்பதும் கண்டோம். இதுவரை அறிஞர் பலரும் நிலைநாட்டிய ஆசீவகம் பற்றிய கருத்துக்கள் எவ்வாறு வள்ளுவம் கூறும் கருத்துக்களோடு இணைந்து இருக்கின்றன என்பதும் காட்டப்பட்டது. இத்துடன் ஆசீவகர் துறவியரா என்ற ஆய்வில், ஆசீவகர் ஞானநிலையோர் (படிமலர்ச்சியில் 'அறம் துறந்தோர்') என்பதும் துறவிகள் என்போர் துறவு வழியில் ஞானநிலை அடைய "முயல்வோர்" என்பதும் காட்டி, சொற்-பொருள் மயக்கம் விளக்கப்பட்டது. தொடர்ந்து, ஆசீவகர், கடவுளர், ஞானியர், இறைவன் மற்று நீத்தார் என்ற சொல்மயக்கங்கள் இலக்கியங்களில் இருப்பதும் தேடப்பட்டது. இங்கு நிலைநாட்டிய கருத்துக்கள் ஆசீவக நெறிமுறை குலைந்ததற்கும், ஆத்திக முறைகள் வளர்ந்ததற்கும், தமிழரின் இன்றைய நிலையும் காட்ட உதவும் என்று மற்ற ஆய்வுக் கட்டுரைகளும் முயலப்பட வேண்டும். தமிழின் தொல்வேறுகள் மீட்டெடுக்கப்பட வேண்டும். முன்சென்ற, உடன்செல்லும், பின்வரும் ஆன்றோர் பலரின் நுண்ணிய ஆய்வுகள் எண்ணி, இச்சிற்றாய்வு இந்த முயற்சியில் ஓர் அடிக்குறிப்பாகவேனும் அமையும் என்னும் தமிழ்ப் பணி ஆசையில்இ க்கட்டுரையை முயன்றுள்ளேன்.

# பாம்பன் சுவாமிகளின் படைப்புகள்

**செ.வே. சதாநந்தன்**
மேனாள்தலைவர், சைவசித்தாந்தப்பெருமன்றம்
சென்னை.

பாம்பன் சுவாமிகள் என்று வணங்கப்படும் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருநாச சுவாமிகள் 1850-1929 இப்பூவுலகில் அருளாளராக வாழ்ந்தவர். அத்தியாச்சிரம, சுத்தாத்வைத, வைதீக சைவ சித்தாந்த, ஞானபானு என்று போற்றப்படுபவர். முருகப் பெருமான் ஒருவனையே பரம்பொருளாக வழிபட்டு அவரின் தரிசனத்தைப் பலமுறை பெற்று அவரிடம் உபதேசம் பெற்றவர். அப் பெருமானின் அருளால் உவமையிலாக் கலைஞானமும், உணர்வரிய மெய்ஞானமும் பெற்றவர். முருகப்பெருமானின் திருமுகங்கள் 6; அவரது படைவீடுகள் 6; அவரது மந்திரம் (சடாட்சரம்) 6 எழுத்து. பாம்பன் சுவாமிகள் முருகப் பெருமானைப் போற்றிய பாடல்கள் 6666 ஆகும். அவைகளைச் சுவாமிகள் 6 மண்டலங்களாகத் தொகுத்துள்ளார்கள். அதனோடு 32 தலைப்புகளில் வசன நடையில் வியாசங்களை அருளியுள்ளார்கள். இவர்களைப் பக்தியோடு ஓதுபவர்கள் துன்ப நீக்கமும், இன்ப ஆக்கமும் உறுதியோடு பெறுகிறார்கள்.

"இறைவன் என்முன் வெளிப்பட்டு அருளிய உபகாரமும், உறுதி மொழிகளும் பல; என் பாடல்கள் அவனால் அங்கீகரிக்கப்பட்டது பிரசித்தம்" என்று பாம்பன் சுவாமிகள் தாம் அருளிய "செவியறிவுறூஉ" என்ற நூலில் கூறியுள்ளார்கள். "எனைத்தள்ளி னாலும் எனைநம்பியவர்த் தள்ளேல்" என்றும் "நான்பாடும் பாட்டை நவில்வர்க்கு நலம்நல்காய்" என்றும் முருகப் பெருமானிடம் வேண்டியவர். உலக மக்கள் அறியாமையிலிருந்தும், விலங்கு உணர்வுக ளிலிருந்தும் விடுபட்டு பண்பட்ட அன்புள்ளத்தோடு அறவாழ்க்கையைக் கடைபிடித்து, சாந்த சீலர்களாய், ஒழுக்கமுள்ள உத்தமர்களாய், மனிதநேயம் கொண்டவராய் வாழவும், நாட்டில் ஒற்றுமையுணர்வு மேலோங்கி அமைதி நிலவவும், அறிவுரை வழங்கி வழி வகுத்து சமுதாய மேம்பாட்டுச் சிற்பியாகவும், அருள்நிலைப் பரமாச்சாரியராகவும் திகழ்ந்தவர். சுவாமிகள் இசைத் தமிழிலும் இயல் தமிழிலும் சிறந்து விளங்கியவர். பல தெய்வ வழிபாட்டினைக் கண்டித்து "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற கருத்துடையவர். ஆன்ம நெறிக்குத் தடையாய் இருப்பது சாதி அபிமானமே என்று உரைத்தவர். சாதி வேறுபாடுகளை அறவே வெறுத்தவர்.

மனிதனிடத்தில் அரக்ககுணம், மனிதகுணம், தெய்வகுணம் என்ற மூன்று உண்டு. அரக்ககுணத்திலிருந்து தெய்வகுணத்திற்கு மனிதன் தன்னை உயர்த்திக் கொள்வதற்குப் பாம்பன் சுவாமிகளின் பாடல்களில் பல்வேறு மனித மேம்பாட்டுச் சிந்தனைகள் பொதிந்துள்ளன. பாம்பன் சுவாமிகள் மனிதர்களை ஐவகையாய்ப் பாகுபடுத்துள்ளார்.

(அ) அதமருள் அதமர்: இகலோக வாழ்வில் முழுமையாக ஈடுபாடு கொண்டு இறைவனைச் சிந்தியாதவர்கள்.

(ஆ) அதமர்: இகலோக வாழ்வில் அதிக நாட்டமாகவும், இறை அன்பில் சிறிதளவு சிந்தனையுடைவர்கள்.

(இ) மத்திமர்: இகலோக வாழ்விலும், இறை அன்பிலும் சமமான ஈடுபாடு உடையவர்கள்.

(ஈ) உத்தமர்: இகலோக வாழ்வில் சொற்ப ஈடுபாடும், இறை அன்பில் மிகுந்த ஈடுபாடும் உடையவர்கள்.

(உ) உத்தமருள் உத்தமர்: எத்தொழிலில் ஈடுபட்டிருந்தாலும் யாவும் இறையருள் வழிநடக்கின்றன என்ற சிந்தனையுடன் இறைவனை முழுவதும் நம்பும் அன்புடையவர்கள்.

அதமருள் அதமர்கள் உத்தமருள் உத்தமராக உயர்வதற்கான கீழ்க்கண்ட வழிமுறைகளைப் பாம்பன் சுவாமிகள் தம்முடைய பல்வேறு பாடல்களில் விளக்கியுள்ளார்.

(அ) பஞ்சமா பாதகம் செய்யாமை: பொய், கொலை, காமம், கள், களவு

தகராலயரகசியம்: இரண்டாங்கண்டம் செய்யுள் 32.

(ஆ) அறுபகை அறுத்தல்: அகத்திலுள்ள பகைகள் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம். முதல் மண்டலம்-25 பிரபந்தம் உட்பகை ஒழிக்கமனு தலைப்பு

(இ) புலனடக்கம்: மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள் வாயிலாக நுகரப்படும் விடயங்கள் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை - ஐம்புலங்கள் எனப்படும். (1-27-56) முதல்மண்டலம், பகுதி 27 உள்ள?ர்சிவசுப்பிரமணியம் சதகம் செய்யுள் 56 (1-57-54) பரஞ்சுடர்க் கண்ணி, (1-70-42) சதாசிவக் கண்ணி.

மனடக்கம்: மனம் ஐம்பொறிகளின் வழியே சென்று உலக இன்பத்தை விழைகின்றபோது கீழ்மனம் என்றும், அக நோக்கி சிவத்துடன் ஒன்றும்போது உயர்மனம் என்றும் பேர் பெறும். (1-67-124 பரஞ்சட்ர் கண்ணி (1-11-4) திருக்குமரகோட்டம்.

(ஈ) உணவு கட்டுப்பாடும் புலால் உண்ணாமையும்: மனநலத்திற்கும், குணநலத்திற்கும் ஒருவன் உண்ணும் உணவு தொடர்புடையதால் உணவுக்கட்டுபாடு தேவை. (1-46-16) கந்தர் நான்மணிமாலை, சீவயாதனா வியாசம் செய்யுள் 153.

(உ) மெய்ப்பொருள் உணர்வு: மெய்ப்பொருள் உணர்வு இல்லாதவர்கட்கு ஐம்புலன் அடக்கம் பெற்று தன்வயப்பட்டு நின்ற போதும் வீட்டுநெறி கிட்டாது பயன் இல்லாமல் போகும். (1-70-42) சதாசிவக்கண்ணி.

இறை வழிபாடு செய்தல், இறை நாம மந்திர ஓதுதல், நால்வகை நெறிகளில் நிற்றல் - சரியை, கிரியை, யோகம், ஞானம். (2.6.2) ஆறெழுத்துண்மை (3.4.13.17) பரிபூரணானந்த போதம்.

(ஊ) பக்திமார்க்கம்: பக்தியே முத்திக்கு வழி (2.4) திருவலங்கல் திரட்டு 2 வெள்ளியில் (47,48).

**1.0 முதல்மண்டல நூல்கள்: குமரகுருதாச சுவாமிகள் பாடல்கள்**

இந்நூலில் முதற் பதிகத்தில் "கங்கையைச் சடையிற்பரித்து" எனத் தொடங்கப் பெறும் முதல் பாடலிலேயே "மங்கையர் எனும் துன்பததை விரும்பும் மடமார்க்கமான இல்லறமார்க்கம் எனக்கு வேண்டாம். துறவியர் வாழ்க்கையே வேண்டும். எப்போதும் உன்னையே தியானிக்க வேண்டும். உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உன்னருள் கிட்டவேண்டும்" என்று முருகப்பெருமானிடம் விண்ணப்பிக்கின்றார் பாம்பன் சுவாமிகள். அவருக்கு அப்போது பதிமூன்று வயதுதான்.

இந்தப் பதிகத்தில் சுவாமிகள் பாசஞானம், பசுஞானம், பதிஞானம் பற்றி விளக்கியுள்ளார். இப்பதிகத்தைத் தொடர்ந்து முருகப்பெருமானின் ஆறுபடை வீடுகளின் வரிசையில் திருப்பரங்கிரி, திருச்செந்தில், திருப்பழநிமலை, திருவேரகம், திருக்குன்றுதோறாடல், திருச்சோலைமலைப் பதிகங்கள் பாடியுள்ளார்.

முதல் மண்டலத்தில் பரஞ்சுடர்க்கண்ணி, பொன்மயிற்கண்ணி, குருபரக்கண்ணி, சதாசிவக்கண்ணி, தேர்ந்தேனேயென கண்ணி, பூரணக்கண்ணி முதலானவை வேதாந்த சித்தாந்தக் கருத்துக்கள் நிரம்பியனவாகும். எல்லாம் சிவன் செயல் என்று உறுதியோடு இருந்தால் மனம் சஞ்சலம் அடையாது என்ற கருத்தில் "சமாதான சங்கீதம்" என்ற தலைப்பில் பாடியுள்ளார். "சஞ்சலமேன் மனமே! சிவனடி தஞ்சமான பினுமே! வானம் இடிந்து தலையில் விழும்படி வம்பு வந்தாலும் அந்தகானமயின் முருகையன் திருவருள் கைவிட மாட்டாதே" என்ற உறுதியை அருளியுள்ளார்.

இம்மண்டலத்துள் பலவகைப் பாவினங்கள், சந்தப் பாக்கள், ஒற்றிலாச் செய்யுட்கள், வண்ணம், மடக்கு பாடல் வகைகள், ஒரு பாடலையே பலவகையாக மாற்றப் பெரும்பங்கிகள் உள்ளன. 2 கடிகையில் 64 சீர் கொண்ட ஒரு பாடலை இயற்றி அதனை 125 வேறுவேறு பாடல்களாக பாடியருளியவர் பாம்பன் சுவாமிகள்.

திரிபங்கி: 3 வகையாக மாற்றுதல், தசபங்கி-10 வகையாக, பஞ்சவிம்சதி அதிக சதபங்கி-125 வகையாக மாற்றுதல் ஆகியவைகள் உள்ளன.

இம்மண்டலத்திலுள்ள அனைத்துப் பாடல்கள் ஆறுமுகச் சிவன் புகழை விளக்குவதாகும்.

2.1 இரண்டாம் மண்டலம்: திருவலங்கற்றிரட்டு முதற்கண்டம். கண்டம்ஸ்ரீ கூறு என்று பொருள்படும்.

இது ஓர் இசைத்தமிழ் நூல் சைவ சமைய முதல் மூவர் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் அருளிய பாடல்கள் போன்று பாம்பன் சுவாமிகள் முருகப் பெருமானைப் பாடியுள்ளார். திருத்தலங்களின் பெருமை, முருகப் பெருமானின் பரம்பொருள் தன்மை, அவரின் அருளை வேண்டுதல் ஆகியவைகள் இப்பாடல்களில் உள்ளன. திருஞானசம்பந்தர் ஐந்தெழுத்தின் சிறப்பை இரண்டு பாடல்களில் உணர்த்தியது போல பாம்பன் சுவாமிகள் ஆறெழுத்தின் சிறப்பை இரண்டு பதிகங்களில் பாடியுள்ளார். முருகப் பெருமான் பாம்பன் சுவாமிகளைப் "பழநிக்கு வராதே" என்று கட்டளை இட்டதை நினைத்து மனம் உருகி "மங்கா வாழ்வுடையா என்னை வாவென்றே அழையாய்" என்று பதிகம் முழுவதும் வேண்டியுள்ளார். பிரப்பன் வலசை மயானத்தில் தான் தவம் செய்தபோது பழநி முருகனின் தரிசனம், அருள் பெற்றதைப் பிரப்பன் வலசை பதிகத்தில் பாடியுள்ளார்.

திருநெல்வேலி நெல்லையப்பர் திருக்கோயிலுள்ள முருகப் பெருமான் சந்நிதியின் விமானம் பழுதடைந்ததைக் கண்டு வருந்தி அதுபொலிவுடன் திகழ வேண்டுமென்று பாம்பன் சுவாமிகள் பாடிய வேண்டுதல் விரைவில் நிறைவேறியது. இந்தத் திருநெல்வேலி கோயில் பதிகத்தைப் பாராயணம் செய்து தாழ்ந்த நிலையிலுள்ளவர்கள் பொலிவான வாழக்கைப் பெறுவது இப்போதும் கண்கூடாக உள்ளது.

**2.2 திருவலங்கற்றிரட்டு: இரண்டாம் கண்டம்**

இதைப் பல்சந்தப் பரிமளம் என்று பாம்பன் சுவாமிகள் கூறுவார். இந்நூலில் வெள்ளியல், ஆசிரியவியல், கலிவியல், வஞ்சியியல் என்ற நான்கு பிரிவுகள் உள்ளன. "யாப்பிலக்கண இலக்கியங்களில் காணப்படும் ஐயமெல்லாம் நீக்குதற் பொருட்டும், சந்த வேற்றுமைகளையும் எதுகை, மோனை முதலிய நயம் பிழையாது சித்திர கவிகள் நடைபெறுதலையும் உணர்த்தும் பொருட்டும், செவ்வேள் அருளே உய்தி பெறுவார்க்கெல்லாம் உயிர்த்துணை என்பதை உபதேசிக்கும் பொருட்டும் பாடப்பெற்ற பெறுநூல் என்று தமிழ்ப்புலவர்கள் கூறுகிறார்கள். மேலும் ஒற்றிலாச் செய்யுள், நூறெழுத்துச் செய்யுள், ஒற்றிலா பஞ்ச பங்கி, 108 எழுத்துச் செய்யுள், நாற்கூற்றைருக்கை முதலிய செய்யுள்களும் உள்ளன. பெருங்கவிஞராகத் திகழ வேண்டுபவர்கள் இக்கண்டத்தைப் படித்து பயன்பெறலாம்.

**3.1 மூன்றாம் மண்டலம்:காசியாத்திரை- 60ம் செய்யுள்கள்**

சுவாமிகள் காசி யாத்திரை செல்லும் போதும், திரும்பும் போதும் இந்நூலைப் பாடி அருளியுள்ளார். இதில் வடமொழி, தமிழ்மொழி ஆகியவற்றை விளக்கியுள்ளார். ஒரு மொழியை உயர்த்தி மற்றொன்றைத் தாழ்த்தல் தவறு என்பார். வடமொழி பயின்றோரே சிறந்தவர் என்று கருதப்பட்ட அந்நாளில், வடமொழியை அறிந்தோர் அம்மொழியைத் தாய்மொழி என்றால், தமிழ் மொழியை அறிந்தோர் தமிழைத் தந்தை மொழி என்று கூறக் கூடும் என்கிறார் சுவாமிகள்.

அத்துவிதம் என்ற சொல்லின் பொருளைச் சுவாமிகள் 20 பாடல்களில் விளக்கியுள்ளார். ஒளியின் முன் இருளானது தன் வலிமை குன்றி அடங்கியிருத்தல்போல முருகப் பெருமானுடையே அருளொளிமுன் ஆன்மாவின் அஞ்ஞான இருள் அடங்கி நிற்பது அத்துவிதச்சுகம் என்கிறார். இருளில் சந்திரன் பிரகாசிப்பது போன்றே உயிர்களுக்கு சிற்றறிவு தோன்றுகிறது என்றும் முருகப் பெருமானை வணங்குவோர்களுக்கு முற்றறிவை அவன் வழங்குவான் என்றும் விளக்குகிறார்.

### 3.2 பரிபூரணானந்தபோதம்-(230 பாடல்கள்)

பரி-பெருமை, பூரணம்-முழுமை, ஆனந்தம்-பரம்பொருள், போதம்-விளக்கிக் காட்டுதல். இறைவன் பெருமையுடைய முழு நிறைவாகப் பேரின்பமாய் உள்ளான் என்பதை விளக்கிக் காட்டுதல் என்பது பரிபூரண ஆனந்த போதம் என்ற சொற்றொடரின் தெளியுரையாகும். இந்நூல் பரமுத்தி பெற வழிகாட்டுவதாகும். "எனக்குச் சாஸ்திரத்தில் நிச்சயபுத்தியும் இதுதான் உண்மைப்பொருள் என்ற திண்மை நலமும் பாம்பன் சுவாமிகள் நூல்களைப் படித்ததினால் உண்டாயின. "இது 14 சித்தாந்த சாஸ்திரக் கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது" என்று திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அருளியுள்ளார்கள். இந்நூலுக்குப் பாம்பன் சுவாமிகள் "சிவசூரியப் பிரகாசம்" என்னும் உரை எழுதியுள்ளார். இது சுத்தாத்துவிதக் கொள்கை விளக்கும் தத்துவநூல். பதி, பசு, பாசம் யதார்த்த விளக்கப் படலம், துறவற விளக்கப் படலம் என்றும் இருபிரிவுகள் கொண்டது. முதல் படலத்தில் சைவசித்தாந்தம் கூறும் முப்பொருள் இயல்புகள் விளக்கப்பட்டுள்ளன. அண்டசராசரங்கள் அனைத்திலும் இருப்பது பரம்பொருள். இதில் சூரியனிடத்தில் பிரிவிலாது ஒளியிருத்தல்போல அருள் ஒன்று உண்டு. அதற்கு அபின்னா சக்தி, சிவசக்தி, ஞானம், சித்து எனப் பல பெயர்கள் உண்டு.

### 3.2.2 துறவற விளக்கப் படலம்

ஒருவன் ஞானத்தின் மூலம்தான் முத்தி பெறமுடியும் என்கிறார் சுவாமிகள். துறவறத்தின் மூலமே ஞானம் கிட்டும். இல்லறத்தில் உண்டாகும் ஞானம் இரும்பில் பதித்த இரத்தினம் போன்றது. துறவறத்தில் உண்டாகும் ஞானம் பொன்னில் பதித்த இரத்தினம் போன்றது.

### தகராலய ரகசியம்-117 பாடல்கள்

பிரப்பன் வலசை மயானத்தில் சுவாமிகள் 6 அடி சதுரக்குழியில் ஊண், உறக்கமின்றி 35 நாட்கள் தவமிருந்தபோது கௌபினதாரியாய், அகத்தியர், அருணகிரிநாதர் ஆகிய இருவரோடு வெளிப்பட்டு தரிசனம் தந்து உபதேசமாக ஒரு மொழியாம் அருளிய தகரவித்தையே தகராலய ரகசிய நூலாகும். "35 நாள் காறுந் தனி நிட்டை காத்திருந்த ஞான்று கௌபீனதாரியாய் வெளிப்பட்ட இறைவன் எமக்கொரு மொழி உணர்த்தியருளினின்" என்று சுவாமிகள் கூறியுள்ளார்கள். இந்நூல் இருகாண்டங்களாக உள்ளன.

முதற்காண்டத்தில் பிண்டத்தகரவித்தை இயல், அண்டத்தகரவித்தை இயல் என இரண்டும் உள்ளன. இரண்டாம் காண்டத்தில் ஐயமறுத்தருளியல், தோத்திரவியல், முடிபியல் என மூன்றும் உள்ளன. இது ஒரு அனுபவத் தத்துவ நூல். தகரம் ஆலயம்-தகராலயம், தகரம்-சிறியது, ஆலயம்-அம்பலம் இதனைச் சிற்றம்பலம் என்பர். இது பிண்டத்தகராலயம் எனப்படும். பேரம்பலம்-அண்டத்தகராலயம். ஆன்மாக்களின் இருதய குகையே இங்குத் தகராலயம் எனப்பட்டது. இக்குகையில் குகேசன் இருக்கும் இரகசியத்தை இது விளக்குவதால் தகராலயரகசியம் எனப்பட்டது. பிண்டத்தில் தகராலயமாகிய இருதயக் குகையில் இறையருள் ஒளியை உணர்ந்து பிறகு அதை அண்டத்தில் காணும் வழிமுறையைச் சுவாமிகள் தெளிவாக விளக்கியுள்ளார்கள்.

சத்தும், ஆனந்தமும் நிறைந்துள்ள பெருங்கட்லான "சதானந்தசாகரம்" என்று உரைநூலைச் சுவாமிகள் தகராலயரகசிய நூலுக்கு அருளியுள்ளார்கள். இறைவனோடு இரண்டற கலத்தல் நிலையை (சாயுச்சியம்) அடைவதற்கான வழிமுறைகளை இந்நூலில் விளக்கி உள்ளார்.

சைவ சமையத்தின் நான்கு மார்க்கங்களான சரியை, கிரியை, யோகம், ஞானம் அவற்றில் முதல் மூன்று மார்க்கங்கள் நாலாவது மார்க்கமான ஞானத்தை அடைவதற்குப் படிநிலைகளாகும். ஞானமார்க்க மூலமே வீடுபேறு (முத்தி) அடையலாம். புறப்பூசனைகளினால் வீடுபேறு அடையமுடியாது. அகப்பூசை முத்திப் பேற்றைத்தரும். இக்கருத்துக்களைச் சுவாமிகள் இந்நூலில் அருளியுள்ளார்கள்.

பரிபூரணானந்த போதம், தகராலயரகசியம் என்று இருநூல்களும் சற்குருவுக்கும், சற்சீட்னுக்கும் இடையே நடக்கும் உரையாடல் போல அமைந்துள்ளன.

பாம்பன் சுவாமிகளின் சமாதி நிலையம் சென்னை திருவான்மியூரில் 31.5.1929 தேதியில் அமைக்கப்பட்டுள்ளது. பாம்பன் சுவாமிகளால் 1926ஆம் ஆண்டு நிறுவப்பட்ட "மஹாதேஜோ மண்டலசபை" மேற்கண்ட தலத்தில் தினசரி காலை, மாலை வழிபாடு, பௌர்ணமி பூஜை, குருபூஜை, மயூரவாகன சேவனவிழா, கந்தசஷ்டிவிழா, மஹாசிவராத்திரிவிழா, பங்குனி உத்திரப் பௌர்ணமிவிழா, சித்ரா பௌர்ணமிவிழா, அருணகிரிநாதர் குருபூஜைவிழா ஆகிய பல விழாக்களைச் சிறப்பாகத் தொடர்ந்து நடத்தி வருகின்றது.

## மருதமலை அலங்காரம்

முனைவர் **சு. சதீஷ்குமார்**
உதவிப்பேராசிரியர்
தமிழ்த்துறை
கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி
கோயம்புத்தூர் - 641 029.

பாட்டியல் நூல்கள் குறிப்பிட்ட எண்ணிக்கையைக் காட்டிலும் மிகுதியான சிற்றிலக்கியங்கள் தமிழில் தோன்றியுள்ளன. அவற்றுள் ஒன்றாகத் திகழ்வது அலங்காரம் என்னும் இலக்கிய வகையாகும். அருணகிரிநாதர் இயற்றிய கந்தரலங்காரத்தை இவ்வகையில் தோன்றிய முதல் நூல் எனலாம். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தமிழலங்காரம் உள்ளிட்ட ஆறு நூல்களைப் பாடி, கந்தசாமி சுவாமிகளுக்கு முன்னோடியாகத் திகழ்ந்துள்ளார். கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாசர் திருவெங்கை அலங்காரம் என்ற நூலை இயற்றியுள்ளார். இவ்வகையில் தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் மருதமலை அலங்காரம் குறிப்பிடத்தக்க நூலாகும்.

மருதமலை புகழ்பெற்ற கொங்குநாட்டுக் குன்றுதோறாடல் தலம். சிரவையாதீனம் தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் அபிமானத் தலங்களுள் ஒன்று. எனவே இத்தலத்தைப் பற்றிச் சுவாமிகளால் இயற்றப்பட்டுள்ள நூல்கள் அனைத்தும் மிக்க இனியனவாக உள்ளன. காப்பு ஒன்று, நூல் நூறு, நூற்பயன் ஒன்று ஆக மொத்தம் நூற்றிரண்டு கட்டளைக் கலித்துறைப் பாடல்களால் இப்பனுவல் யாக்கப்பட்டுள்ளது. சந்தத் தமிழ்ப் பாடி சண்முகப் பெருமானைப் போற்றிய அருணகிரிநாதரின் திருப்புகழ் பெற்றது இத்தலம். மருதமலையின் சிறப்பையும் பெருமையையும்,

*"கருது வார்க்குக் களிதர வல்லது*
*பொழுது வார்க்குப் புயவலி யீவது*
*சுருதி நீண்குடி போல்வது தூய்மையின்*
*மருத வோங்கல் வளத்திற் பெயரியதே"*
(பேரூர்ப்புராணம், மருதவரைப்படலம், பா.1)

என்று கச்சியப்ப முனிவர் வியந்துரைத்துள்ளார்.

அடியார்களின் அல்லலை அகற்றி ஆனந்தம் நல்கும் மருதாசல மூர்த்தியின் திருவுருவச் சிறப்பு, வீரம், திருவருட் செயல்கள் ஆகியவற்றை விரித்துரைக்கும் வகையில் தவத்திரு கந்தசாமி சுவாமிகளால் இயற்றப்பட்டது மருதமலை அலங்காரம் என்னும் நூலாகும். அருணகிரிநாதர் அருளிச் செய்த கந்தரலங்காரத்தைப் போன்று கந்தமுனி அருளிய மருதமலை அலங்காரமும் கற்போரை கரைந்துருகச் செய்யும் தன்மையது.

*"வேலர் அலங்காரத் துப்பொருளை யாய்வதுவே தேகங்*
*கலங்கா அலங்காரம்"* (தணிகையுலா)

என்பதற்கேற்ப, இந்நூலில் முருகப் பெருமானின் வனப்பைக் கந்தசாமி சுவாமிகள் சுவைபட எடுத்துரைத்துள்ளார்.

இந்நூலில் காப்புச் செய்யுள் உட்பட 101 செய்யுட்கள் இடம்பெற்று உள்ளன. இவை அனைத்தும் கட்டளைக் கலித்துறையால் ஆனவை. காப்புச் செய்யுளில் தம் குருநாதரான தவத்திரு இராமானந்த சுவாமிகளை வணங்கியுள்ளார். 1927ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் வெளியிட்ட மருதமலைப் பிரபந்தத்திரட்டு என்னும் நூலில் முதல் பிரபந்தமாக மருதமலை அலங்காரம் இடம்பெற்றுள்ளது. இத்திரட்டில் கந்தசாமி சுவாமிகள் இயற்றிய மருதமலை அலங்காரத்துடன் மருதாசல யமகவந்தாதி, கந்தப் பதிகம், வேற்றெய்வமாலை, மயிற்பதிகம். வாழாப்பதிகம், கணபதி விநாயகர் திருப்புகழ், கணபதியகம வந்தாதி, கணபதி வேணுகோபாலர் கந்தப்பதிகம் ஆகிய எட்டுப் பிரபந்தங்கள் இடம்பெற்றுள்ளன. இவை மருதமலையில் அரங்கேற்றம் செய்யப்பட்டன. 1979ஆம் ஆண்டு சிறுகுறிப்புகளுடன் இரண்டாம் பதிப்பு வெளியானது.

**நூல் தரும் செய்திகள்**

அருணகிரிநாதர் பாடிய கந்தரலங்காரம் முருகப் பெருமானின் அழகையும் பெருமையையும் எடுத்துரைக்கின்றது. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் தமிழலங்காரம் தமிழ் மொழியின் சிறப்பைக் கூறும் வகையில் அமைந்துள்ளது. மருதமலை அலங்காரம் என்னும் இந்நூல் மருதாசல மூர்த்தியின் சிறப்புக்களைக் கூறுவதுடன், கந்தசாமி சுவாமிகள் தமது குறைகளையும் இவ்வுலக வாழ்வில் தான் படுகின்ற துன்பங்களையும் கூறி அருள்புரியுமாறு வேண்டுவதாக அமைந்துள்ளது. மேலும், இந்நூல் செய்யுட்களின் வாயிலாக உலக இன்பங்களில் சிக்கிக் கொண்டு, அதனையே பெரியதெனக் கருதும் உயிர்கள் கரைசேர இயலாது என்பதையும், பிறவிப் பிணியைத் தீர்க்க வல்லது முருகப் பெருமானின் திருவடிகள் என்பதையும் கந்தசாமி சுவாமிகள் தெளிவுறுத்தியுள்ளார்.

இந்நூலில் குமரன் குடிகொண்டுள்ள மருதமலையின் அழகு முருகப் பெருமானின் திருவடிப் பெருமை ஆறுமுகச் செவ்வேள் அடியார்கட்கு நல்கும் அருட்திறம், அடங்காது திரியும் மனத்தின் இயல்பு, வேலன் உயிர்களுக்கு அருள வேண்டும் என்ற வேட்கை ஆகியன பாடுபொருளாக அமைந்துள்ளன.

**மருதமலையின் எழில் நலம்**

மருதமலை வானளாவ உயர்ந்துள்ளது என்பதனை, "நீட அம்பரம் தொட்டிடும்" (பா.27),"வான் இடம் தீண்டிய" (பா.52),"உயர்சேணை எட்டிப் பார்க்கும் சிகரிகுலாம்" (பா.57),"வில்துன்று மண்டிலம் தோய்" (பா.67) என்று பல பாடல்களில் சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார். அடியார் பெருமக்கள்

இறைவனையே எப்பொழுதும் தம் சிந்தையில் இருத்தி அவன் சீரைப் புகழ்ந்து பாடி வழிபடுவர். அடியார்கள் அறம் புரிவதால் கரப்பண்பும், உண்மை பேசுவதால் மொழிப் பண்பும், பிறன் மனை நோக்காதிருத்தலால் விழிப்பண்பும், பிறர்க்குத் தீங்கு நினையாது நன்மையே நினைப்பதாலும் செய்வதாலும் மனப்பண்பும், இறைவனையே வணங்குவதால் சிறப்பண்பும் உடையவர்கள். இத்தகைய உயரிய ஐந்து பண்புகளைப் பெற்ற அடியார்களுடன் இணக்கம் கொள்ளும் அன்பர்களும் அப்பண்புகளைப் பெற்று உய்யலாம் என்று 'கண்டுமொழி' என்னும் திருச்செந்தூர் திருப்புகழ் அருணகிரிநாதர் அடியார் பெருமையைப் போற்றிப் பாடியுள்ளார்.

திருத்தொண்டத் தொகையைப் பாடிய சுந்தரமூர்த்தி நாயனார் "பத்தராய்ப் பணிவோர்கள் எல்லார்க்கும் அடியேன்" என்றும், "பரமனையே பாடுவார் எல்லார்க்கும் அடியேன்" என்றும் மெய்மறந்து பாடி, அடியார்க்குத் தாம் என்றும் அடிமையாக இருப்பதாகக் குறிப்பிட்டுள்ளார். நம்மாழ்வாரும் மெய்யடியார்களைக் கூறுமிடத்து "தம்மையாளும் பரமரே" என்றும், "தாம் தொழும் குலம் அவர்களே" என்றும் கொண்டாடி மகிழ்கின்றார். அடியார்க்கெளியான் என்று இறைவனே தம்மைக் குறிப்பிட்டுக் கொள்கிறார். பெற்றான் சாம்பான் என்பானுக்காகத் தில்லையம்பலக் கூத்தன் எழுதிய ஓலையில்,

*"அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்*
*குடியார்க் கெழுதிய கைச்சீட்டு"*

என்று குறிப்பிட்டுள்ளார். இதன் வாயிலாக அடியவர்களின் சிறப்பு நன்கு புலப்படுகின்றது. அடியார்கள் பெருமையை அறிந்த தவத்திரு கந்தசாமி சுவாமிகள் அடியார்கள் உள்ளத்தை மருதமலையின் உயரத்திற்கு உவமையாக்கியுள்ளார்.

*"மதி கொண்ட தொண்டர் உளத்தோடு உயரும் மருதவெற்பு"*
(மருதமலை அலங்காரம், பா.83)

என்பது அப்பாடலடியாகும். மெய்யறிவு வாய்க்கப்பெற்ற அடியார்களின் உள்ளம் எவ்வளவு உயர்ந்ததோ அவ்வளவு உயர்ந்தது மருதமலை என்று கூறியுள்ள நயம் நினைந்து நினைந்து இன்புறத்தக்கது. மருதமலையின் மீது மேகங்கள் தவழும் எழிலும் குறிப்பிடப்பெற்றுள்ளது. திருமாலை போன்று நீலநிறம் பெற்ற முகில்கள் தவழ்ந்து அழகு தருகின்றதாம். "பால் நந்தம் ஏந்து கை மாயனில் மேகம் படிந்து அணி ஆர்வான் அந்தம் தோய் மருதாசலம்" (13), மலையின் மீது மேகங்கள் படிவது யானைக் கன்றுகள் மேய்வது போலக் காட்சி தருகிறது. "கனம் கன்றில் மேயும் மருதாசலம்" (19) என்னும் பாடலில் கன்று எனப் பொதுவாக இருப்பினும் குறிஞ்சித் திணைக்கு ஏற்ப யானைக் கன்று என்றே பொருள் கொள்ளவேண்டும். மேகங்கள் ஒலித்துக் கொண்டே படிந்துள்ள செய்தியைக், "களைத்து அடுக்கும் புயல் தோய் மருதாசலம்" எனத் தெரிவிக்கிறார். இங்குள்ள நீர்நிலைகளின் அழகும்

தனியாகச் சிறப்பிக்கப்படுகிறது. திருமகள் அமர்ந்துள்ள தாமரை மலர்கள் நிறைந்த குளங்களால் சூழப்பட்ட மலை. "பொன் புணர் கஞ்சத் தடம் சூழ் மருதப் பொறுப்பு" (89) எனவும், "மலர் பொழியும் தேன்ஆர் தடம் பொலிசீர் மருதாசலம்" (26) எனவும் கூறுகிறார். அச்சுனைகள் "கயல் நிலவும் கனை"களாகவும் "அன்னம் பொருந்தும் மலர்த் தடங்களாகவும் விளங்குகின்றன. குளங்களிலே உள்ள மீன்கள் பாய்வதைக் கண்டு மதகுகளின்மேல் உள்ள கொக்குகள் பயப்படுகின்றனவாம் "மடைத்தலைக் கொக்கு அஞ்சப்பாய் சேல் பயப்படுகின்றனவாம்" (20) என வாவி வளம் சிறப்பிக்கப்படுகிறது.

அடுத்து மருதலையில் உள்ள சோலைகளின் வளப்பம் இடம் பெறுகிறது. அப்பொழில்கள் நறுமணம் என்பதனை "மரு அளிக்கும் பொழில்" (12), "கான் ஆரும் பும்பொழில்" (16), "முருகு உந்து தண்டலைகள்" (40), "கான் சூழும் தண்டலை" (65) எனக் குறிப்பிடுகிறார். அங்குத் தேன் மிகுதியாக உள்ளது என்பது "நறவு ஆர்மலர்ப் பொழில்" (5), "பொழிவு ஆர்மதுப் பொழில்" (53), "கொம்பு உந்து தேன் கொட்டிடும் மருதாசலம்" (71) எனக் குறிப்பிட்டுள்ளார்.

**தன்நிலைகூறி வேண்டுதல்**

மலச்சார்பால் ஐம்புலன்களாலும் அலைக்கழிக்கப்பட்டு இவ்வுலகில் துன்பப்பட்டுக் கொண்டு இருப்பதாகவும், அதிலிருந்து நீங்க அருள்புரியுமாறும் முருகப் பெருமானிடம் வேண்டுகிறார் சுவாமிகள்.

*" . .. . . நானேழை வஞ்சக ஐம்புலப்பொய்*
*வலைக்கண் இருந்துயர் கொண்டேன் மருத வரையரசே"* (49)

*"வம்புந்தும்ஐம்புல வேடர்க ளான்மிக மாழ்கிநொந்து*
*வெம்புந் தகையுடையேன்"* (71)

*"ஓயா தரிக்கும் புலனால் அலைப்புண் டொழிவதல்லால்"* (85)

*"வன்புள மாயை வடிவாம் மனம்என் வசம் அகன்றே*
*துன்புஐம்புலப் பாற்கணந் தோறுஞ் சுழற்றஎய்த்தேன்"* (89)

*"மற்புரியும் புலவேடரால் அரிப் புண்டேன்"* (97)

என்ற பாடல் அடிகளில் சுவாமிகள் ஐம்புலன்களின் ஆளுகைக்குட்பட்டு வருந்தும் நிலையைக் கூறியுள்ளார். மாணிக்கவாசகரும், "எறும்பிடை நாங்கூழ் எனப் புலனால் அரிப்புண்டலந்த வெறுந் தமியேனை விடுதிகண்டாய்" என்ற பாடல் அடிகளில் தாம் ஐம்புலன்களால் வருந்துவதாகச் சிவபெருமானிடம் முறையிட்டுத் தமக்கருள் புரிய வேண்டுவதைக் காணலாம்.

சுவாமிகள் இறைவனிடம் பிறவிப் பிணியைத் தீர்க்க வேண்டிக் கொள்வதோடு தம்மைப்பற்றி மாயையில் அகப்பட்டு உள்ளதாகவும், பிறர் அஞ்சும்படியான ஆடம்பரத்தில் தம் மனம் ஆழ்ந்துள்ளதாகவும், கூறி இத்தகைய

இழிந்த நிலையில் இருக்கும் தம் தலைமெல் திருவடியைச் சூட்டி அருள் புரியுமாறு வேண்டிக் கொள்கிறார் இக்கருத்தினை,

*"வேடம் புனைந்தெதிர் காண்போர்கள் உள்ளம் வெருளமெத்த*
*ஆடம்பரம்செய் திடுவேன்உன் பாதம் அடைவதுண்டோ?*
*தோடம் பரந்திழி வேன்தலை மீதடி சூட்டிடுவாய்"* (27)

*"வகையொன்றும்தேர்கில னாய்ஆண வாதி மலங்களினால்*
*மிகையொன்றும் வெம்பவத் தின்னல் மிக் கெய்த்தனன்; வேதஅருட்*
*சிகைஒன்று நின்பதம் சூட்டி மெய்த்தொண்டர்கள் சீர்பெறவே*
*தகையொன்று மாமரு தாசல சற்றெனைத் தாங்கிக் கொள்ளே"* (43)

என்ற பாடல்கள் விளக்குகின்றன. மேலும் உலையிடத்திட்ட மெழுகுபோல் உருகும் மனமுடைய தன் தலைமீது திருவடியை வைத்துத் தொண்டர்கள் பெற்ற பேரின்பத்தைத் தமக்கும் அருளுமாறு வேண்டுகிறார்.

இறைவனிடத்துத் தன் தலைமீது திருவடி சூட்டி அருளுமாறு வேண்டிய சுவாமிகள், தொண்டர்களிடத்துப் பொருந்தும் உன்பாதமாகிய மலர் என் தலைக்குப் பொருத்தம் இல்லையோ என்றும் ஏக்கம் கொள்கிறார்.

**இலக்கிய நயங்கள்**

இறைவனுடைய பேரின்பத்தில் மூழ்குவது நறுந்தேனுடன் பால் கலந்திட்டது போன்றது என்று பேரின்பத்தின் பெருமையை உவமை நயம்பட,

*"நானுடன் நீஎன் றிடும்பேதம்முற்றும் நசிக்குறும்*
*தேனுடன் பால்கலந் திட்டதும் ஒப்பின்மெய்ச் சிற்சுகத்தில்"* (50)

என்ற அடிகளில் விளக்குகிறார்.

*"விடந்தீண் டிடுந்தகை போல்எனைச் சற்றும் விடாதுமயற்*
*சடந்தீண்டி வாதனை தந்திடச் சாலத் தளர்ந்தனன்"* (52)

என்ற அடிகளில் நஞ்சு தீண்டினார் உடம்பை விலகாது வருத்துவது போன்று மயக்கமானது தன்னைத் துன்புறுத்துவதாய் உவமை நயம்படக் கூறியுள்ளார். கண்விழிக்காத சிறுகுழந்தை இவ்வுலகில் எவ்வாறு துன்புறுமோ, அது போல ஆணவ மலத்தில் இருந்து தான் துன்புறுவதாக காட்டும்.

*"வழியாதும்ஓர்கில னாய்ஆணவவன் மலத்தினுட்கண்*
*விழியாகழும்சிறு சேய்போற் கிடந்து வெதும்புகின்றேன்"* (53)

என்ற உவமைச் சிறப்பமைந்த அடிகள் ஆசிரியரின் உவமையைக் கையாளும் திறத்தைக் காட்டுவதோடு அவர் பக்தியின் ஆழத்தையும் விளக்குகின்றது. இறைவனின் சிறப்பைக் கூறுமிடத்தும், தம் நிலையினைக் கூறி அருள் வேண்டுமிடத்தும் இறைவன் திருவடியைத் தாமரையாக உருவகப் படுத்தியுள்ளார். இவ்வுருவகங்களைக் கீழ்க்காணும் பாடலடிகள் விளக்குகின்றன.

*"மாசத் துவப்பெரி யோர்ஏத்தும்சீர் கொள் மருதவெற்பில்*
*வாசத் துளவன் மருகோன் திருவடி வாரிசமே"* (1)

*"பாடிடும் அன்பர்க்கின் பீந்திடும் நின்பத பங்கயங்கள்"* (7)

*"அல்லும்பகலும் அறியா இடத்தில் அமர்ந்தடியேன்*
*ஒல்லும் படிஎற் கருளுந் தினம்ஒன் றுளதுகொலோ?"* (35)

தம்மைப்பற்றிக் கூறி இறைவனிடம் தமக்கருள வேண்டுமிடத்து இறைவனுடைய கருணையை ஆழம் காண முடியாததும், மிகப்பரந்து பட்டதுமான கடலாக உருவகப்படுத்தியுள்ளார். இதனை,

*"பொல்லாத தீமைக் குணங்கோடி கொண்டுநம் பொன்னடிக்கன்பு*
*இல்லாத பாவியென் றென்னைப் புறந்தள்ள எண்ணுதியேல்*
*கல்லாத பேதைக் கருள்வார் எவர்கரு ணைக்கடலே"* (21)

என்று அடிகளால் அறியலாம். ஆசிரியர் இறைவனிடத்து அருள் வேண்டுழித் தம் நிலையைக் கூறும்பொழுது தம் மனத்தினை உருகாததும் வன்மையானதுமான கல்லாகவும் பாவியாகவும் உருவகப்படுத்தியுள்ளார். இதனை,

*"மலையிடத் தாடல்செய் நின்திருத் தாள்என் மனம்எனும்வன்*
*சிலையிடத் தாக அமைந்திட நீஉளம் செய்யில்உடன்*
*உலையிடத் தாம்மெழுகேபோன்றிடற்கையம் ஒன்றுளதோ"* (28)

*"மனம்என்ற பாவி மயல்கொண்டு"* (36)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. சுவாமிகள் கையாண்டுள்ள எதுகைத் தொடையால் பாடல்களின் ஓசை நயத்தையும், சுவாமிகளின் சொல்லாட்சித் திறத்தையும் காண முடிகிறது. எதுகைத் தொடையமைந்த,

*"திருவளிக் கும்பெரும் கல்வியும்நல்கிடும் சேண்உலகார்*
*தருவளிக் கும்பதம் யாவையும் ஈந்திடும் தன்அனைய*
*உருவளிக்கும் தொண்டர் எண்ணிய யாவும் உடன்அளிக்கும்*
*மருவளிக் கும்பொழில் சூழ்மரு தாசலன் வண் பதமே"* (12)

எனும் பாடலில் எதுகைநயமும், சொல்நயமும், பொருள்நயமும், ஓசை நயமும் காணலாம்.

தவத்திரு கந்தசாமி சுவாமிகளால் அருளிச் செய்யப்பெற்ற மருதமலை அலங்காரம் உவமை. உருவகம் முதலிய அணி நலங்களாலும் எதுகை முதலிய தொடைநயங்களாலும் சிறந்து விளங்கும் இலக்கியச்சுவை மிக்கதோர் பனுவலாக மட்டும் அல்லாது, முருகப்பெருமானை உள்ளம் உருகி வேண்டிக் குறையிரப்பதற்கேற்ற நல்லதொரு துதிநூலாகவும் அமைந்துள்ளது.

## சிற்ப சாத்திரம் மூலம் அறியலாகும் முருக இலட்சணம்

**இரா. சந்திரமோகன்,**
நூலகர், அ.கீ. ஓலைச்சுவடி நூலகம்
அண்ணா நூற்றாண்டு நூலக 7-வது தளம்
கோட்டூர்புரம், சென்னை 85.

தமிழர்களின் நாகரிகம், பண்பாடு, கலைநுட்பம் மற்றும் சமயத் தத்துவங்களை எடுத்துக் கூறும் சாதனங்களில் ஒன்று சிற்பமாகும். ஒவ்வொரு சிற்பமும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட கருத்தை/உணர்வினைக் காட்டுவன. முற்காலத்தில் சிற்பம் வடித்தல் ஒரு சிறப்பு தொழிலாக இருந்தது. எனவே ஒரு சிற்பத்தை இப்படித்தான் உருவாக்க வேண்டும் என்பதற்கு - அதாவது சிற்பத்தில் இடம் பெற வேண்டிய உறுப்புகள், முகபாகம், ஆடை அணிகலன், ஆயுதம், சின்னம் போன்றவற்றுடன் சிற்பத்தின் நீளம், அகலம், கனம் மற்றும் சிற்பத்தை எந்த இடத்தில், எந்தத் திசையில் நிறுவ வேண்டும் எனப் பல்வேறு விதிமுறைகள் சமய சாத்திரம், சமய இலக்கியம், சிற்பக் கலை மற்றும் ஆகம நூல்களில் நேரடியாகவும், மறைமுகமாகவும் கூறப்பட்டுள்ளன. இந்நூல்களை இயற்றிய ஞானிகளும், சிற்பிகளும் தமது காலத்திலும் தமக்கு முந்திய காலத்திலும் சிற்பக்கலை இலக்கணங்களிலிருந்த குறைகளைச் செப்பம் செய்து இக்கலையை வளரச் செய்துள்ளனர். இவ்விதிகளை அடிப்படையாகக் கொண்டே சிற்பிகளால் சிற்பங்கள் வடிக்கப்பட்டன. இவ்வாறு வடிக்கப்பட்ட சிற்பங்களில் தெய்வத் தன்மையும், சாந்தமும், அமைதியும், தெளிவும், கலைநுட்பமும் மிகுந்து காணப்படுவதைத் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் நடத்தப்பட்ட அகழ்வாய்வுகளில் கிடைக்கப்பெற்ற சிற்பங்கள் மூலம் அறியலாம். கி.பி. 8ஆம் நூற்றாண்டிற்கும் கி.பி. 10ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகக் கருதப்படும் அம்சுமத்பேத ஆகமம் (சமஸ்கிருத மொழியில்) எனும் சிற்பம் தொடர்பான இலக்கண நூல் சுமார் 250 ஆண்டுகள் பழமையான ஓலைச்சுவடியில் எழுதப்பட்டுள்ளது. இந்த ஓலைச்சுவடியிலுள்ள முருக இலட்சணங்களை எடுத்துக் கூறுவதே இந்த ஆய்வு கட்டுரையின் நோக்கம்.

### முருகனின் திருஉருவ வகைகள்

கடவுள் வழிபாட்டுக்குரிய கோவில்களிலே ஆதிகாலத்தில் கடவுளின் உருவங்களை வைத்து வணங்கவில்லை. கடவுளின் உருவத்துக்குப் பதிலாக குறிப்பிட்ட அடையாளங்கள் வைத்து வணங்கப்பட்டன. பிற்காலத்திலே கடவுளுக்கு உருவங்களைக் கற்பித்து அவ்வுருவங்களைக் கோயில்களிலே வைத்து வழிபடத் தொடங்கினார்கள். அவ்வகையில் முருகக் கடவுளின் கோயிலில் பழங்காலத்தில் முருகன் உருவம் வைக்கப்படாமல் முருகனைக் குறிக்கும் அடையாளமாக வேலாயுதம் வைத்து வழிபடப்பட்டது.

சங்ககாலம் முதல் இன்று வரை முருகப் பெருமானின் உருவப் பொலிவைப் பலரும் தமிழ் மற்றும் சமஸ்கிருத இலக்கியங்களில் ஈடுபாட்டுடன் பாடியுள்ளனர்.

தற்பொழுது வணங்கப்படும் முருகனின் 1)சக்திதர ஸ்வாமி 2)ஸ்கந்த ஸ்வாமி 3)தேவசேனாபதி ஸ்வாமி 4)சுப்ரமண்ய ஸ்வாமி 5)கஜாவாஹன ஸ்வாமி 6)சரவணபவ ஸ்வாமி 7)கார்த்திகேய ஸ்வாமி 8)குமார ஸ்வாமி 9)சண்முக ஸ்வாமி 10)தாரகாரி ஸ்வாமி 11)ஸேநாநி ஸ்வாமி 12)பிரம்மசாஸ்தரு ஸ்வாமி 13)வள்ளிகல்யானசுந்தர ஸ்வாமி 14)பால ஸ்வாமி 15)கிரௌஞ்சபேதன ஸ்வாமி 16)சிகிவாஹன ஸ்வாமி எனப் பதினாறு வகை திருஉருவம் எங்கு, எப்பொழுது யாரால் முதலில் உருவாக்கப்பட்டு இறுதி செய்யப்பட்டது என்பதற்கு ஆதாரங்கள் எதுவும் இதுவரை கிடைக்கப் பெறவில்லை. மேலும் சிற்பங்கள் மற்றும் கற்சிலைகளாக முருகனின் உருவங்களை வடிக்கும் போது என்ன அளவுகளில் எவ்வகையில் அமைக்க வேண்டும் என்பது குறித்த விவரக் குறிப்புகள் முருகன் தொடர்பான பக்தி இலக்கியங்களில் மிகமிகக் குறைவாகவே உள்ளன. முருகனின் உருவம் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்கு விளக்கம் தரும் ஆகம நூல்களில் குறிப்பிடத்தக்க ஒன்று கசியபர் என்ற முனிவரால் சமஸ்கிருதத்தில் இயற்றப்பட்ட அம்சுமத் பேத ஆகமம் ஆகும்.

### அம்சுமத் பேத ஆகமம் - ஓர் அறிமுகம்

1869 ஆம் ஆண்டு சென்னையில் தோற்றுவிக்கப்பட்டு தற்பொழுது தொல்லியல் துறையின் கட்டுப்பாட்டின்கீழ் அண்ணா நூற்றாண்டு நூலகத்தின் 7-வது தளத்தில் இயங்கி வரும் அரசினர் கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகம் மற்றும் ஆய்வு மையத்தில் 16,950 தமிழ் சுவடிகள் 49500 சமஸ்கிருத சுவடிகள் உட்பட 12 மொழிகளில் 72714 சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வருவதுடன் ஆய்வு நோக்கத்தில் வரும் ஆய்வாளர்கள் பயன்படுத்தவும் அனுமதி வழங்கப்பட்டு வருகிறது. இதுவரை பதிப்பித்து வெளியிடப்படாத ஓலைச்சுவடிகளைப் பதிப்பித்து வெளியிடும் பணியினையும் இந்நூலகம் மேற்கொண்டு வருகிறது. இந்நூலகத்தில் சமஸ்கிருத மொழிப் பிரிவில் கி.பி. 8ஆம் நூற்றாண்டிற்கும் கி.பி. 10ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாக கருதப்படும் அம்சுமத் பேத ஆகமம் என்னும் சிற்பம் தொடர்பான இலக்கண நூல் சுமார் 250 ஆண்டுகள் பழமையான ஓலைச் சுவடியில் எழுதப்பட்டுள்ளது. இந்த ஓலைச்சுவடி 1884ஆம் ஆண்டு வேங்கடசுப்பாச்சாரி என்ற சிற்பத் தொழில் கைவினைஞரிடமிருந்து இந்நூலகத்தால் பெறப்பட்டது. இச்சுவடியில் சமஸ்கிருதத்தில் இருந்து மொழிபெயர்க்கப்பட்ட தமிழ் உரைப் பகுதியும் உள்ளது. சிற்பிகள் கடவுள் உருவங்களை சிற்பங்களாக வடிக்கும் போது என்னஎன்ன அளவுகளில் எம்முறையில் கடவுள் உருவங்களை வடிக்க வேண்டும் என்பதற்குரிய இலட்சண இலக்கணங்கள் இந்நூலில் கூறப்பட்டுள்ளன. இந்நூலின் சிறப்பு கருதி 2011ஆம் ஆண்டு இந்நூலகத்தால் சிற்ப சாத்திரம் - தொகுதி 1 மற்றும் சிற்ப சாத்திரம் - தொகுதி 2 என இரு தொகுதிகளாக தமிழ் மற்றும் ஆங்கில மொழியில் வெளியிடப்பட்டன. இந்நூலின் தொகுதி

1இல் சண்முக இலட்சணமும் தொகுதி 2இல் சோமாஸ்கந்த விதானம் என்ற தலைப்பின்கீழ் முருகனின் இலட்சணங்கள் கூறப்பட்டுள்ளன.

**சண்முக இலட்சணம்**

முருகு என்னும் சொல்லின் பொருள்களுள் சிறப்பானவை. மணம், இளமை, கடவுள் தன்மை, அழகு என்பன. முருகை உடையவன் முருகன். முருகன் இயற்கை மணமும், மாறா இளமையும், எல்லாப் பொருளையும் கடந்து ஒளிரும் தன்மையும், அழியா அழகும் உடையவன் ஆவான் என்பார் திரு.வி.க. இதனை உறுதிபடுத்தும் வகையில் சிற்ப சாத்திரம் - தொகுதி 1இல் குறிப்பிடப்படும் சண்முக இலட்சணம் வருமாறு:-

இரண்டு கையாதல், நாலு கையாதல், ஆறு கையாதல், பன்னிரண்டு கையாதல் செய்து, இதில் பன்னிரண்டு கையாகில் சக்தியும் அம்பும் வாளும் சக்கரமும் பாசமும் (பிரசாரிதமும்) வலப்புறத்திலும், பஞ்சமும் குக்குடமும் வில்லும் தண்டாயுதமும் கலப்பையும் இடப்புறத்திலுமாகச் செய்வான். (பிரசாரிதம் - கையை விரித்து வைத்தல்)

ஆறு கையாகில் அபயமும் வாளும் சக்தியும் வலப்பாரிசுவத்திலும், கடகமும் அட்சமாலையும் குக்குடமும் இடப்பார்சுவத்திலேயாதல் செய்வான். (கடகம் - கேடயம்)

நான்கு கையாகில், வலத்தில் அபயமும் சக்தியும், இடத்தில் கோழியும் அட்சமாலையும் ஆகச் செய்வான்.

இரு கையாகில், கோழி இடத்திலும் சக்தி வலத்திலும் ஆகச் செய்வான் (சக்தி - வச்சிராயுதம்). இவ்விடத்திலே சொல்லப்படாததெல்லாம் சோமாஸ்கந்ததேச்வரத்திலே சொன்னாற்போல் செய்வான்.

**சோமாஸ்கந்தன் - பொருள் விளக்கம்**

சோமனாகிய சிவனும், உமையும் வீற்றிருக்க நடுவில் குழந்தை வடிவில் கந்தன் நின்று கொண்டிருக்கும் கூட்டமைப்பே சோமாஸ்கந்தர் சிற்பத் தொகுதியாகும். சோமாஸ்கந்தர் சிற்பத்தொகுதியில் இறைவன் மான், மழுவேந்தி, முன்னிரு கைகள் யோக முத்திரை காட்டும் நாற்கரத்தினராய், அமர்ந்திருக்க, உமை வலக்காலை மடக்கி, இடது காலை தொங்கவிட்டவாறு உத்குடிகாசனத்தில் இடதுகையைப் பீடத்தில் ஊன்றி, வலக்கையில் மலரைப் பிடித்தவாறு, குழந்தையினை மடியில் அரவணைக்கும் நிலையில் உள்ளார். சோ - சோமன் - சிவன், மா-உமா, ஸ்கந்தன் - முருகன். இம்மூன்று இறையுருவின் வடிவத்தத்துவத்தை ஒருங்கிணைத்து உண்டான ஆழ்ந்த உட்பொருள் நம் சமய, சமூக, பண்பாட்டு மெய்க்கூறுகளை விளக்குவதாக அமைந்துள்ள.

பரம்பொருளாகிய இறைவனிடமிருந்து பிரபஞ்சாமாகிய அண்டசக்தி பெறும் இறையனுபூதி ஞான விளைவைப் பெறும் என்னும் சைவ சமயச்

சித்தாந்தம் உருக்கொண்ட நிலையே சோமாஸ்கந்தர் சிற்பத் தொகுதி எனலாம். ஸ்காந்தம் என்பது கூட்டுப் பொருள் எனப் பொருள்படும். "ஸ்கந்தன்" என்பதற்கு ஒளியை உடையவன் என்று பொருள். வேள் என்ற பொருளையே இது சுட்டுகிறது. ஞானத்தின் வடிவம் ஒளி. "ஸ்கந்தவர்மன்" என்னும் மன்னர்களின் பெயரில் வரும் ஸ்கந்தன் ஒளியையுடைய அரசன் என்ற பொருளிலேயே அதாவது தமிழ் வழக்கான "வேள்" என்ற பொருளிலேயே பயின்று வருகிறது.

பல்லவர்கள் குப்தர்களிடமிருந்து இச்சிற்பத்தின் மூலத்தாக்கத்தைப் பெற்றிருக்கலாம் என்ற கருத்தும் இங்கு ஏற்றுக் கொள்ளத்தக்கதே. "ஸ்கந்தன்" என்பது குப்த மன்னர்களின் பெயர்களிலும் இடம்பெற்றுள்ளதும் இங்கு நோக்கத்தக்கது. சிற்ப சாத்திரம் - தொகுதி 2இல் குறிப்பிடப்படும் ஸ்கந்த இலட்சணம் வருமாறு:-

**ஸ்கந்த இலட்சணம்**

தேவிக்கும் தேவனுக்கும் நடுவே ஸ்கந்தனை ஸ்தாபிப்பான். தேவியினுடைய ஹிக்காவசானம் ஸ்கந்தர் உயரம் உத்தமம். ஸ்தனாந்தமானது ஸ்கந்தபிரமாணம் ஹீனப்பிரமாணமாம். இவை இரண்டிற்கும் நடுவே எட்டுச் செய்ய, ஒன்பது பேதமாம். இது உத்தமாதித் திரயங்களாக ஒன்பது பேதமாம். (உத்தாமாதித்திரயம் - உத்தமம், மத்திமம், கடைநிலை). ஜாத்யம்சம் கூட்டிக் கொள்ளலுமாம். அது கூட்டாமல் கொள்ளலுமாம். அந்த உத்தமாதியான ஒன்பது பிரமாணத்திலே, யாது ஒன்று கொள்ளப்பட்ட உயரத்தை அறுபத்தி நான்கு செய்து, இதிலே ஒரு கூறுக்கு விரலென்று பெயராம். இதில் எட்டில் ஒன்றுக்கு "யவை" யென்று பெயராம். (பிரமாணம் - அளவு).

சிரோமானம் விரல் ஒன்று. கேசாந்தம் விரல் ஒன்று. நேத்திரச் சூத்திராந்தம் விரல் இரண்டு. புடாந்தம் விரல் ஒன்று. (ஹனுச்) சீமாந்தம் விரல் மூன்று. கிரீவோச்சம் விரல் மூன்று. (கிரீவ + உச்சம் = கிரீவோச்சம், கிரீவம் - கழுத்து). ஹிக்கையில் நின்றும், ஸ்தனாந்தம் விரல் ஒன்று. ஸ்தனாந்தத்திலே நின்றும், நாபி யளவாக விரல் எட்டு (நாபி - தொப்புள்). நாபியிலே நின்றும், மேட்டிர மூலாந்தமளவாக விரல் ஏழு. ஊருத் தீர்க்கம் விரல் பன்னிரண்டு. ஜானுத் தீர்க்கம் விரல் இரண்டு. ஜங்காத் தீர்க்கம் விரல் பன்னிரண்டு. தலோச்சம் விரல் இரண்டு (தல + உச்சம் = தலோச்சம்: தலம் - பாதம்). தலாயாமம் விரல் பத்து. பாகுத் தீர்க்கம் விரல் பதினான்கு (தல + யாமம் = தலயாமம்: யாமம் - நீளம்). முன்னங்கை நீளம் விரல் பத்து, கரதலம் விரல் நான்கு. மைய விரல் நான்கு. அனாமிகை நீளம் விரல் மூன்றரை. தர்ஜனித் தீர்க்கம் விரல் மூன்றரை, கனிஷ்டிகாத் தீர்க்கம் விரல் மூன்று. அங்குஷ்டா யாமம் விரல் மூன்று, தல விஸ்தாரம் விரல் நான்கு (தலம் - உள்ளங்கை). மணி பந்தம், விரல் மூன்று, முழங்கை விரல் நான்கு. பாகு மூலம் விரல் ஐந்து. முக வியாசம் விரல் எட்டரை, கண்ட விஸ்தாரம் விரல் ஏழு (கண்டம் - கழுத்து). கட்சாந்தரம் விரல் பதிமூன்று, ஹிருதய

விஸ்தாரம் விரல் பன்னிரண்டு, மத்திய விஸ்தாரம் விரல் பதினொன்று. சுரோணி விஸ்தாரம் விரல் பன்னிரண்டு, கடிஸ்தான விஸ்தாரம் விரல் பதிமூன்று (கடி - இடுப்பு). ஊருமூலம் விரல் எட்டு. ஜானு விஸ்தாரம் விரல் ஆறு, கணுக்காலடிப்பரப்பு விரல் நான்கு (கணுக்கால் - கண்டைக்கால்). கணுக்கால் முடிவு விஸ்தாரம் விரல் மூன்று, தல விஸ்தாரம் விரல் ஆறு (தலம் உள்ளங்கால்). பார்ஷ்ணி வியாசம் விரல் நான்கு, நின்றது, யுக்தியினாலே கற்பிப்பான் (பார்ஷ்ணி - குதிங்கால்). கேசாந்தத்திலே நின்றும் நாசிகங் கூடத்தோடே கூடியிருப்பது.

இரண்டு கையும் பூப்பிடித்ததாதல் அன்றியே இடக்கை வரதமாதல் செய்வான். இடக்கை அன்றியே, கடகமாதல், சிம்மகர்ணமாதல் செய்வான். வலக்கை பூப்பிடித்தும், இடக்கை விளாம்பழமாதல், மாம்பழமாதலாம். மோதிரம், உபக்கிரீவ முதலான எல்லா ஆபரணங்களோடுங் கூடியிருப்பது (உபக்கிரீவம் - மார்பு மட்டத்திற்கு மேலே தொங்கும் மாலை).

கடிச்சூத்திரந் தரித்து, நக்கினமாய்ச் சன்னவீரத்தோடுங் கூடியிருப்பது (நக்கினம் - அம்மணம்). இருந்ததாதல், நின்றதாதல், நிருத்தமாதல் செய்வான் (நிருத்தம் - நடனம்). இருந்ததாகில், இரு கால்களையும் விஷ்டரத்தின் மேர்ல கிடத்துவான் (விஷ்டரம் - ஆசனம்). நின்றதாகில், இரண்டு உள்ளடியும் சமமாக நின்றதாகக் கற்பிப்பான் (உள்ளடி - உள்ளங்கால்). குஞ்சிதமான கால்களாகில், முழந்தாளிற்கு நடு நீவ்ரம் யுக்தியினாலே செய்வான் (குஞ்சிதம் - வளைவு). இரண்டு காலும் குஞ்சிதமாய், சிறிது நடந்ததாகச் செய்வான்.

ஆடினதாகில், வலக்காலை நின்றதாகவும், சிறிது வளைந்ததாகவும் செய்வான். மற்றைய கால், எழு, ஆறு, ஐந்து விரலளவும் பீடத்திலே நின்று எடுத்ததாகச் செய்வான். வரதமான கை பழங்களைப் பிடிக்கக் கொள்ளலுமாம், இடக்கை, பழமன்றியே இருக்கில் நீட்டினதாகச் செய்கிலுமாம். லம்பச் சூத்திரம் நிருத்த மூர்த்தி போலச் செய்வான் (நிருத்தமூர்த்தி - நடராசன்).

**முடிவுரை**

கடவுளுக்கு உருவங்களைக் அளித்தபோது, அவ்வுருவங்களை மனித உருவங்களாகக் அமைத்தாலும், மனித உருவத்துக்கும் தெய்வ உருவத்துக்கு வேற்றுமை தோன்றும்படி, தெய்வ உருவங்களுக்கு நான்கு கைகள், எட்டுக் கைகள், பத்துக் கைகள், பதினாறு கைகளைக் கற்பித்தார்கள். உருவம் இல்லாத, கண்ணுக்குத் தெரியாத, எங்கும் பரந்திருக்கிற கடவுளுக்கு உருவத்தைக் வடிக்க வேண்டுமானால், இவ்வாறு பல கைகளை அமைக்க வேண்டும் என்று பெரியவர்கள் கருதினார்கள். கண்ணுக்குத் தெரியாமல், உருவமும் இல்லாமல், அண்டவெளியிலே கலந்திருக்கிற பரம்பொருளின் திருமேனி ஆகாயமே என்றும், திசைகளே அவருடைய திருக்கைகள் என்றும் அவர்கள் கருதினார்கள். திசைகள் நான்காகையால் அவருடைய திருக்கைகள் நான்காகவும், திசைகளை எட்டாகவும் கூறப்படுவதால் திருக்கைகள் எட்டாகவும், திசைகள் பதினாறாகவும் கூறப்படுவதால் திருக்கைகளைப் பதினாறாகவும்

கற்பித்தார்கள். எட்டுத் திசைகளோடு மேலுலகத்தையும் கீழுலகத்தையும் சேர்த்துத் திசைகளைப் பத்தாகவும் கூறப்பெறுவதால் கடவுளின் திருக்கைகளைப் பத்தாகவும் கருதினார்கள். இதனால்தான் கடவுள் உருவங்களுக்குக் கைகள் நான்கு, எட்டு, பத்து, பதினாறு எனக் கற்பிக்கப்பட்டு அவ்வாறே ஓவியத்திலும் சிற்பங்களிலும் காட்டப்பட்டுள்ளன. இப்படிப்பட்ட தெய்வச் சிற்ப உருவங்களைப் பற்றிச் சைவ சமய நூல்களிலும் வைணவ சமய நூல்களிலும் அறியலாம். இவ்வாறு உருவாக்கப்பட்ட உருவந்தான் கடவுளின் உண்மை உருவம் என்பது இதன் கருத்தன்று. இந்த உருவம் கடவுள் உருவத்தைக் குறிப்பாகச் சுட்டுகிற குறிப்பு மட்டுமே. இக்கருத்தை மெய்பிக்கும் வகையில் அக்காலத்தில் வழக்கிலிருந்த அம்சுமத் பேத ஆகமம் என்னும் சிற்பம் தொடர்பான இலக்கண நூலில் சண்முகம் மற்றும் ஸ்கந்தன் வடிவிலிருக்கும் முருகன் சிலைக்குரிய இலட்சணங்களில் நான்கு கைகள், எட்டுக் கைகள், பத்துக் கைகள், பதினாறு கைகளைக் கற்பித்துள்ளார்கள் என்பதை நாம் உணர்ந்து கொள்ள முடியும்.

பயன்பட்ட நூல்கள்

1) கிருபானந்த வாரியார், முருகன், குகஸ்ரீ வாரியார் பதிப்பகம், சென்னை, 1995.

2) மயிலை சீனி வெங்கடசாமி, நுண்கலைகள், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, 2006

3) சௌந்திரபாண்டியன்.சு. (பதிப்பாசிரியர்), சிற்ப சாத்திரம், அரசினர் கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகம் மற்றும் ஆய்வு மையம், சென்னை, 2011.

# AN OVERVIEW OF MURUGAN SCULPTURES

**V. Saravana Ragavan**
*Assistant Professor,*
*Department of Visual Communication,*
*D.G.Vaishnav College, Chennai*

Skanda began his existence at a very early stage of Indian history. Dr.Bhandarkar asserts that Skanda was popular even during the time of Patanjali the great sage who wrote the yogasutras.Skanda or Kumara from the days of mahakavi Kalidasa of the Gupta period down to the Skanda Purana is a hero and war-like God in Indian tradition.The birth of Subramanya is given in several puranas and in the Balakanda of the Ramayana and the Vanaparvam of the Mahabharatha.Kalidasa also gives a lucid description of the birth of Karthikeya in his "Kumarasambhava" The Puranas state that he was born out of the fiery energy of Siva, in a forest of grass ( Sara vana), hence the name Saravana.

In Maharastra he was called Khandoda, and in vast areas of the south India, the god was known as Malikilavon, the Lord of the hills in ancient Tamil.The Sanskritic Skanda and Tamil Murugan by about the $3^{rd}$ to $4^{th}$ century AD. get blended in Tamil Nadu. The indologist Hardy had a theory that Murugan worship under different names was popular in the folk region of the north India too. He was supported in this by Parpola, after his continuous research he came to the conclusion that Murugan was a deity of the Indus Valley culture, and that the very name Murugan is to be found in the language.

**ICONOGRAPHY OF SKANDA OR KARTHIKEYA**

Skanda or Karthikeya is the elder son of Shiva, but his motherhood goes to Parvat, Ganga and Six Krittikas. He is commander of gods( deva-senapati) and his main achievement is his victory over the demon Taraka, A lance(shakti) is his main weapon and a peacock is his mount. Being very young in age he is known as Kumara.The beautiful Kumara is represented as a youth with two arms, almost nude but for the koupina- the small loin-cloth, carrying in his right hand 'vel' and the left hand in kati pose, as seen in the image of the Andavan at Palani.

**Skanda**

The most common variety of Skanda that one sees in several temples dedicated to him is the single faced standing deity with four arms,

the front ones being in abhaya and katiyavalambita or varada poses, while the two rear ones carry the sakti and vajra.He has at his back a peacock and is adorned with all ornaments. In South India Skanda is known as Karthikeya, Subrahmanya and Murugan.Some of the texts there mention as many as forty forms of this deity. The iconographic representation of Murugan is rare in Tamil Nadu before the 9th centuryAD.The earlier representations of the deity are mostly confined to the Somaskanda panels and niche figuresin the Pallava temples and rock-cut shrines. At Tirupparankundram, near Madura, another place very sacred to Skanda, He is represented as a standing deity with four arms, with his consorts Devayanai and Valli by his side- and it was there he married Davayanai.

**IMAGES OF SUBRAMANYA**

Images of Subrahmanya are of various types.There are representations of this deity as standing or seated, single or with his two consorts Valliamman and Devayanai.It is laid down as a rule that if the figure is a solitary seated one,it should have only two arms; if a standing one, four and lastly if it is seated upon a peacock,it may have six,eight or tewelve arms.The symbols usually carried by this deity are the sakti, arrow, sword, discus, noose, akshamala, a bunch of peacock feathers, while the front lower hands are in abhaya and varada poses.

**Shadanana**

As Shadanana, he is represented with six faces and twelve hands each carrying his characteristic weapons, with his two consorts on his side.This aspect is very well represented in the uthsava beras at the famous shrine at Tiruchendur, in Thirunelveli district.

**Swaminatha**

The west tower of Meenakshi Amman Temple has sculpture of Siva and young Murugan enlightening his father on the significance of "om"( pranava manthiram).Though there is Swamimalai Murugan temple exclusively for this incident, this subject is very common even in modern day temples .

**SCULPTURES OF OTHER REGIONS**

The earliest image of Skanda, coming from Mathura region bears a dated inscription of the Saka year 11(89AD)(GMM.42.2949).Almost contemporary is his small cast bronze figure from Mathura. In these cases the god is single Karthikeya is one among the common deities worshipped in the Kushan period. He is shown as a young man wearing a crown and

holding a long spear.The Mathura Musuem houses an important and intact statue of this deity(NO.42.2949) bearing a three line Brahmi inscription, dated in the year 11 corresponding to AD.89.Fortunately it is mentioned as the image of Karthikeya. "Skanda with Matrka"(SML 0.250).Mathura,c.1st-3rd centuries AD. Skanda as balagraha has been closely related with Kushana Matrkas, who cause harm to the children,if not properly propitiated. In a number of Matrka plaques of this period he is there with his spear(GMM.F.38,F39)

**MEDIEVIAL**

In medieval art Skanda is multiheaded and multi armed carrying several weapons.In his Sasta form he holds a manuscript in one of his hands.He is seated,peacock is also seen in the composition. "Skanda with a manuscript in hand "(SML.H.186),probably Vindhyan region ,c.10th century.AD. is fine example of the medievial sculpture.

**Kalinga( 600-1400 A.D)**

" Subrahmanya", Mukhalingam( 5th to 6th century AD). This stone sculpture belongs to Kalinga kingdom, from the Mukhalingam on the northern border of Vizagapatinam district.Only image is available at Government Musuem, Chennai.Subrahmanya is seated on the flat base, peacock is found below Subrahmanya , his right leg is rested on the peacock, the bird is looking at the god.This sculpture is found on the fully decorative panels just behind the entrance of vimana. Below the lord, there are panels depicting worship. Dwarakas and Apsaras dancing, dwarakas playing musical instruments like dhols and cymbals.Women seen dancing in different postures. " Karthikeya" from Mukhalingam is a base –relief stone sculpture which is also from the same region, only Karthikeya's head is found on a decorative pillar probably only this portion is excavated by the Archaeological Survey of India.

**KANAUJ**

**"Uma-Maheswara Murti",** Highly popular in South India this type shows Siva and Parvati seated separately and the boy Skanda dancing in between them.Whereas in North India "Somaskanda" is known as "Uma-Maheswara-murti" Some sculptures in North India show baby Skanda in the lap of Parvati in Uma-Maheswara-murti itself. One such work is housed at Kanauj Museum, (NO.75.5), Kanauj, c. 7th/ 8th century AD.In such a sculpture in Patna Museum(NO.Arch.6369),she carries a sword and shield and also supports the baby.

**PALLAVA PERIOD**

**Murugan, Kilperumpakkam**

An sculpture of "Murugan"(7th century AD), Kilperumpakkam, Villupuram District, housed at French Institute, Pondicherry.The sculpture is found outside a modern temple of Ayappan in Kilperumpakkam village.It is a bas-relief carved on an upright granite with a semi-circular top and staright edges on the other sides. It has so much of iconography to be discussed. The deity is seated on a lotus with his right leg folded and left leg hanging down.Seated figures of Subrahmanya on a lotus are rare, probably being the earliest sculpture. The deity is shown with four arms. The upper right hand holds a weapon with a short handle, the vajra or sakti inherited from Indra.The upper left hand holds a rosary (*aksamala*) and the lower right hand a lotus bud. The lower left hand is shown resting on the left thigh. The rosary and the lotus bud are the attribute of Brahma shared by Murukan in his capacity as the god of knowledge (*su-brahmanya*).A unique feature of the sculpture is the brief inscription appearing on the also forming the background to the sculpture in the narrow space below the armpits and above the thighs.The inscription is in Tamil written in the Tamil script of the early Pallava period, but with an admixture of few *vatteluttu* letters. The inscribed sculptures especially of the BrahmAnical deities are rare in Tamilnadu. "Shanmukha " ,Kaveripakkam,North Arcot District,( ACC NO.71-5/37)This stone sculpture has only torso of the lord, right leg and left foot is available.Parts of the arms are seen suggesting six arms on each side. This sculpture belongs to Pallava period( 600-850 A.D)housed at Government Museum,Chennai.

**SOMASKANDA MURTI**

This image is to be seen as metal vigraham in almost every Siva temple, as it is 'utsava beram' taken out for all processions. Sculpturally also Somaskanda Murti images were carved out even during Pallava days,on the back wall of the central shine behind the linga in the main shrine. Shiva and Uma with the child Skanda standing or seated between them. Skanda has the crown 'karandamakuta' and holds in one of his hands a flower, a wooden apple or a mango. Sometimes Parvati with the child Skanda on her right lap is seated on the left side of Shiva.

**Other Shrines with Somaskandamurti**

The theme of Shiva with Uma and Skanda was very popular in the Pallava period and it is repeated in all the central cells of shrines. We have fine representations of this image in Tirukalikundram, Kancheepuram

Ekambaranathar shrine and in Kailashanathar Temple. Also found at Dharmaraja Ratha, Mahabalipuram, Saluvankuppam Cave, called Atiranachanda-Pallavesvara and Siva Shrine, Shore Temple.

**Dharmaraja Ratha**

In Dharmaraja Ratha, Mahabalipuram , the topmost tala has a cellar excavated that enshrines a Somaskanda bas-relief on its rear wall, characteristic of the times of Paramesvaravarman I (AD 672-700), whose inscription is found on the cella. The Kailashanatha Temple, Kancheepuram, the central shrines of both Rajasimhesvara and Mahendravarmesvara have Somaskanda panels in the rear wall.

**Shore Temple**

Shore Temple at Mahabalipuram, Somaskanda group is presented behind the siva linga, it is also repeated on either side on the walls of the porch. This panel is as usual on the back wall inside the shrine. There is a representation of four-armed Siva seated at ease with his wife Uma and the baby Skanda and flanked by Brahma and Vishnu. Skanda is seated comfortably on Parvati's lap.

**CHOLA PERIOD BRONZES**
**Somaskanda Murti**

Somaskanda Murti, was an fascinating subject not only for Pallavas, but also for the Cholas. For them the medium was cast in bronze. There are numerous sculptures where Skanda is represented as either standing or seated in the composition. "Somaskanda" of early Chola period(880-1279 AD ), in between Siva and Parvati stands Skanda, bejeweled and holding a lotus in his hand. Also similar sculpture found in Silathur, Tanjavur District, 15th century A.D.(ACCNO.1195/4) from Madras Museum. Skanda is standing in the centre, has flowers in each hand, he is also seen with ornaments.

Another sculpture where Siva and Parvati are seated in a relaxed mood. Skanda baby is nude, standing in between their parents. In this sculpture also he is found having flower in each hand. This Somaskanda was from Kakkarai, Tanjavur District,13th century A.D.( ACCNO.1426/87), housed at Madras Museum. "Somaskanda" from Thiruvalangadu, in the Madras Museum, is among the most beautiful examples of bronze images of the early Chola school.The Somaskanda bronze in Thiruvallur and Gangaikondacholapuram temple are excellent examples of bronzes in addition to those already mentioned.

**Conclusion**

The sculptures of Murugan can be traced from the Ellora and Elephanta Caves in the north and the Kataragama Temple in Sri Lanka which attracts Tamils and Sinnalese people and the Vedda people. His iconography is spread and familiar, right from the Indus Valley Civilization to the Kanauj, Mathura, Ganthara, Kushan and to down south and also has spread widely to the South East Asia from the Prey Veng Province, Cambodia and other parts of the world. Right from the ancient to the modern temple, has His sculpture, even the smallest Siva and Parvati temple in South India has a separate shrine dedicated to him. Undoubtedly he is the God of youth, energy and virility.

**REFERENCES**

1. C.Sivaramamurthi, *Masterpieces of Indian Sculpture,* National Museum,New Delhi,1971
2.. H.Krishna Sastri, *South Indian Images of Gods and Goddesses,*Asian Educational Services,1916
3. T.N.Srinivasan,*A Hand Book of South Indian Images,* Tirumalai Tirupati Devasthanams,Tirupati,1954
4. Grace Morley, *Indian Sculpture, LustrePress, Roli Books,*2005
5. Mathuram Boothalingam, *Movement in Stone, a study of some Chola Sculpture,*Soumani Publications(P)Ltd,New Delhi,1969.
6. Kapila Vatsyayan,*The Cultural Heritage of India, Volume VII, The Arts, Part One,*The Ramakrishna Mission, The Institute of Culture,Kolkatta, 2006
7. C.Sivaramamurti,*Mahabalipuram, Sixth Edition,*Archaeological Survey of India,New Delhi,2004.
8. C.Sivaramamurti,*Mahabalipuram,World Heritage Series,* Archaeological Survey of India,New Delhi,2006

# திருப்புகழில் நெகிழ வைத்த தாளங்கள்

**A. சரவணன்**
உதவிப்பேராசிரியர் (தவில்)
இசைத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

தாளங்கள் என்றால் தாள சமுத்ரம், தாள தீபிகை நூல்களை தேடவேண்டாம். திருப்புகழில் ஊடுருவிப் பார்க்கலாம். திருப்புகழை இயற்றியவர் 15-ம் நூற்றாண்டில் வாழ்ந்த அருணகிரிநாதர். இவர் குட்ட ரோகத்தினால் அவதிப்பட்ட வேளையில் முருகப் பெருமான் இவரைக் காத்தது மட்டுமின்றி தம் மீது திருப்புகழ் பாடல்களைப் பாடும் ஆற்றலையும் அளித்தார். இவர் 15000 பாடல்கள் எழுதியுள்ளதாகத் தெரிகின்றது. இன்று நமக்குக் கிடைத்துள்ளவை 2000 பாடல்கள் மட்டுமே. இசைக்குப் பொருத்தமான பற்பல சந்தங்களைத் தம் பாடல்களில் இவர் அமைத்துக் காட்டுவதால் இவருக்குச் சந்தப் பாவலப் பெருமான் என்ற சிறப்புப் பெயர் கிடைத்தது. தமிழ்க்கவியான தாயுமானவர் அருணகிரியாரை வாக்கிற்கு அருணகிரி என்றும் வாழ்த்தியுள்ளார். தேவாரக்காரர்களைப் போல் அருணகிரிநாதரும் பல திருத்தலங்களுக்குச் சென்று அங்குள்ள தெய்வங்களின் மீது திருப்புகழ் பாடல்களை இயற்றியுள்ளார். இவர் தன் வாயால் பாடிய பாக்களுள் நெகிழ வைத்த தாளங்களைக் காணலாம். இதனை எடுத்துரைப்பதே இக்கட்டுரையில் காண்போம்.

### போற்றிசை அமைப்பு

திருப்புகழ் ஆரம்ப காலத்தில் போற்றிசையாக வளர்ச்சி பெற்றது. கீர்த்தனை இன்று இசைப் பகுதியைச் சேர்ந்தது. இதனது சாகித்தியம் இறைவன், இறைவியைப் புகழ்வதாகவோ, அவர்களிடம் மன்னிப்பு வேண்டுவதாகவோ, பக்தி நிரம்பியதாகவோ இருக்கும். புராண நிகழ்ச்சிகளைப் பற்றியும் பக்தர்களின் உணர்ச்சிகளைத் தெரிவிப்பதாகவும் இருக்கும். எனவே கீர்த்தனைகளில் ஸ்வரப்பகுதியை விட சாகித்தியப்பகுதியே முக்கியமானது என்று கருதப்படுகின்றது. இவை தாள திருப்புகழ் பாமாலைப் பதிகங்களுக்கு உரிய இலக்கணத்தை ஒத்திருந்தது.

### 35 தாளத்தில் அமைந்துள்ள திருப்புகழ்ப் பாடல்கள்

திரிச்சிர துரவ தாளத்தில் ஆதிசேட (பா. 1299), ஆதிமகமாயி (பா.404), சுருதி மறைகளிரு (பா.729), தமிழோதிய (பா. 546) என்னும் பாடல்கள் உள்ளன. சதுரச்சர துருவத்தில் குயிலோமொழி (பா.921), கொலைமதி (பா.40), சந்ததம் பந்த (பா. 15), தெருவினில் நடவா (பா.213) என்னும் பாடல்கள் உள்ளன. கண்ட துருவத்தில் சீதனவாரி (பா. 741), பனியின் விந்துளி (பா.2430 என்னும் பாடல்கள் உள்ளன. திரச்சிர மட்டிய தாளத்தில் அதிருங்கழல் (பா.437), எதிரிலாத (பா.423) என்னும் பாடல்கள்

உள்ளன. சதுரச்சிர மட்டியத்தில் சீதமதிய (பா.755), வரியார் கருங்கண் (பா.70) சிகரமருந்த (பா.669), மருக்குலாவிய (பா.805) என்னும் பாடல்கள் உள்ளன. கண்ட மட்டியத்தில் இடையித்தனை (பா. 1127) என்னும் பாடல் அமைந்துள்ளன.

**திஸ்ர ரூபகம்**

திரிச்சிர ரூபகதாளத்தில் அகர முதலென (பா. 1014), குமரகுருபர முருக (பா. 2280, கமையற்ற சீர்கேடற் (பா. 919), செங்கலச (பா.645), சரனக் கமலாலயத்தை (பா. 2090, தினமணி சார்ங்காபாணி (பா.784), நிலவினிலேயிருந்து (பா. 216), பரவைக் கெத்தனை (பா. 1106) என்னும் பாடல்கள் உள்ளன. சதுரச்சிர ரூபகத்தில் என்னால் பிறக்கவு (பா. 9160, இருமனுரோக (பா. 305, சீருலாவிய (பா. 727), திமிரமாமன (பா. 728), மதியால் வித்தகனாகிய (பா. 939), திடமிசற் (பா. 173), வள்ளமுலை (பா. 1084) என்னும் பாடல்கள் உள்ளன. மிச்சிர ரூபகத்தில் சாந்துடன் (பா. 608) என்னும் பாடலும், சங்கீரண ரூபகத்தில் சுருதியூடுகேளாது என்னம் பாடலும் அமைந்துள்ளன.

**திஸ்ர ஜம்பை**

திரிச்சிர சம்பை தாளத்தில் இரவு பகல் (பா. 519), காலனிடத் (பா.319), புமியதனிற் (பா. 224), ததானெத் தலையாலும் (பா. 832) என்னும் பாடல்கள் உள்ளன. சம்பையில் கருவடைந்து (பா. 13), குகனே குருபரனே (பா. 624), குகையில் நவ (பா. 1262), அபகார நிந்தை (பா. 110), துள்ளுமத வேள்கை (பா. 1099), நினைத்த தெத்தனையிற் (பா. 275), நாரியர்களா சையை (பா. 1101) என்னும் பாடல்கள் உள்ளன. மிச்சிர சம்பையில் இமராஜனி (பா. 595), ஞாலமெங்கும் (பா. 721) என்னும் பாடல்கள் உள்ளன. சங்கீரண சம்பையில் கரிய பெரிய (பா. 121) பொன்னை விரும்பிய (பா. 1109), ஒருபொழுது மிருசரண (பா. 159) என்னும் பாடல்கள் அமைந்துள்ளன.

**திஸ்ர திரிபுடை**

திரிச்சிர திருப்புடை தாளத்தில் உலகத்தினில் (பா. 1029), இறுகுமணி (பா. 524), வரிசேர்ந்திடு (பா. 250), வாசித்துக்கானொ (பா. 344), முத்தைத்தரு (பா. 6), சதுரத்தரை (பா. 763), வஞ்சம் கொண் (பா. 67), கனகந்திரள் (பா. 10), தனத்துக்காக என்னும் பாடல்கள் அமைந்துள்ளன. சதுரச்சிர திருப்புடை என்னும் தாளத்தில் பின்வரும் ஐம்பத்துமூன்று பாடல்கள் அமைந்துள்ளன. அவை அகரமுகமாகி (பா. 444), இருப்பவல் திருப்புகழ் (பா. 252), ஐங்கரனை (பா. 409), குடத்தைத் தகர்த்து (பா. 439), குமரகுரபர (பா. 565), கூர்வேல் (பா. 269), தறையின் மானட (பா. 439), நிறைமதி (பா. 70), பாலாய் நூலாய் (பா. 552), முந்துதமிழ் (பா. 977), ஆதாளிகள்புரி (பா. 265), ஆறுமாறு (பா. 750), காணாததூர (பா. 531), காணொணாதது (பா. 752), குடிவாழ்க்கை (பா. 323), குயிலொன்று மொழி (பா. 265), குயிலோமொழி, சேமக்கோமள

(பா. 41), தந்தபசிதனைய (பா. 43), தோலெலும்பு (பா. 730), நச்சரவமென்று (பா. 495), பாலோ தேனோ பாகோ (பா. 838), வசனமிக வேற்றி (பா. 184), கடலைப்பொரிய வரை (பா. 161), அல்லிநேருமின் (பா. 419), மாலாசைகோப (பா. 365), திருமகளுலாவு (பா. 420), மாதர் வசமாயிற் (பா. 430), எருவாய் கருவாய் (பா. 863), விழுதாதெனவே (பா. 846), மணத்துக்கடம்பு, தேனியல் சொற் (பா. 1100) வரதாமணிநீ (பா. 185), அயிலொத் தெழுமிரு (பா. 702), கரியமுகில் போலு (பா. 712), கனகபை மேவு (பா. 621), சிரத்தானத்திற் (பா. 597), கொடியமதவேள்கை (பா. 1093), உறவின் முறையோர்க்கு (பா. 1209), கொக்கு கொக்க (பா. 484), இத்தரணி மீதிற் (பா. 1089), அன்பாக வந்து (பா. 378), மருவறாவெற்றி (பா. 429) ஆசைகூர்பத்த (பா. 1122), ஊனேதானோ (பா. 1284), மனைமக்கள் (பா. 1110), திரமொழியுரைபெற (பா. 767), ஒருவகை, நகைத்து வுருக்கி (பா. 242), தீதுற்றெயெழு (பா. 1098), விதிபோலு முந்த (பா. 100), பகருமுத்தமிழ் (பா. 809), அமருமமரரினி (பா. 701) என்னும் பாடல்களாகும். இதேத் தாளம் ஆதிதாளம் என்னும் பெயரில் பின்வரும் பதினாறு திருப்புகழ்ப் பாடல்களில் அமைந்துள்ளன. அவை கைத்தல நிறைகனி (பா. 1), ஒருபதுமிருபதும் (பா. 246), மலரினிக் கொண்ட (பா. 179), நாதவிந்து கலாதி (பா. 104), பந்தாடியங்கை (பா. 379), பக்தியால் யானனை (பா. 350), அந்தகண் (பா. 21), அஞ்சுவித (பா. 770), கோடான மேருமலை (பா. 1094), கமலமாது (பா. 79), மரவே செறித்த (பா. 233), பூத்தார்சூடும் (பா. 775), துப்பாரப்பா (பா. 273), திருட்டு நாரிகள் (பா. 314), மனமெனும் பொருள் (பா. 888), கருப்பந்தங் (பா. 86) என்னும் பாடல்களாகும்.

**கண்ட திரிபுடை**

கண்ட திருப்புடை தாளத்தில் அவசியமுன் (பா. 958), இருவினையின் (பா. 623), சீர்சிறக்குமேனி (பா. 452), உலகபசுபாச (பா. 131), உம்பர்தருத் (பா.20, புத்தகத்தேட்டிற் (பா. 1108), நி தத்துவமாகி (பா.153), என்னும் பாடல்கள் அமைந்துள்ளன. மிச்சிர திருப்புடையில் இரதமான பாயூறல் (பா.1293), சிந்துற்ழெற (பா.7830, என்னும் பாடல்களும், சங்கீரண திருப்புடையில் காமியத்தழுந்தி (பா.208), கொம்பனையார் (பா.39) என்னும் பாடல்களும் அமைந்துள்ளன. திரிச்சிர அடதாளத்தில் கோலக்காதிர், உரைத்துறைபோத (பா.795), நாடித்தேடி (பா.504) என்னும் பாடல்களும், சதுரச்சிர அடதாளத்தில் பரிமளகனப (பா.55), அருத்திவாழ்வொடு (பா.152), அறமிலாவதி (பா.703) என்னும் பாடல்களும், மிச்சிர அடதாளத்தில் காரணமதாக (பா.446), கூறுமாரவேளார (பா.1275) என்னும் பாடல்களும் அமைந்துள்ளன.

திரிச்சிர ஏகதாளத்தில் இறவாமற் பிறவாமற் (பா.959), நாலுமைந்து வாசல் (பா.49), மைக்கணிக்கண் (பா.4140 என்னும் பாடல்கள் உள்ளன. கண்ட ஏகத்தில் அறுகுநுனி பனியனைய (பா.874), கருவிலுருவாகி (பா.132), படர்பவியின் (பா.53) என்னும் பாடல்களும், மிச்சிர ஏகத்தில் கருப்பந்தங் (பா.86) என்னும் பாடலும் அமைந்துள்ளன.

**175 தாளத்தில் அமைந்துள்ள திருப்புகழ்ப் பாடல்கள்**

சதுரச்சிர திருப்புடை தாளத்தின் திரிச்சிர கதியில் திமிரவுததி (பா.123), தமருமமரு (பா.122), உரமுற்றிரு செப்பென (பா.847), குருதியொழுகி (பா.1310), என்னும் பாடல்கள் உள்ளன. இத்தாளத்தின் கண்டகதியில் நாமேவு குயிலாலு (பா.337), கரியகுழல் (பா.879), நிராமய புராதன (பா.355), என்னும் பாடல்களும், சங்கீரண கதியில் சினத்தவர் முடிக்கும் (பா.308) என்னும் பாடலும் அமைந்துள்ளன.

திரிச்சிர ரூபக தாளத்தின் திரிச்சிர கதியில் இகல வருதிரை பெருகிய (பா.704), என்னும் பாடலும், திரிச்சிர ஏகம் தாளத்தின் கண்டகதியில் தொந்திசரிய (பா.47), என்னும் பாடலும் பாடப்படுகின்றன.

**முடிவுரை**

இவ்வகையில் அடிப்படைச் சந்தம் 11, 13, 15, 17, 21, 30 ஆகிய எழுத்துக்களைக் (அட்சரம்) கொண்ட பாடல்களில் மொத்தம் 214 சந்தங்களும், அதில் 44 தாள அமைப்புக்களும் கிடைக்கப்பெற்றன. இப்பாடல்கள் அனைத்தும் மூன்றுமுறை ஒரே சீராக மடங்கித் தொங்கலில் முடிவுறும் அமைப்புடைய பாடல்களாகும். அவ்வாறின்றி, அடிப்படைச் சந்தம் இல்லாமல் ஓசை அமைப்பு, சீர் அமைப்பு, அளவுகளில் மாறுபாடு கொண்டு தொங்கலில் முடிவுறும் சில பாடல்களும் உண்டு. அவற்றில் மொத்தம் 134 சந்த வேறுபாடுகளும், 68 தாள அமைப்பிலும் உட்படாததால் இவற்றைத் 'திருப்புகழ்த் தாளங்கள்' என்று வகைப்படுத்துகின்றனர். எனவே மொத்தமாக 1250 திருப்புகழ்ப் பாடல்களை ஆய்வு செய்ததில், அதில் 857 சந்தங்களும், அவற்றில் 178 தாள அமைப்புக்களும் கிடைக்கப் பெற்றுள்ளன. எனவே திருப்புகழ் தாளங்களை ஆராயும்போது தாளவல்லுநர்களின் மனம் நெகிழ்கின்றது என்பதில் ஐயமில்லை.

# எட்டுத்தொகை காட்டும் முருகன்

**கு.செ. சரஸ்வதி,**
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை, பச்சையப்பன் மகளிர் கல்லூரி,
காஞ்சிபுரம் - 631 501.

தமிழுலகிற்குக் கிடைத்த முதல் இலக்கண நூலான தொல்காப்பியத்தில் *"சேயோன் மேய மை வரை உலகமும்"* - பொருள்-அகம்-5:2 என்னும் நூற்பாவில் சேயோனாகிய முருகனுக்குரிய இடம் மலையும் மலையைச் சார்ந்த இடமாகிய குறிஞ்சி நிலம் என்பதை அறிய முடிகிறது. தமிழின் தொன்மைக்குச் சான்றாகத் திகழ்வது சங்க இலக்கியமாகும். சங்க இலக்கியம் என்பது பத்துப்பாட்டும், எட்டுத்தொகையுமாகும். இவற்றுள் எட்டுத்தொகையில் தமிழ்க் கடவுள் முருகனின் சிறப்பையும், வடிவங்களையும், குண நலன்களையும் ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**முருகு-முருகன் விளக்கம்**

முருகு என்பது மிகவும் பழமை வாய்ந்த ஒரு தமிழ்ச் சொல்லாகும். இதனாலேயே திருமுருகாற்றுப்படையில் *"அரும்பெறல் மரபின் பெரும்பெயர் முருக"* (269) என நக்கீரனார் குறிப்பிடுகிறார். தமிழில் மெல்லினத்தில் "மு" என்ற எழுத்தும், இடையினத்தில் "ரு" என்ற எழுத்தும், வல்லினத்தில் "கு" என்ற எழுத்தும் சேர்ந்து *"முருகு"* என்று வந்துள்ளதால் முருகனின் தொன்மையை அறிய முடிகிறது. மேலும் "முருகு" என்னும் முதனிலை *"அன்"* என்னும் ஆண்பால் விகுதி சேர்ந்து *"முருகன்"* எனலாயிற்று.

**எட்டுத்தொகையில் முருகன்**
**நற்றிணை**

எட்டுத்தொகையில் முதலாவதாக இடம்பெறும் நற்றிணையில் முருகனின் கடம்ப மாலை, குணநலன், வெறியாட்டுதல் மற்றும் வள்ளியம்மையார் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. இதனை "கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி, வேலவன் வேண்டவெறிமனை வந்தோய், கடவுள் ஆயினும் ஆக, மடவை மன்ற வாழிய முருகனே" (34:8-11) எனும் அடிகளால் கடம்ப மாலையும், வெறியாட்டுதல் நிகழ்வும் குறிப்பிடப்பட்டுள்ளது. "முருகுஉறழ் முன்பொடு கடுஞ்சினம் செருக்கு" (225:1) அடியில் கடுஞ்சினத்தையும், "முருகுபுணர்ந்து இயன்ற வள்ளி போல" (82:4) எனும் அடிகளால் வள்ளியம்மையார் செவ்வேள் முருகனை ஏற்றுக்கொண்ட செய்தியை அறியமுடிகிறது. மேலும் "கிளையொடு மகிழும் குன்றநாடன்"(165:5), "சுனைப்பூக்குற்றும் தொடலை தையும்"(173:1), "நெடுவேட்கு ஏதம் உடைத்தோ?"(173:9) ஆகிய பாடலடிகளால் முருகபக்தியின் செறிவையும், வழிபாட்டு முறையையும் அறியமுடிகிறது.

**குறுந்தொகை**

குறுந்தொகை என்பது தொகைநூல். இது பழம்பாடலால் நல்ல குறுந்தொகை எனப் போற்றப்படுகிறது. இவ்விலக்கியத்தில் பாரதம் பாடிய பெருந்தேவனார் கடவுள் வாழ்த்துப் பாடலில் முருகன் காவல் தெய்வமாக இருந்ததையும், சேவற் கொடியினையும் "நெஞ்சுபக எறிந்த அங்சுடர் நெடுவேல், சேவலங் கொடியோன் காப்ப, ஏம வைகல் எய்தின்றால் உலகே"- எனும் அடிகளால் அறியமுடிகிறது. மேலும் பதுமனை அழித்ததை "கழல்தொடிச் சேஎய் குன்றம்" (1:3) எனும் திப்புத்தோளார் பாடலடியால் அறியமுடிகிறது.

**ஐங்குறுநூறு**

சங்க இலக்கியத்தில் பத்துப்பத்தாக பாடல்கள் அமைந்த அகநூல் ஐங்குறுநூறு. குன்றக் குறவன் குறிஞ்சி நிலத்திற்குரிய கடவுள் ஆவார். இதில் குறிஞ்சித் திணைப் பாடல் பாடிய கபிலர் குன்றக் குறவன் பத்தில் "குன்றக் குறவன் ஆர்ப்பின் எழிலி (251:1) எனும் அடிகளால் முருகன் சுட்டப்பட்டுள்ளான். மேலும் குன்றக் குறவன் பத்தில் வள்ளியம்மையாரையும், முருகவேளை வழிபட்ட முறையையும், சூரர மகளிரைக் குறித்தும் "ஆண்டகை விறல்வேள் அல்லணிவள்" (250:4), "மலையுறை கடவுட்குலமுதல் வழுத்தித்" (259:3, 257:1-2, 255:1-2) ஆகிய பாடலடிகளின் மூலம் அறியலாம்.

**பதிற்றுப்பத்து**

பத்துப்பத்தாக நூறு பாடல்களைக் கொண்ட புற இலக்கியம் பதிற்றுப்பத்தாகும். இது சேர அரசர்களின் வரலாற்றைக் கூறும் இலக்கியமாகும். இதில் முருகப்பெருமானின் கடுஞ்சினத் தோற்றத்தை "முருகு உடன்று கறுத்த கலிஅழி மூதூர் (26-12), "கடம்புமுதல் தடித்த கடுஞ்சின வேந்தே" (12:3) எனவும், "சூருடை முழுமுதல் தடிந்த பேர்இசை, கடுஞ்சின வீறல் வேள் களிறுஊர்ந் தாங்கு (11:5-6) எனும் அடிகளால் முருகன் பதுமனை அழித்த வரலாறும், முருகனின் யானை ஊர்தியையும் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

**பரிபாடல்**

பரிபாடல் என்னும் பாவினத்தால் ஆகிய பாக்களின் தொகுதியே பரிபாடலாகும். இப்பாக்கள் பண்ணமைதியோடும், பக்தியோடும் மனமுருகிப் பாடப்படும் பாட்டு என்பதால் "ஓங்கு" எனும் அடைமொழியால் அறிய முடிகிறது. இந்நூல் சங்க இலக்கியத்தில் பாடலால் பெயர் பெற்றது. இஃது பரிபாட்டு என்றும் அழைக்கப்படுகிறது. தற்போது கிடைக்கப்பட்டுள்ள 22 பாடல்களில் (5,8,9,14,17,18,19,21) ஆகிய **எட்டு** பாடல்கள் **செவ்வேள்** பற்றியதாகும். இப்பரிபாடலில் முருகனது சிறப்பு முருகனது அழகு பன்னிரு தோள்கள், செம்மை நிறம், கடம்ப மாலை, வேலாயுதம், மயில் வாகனம், யானை வாகனம், குன்றம் அழித்தல், மால் மருகனாய் திகழும் சிறப்பு, வள்ளியம்மை, தெய்வயானை பற்றிய குறிப்புகள் திருப்பரங்குன்றம் மாண்பு மற்றும் வள்ளி தெய்வயானை ஊடல் பற்றி மிகச் சிறப்புடன் அமையப் பெற்றுள்ளன.

சிவபெருமானுக்கு மகனான முருகனைப் பற்றிய சிறப்புகள் “காஅய் கடவுட் சேஎய் செவ்வேள்” (5:13), “மணிமிடற்று அண்ணற்கு மதியாரல் பிறந்தோய் நீ “ (9:7) மற்றும் (8:127-128, 5:54) ஆகிய பாடலடிகளால் அறிய முடிகிறது. மேலும் திருமுருகனின் வீரச்செயலையும், வடிவத்தையும் கடுவன் இளவெயினனார் “குருகொடு பெயர் பெற்ற மால்வரை உடைத்து (5:9) எனவும் “மூ இரு கயந்தலை முந்நான்கு முழவுத் தோள” (5:11) எனவும் (14:21, 21:67) ஆகிய பாடலடிகளாலும் முருகனின் வடிவம் குறித்து சுட்டப்பட்டுள்ளன.

நெடியோன் எனப்படும் முருகனின் அழகை நம்பண்ணனார் “மடுமணி யானை நெடியாய் நீமேய” (19:28), மற்றும் “நெடியாய் நின் குன்றின் மிசை”- 19:85 எனும் பாடலடிகளால் சிறப்புடன் எடுத்துக் கூறியுள்ளார். மேலும் செவ்வேள் முருகன் என்பதை கடுவன் இளவெயினனார் “ஞாயிற்று ஏர் நிறத்தகை நளினத்துப் பிறவியை, காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்” (5:12-13) எனவும் நப்பண்ணனார் “உருவும் உருவத்தீ ஒத்தி முகனும், விரிகதிர் முற்றா விரிசுடர் ஏத்தி”-19:99-100 ஆகிய பாடலடிகளால் சிறப்பித்துக் காட்டியுள்ளனர்.

முருகன் கடம்பமாலை அணிந்திருந்த செய்தியினை “உருள்-இணர்க் கடம்பின் ஒலிதா ரோயே” (5:81), “கடம்பு அமர் செல்வன் கடிநகர் பேண” (8:126) மற்றும் நல்லச்சுதனார் “உருள் இணர்க் கடம்பின் நெடுவேட்கு எடுத்த”- (21:50) எனும் பாடலடிகளால் அறியலாகிறது. மேலும் முருகனின் முக்கிய ஆயுதமாகக் கூறப்படும் வேலாயுதத்தின் சிறப்பினை “மாய அவுணர் மருங்கு அறத் தபுத்தவேல்” (5:7), “வெண்சுடர் வேல்வேள” (18:26, 9:68, 9:70, 14:18, 18:14, 18:54, 19:36, 21:8, 21:9, 21:66, 22:66, 19:97-98) ஆகிய பாடலடிகளாலும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன.

முருகனின் மயில் ஊர்தியை நல்லந்துவனார் “விறல் வெய்யோன் ஊர்மயில் வேல்நிழல் நோக்கி” (8:67), குன்றம் பூதனார் “வெண்சுடர் வேல்வேள் விரைமயில் மேல் ஞாயிறு-நின்” (18:26) ஆகிய பாடலடிகளால் சுட்டியுள்ளனர். இதேபோன்று யானை வாகனத்தை “படுமணி யானை நெடியாய் நீ மேய (19:28), எனவும் நல்லழிசியார் தம் பாடலில் “பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ (17:49) எனவும்(21:1-2, 5:2 ஆகிய பாடலடிகளாலும் அறியமுடிகிறது. மேலும் முருகன் மயில் கொடியை கையில் பிடித்திருந்ததை நல்லழிசியார் “மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடி” (17:48) எனும் பாடலடிகளில் சுட்டியுள்ளார்.

முருகப் பெருமான் பதுமனை அழித்த செய்தியினை கடுவன் இளவெயினனார் “பாய்இரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச்: சேய்உயர் பிணிமுகம் ஊர்ந்து அமர்உழக்கி: தீஅழல் துவைப்பத் திரிய விட்டெறிந்து: நோயுடை நுடங்கு சூர் மாமுதல் தடிந்து” (5:1-4) எனவும் குன்றம் அழித்த செய்தியினை “குருகொடு பெயர் பெற்ற மால்வரை உடைத்து: மலைஆற்றுப் படுத்த மூவிரு கயந்தலை” (5:9-10) எனும் பாடலடிகளால் அறியமுடிகிறது.

திருமாலின் மருமகனான முருகப் பெருமான் திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியதை "சோமன நிலையது துணிபரங் குன்றத்து: மாஅல்மருகன் மாட மருங்கு'' (19:56-57) எனும் அடிகளாலும் தெய்வயானை அம்மையார் குறித்து குன்றம் பூதனார் "ஐஇரு நூற்று மெய்ந்நயனத் தவன்மகள் மலர் உண்கண்'' (9:9) எனும் பாடலடிகளாலும் குறிப்பிட்டுள்ளனர். மேலும் வள்ளியம்மையார் குறித்து கேசவனார் "அறுமுகத்து ஆறுஇரு தோளால் வென்றி, நறுமலர் வள்ளிப் பூநயந் தாயே'' (14:21-22) மற்றும் "குறிப்பிணாக் கொடியைக் கூடியோய் வாழ்த்துச்" (19-95) என வரும் அடிகளாலும் அறிய முடிகிறது.

முருகப் பெருமானின் ஊடல் நிகழ்வுகளை நல்லச்சுதனார் "இரங்கு முரசினான் குன்று" (21:38) குன்றம் பூதனார் "கடுஞ்சூர் மாமுதல் தடிந்து அறுத்தவேல்''-9:70 எனும் பாடலடிகளாலும் (9:8, 19:17, 19:56, 6:94-95, 8:11) ஆகிய பாடலடிகளாலும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன.

**கலித்தொகை**

"கற்றறிந்தோர் ஏத்தும் கலி" எனப் புகழப்படும் நூலாகும். இது செய்யுள் அமைப்பால் பெயர் பெற்றவை. இத்தகு சிறப்புவாய்ந்த கலித்தொகையில் முருகனின் செம்மை நிறம், குடிகொண்டுள்ள இடம் மற்றும் வேலாயுதத்தின் சிறப்புகள் சிறப்புடன் குறிப்பிடப்பட்டுள்ளன. முல்லைக் கலி பாடிய சோழன் நல்லுருத்திரன் "வேல்வல்லான் நிறனே போல் வெருவந்த சேயும் ஆங்குஅப்'' (104:14) மற்றும் "வாலிது கிளர்ந்த வெண்காற் சேயும்'' (105:18) எனும் பாடலடிகளால் முருகனின் செம்மையான நிறத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

பாலைக் கலி ஆசிரியர் பெருங்கடுங்கோன் "ஒன்னாதார்க் கடந்தடூஉம் உரவுநீர் மாகொன்ற: வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்'' (27:15-16) என்றும் குறிஞ்சிக் கலியில் கபிலர் "வரைஉறை தெய்வம் உவப்ப உவந்து'' (39:27) என்றும் மருதன் இளநாகனார் மருதக் கலியில் "சூர்கொன்ற செவ்வேலான்" (93:26-27) எனவரும் பாடலடிகளால் குமரன் குன்றின்மேல் குடிகொண்டிருக்கும் பாங்கினை எடுத்துக்காட்டியுள்ளனர்.

**அகநானூறு**

அகவொழுக்கங்களைப் பற்றிய நானூறு பாடல்களைக் கொண்ட இலக்கியமாதலால் அகநானூறு எனப்பட்டது. இது நெடுந்தொகை எனவும் அழைக்கப்படுகிறது. இதில் முருகன் கடம்ப மாலை அணிந்துள்ள திறன், நெடியோன் எனக் கூறப்பட்டுள்ள இடங்கள், கோபத்துடன் சூரபத்மனை அழித்த திறன் மற்றும் பொதிகை மலைச் சிறப்புகள் பற்றி கூறப்பட்டுள்ளன. மணிமிடைப் பவளத்தில் பரணர் நெடியோன் எனப்படும் முருகனது வாகனம், கொடி மற்றும் பதுமனை அழித்தமையை "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய: ஏடியா விழுவின் நெடியோன் குன்றத்து (149:15-16) எனும் அடிகளால்

பாடியுள்ளார்.மேலும் முருகனது கடம்பமாலை அணிந்துள்ளதை "உருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇ: கடம்பும் களிறும் பாடி நுடங்குபு" (138:10-11), என எழுஉப் பன்றிநாகன் குமாரனாரும், "களம்நன்கு இழைத்து கண்ணி சூட்டி" (22:8) என காமக்கண்ணியாரும், "நெடுவேள் மார்பின் ஆரம்போல"-(120:1) என நக்கீரனாரும் நயம்படக் கூறியுள்ளனர்.

முருகனின் கோபத்தையும், குணநலத்தையும் "புலிக்கணத் தன்ன நாய் தொடர் விட்டு: முருகன் அன்ன சீற்றத்துக் கடுந்திறல்" (158:15-16) என்று கபிலரும் "முருகுஉறழ் முன்பொடு பொருதுகளம் சிவப்ப" (181:6) என்று பரணரும் தங்களது பாடல்வரிகளால் சிறப்பித்துக் கூறியுள்ளனர்.மேலும் மதுரை மருதன் இளநாகனார் "சூர்மருங்கு அறுத்த சுடர்இலை நெடுவேல்: சினம்மிகு முருகன் தண்பரங் குன்றத்து" (59:10-11) எனும் அடிக்ளால் சூரபதுமனை அழித்த செய்தியை சிறப்பித்துக் கூறியுள்ளார்.

**புறநானூறு**

புறவொழுக்கங்களைப் பற்றிய நானூறு பாடல்களைக் கொண்ட இலக்கியமாதலால் புறநானூறு என பெயர் பெற்றது. இவ்விலக்கியத்தில் காணலாகும் முருகனது சிறப்புக்களையும், வீரச் சிறப்பு மற்றும் ஊர்திகள் குறித்து சிறப்புடன் கூறப்பட்டுள்ளன. முருகன் கடம்ப மாலை அணிந்திருந்ததை "கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியில்: சூர்நவை முருகன் சுற்றத்து அன்ன நின்" (23:3-4) என கல்லாடனார் சிறப்பித்துள்ளார்.

முருகனின் பண்பையும், குணத்தையும் "பிணிமுக ஊர்தி ஒண்செய் யோனும்-என (56:9), என்று நக்கீரனாரும் "முருகற் சீற்றத்து உருகெழு குருசில்" (16:13) என்று பண்டாரங் கண்ணாரும் "அணங்குடை முருகன் கோட்டத்துக்" (299:6) என்று பொன்முடியாரும் தமது பாடலடிகளால் சிறப்பித்துக் காட்டியுள்ளனர். மேலும் முருகன் முன்னிய முடிக்கும் திறன் கொண்டவன் என்பதை "முருகுஒத் தீயே முன்னியது முடித்தலின் (56:14) எனும் அடிகளால் நக்கீரனார் எடுத்துக் காட்டியுள்ளார்.

**முடிவுரை**

தமிழர்களின் முதன்மைக் கடவுளாகக் கருதப்படும் முருக வழிபாடு பண்டைக் காலம் முதல் நிகழ்ந்து வருகின்றது. பண்டைத் தமிழர்கள் முருக வழிபாட்டினை எவ்வாறு மேற்கொண்டிருந்தனர் என்பதை அறியும் கருவூலமாக சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன. முருகன் குறிஞ்சிக் கடவுள் ஆதலால் முருகப்பெருமானின் கோயில்கள் பெரும்பாலும் மலைப் பகுதிகளிலேயே காணப்படுகிறது. அவ்வகையில் முருகன் குடிகொண்டுள்ள இடங்களின் சிறப்பு, பன்னிரு கரங்கள், ஆறு திருமுகங்கள் சூரபதுமனை அழித்த மாண்பு, தெய்வயானை, வள்ளியம்மை மாண்பு, சேவல்கொடி, வேலாயுதத்தின் சிறப்பு, முருகனின் ஊர்தியான யானை, மயில் மற்றும் முருகு வழிபாட்டு நெறிமுறைகள் குறித்தும் சங்க இலக்கியமான எட்டுத்தொகையின் வாயிலாக அறியமுடிகிறது.

# கஜபூசை சுந்தரசுவாமிகளின் கந்தவேள் பதிகங்கள்

**கு.சிவலிங்கம்**
தலைமையாசிரியர்,
தவ.இரா.அ.மேல்நிலைப்பள்ளி,
கோவை - 49

*எந்தையருட் சுந்தரனார், எல்லைஇலாக் கல்ஃயினார்*
*சந்தவண்ணப் பாக்கள் தரும்வள்ளல் - கந்தனருள்*
*கொண்டு படைத்திட்ட தமிழமுதம்*

எனச் சுந்தரர் சொற்றமிழ் பற்றிச் சிரவை ஆதீனக் கவிஞர் ப.வெ..நா. அவர்கள் குறிப்பிடுவார். சிரவை ஆதீனத்தின் மூன்றாம் குருமகா சந்நிதானமாக இருந்து மிகச் சிறப்பாக அருளாட்சி செய்தவர் தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் .108 ஆண் யானைகளை வைத்துக் கஜபூசை செய்து உலக சாதனை படைத்தவர் கொங்குநாட்டுச் சேக்கிழார், அலங்காரச் சக்கரவர்த்தி எனும் பல பெருமைக்குரியவர், முதன்முதலில் தமிழில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவை நடத்தி வெற்றி கண்டவர். ஆயிரக் கணக்கான தமிழ்த் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவினை நடத்திய சிறப்பிற்குரியவர்.

**சிற்றிலக்கியங்கள்**

"தமிழ் இலக்கிய வகைகளில் சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு எனக் கூறப்பட்டு வந்தது. அது பாட்டியல் நூல்களிலேயே எல்லை கடந்து இருநூற்றூக்கும் மேல் வந்துள்ளது" எனத் தமிழ் இலக்கிய வகையும் வடிவும் நூலில் முனைவர் ச.வே.சு. அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இன்றோ முந்நூறுக்கும் மேற்பட்ட சிற்றிலக்கியங்கள் வரை வளர்ந்துள்ளன. அவற்றில் "பதிகம்" எனும் வகையும் ஒன்றாகும்.

**பதிக இலக்கணம்**

பத்துப்பாடல் கொண்டது "பதிகம்" எனப் பொது இலக்கணமாகும். ஆனால் பதினொரு பாடல்களாக தேவாரப் பதிகங்கள் அமைந்துள்ளன. திருப்புகழ் யாப்பில் பதிகம் பாடும் போது மொத்தம் பன்னிரண்டு செய்யுட்களை அமைப்பது வண்ணச்சரபர் வழக்கம் அதையே சிரவை ஆதீன கர்த்தர்கள் பின்பற்றுகின்றனர். பதிகம் அதன் யாப்பை நோக்கி வெண்பாப் பதிகம், சந்தப் பதிகம், வண்ணப்பதிகம் எனப் பலவிதமாகக் குறிக்கப்படும். பாட்டியல்கள் கூறும் பல சிற்றிலக்கியங்கள் அமைப்பு முறையில் பதிகங்களே என்பது குறிப்பிடத்தக்கது.

**கஜபூசை சுந்தர சுவாமிகள் பாடிய பதிகங்கள்**

சுவாமிகள் சிவன், திருமால்,சக்தி,விநாயகன்,முருகன்,சூரியன் ஆகிய அறுசமயக் கடவுளர் மீதும் பதிகம் பாடியுள்ளார். அது மட்டுல்லாமல் கருப்பராயன், பேச்சியம்மாள், அண்ணன்மார், முனியப்பன், வீரமாச்சியம்மை

ஆகிய காவல் தெய்வங்களுக்கும், குல தெய்வமாக வழிபடப்படும் கடவுள்களுக்கும் சுவாமிகள் பதிகங்கள் பாடியுள்ளார் சுவாமிகளால் பாடப்பட்டுள்ள பதிகங்கள் ஐம்பத்து மூன்றையும் தொகுத்துச் சிரவையாதீனம் 2010 ஆம் ஆண்டில் சுந்தரர் சொற்றமிழ் என்ற பெயரில் வெளியிட்டுள்ளது அதில் இடம் பெற்றுள்ள முருகப்பெருமான் பதிகங்களைப் பற்றிச் சிந்திப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் இரத்தினாசலம் குமரக்கடவுள் பதிகம், கொங்கணகிரி கந்தசாமிப் பெருமான் பதிகம், சித்தோடு பாலதண்டபாணிக்கடவுள் பதிகம், சிரவை குமரகுருபரக் கடவுள் வாரப்பதிகம், பெரிய நாயக்கன்பாளையம் கல்யாண சுப்பிரமணியர் பதிகம், மருதமலை தண்டபாணிக்கடவுள் பதிகம் என முருகப் பெருமானைப் போற்றி எட்டு பதிகங்களை இயற்றியுள்ளார். அவற்றுள் கூறப்பட்டுள்ள செய்திகள் இங்கு தொகுத்து நோக்கப்படுகின்றன.

**முருகப்பெருமானின் தோற்றம்**

தேவர்களின் துயரம் போக்க, சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து அனற்பிழம்பாக உதித்தவன் முருகப்பெருமான். "ஒருதிரு முருகன் வந்து ஆங்கு உதித்தனன் உலகம் உய்ய" எனும் கச்சியப்பரின் கந்தபுராண வரலாற்றைச் சுவாமிகள்.

*"ஆரணம் பரவும் சிவபிரான் விழியில் அவதரித்து"* (பா.எண்.289)

எனக் கொங்கணகிரிக் கந்தசாமிப் பெருமான் பதிகத்திலும்

*"நேர்த்திகை யார்சிவன் நெற்றி விழிவிழி நேர் உதித்தே*
*கார்த்திகை யுற்ற சிரவைக் குமர சிகாமணியே!"* (பா.எண்.465)

எனக் குமரகுருபரக் கடவுள் மாதப்பதிகத்திலும்

*"அங்கட் பரமன் விழிவழித்தோன்றி"* (பா.எண்.471)

எனச் சிரவையாதீனம் குமர குருபரக் கடவுள் வாரப்பதிகத்திலும்

*'இந்தணி சடையான் கனல்க் கணில் பொறியாய்*
*இலங்கிஆ றென அலர் முகமும்*
*மைந்தவிர் புயங்கள் பன்னிரண்டோடு வந்தனை'* (பா.எண்.613)

எனப் பெரியநாயக்கன் பாளையம் கல்யாண சுப்பிரமணியர் பதிகத்திலும் குறிப்பிட்டுள்ளார்.

**முருகனின் அழகு**

முருகு என்றாலே அழகு, அழகன் என்றால் முருகன், கிரண வதனம் பேர் ஒளி தோய் திங்கள் வதனம், விரித்த கதிர்முகம், திருவிளங்கு முகமதி, அழகுடையபெருமானின் அழகைப்பற்றி அருளாளர்கள் பாடிப் பரவியிருக்கின்றனர்

அழகு திருத்தணி மலையில் நடித்தருள் பெருமானே" என அருணகிரியார் அருளியுள்ளார். நம் சுவாமிகள்

*"திருவளர்தரு செந்தாமரை முகமும்"* (பா.எண்.56)

என இரத்தினாசலம் குமரக்கடவுள் பதிகத்திலும்.

*"ஆயிரம் மன்மதன் உருவம் அனையதிரு முகமும்"* (பா.எண்.577)
எனப் பூராண்டம் பாளையம் பதிகத்திலும்,
*"செந்தகை வதன பங்கய மலரும்"* (பா.எண்.739)
என மேட்டுப்பாளையம் பாலதண்டபாணி பதிகத்திலும் பாடியுள்ளார்.

*திருவருள் விழிகளும்,* (பா.எண்.56)

*திருவளர் சீர் பொழிவிழியும்* (பா.எண்.398)

என முருகனின் விழி அழகையும் பாடியுள்ளார். முருகவேளின் திருப்பதங்கள் அடியார்களின் வினைகளை அறுத்து முத்திப்பேறு தரவல்லவை என்பதை,

*கந்தம் சூர் கடம்பு புனைதடமார்பும்* (பா.எண்.739)

*ஏற்றிசைக் கடலிடை எழுசுடர் போல*
*எழில் மயில் மிசைவரும் அழகிய குகனே* (பா.எண்.739)

என முழுதும் அழகிய குமரனைப் பாடி மகிழ்வார்.

**கருணைக்கடல் கந்தவேள்**

*"முத்தமிழால் வைதாரையும் வாழவைப்போன்"*

என அருணகிரிநாதர் கந்தனின் கருணையைக் கூறுவார்.

*"வைதவர்க்கும் தேடிய நல்வாழ்வருளுவாய்"* (பா.எண்.57)

எனக் கஜபூசைச் சுவாமிகள் அதை எதிரொலிப்பார். அருணகிரிநாதருக்கு அருள்புரிந்ததைப் போல் தமக்கும் அருள வேண்டும் என

*"பாவடி ஏட்டில்ப் பொருந்திடு பாத*
*பங்கயம் எங்களுக்கு அருள்வாய்* (பா.எண்.285)

எனக் கொங்கணகிரிக் கந்தசாமிப் பெருமான் பதிகத்தில் வேண்டுவார்

நாட்டுறும் ஆறு வீட்டினும் சென்று
நலம் தரும் ஆறெழுத் தோதி
பாட்டிசை பாடி, ஆறதாம் கிழமை
பகரும் ஆறாம் திதி, அறுமீன்
கூட்டிடு கிருத்தி கைத்திரு நாளில்
கூடியே வழிபடும் தொண்டர் (பா.எண்.291)

எனக் கிருத்திகை வழிபாட்டின் மூலம் தொண்டர்களா?க்கு முருகன் அருள் வழங்கும் கருணையைச் சுவாமிகள் கூறியுள்ளார்.

*ஆறுமுகம் புயம் ஈராறுடன் பிறவும்*
*அமையும் நின் பேர் உருக் கருதப்*
*பெறுதவம் இல்லேன், தண்டுவேல் அணிந்து*
*பிறங்கும்நின் தெரிசனம் தருவாய்*
*குறுமுனி பரவத் தமிழ் இலக் கணம்முன்*
*கூறிய குருபர! குகனே!* (பா.எண்.707)

எனத் தண்டபானிக் கடவுள் பதிகத்திலும்

*முந்துறும் பிறப்பில் செய்தநல் வினையின்*
*முதிர்வினால் இப்பிறப் பிடையே*
*கொந்துறு மலரால் பூசனை செயவும்*
*குளிர்துதி செயவும் வாய்த்ததெனா*
*இந்துறு சடையாற் போற்றுரசம் பந்தர்*
*இசைத்தமாண் பெனச்குற அருள்வாய்* (பா.எண்.711)

எனும் பாடலில்,

என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே இரும் கடல் வையத்து

*"முன்னம் நீபுரி நல்வினைப் பயனிடை .....*
*வலஞ்சுழி வாணனை வாயாரப்*
*பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும் வழிபடும் அதனாலே"*

என்னும் திருஞானசம்பந்தர் தேவாரத்தை நினைத்து அருள் விழைகிறார்.

*"அருணை யூர்ப் புலவன் அகத்திய முனிவன்*
*ஐம்முகச் சிவபிரான் முதலாப்*
*பெருமை ஆர் மேலோர்க் கருள் உபதேசம்*
*பேசலால்ச் சிறப்பினை வினையேன்*
*இருமைசேர் வினைநீங் கிட உபே*
*தேசம் இசைத்தலே மிகப்புகழ்"* (பா.எண்.741)

எனும்பாடலில் அகத்தியருக்கும், அருணகிரிநாதருக்கும் அருள்புரிந்ததை விட கடையனாகிய எனக்கருள் புரிவதே உமக்குப் புகழைத்தரும் என சுவாமிகள் கூறும் விதம் சிறப்புடையதாகும்.

**வீரம்**

போரில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன் முருகப்பெருமான் தேவசேனாதிபதியாக விளங்கியவர்.

*"செருவில் ஒருவ! பொரு விறல் மள்ள!"*

எனும் பாடல்வரி வீரத்தை குறிப்பிடும்,பகவத்கீதையில் உலகில் உயர்ந்த ஒவ்வொன்றிலும் நான் இருக்கின்றேன் எனக் கூறுகின்ற பொழுது தளபதிகளுள் முருகனாக இருக்கின்றேன் எனக் கூறுவார்.

முருகப்பெருமானின் அவதார நொக்கமே சூரபதுமனை வதம் செய்வது தான்.

*பகைத்த சூரன் அ நாள் ஒரு*
*கடற்கண் மாமரம் சாடிய*
*பதத்தில் வேல்கொடு சாடிய திறலோனே !* (பா.எண்.68)

என இத்தினாசலக் குமரக்கடவுள் பதிகத்திலும்

*"வெற்பகம் பிளந்த சக்திவேல் அணிந்து*
*வெற்பெலாம் விளங்கும் முருகா !"* (பா.எண்.288)

எனவும்,

*புத்தேளிர் வாழ்வு காண அன்று மாவைச் செறும்வீரா* (பா.எண்.409)

எனவும்

*சமரினில்ப் பெரிய தானவச்சூரன்*
*சலதியில் மாமரத்து உருவாய்*
*அமரர் கண்டஞ்ச நின்றிடும் போதில்*
*அயில் விடுத் துப்பிளந் தருளும்*
*குமரனே! அறுமுகப் பெருமானே!* (பா.எண்.615)

எனவும், சூரனைச் சம்ஹாரம் செய்த வீரத் திருவிளையாடலைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

பாட்டுடைத் தலைவராகிய கந்தவேள் சிறந்தவர்கள் அனைவரிலும் சிறந்த பரம்போருள் அவரைப் பரவிடும் கஜபூசைச் சுவாமிகளோ செந்தமிழ் வல்ல அடியார்களுள் சிறந்த பத்தர் இந்தச் சுவாமிகளின் இனிய நற்பதிகங்களை மெய்யன்பொடு பாடிப் பரவும் அனைவரும் இகபர சௌபாக்கியம் பெற்று நீடுழி வாழ்வர் என்பது திண்ணம்.

# பரதநாட்டிய உருப்படிகளில் முருகன்

முனைவர் **கே. சிவலோகநாதன்,**
பரதநாட்டிய உதவிப்பேராசியர்,
இசைத்துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
சிதம்பரம் - 2

மனித இனம் தோன்றிய காலத்திலிருந்தே ஆடலும் பாடலும் இருந்து வருகிறது. மனித நாகரீகம் வளர வளர ஆடலும் மாற்றம் கண்டது. பண்டைய கால மக்கள் அறுவடைக் காலம் முடிந்ததும் நிலாக் காலங்களில் ஒன்றாக கூடி ஆடிப்பாடி மகிழ்ந்தனர். அந்த ஆடலே நாளடைவில் செவ்வியல் நடனமாக மாற்றம் கண்டது. அன்று முதல் இன்றுவரை நடனக்கலை பல மாற்றங்களைக் கண்டு புதிய புதிய பரிணாமத்தோடு வளர்ச்சியடைந்து கொண்டே வருகிறது. காலந்தோறும் நாட்டிய உருப்படிகள் மாற்றம் கண்டாலும் அன்று முதல் இன்று வரை நாட்டிய உருப்படிகளில் முருகனுக்கென்று ஒரு சிறப்பிடம் இருந்து வருகிறது. இன்றைய நாட்டிய உருப்படிகளில் முருகனைப் பற்றியுள்ள தகவல்களைத் தெரியப்படுத்தும் நோக்கில் இந்த ஆய்வுக்கட்டுரை அமைகிறது.

**முருகனின் தோற்றம்**

பரிபாடலில் பல பாடல்கள் முருகனின் தோற்றம் பற்றிக் கூறப்பட்டாலும் பாயிரும் பனிக்கடல் எனத் தொடங்கும் ஐந்தாம் பாடலில் முருகன் பிறப்பு குறித்து விரிவாகக் கூறப்பட்டுள்ளது. பரமன் முப்புரம் எரித்த பிறகு உமையை மணந்த நாளில் இந்திரனின் வேண்டுகோளுக்கு இணங்கி உமையுடன் புணர்ச்சியில் ஈடுபட அதில் உண்டான கருவை அழிக்கும் பொருட்டு அதைப் பல துண்டுகளாக்கி இந்திரனிடம் கொடுக்க அதை அவன் சப்த ரிஷிகளிடம் கொடுக்கிறான். அதை தம் மனைவியர் உட்கொண்டு கரு தாங்கினால் கற்புடமைக்குப் பொருந்தாது என்று எண்ணி அவர்கள் அதை வேள்வித் தீயிட்டனர். மூவகை தீயினாலும் கொள்ளப்பட்ட அவிப்பரித்துடன் சேர்ந்த எச்சிலாகிய அவற்றை வடதிசையில் உறையும் ஏழு மகளிருள் அருந்ததி தவிர மற்ற கார்த்திகை பெண்கள் அருவரும் அப்போதே உண்டு கருத்தாங்கினர். சரவணம் என்ற பொய்கையில் ஆறு மகளிர் முருகனை ஒருசேரப் பெற்றெடுத்தனர் என்று தொல்லோர் கூறுவர்.

*"மனைவியர் நிறைவயின் வசி தடி சமைப்பின் சாலார்: தனே தரிக்க என அவர் ஆவி உடன் பெய்தோரே அழல் வேட்டு"* (பாடல் 39)

*"முத்திப் பேணிய மன் எச்சில் வடவாயின் உறை ஏழு மகளிருள் கடவுள் ஒரு மீன் சாலினி ஒழிய அறுவர் மறையோரும் அந்நிலை"*
- அயின்றனர் (பாடல் - 45)

*"மறுமிடற்று அண்ணற்கு மாசிலோள் தந்த"* (பரி 8-127)
*"மணிமிடற்று அண்ணற்கு மதிஆரல் பிறந்தோய் நீ"* (பரி - 9-7)
*"காஆய் கடவுட் சேய்"* (பரி - 5-13)

திருமுருகாற்றுப்படையிலும் முருகன் பிறப்பு கூறப்பட்டுள்ளது

*"அறுவேறு வகையின் அஞ்சு வர மண்டி"* (திருமுருகு 58)

*"நெடும் பெருஞ்சிமயத்து நீலப்பைஞ்சுனை ஐவருள் ஒருவன்*
*அங்கை ஏற்ப அறுவர் பயந்த ஆறமர் செல்வ"*(திருமுருகு 253-255)

மேலும் பல பாடல்கள் முருகனின் தோற்றம், வளர்ச்சி, வீரம், அழகு என்று வர்ணிக்கிறது.

**அகராதியில் முருகன் பெயர்கள்**

இறையோன், குமரன், வெறியாட்டாளன், அரன்மகன், ஆறுமுகன், ஆசான், அழகன், கந்தன், கடம்பன், கார்த்திகேயன், கார்மயில் வாகனன், குகன், குழகன், சிகிவாகனன், சிலம்பன், சுரேசன், சுந்தவடிவன், செட்டி, செவ்வேல், சேந்தன், சேய், தாருகார், தெய்வானை மணாளன், காந்தன், தேவசேனாதிபதி, பாவதி, மஞ்ஞையூர்தி, இடும்பன், இளையவேல், மாயோன் மருகன், வள்ளி மணாளன், வாகுலேயன், விகாசன், வேலன், வேலிறைவன், வேள், முருகு, அழகு, பாலசுப்பிரமணியக்கடவுள், தண்டபாணி, தணிகாசலம், தமிழன், கோமகன், வீரகேசன், உத்தண்டன், தேவகுமரன் என்று ஒரு நீண்ட பட்டியலிடுகிறது (அகராதி, விகடன் வெளியீடு, பக.1990-1991).

**பரதநாட்டிய உருப்படிகள்**

காலந்தோறும் நாட்டிய உருப்படிகள் மாற்றம் கண்டு கொண்டே வந்து மராட்டிய மன்னர்களின் இடைக்காலத்தில்தான் நிலையான ஒரு முடிவுக்கு வந்தது. இந்த முடிவை உருவாக்கியவர்கள் மராட்டிய மன்னர்களின் அரச சபை நட்டுவனார்களாக இருந்த தஞ்சை நால்வர்களான சின்னையா, பொன்னையா, சிவானந்தம், வடிவேலு ஆகும். நாயக்க மன்னர்களின் காலத்தில் உருவாக்கப்பட்ட நிருபணம் என்ற அமைப்பைக் காலத்திற்கேற்ப உருப்படிகளைக் குறைத்து மார்க்கம் என்ற அமைப்பை உருவாக்கினார்கள். மார்க்கத்தின் பட்டியல் அலாரிப்பு, ஜதிஸ்வரம், கவித்துவம், சப்தம், பதவர்ணம், பதம், கீர்த்தணம், தில்லானா இந்த உருப்படிகள் அனைத்தும் நாயக்கர் கால நிருபணத்தில் இருந்ததுதான். பதினெட்டு முதல் இருபத்தியிரண்டு உருப்படிகளைக் கொண்ட நிருபணத்தை எட்டு முதல் பத்து உருப்படியாகக் குறைத்தனர். தஞ்சை நால்வர்கள் உருவாக்கிய மார்க்கம் இன்று வரை கடைபிடிக்கப்படுகிறதா? என்றால் ஆம் இல்லை என இரண்டு பதிலையும் சொல்ல வேண்டியுள்ளது.

1. நாட்டியக் கச்சேரிகளில் மார்க்கம் ஆடப்படுவதில்லை.
2. அரங்கேற்றத்தில் மட்டுமே ஓரளவு பயன்படுத்தப்படுகிறது.

காரணம் என்னவென்று பார்த்தால் மூன்று அல்லது நான்கு மணி நேரமாக இருந்த கச்சேரி இரண்டு மணி நேரமாக குறைந்து போனதுதான்.

**அலாரிப்பு**

கற்றுக் கொடுக்கும் போதும் சரி மேடை நிகழ்வுகளிலும் சரி முதலாவது உருப்படி இதுதான். இது ஒரு தேகப் பயிற்சி உருப்படியும் கூட. தஞ்சை நாயக்க மன்னர்கள் காலத்தில் வீரபத்ர சாஸ்திரி மற்றும் அவரது சீடர் வெங்கட்ராம சாஸ்திரி ஆகியோர்களால் உருவாக்கப்பட்டது. ஒன்பது விதமான அலாரிப்பை இயற்றி மேடையில் தம் சீடர்களை ஆட வைத்தார் என்று நாயக்கர் கால நூல்கள் பலவற்றில் பதிவாகியுள்ளது. இவர்கள் காலத்திற்குப் பின் வந்த தஞ்சை நால்வர் ஐந்து விதமான அலாரிப்பைக் கற்றுக் கொடுத்து வந்தனர். தற்கால நடனக் கலைஞரும் குருவுமான மதுரை முரளிதரன் என்பவர் முப்பத்தி ஐந்து தளத்திலும் அலாரிப்பை உருவாக்கி குறுந்தகடுகளாக வெளியிட்டுள்ளார். இந்த உருப்படியில் நட்டுவனார் சொற்கட்டை சொல்லிக் கொண்டிருக்கும் போதே பாடகர் ஏதாவது திருப்புகழைப் பாடிக்கொண்டே வருவார். திருப்புகழ் முருகனைப் பற்றியதுதானே அந்த வகையில் பார்த்தால் நாட்டியத்தில் முதல் உருப்படியிலேயே முருகன் வந்து விடுகிறார் உதாரணம்.

மிஸ்ர அலாரிப்பு ஆடும்போது "முத்தைத் திரு பத்தித் திருநகை" என்ற திருப்புகழும் கண்ட அலாரிப்பு ஆடும்பொழுது "ஏறுமயில் ஏறிவிளை யாடும் முகம் ஒன்றே" என்று திருப்புகழும் திஸ்ர அலாரிப்பு ஆடும் போது "தமரு மமரு மனையு மினிய" என்ற திருப்புகழும் சதுர்ஸ அலாரிப்பு ஆடும்போது "நாத விந்துக லாதீ நமோ நம" என்ற திருப்புகழும் பாடப்படுகிறது. சங்கீர்ணம் அவ்வளவாக ஆடப்படுவதில்லை. தற்போது இந்த கட்டுரையாளராகிய நான் கந்தர் சஷ்டி கவசத்தை அலாரிப்புடன் இணைத்து ஆடிவருகிறேன். இதற்கு நல்ல வரவேற்பு கிடைத்து வருகிறது.

**சப்தம்**

அபிநயம் சேர்க்கப்படும் முதல் உருப்படியாகும் மிகவும் பழமையான உருப்படியான சப்தம் நாயக்க மன்னர்கள் காலத்தில் அதிகம் கையாளப்பட்டு இன்று வரை ஆடப்பட்டு வருகிறது. பெரும்பாலும் சப்தம் என்றாலே முருகன்தான் என்று என்னுமளவிற்கு முருகன் மேல் அதிக சப்தம் உள்ளது. அடுத்தடியாக கிருஷ்ணன் மேல் சப்தம் அதிகமாக உள்ளது. உதாரணம்

1. *"கந்தனே உன்னை எந்த நேரமும்"*
2. *"தண்டை முழங்க சதங்கை கிணுங்க தவழ்ந்து வரும் முருகா"*
3. *"ஆடும் மயில் மேல் அமர்ந்த முருகனே போன்றவை யாகும்".*

பெரும்பாலும் சப்தம் காம்போதி ராகத்திலும் மிஸ்ர சாபு தாளத்திலும் தான் அமைந்திருக்கும். சில சப்தம் ராகமாலிகாவில் அமைந்திருக்கும். ஆனால்

தாளம் மட்டும் மிஸ்ர சாபுவில் இருக்கும் இந்தக் கட்டுரையாளராகிய நான் ஆதி தாளத்தில் அறுபடை முருகனின் சிறப்பைக் கூறும் விதமாக புதிய சப்தம் இயற்றியுள்ளேன்.

**பதவர்ணம்**

பரத நாட்டியத்தின் மையப்பகுதி இது. ஒரு நடன மணியின் முழுத் திறமையும் காட்டும் வண்ணம். அடவுகளும், பாவங்களும், சஞ்சாரிகளும் பின்னி பிணைந்திருக்கும். காலத்தால் முந்திய இந்த உருப்படியைப் பல இசை நாட்டிய வல்லுனர்கள் இயற்றியிருக்கிறார்கள். இதில் முருகனைப் பற்றிய பதவர்ணத்தைப் பார்ப்போம்.

*சுவாமி நீ மனமிரங்கி அருள் தரும் மா தயை நிதியே முருககுக.*

*நாட்டிய மேதை பத்ம ஸ்ரீ தண்டாயுதபாணி பிள்ளை*
*சாமியை வரச்சொல்லடி சகியே குமார சாமியை*

*நாட்டிய மேதை திருமதி லலிதா*
*வேலானை காண்போம் வாரீர்*

*பத்மஸ்ரீ வித்வான் மதுரை கிருஷ்ணன்*
*கோல மயில் வாகனனே குஞ்சரி மணாளனே*

*பந்தனை நல்லூர் ஸ்ரீநிவாசன்*
*செந்தில் மாநகர் வாழும் சிங்காரவேலனே* (பாபநாசம் சிவன்)
*வேலனிடம் போய் சொல்லடி* (டி.சேதுராமன்)
*செந்தில் மாநகர் மேவும் தேவதேவா* (லால்குடி ஜெயராமன்)

*ஆடும் மயில்மேல் வருவான் அழகன் முருகன்* (மதுரை முரளிதரன்)
*வாசலில் வந்த நின்ற வகையென்னவோ முருகா*(பத்மநாப சர்மா)
*சிங்காரவேலனே சிவபாலனே* (முனைவர் சிவலோகநாதன்)
முருகனைப் பற்றிய பதவர்ணத்தின் பட்டியல் நீண்டு கொண்டே போகிறது.

**கவித்துவம்**

ஆலய வழிபாட்டு முறையில் இருந்து வந்த இந்த நாட்டிய உருப்படி தற்காலத்திலும் தொடர்கிறது. சொற்கட்டும் பாடலும் மாறி மாறி பாடப்படும். இந்த உருப்படியிலும் முருகன் இடம் பெற்றிருக்கிறார். உதாரணம், காலத்தால் முந்தியது ஐந்து மயில் உடனாடி வரவேண்டும்

*வினையறவேல் வாங்கும்* (கங்கை முத்து நட்டுவனார்)
*சுற்றி வருகுது வருகுதுவேல்* (மதுரை முரளிதரன்)
*சரவணப் பொய்கையில் அவதரித்தானே* (முனைவர் சிவலோகநாதன்)

**பதம்** : அபிநயத்திற்கு மிக முக்கியப் பங்கு வகிக்கும் நாட்டிய உருப்படிகளில் பதம் மிகச் சிறப்பிடம் வகிக்கிறது முருகனைப பற்றி ஏராளமான பதங்கள் உள்ளன. சில பதங்களை பார்ப்போம்.

1. *"அதுவும் சொல்லுவாள் அவள் அனேகம் செல்லுவாள்"*
2. *"கண்ட நாள் முதலாய் காதல் பெருகுதடி*
   *கையில் வேல் பிடித்த கருணை சிவபாலனை"*
3. *"அந்தி மயங்குதடி ஆசை பெருகுதே கந்தன் வரக் கானேன்"*
4. *"வேலன் வருவாரோடி வடிவேலன் வருவாரோடி"*
5. *"எத்தனை நேரம் ஆகுதடி இன்னும் வரக்காணேன் என் கந்தசாமி"*

**கீர்த்தனை** : பக்தியை வெளிப்படுத்தும் இந்த உருப்படியில் கணக்கில் அடங்காத கீர்த்தனை முருகனைப் பற்றியுள்ளது. அத்தனையும் இங்கு கொண்டு வர முடியாது. சிலவற்றைப் பார்ப்போம். 1. "முருகா முருகா" 2. "கொஞ்சி கொஞ்சி வா குமரனே," 3. "சரவணபவ என்னும்", 4. "வேலனே வடிவேலனே", "மயில் வாகனா வள்ளி மணமோகனா", 6. "அறுபடை முருகா".

**ஜாவளி** : அபிநயத்தில் நல்ல தேர்ச்சி பெற்ற கலைஞர்கள் மட்டும் இந்த உருப்படியை ஆடும் வண்ணம் அமைந்திருக்கும். பெரும்பாலும் கொச்சைத் தனமான வார்த்தைகள் அமைந்து இருக்கும். தெழுங்கு, கன்னடம், மொழிகளில் ஜாவளிகள் அதிகம் உள்ளன. தமிழில் சில ஜாவளிகள் மட்டும் உள்ளன. அதுவும் முருகன் மேல் ஒன்றிரண்டு மட்டும் உள்ளன.

1. பத்ம விபூஷன் மதுரை கிருஷ்ணன் - "கேலியாய் போனதடி
2. முனைவர் சிவலோகநாதன் - "தகுமோடி சகியே தணிகாசலம் செய்தது"

**முடிவுரை**

பரதநாட்டிய உருப்படிகளில் சிவபெருமானுக்கும், திருமாலுக்கும் எவ்வளவு முக்கியத்துவம் இருக்கிறதோ அந்த அளவுக்குத் தமிழ்க் கடவுளான முருகப் பெருமானுக்கும் முக்கியத்துவம் கொடுத்துள்ளனர் நமது முன்னோர்கள். இசைநாட்டிய உருப்படிகள் படைத்த மேதைகள் அனைவரும் முருகனைப் பற்றி ஒரு சில பாடலாவது இயற்றாமல் இருந்ததில்லை. சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசுவாமி தீட்சிதர் தான் இயற்றிய அத்தனை பாடல்களிலும் குருகுக என்ற முத்திரையைத்தான் வைத்துள்ளார். பெரியசாமி தூரனோ தன் படைப்புகளில் முக்கால்வாசிப் பாடல்கள் முருகனைப் பற்றித்தான் இயற்றியுள்ளார். சென்னையில் வருடந்தோறும் நடைபெறும் மார்கழி மாத இசை நாட்டிய விழாக்களில் ஒரு முழு கச்சேரியும் முருகனைப் பற்றியே பாடி ஆடப்படுகிறது. நாட்டிய உலகில் அன்று முதல் இன்றுவரை முருகப் பெருமானுக்கு மிகச் சிறப்பிடம் உள்ளதை மேற்கூறிய பாடல்களே சான்றாக விளங்குகின்றன.

# திருப்புகழில் நெகிழ வைத்த இசை வரிகள்

**ஆ. சுந்தரி**
உதவிப்பேராசிரியர் (நாதஸ்வரம்)
இசைத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

திருப்புகழ் இசைத் தமிழின் இலக்கணத்திற்கு உயரிய பொக்கிஷமாகும். மனிதனை மகிழ வைப்பது மனம் மட்டுமல்ல வாழ்க்கை பயனை அனுபவித்த அருணகிரியார் உயிர் வரிகளும் கூட. உலகின் தொன்மையான சைவ சமய நெறியினை அவ்வக்காலங்களில் மறுமலர்ச்சி பெறச் செய்த அருளாளர்கள் வரிசையில் அருணகிரிநாதர் சிறப்பிடம் பெறுகிறார். இந்து பண்பாட்டினைக் காக்கின்ற பெறு முயற்சியினை வித்யாரன்னியரின் வழிநின்று விஜய நகர அரசர்கள் முனைந்து வெற்றிகண்ட காலத்தில் திருவண்ணாமலையில் அருணகிரிநாதர் அவதரித்தார். சைவ சமயமும் வைணவ சமயமும் ஒன்றை போட்டியிட்ட காலத்தில் முருகப்பெருமான் அருணகிரிநாதரைத் தோற்றுவித்தார், தம் தவறுகளுக்கு மிகவும் வருந்தி முன் செய்த நல்வினையால் மனம் மாறினார் அருணகிரிநாதர். திருவண்ணாமலை திருக்கோவில் வடவாயிற் கோபுரத்தின் கீழ் தவநிலையில் அமர்ந்து ஆறுமுகனைத் தியானித்தும் மாயையின் வலிமை குறையாதது கண்டு பிறவியை வெறுத்து உயிரை மாய்த்துக் கொள்ளக் கருதி அண்ணாமலைக் கோபுரத்தில் ஏறி உயிர் பிரியக் குதித்தார். அடியார் உயிர்துறக்க ஆறுமுகம் சகியாது அவருக்கு ஊறுவரா வண்ணம் தாங்கி அபயம் அளித்து மண்மிசை நிறுத்தி காத்தருளினார் கந்தவேல்.

*பழநித னிற்போ யுற்பவ*
*வினைவிள கட்சேர் வெட்சிகு*
*ரவிபயில் நற்றாள் பற்றுவ தொருநாளே*

என்று பாட தன் பிறவிப் பயனை உலகிற்கு உணர்த்துகிறார். அதனை இக்கட்டுரை எடுத்துக்காட்டுகின்றது.

பழநிமலையைப் பற்றிச் சுவாமிகள் பலவாறு புகழ்ந்து பாடியுள்ளார். காசிக்கு மீறிய பழநி, சேரும் அழகார் பழநி, அதிசயம் அநேகம் உற்ற பழநி, ஞானமலை, சிவன்மலை, மணிபூரகச் சேத்திரம், பிரகாசம்புரி பழநி, தீராதநோய் தீர்க்கும் பழநி, ஞானதாதா வாழ்கின்ற சேத்திரம், ஞான சொரூபன் வாழ்கின்ற சேத்திரம் என்றெல்லாம் இம்மலையைச் சுவாமிகள் புகழ்ந்து பாடியுள்ளார்கள். இப்பேறுபட்ட அதிசயம் நிறைந்த மலையை நினைக்கும் போதே நம் வினைகள் எல்லாம் பானு கண்ட பனிபோல விலகும் என்கிறார். பழநி பழநி என்று கூறு: அதில் பரவசம் வருகுது பாரு என்றார். பழநி என்று சொன்னாலே வினைகளெல்லாம் திக்குத் தெரியமால் ஓடும் என்கிறார்.

*வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்*
*மனையோடு தியங்கி மயங்கிடவோ*
*சுனையோ டருவித் துறையோடு பசுந்*
*தினையோ டிதணோடு திரிந்தவனே* (கந்தர் அநுபூதி)

வினையே ஒரு தேகங்கண்டாய் என்கிறார். அந்த வினை அடியோட அகல பழநி என்றாலே அகலும் என்கிறார். உற்பவ வினை உள விள்ள என்பது விள என்று வந்தது. விள்ளுதல் - நீங்குதல் - பழநித் திருத்தலத்திற்குச் சென்று பக்தியுடன் பணிந்தோர்க்குப் பிறவிக்குக் காரணமான வினைகள் விலகும் எனப் பாடி பரவசப்படுத்துகிறார்.

**நற்றாள் நன்மொழி**

இறைவனுடைய திருவடியை நற்றாள் தொழா ரெனின் (வள்ளுவர்) பிறவிப் பிணிக்கு மருந்தாகலின் நற்றாள் என்றனர். இறைவனுடைய திருவடி பிறவி நோய்க்கு மருந்தாகும்.

**பற்றுதொரு நாளே**

நம்மனதில் எத்தனையோ பற்றுகள் உள்ளன. மக்கள் பற்று, மனைவிப்பற்று, பொருட்பற்று, பூமியின் மீது பற்று, பிறர் பொருட்களைக் கவர்வதில் பற்று. இவையெல்லாம் பிறவிக்குக் காரணமாக அமையும். உலகத்தில் பற்றுகள் மீது பற்று வைத்தாய். இப்பற்று எல்லாம் அற்று வினை அற்று அவர் திருவடி அடையலாம் என்கிறார் சுவாமிகள். பழநிக்குச்சென்று தேன் துளிர்க்கின்ற வெட்சி மலரையும், குமார மலரையும் இறைவன் திருவடியில் வைத்து வேண்டினால் நம் வினைகளெல்லாம் அற்று இறைவன் திருவடியை அடையலாம் என்கிறார்.

*அணிபட் டணுகித் திணிபட் டமனத்*
*தவர்விட் டவிழிக் கணையாலும்*
*அரிசுற் றுகழைத் தவர்பெற் றவளத்*
*தவன்விட் டமலர்க் கணையாலும்*
*பிணிபட் டுணர்வற் றவமுற் றியமற்*
*பெறுமக் குணமுற் றுயிர்மாளும்*
*பிறவிக் கடல்விட் டுயர்நற் கதியைப்*
*பெறுதற் கருளைத் தரவேணும்*
*கணிநற் சொருபத் தையெடுத் துமலைக்*
*கனியைக் கணியுற் றிடுவோனே*
*கமலத் தயனைப் ப்ரணவத் துரையைக்*
*கருதிச் சிறைவைத் திடுவோனே*
*பணியப் பணியப் பரமர்ப் பரவப்*
*பரிவுற் றொருசொற் பகர்வோனே*
*பவளத் தவளக் கனகப் புரிசைப்*
*பழநிக் குமரப் பெருமாளே*

*பிறவிக் கடல்விட் டுயர்நற் கதியைப்*
*பெறுதற் கருணைத் - தரவேணும்*
*பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவ னடிசேரா தார். (வள்ளுவர்)*

இறைவனுடைய திருவடியை அடைய வேண்டுமானல் பிறவியாகிய சமுத்திரத்தைக் கடத்தல் வேண்டும். பிறவியைப் பெருங்கடல் என்று ஆன்றோர் கூறுவார்கள். பிறவி அத்துணை அச்சம் விளைவிப்பது. பிறவிப் பெருங்கடல் எனும் கடலைக் கடப்பது எத்துணை அரியதோ அதுபோல பிறவியைக் கடப்பதும் அரியது. இறைவனுடைய திருவடியை விடாமல் உறுதியாகப் பற்றுவதே பிறவிக்கடலைக் கடக்க ஏதுவான வழியாகும்.

*உறவுமுறை மனைவிமக வெனுமலையில் எனதிதாய*
*உருவுடைய மலினபவ சலராசி யேறவிடும்*

**உறுபுனையும் - சீர்பாதவிருப்பு**

பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து நெடுங்கால் தத்தளிக்கும் உயிர்கள் தமது திருவடியாகிய இறைவனைப் பற்றியவுடன் அவர்களை முத்திக் கரையில் சேர்க்கின்றவன் முருகன் என்கிறார். அந்த முருகனை அருணகிரிநாதர் சுவர்க்கயோக மீகாம சமஸ்த லோக பூபால என்கிறார்.

*ஊரும் சதமல்ல, உற்றாரும் சதமல்ல பெற்ற*
*பிள்ளையும் சதமல்ல என்கிறார்* - பட்டினத்தார்.

உலகத்தில் காணும் பொருள்யாவும் அநித்தியமே என்கிறார். நித்தியமானது முருகப்பெருமானுடைய திருவடியே! இப்பிறவி என்பது ஓர் இருட்கடலே, அதில் சிக்காமல் ஒருமுறையாவது, முரகா, பரமா, குமரா என நாம் சொல்லித் சரணாகதி அடையவேண்டும். இறைவன் மீது நாம் பற்று வைக்கவேண்டும், அவன் நம்மீது கருணை பொழிவான்.

கருணை கூர் முகங்கள் ஆறுமாக அவதரித்தவன் ஆயிற்றே. கருணைப் பிரகாச வள்ளல் என்கிறார் அருட்பிரகாச வள்ளலார் ராமலிங்கம். கருணை நிதியே என்கிறார் வள்ளலார். ஆதலால் பிறவிக்கடலைக் கடக்க இறைவன் திருவடியே நற்கதியாகும் என்கிறார் சுவாமிகள். பிறவிக்கடலை விட்டு உயர்நற்கதியைப் பெறுவதற்கு உயர்ந்த முத்தியை அடியேன் பெறுமாறு அருளைத் தரவேணும் என்கிறார்.

*உதவ இயலினியல் செஞ்சொற்ப்ர பந்தமென*
*மதுர கவிகளில்ம னம்பற்றி ருந்துபுகழ்*
*உரிய அடிமையுனை யன்றிப்பர பஞ்சமதை — நம்புவேனோ*

**கருத்துரை**

அருணகிரிநாதர் எப்போதும் முருகனுடைய புகழைப் பாடுவதிலேயே மனம் வைத்திருந்தார். செஞ்சொற் புனைமலை சிறந்திடவே என்கிறார்.

செஞ்சொல் என்றால் தித்திக்கும் தேன்மொழிக் கவிதையாகும். இது இனிய கனியமுதம் போன்ற சொற்களால் ஆனது மிக்க அன்பினால் ஆனது. முத்தை என்று எழுதியதுமே செஞ்சொல் ஊற்றெடுத்தது அருணகிரி நாவிலே என்கிறார். இந்தப் பிரபஞ்சத்தில் முருகனுடைய திருவடியிலே மனம் வைத்து அடிமையாகி அவன் புகழினைப் பாடுவதை அன்றி வேறு எதிலும் மனம் செல்லாது காப்பாற்று என்கிறார்.

**முடிவுரை**

திருப்புகழ் காட்டும் இசைவரிகள் உலகியல் வாழ்க்கைக்கு உன்னதமான அர்த்தத்தை எடுத்துக்காட்டுகிறது. பல்வேறு இசைக்கருவிகள் திருப்புகழில் சந்த உணர்ச்சிக்கு ஏற்றவாறு சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. மனித வாழ்வியலுக்கு அருணகிரியார் அருளிய வரிகள், பொய், தீது, வாது, சூது மாது என பகைமை, மற்றும் ஒவ்வாத இழி செயல்களை தன் வாழ்வியலால் அனுபவித்து இவ்வுலக மக்களுக்கு உரிய அனுபவங்களை தன் திருப்புகழ் வரிகளால் உணர்த்துகிறார். நாம் மனம் நெகிழ்வது மட்டுமல்லாமல் மன ஒளியை தேடும் எதில் பார்ப்பை நம்மிடம் விதைத்துச் சென்றவர் அருணகிரியார் என்றால் மிகையாகாது.

# சந்தச் செந்தூரர் அருணகிரியார்

**S. G. சுப்ரஜா**
முனைவர் பட்ட ஆய்வாளர்
இசைத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

திந்திமி திமியென தாளமத்தளம் முழங்கவே என்ற வரிகளில் சந்தங்கள் நடமிடுவதைக் காணலாம். அதுபோல அருணகிரியார் வாக்கில் சந்தம் செழித்தன. அன்று முதல் இன்று வரை உலகத்தில் இசைக்கு மயங்காத உயிர்களில்லை என்பர். பாம்பு மகுடி இசைக்குக் கட்டுப்படும். ஒரு கருத்தையோ அல்லது உரையையோ அல்லது தன் மனத்தில் நினைப்பதையோ இசைவடிவில் பிறரிடம் சொல்லும்பொழுது கேட்பவர்களின் மனத்திற்கு அக்கருத்துச் செறிவாகச் சென்றடையும். அது மட்டுமன்றி ஓசையுடைமை, பிறர் மனத்தைக் கவரும் வல்லமையும் பெற்றது அருணகிரிநாதர் சந்தத்தின் துணையால் இறைவனின் புகழைப்பாடி இறையன்பு பெற்றுள்ளார். அவ்வகையில் சந்தம் என்பதன் சொற்பொருள் விளக்கம், அதன் வகைகள், அது வண்ணப்பாவுடன் கையாளப்படும் தன்மை போன்றவற்றை அருணகிரியார் வழியுடன் எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அரும் பொருள் சந்தம்**

சந்தத்தில் சிந்து பாடும் விதம் தொல்காப்பியர் சுட்டும் 'வண்ணம்' என்னும் செய்யுள் உறுப்பினை அடியொற்றி அருணகிரிநாதர் 'சந்தம்' என்ற சொல்லால் கையாண்டுள்ளார். 'வண்ணந் தாமே நாலைந் தென்ப' (தொல்-செய்.214) இந்நூற்பாவிற்கு உரையெழுதிய பேராசிரியர் "வண்ணம் என்பது சந்த வேறுபாடு" என்கிறார். 'சந்தம் வண்ணமாமே" என்று நிகண்டும், "வண்ணத்தின் பெயர் வண்ணம் சந்தம்" என்று சேந்தன் திவாகரமும் "வண்ணமே சந்தமே" என்பது சூடாமணி நிகண்டும்,

*"வண்ணந் தானே யொப்பனை செயலும்*
*அழகுஞ் சந்தமும் கவியி னோசையும்*
*பண்பு மெனவே பகரு மைம்பேர்"*

என்ற அகராதி நிகண்டும், வண்ணம் என்பது சந்தப்பாட்டுயென சென்னைப் பல்கலைக்கழக அகராதியும் Rhythm or Vannam என்று (அ. சிதம்பரனாதன்) கூறுகிறது. சந்தம் என்பது ஓசைகளை அளக்கின்ற கருவி, ஒலிப்பண்புகளை வரையறுத்துக் காட்டுவது. எழுத்தினுடைய வன்மை மென்மைகளை நெறிப்படுத்துவது. இயல், இசை நாடகத் துறைகளில் உயிர் நிலையாக நின்று உணர்ச்சிகளைப் பெருக்கிக் காட்டுவது. மொழியினுடைய வளத்தையும்,

பலவனுடைய ஆற்றலையும் ஒரே நேரத்தில் இணைத்துக்காட்டி நிற்பது. இத்தகைய ஓசைநலம் வழங்கும் சந்தம் "ஓசைகளின் சந்திப்பு ஒலிகள் ஆடுகின்ற அரங்கம்" எனப் பொருள்படுகிறது.

**வண்ணம் - சந்தம்**

வண்ணமும் சந்தமும் ஒரு பொரள் குறித்த சொல்லாக வழங்கப்படு கின்றன. இருப்பினும் "வண்ணமும் சந்தமும் வேறுவேறானவை யாகும். தோற்ற அடிப்படையில் வண்ணம் என்ற சொல் பிராகிருத மொழியிலிருந்தும் சந்தம் என்ற சொல் சமஸ்கிருத மொழியிலிருந்தும் பெறப்பட்டவை" என்னும குறிப்பு உள்ளது.

நன்னூல், நூல் இயற்றுவதற்குரிய அழகு சேர்க்கும் பத்து பொருட்களுள் ஒன்றாக 'ஓசையுடைமையை'க் குறிப்பிடுகிறது. அதனை உருவாக்குவது சந்தம். அப்பர் 'பண்ணில் ஓசை, பழத்தினில் இன்சுவை' என்பர். பண்ணும் பதமேழும் பலவோசைத் தமிழவையும்' என்றார் திருஞானசம்பந்தர். இதன் வாயிலாய் இவர்கள் ஓசையை, இன்பத்தை, சந்தத்தை, வண்ணத்தைத் தங்கள் உயிர் மூச்சாய்க் கொண்டு வாழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது. 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயெ' என்று திருத்தாண்டமும் 'வழங்கோசை வையம் பெறும்' என்று கம்பரும் ஓசையைச் சிறப்பித்துள்ளனர். 'சந்தமே பாடவல்ல தமிழ் ஞானசம்பந்தன்' என்ற பெருமைக்கரிய சம்பந்தர், ஓசைக்கு முதலிடம் கொடுத்தார். சேக்கிழார் பெருமான். 'உடுத்த ஓசைச் சுருதிமுறை வழுவாமல் தொடுத்த பாடல்' என்று புகழ்வதன் மூலம் ஓசை குறைவுபடாமல் தொடுக்கும் பாடலே பாடல் என்பது பெறப்படுகிறது.

**சந்தம் முளைத்த காலம்**

பழங்காலத்தில் பாமரமக்கள் பேச்சு வழக்கில் சந்தத்தைப் பயன்படுத்தியுள்ளனர். இதை அச்சுவடிவில் கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டில் அருணகிரிநாதர் 'திருப்புகழ்' பாடுவதற்கு மிகுதியாகக் கையாண்டுள்ளார். சந்தம் என்னும் சொல் வடசொல் என்ற உரையாசிரியர்களின் உரையை மறுக்குமிடத்து வீ.ப. சுந்தரனார் "சந்தம் என்னும் சொல்லைச் சந்து + அம் எனப் பிரித்து சந்து என்னும் வேர் அடியிற் பிறந்த தமிழ்ச்சொல் என்று காட்டுகின்றார். மேலும் சந்தி, சந்திப்பு, சந்தித்தல் முதலிய சொற்களும் சந்து என்னும் வேர்ச் சொல்லில் இருந்து பிறந்திருக்க வேண்டுமென்றும், சந்தம் என்பது ஓசைகளின் சந்திப்பாகவும் ஒலிகளின் சேர்க்கையாகவும், ஓர் ஒழுங்கான ஒலி எழுத்துக்களின் ஒட்டுதலாகவும் இருப்பதால் இதைத் தமிழ்ச் சொல்லாகவே ஏற்கலாம்" என்கிறார். இச்சந்தம் அமைப்பதற்கு அடிப்படையாகச் சந்தம், துள்ளல், குழிப்பு. தொங்கல், கலை, அடி என்னும் ஆறு உறுப்புகள் துணைபுரிகின்றனயென வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அறுவகை இலக்கணத்தில் விளக்கியுள்ளனர்.

**சந்தப் பாகுபாடு**

சந்தம் என்பது தத்த, தாத்தா, தாந்த, தந்தா, தன, தான, தன்ன, தய்ய என எட்டு வகைப்படும். இதனை,

*'தத்தவும் தாத்தவும் தந்தவும் தாந்தவும்*
*தனவும் தானவும் தன்னவும் தய்யவும்*
*தத்தா என்பதின் என்பார் பெரியோர்*

என்று தண்டபாணி சுவாமிகள் எண் வகைச் சந்தங்களுக்கு நூற்பா வகுத்துள்ளார். இவற்றின் ஒலி நீட்சியாலமைந்த தத்த, தாத்த, தாந்த, தந்தா, தனா, தான, தன்ன, தய்ய என்னும் எட்டுடன் கூடிய பதினாறு ஆகும். இவை ஒவ்வொன்றும் ஒரு முழுச்சந்தம். இவற்றிள் மேல் ன, னா என்பவை தனித்து வரினம் அவை அரைச்சந்தமாகும். ஆகையால் 'தந்தன என்பது ஒன்றரைச் சந்தம், தந்தம் என்பதும் ஒன்றரைச் சந்தம். சந்தங்கள் சில சேர்ந்தால் துள்ளல் என அழைக்கப்படும். பல துள்ளல்கள் சேர்ந்தது ஒரு குழிப்பாகும். மூன்று குழிப்பும் ஒரு சிறு தொங்கல் துள்ளலும் சேர்ந்தது ஒரு கலையாகும். சில கலைகள் இரண்டு தொங்கல் தள்ளல்கள் கொண்டு வரும்'' என அ.பிச்சை அவர்கள் சங்க இலக்கியத்தில் யாப்பு என்னும் நூலில் விரித்துக் கூறியுள்ளார்.

சந்தப்பாக்கள் "கலைவண்ணம், வகுப்பு வண்ணம், உடற்கூற்று வண்ணம், வண்ணவிருத்தம், சந்தவிருத்தம்'' என ஐவகைப்படும். இசை பொருள் யாக்கும் முறை, கலையின் அமைப்பு ஆகியவற்றின் அடிப்படையில் பிரிக்கப்படுகின்றன. மேற்கூறியவற்றால் தந்தன என்பது ஒரு கூட்டுச்சந்தம் என்பதை அறியமுடிகிறது. இதில் தத்த + தன இரண்டும் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டுச் சந்தத்தை உருவாக்குகின்றன என்பது தெளிவாகிறது.

**வண்ணப்பா**

வண்ணம் என்பது சந்த வேறுபாடு, பண்பு அழகு, ஓசை, இசை, குறிப்பு என பல்பொருள் கொண்டது. மேலும் இவ்வண்ணாமாவது, சில சந்தங்கள் ஒன்று சேர்ந்து துள்ளல். சில துள்ளல்கள் ஒன்று சேர்ந்து ஒரு குழிப்பு, மூன்று குழிப்பும், ஒரு தொங்கலும் சேர்ந்தது ஒரு கலை. இரண்டு கலைகள் ஒன்று சேர்ந்தது ஒரு அடி எட்டுக்கலைகள் சேர்ந்து உண்டாவது ஒரு வண்ணப்பா என்று வண்ணத்திற்கு விளக்கம் அறியமுடிகிறது. இக்கருத்தின் மூலம் மண்ணமும், சந்தமும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையசை, இனிமை தருபவை, இன்பம் ஊட்டுபவை என்பதை உணரமுடிகிறது.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் 'வண்ணத்தியல்பு என்னும் இலக்கண நூலில் வண்ணப்பாவினை

*சில்வகைச் சந்தப் புணர்ப்போர் துள்ளல்*
*பல்வகைத் துள்ளற் புணர்ப்போர் குழிப்பே*

*குழிப்பொடு மூன்று கூடிய பின்னர்*
*தொங்கல் தாழிசைத் துள்ளலொன் றிசைக்கிற்*
*கலையொன் றாமெனக் கழறுவர் புலவோர்*
*எண் கலைப் புணர்போர் வண்ணம் பாவேப்*
*முந்திய பகுப்பின் கலையோர் நான்கில்*
*தலைவன் தன்புகழ் மூன்றிற் கூறிமற்*
*யொன்றில் அன்னவன் வரைநாட் பணிசொற்று*
*ஏனைய கலை நான்கிடத்தும் பல்வகைத்*
*துறையில் ஒன்றைத் துகளறக் கூறல்*
*வண்ணப்பாவின் வழக்கெனத் தகுமே"*

என நூற்பா வகுத்துள்ளார்.

**முடிவுரை**

தாள ஜாதிகள் சந்தத்திற்குள் புகுந்து சிந்து பாடுவதை திருப்புகழில் மட்டும் எல்லா இடங்களிலும் காணலாம். இவ்வாறு சந்தப்பாக்களை அருணகிரியார் வழி நின்று எத்தனையோ வாக்கேயக்காரர்கள் பின்பற்றி பலப்பாக்கள் புனைந்தனர். எனினும் இவரே முன்னோடியாக விளங்குகிறார். காரணம் இசையும், பக்தியும் பிரிக்க முடியாத சக்தி ஆகும். எனவே இவர் வாயில் உதிர்ந்த பாக்கள் உன்னதப் படைப்புகளாக திகழ்கின்றன. இசை, இயல், நாடக மூன்றும் பொருந்த இசை வாணர்களுக்கு விருந்தளிப்பது திருப்புகழ் இசையமுதமே. அதற்கு வள்ளல் முருகப் பெருமானின் வாரி வழங்கிய திருப்புகழ் தாளக் கொடையே சான்று என்று கூறினால் மிகையாகாது.

# முருகாற்றுப்படையில் பக்தி நெறி

**ஞா. சுபஸ்ரீ**
முனைவர் பட்ட ஆய்வாளர்
ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள்
தமிழ், கலை, அறிவியல் கல்லூரி
மயிலம்.

பண்டையத் தமிழரின் வாழ்க்கையும் வரலாற்றையும் அறியும் காலப் பெட்டகமாகச் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. மக்கள் இயற்கையோடு இயற்கையாய் இயைந்து வாழ்ந்ததற்குக் காரணம் அவர்கள் இயற்கையை இறைவனாய் கண்டதேயாகும். அவர்களின் வாழ்க்கை, பழக்க வழக்கம், பண்பாடு, நாகரிகம் ஆகிய அனைத்தும் கடவுளையும் கடவுள் சார்ந்த நம்பிக்கையையும் அடிப்படையாகக் கொண்டே அமைந்தன. நம் மொழியும் பக்திமொழியாக அமைத்தமைக்குக் காரணமும் இதுவேயாகும். சங்க இலக்கியங்களில் ஒன்றாகவும், பத்துப்பாட்டில் தொன்மையாகவும் வைத்துப் போற்றப்படும் திருமுருகாற்றுப்படையில் பக்தி நெறிகளாக அமைந்துள்ள செய்திகளை விவரிப்பதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆற்றுப்படுத்தும் பக்தி நெறி

"ஆற்றுப்படுத்துதல்" என்பது இலக்கிய வகைகளில் ஒன்று. இவ்வாற்றுப்படுத்தலுக்குத் தொன்மை இலக்கணமாக விளங்கும் தொல்காப்பியம் இலக்கணம் பகர்கிறது. இதனை,

*"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்"*
*ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்*
*பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்*
*சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்"* (தொல்.பொருள் 88)

என்னும் நூற்பா தெரிவுப்படுத்துகிறது. இங்கே ஆற்றுப்படுத்துதல் என்பது கூத்தருக்கும், பாணருக்கும், பொருநருக்கும், விறலிக்கும் உரியதாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் திருமுருகாற்றுப்படையில் காணப்படும் "முருகாற்றுப்படுத்த உருகெழு வியனகர்" என்ற அடியின் மூலம் முருகனின் அருள் பெற்ற ஒருவன் பெறாத ஒருவனுக்கு இறைவனின் இயல்பையும் காணும் நெறியையும் கூறி இன்னவாறு வழிபட்டால் இறைவனின் திருவருளைப் பெற்று உய்யலாம் என்பதாக நக்கீரப் பெருமானால் இந்நூல் படைத்தருளப்பட்டது. திருமுருகாற்றுப்படையானது பத்துப்பாட்டில் அமைந்துள்ள நூல்களுக்கெல்லாம் காலத்தால் பிற்பட்டதாக விளங்கினும் முதன்மை நிலையில் வைத்துப் போற்றப்பட்டமைக்குக் காரணம் தமிழரின் பக்தி நெறியும் சமயம் சார்ந்த நம்பிக்கையுமே என்பது யாவரும் அறிந்த உண்மையே.

**இயற்கை வழி இறைமை நெறி**

உலகில் வாழும் உயிரினங்கள் அனைத்தும் மகிழும்படியாக சூரியனானவன் மேருவை வலமாகச் சுற்றி வந்து இருளை அகற்றி, ஒளியை பலரும் புகழும் வண்ணம் தந்துகொண்டிருக்கிறான். அதே போன்று முருகப்பெருமானானவன் மக்களிடத்தே மண்டிக்கிடக்கும் மாயையாகிய அறியாமையை(இருளை) அகற்றி, அவர்கள் வாழ்வில் அருளாகிய ஒளியைத் தந்து உய்விக்க வல்லவன் என்ற செய்தியை இயற்கை நிகழ்வோடு அற்புதமாய் கூறும் இக்காட்சியை,

*"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரும்*
*பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு*
*ஓவுஅற இமைக்கும் சேண்விளங்கு அவிர் ஒளி.* (திருமுரு. 1–3)

என்னும் இப்பாடலடியால் அறிய முடிகிறது. சூரியன் மேருவை வலமாகச் சுற்றிவரும் இக்காட்சியைச் சிலப்பதிகாரத்தின் மங்கல வாழ்த்துப்பாடல் வழியாகவும் அறியலாம் என்பதை,

*"ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்*
*காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு*
*மேரு வலந்திரி தலான்."* (சிலம்பு 4–6)

என்ற அடிகள் மூலம் மக்கள் இயற்கையைத் தெய்வமாய் வணங்கினர் என்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் அமைந்துள்ளதை உணரலாம்.

**நிலம் பகுக்கும் இறை நெறி**

நம் முன்னோர்கள் நிலங்களை ஐவகைப் பாகுபாட்டில் அடக்கியுள்ளனர். அவ்வகையில் தமிழ்க் கடவுளாம் முருகப்பெருமான் மலையும் மலைசார்ந்த பகுதியை (குறிஞ்சி) விரும்பி உறையக்கூடியவன் என்ற செய்தியைச் *"சேயோன் மேய மைவரை உலகமும்"* என்ற தொல்காப்பிய நூற்பாவரிகளால் அறிய முடிகிறது. மேலும் திருமுருகாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவனான முருகன் "குன்றமர்ந்து உறைதற்கும் உரியவன்" என்ற செய்தியை நக்கீரப் பெருமான் பல்வேறு இடங்களில் கூறிச்சென்றிருப்பதை,

*"குன்றம் கொன்ற குன்றா கொற்றத்து*
*விண்பெரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ."* (திருமுரு. 266–267)

என்னும் வரிகள் தெற்றென விளக்கிச் செல்கின்றன.

**இறைமை போற்றும் அழகு நெறி**

முருகப்பெருமானானவன் சிவந்த மேனியை உடையவன், சிவந்த ஆடையை அணிபவன், செயலையந்தளிர் ஆடும் காதினை உடையவன், இடுப்பில் கச்சினையும், காலில் வீரக்கழலையும் அணிந்தவன், தலையில் வெட்சிப் பூவைச் சூடியவன், குழல் முதலான இசைக்கருவிகளைக் கொண்டவன்,

செம்மறியாட்டையும் மயிலையும் வாகனமாகக் கொண்டவன், சேவல் கொடியைக் கொண்டுள்ள நெடியவன், தொடியணிந்த தோளினை உடையவன், யாழ் போன்ற இசைக்கருவிகளை இசைத்துக் கொண்டு பலரும் பாடும் பாடலுக்கு ஏற்ப உடம்பெல்லாம் புள்ளியைப் போட்டுக்கொண்டு இடுப்பில் கட்டிய ஆடை தரையில் புரள கையடிக்கும் முழுவோசைக்கேற்ப அடிவைக்கும் வேலவனோடும், அழகிய மகளிரின் மெல்லிய தோளைத் தழுவிக்கொண்டும் தலைமைதாங்கி குன்றிருக்கும் இடமெல்லாம் சென்று ஆடும் இயல்பினை உடையவன் என்றெல்லாம் பலவாறாக இறைவனின் தன்மையை உலகிற்கு உணர்த்தியும் அழகினைப் போற்றிப் புகழ்ந்தும் தன்னை மெய்மறக்கிறார் ஆசிரியர். இதனை,

*"செய்யன் சிவந்த ஆடையன் செல்வரைச்*
*செயலைத் தண்தளிர் துயல்வருங் காதினன்*
...................................................
*குன்றுதோறு ஆடலும் நின்றதன் பண்பே."* (திருமு 206-217)

என்னும் பாடலடியால் உணர்ந்து கொள்ளலாம்.

இறைவனின் உருவச் சிறப்பைப் போற்றி புகழ்தல் என்பது எல்லா சமயத்தார்க்கும் உண்டு. அவ்வகையில் தொண்டரப்பொடியாழ்வார் தம் பாடலில்

*"பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச்சொங்கண்*
*அச்சுதா அமரரேறே ஆயர்தம் கொழுந்தே என்னும்"*
(திருமாலை, 873)

என்ற பாடல் இதற்குத் தகுந்த சான்றாய் அமைந்துள்ளது.

**திருமுகத்தின் உண்மை நெறி :**

நக்கீரர் அழகன் முருகனின் அறுமுகத்தின் இயல்பை போற்றுகையில், ஒருமுகமானது உலகத்தின் இருளை அகற்றும் பொருட்டு கதிரொளியைப் பரப்பிக்கொண்டிருக்கிறது என்றும், மற்றொரு முகம் அன்பொடு அருளை வழங்கிக் கொண்டிருக்கிறது என்றும், இன்னொரு முகம் வேள்வியை உற்று நோக்கிக் கொண்டிருக்கிறது என்றும், ஒருமுகம் திங்களைப் போல் பொருட்களை விளங்கச் செய்து கொண்டிருக்கிறது என்றும், ஒருமுகம் பகைவரை வென்று வெற்றியில் திளைத்துக்கொண்டிருக்கிறது என்றும், ஒருமுகம் குறவர் மகளாகிய தன் காதல் மனைவியோடு பொழுதுபோக்கிக் கொண்டிருக்கிறது என்றும் அளப்பறியலாக இறையின் திருமுகச் சிறப்பைப் புகழ்ந்து கூறும் இச்செய்தியை,

*"மாயிரு ஞாலம் மறுவின்றி விளங்கப்*
*பல்கதிர் விரித்தன்று ஒருமுகம்*
.......................................
*மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே."* (திருமுரு.91–102)

என்னும் பாடலடி வாயிலாகப் புலப்படுத்திக்காட்டுகிறார் ஆசிரியர்.

**திருக்கையின் வண்மை நெறி**

ஆசிரியர் இறையின் அறுமுகச் சிறப்பை எடுத்துக்கூறியதோடு நில்லாது அவ்விறையின் பன்னிருகை செய்யும் அற்புதத்தையும் அழகுபட எடுத்தியம்புகிறார். அவ்வகையில், ஒருகை அண்ணனிடம் பழத்திற்கு ஏந்தியும், ஒருகை தலைமேலும், ஒருகை தொடை மீதுள்ள ஆடைமேலும், ஒருகை யானைமேல் அங்குசத்தை வீசியும், ஒருகையில் வேலும், ஒருகையில் கேடையமும், ஒருகை மார்பிலும், ஒருகை மாலை மீதும், ஒருகை வளையலும், ஒருகையில் மணியும், ஒருகை மேகத்திடம் இருந்து மழையையும், ஒருகை வானர மகளிர்க்கு மாலையையும் சூட்டிக் கொண்டிருந்தது என்று பன்னிருகையின் செயலைப் பட்டியலிடுகிறார். இதனை,

"விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒருகை
உக்கம் சேர்த்தியது ஒருகை
.............................................................
ஆங்கப் பன்னிரு கையும் பாற்பட இயற்றி." (திருமு 103 – 118)

இப்பாடல் அடிகள் மூலம் நன்கு தெளியலாம்.

**போற்றிப் புகழும் வழிபாட்டு நெறி**

முருகப்பெருமானைக் கண்டுற்ற வழி அவன் பெருமையைப் புகழ்ந்து சொல்ல வேண்டுமென்றும், இறைவனைக் கையால் தொழுதும் காலால் வணங்கியும் பணிய வேண்டும் என்று முக்கரண வழிபாட்டைக் கூறுகிறார் ஆசிரியர். மேலும் முருகனானவன் ஐவருள் ஒருவனான வருணப்பகவான் தன் உள்ளகையில் ஏந்திக்கொள்ள முருகன் பிறந்தானென்றும், கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்ட ஆறமர் செல்வன் என்றும், சிவனின் மகன் என்றும், மலைமகள் மைந்தன் என்றும், பகைவர்களுக்கு கூற்றுவன் போன்றவன் என்றும், கொற்றவையின் சிறுவன் என்றும், பழையோளின் குழவி என்றும், வானோர் வணங்கும் விற்படைத் தலைவன் என்றும், மாலை அணிந்த மார்பை உடையவனென்றும், நூலினைக் கற்ற புலவருக்கெல்லாம் தலைவன் போன்றவனென்றும், வெற்றி பெறும் மள்ளனென்றும், அந்தணர்களின் செல்வம் போன்றவன் என்றும், பலவறாக முப்பத்தொரு அடிகளில் இறைவனின் புகழைப் போற்றிப்புகழ்ந்தும் தன்மனம் நிறைவடையாத நிலையில் உள்ளதை, நக்கீரர் நெஞ்சி நெக்குருகி கூறுவதன் மூலம் அறியலாம். இதனை,

"ஆண்டாண்டு ஆயினும் ஆக, காண்தக
முந்துநீ கண்டுழி முகனமர்ந்து ஏத்திக்
கைதொழுஉப் பரவி காலுற வணங்கி
.............................................
குறித்தது மொழியா அளவையின் குறித்துடன்." (திருமு 250–281)

இம்முருகாற்றுப்படைவரிகளால் அறிந்து கொள்ளலாம். இதைப் போன்றே மாணிக்கவாசகரும் திருவாசகத்தில் பிடித்த பத்து என்னும் பகுதியில்

இறைவனைப் போற்றி புகழுகையில் ஒப்புமைக் கூறமுடியாத ஒப்பற்ற தலைவன் என்று கூறுகிறார். இதை,

*"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே*
*அன்பினில் விளைந்தஆர் அமுதே"* (திருவாசகம் - 538)

என்றெல்லாம் வர்ணித்துக் கூறுவதைக் காணலாம்.

**பகையை அழித்து அருளும் நெறி**

இறைவனின் வல்லமையை வர்ணிக்க நினைக்கும் ஆசிரியர் முருகனின் வீரச்செயலையும், அவுணர் அழிவையும் எடுத்துக்காட்டி விளக்குகிறார். அவ்வகையில் ஒரே உடம்பில் இருவெறு வடிவம் கொண்டு திகழும் முரகக் கடவுள் கடலிலே மாமரமாக நின்ற அவுணர்களின் நல்வலமானது அழியும்படியாக அம்மரத்தை வேரோடு வெட்டிச் சாய்த்தான் என்று கூறுகிறார். இத்தகுச் சிறப்புடை இறைவனின் திருவடியைப் பற்றிடில் எல்லா வளமும் நலமும் பெறலாம் என்பதாகக் கூறும் நிலையில்,

*"இருபெருவின் ஒரு பேரியாக்கை*
*அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி*
*அவுணர் நல்வலம் அடங்க*
*.........................................*
*எய்யா நல்லிசை செவ்வேல் சேஎய்."* (திருமுரு.57–61)

இப்பாடல் பயின்று வருவதைக் காணலாம்.

**தொகுப்புரை**

இறைவன் முருகன் பகைவர்களை அழித்து வெற்றியை நிலைநாட்ட வல்லவன் என்று கூறுவதன் மூலம் உலக தீமைகளை அழித்து நன்மையை ஏற்படுத்தும் சூக்கும் நிலையை திருமுருகாற்றுப்படை காட்சிகளின் வாயிலாக எடுத்துக்காட்டுகிறார் ஆசிரியர். முருகனின் திருமணமானது இரண்டு பெண்களுடன் நடைபெறுகிறது. ஒருவர் தேவலோகத்தையும், மற்றவர் குறவர் குலத்தையும் சார்ந்தவராகக் காட்டுவதன் நோக்கம் இறைவன் வானுலகத்தில் வாழக்கூடிய தேவர்களுக்கு மட்டுமல்லாது, பூமியிலே வாழ்க்கூடிய மக்களுக்கும் அருள் தரக்கூடியவன் என்பதை நிலைநிறுத்துவதத்காகவே என்பதை அறிய முடிகிறது. இறைவனின் அருளைப் பெற நினைப்பவன் அவனின் அழகு நலனையும், திருவுருவச் சிறப்பையும் போற்றி புகழ்வதன் மூலமே எளிதாய் அடையலாம் என்பதை விளக்குகிறது. சமயம் சார்ந்த இவ்விலக்கியங்கள் வாயிலாக மக்களை பக்குவப்பட்டவர்களாகவும், நன்மையை விரும்பக்கூடியவர்களாகவும் மாற்றுவதே நோக்கமாகக் கொண்டு அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். சூரன், பதுமன் என்ற அசுரர்களை சேவலாகவும், மயிலாகவும் ஏற்றுக் கொள்வதன் மூலம் பகைவர்க்கும் அருளக்கூடியவன் என்பது புலனாகிறது.

# திருச்சி 'பா'ரதனின் குகநானூறு

முனைவர் **சண்முக.செல்வகணபதி**
முன்னாள் முதல்வர்
அரசர் கல்லூரி, திருவையாறு

*"அடியெடுத்துக் கொடுப்பாய் முருகா!*
*அனுதினம் உன்புகழைக் கனிவுடன் நான்பாட"* (அடி)

முருகன் புகழ்பாடும் இசைப்பாடல்களாக அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்கள் அமைந்துள. இவை சந்தஇசை இலக்கியப் பாடல்களாகும். தாளச் செல்வராக விளங்கும் அருணகிரியார் தந்த தாள இலக்கியப் பாடல்களாகும். திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தரநுபூதி, திருவகுப்புப் பாடல்களையெல்லாம் தொகுத்தளித்த தணிகைமணி வ.சு.செங்கல்வராயபிள்ளை முருகன் புகழ்கூறும் பாடல்களையெல்லாம் வகுத்தும் பகுத்தும் பார்க்கும் பார்வையை அருளியுள்ளார். சைவத் திருமுறைகள் பன்னிரண்டாக அமைக்கப்பட்டமை போல முருகன் புகழ்கூறும் பாடல் தொகுப்புகளையும் பன்னிரண்டு திருமுறைகளாகத் தந்துள்ளார்.

அறுபடைவீடுகள் மீது அருணகிரியார் பாடியவை ஆறு திருமுறைகளாகவும், ஏனைய தலங்கள் மீது பாடப்பெற்ற பாடல்களை ஏழாவது திருமுறையாகவும், கந்தரலங்காரம் கந்தரந்தாதியை எட்டாம் திருமுறையாகவும், திருவகுப்புப் பாடல்களையும் ஒன்பதாம் திருமுறையாகவும், கந்தரநுபூதியைப் பத்தாம் திருமுறையாகவும், பலர் பாடிய முருகன் புகழ்கூறும் பாடல்களைப் பதினொன்றாம் திருமுறையாகவும் தேனூர் வரகவி சொக்கலிங்கனார் இயற்றிய சேய்த் தொண்டர்புராணம் நூலைப் பன்னிரண்டாம் திருமுறையாகவும் கணக்கிடுவர்.

### குகநானூறு

இவ்வமைப்பிற்கு மேலும் அழகு சேர்க்கும் வகையில் அகநானூறு, புறநானூறு. குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு போல முருகன் புகழ்பாடும் குகநானூறு என்ற 400 பாடல்கள் கொண்ட நூலைத் திருச்சி 'பா' ரதன் படைத்துள்ளார். இவை இசைப்பாடல்கள். சிறந்த இசை அறிஞர்களால் இசையமைக்கப்பட்டுச் சிறந்த கலைஞர்கள் அரங்குகளில் பாடப் பெற்றவைகளாகும். இவர் முருகன் மீது சுமார் ஈராயிரம் பாடல்களைத் தந்துள்ளார்.

### திருச்சி 'பா' ரதன்

திருச்சி 'பா'ரதனின் இயற்பெயர் ர.தங்கவேலன் ஆகும். பாரதிமீது கொண்ட பற்றால் 'பா' என்ற எழுத்தையும், தந்தையார் ரங்கசாமி என்ற பெயரில் உள்ள 'ர' என்ற எழுத்தையும் தங்கவேலன் என்று தன்பெயரில்

அமைந்த முதல் எழுத்து 'த' கடைசி எழுத்து 'ன்' இணைத்து 'பா'ரதன் என்று அழைத்துக் கொண்டார். இவரது பெற்றோர் கோ.ரங்கசாமி, காமாட்சி ஆவார். 30.09.1934 அன்று திருச்சியில் பிறந்தார். பன்னிரு வயதில் எழுதத் தொடங்கினார். தினத்தந்தி நாளேட்டின் செய்தி ஆசிரியராகப் பணியாற்றினார். 75 வயது வரை வாழ்ந்தார். 75 நூற்களை எழுதினார். முருகன் புகழ் பாடும் அறுபடை வீடுடைய அழகன், குகநானூறு, குகஆயிரம், பழனி தண்டபாணி வழி நடைப்பாடல்கள், சிந்தையில் வாழும் ஸ்கந்தகிரி, குன்றக்குடிகுமரன், பழநிக்கு வாருங்கள், புவனேஸ்வரி ஸ்கந்தகிரிபாமாலை, போற்றி சூழ் புனிதன், முருகாபோற்றி, முருகுப்பாவை, வயலூர் வள்ளல், குகன் கீதாஞ்சலி, வயலூர் அறுபது, முருகுப்பாவை என்ற 15 நூற்களைப் படைத்துள்ளார். இவர் படைத்த "கந்தன்காவியம்" என்ற நாட்டிய நாடகம் சுமார் 700 மேடைகளில் ஆடப்பெற்றுள்ளன. 'குகன் கீதாஞ்சலி' நூலில் 1340 பாடல்கள் உள. இந்தியாவின் முதல் குழந்தை நாடக ஆசிரியராக விளங்கினார். இவரது குழந்தைப் பாடல்கள் 5995 நகல்கள் தேசியக் கல்விக் கரும்பலகைத் திட்டத்தின் மூலம் அளிக்கப்பட்டன.

**குகநானூறு**

தான் படைத்த இசைப் பாடல்களைப் பெரும் இசைவாணர்கள் இசையமைக்க, தலைசிறந்த இசைக்கலைஞர்கள் பாடிட கேட்டு மகிழும் வாய்ப்பைப் பெற்றவர். கவிஞர் குடந்தை சா.கிருட்டிணமூர்த்தியின் தாசன் என்று தம்மை அழைத்துக் கொண்டார். இவரது பாடல்களில் இசைத்தமிழ்ப்பாக்களும் உள்ளன. குகநானூறு பாடல்களில் இரத்னகிரி முருகன் மீது நான்கில் ஒன்று நிலையில் 100 பாடல்கள் உள. வயலூர் முருகன் மீது 60 பாடல்கள் உள. ஸ்கந்தகிரி கந்தன் மீது 33 பாடல்களும், குன்றக்குடி, சுவாமிமலை மீது தலா 20+20 பாடல்களும், வழிநடைப் பாடல்கள் 20, பழனிமுருகன் மீது 32, தனக்கென 12, செந்திலாண்டவன் மீது 10, பரங்குன்றின்மீது 32, தணிகைவேலன்மீது 10, மேலும் எட்டுக்குடி, எண்கண், கதிர்காமம், இலண்டன், சித்தர்மலை, மலேசியமுருகன், மருதமலை, வைத்தீசுவரன்கோயில், விராலிமலை, சிக்கல் தலங்களில் உள்ள முருகப் பெருமான் மீதும் பாடியுள்ளார். முருகப் புகழ்பாடுவதனையே நோக்கமாகக் கொண்டு படைத்து வந்துள்ளார்.

'ஆறுமுகம் கொண்ட தலைவன் ஆறு ஆண்டுகாலம் தன்னிடம் திருவிளையாடல் புரிந்தான். அந்த வெப்பத்தின் கொடுமை தாங்காமல் அவனிடம் சரண் அடைந்தேன்' என்று பாரதன் குறிப்பிடுகிறார். "பார்வதி பாலன் பாமாலை" என்ற நூலில் பாடல்களைப் பதிப்பித்தார். 23.12.1979 அன்று திருச்சி இரசிகரஞ்சனி சபாவில் தஞ்சைச் சகோதரி வி.பிரேமா இப்பாடல்களை முழுநீள இசையாக இப்பாடல்களைத் தந்தார். இதன் மூலம் குகநானூறு, இயக்கம் தொடங்கியது. அதைத் தொடர்ந்து முருகன் புகழ்பாடும் 250 கவிதைகளும், 150 இசைப்பாடல்களும் கொண்ட "குகநானூறு" என்ற நூலைச் சரவணா அச்சக அதிபர் சிற்பி.சோமு அவர்கள் அச்சிட்டு ஏப்ரல் 1988இல் வழங்கினார்.

இந்நூலில் 400 பாடல்கள் உள. குகநானூறு இயக்கம் தொடர்ந்தது. சிற்பி.சோமு அவர்கள் கவிதைகள் நானூறு, இசைப்பாடல்கள் நானூறு என்ற தனி நூற்களை வெளியிட்டுள்ளார். குகநானூறு இசைப்பாடல்கள் இராகம் தாள அமைதிகளொடு வெளியிடப் பெற்றுள்ளன. குகநானூறில் உள்ள இசைப்பாடல்களை 16 பாடகர்கள் பாடகிகள் பாடியுள்ளனர். மேலும் தஞ்சை இலட்சுமி சங்கீத வித்யாலயாவைச் சார்ந்த நூற்றுக்கும் மேற்பட்ட மாணவ மாணவியர்கள் தமிழ்நாடு முழுவதும் இவ்இசைநிகழ்ச்சிகளாகப் பாடி 120 இசை நிகழ்ச்சிகளை நிறைவு செய்தனர்.

திருபுவனம் திரு.ஜி. ஆத்மநாதர் 71, பலபாடகர்கள் இணைந்து 11, நெல்லை ஆ.சுப்பிரமணியம் 10, பங்கஜம் தாஸ் 6, தஞ்சை வி.பிரேமா 5, போழக்குடி பி.வி. கணேசய்யர் 4, திருச்சி ஏ. வடிவேலு 3, ஏ. வடிவேலு மீனாட்சி 2, சாந்தா சுப்பிரமணியன், உஷாகணேசன், டி.எஸ் கல்யாணி 2, உஷாகணேசன்2, டி.என். கல்யாணி, என். சுதா - எஸ். சாந்தி 1, கே. காமேஸ்வரி-கே. மாதங்கி, எஸ். ஜெயஸ்ரீ, ஆர். ஜெயஸ்ரீ ஆகியோர் பாடியுள்ளனர். இவை பாடிய இசை அரங்குகளின் எண்ணிக்கைகளாகும். இவற்றைத் திருச்சி பாரதன் குகநானூறு நூலில் பதிவு செய்துள்ளார்.

குகநானூறு முதல் இசை நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிய கவிதாமணி அ.வெ.ர.கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களே நூல் வெளியீட்டு விழாவிற்கும் 100வது இசைப் பெருவிழாவிற்கும் தலைமை தாங்கினார். நூல் வெளியீட்டு விழாவின் பொழுது சீர்காழி கோவிந்தராஜன் இப்பாடல்களைப் பாடினார். 100வது இசைவிழா தஞ்சை அரண்மனை சங்கீத மகாலில் 29.4.1984அன்று நடைபெற்றது. அருள்மொழி அரசு கிருபானந்தவாரியார் சுவாமிகள் இப்பாடல்களைப் பாடி பரப்பிய கலைஞர்கட்குக் "குகனிசைச் செல்வர்" "குகனிசைச்செல்வி" என்ற விருதுகள் வழங்கி கௌரவித்தார். இப்பாடல்கள் திரைப்படம், வானொலி, தொலைக்காட்சி, இசைத்தட்டுகளில், ஒலிநாடாக்களில் இடம்பெற்றுள.

திருவாளர்கள் டி.ஆர்.பாப்பா, குன்னக்குடி வைத்தியநாதன், டி.பி.இராமச்சந்திரன், டி.கே.புகழேந்தி இசையமைத்துள்ளனர். இசைமணி சீகாழி கோவிந்தராஜன், சீகாழி சிவசிதம்பரம், திருமதியர் சூலமங்கலம் சகோதரிகள் பாடியுள்ளனர். குகனிசைச் செல்வர் திருபுவனம் 71 இசை நிகழ்ச்சிகளைத் தந்துள்ளார். இசைச் சக்கரவர்த்தி இளையராஜா, வயலின் சக்கரவர்த்தி குன்னக்குடி வைத்தியநாதன், டாக்டர் சீகாழி கோவிந்தராஜன் போன்றோர் மதிப்புரை தந்துள்ளனர். பாரதன் தனது வாழ்நாள் முடியும்வரை பங்குனி உத்திரநாளில் பழனிமுருகனைத் தவறாது வழிபட்டு வந்தார். முருகபக்தியில் ஊறித் திளைத்து, உள்ளம் உருகிட, கனிந்த இசைப்பாடல்களால் முருகப் பெருமானை வழிபட்டார்.

**சுகானுபவத்தின் சாரம்**

குகன் மீது கொண்ட சுகானுபவத்தால் அமுதத் தமிழ் செந்தமிழ்க் கடவுளின் அணிகலன்களாக அமைந்துள்ளன. முருகன் உறைந்துள்ள

தலங்களின் மீது அருணகிரியாரைப் போல பாரதனும் பாடியுள்ளார். முருகபக்திச் சாரமாக இவை அமைந்துள்ளன.

*உன்னைப் பாடும் வாயால் பொய்பேச மாட்டேன்*
*உண்மைக்குள் கரைய நான் தயங்கமாட்டேன்*
*எனையழிக்கத் துன்பம் எத்தனையோ வரட்டும்*
*எழிற்சேந்தா உன்வேல் உடன் காத்துச் சிரிக்கும்* 123

*பாடும் திறனெல்லாம் நீ தந்தது என் பாட்டில்வரும் லயம்*
*நீ சொன்னது – முருகா* 51

*தமிழாலே எனக்கு உறவானவன் -இன்பத்*
*தாயன்பை அளித்தே மெய்க்குருவானவன்*
*இமைமூடா விழியாலே சுவை தந்தவன் -மயிலின்*
*இணையில்லா நடனத்தால் துயர்வென்றவன்* 41

அருணகிரியாருக்கு அடியெடுத்துக் கொடுத்தது போல முருகா நீயே எனக்கும் அடியெடுத்துக் கொடுப்பாய் என்று வேண்டுகிறார். அம்முருகப் பெருமானை உள்ளம் உருகிடப் பாடுகிறார்.

*உருகி உருகி நான் தொழுது தொழுதுணை*
*உள்ளத்தில் வைத்திருப்பேன் - என்*
*உணர்வினில் கலந்திருப்பாய் முருகா* 14

இவரது பாடலில் வரும் இயைபுத்தொடை அமைதி இசையமைதிக்குப் பெருந்துணை நின்கின்றது.

இராகம் :வசந்தா, தாளம் : ஆதி

*சொல்லத் துடித்திடும் சொற்களோ கோடி*
*சோதனை வருகையால் மனம்மிக வாடி*
*நல்லது எதுவெனத் தெளிவுறவே நாடி*
*நலம்பெறும் வழிகளைக் காணாதுனைத் தேடி* 10

அடியாரின் இருள் அகன்றிட முருகா, சரவணா, சண்முக நீ ஓடிவா என்று அழைக்கிறார். இப்பாடல் சகானா இராகத்தில் கண்டசாபு தாளத்தில் அமைந்துளது

*பவயிருள் போக்கிட ஓடிவா*
*பக்தனின் விழிகளை நாடிவா*
*தவநெறி வளர்க்கிறேன் காணவா*
*தாயெனக் காண்கிறேன் தேடிவா* பா.33

என் இன்னிசையைக் கேளாயோ! நீ கார்த்திகைப் பெண்கள் பாடல்களைக் கேட்டவன், சீர்மிகு கீரனின் நேர்வழிப் பாடலால் சிலிர்த்தவன், பார் புகழ் அருணகிரியின் பாடலில் வாழ்பவன். நீ என்னிசையையும் கேட்கவா என்று அழைக்கின்றார்.

காதலுக்கு இலக்கணம் வள்ளியடி அதைக் கவிதையில் இனிமையில் சொல்லடி என்று கவுரிமனோகரி கீர்த்தனையில் பாடுகிறார். (பா.301.வள்ளிக்குறத்தியின் ஆலோலம் தணிகை மலையில் கேட்கிறதாம்.பா.100) பழமுதிர்ச்சோலையின் குமரனுக்கு நேர்ந்த நற்பதியைச் சொல்ல மணக்குதம்மா100. ஆண்டியைக்காண, பழனியாண்டியைக் காண வாருங்கள் 111 என்று அழைப்பு விடுக்கிறார்.

அருட்பயிர்கள் வயலூரில் அழகாக விளைகிறது. ஆறுமுகன் பார்வையில் அது வளமே தருகிறது. உன்புகழ் பாட உள்ளமே துள்ளும் ஓமெனக் கூற நன்மைகள் வெல்லும் 172, எழில்குன்றக்குடி கண்டு நானாடுவேன், எனை நானே மறந்தினிதாய் இசைபாடுவேன் 236, விராலிமலை மீதினிலே வேலவனைக் காணுகின்றேன், வேலவனைக் காணுவதால் விம்மி விம்மி மகிழ்ந்தாடுகின்றேன் 229.

இவ்வகையில் முருகன் புகழ்பாடும் பாடல்களைப் படைத்துள்ளார். கிருபானந்தவாரியார் சுவாமிகள், தவத்திரு சாந்தானந்த சுவாமிகள், முன்னை துணைவேந்தர் ச.அகத்தியலிங்கனார், கலைமாமணி பேராசிரியர் ஆறு.அழகப்பன், கவிதாமணி அ.வெ.ர.கிருஷ்ணசாமி ரெட்டியார் போன்றோர் இப்பாடல்களைப் போற்றி நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ளார். குன்னக்குடி வைத்தியநாதன் அவர்கள் குறிப்பிடுவது போல் இவை கவிதைப் பாடலா, கடவுள் துதிப் பாடல்களா, குழந்தைப் பாடலா, குமரனின் பாடலா, தத்துவமா, காதல்பாட்டா, திருமண நலுங்கா, திரைப்பாடல்களா எதைச் சொன்னாலும் பொருந்தும்.

திருச்சி பாரதன் தான் படைத்தப் பாடல்களை இசையோடு பலர் பாடக் கேட்டார். தன்னுடைய நாடகங்களையும், நாட்டிய நாடகத்தையும் கண்டு மகிழ்ந்தார். ஆயிரத்திற்கு மேற்பட்ட கவிதைகளால் முருகனை வழிபட்டார். இவர் மேலும் வேண்டுவது

*"நானொரு அருணகிரி ஆகிடுவேன் -குக*
*நாயகனைத் தினத்தினமும் பாடிடுவேன்*
*தேனென இனித்திடுமே என்பாட்டு – அவன்*
*தெவிட்டவில்லை என்றிடுவான் அதைக்கேட்டு"*

குகநானூறு பாடல்கள் அனைத்தும் இராகதாள அமைதிகளோடு அமைந்துள என்பதுபோல் அருணகிரியாரைப் போல் பாடிய இப்புலவர் இன்று நம்மைவிட்டு மறைந்தாலும் இவரின் பாடல்கள் என்றும் இவரை வாழவைக்கின்றன. முருகனின் திருப்புகழைக் கூறவைக்கின்றன. சொல், பொருள், இன்பங்கள் நம்மை வியக்க வைக்கின்றன.

# பாம்பன் சுவாமிகளின் அசோகசால வாசம் - தத்துவ விளக்கம்

**ஞா. செல்வகணபதி,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழியற்புலம்,
புதுச்சேரிப்பல்கலைக்கழம்,
புதுச்சேரி.

முருகனின் அருளைப்பெற்று அவனை உலகோருக்கு மிகப்பெரிய அளவில் உணர்த்திய அருளாளர்கள் பலர். அவர்களுள் முதலாமவர் அருணகிரிநாதர். பின்னர் வந்தவர்களில் வள்ளல் இராமலிங்க அடிகள், பாம்பன் குமரகுருதாச சுவாமிகள், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் போன்றோர் ஆவர். அவர்களுள் பாம்பன் சுவாமிகள் எனப்படும் குமரகுருதாச சுவாமிகள் தன் அனுபவத்தால் முருகனை உணர்ந்து பல பாடல்களை இயற்றியுள்ளார். அவற்றில் சுவாமிகள் கண்ட மயூர காட்சி அனுபவத்தை அசோகசால வாசம் எனும் எட்டு பதிகத்தால் நமக்கு அருளியுள்ளார்கள். அதனுள் உறைந்திருக்கும் தத்துவப் பொருளை விளக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

**பாம்பன் சுவாமிகளின் வாழ்வில் குமரனின் திருவிளையாடல்**

1923ஆம் வருடம் டிசம்பர் மாதம் 23 ஆம் நாள் பாம்பன் சுவாமிகள் சென்னை தம்புசெட்டித் தெருவில் நடந்து சென்று கொண்டிருந்தார். அச்சமயம் ஒரு குதிரை பூட்டிய வண்டி வேகமாக வந்து சுவாமிகளை இடித்துக் கீழே தள்ளியது. வண்டிச்சக்கரம் சுவாமிகளின் இடது காலின் மீது ஏறி கால் எலும்புகளை முறித்துவிட்டது. அங்கே குழுமிய அன்பர்கள் சுவாமிகளைக் குதிரை வண்டியில் ஏற்றி சென்னை அரசு பொது மருத்துவமனை மன்றோ வார்டு, 11ஆம் படுக்கையில் கிடத்தி உரிய சிகிச்சை புரிய வைத்தனர். மருத்துவர், முயன்றாலும் சுவாமிகளின் வயது, உணவு நியமம் ஆகியவற்றைக் கருதி கால் எலும்புகள் கூடுவது கடினம் எனக் கூறினர். சுப்பிரமணியதாசர் என்கிற சின்னசாமி சோதிடர் சண்முகக் கவசத்தைத் தொடர்ந்து படித்து வரலானார். சுப்பிரமணியதாசரின் மனவெளியில் சுவாமிகளின் முறிந்த கால் எலும்புகளை இருபுறமும் இரண்டு வேல்கள் தாங்கியிருப்பதைக் கண்டு ஆனந்தம் அடைந்து, சுவாமிகளுக்குச் சுபச் செய்தியாக வெளியிட்டு, கால் எலும்புகள் கூடிக் குணமடையும் வரை கவச பாராயணம் தொடர்ந்தார். கால் எலும்புகள் நன்கு பொருந்தி கூடிவருவதை நிழற்படம் எடுத்துப்பார்த்த மருத்துவர்கள் வியப்படைந்தனர்.

சுவாமிகளின் திருக்கண்கள் காண மேற்றிசை வானில் ஓரிரவு இருமயில்கள் தோகைகளை விரித்து நடனமாடியதைக் கண்டு. குமரேசனின் கருணையைப் புகழ்ந்து பாடினார். மற்றொரு நாள் தமது படுக்கையில்

செங்குழவியொன்று படுத்திருக்கக் கண்டவுடன் அக்குழவி மறைந்தது. இன்னும் "பதினொரு நாட்களில் பூரண குணமடைவாய் அதன் பின்னர் மருத்துவமனையை விட்டுப் போகலாம்" என்ற அசரீரிச் செய்தியும் கிடைக்கப் பெற்றார். மன்றோ வார்டில் இருந்த சுவாமிகள் மேற்றிசை வானில் கண்ட நடனக்காட்சி, சாதாரண மயிற்பறவைகள் காட்சியன்று ஒரு மயில் விராட்பிரணவம் ஆகும். மற்றொன்று பிரமப்பிரணவம் ஆகும். இவை சுவாமிகளின் தவத்தன்மையினால் கிடைத்த காட்சியாகும்.

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் கண்டு தரிசித்த மயூர காட்சியை, வருடம் தோறும் மார்கழி மாதம் பூர்வ பட்சம் பிரதமை திதியில் மயூரவாகன சேவன விழா என்ற ஞான பூஜையாக நிகழ்த்த மஹாதேஜோ மண்டலத்தார் அனுசரித்து நடத்த விவரங்களைக் கூறி அவ்வழியே சுவாமிகள் இகலோக வாழ்வு வரையிலும் இந்நாளிலும் தொடர்ந்தும் நடைபெற்று வருகிறது.

**அசோக சால வாசம் ஓர் அறிமுகம்**

சுவாமிகள் இயற்றிய ஆறுமண்டலங்களுள் ஆறாம் மண்டலமாகத் திகழும் நூல் ஸ்ரீமத் குமாரசுவாமியம் ஆகும். அதில் குமாரஸ்தவம், முதல்வன் புராணமுடிப்பு என்ற பகுதி நீங்கலாக 5 காண்டங்கள் உள்ளது. அதில் மூன்றாம் காண்டமான "திருக்கடாவிடை" எனும் தலைப்பின் கீழ் உள்ளதே "அசோக சால வாசம்" ஆகும். இது எட்டு பதிகங்களால் ஆன பகுதியாம். இதில் சுவாமிகளுக்குச் சிவக்குமாரன் ஆன முருகன் - தெய்வ மருத்துவம் புரிந்ததும், மயூரக் காட்சி அருளியும், குழந்தை வடிவக் குமரன் சுவாமிகளின் அருகில் கிடந்து காட்சிக்கொடுத்து மறைந்ததுமான செய்திகளை மிக அழகாகவும் ஆழமாகவும் தலைவி - தோழி வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார். கடா என்பதன் பொருள் வினா என்பதாம். விடை - விடையிருத்தல். கேள்வி கேட்டு விடைபெறுதல் என்பது கடாவிடையாகும்.

"அசோக சாலம்" என்பது அசோக மரம். அம்மரம் அடர்ந்துள்ள சோலையில் வாசம் செய்தல் அசோக சால வாசம் ஆகும். அ-சோகம் - மகிழ்ச்சித் தன்மை, சால என்பது உரிச்சொல் அதற்குப் பொருள் மிக மிகவும் என்பதாம். வாசம் - தங்கும் இடம், வசிக்கும் இடம் என்பதாம். மிக மகிழ்ச்சி தரக்கூடிய இடத்தில் வசித்தல் என்பதாம். இதில் தலைவியானவள் முருகனின் மீது மிக்க அன்பு பூண்ட ஒரு மாந்தராகவும், அவளுடன் இறையறிவு வாய்க்கப்பெற்ற தோழி ஒருத்தியையும் புணைந்து தாம் பெற்ற இறையனுபவத்தைத் தோழியின் வாயிலாக தலைவிக்கு உணர்த்தும் விதமாக விளக்கியுள்ளார் சுவாமிகள். அசோக சால வாசத்தில் இறைச்சிறப்பு, மும்மலம், முன்வினை, நிலையாமை, வாகனச்சிறப்பு, தவப்படிநிலை - (வழிபாடு, தவமுயற்சி, மனஇயல்பு, துறவு நிலை) என்ற கூறுகளின் அடிப்படையில் இறைவனைப் போற்றிய விதத்தையும், தத்துவச் செய்திகளையும், அவர் கையாண்ட நெறியையும் காணமுடிகிறது.

**இறைச்சிறப்பு**

முருகனின் திருவடியை வணங்கும் இன்பம் உடையவர்களுக்கு நஞ்சும் அமுதமாகும். அவ்வின்பம் வாய்க்கப்பெறாதவர்களுக்கு அமுதமும் நஞ்சாகும் என்பதிலிருந்து இறைவனின் அருளாலே எல்லாம் நடைபெறுகிறது. இறையருள் இருந்தால் எச்செயலிலும் வெற்றி கிடைக்கும். இறைவனின் இயல்பைக் கூறும் போது, முருகனே அனைத்து உயிராகவும் இருக்கிறான். அவனே எல்லாவற்றையும் அறிபவன் என்பதனை

*'சடம் துளும்பு உயிர் அனைத்தையும் காண் தொழில்சாரா*
*உடந்தையால் அறிபவன் செவி எங்கணும் உடையோன்*
*நடந்திடா நடையான் குகன்'.* (அசோக சால வாசம் 1:7)

வண்டானது தனது முயற்சியினாலே பூவிலுள்ள தேனை உண்டு இன்புகிறது. ஆனால் கண்களால் காணும் பொழுதும், செவ்விய அறிவால் நினைக்கும் பொழுதும் இன்பம் தருவது முருகனாகும்.

*'.......காண் தோறும்*
*செம்மதி நினைக்கும் தோறும் செறிவது முருகு இன்பு ஒன்றே'*
(அசோக சால வாசம் 3:8)

இறைவனின் திருவடியை அடைய விரும்புபவர்களுக்கு அருள் புரிபவன் என்பதை,

*"தேடு அகம் என் அன்பில் உறுமாறு அருள் புரிந்தபடி*
*சேர அருள் என்று இறைவி பாடினாள்.* (அசோக சால வாசம் 8:7)

**நிலையாமை**

சுவாமிகள்; தமக்கு நேர்ந்த கால் முறிந்த துன்பத்தினால், மனமானது உலகை விட்டு நீங்க எண்ணுவதால், உள்ளும் புறமுமாக உலவிக் கொண்டிருக்கும் உயிர்க் காற்றின் செயலும் முறிந்தது, நான் என்னும் எண்ணமும் முறிந்தது, குற்றத்துக்கே இடமாகிய உலக வாழ்வும் முறிந்தது. மீண்டும் கருப்பையில் பிறப்பதற்கான வினையும் முறிந்தது என்பதனை,

*"கால் முறிந்தது மூப்பு அஞர் நிலையில் என் கதி கொள்*
*நீல் முறிந்தது விடற்கு உள்ளே நிகழ் அதனால்*
*நான் முறிந்தது நவை நிலன் முறிந்தது நடலைச்*
*சூல் முறி எனா உவந்தனன் சொன துறவி"*
(அசோக சால வாசம் 4:6)

**மயில் தத்துவம்**

முருகனின் வாகனம் மயில் சாதாரணப் பறவை அல்ல. எதிர் வருவதை முன்கூட்டியே அறியக்கூடிய ஞானப்பறவை. மனிதன் புற அழகினில் மயங்கி எல்லையற்றதாகத் தன்னுள் உறையும் ஆத்மா எனும் இறைவனை உணர்வதில்லை. தன்னுடைய மனம், புத்தியினால் ஏற்பட்டிருக்கும் அகந்தையை

அகற்றி நீல நிறமாகிய மயில் மேல் முருகன் செல்வதைப் போல தன் கவனத்தை உட்திருப்பி ஆன்மாவினுள் நிலைக்கச் செய்ய வேண்டிய கடமையை உணர்த்துவதே மயில் வாகனத்தின் தத்துவம் ஆகும்.

**தனக்குற்ற நிலையினால் முருகனுக்கு என்ன நேருமோ**

சுவாமிகள் தம்முடைய கால் முறிவுண்டதால் இந்த உலகம் என் அப்பனாகிய முருகனை இழிவாகப் பேசுமோ? அதை எப்படி நான் தடுப்பேன் என்று கவலை கொண்டார். அதனை நீக்கும் முகத்தான் என் அருகில் பால வடிவினனாக முருகப்பெருமான் திருவுருவக்காட்சியை அளித்துப் பல அருட் செயல்களைச் செய்து, காலினையும் சரிசெய்த தன்மையினை,

> *"என்றன் நப்பதம் ஊறு கொண்டதை எண்ணி எண்ணி வசுந்தரை*
> *என்றன் அப்பன் அயில் பிரானை இழித்து உரைத்திடுமோ இதற்கு*
> *என் தடுப்பு அயர்வேன் எனப் பெரிதும் கவன்று அன்னோன் அளி"*
>
> (அசோக சால வாசம் 6:4)

**அசிரீரிச் செய்தி**

காலில் ஏற்பட்ட புண் இன்னும் பதினைந்து நாளுக்குள் ஆறும், அதுவரை மருத்துவமனையிலே இருந்து சரிசெய்து கொண்டு வருக எனும் நாத ஒலி கேட்டதாக சுவாமிகளே தம் பாடலில் பதிவு செய்கிறார்.

> *"இன்னுமே பதினைந்து நாள்களுளே புண்ஆறும் அவ்எல்லையும்*
> *நன்னர் மேய மருத்துவப்பதி நீங்கொணாது எனும் நாதமும்"*
>
> (அசோக சால வாசம் 6:7)

**தவப்படிநிலை**

ஒரு உயிரானது பரிபக்குவ நிலையை அடைய பல படிநிலைகளை தாண்டுதல் வேண்டும். அவ்வாறு முதலாவது படி நிலையாக வழிபாடு கூறப்படுகிறது. (சரியை, கிரியை, யோகம், ஞானம்) வழிபாடு என்பது எல்லா உயிர்களுக்கும் பொது சிலந்தி, யானை, எறும்பு போன்றவை முதலில் உலகச் செயல்களையும் அவற்றின் இயக்கங்களையும் அழகையும் ரசித்த தலைவியானவள் இறைவனின் சிறப்பினையும் குமரதாஸரின் இறைபேற்றினையும் தோழி மூலமாக உணர்ந்து அவருக்கு அருள் புரிந்த இறைவன் தனக்கும் அருள்வான் என்று இறைவனின் திருவடியை நாட மல்லிகை சிக்கொண்ணாது படர்ந்துள்ள பந்தலின் பால் சென்று வழிபாடு செய்கிறாள்.

குளத்தில் முழுகுதல் - காசு, பசு போன்றவை தானம் அளித்தல் என்பதனைப்பற்றி தலைவி வினவ: அதற்குத் தோழியானவள் இறைச்சிந்தனை உள்ளவர்களுக்கு ஏற்படும் உடல் சூட்டை தணிக்க குளத்தில் மூழ்குதலும், தரும காரியங்கள் செய்வதன் மூலம் இறைவனின் அன்பிற்கு பாத்திரமாகலாம் என்கிறாள். நீண்ட சடை முடியும் அக்கமாலையும் பற்றி கேட்டும் தலைவியிடம் நிலையற்ற உடல் அழகை புணைவதைத் தவிர்த்து நிலையான இறைவனை

அடைய முயற்சிக்கும் பொழுது சடைமுடி தானாக அமையும். இவ்வாறாக சடைமுடியும் அக்கமாலையும் பற்றற்ற மனித வாழ்வின் அடையாளமாகத் திகழும் எனத் தோழி பகர்ந்தாள். தியானத்தின் தன்மையினைக் கும்பகம் எனும் நிலையில் நிறுத்தி மனம் அடங்கச் செய்யும் முறையினைத் தலைவிக்குத் தோழி கூறுகின்றாள்.

இவ்வாறு முருகனின் திருவருளை உணர்ந்த தலைவியானவள் எனக்கும் உன் திருவடியை அடைய அருள் புரிவாயாக என்று வேண்டுகிறாள். பிறகு என் உள்ளத்தைக் குடிகொண்ட முருகன் எனை இன்போடு ஏற்றுக் கொண்டான். இந்த அசோக சோலையே எனை இறைவன் ஆட்கொண்ட இடமாகும். இங்கிருந்து நான் செல்ல மாட்டேன் என்று தன் தோழிகளிடம் அணிகலன்களை வழங்கினாள். இதனைக் கண்ட தோழியர் அவளை வாழ்த்தி அவள் திருவடிகளைப் பூசை செய்து வழிபட்டுச் செல்கின்றனர்.

**நிறைவாக**

இவ்வாறாக அசோக சால வாசம் என்கிற அருட்திருப் பாடலால் தலைவியும் தோழியும் பேசும் பாங்கில் அமைத்து உலகியல் இயக்கங்களையும் அவை சார்ந்த செய்திகளையும் தலைவி கேட்க தோழி கூறுவதாக அமைத்து அத்தலைவியானவளை மதிமந்திரியான தோழியே வணங்கும் படி துறவறம் மேற்கொண்டு முருகப்பெருமானின் திருவடியை அடைந்த செய்தியையும், அதன் மூலம் சுவாமிகளுக்கு நேர்ந்த சம்பவத்தையும், சுவாமிகள் பெற்ற இறையனுபவத்தையும் உலகில் உள்ள மக்களுக்கு விளக்கும் விதமாக அமைந்துள்ளது.

**துணை நின்ற நூல்கள்**

1. "அறிமுகம்" - அ.கிருஷ்ணசுவாமி, சென்னை.
2. "அசோக சால வாசம்" - பேருரை நூல் - எம்.என் சங்கரநாராயணன், சென்னை.
3. "பாராய்ண பாமாலை" - புவனகிரி மஹாதேஜா மண்டலம் வெளியீடு, புவனகிரி.
4. "முருகக்கடவுள்" - சுவாமி சித்பவானந்தர், ஸ்ரீஇராமகிருஷ்ண தபோவனம், திருப்பராயத்துறை.

# முருகனின் பிறப்பு

முனைவர் மு. செல்வி,
உதவிப் பேராசிரியர்,
காமராஜ் கல்லூரி,
தூத்துக்குடி – 8.

தமிழ் மக்களால் வணங்கப்படும் பெருந்தெய்வங்களுள் மிகவும் சிறப்புடையவன் முருகன். இராமாயண காலத்திலிருந்து இக்காலம் வரையுள்ள இலக்கியங்களில் முருகனைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. காலத்தின் வளர்ச்சி மாற்றம் காரணமாக முருகனுடைய பிறப்பு, வளர்ப்பு பற்றிய செய்திகளிலும் சில மாற்றங்கள் ஏற்பட்டுக் கொண்டே வந்திருக்கின்றன. முருகனுடைய பிறப்பு பற்றி இலக்கியங்கள் பல்வேறு விதமாகக் கூறுகின்றன. அச்செய்திகளைப் பகுத்துப் பார்க்கும் நோக்கில் ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

## இலக்கியங்கள் சுட்டும் முருகனின் உற்பத்தி

முருகனுடைய பிறப்பிற்கு மூலகாரணம் அக்கினி என்றும் சிவனென்றும் இலக்கியங்கள் இருவேறு கருத்துக்களைக் கூறுகின்றன. முருகனை உற்பத்தி செய்தது உடலின் எந்தப் பகுதி என்பதிலும் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. இராமாயணத்தில் அக்கினியே முருகனின் தந்தை. "அக்கினியிடமிருந்து முருகனின் பிறப்புக்கான விதை கிளம்பியது. ஆனால் அது உடலின் எந்தப் பகுதியிலிருந்து புறப்பட்டது என்ற செய்தி காணப்படவில்லை" என்று நா. வானமாமலை தமிழர் பண்பாடும் தத்துவமும், ப.19 என்னும் நூலில் குறிப்பிடுகிறார். பாரதத்திலும் அக்கினியே முருகனின் தந்தை. அக்கினி மீது மோகங்கொண்ட சுவாஹா என்னும் வனப்பெண் அக்கினி விரும்பிய கார்த்திகைப் பெண்களின் வடிவத்தில் சென்று அவனைப் புணர்ந்து வீரியத்தைப் பெறுகின்றாள் என்று நா. வானமாமலை தமிழர் பண்பாடும் தத்துவமும், ப.23ல் கூறுகிறார். பாரத கதைப்படி முருகனின் உற்பத்தி நடைமுறை வாழ்க்கையில் உள்ளது போலவே நடந்திருக்கின்றது. "சிவனும் ருத்திரனும் ஒருவரே; சிவனுடைய உடலிலிருந்து முருகனின் பிறப்புக்கான விதை வெளிப்பட்டது" என்று வால்மீகி இராமாயணம் பாலகாண்டம் ஸர்க்கம் 36 ப.92 கூறுகிறது. இந்நூல் கந்தனுடைய பிறப்பு பற்றிக் கூறினாலும் உடலின் எந்தப் பகுதியிலிருந்து அவ்விதை உருவானது என்று குறிப்பிடவில்லை.

சங்க இலக்கியங்களில் திருமுருகாற்றுப்படை, பரிபாடல் ஆகியவற்றில் முருகனுடைய பிறப்புப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. ஆல மரத்தின் கீழிருந்த தட்சிணாமூர்த்தி முருகனுக்குத் தந்தை என்பதை "ஆல் கெழு கடவுட் புதல்வ" என்று திருமுருகாற்றுப்படை வரி.256 கூறுகிறது. சிவன்

உமையோடு கூடிக் கலந்த இன்பக் கலவியில் உமை கருவடைகின்றாள் என்பதை "உமையொடு புணர்ந்த காம வதுவையுள், அமையாப் புணர்ச்சி அமைய" என்று பரிபாடல் செவ்வேள் 5 வரி-28 கூறுகிறது. எனவே முருகனுடைய உற்பத்தி சாதாரண இயற்கை முறையில் நிகழ்ந்ததாக நூல் கூறுகிறது. சிவனுடைய நெற்றிக் கண்களிலிருந்து முருகன் உருவானான் என்று கந்த புராணம் கூறுவதைக் கதிரவேள் கருணை ப.73 என்னும் நூலில் கிருபானந்த வாரியார் கூறுகிறார். சுவாமி சித்பவானந்தர் கடவுளின் வடிவங்கள் ப.76 ல் "சிவனாரது ஐம்பொறிகளினின்றும் ஐந்து ஒளிப்பிழம்பு, மனத்தினின்று மற்றோர் ஒளிப்பிழம்பு ஆக ஆறு ஒளிப்பிழம்பு கிளம்பின" என்று முருகனின் உற்பத்தியைத் தெளிவுபடுத்துகிறார். "வேதத்தில் முருகனுக்கு அக்கினியே தகப்பனாகவும் பின்னர் ருத்திரனே தகப்பனாகவும் இருக்கத் தமிழ் நாட்டில் சிவனையே தகப்பனாக்கிய கதையைக் காண்கிறோம்" என்று தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு ப.21ல் பி.எல்.சாமி கூறுகிறார். வடமொழியில் அக்கினிக்கு இருந்த அதே அளவு சிறப்பு தமிழ் நாட்டில் சிவனுக்கு இருந்த காரணத்தால் இங்கு சிவனை முருகனின் தந்தையாகக் கூறுகின்றனர் என்பதை அறிய முடிகின்றது.

**ஒளிப் பிழம்பைச் சுமந்து சென்றோர்**

முருகனின் பிறப்புக்குரிய வித்தைச் சுமந்து சென்றவர்களைப் பற்றி இலக்கியங்களில் வேறுபட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன. அக்கினியிடமிருந்து பெற்ற வித்தைக் கங்கை தாங்கமுடியாமல் இமயமலை அடிவாரத்தில் வைத்ததாக இராமாயணக் கதை கூறுகின்றது. பாரதக் கதையில் கார்த்திகைப் பெண்கள் வடிவத்தில் அக்கினியைப் புணர்ந்த சுவாஹா தான் பெற்ற வித்தை 'கிருடி' என்னும் கருடப்பறவையாகப் பறந்துபோய்ச் சரவணப் பொய்கையில் சேர்த்ததாகத் தமிழர் பண்பாடும் தத்துவமும் ப.22 கூறுகிறது.

ருத்திரனிடமிருந்து கிளம்பிய ஒளிப்பிழம்பு பூமியில் விழ அதை அக்கினி, வாயு, கங்கை போன்றோர் சுமந்து சென்றனர் என்று வால்மீகி ராமாயணம் பாலகாண்டம் ஸர்க்கம் 36 கூறுகிறது. 'ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப' என்பதற்கு விசும்பும் வளியும் தீயும் நீரும் நிலனுமாகிய ஐவருள் ஒருவனாகிய தீ என்னும் அவன் இறைவனிடமிருந்து வித்தைப் பெற்றான் என்று திருமுருகாற்றுப்படை பா.வரி 254 கூறுகிறது. சிவன் தன்னிடமுள்ள வீரியப் பொறிகளை நிலமகளிடத்தில் ஒப்படைத்ததாகவும், அதன் வேகத்தைத் தாங்க முடியாமல் அவள் தீக் கடவுளிடம் கொடுத்ததாகவும், அவன் அதைக் கங்கையிடம் ஒப்படைத்ததாகவும் கங்கை இமயமலையிலுள்ள சரவணப் பொய்கையில் சேர்த்ததாகத் திருச்செந்தூர்த் தலபுராணம் ப.75 கூறுகிறது. சிவனிடமிருந்து கிளம்பிய அக்கினிப் பொறிகளை வாயுவும் அக்கினியும் சுமந்து சென்று கங்கை நதியில் விட்டதாகவும் கங்கை அதன் வெம்மையைத் தாங்காமல் இமயமலைச் சாரலில் உள்ள சரவணப் பொய்கையில் சேர்த்ததாகக் கச்சியப்ப சிவாசாரியார் கந்தபுராணத்தில் கூறுகிறார். உமையம்மையிடமிருந்து சிதைந்து வந்த கருவை ஏழுமுனிவர்கள் பெற்றுச் சென்று அருந்ததி தவிர

மற்ற ஆறு பெண்களிடம் சேர்த்ததாகப் பரிபாடல் செவ்வேள் - 5 வரி 37-39 கூறுகிறது.

**கருவை ஏற்றுக் கொண்டோர்**

முருகனைப் பிறப்பிக்கச் செய்யும் மூலவித்து பிறந்த இடம், அதைச் சுமந்து சென்றோர் பற்றிப் பலவிதமான கருத்துக்கள் இருந்தாலும் அவ்வித்து கடைசியாகச் சென்று தங்கிய இடம் சரவணப் பொய்கை என்பதைப் பல இலக்கியங்கள் ஏற்றுக் கொள்கின்றன. கார்த்திகைப் பெண்கள் முருகனைப் பெற்றெடுத்தனர் என்றும் சரவணப் பொய்கையில் முருகன் பிறந்தான் என்றும் இருவேறு கருத்துக்களை வால்மீகி இராமாயணம் ஸர்க்கம் 36,37 கூறுகிறது. கருவை ஏற்றுக் கொண்டோர் யார் என்பது பற்றித் திருமுருகாற்றுப்படையில் தெளிவாகக் கூறப்படவில்லை.

*'மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்*
*நிறைவயின் வழாஅது நிற் சூலினரே'*

என்பதால் கார்த்திகைப் பெண்களே கருவை ஏற்றுக்கொண்டனர் என்ற செய்தி பரிபாடல் வையை 5 வரி 46-47 மூலம் அறியமுடிகின்றது.

**முருகனின் பிறப்பு வளர்ப்பு குறித்த கருத்துகள்**

"இமயமலை அடிவாரத்தில் ஆறுமுகங் கொண்ட குமரன் பிறந்ததாகவும் அவனைக் கார்த்திகைப் பெண்கள் ஆறுபேர் வளர்த்ததாக இராமாயணம் கூறுகின்றது. சரவணப் பொய்கையில் காஞ்சனை குண்டம் என்ற இடத்தில் முருகன் பிறந்ததாகவும் கார்த்திகைப் பெண்களில் குரோத சமுத் பவா என்பவள் முருகனைப் பாதுகாத்து வந்ததாகப் பாரதம் கூறுகின்றது.

இமயமலையில் முருகன் பிறந்ததாகவும் அவனைக் கார்த்திகைப் பெண்கள் வளர்த்ததாக வால்மீகி இராமாயணம் கூறுகின்றது" என்று நா.வானமாமலை தமிழர் பண்பாடும் தத்துவமும் பக்.23-24ல் கூறுகிறார். கார்த்திகைப் பெண்கள், மலைமகள், கொற்றவை பழையோள் ஆகியோர் முருகனுக்குத் தாயாகச் சுட்டப்பட்டுள்ளதைத் திருமுருகாற்றுப்படை பா.வரி 255-257 கூறுகிறது. கார்த்திகைப் பெண்கள் அறுவரும் இமயமலையில் உள்ள சுனையில் தாமரைப் படுக்கையில் தனித்தனியாக ஆறு குழந்தைகளைப் பெற்று எடுத்ததாகவும் முருகன் ஆறு உருவமாகத் தோன்றிப்பின் ஒருருவமாக விளங்கியதாகப் பரிபாடல் செவ்வேள் 5 வரி 48-54 கூறுகிறது. ஆறுமுகம், பன்னிரண்டு தோள்கள், ஒருடல் ஆகிய உருவத்துடன் முருகன் தோன்றியதாகவும் கார்த்திகைப் பெண்களே அவனைப் பாலூட்டி வளர்த்ததாகவும் கந்தவேள் கருணை ப.76 கூறுகிறது. முருகன் வேலாகப் பிறந்தான் என்பதை 'அள்ளிலைச் சுடர் வேலிறை யாயவ தரிக்க' என்று திருச்செந்தூர்த் தலபுராணம் பா.145 கூறுகிறது.

**முடிவுரை**

முருகனுடைய பிறப்பு வளர்ப்பு பற்றிப் புராணங்களுக்குள் ஓர் நிலையான கருத்து இல்லை. அந்தந்தக் கால கட்டத்தில் சிறப்புடைய தெய்வங்களைத் தந்தையாகவும், தாயாகவும் கூறுகினறனர். முருகன் சிறப்பான ஓர் கடவுளாகக் கருதப்பட்ட காரணத்தால் அவனுடைய பிறப்பை உயர்நிலைப்படுத்திக் காட்டுவதற்காக அவ்வப்போது சில மாற்றங்களை செய்துள்ளனர். ஆரம்பநிலையில் அக்கினி முருகனின் தந்தையாகக் கருதப்பட்டான். பின் காலவளர்ச்சியால் சிவன் சிறப்புடைய தெய்வமாகக் கருதப்பட்ட காரணத்தால் சிவனை முருகனுக்குத் தந்தையாகக் கூறினர். ஆனாலும் அக்கினிக்கும், முருகனுக்குமுள்ள தொடர்பை முழுவதுமாக நீக்காமல் சிவனிடமிருந்து வெளிக் கிளம்பிய வீரியத்தைச் சுமந்து சென்று கங்கையில் சேர்த்த பணியைச் செய்தவனாகக் கூறினர். பிறகு முருகனைத் தாய்வழித் தெய்வத்தின் மகனாக இணைத்த பிறகு அத்தாய்த் தெய்வத்திற்கு கணவனாக சிறப்புடைய தெய்வத்தை இணைத்தபோது சிவன் முருகனின் தந்தை என்ற நிலையை அடைந்திருக்கலாம் என்பதை அறிய முடிகின்றது.

# தமிழ் இலக்கியங்களில் முருகன்

முனைவர் க. சேகர்
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,
மாநிலக் கல்லூரி,
சென்னை- 600 005.

நம் முன்னோர் பல கடவுள்களைக் காலங்காலமாகப் போற்றியும் துதித்தும் வந்துள்ளனர். அவற்றுள் குன்று இருக்கும் இடமெல்லாம் தமிழ்க்கடவுள் முருகப் பெருமான் வீற்றிருப்பதாக எண்ணி வந்தனர். முருகக் கடவுளைப் புலவர் பெருமக்களும் சங்க காலம் தொட்டுப் பாடல்களில் புகழ்ந்தும் வியந்தும் வந்துள்ளனர். அவற்றை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தேனினும் இனிய நம் செந்தமிழ்மொழி உலக மொழிகளுக்கெல்லாம் பழமையான, தொன்மையான மொழி. செம்மொழி தகுதி பெற்ற தமிழ்மொழியில் புலவர்கள் முருகனின் பெருமைகளை, சிறப்புகளை, அருட்செயல்களைப் பலவாறாகப் புகழ்ந்துள்ளனர். சங்க இலக்கியம் பழந்தமிழரின் வாழ்வியலைச் சிறப்பித்துக் கூறும் இலக்கியம் ஆகும். அவற்றுள் திருமுருகாற்றுப்படையைப் பாடிய நக்கீரர் குறிஞ்சி நில தெய்வமாகிய முருகனைப் பல நிலைகளில் போற்றுகிறார். உலகில் வாழும் உயிரினங்கள் எல்லாம் மகிழ்ச்சியோடு இருப்பதற்கும் செழிப்போடு வாழ்வதற்கும் அடிப்படைக் காரணம் ஞாயிறு. அதனால் தான் இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் ஞாயிறு போற்றுதும் என்று சொல்லி காப்பியத்தைத் தொடங்குகிறார்.

உலகுக்கு ஒளியும் உயிரும் ஊட்டும் கதிரவனை நக்கீரர் திருமுருகாற்றுப்படையின் தொடக்கத்தில் வாழ்த்தி அந்தக் கதிரவனோடு நுதல் விழியான் திருமகன் முருகனையும் ஒரு சேர போற்றுகிறார்.

*"உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டா அங்கு*
*ஓவற விமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி"* (திருமுருகு. 1-3)

வானம் மழை பொழிந்து உலகத்தைக் காப்பது போல் முருகனும் திருவருளைப் பொழிந்து மக்களைக் காக்கிறான் என்கிறார் நக்கீரர். முருகன் வீற்றிருந்து அருள்பாலிக்கும் இடங்களைக் கூறப் புகுந்த நக்கீரர் முதலில் திருப்பரங்குன்றத்தினைப் பாடுகிறார்.

*"கண்போல் மலர்ந்த காமருசுனை மலர்*
*அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்*
*குன்றமர்ந்து உறைதலும் உரியன்"* (திருமுருகு. 72-74)

திருச்சீரலைவாய் எனும் திருச்செந்தூரில் ஆறுமுகப் பெருமான் ஓராறு முகமும் ஈராறு கையுமாய் கொண்டு உயிர்களைக் காக்கிறான் என்கிறார். திருவாவினன்குடியைப் பாடுகிறபோது பன்னிரு ஆதித்தியரும் அட்ட வசுக்களும், பதினெண் கணங்களும் தம்தம் குறையை எடுத்துக் கூற முருகனைக் காண வந்தனர் என்கிறார்.

திருவேரகத்தில் கொலு வீற்றிருக்கும் கந்தவேளை நக்கீரர் பாடும் பொழுது அந்தணர்கள் சரவணபவ, நமோ குமாராய எனும் மறைமொழியினை நாப்புடை பெயருமளவானே ஓதி மணம் மிக்க மலர்களைத் தூவி வாழ்த்துக்கூறி நிற்கின்றனர் எனப் புகழ்கிறார்.

பழமுதிர் சோலை இறைவனைப் பற்றிப் பாடுகிற பொழுது ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினனாக முருகன் இருக்கிறான் என்று போற்றுகிறார். இவ்வாறே குன்றுதோறும் ஆடிவரும் குமர வடிவேலனைப் பல நிலைகளில் குன்றுதோறாடலில் காட்சிப்படுத்துகிறார்.

**பரிபாடல் காட்டும் முருகனின் பெருமை**

பரிபாடலில் எட்டுப் பாடல்கள் செவ்வேளைப் பற்றியன. முருகன் செந்நிறம் கொண்டவன் ஆகையால் செவ்வேள் என்றும் சேயோன் என்றும் வழங்கப்படுகின்றான். செவ்வேளிடத்தில் கடுவன் இளவெயினனார் இறைவனே நாங்கள் உன்னிடத்தில் இருந்து கேட்பன பொருளேர, பொன்னோ, போகமோ அல்ல; அருள் அன்பு அறம் என்ற மூன்றுமே என்கிறார்.

*“.... யாம்அம் இரப்பவை*

*பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்*

*அருளும் அன்பும் அறனும் மூன்றும்*
*உருளிணர்க் கடம்பின் ஒலி தாரேரயே“* (பரி. 5:78-81)

நல்லந்துவனார் பரிபாடலில் இமயக்குன்று ஒத்த பரங்குன்றினையும் அறுமுகனைப் பெற்றெடுத்த பதுமப் பாயலினையும் அழகுற வர்ணிக்கிறார். குன்றம் பூதனார் தம் பாடலில் முருகனின் திருவவதார சிறப்பினை முதலில் எடுத்துக் கூறி பிறகு களவின் வழி வள்ளி முருகனைக் கூடிய சிறப்பினை அடுத்ததாகச் சொல்லி பிறகு வள்ளிக்கும் தெய்வானைக்கும் இடையே நிகழ்ந்த ஊடலைக் கூறி முருகனை விவரிக்கிறார். இதே போன்று கேசவனாரும், நல்லழுசியாரும், நப்பண்ணாரும் இறைவனாகிய முருகனைப் பல நிலைகளில் போற்றி வாழ்த்துகின்றனர்.

**சிலப்பதிகாரத்தில் முருகனைப் பற்றிய பதிவு**

வஞ்சிக் காண்டத்தின் முதல் காதையாகிய குன்றக்குரவையில் இளங்கோவடிகள் முருகனின் பெருமைகளைப் பலபடப் புகழ்ந்து கூறுகின்றார். குன்றுகளில் வாழ்கிற குறமகளிர் புனலில் மூழ்கி விளையாடிவிட்டு பின்னர் முருகனை வாழ்த்திப் பாடுகின்றனர்.

*"உரவுநீர் மாகொன்ற வேலேந்தி யேத்திக்*
*குரவை தொடுத்தெரன்று பாடுகம் வா தோழி"* (சிலம்பு. குன்றக்:7)

என்று சூரபதுமனை வென்ற வேலனின் வெற்றியைக் குரமகளிர் பாடுகின்றனர். முருகன் மயில்மீதேறி, அசுரர் பெருமை எல்லாம் அழியும்படி செய்தது, பன்னிரு கையில் ஏந்தியிருக்கிற ஒப்பற்ற வேல் ஆகும் என்று குரமகளிர் போற்றுகின்றனர்.

*"பிணிமுக மேற்கொண்டு அவுணர்பீடழியும் வண்ணம்*
*மணி விசும்பிற் கோனேத்த மாறட்ட வெள் வேலே"*
(சிலம்பு : குன்றக்குரவை : 9)

மேலும் முருகனது வேலானது அசுரனின் நெஞ்சு பிளக்க கிரவுஞ்ச மலையினை அழித்தது என்றும் பாடுகின்றனர். சரவணப் பொய்கையில் கார்த்திகைப் பெண்டிரால் முருகன் வளர்ந்தான் என்ற செய்தியும் குன்றக்குரவையில் சொல்லப்பட்டுள்ளது.

**கந்தபுராணம் காட்டும் முருகனின் சிறப்பு**

முருகனின் திருப்புகழைப் பேசும் கந்தபுராணத்தை இயற்றிய கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் பற்றி பாலசுப்பிரமணியன் "சிவனெறி மறவாத சிந்தையர்; தம் வழிபடு கடவுளாக முருகபெருமானைக் கொண்டவர்" என்ற பதிவைத் தருகிறார் (முருகன் காட்சி ப.9). கந்தபுராணத்தைப் பற்றி கர்ண பரம்பரைச் செய்தி ஒன்று உண்டு. இறைவனாகிய கந்தவேள் கச்சியப்பரின் கனவில் தோன்றி "அன்ப! நமது புராணத்தைத் தமிழில் தருக" எனக் கட்டளையிட்ட தாகவும் திகடசக்கர என்ற அடி எடுத்துக் கொடுத்ததாகவும் செய்தி உண்டு. முருகனைக் கச்சியப்பர் "செறுநரைத்தேய்த்து, உறுநரைக் காத்து, வேண்டுவோர்க்கு வேண்டுவன ஈயும் வள்ளல்" என்று காட்சிப்படுத்துகிறார். தேவர்களுக்கு இன்னல் விளைவித்த சூரபன்மன் முருகனோடு போரிட்டு இறுதியில் மாண்டு போகின்றான். அரக்கன் தீயச் செயல்களைப் புரிந்தவனாயினும் முருகன் முன் வந்ததால் முருகனின் அருள் அரங்கனுக்குக் கிடைத்ததாகக் கச்சியப்பர் பாடுகிறார்.

*"தீயவை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன் உற்றால்*
*மாயையின் மகனும் அன்றோ வரம்பிலா அருள்பெற்றுய்ந்தான்"*
(கந்தபுராணம், சூரபன்மன் வதைப்படலம் 496)

இவ்வாறு கந்தபுராணத்தில் முருகனின் பிறப்பு, வளர்ப்பு, தேவர் துயர் களைந்தது, தேவானையையும், வள்ளியையும் மணந்து அடியவர்க்கு அருளியது போன்ற பல செய்திகள் காணக்கிடைக்கின்றன.

**திருப்புகழில் முருகனின் பெருமை**

அருணையம் பதியில் வந்துதித்த அருணகிரிநாதர் முருகனின் பெருமைகளைத் திருப்புகழில் சந்தப் பாக்களால் பாடி மகிழ்ந்தவர். எங்ஙனம்,

ஏழையேன் தங்களைப் பாடுவேன் என்று ஆறுமுகனிடம் வேண்ட முத்தைத் தரு பத்தித் திருநகை என்ற அடியெடுத்துக் கொடுத்தார் தமிழ்த் தெய்வமாம் முருகன். முருகனின் அருள் பெற்ற அருணகிரியார் அடி நாட்கள் செய்த பிழை நீக்கி என்னை அருள் போற்றும் வண்மை தரும் வாழ்வே என்று இசைப்பாக்களால் நாள்தோறும் துதித்துப் பரவி வந்தார். அருணகிரியார் முருகனிடம் பலவாறு வேண்டுகிறார்.

*"உனது பொற்சரணம் எப்பொழுதும்*
*நட்பொடு நினைத்திட அருள்தருவாயே"* *(திருப்புகழ் 762)*

*"மறவாதுன் நாமம் புகழ்பவர் பாதந்தொழஇனி*
*நாடும்படி யருள்புரிவாயே"* *(திருப்புகழ் 1038)*

*"வாழி! இனிப் பிறவாது நீ அருள்புரிவாயே"*

என்கிறார். மேலும் கந்தர் அலங்காரத்திலும், கந்தர் அந்தாதியிலும், கந்தர் அநுபூதியிலும் ஆறுமுகனின் அருட்செயல்களை வியந்து போற்றுகிறார் அருணகிரியார்.

**கந்தர் அலங்காரம் காட்டும் முருகனின் சிறப்பு**

திருவண்ணாமலையில் சந்தப் பாடல்களை இறைவன் மீது பாடி மகிழ்ந்த அருணகிரியார் முருகன் மீது கொண்ட தாகம் தணியாது வேதாரணியம், கும்பகோணம், சுவாமிமலை போன்ற பல திருத்தலங்களுக்குச் சென்று இறைவனின் புகழை நாமணக்கப் பாடினார். இறுதியில் திருச்செங்கோட்டின் மலை மீது அமர்ந்துறையும் முருகனைத் தம் இரு கண்ணாரக் கண்டு களித்தார். பின் பாடியும் பரவசமுற்றார். தனக்குப் பிரமன் நாலாயிரம் கண் நல்க வில்லையே என வருந்தி அழுதார்.

*"மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை*
*சேலார் வயற்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டுதொழ*
*நாலாயிரங்கண்ண படைத்தில னேயந்த நான்முகனே"*
(கந்தர் அலங்காரம் : 90)

**குமரகுருபரர் வியந்து பாடும் முருகன்!**

திருநெல்வேலி மாவட்டம், ஸ்ரீவைகுண்டத்தில் பிறந்து ஐந்து வயது வரை பேசாதிருந்த குமரகுருபரர் கந்தவேளின் கருணையால் பேசத் தொடங்கினார். கந்தர் கலிவெண்பாவும், முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழும் முருகனின் பெருமையைப் பேசும் இவரது நூல்களாகும். சிவனுக்குரிய இயல்புகளை மகன் முருகன் மீது ஏற்றி முருகனின் வடிவழகைப் பல நிலைகளில் வர்ணித்துள்ளார். இத்தகைய முருகனிடம் குமரகுருபரர்

*"கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி யாட்கொண்*
*டடியேற்கும் முன்னின்றருள்"*

என்று இரந்து வேண்டுகிறார். முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் புள்ளிருக்கும் வேளிர் குழந்தை முருகனைப் பத்துப் பருவங்களில் புகழ்ந்து பாடுகிறார்.

**இராமலிங்க அடிகளார் பாடல்களில் முருகன்**

தில்லையம்பதிக்கு அருகில் உள்ள மருதூரில் பிறந்த இராமலிங்கர் முருகனைக் கண்ணாடியில் கண்டு அவன் அருளைப் பாக்களில் பாடி மகிழ்ந்தார். அறையில் மாட்டியிருந்த கண்ணாடியில் தணிகை மலையில் வீற்றிருக்கும் இறைவனின் உருவம் இராமலிங்க அடிகளாருக்குத் தெரியவந்தது. இராமலிங்க அடிகளார் உள்ளம் மகிழ்ச்சியில் பொங்கியது. கவிதை மழையும் பொழிந்தது.

*"தார்கொண்ட பன்னிரு தோள்களும் தாமரைத் தாள்களும் ஓர்*
*கூர்கொண்ட வேலும் மயிலும் நற்கோழிக் கொடியும் அருள்*
*கார்கொண்ட வண்மைத் தணிகாசலமும் என் கண்ணுற்றதே"*

என்கிறார்.

**திரு.வி.க. போற்றும் முருகன்**

முருகனின் சிறப்பைப் போற்றியுரைக்கும் நூல் 'முருகன் அல்லது அழகு" என்பதாகும். எங்கெல்லாம் அழகு கொலு வீற்றிருக்கின்றதோ, களி நடம் புரிகின்றதோ, அங்கெல்லாம் அழகுக் கடவுள் முருகன் உறைகின்றான் என்பார் திரு.வி.க. முருகு என்றால் இளமை, அழகு, மணம் என்று பல பொருள். மக்கள் தாம் வணங்கிய கடவுளுக்கு அழகு என்ற பொருளில் முருகன் என்று பெயரிட்டதாக திரு.வி.க. கூறுகிறார்.

**சிவப்பிரகாச சுவாமிகளின் பார்வையில் முருகன்**

துறைமங்கலம் சிவப்பிரகாசர் தாம் எழுதிய சீகாளத்திப் புராணத்தில் முருகனைப் பற்றிக் குறிப்பிடுகிறார். கல் என்பதற்கு மலை என்ற பொருள் தமிழில் உண்டு. இதனை வைத்துக் கொண்டு நயம் தோன்ற ஒரு கருத்தினை "முருகப் பெருமான் என் மனத்தை விட்டு நீங்காமல் நிறைந்திருக்கும் காரணத்தை யான் கண்டு கொண்டேன். அது என்னவெனில் முருகன் தன் மனம் உவந்து வாழும் கற்களில் என் நெஞ்சம் ஒரு கல்லே என்று மயங்கித் துணிந்து என் நெஞ்சக் கல்லில் கொலு வீற்றிருக்கின்றான் போலும்" என்று பாடி மகிழ்ந்தார்.

*"களிகெழு சிறந்து தான் வாழ்கற்களில் ஒரு கல் என்றோ*
*அளிய என் மனத்தினுள்ளும் அகன்றிலன் இருக்கும் மன்னோ"*

இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய கவிஞர்களும் முருகனைப் போற்ற தவறவில்லை. விடுதலைக் கவிஞன் சுப்பிரமணிய பாரதியும் தோத்திரப் பாடல்கள் என்ற பகுதியில்

*"வில்லினையொத்த புருவம் வளைத்தனை வேலா! ஆங்கோர்*
*வெற்பு நொறுங்கிப் பொடிப்பொடி யானது, வேலவா!"*

என்று வேலனின் சிறப்பினை வியந்து பாடுகிறார். கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை முருகனிடத்திலே அளவிறந்த பக்தி கொண்டவர். அந்த அன்பின் மிகுதியால்

*"பன்னிருகை ஏந்துமெழில் செந்தில் இறைவா!*
*உனையன்றி ஆம்துணை வேறுண்டோ ஐயா"*

என்கிறார். நாமக்கல் கவிஞர் இராமலிங்க பிள்ளையும் முருகனின் பல பெயர்களைச் சொல்ல உடம்பு பல்வேறு விதமான மகிழ்ச்சி அடைவதாகச் சுட்டிக் காட்டுகிறார். முருகன் என்று சொன்னால் உள்ளம் உருகுகிறது. கந்தன் என்னும் சொன்னால் சிந்தை துள்ளுகிறது. வேலன் என்று சொன்னால் வியர்வை கொட்டுகிறது. குமரன் என்று கூறினால் சித்தம் குளிர்கிறது என்று முருகனின் பெயரை உச்சரிப்பதனால் வரக்கூடிய மாற்றங்களை விவரித்துச் செல்கிறார்.

இவ்வாறு முருகப் பெருமானின் திருவருள் அனைவருக்கும் கிடைக்கும் பொருட்டு சங்ககாலம் முதல் தற்காலம் வரை புலவர்கள் குன்றின் மேல் இருக்கும் குமரக் கடவுளைப் பலவாறு போற்றியும் வாழ்த்தியும் வந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

# முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் முருகனின் பெருமை

முனைவர் **சி. சேமசுந்தரி**
உதவி பேராசிரியர், அகராதியியல் துறை
தமிழ்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

சம்பாதி, சடாயு என்ற இரு கழுகுகளும் வேதங்களும் மன்மதனும் வழிபட்ட தலமாக விளங்கும் புள்ளிருக்கு வேளூர் என்னும் தன்னிகரற்ற தலத்தில் எழுந்தருளியிருக்கும் முத்துக்குமாரசாமி மீது குமரகுருபர அடிகளாரால் பிள்ளைத்தமிழாகப் பாடப்பட்டது முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழாகும். வைத்தீசுவரன் கோயில் என்று இக்காலத்தில் இதனை அழைக்கின்றனர்.

**பிள்ளைத்தமிழ் அறிமுகம்**

பிள்ளைக்கவி, பிள்ளைப்பாட்டு என்றும் வழங்குவர். தொல்காப்பியம்,

*குழவி மருங்கினும் கிழவ தாகும்'* (தொல்.1030)

என்று கூறுகிறது.

*...... கணபுரத் தென்கரு மணியே*
*என்னுடைய இன்னமுதே இராகவே தாலேலோ*

எனக் குலசேகராழ்வார் தாலாட்டும்போது படிப்போரும் தூங்கிவிடும் சந்த இனிமை உள்ளதை உணர முடியும். தமிழில் முதற் பிள்ளைத்தமிழ் ஒட்டக்கூத்தர் பாடிய குலோத்துங்கன் பிள்ளைத்தமிழாகும்.

**நூல் அமைப்பு முறை**

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் என்று அழைக்கப்படும் முருகப் பெருமானின் மீது பாடப்பட்ட பிள்ளைத்தமிழ் இலக்கியம் ஆகும். இம்முருகப் பெருமான் வைத்தீசுவரன் கோயில் என்று அழைக்கப்படுகின்ற புள்ளிருக்கு வேளூரில் கோயில் கொண்டுள்ளான். இந்நூல் குமரகுருபரரால் இயற்றப்பட்டது.

*பொன்பூத்த குடுமிப் பொலங்குவட் டிமவான்*
*பொருப்பிற் பிறந்துதவளப்*
*பொழிநிலவு தவழுமுழு வெளகிளியே தண்டத்தொர்*
*போர்க்களிற் றைப்புணர்ந்து*

மின்னலைப் பிடித்து இடையினைச் செய்தது போன்ற சிறியதாக உள்ள இடையினையும் விரிந்த பெரிய போர் தொடுப்பது போன்ற தன்மையுடைய கண்களையும் கொண்டவள் தெய்வயானை. அவளது குடம் போன்ற பெரிய சாய்ந்திராத அழகினால் யாரையும் கவர்கின்ற அழகான முலைகளாகிய கொம்புகளால் அலைக்கப்பட்டு அரும்புவிட்ட தேனைத் துளிர்க்கக்கூடிய

கடப்பம்பூ மாலையினை மலை போன்ற பெரிய தோளில் சுமந்து பெருமையுடன் நிற்பவனும் போர்க் கருவியான வில்லினைக் கையில் ஏந்தியவனும் கந்தபுரியில் காட்சி தருகின்றவனும் ஆகிய முருகக் கடவுளை வணங்குகின்ற விதமாக நான் பாடுகின்ற இந்த வளமையான தமிழ்ப் பாடல்கள் சிறப்பாக அமைந்திட வேண்டும்.

அதற்காக அழகான உச்சியினையும் பொற்சிகரங்களையும் உடையதாக உயர்ந்து நிற்கின்ற இமய மலையில் தோன்றி ஒளிவீசுகின்ற கதிர்களை உடைய முழு நிலவானது தவழ்ந்திடக் கூடிய கயிலை மலையில் எழுந்தருளியுள்ள தனக்கென்று ஒப்புமை இல்லாத போர் யானையினைப் போன்ற சிவபெருமானுடன் கூடி இனிய இசையுடன் கூடிய பாடல்களை ரீங்காரமாய்ப் பாடிடக் கூடிய வண்டுகள் சுற்றும் கூந்தலையுடைய அழகிய பெண் யானையினைப் போன்ற பார்வதி தேவியானவள் பெற்றெடுத்து வளர்த்த குழந்தைகளும் சிறிய கண்களையும் பெரிய காதுகளையும் யானை முகத்தினையும் உடையவனான மூத்த பிள்ளை விநாயகப் பெருமானின் இரண்டு அழகான பாதங்களையும் என்னுடைய இரண்டு கைகளையும் கூப்பி வணங்குகின்றேன்.

மங்கலம் கருதிப் பொன் என்ற சொல் தொடக்கமாகவும் செய்தி சிறப்புற அமைய இறைவனை வாழ்த்தி வணங்கும் முறைப்படியும் முழுமுதற் கடவுள் விநாயகப் பெருமானை நூல் சிறப்பாக அமைந்திட விரும்பி வணங்குகின்றார். (திசைக்கரிகள் - எட்டுத் திசைகளுக்குரிய யானைகள். அவை முறையே கிழக்கு - ஐராவதம். தென்கிழக்கு - தண்டர்கம், தெற்கு - வாமனம், தென்மேற்கு - குமுதம், மேற்கு - அஞ்சனம், வடமேற்கு - புட்பதந்தம், வடக்கு - சாருவமம், வடகிழக்கு - சுப்பிரதீபம் தடங்கல் ஆகும்.

**முருகனின் பெருமை**

அறிவொளியாய்த் திகழும் முருகனை அன்பினால் தினகரன், மணவாளன், சிவகுமாரன், குமரேசன், மதவலி, குமார நாயகன், குமரகுருபரன், கந்தன், இளங்குமரன், சண்முகன் என்று பல்வேறு பெயர்களால் குமரகுருபரர் முருகனை அழைக்கின்றார். முருகன் சரவணப் பூந்தொட்டிலில் விளையாடியது, சிவபெருமானுக்குப் பிரணவ உபதேசம் புரிந்தது, கிரௌஞ்ச மலையின்மேல் வேலெறிந்தது, சூரசம்காரம் செய்தது, வள்ளி தேவயானையை மணந்தது முதலான செய்திகளைக் குமுரகுருபரர் தம் நூல்களில் குறிப்பிட்டுள்ளார். தந்தைக்குப் பாடம் சொன்ன கந்தவேளின் பெருமையை

*அப்பனுக்குப் பாடம் சொன்ன சுப்பையா - உந்தன்*
*அருள்வடிவைக் காண்பது தான் எப்பய்யா*
*சூரனுக்கும் வாழ்வு தந்த வேலய்யா - உந்தன்*
*ஜோதி முகம் காண்பது நாளய்யா?*

எனப் போற்றிப் பாடியுள்ளார்.

திருத்தணிகை, சுவாமிமலை, திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், மருதமலை ஆகிய இடங்களில் கோயில் கொண்டுள்ள முருகனைத் தம் பாடல் அடிகளில் மெருகேற்றியுள்ளார்.

**நீலவிழி வள்ளியும்**

*கோலத் திருப்பா தமும்*
*எழில்மாடக் கந்தபுரி*
*மணிக்கோவில் கொண்டஎன்*
*இதயமே கந்தவேளே*

எனக் குறிப்பிடும் கந்தனருள் பெறத் தமிழில் இனிய சொல் இல்லை எனக் குமரகுருபரர் வருந்துகின்றார்.

குமரகுருபரர் உமையம்மையை விசாலாட்சி, காமாட்சி, மீனாட்சி, அபிராமி, அங்கயற்கண்ணி, சங்கரி, மோகன சுந்தரவல்லி, மங்கையர்க்கரசி, மரகதவல்லி, வையை அரசி எனப் போற்றிப் பாராட்டி உள்ளார். உணர்ச்சி, கற்பனை, கருத்து, வடிவம் என்பன இலக்கியக் கூறுகளாகும். இவை யாவும் குமரகுருபரரின் இலக்கியங்களில் காண முடிகின்றது.

தொல்காப்பியர் உணர்ச்சிகளை மெய்ப்பாடுகள் என்று அழைக்கிறார். நியாயமான தக்க உணர்ச்சி, ஆற்றலுள்ள உணர்ச்சி, தொடர்ந்து ஒரு நிலையாக அமையும் உணர்ச்சி, வாழ்க்கையின் பல கோணங்களை விளக்குமாறு பல வகை உணர்ச்சியாய் அமைதல் முதலான உணர்ச்சிகளை உடைய இலக்கியம் நீண்டு வாழும் என்கிறார் மேனாட்டறிஞர் வின்செஸ்டர். சிவபெருமான் திருவுலாக் கண்டு மையல் கொண்ட தலைவி ஒருத்தியின் நிலையைக் குமரகுருபரர் சிதம்பரச் செய்யுட்கோவை, பாடல் எண் 62 இல் குறிப்பிட்டுள்ளார்.

படிப்பவர்க்கு உணர்ச்சியை ஏற்படுத்துவது கற்பனையாகும். உள்ளம் விரும்புமாறு அமையும் கற்பனைக்கு வாழ்க்கை அடிப்படை ஆகும். வாழ்க்கையின் அனுபவம் அத்தகைய கற்பனையைத் தூண்டுகிறது. ஆயினும் அனுபவம் உடைய எல்லோர்க்கும் அவ்வாறு கற்பனை அமைவதில்லை. படைப்பாளன் படிப்போர் காட்டும் மனக்கண் முன் தன் அனுபவத்தைப் படைத்துக் காட்டும் திறன் கற்பனை என்கிறார் மேனாட்டு அறிஞர் சி.டி.வின்செஸ்டர். குமரகுருபரரின் கற்பனை மற்ற கவிஞர்களைவிட வேறுபடுத்திக் காட்டுகிறது என்பதை முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்ப் பாடலில் காண முடிகின்றது. மருதநிலத்து மகளிர் களி மண்ணையும் சிறு கற்களையும் வைத்துக் கொண்டு சிற்றில் விளையாடுதலையும் சிறுசோறு அடுதலையும் உலகில் காண்கிறோம். குமரகுருபரரின் கற்பனையில் அவர்கள் மாணிக்கமாகிய தீயை அடுப்பில் வைத்துப் பவளமாகிய விறகை மூட்டுகின்றனர். தேனை உலை நீராக வைத்துச் சங்காகிய பானையில் முத்தாகிய அரிசியை இட்டுச் சிறுசோறாக்குகிறார்கள் என்கிறார்.

இவை மட்டுமின்றி மகளிர் கூந்தல், ஐராவதம், சோலை, கழைக்கூத்தர், மீன், எருமை, குரங்கு முதலானவற்றைக் கற்பனை நயம் தோன்றக் காட்டுகிறார் குமரகுருபரர். கலையின் வடிவம் கலைஞரின் உள்ளத்தையும் கற்பவரின் உள்ளத்தையும் தொடர்புபடுத்துவதாகும். கலைஞரின் உணர்ச்சி ஆற்றல் உடையதாய்ப் பண்பட்டதாய் விளங்கின் கலைபெறும் வடிவிலும் அந்த ஆற்றலும் பண்பாடும் விளங்கும். அந்த ஆற்றலால்தான் அவருடைய உணர்ச்சி உள்ளத்தில் சென்று பதிய முடிகின்றது என்கிறார் மு.வ. (இலக்கியத்திறன், ப.152). குமரகுருபரரின் மீனாட்சியம்மை குறம், பாடல் 18 இல் டாக்டர் மு.வ. அவர்கள் கூறியுள்ள வடிவம் காணப்பெறுகின்றது.

இசுலாமிய மன்னரின் ஆதரவால் கங்கைக் கரையில் சைவத் திருமடத்தினை நிறுவினார். சைவ சித்தாந்தக் கருத்துக்களைக் குமரகுருபரர் நாடெங்கும் பரப்பினார். இவர் ஒரு தத்துவ ஞானி. ஆன்மிகப் பெருந்தகை. கல்விப் பெருங்கடல். சைவ சித்தாந்தப் பேரொளியாகவும் திகழ்ந்தவர்.

வைகாசி மாதம் மூல நட்சத்திரத்தில் கிருஷ்ணபட்சத் திருதியில் காசித் திருமடத்தில் குமரகுருபரரின் பூத உடல் மறைந்தது.

12.04.2001 அன்று வள்ளி மலையில் நடைபெற்ற 53 ஆம் ஆண்டு திருப்படி திருப்புகழ்ப் பாராயண விழாவில் நூலாசிரியர் (டாக்டர் மு.கோவிந்தராசன்) கலந்து கொண்டு ஆற்றிய சொற்பொழிவேயாகும்.

எதுகை மோனை அமையப் பாடுவதிலும் சிறந்தவர் குமரகுருபரர். இவரது அனைத்துப் பாடல்களிலும் எதுகை அமைந்து காணப்படும். மோனையைப் பற்றியும் எதுகையைப் பற்றியும் இலக்கியக் கூறுகள் - ஒப்பீடு என்னும் இயலில் ஆராயப்பட்டுள்ளமையால் பாடலில் முதல் சொல்லில் காணப்படும் எதுகை மட்டும் இங்கு விளக்கப்படுகின்றது.

இது போன்று முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழிலும் *தொடுக்கும், முடுக்கும், அடுக்கும், மடுக்கும்* என்றவாறு எதுகை அமைந்துள்ளது (மு.பி.த., தால.). இவ்வாறு பிள்ளைத்தமிழ் நூல்களிலும் எதுகை மோனைகளை அமைத்துப் பாடியுள்ள குமரகுரபரரின் புலமை போற்றுதற்குரியது. அடிதோறும் முதல் எழுத்து ஒத்து வருவது மோனை எனப்படும். பின்வரும் மோனையைக்

*கரைக்கும் கராமிரு கவுட்குட முடைந்தூற்று* (மூன்றுசீர் மோனை)
*கன்னற் பெருங்காடு கற்பகக்காட்டுவனர் கடவுமா கவளங்கொள*
(ஐந்துசீர் மோனை)
*மூலத்தலத்து முளைத்தமிழு முதலே முத்தம் தருகவே*
(நான்குசீர் மோனை)

எனச் சீர் பிரித்து மோனையைப் பகுத்துச் சொல்லலாம்.

அடிதோறும் முதல் எழுத்து ஒத்து வருவது எதுகை எனப்படும். ஆகவே எதுகையைச் சீர்களில் பின்வருமாறு

*கங்குண் மதங்கிய மங்குல டங்கவிடுங்காமன்சேம* (ஐந்துசீர் மோனை)
*வாளிகள் கூளிகள் காளிகள் ஞாளியி லாளியென* (ஐந்துசீர் மோனை)

அடிதோறும் சொல்லாலும் பொருளாலும் மாறுபடத் தொடுப்பது முரண் தொடையாகும். குமரகுருபரர் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் முரண் தொடையகைத் தேவையான இடங்களில் அமைத்துள்ளார். பாடலில் சந்தத்திற்கும் பொருளிற்கும் ஏற்றவாறு முரண் தொடைகளை அமைத்துப் பாடல்களுக்கு மெருகேற்றியுள்ளார் குமரகுருபரர். முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில்

செந்நெற் பசுங்கதிர் (காப்.6)
வெறுப்போடு விருப்பினை (காப்.11)
முடியும் அடியும் (முத்.10)
அருவென்ன உருவென்ன (அம்பு.5)
பொன்னுலகும் மண்ணுலகும் (அம்பு.5)
செங்கயல் கிடக்கும் சுருங்கட் பசுந்தோகை
கார்கோல நீலக் கருங்களைத் தோடொருவர் செங்களத்து

அடிதோறும் ஈற்றிலுள்ள எழுத்தோ சொல்லோ ஒன்றிவருவது இயைபு ஆகும்.

| | | |
|---|---|---|
| கடகளிறுதவுக பாய்மிசைப் | - | போர்த்தவள் |
| கருகுவி பாய்மிசைப் | - | தூர்த்தவள் |
| கடல்வாய் நெரிய பாய்மிசைப் | - | பாத்தவள் |
| கடிகமழ் தரு பாய்மிசைப் | - | சேர்த்தவள் |

என்றவாறு பல முரண் தொடைகளை அமைத்துப் பாடியுள்ளார் குமரகுருபரர்.

**முடிவுரை**

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் முருக னுடைய சிறப்புக்களை வருணனையாகவும் எதுகை மோனையுடனும் விரிவாக எடுத்துரைத்துள்ளார் குமரகுருபரர்.

# முருகப்பெருமானின் வெறியாடல் நிகழ்ச்சி

**V. சொர்ணலதா**
பெருவிளை

*"மஞ்சுண்ட கோல மயிலுண்டயில் வேலுமுண்டு*
*துஞ்சுண்டினி நான் மறவிக்குயிர் தோற்பதுண்டோ*
*நஞ்சுண்ட நாதர் மகனார் திருநாமமுண்டு*
*நெஞ்சுண்டு பாட நினைவுண்டதி நேய முண்டே"*

*"தாமரை புரையுங்காமர் சேவடிப்*
*பவழத் தன்ன மேனித் திகழொளிக்*
*குன்றியேய்க்கும் உடுக்கைக் குன்றின்*
*நெஞ்சுபக எறிந்து அஞ்சுடர் நெடுவேந்*
*சேவலங் கொடியோன் காப்ப*
*ஏம வைகல் எய்தின்றால் உலகே"* (பாரதம்பாடிய பெருவேந்தனார்)

*"பன்னிருகை வேல் வாங்கப் பதினொருவர்*
*படைதாங்கப் பத்துத் திக்கும்*
*நன்னவ வீரரும் புகழ மலைகளெட்டும்*
*கடலேழும் நாடி ஆடிப்*
*பொன்னின் முடி ஆறேந்தி அஞ்சுதலே*
*எனக்கொழித்துப் புயநான் மூன்றாய்த்*
*தன்னிருதாள் தருமொருவன் குற்றாலக்*
*குறவஞ்சித் தமிழ் தந்தானே".* (குற்றாலம் குறவஞ்சி)

### வெறியாடல்

சங்க காலத்தைச் சேர்ந்த மலைப்பகுதிகளில் வசித்து வந்த குறவர் என்ற இனத்தவர் முருகன் என்ற பெயரே அவர்களுடைய கன்னிப் பெண்களைத் தொல்லைப்படுத்தியது (குறிஞ்சி 175-175) என்பதினால் அந்த நிலையில் இருந்த அவர்களை வெளியில் கொண்டு வர வெறியாட்டு என்ற நிகழ்ச்சி அல்லது விழா என்பதைக் கொண்டாடினார்கள். இதனைப் பற்றிய குறிப்பு அணங்குடை முருகன் (புறம் 299-6), அணங்கு முருகன் (புறம் 299-6), அணங்கு பெண்கள், நெடுவேல் அணங்குறு மகளிர் (குறிஞ்சி 174-175) போன்ற பல இலக்கியங்களில் உள்ளன. முருகனை வேண்டி செய்யப்படும் அப்படிப்பட்ட வழிபாடுகளை முருகு ஆற்றுப்படுதல் (அகம் 22-11), முருகு அயர்தல் (குறிஞ்சி 362-1), வெறி, வெறியாடல் (அகம் 182:17-18) வெறியாட்டு என்பார்கள். ஐங்குநுறூறு என்பதில் நூறு செய்யுட் பத்திகளில் பத்து செய்யுள் பத்திகளில் வெறியாடலைக் குறித்துக் கூறப்பட்டுள்ளது. அதைப் பற்றியும் வேலனைப் பற்றியும் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, முருகாற்றுப்படை போன்ற சங்க இலக்கியங்களிலும் கூறப்பட்டுள்ளன.

வெறியாட்டில் ஆலய பூசாரியே வேலன் என்பவராக உள்ளார். அவர் முருகனின் வேலினைக் கையில் கொண்டு இருப்பார். நச்சினார்க்கினியர் என்ற பெயரில் வர்ணனை தரும் வர்ணனையாளர் சின்னமாக எடுத்துக் கொண்டு வருவதினால் அவரே வேலன்.

கழுத்தில் பச்சை நிற இலைகளினால் ஆன மாலை, நாரை, காட்டு மல்லிகை மற்றும் வெண்தழை அதாவது வெள்ளை இலைகளையும் மாலை போல் அணிந்துக்கொண்டு அவர்மீது முருகன் ஆக்ரமித்துக் கொண்டு உள்ளது போல சாமியார் நடனம் ஆடுவார். அவருடைய மார்பு முழுவதும் சந்தனம் பூசப்பட்டு இருக்கும் (முருகு 191-193). அப்படி சாமி ஆடுபவரை படிமட்டன் என்பர்கள். அந்த விழாவைக் கொண்டாடும் இடத்தை வெறியார்களம் (முருகு 222), (குறிஞ்சி 53:3), (அகம் 98-18, 114:1-2) என்பார்கள்.

அந்த விழா நடு இரவில் வீடுகளில் உள்ள முற்றம் அதாவது வீடுகளுக்குள் உள்ள திறந்த வெளிக் கூடத்தில் நடக்கும். அதில் ஒரு புறத்தில் கடல் மண்ணைக் கொண்டு வந்து கொட்டி அலங்கரித்து இருப்பார்கள்.

அதன் ஒரு பக்கத்தில் சேவல்கொடி நடப்பட்டு இருக்கும். அந்தக்கொடி மரத்தின் மீது மலர் மாலைகளினால் அலங்கரித்து, மணம் மிக்க ஊதுபத்திகளையும் ஏற்றி வைத்து இருப்பார்கள். அது முருகனை வரவேற்று அமரச் செய்யும் இடம் ஆகும். அவருடைய வாகனம் மற்றும் அவரது யானையையும் சேர்த்துப் போற்றி புகழ்ந்து இசைகள் இசைக்கப்படும்.

அங்குள்ள மரத்தில் கட்டப்பட்டுள்ள ஆட்டை வெட்டி அதன் ரத்தத்தை தினை என்ற தானியத்துடன் கலந்து அதைப் பரப்பி வைத்து பலி என்னும் பெயரில் மாமிசத்தைப் படைப்பார்கள். பாடல்களைப் பாடியும் இசைக் கருவிகளை இசைத்தும் முருகனைப் போற்றிப் பாடுவார்கள். மலர்களைத் தூவியும் அவரை வணங்குவார்கள்.

குறவர் பெண்கள் நடத்தும் வெறியாட்டு நிகழ்ச்சியைப் பற்றி விரிவாக முருகாற்றுப்படையில் கூறப்பட்டுள்ளது. அவற்றைத் தவிர மேலும் சில விளக்கங்களும் அதில் தரப்பட்டுள்ளன. அந்த இடம் நடைபெறும் இடமோ அச்சம் தரும் வகையில் இருக்கும். முருகனை அழைக்கும் போது அந்த இடத்தை நன்கு அலங்கரித்து வைத்தும் பல விதமான உணவுகளைக் கொடுத்தும் இசைகளை இசைத்தும் வழிபாடுகள் நடைபெறுகின்றன. சம்பிரதாயமாக சேவல் கொடி ஏற்றப்படுகிறது. அதன் மீது நெய்யும் வெள்ளை எள்ளையும் கொண்டு திலகம் இடுகிறார்கள். மந்திரங்களைக் கூறிக் கொண்டே பூக்களால் அர்ச்சனை செய்கிறார்கள்.

ஒவ்வொருவரும் இரண்டு வண்ண உடைகளை ஒன்றன் மீது ஒன்றாக அணிந்து கொள்கிறார்கள். கை மணிக்கட்டில் காப்பு எனப்படும் சிவப்பு நூல்களைக் கட்டிக் கொள்வார்கள். இரண்டு கொழுத்த ஆடுகளை வெட்டிய ரத்தத்தை புதிதாக சமைத்த அரிசி உணவுடன் கலந்து அதை பலி எனும்

பெயரில் படைப்பர்கள். அதைத் தவிர பல்வேறு வகையான அரிசி உணவையும் தருவார்கள். செவ்வரளி மற்றும் நல்ல மணமுள்ள பூக்களைக் கொண்டு பின்னிய மாலையை அனைத்து இடங்களிலும் கட்டித் தொங்க விடுவார்கள். ஒற்றுமையுடன் இருக்க வேண்டும், பசி பட்டினி இல்லாமல் இருக்க வேண்டும், நல்ல மழை பெய்ய வேண்டும், நில வளம் செழுமையாக இருக்க வேண்டும் என்றெல்லாம் அவரிடம் வேண்டிக்கொள்வார்கள்.

ஒரு பக்கத்தில் நீர் வீழ்ச்சியில் இருந்து கீழே கொட்டும் நீரின் ஓசையைக் கேட்டபடி இருக்க இசைக்கருவிகளைக் கொண்டு இசைக்கப்படும். பாடலும் சேர்த்து அந்த இடத்தை ரம்யமான சூழ்நிலைக்குக் கொண்டு செல்லும் அவரோடு சேர்ந்த பிணிமுகம் எனப்படும் யானை மற்றும் அவருடைய வாகனமான மயிலையும் வணங்குவார்கள்.

வேலனும் அந்தக் குறவர்கள் மற்றும் அங்குள்ள இளம் பெண்களுடன் சேர்ந்து நடனம் ஆடுவார். அவர்களின் கைகளைப் பிடித்துக்கொண்டு அங்குள்ள வேங்கைமர அடிக்குச் சென்று அங்குக் கள்ளைக் குடித்து விட்டு ஆடுவார். அங்குள்ள ஆண்களும் பெண்களும் கையைப் பிடித்துக் கொண்டு தோண்டக பறை என்ற மத்தள இசைக்கு ஏற்ப ஆடுவார்கள் (முருகு197). குரவை நடனம் குறித்துப் பல இடங்களிலும் கூறப்பட்டுள்ளது. அங்குள்ள பெண்களுடன் பாறைகள் மீது சென்று நடனம் ஆடுவது முருகனுக்குப் பிடித்தமானது (முருகு190-211).

மேலே குறிப்பிடப்பட்டுள்ள முறையில் செய்யப்படும் வழிபாடு முருகனை மலைவாழ் மக்கள் வணங்கிய விதத்தை எடுத்துக்காட்டுகிறது. மற்ற சமயங்களைச் சேர்ந்தவர்களும் முருகனை அங்கு வந்து வணங்குவார்கள். அவர்கள் அவருக்குத் தினை மலர்கள் பலியாடுகள் போன்றவற்றைத் தந்து சேவல் ஏற்றி அதை முருகனுக்கு அற்பணிப்பார்கள்.

**பார்வை நூல்:**


1. காதம்பரி மூலமும் வசனமும், உலகத்தமிழர் ஆராய்ச்சி நிறுவனம்.
2. திருக்குற்றாலக் குறவஞ்சி. திரிகூடராசப்பக் கவிராயர், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தார்ந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி-6.
3. குறுந்தொகை, பெருமழைப் புலவர், திரு. பொ. வே. சோமசுந்தரனார் எழுதிய உரையுடன், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தார்ந்த நூற்பதிப்புக்கழகம். லிமிடெட் திருநெல்வேலி-6.

# சென்னிகுளம் அண்ணாமலைக் கவிராயரின் தனித்தன்மைகள் - ஓர் ஆய்வு

**வை.பூ. சோமசுந்தரம்.**
5/B11, கிருச்ணா நகர்,
கோவில்பட்டி - 628503

"வருவாய் மயில் மீதினிலே வடிவேலுடனே வருவாய்"

'குகையில் வாழும் கனலே' என்ற பாரதியார் பாடல் கழுகுமலை முருகன் மீது ஆகும். நாடகங்களில், வள்ளி திருமணம் நிறைவுறும்போது "கழுகாசலக்காட்சி" தருவார் முருகன். கழுகாசலக் காட்சி எனில், கழுகுமலை முருகனின் காட்சி ஆகும்.

*"ஒரு முகத்தில் ஒளிர்பவனே போற்றி போற்றி!*
*ஓர் ஆறு திருக்கரங்கள் உடையாய் போற்றி*
*எழில் மயிலில் அமர்ந்தவனே போற்றி போற்றி*
*...............................................*
*"இடப்பக்கம் மயில் நோக்கம் பெற்றாய் போற்றி"*

(கழுகுமலை முருகன் பாமாலை)

என்று பாடுவார் கழுகுமலை வை.பூ. சோமசுந்தரம். "கழுகுமலை குடைவரையில் கருணை மழை பொழியும்" என்றும், "அறுகரமும், ஒருமுகமும் அமைந்த சிலை வடிவம்" என்றும், "அண்ணாமலை கனிந்த மலை கழுகுமலை" என்றும் பாடுவார் கோவில்பட்டி நீலமணி-(கொய்த மலர்கள்) கழுகுமலை காவடிச் சிந்தும், திருப்புகழும், கழுகுமலை பாதி, கந்தகிரி பாதியும்", கழுகுமலை பிள்ளைத்தமிழும் பெற்றவர் கழுகுமலை முருகன் மீது இன்னும் சிலர் பாடியதுண்டு. இவர்களுள் சென்னிகுளம் அண்ணாமலைக் கவிராயர் பாடிய காவடிச் சிந்து நூலில் சில தனித்தன்மைகள் புதைந்து கிடக்கின்றன. அவற்றை ஆய்வதே இக்கட்டுரை.

**யார்? யார்?**

அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்ப் பாடல்கள் பதினாறாயிரம். நமக்குக் கிடைத்தவை 1307. இவற்றில் 3 பாடல்கள் கழுகுமலை முருகன் மீது பாடப்பட்டவை. இவர் பாடிய கந்தரனுபூதி முதலிய நூல்களும் உண்டு. பாம்பன் சுவாமிகள் 6666 பாடல்கள் முருகன் மீது பாடினார். "கழுகுமலை பாதி, கந்தகிரி பாதி", என்ற நூலில் 10 பாடல்கள் உண்டு. இவற்றில் முதல் 2 அடிகள் கழுகுமலை முருகன் மீதும், அடுத்த 2 வரிகள் மேல் உலகில் உள்ள கந்தகிரி முருகன் மீதும் பாடியதாகும். நக்கீரரின் 'கைலை பாதி களாத்தி பாதி நூல்' போன்ற அமைப்பாகும்.

சிதம்பரக் கவிராயர் 'கழுகுமலை முருகன் பிள்ளைத்தமிழ்' பாடினவர். கோவில்பட்டி நீலமணி, கழுகுமலை முருகன் மீது சில நூல்கள் பாடினார். (கழுகுமலை கந்தக் கவசம் - கழுகுமலை திருப்புகழ் அந்தாதி கழுகுமலை சந்தத் தமிழ், கழுகுமலை மணிமாலை, தெய்வ மலர்கள்). அண்ணாமலைக் கவிராயர் பாடிய "கழுகுமலை முருகன் காவடிச்சிந்து" 24 பாடல்கள் கொண்டது நாடகப்பாங்கில், காவடிச்சிந்து என்ற புதிய வண்ணத்தில், படைக்கப்பட்டு, ஒப்பில்லாத நூலாகத் திகழ்கிறது.

**கழுகுமலை காவடிச்சிந்தின் மேன்மைகள்**

24 பாடல்கள், பாமரர்களும், புலவர்களும், இசைக் கலைஞர்களும், ஆய்வாளர்களும் போற்றிப் புகழும் சிறப்புடையது. "வித்துவான்களே அன்றிச் சாதாரணக் கலைஞர்களும் பாடி இன்புறும்படி இவர் செய்தது காவடிச் சிந்து என்னும் பிரபந்தம். இது வெளியாகிய சில மாதத்திலேயே கீர்த்தி, தமிழ் உலகில் எங்கும் காட்டுத்தீப்போல் பரவியது. (வெ.ப.சுப்பிரமணிய முதலியார், "காவடிசிந்தும் கவிஞன் வரலாறும்" அருட்கவி சீனிவாசன் பக்கம் 135). "காவடிச்சிந்தில் முருகன் வரலாறு மிகவும் ரசாபாவத்துடன் காணப்படுகிறது (பேரா. வையாபுரிப்பிள்ளை மேற்படி பக்.136). தேவநேயப் பாவாணர், இளங்குமரனார் போன்ற பலரும் உச்சிமேல் புவலர் கொள் நச்சினிக்கினியர் இவர். பாரதியாரும், பாண்டித்துரைத்தேவரும் உவமைக்கவிஞர் சுரதாவும் கவியராயரின் காவடிச்சிந்து மெட்டில் சில பாடல்கள் எழுதினர். "பாரதியார் தம்மை 'அண்ணாமலையூரன்' என்று அழைத்துக் கொண்டாராம்" (நூல் "மகாகவியும் இசைப் பேரரசியும்" பக்கம் 286, முனைவர் சண்முக செல்வகணபதி கட்டுரை)

**தனித்தன்மைகளின் வீச்சு!**

கவிராயர் கழுகுமலை முருகனுக்கும் தமக்கும் உள்ள தொடர்பு, நெருக்கம், அன்பு முதலியனவாகக் காவடிச் சிந்தில் பாடியன ஒரு புதுமை. முருகன் தமிழ்க்கடவுள் என்று பாராட்டுவோம். கவிராயர் பாடுகிறார்.

*'தெள்ளுதமிழ்க்குதவு சீலன்*
*சென்னி குளநகர் வாசன், தமிழ்*
*தேறும் அண்ணாமலைதாசன் - செப்பும்*
*செகமெச்சிய மதுரக்கவி*
*அதனைப் புயவரையில் புனை தீரன்*
*அயில் வீரன் ...* (7)

*பொன்னுலவு சென்னிகுள நன்னகர்*
*அண்ணாமலை தன்புந்தியில் மகிழ்ந்து நித்தம் நின்றவன்* (8)

*"அண்ணாமலைக் கவிராசன் மகிழ் நேசன்"* (9)

என்று பல இடங்களிலும் முருகன் தமிழின் பால் மீதூற அன்பு, ஆர்வம் கொண்டவன், தமது காவடிச் சிந்து பாடல்களைத் தன் மலை, நிகர்தோள்களில்

மாலையாக மகிழ்ந்து சூடிக்கொண்டவன், தனக்கு மிக்க மகிழ்வு தருபவன் என்று பாடும் முறை ஒப்பு நோக்கத்தக்கது. தன்னம்பிக்கை மிக்கவர் கவிராயர், 'என்னை நன்றாக இறைவன் படைத்தனன், தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே' என்ற திருமூலர் பாடல் எண்ணிப் பார்க்கலாம், கவிராயர் பாடுகிறார்.

*'எனை அருமைப்பணி கொளும் தயாளனை'* (1)
*'தினம் சிந்தனை செய்யும் தொண்டர் தீவினை*
*தீர்த்திடும் முருகேசன்'* *(10)*
*'பவநாசன்'*
*'அண்ணா மலைக்கிடர்கள்*
*நண்ணா தொழித்து மிக*
*அகமகிழத் தனதருளை அளித்திடும் ஐயனே* (ப.3)

என்ற கவிராயரின் எண்ணம், பார்வை, உறுதி, பிறரிலிருந்து வேறுபட்டவை பிறர், முருகனை வேண்டிப் பாடும் பாடல்களையே தந்தனர்.

*"நீகா என்றே உரைக்க ஓடோடி நீயும் வந்து*
*பாதுகாத்தே அருள வேண்டும்"* (நீலமணி)

(கழுகுமலை முருகன் சந்தத் தமிழ் ப.4ல் அருணகிரிநாதர் மெட்டில் பாடிய பாடல்கள் தொகுதி). "உலக வெம்மைக் கடல் கடக்கும் உறுதியினைத் தாராய் (1 கழுகுமலை பாதி கந்த மலை பாதி பாம்பன் சுவாமிகள்) 'வேண்டும் அடியர், புலவர் வேண்ட அரிய பொருளைத் தருவோனே' (கழுகுமலை திருப்புகழ்) என்ற வேறுபாடுகள் காண்க. கவிராயரின் பாட நுட்பம், ஆழம் முதலிய பல தனித்தன்மைகளை, கண்டு வியக்கலாம். ஒரு புதுமையான சிற்றிலக்கியம், ஒரு பெருங்காப்பியம் போல் கூறுகள். காவடிச் சிந்து முதல் பாட்டில் பல தனித்தன்மைகள், நூல் துவக்கப் பாடலாகிய

*'திருஉற்று இலகு கங்க வரையில் புகழ் மிகுந்து*
*திகழத் தினம் உறைந்த வாசனை*
*மிகு மகிமைச் சுகிர்த தொண்டர் நேசனை* (1)

என்று 14 மங்கலச் சொற்களால் மிளிர்வது ஒரு புதுமை, பிறர் அவ்வாறு இல்லை. "உலக வெம்மைக் கடல் கடக்கும் உறுதி" என்ற பாம்பன் சுவாமிகள் பாடலில் 'உலகு' என்ற ஒரு மங்கலச் சொல் தான் உள்ளது. காவடிச் சிந்து, முதல் பாடலில், பிள்ளையார் வணக்கத்தைப் பாடப் பயன்படுத்தினாலும், இக்காப்புச் செய்யுளில் சிவன், உமை, முருகன், வள்ளி, தெய்வானை, திருமகள், நான்முகன், மழை, மயில், வேல், மலை, கடல் என்று எல்லாத் தெய்வங்களும் 24 வரிகளுள் எண்ணப்படுகின்றனர். யானை முக விநாயகரின் இருதாள்களையும் பணிவோம் என்று பாடி முடிப்பார்.

மேலும் முதல்பாட்டில் உமை மற்றும் முருகனைக் குறிப்பிடும் கவிராயர், "தகரக்குழல் வஞ்சிபாலனை" என்று குறிப்பார். முருகனை உமை மைந்தன் என்பதும், உமையம்மை கூந்தலுக்கு வாசனை உண்டு என்பதும்

புலப்படுத்துவார். அருணகிரியார் பிள்ளையாரைத் தான், "மத்தள வயிறனை உத்தமி புதல்வனை" என்பார். வடசொற்கள் கலந்து பாடுவதில் கூட, தொல்காப்பிய வழியில் வட எழுத்துக்களைத் தவிர்த்து, வடசொற்களைத் தமிழ் எழுத்துக்களில் குறிப்பிட்டார் கவிராயர். சான்று

*மையல் கொண்டொரு பையல் பின் செல*
*வயது மீறின மாதோ? இந்த*
*மார்க்கம் தோன்றின தேதோ – சென்ம*
*வாசனைப் பலன் ஈதோ* (10)

15ஆம் பாடலில் எல்லாப் பத்திகளிலும் உருவக அணி மற்றும் உவமை அழகு நடை போடுகிறது.

*குயில் பேடுருவம்*
*சுந்தரம் மிகுந்த குழல் மேகம் – அவள்*
*சொந்தநுதல் இந்துவிலோர் பாகம் - திருந்*
*தும்புருவம் வில்லொடுசி நேகம்*
*தாமரவ படமென் அல்குல் உண்டு – தொடை*
*தங்கநிறச் செங்கதலித் தண்டு* (பா.15)

என்று தலை முதல் பாதம் வரை உருவகம் வரும்.

**நிறைவுரை**

கவிராயர் உவேசா மாணவர், திருவாவடுதுறை மடாதிபதியிடம் மடக்கணிப் பாடல் பாடி "நீர் சாதியிலும் ரெட்டி, புத்தியிலும் ரெட்டி, என்று பாராட்டப் பெற்றவர். ஊத்துமலை சிற்றரசன் ஆதரவு பெற்ற, அரசவைக் கவிஞர். மன்னர் கழுகுமலை முருகனுக்குக் காவடி எடுத்து வருவதற்காகப் பாடிய பாடல்கள் இவை. ஐநா சபையில் MS சுப்புலட்சுமி இவர் பாடலைப் பாடி, பாராட்டுப் பெற்றார். திருமண மண்டபங்கள், கல்விச் சாலைகள், ஆண்டு தோறும் தை அமாவாசை அன்று சென்னிகுளத்தில் குருபூசை கல்வித் தந்தை கே.ஆர். அவர்கள் சிறப்பாகக் கொண்டாடுதல், சென்னையில் ஆண்டுதோறும் காவடிச் சிந்து இசைவிழா, வள்ளல் வரதராசன், சுந்தரமூர்த்தி, சென்னிகுளம் இராமசுப்பிரமணியம், "செட்டிமுரசு" இளங்குமரன் முதலியோரால் சிறப்பாக நடைபெறுதல் என்று பல சிறப்புகள் பெற்றவர் இவர், சிந்துக்குத் தந்தை, மட்டுமல்ல. சிந்து கவிப் பேரரசர்.

# தமிழ்க்கடவுள் முருகன்

**ச. தமிழ்ச்செல்வி,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
மருது பாண்டியர் கல்லூரி, தஞ்சாவூர்

தமிழ் மொழியை முருகப்பெருமானுக்கும் வடமொழியை பானிணிக்கும், அகத்திய முனிவர் கற்றுக்கொடுத்த வரலாற்றுச் செய்தி நம் அனைவருக்கும் தெரிந்த ஒன்றே. அந்த வகையில் முருகப்பெருமானின் சிறப்புக்களைச் சங்க இலக்கியம் முதல் சிற்றிலக்கியங்கள், பக்தி இலக்கியங்களிலும் முருகப்பெருமானின் வழிபாட்டு முறைகளை, வேலன் வழிபாடு, இடும்பன் வழிபாடு, செவ்வேள் வழிபாடு, கந்தன் வழிபாடு எனப் பல வகையில் சிறப்பித்துச் சொல்கின்றன. அந்த வகையில் முருகப்பெருமானின் பிறப்பு, பன்னிருகைகளின் பணிகள், முருகப்பெருமானுக்குச் செய்யப்படும் வழிபாடுகள், அறுபடை வீடுகள் போன்றவற்றின் சிறப்புக்களை எடுத்துக்காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**முருகப்பெருமானின் பிறப்பு**

பிரம்மனின் பேத்தியும் தட்சனின் மகளுமான தாட்சாயிணியைச் சிவபெருமான் மணந்தார். ஒரு முறை தட்சன் சிவபெருமானை யாகத்திற்கு அழைக்காமல் அவமானப்படுத்தினார். இதனால் கோபமடைந்த தாட்சாயிணி அக்னியில் விழுந்து உயிர்த்துறந்தார். பிறகு சிவபெருமான் தம் அவதாரமான வீரபத்ரனை அனுப்பி யாகாசலையையும் தட்சனையும் அழித்தார். பிறகு சிவபெருமான் தியானத்தில் ஈடுபட ஆரம்பித்தார். தாரகன் என்ற அசுரன் பிரம்மதேவரிடம் சிவபெருமானின் புதல்வனைத் தவிர வேறு எவராலும் தமக்கு அழிவு நேரக்கூடாது என்று வரம்பெற்றான். இதனால் கலக்கமடைந்த தேவர்கள் சிவபெருமானின் தியானத்தைக் கலைக்க காமதேவனை அனுப்பினார். அப்போது சிவபெருமான் தன் மூன்றாவது கண்ணைத் திறந்தார். அதில் இருந்து வெளிப்பட்ட தீப்பொறி காமதேவனை தகனம் செய்தது. பிறகு அந்த தீப்பொறி சரவணப்பொய்கையில் ஆறு பகுதிகளாக விழுந்தது. இது ஆறு குழந்தைகளாக உருப்பெற்றது. கார்த்திகைப் பெண்கள் அறுவர், இந்த ஆறு குழந்தைகளை வளர்த்தனர். இதனால் அவர் கார்த்திகேயன் என்று பெயர் பெற்றார். பின்னர் ஒரு கார்த்திகைத் திருநாளில் பார்வதி அந்த ஆறு குழந்தைகளையும் இணைத்தார். ஆறு முகங்களையும் பெற்ற இவர் ஆறுமுகன் என்றும் அழைக்கப்பட்டார்.

**முருகனின் வேறு பெயர்கள்**

| | | |
|---|---|---|
| அயிலவன் | - | வேற்படை உடையவன், முருகக்கடவுள் |
| குமரன் | - | இறைவனாய் எழுந்தருளியிருப்பவன் |

| | | |
|---|---|---|
| குகன் | - | அன்பர்களின் இதயமாகிய குகையில் எழுந்தருளி இருப்பவன் |
| காங்கேயன் | - | கங்கையால் தாங்கப்பட்டவன் |
| சரவணபவன் | - | சரவணப்பொய்கையில் உதித்தவன் |
| சேனாதிபதி | - | சேனைகளின் தலைவன் |
| கந்தன் | - | ஒன்று சேர்க்கப்பட்டவன் |
| கார்த்திகேயன | - | கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டவன். |
| சண்முகன் | - | ஆறு முகங்களை உடையவன் |
| சுப்பிரமணியன் | - | மேலான பிரமத்தின் பொருளாக இருப்பவன் |

மயில்வாகனன் , அறுபடை வீடுடையோன்,வள்ளற்பெருமான், சோமாஸ் கந்தன், முத்தையன், சேந்தன், விசாகன், சுரேஷன், செவ்வேள் போன்ற பல பெயர்களால் வழங்கப்படுகிறார்.

**பன்னிருகரங்களின் பணிகள்**

முருகனின் பன்னிரு கரங்களில் இருகரங்கள் தேவர்களையும், முனிவர்களையும் காக்கின்றன. மூன்றாவது கை அங்குசத்தினைச் செலுத்துகிறது. மற்றொரு கை ஆடை உடுத்திய தொடையில் பதிந்திருக்கிறது. ஐந்து மற்றும் ஆறாவது கைகள் வேலைச் சுழற்றுகின்றன. ஏழாவது கை முனிவர்களுக்கு அரும்பொருளை உணர்த்துகிறது. எட்டாவது கை மார்பில் உள்ள மாலையோடு விளங்குகிறது. ஒன்பதாவது கை வளைகளோடு சுழன்று வேள்வியை ஏற்கிறது. பத்தாவது கை மணியை ஒலிக்கிறது. பதினோறாவது கை மழையை அருள்கிறது. பன்னிரண்டாவது கை மணமாலை சூட்டுகிறது.

*"வண்புகழ் நிறைந்து வசித்துவாங்கு நிமிர்தோள்*
*விண்செலன் மரபின் ஐயர்க்கு ஏந்தியது*
*ஒருகை, உக்கம் சேர்த்தியது ஒருகை,*
*நலம்பெறு கலிங்கத்து குறங்கின்மிசை அசை இயது ஒருகை,*
*பன்னிரு கையும் பாற்பட இயற்றி"* (திருமுருகா - பா-110,115)

**தெய்வானையுடன் திருமணம்**

முருகப்பெருமானின் அவதாரத்தின் நோக்கமே அசூரன் சூரபத்மனையும், அவரது சேனைகளையும் அழித்து தேவர்களைக் காப்பது. அதன்படி, ருகப்பெருமான் அவதாரம் செய்து, சூரபத்மனை அழித்து, அவனை மயில் மற்றும் சேவலாக மாற்றி மயிலை வாகனமாகவும்,சேவலை கொடியாகவும் ஏற்றுக்கொண்டு அருளினார்.

சூரபத்மனை முருகப்பெருமான் சம்ஹாரம் செய்ததால் தேவர்கள் துயரத்திலிருந்து நீங்கினர். அதனால் முருகப்பெருமானுக்குத் தன்னுடைய

நன்றியை செலுத்தும் வகையில் இந்திரன் தனது மகளாகிய தெய்வானையைத் திருமணம் செய்து கொடுக்க விரும்பினான். அதன் தொடர்ச்சியாக, முருகப்பெருமான் தெய்வானை திருமணம் திருப்பரங்குன்றத்தில் நடந்தது.

*கருதா மறவா நெறிகாணஎனக்*
*கிருதாள் வசைந்தர என் றிசைவாய்*
*- - - - - - - - - - - - - - - - - - - - -*
*விரதா சுரசூ ரவிபா டணனே* (கந்தரநுபூதி, பா 21)

**விழாக்கள்**

கார்த்திகை மாத கார்த்திகைத் திருநாள் முருகப்பெருமானின் விசேஷ தினமாக கொண்டாடப்படுகிறது. வைகாசி மாத விசாக நட்சத்திர தினம் இவரது ஜென்ம நட்சத்திர தினமாக கொண்டாடப்படுகிறது. முருகப்பெருமான் சூரபதுமன் என்னும் அரக்கனை அழித்ததை ஒட்டி கந்த சஷ்டி என்னும் திருவிழா கொண்டாடப்படுகிறது.

**முருகனின் சிறப்பைக் கூறும் நூல்கள்:**

திருப்புகழ், கந்தர் அனுபூதி, கந்தபுராணம் , திருமுருகாற்றுப்படை, கந்தசஷ்டி கவசம், சண்முக கவசம், கந்தர் கலிவெண்பா, பதிற்றுப்பத்தந்தாதி போன்ற பல நூல்களும் முருகனின் பெருமையை எடுத்துக் கூறுகின்றன.

**முருகன் குறித்த பழமொழிகள்**

- வேலை வணங்குவதே வேலை
- சுக்குக்கு மிஞ்சிய வைத்தியமில்லை, சுப்ரமணியருக்கு மிஞ்சிய தெய்வமில்லை.
- கந்தன் பாதம் கனவிலும் காக்கும்.

போன்ற பல பழமொழிகள் பேச்சு வழக்கில் உள்ளன.

**அறுபடை வீடுகள்**

**1. திருப்பரங்குன்றம்**

முருகனின் திருவுருவச் சிறப்பு, அவனது மாலைச்சிறப்பு, சூரர மகளிர் ஆடல், சூரசம்மாரம் முருகனிடம் செல்வார் பெறும் பரிசில், மதுரையின் மாண்பு, திருப்பரங்குன்ற இயற்கை வளம் போன்றவையும் கூறப்படுகிறது. இந்திரன் மகளான தெய்வாணையை மணந்த திருத்தலமிது.

*உலகம் உவப்ப உலனேர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு,*
*- - - - - - - - - - - - - - - - - - - -*
*செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை*
*மறுவில் கற்பின் வான்நுதல் கணவன்* (திருமுருகா பா-5,

**2. திருச்சீரலைவாய் ( திருச்செந்தூர்)**

யானையூர்தி, ஆறுமுகம் அருட்செயல் பன்னிரு கைகளின் செயல்கள், திருச்செந்தூர் சிறப்பு. அசுரன் சூரபத்மனோடு முருகன் போரிட்டு வென்று வெற்றி வாகை சூடிய திருத்தலமிது.

**3. திருவாவினன்குடி ( பழனி)**

முனிவர்களும், தேவர்களும் முருகனைப் பரவுதல் வழிபட வரும் முனிவர் ஒழுக்கம். மகளிர் அழகு பற்றி கூறுகிறது. மாங்கனிக்காக தமையன் விநாயகரோடு போட்டியிட்டு தோற்ற கோபத்தில் தண்டாயுதபாணியாக நின்ற திருத்தலமிது.

**4. திருவேரகம் ( சுவாமிமலை)**

அந்தணர் இயல்பும் வழிபடும் வசதியும், திருவேரக இருக்கையும் எடுத்து இயம்பப்படுகிறது. தன் தந்தை சிவனுக்கே பிரணவ மந்திரத்தை ஓதி தகப்பன் சுவாமியாக காட்சிதரும் திருத்தலமிது.

**5. குன்று தோறாடல் ( திருத்தணி)**

குன்றக்குரவை இடம்பெறுகிறது. ஆடு - மாடு மகளிர் இயல்பு. முருகனின் அணி, அருஞ்செயல், குன்றுதோறாடல் சூரனை வதம் செய்தபின் சினம் தணிந்து, குறவர் மகள் வள்ளியை மணந்த திருத்தலமிது.

*"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து*
*வாரணக் கொடியொரு வயிற்பட நிறீஇ*
*ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்"* (புலியூர்கேசிகன், ப- 57).

**6. பழமுதிர்ச்சோலை**

முருகன் அருள் செய்து பரிசில் நல்குதல், அருவியின் இயல்பு. எழுந்தருளிய ஏனைய இடங்கள், அவன் அருள் புரியும் வகை அடியார் திறம். பழமுதிர்சோலைச் சிறப்பு சித்தரிக்கப்படுகின்றன. பக்திப் பனுவலாகவும் இலங்கும். இது பண்டைத் தமிழரின் தெய்வங்கள், திருவிழாக்கள், நாகரிகம், போன்றவை அறிய உதவுகிறது.

**முடிவுரை**

முருகப்பெருமானின் பிறப்பு முருகனின் வெவ்வேறு பெயருக்குரிய பொருள். பன்னிருகரங்களின் சிறப்புகள், முருகப்பெருமானின் திருமணம்,சூரப்பத்மனை அழித்தல் மற்றும் அறுபடை வீடுகளின் தோற்றம், சிறப்பு, வழிபாட்டு முறைகளையும் தெளிவாக இக்கட்டுரையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

# கந்தரநுபூதியில் கந்தனின் பெருமை

ஆ. தனுசு இராமச்சந்திரன்
1/334 அருள்ஜோதி நகர்,
வடமதுரை அஞ்சல்
கோவை – 641 017.

முருகனுடைய பெருமையைக் கூறும் பக்தி நூல்கள் பல இருந்தாலும் அருணகிரிநாதர் பாடிய கந்தரநுபூதி மிகவும் சிறப்புமிக்கதாகும். இத்தகைய சிறப்புமிக்க முருகனின் பெருமையை அறிவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**பொருள்**

திருப்புகழில் கந்தரநுபூதி அருணகிரிநாதர் கிளி வடிவம் கொண்டு பாடப் பெற்றதாக அறிகின்றோம்

*"கந்தரநுபூதி பெற்று கந்தரநுபூதி சொன்ன*
*எந்தை அருணாடியிருக்கு நாளென் நாளோ"*
(தாயுமானவர்)

இவ்வாறு தாயுமானவப் பெருமான் வியந்து கூறும் பெருமை பெற்றது கந்தரநுபூதி ஆகும். விநாயகர் காப்புச் செய்யுளோடு ஐம்பத்தி இரண்டு பாடல் இடம் பெற்றதாகும். முதல் பாடலில் மயிலைப்பாடவும், வேல், சேவல் இவற்றைப் பற்றிப் பாடும் பணியருள் பெற்றிட வேண்டும் என அருணகிரிநாதர் கூறுகிறார். இது திருநாவுக்கரசர் திரு அங்கமாலையில் மனிதருடைய வாய் இறைவனின் திருநாமத்தைப் புகழ்ந்து பாடவேண்டும் என்ற கருத்தையே அருணகிரிநாதரும் வலியுறுத்துகிறார்.

*"ஆடும் பரிவேல் அணிசேவல் எனப்*
*பாடும் பணியே பணியாய் அருள்வாய்"*

இந்தக் கருத்தினையே சுந்தரமூர்த்தி நாயன்மாரும் புகலூர் இறைவனைப் பாடுங்கள் பொய்யர்களைப் பற்றிப் பாடாதீர்கள், என்று தன்னுடைய தேவாரத்தில் குறிப்பிடுகின்றார். நாம் பாடக் கூடிய பாடல் எப்போதும் நமக்கும், நம்மைச் சுற்றி இருப்பவருக்கும் எந்த நேரத்திலும் ஆராத இன்பத்தைத் தரக்கூடியதாகிய பாடலாக இருக்க வேண்டும். மேலும் இதே கருத்தினை மாணிக்கவாசகரும் இம்மைக்கும், மறுமைக்கும் நன்மை விளைவிக்கும் சொல்லாக "ஆராத இன்பம் அருளும் மலை போற்றி" என்று அருளியுள்ளார். எனவே நாம் எப்போதும் நமக்கு நன்மை பயக்கும் செயலாக இருப்பது இறைவனைப் புகழ்ந்து பாடுவது என்ற கருத்தினையே அருணகிரிநாதரும் தன்னுடைய முதல் பாடலில் கோரிக்கையாக வைக்கின்றார். கலைகளில் சிறந்த கலை நாட்டியக் கலை ஆகும். இந்நாட்டியக் கலைக்கு அரசர் தில்லைக்கூத்தராம் நடராசப் பெருமான். இப்பெருமான் நஞ்சினைத்தம் கண்டத்தில் அடக்கிய

காரணத்தால் "**நீலகண்டன்**" என்னும் பெயரைப் பெற்றார். "நீலகண்டம்" என்னும் பெயரையும் பெற்ற மயிலுக்கு நாட்டியக் கலையை எவரும் கற்றுக் கொடுத்திடவில்லை. ஆனால் அந்நாட்டியத்தை இயல்பாகவே தாமே ஆடும் இயல்பினை மயில் கொண்டதாகும். மேலும் ஐயன் திருமுருகப் பெருமானின் வாகனம் மயிலாகும். பெருமான் ஏறிடும் மயிலானது அகில உலகங்களையும் ஒரு நொடிப் பொழுதில் சுற்றி வரும் வல்லமை கொண்டது. இத்தகைய அருமை பெருமைகளைக் கொண்டுள்ள மயிலையும் திருமுருகப் பெருமானின் ஞான சக்தியே வேலாகும். அனைத்தையும் ஞானம் ஒன்றே வென்றிடும். ஞானமாகிய அறிவுக்கு, ஆழம், அகலம், கூர்மை என்னும் மூன்று இலக்கணங்கள் உண்டு. அதாவது ஆழ்ந்த அறிவு, பரந்த அறிவு, கூரிய அறிவு, ஆகியவை ஆகும். இதே போன்று வேலின் அடிப்பகுதி ஆழமாகவும் (நீளமாகவும்) இடைப்பகுதி அகன்றும், நுனிப்பகுதி கூர்மையாகவும் இருந்திடும். ஞானமான வேலினையும். அழகானப் பறவை மயிலினையும், சேவலையும் கொண்டுள்ளார். இச்சேவலே கதிரவனின் சூர்யோதத்தை உலகிற்கு உணர்த்துவது. வீரமிக்க சேவலும் ஞான சூரியனை முருகப் பெருமானின் வரவை உணர்த்திடும். ஆதலால் மயில், வேல், சேவலைப் பாடித் துதித்திடும் தொண்டினையேப் பணியாக முருகனிடம் கேட்கின்றார் அருணகிரிநாதர்.

**புறமும் அகமும் அற்றுப்போக**

*"எல்லாமற என்னை இழந்தநலம்*
*சொல்லாய் முருகா சுரபூபதியே"* *(கந்.அநுபூதி-2)*

முருகப் பெருமானே சகலவிதமான புறப்பற்றும், அகப்பற்றும் என்னைவிட்டு நீங்கிட அருள்புரிவீராக என்று வேண்டுகிறார். தன்னை மதியாமலும், தன் சொல்லுக்கு அடங்கி நடக்காமலும் இருக்கும் மனிதனைத் தண்டித்து தனக்கு அடங்கி நடந்திடச் செய்யும் நெறியை உணர்த்தும் பாடல். தன்னை எதிர்த்துப் போரிட்ட சூரனை வதை செய்ததோடு அவனுக்கும் தன்னுடனேயே மயிலாகவும், சேவலாகவும் விளங்கக்கூடிய சாயுச்சிப் பதவியைத் தந்தவர் முருகப் பெருமான். தன்னைப் பணிந்து வழிபடுவோருக்கு அவர்தம் துன்பம் நீங்கிட அருள் செய்திடுவார் என்பதில் ஐயமில்லை. தன்னை வணங்காதவர்க்கு முருகப் பெருமான் நன்மையே செய்திட வேண்டும் என்பதாகும்.

**தீராப்பிணியும் தீர்ந்திட**

*கெடுவாய் மனனே கதிகேள் கரவா*
*திடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்*
*சுடுவாய் நெடுவேதனை தூள்படவே*
*விடுவாய் விடுவாய் வினையாவையுமே*

**கந்.அநுபூதி-7**

மனமே பந்தத்துக்கும், முக்திக்கும் காரணமாக அமைகிறது. ஐம்பொறிகளின் வழியே சென்று இவ்வுலக இன்பத்தை விரும்பும்போது அம்மனம்

கீழ்மனமாகிறது. அகம் நோக்கி மனமானது சிவத்துடன் ஒன்றும்போது உயர்மனம் என்றும் பெயரைப் பெற்றிடுகிறது. இத்தகைய மனம் தவநெறியை மேற்கொள்ளாது அவநெறியைப் பற்றி அலைகின்றது. இதனால் மனமானது வீனே கெட்டழிகிறது என்று அருணகிரியார் இரங்குகின்றார். இவ்வாறு கெட்டழியும் மனம் பிழைத்திடும் வழியையும் கூறுகின்றார். உன்னிடமே வந்து இரந்து நிற்போருக்கு இல்லை என்று கூறாது இயன்ற அளவு உன்னிடம் இருப்பவற்றில் இருந்து கொடுத்திடுவாய் என்று வழிகாட்டுகிறார். இதனையே ஔவைப் பாட்டியும்,

*"அறம் செய விரும்பு"* (ஆத்திச்சூடி)

என்று கூறுகிறார். இவ்வாறு இரந்து நிற்போர்க்கு வழங்கும் போது "இது என் சம்பாத்தியம். இதில் இருந்து நான் வழங்குகிறேன்" என எண்ணாமல் "இச் செல்வம் முருகப் பெருமான் அருளியது. முருகனுக்குத் தருகிறேன்" எனத் தருதல் வேண்டும். எந்த தான தருமம் செய்வதாய் இருந்தாலும் நான், எனது என்ற செருக்கு இல்லாது சிவமாய் இருத்தல் வேண்டும் என்பதே ஆகும்.

பிறவித் துன்பமே நெடுங்காலமாய் உயிருக்குள்ள துயரமாகும். பல நூறு கோடி காலமாக உயிர் இறப்பதும், பிறப்பதும், மீண்டும் இறப்பதும் என்று உழன்று வேதனைப் படுகின்றது. தனக்கு என வைத்திடாமல் பிறர்க்குத் தருவதனாலும், எந்நேரம் இறைவனின் திருவடிகளைத் தியானிப்பதாலும் பிறவித் துயரமானது நீங்கிடும் என்பதே அவர்தம் கருத்தாகும். அமரர்களின் தலைவனாக விளங்கும் வேற்படையோனை மறவாது தியானிப்பதில் உண்டாகும் ஞானக்கினி பிறவித் துன்பத்தை எரித்துப் பொடி பொடியாக்கும். எனவே வினைகளே மனிதரின் இன்ப துன்பங்களுக்குக் காரணமாகும். வினைப் போகம் தான் உடலாகும். ஆதலால் வினைகள் யாவற்றையும், விட்டுவிடு, விட்டுவிடு எனக்கூறி அருளுகிறார்.

**மௌன உபதேசம் பெற்றது**

*களவு போன பொருளைக் கண்டு பிடித்திட*
*செம்மான் மகளைத் திருடும் திருடன்*
*பெம்மான் முருகன் பிறவான் இறவான்*
*சும்மா இரு சொல்லற என்றலுமே*
*அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே* (கந்.அநுபூதி-12)

நள்ளிரவு நேரத்தில் தாய், தந்தையர் அறியாத வண்ணம் வள்ளியம்மையை முருகப் பெருமான் கவர்ந்து சென்றதை அருணகிரியார் "செம்மான் மகளைத் திருடும் திருடன்" என்றருளினார். மணங்கள் இருவகை உண்டு. கற்பியல் மற்றும் களவியல் ஆகியனவையே ஆகும். முருகப் பெருமானின் இச்செயல் களவியலைச் சேர்ந்தது ஆகும். அருணகிரியார் இக்கூற்றை கந்தரலங்காரத்திலும் கூறுகின்றார்.

*"கருமான் மருகனைச் செம்மான் மகளைக் களவு கொண்டு*
*வருமா குலவனை"*

முருகப் பெருமான் தம்முன் தோன்றி "சும்மாஇரு" என உபதேசித்ததும் பிரபஞ்ச விஷயங்கள் யாவும் தம்முன் மறைந்து போயின எனக் கூறுகின்றார். "பொருள் ஒன்றும் அறிந்திலேன்" என அருணகிரியார் கூறியது தமக்கு "நான்" என்னும் அகந்தை அற்றுப் போனது. தம்மை முருகப் பெருமான் தமதாக்கிக் கொண்டார் என்பது பொருளாகும். இப்பாடலின் உட்கருத்தாக "முருகவேல் அருட்குருவாகத் தம்மைச்சுற்றி அறிகின்ற உலகம் யாவும் மறைந்து அதுவாக எங்கும் நிறைந்து தமக்குக் காட்சியளித்தது" என அருணகிரிநாதர் தெளிவுபடுத்துகிறார்.

*"முருகன் குமரன் குகன் என்று மொழிந்து*
*உருகும் செயல்தந்து உணர்வு என்று அருள்வாய்"* (கந்.அநுபூதி-15)

முருகப் பெருமானுக்குத் திருப்பெயர்கள் பல உள்ளன. அவற்றுள் சிறந்ததாகக் கருதப்படுவது முருகன், குமரன், குகன் என்பவை ஆகும். இந்த மூன்றும் மிகச்சிறந்ததாகக் கருதப்படுவது முருகன் என்னும் திருப்பெயரே ஆகும். முருகு என்னும் மூன்று எழுத்துக்களிலும் உகரம் இருந்திடுவதை அறியலாம்.

ம் + உ = மு; ர் + உ = ரு; க் + உ = கு

என்று மூவிடங்களிலும் காத்தலுக்கான உகரம் இடம் பெறுவதால் உயிர்களைக் காக்கும் கடவுளாக முருகனைப் போற்றித் துதிக்கின்றனர். இதே போன்று குமர என்ற பெயருக்கும் பொருள் உண்டு. **"கு"** என்றால் உலகமாயையும், **"மர"** என்றால் போக்கடிப்பவன் என்றும் பொருள் கொள்ளப்படும். எனவே **"குமர"** என்றால் உலக மாயையை அழிப்பவன் என்றும் பொருளாகும். மூன்றாவதாக குகன் என்னும் பெயரை எடுத்துக் கொண்டால் குகையில் இருப்பவன் குகன் எனப்படுவான். இங்கு ஆன்மாக்களின் இதயக் குகைகளில் வீற்றிருப்பதால் குகன் என்னும் பெயரைப் பெற்றார். உள்ளம் உருகினால் உயிரானது உருகும். உயிர் உருகினால் உயிருக்கு உயிராக உள்ள சிவத்துடன் ஒன்றுபடும். இதனால் முக்தி சித்தியாகும். இங்கு உணர்வை மெய்ஞானம் என்னும் பொருளில் அருணகிரிநாதர் உரைக்கின்றார். உள்ளம் உருகும் அடியவர்களுக்கு இறைவனாகிய முருகர் பெருமான் மெய்ஞானத்தை வழங்கிடுவார்.

முடிவுரை

கந்தரநுபூதி உலகியல் பிரச்சனைகளுக்கு உண்டான தீர்வும், அருளியல் வாழ்க்கைக்கும் உண்டான ஞானத்தைப் பிழிந்து தருவது தான் கந்தரநுபூதி. கடைசி வரியில் "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என அருணகிரிநாதர் முடிக்கின்றார். திருவாசகம் போன்ற அனுபவப் பிழிவுதான் கந்தரநுபூதி இந்த அனுபவத்தை அனைவரும் அனுபவிப்போம். இறைவன் அருள் பெறுவோம்.

# பண்டைய தமிழரின் முருகவழிபாட்டுச் சடங்குகளும் நம்பிக்கைகளும்

முனைவர் **பொ. திராவிடமணி**
உதவிப்பேராசிரியர்(தமிழ்)
குந்தவை நாச்சியார் அ.ம.க.கல்லூரி(த)
தஞ்சாவூர் 613 007.

பண்பாட்டிலும், நாகரிகத்திலும் சிறந்து விளங்கிய பண்டைத் தமிழர்களிடம் கடவுள் சார்ந்த் வழிபாட்டுச் சடங்குகளும், நம்பிக்கைகளும் இருந்தன. நிலத்தினைக் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என ஐந்து வகையாகப் பிரித்த அவர்கள் ஒவ்வொரு நிலத்திற்கும் ஒரு தெய்வத்தையும் வரையறுத்தனர். தொல்காப்பியர்,

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்*
*சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"*

(தொல்.பொருள்.அகத்திணை -5)

என்று குறிப்பிடுகின்றார். இவர் பாலை தவிர்த்த பிற நிலங்களுக்கான தெய்வங்களைச் சுட்டியுள்ளார். இவர் பாலை நிலம் குறித்துக் குறிப்பிடவில்லை. உரையாசிரியர்களும் சேயோன் முருகனையும், மாயோன் திருமாலையும், வருணண் மழைத்தெய்வமாகிய வருண பகவானையும், வேந்தன் இந்திரனையும் குறிப்பதாகக் கூறியுள்ளனர். இதன்மூலம் குறிஞ்சித் திணையாகிய மலைநாட்டிற்கு உரிய தெய்வமாக முருகன் விளங்குவதை அறியமுடிகிறது. பிற்காலத்தார் 'குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம்' என்று கூறுவதும் இங்குச் சுட்டத்தக்கது.

முருகு, முருகன், மலைக்கடவுள், மலை உறைக் கடவுள், குறிஞ்சிக்கிழவன், சேய், சேயோன், வேள், செவ்வேள், நெடுவேள், வேலன், வேலான் போன்ற பெயர்களால் குறிஞ்சி நிலக்கடவுள் முருகன் அழைக்கப்பெற்றான். முருகக்கடவுள் குறித்து பல்வேறு கருத்தாக்கங்கள் பண்டைத் தமிழரிடம் நிலவியதையும் அவதானிக்க முடிகிறது. போராற்றல் மிக்க முருகன் சூரபன்மன் எனும் அசுரனை அவன் சுற்றத்தினரையும் வென்றழித்த வலிமைமிக்கவன், மிகுந்த சினமுடைவன். ஒளி பொருந்திய இலைபோன்ற வேற்படையினை உடையவன். குளிர்ச்சி பொருந்திய திருப்பரங்குன்றம் அவன் மலையாகும் எனக் கருதினர். இதனை,

*"முருகன் அன்ன சீற்றத்து கடுந்திறல்*
*எந்தை"* (அகம் 158: 16-17)

என்றும்,

*"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்*
*சினமிகு முருகன் தன்பரங் குன்றத்து"* (அகம் 59:10-11)

என்று அகநானூறு தெரிவிக்கிறது. முருகக் கடவுள் காட்டுமல்லிகை மலருடன் கூதள மலரையும் சேர்த்துத் தொடுத்த கண்ணியைச் சூடியிருப்பான் என்றும் கருதினர். அவன் விரும்பியபோது மானிட உருதாங்கி வருவான் என்றும் நினைத்தனர்.

*"அஞ்சுவரு விடர்முகை ஆர்இருள் அகற்றி*
*மின்ஒளிர் எஃகம் செல்நெறி விளங்க*
*தனியன் வந்து பனிஅலை முனியான்*
*நீர்இழி மருங்கின் ஆர்இடத்து அமன்ற*
*குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி*
*அசையா நாற்றம் அசைவளி பகர*
*துறுகல் நண்ணிய கறிஇவர் படப்பைக்*
*குறிஇறைக் குரம்பைநம் மனைவயின் புகுதரும்*
*மெய்ம்மலி உவகையன்: அந்நிலை கண்டு*
*முருகு என உணர்ந்து முகமன் கூறி*
*உருவச் செந்தினை நீரொடு தூஉய்*
*நெடுவேல் பரவும் அன்னை"* (அகம் 272: 4-15)

எனும் இவ்வகப் பாடலில் தலைவன் வேலொடும், காட்டுமல்லிகையோடும் சேர்த்துத்தொடுத்த கண்ணியைச் சூடி தலைவியின் இல்லத்தில் புகுந்தபோது அவனை முருகக்கடவுள் என நினைத்த தலைவியின் தாய் செந்தினையைத் தூவி புகழ்ந்து பாடிப் பரவினாள் எனத்தெரிவிக்கிறது.

இளம்பெண்களைத் தாக்கிவருத்தும் தன்மையுடையவனாக முருகக் கடவுள் பார்க்கப்பட்டான். மாதவிடாய்க் காலங்களில் பெண்கள் தூய்மை அற்றவர்களாய் இருப்பார்கள் இதனால் அக்காலத்தில் அவர்கள் இல்லத்தில் பயன்படுத்தும் கலங்களைத் (பொருள்களை) தொடக்கூடாது என்றும் குறிப்பாக முருகக்கடவுள் உறைந்திருக்கும் கோட்டத்திற்குச் செல்லமாட்டார்கள் என்றும் ஒரு புறப்பாடல் குறிப்பிட்டுள்ளது.

*"அணங்குடை முருகன் கோட்டத்துக்*
*கலந் தொடா மகளிரின்"* (அகம் 299:6-7)

குறிஞ்சி நிலமக்கள் இளம்பெண்களை முருகன் வருத்துவான் என்றும் அவன் தாக்குதலுக்கு ஆட்படும் பெண்கள் உடல் மெலிந்து, வனப்பிழந்து போவார்கள் என்ற நம்பிக்கையும், அவ்வாறு நேர்ந்தால் அதற்கு பரிகாரம்

செய்தால் அத்துன்பம் அகன்றுவிடும் என்ற நம்பிக்கையும் இருந்திருக்கிறன. இதனால்தான் காதல் வயப்பட்ட தலைவியின் உடல்வேறுபாட்டை கண்ணுற்ற தாய் இதற்கு முருகக்கடவுள்தான் காரணம் எனக் கருதி வேலனை அழைத்து வழிபாடு செய்தாள் எனப் பல சங்க இலக்கியப் பாடல்கள் தெரிவிக்கின்றன. இவ்வழிபாட்டை 'வெறியாட்டு' என்றனர்.

"வெறியாட்டு அல்லது வெறியயர்தல் என்பது பூசாரி அல்லது மாந்திரிகப் பூசாரியின் மேல், குறிப்பிட்ட தெய்வீகச் சக்தி(முருகன்) அவன் உடலை ஊடகமாகக் கொண்டு வெளிப்பட்டுத் தோன்றி, தான் கூற வேண்டியதை மக்களுக்குக் கூறும். அது நோய்க்கான காரணம், நோய் நீக்கம் போன்றவைக் குறித்தும், எதிர்கால நிகழ்வுகள் குறித்த கணிப்புகளாகவும் அமையும். இச்சடங்கியல் நிகழ்த்துதலை நடத்திய சமய நிபுணர்களை வேலன் என்றனர். இவ்வெறியாட்டு நிகழ்த்துவோனாக வேலன் மட்டுமல்லாமல், தேவராட்டி எனும் குறமகள், சாமானியர்கள், பெண்கள் ஆகியோரும் வெறியாட்டில் பங்கேற்பாளர்களாக இருந்துள்ளனர். அந்நிகழ்த்துதலில் மகளிரின் குரவைக் கூத்தும் இடம்பெற்றது." (சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும். ஆ. தனஞ்செயன் ப-22)

*"முருகு மெய்ப்பட்ட புலைத்தி போலத்*
*தாவுபு தெறிக்கும் மான்மேல்"* (புறம் 259:5-6)

என்றும்

*"வெறிகொள் பாவையின் பொலிந்த வெண் அணிதுறந்து*
*ஆடுமகள் போலப் பெயர்தல்*
*ஆற்றேன் தெய்ய அலர்கவிவ் வூரே"* (அகம் 370:14-16)

என்றும்,

*"நளிமலைச் சிலம்பி னன்னகர் வாழ்த்தி*
*நறும்புகை யெடுத்து குறிஞ்சி பாடி*
*யிமிழிசை யருவியொ டின்னியங் கறங்க*
*வுருவப் பல்பூத் தூஉய் வெருவரக்*
*குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்*
*முருகிய நிறுத்து முரணின ருட்க*
*முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனக*
*ராடுகளஞ் சிலம்பப் பாடி"* (திருமுருகு 238-245)

என வரும் சங்க இலக்கிய சான்றுகள் பெண்கள் வெறியாட்டு நிகழ்த்தியதற்கு சான்று பகர்கின்றன. சங்க இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ள அணங்கு எனும் சொல் பெரும்பாலும் தெய்வத்தைக் குறிப்பதாக இடம்பெற்றுள்ளது. இச்சொல் வருத்தம், அச்சம், பேய், நோய், வடிவு, அழகு, தெய்வம், தெய்வத் தன்மை எனப் பல பொருளில் ஆளப்பட்டுள்ளது. அணங்கு கன்னிப்பெண்களைத் தீண்டிவருத்தும் சக்தியாகக் கருதப்பட்டது. இதற்கு காரணகர்த்தா முருகன்

எனவும் நம்பப்பட்டது. இதற்கான வழிபாட்டுக் களம் அணங்கையர் களம் எனப்பட்டது. இதனை,

*"காடுகெழு நெடுவேட் பாடுகொளைக் கேற்ப*
*அணங்கயர் வியன் களம்"* (அகம் 382 :5-6)

என்கிறது அகநானூறு.

தலைவி உடல்மெலிந்து சோர்ந்து இயல்புக்கு மாறாக இருக்க, தலைவியின் தாய் மகளின் உடல்மெலிவு குறித்து கவலைக்கொள்கிறாள். குறிசொல்லும் பெண்ணிடமோ அல்லது வேலனிடமோ சென்று குறிகேட்க இதற்கு முருகனே காரணம் என்றுரைத்து, வெறியாடும் களத்தில் ஆடு பலிகொடுத்து வணங்கினால் இந்நோய் நீங்கும் என்று கூற, இதன்படி வெறியாட்டு நிகழ்த்தப்படுகிறது. வெறியாட்டு நிகழ்வு குறித்து அகநானூறு குறிப்பிடுகையில்

*"ஓவத்தன்ன வினை புனை நல் இல்,*
*பாவை அன்ன பலர் ஆய் மாண் கவின்*
*பண்டையின் சிறக்க என் மகட்கு எனப் பரைஇ*
*கூடு கொள் இன் இயம் கறங்க களன் இழைத்து*
*ஆடு அணி அயர்ந்த அகன் பெரும் பந்தர்*
*வெண் போழ் கடம்பொடு சூடி இன் சீர்*
*ஐது அமை பாணி இரீஇ கைபெயரா*
*செல்வன் பெரும் பெயர் ஏத்தி வேலன்*
*வெறி அயர் வியன் களம் பொற்ப வல்லோன்*
*பொறி அமை பாவையின் தூங்கல் வேண்டின்*
*என் ஆம்கொல்லோ? –தோழி"* (அகம் 98:11-21)

என்கிறது. அஃதாவது ஓவியம் போன்று நல்ல வேலைப்பாடுகளோடு அலங்கரிக்கப்பெற்ற நல்ல வீட்டில், பாவை போன்ற அழகுடைய என் மகள் முன்பு போல் சிறந்து விளங்கவேண்டும் எனத் தலைவியின் தாய் தெய்வத்தை வணங்கினாள். இனிய பல வாச்சியங்கள் ஒலிக்க, வெறியாடும் களத்தை அமைத்து, அழகு செய்யப்பபெற்ற பெரிய பந்தலில் வேலன், வெண்மையான பனந்தோட்டினைக் கடப்ப மலரோடு சூடி, இனிய பாடலினை அழகாக அமைந்த தாளத்தோடு பொருந்தி, முகக்கடவுளின் பெரும் புகழினைத் துதித்து வெறியாடுகளம் அழகுற வல்லோன் ஆட்டும் பொறியமைந்த பாவையைப்போலக் கைவீசி வெறியாடும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

"இந்த வெறியாட்டு முழுக்கமுழுக்கக் குறிஞ்சித்திணையில் நிகழ்வதாகவே உள்ளது. இவ்வழிபாடு இனக்குழச் சமுதாயத்தின் எச்சங்களைத் தாங்கிய வழிபாட்டு முறையாக உள்ளது. கானவர் வழிபடல், குடியினருடன் கள்ளுண்ணல், ஆடு பலிகொடுத்தல, தினை தூவி வழிபடல் , குரவைக் கூத்தாடல், முதுபெண்டிரும் வேலனும் குறி சொல்லுதல் எனும் பலவும் இது குறிஞ்சிநில மக்களின் வழிபாட்டுமுறையாய் மட்டுமே இருந்ததைக்

காட்டுகின்றன" என்பார் பெ.மாதையன் (தமிழ்ச் செவ்வியல் படைப்புகள்- கவிதையியல் சமுதாயவியல் நோக்கு. ப-186).

வெறியாட்டு நிகழ்த்தினால் நோய் தீரும் என்ற நம்பிக்கை இருந்ததை பயன்படுத்தி, வெறியாட்டு நிகழ்த்தும் வேலன், தலைவிக்குக் காதல்நோயால் உண்டான மாற்றத்தை முருகனால் ஏற்பட்டது என்று சொல்லி ஏமாற்றியதையும் சங்க இலக்கியப்பாடல்கள் பல தெளிவுபடுத்தியுள்ளன. அகநானூறு இதனை

*"சூர் உறை வெற்பன் மார்பு உறத் தணிதல்*
*அறிந்தனள் அல்லள், அன்னை: வார்கோல்*
*செறிந்து இலங்கு என் வளை நெகிழ்ந்தமை நோக்கி*
*கையறு நெஞ்சினள் வினவளின் முதுவாய்ப்*
*பொய் வல் பெண்டிர் பிறப்பு உளர்பு இரீஇ*
*'முருகன் ஆர் அணங்கு' என்றலின்,"* (அகம் 98: 5- 10)

என்று குறிப்பிட்டுள்ளது. பெண்ணின் தோற்ற வேறுபாடும் அதனை வெறியென மயங்குதலும் (ஐங்-242), முருக வழிபாட்டால் இந்நோய்த் தீருமென முதுவாய்ப்பெண்டிர் கூறுதலும்(அகம்-22), வெறியாட்டு களம் அமைத்தலும் (அகம். 22, குறுந். 53, திருமுரு-222, மதுரை-284) வேலன் வெறியாடுதலும (அகம். 292), ஆடு பலியிடல், நீருடன் செந்திணை மற்றும் மலாத் தூவி வழிபடலும் (அகம். 242, 292, 22, 272, 263, நற்.322), இசைக்கருவிகளை இசைத்து பாடுதலும்(மது.612, குறுந்.263 அகம்.22) எனப் பல பாடல்கள் வெறியாட்டு குறித்து தெரிவிக்கின்றன.

இவ்வாறு முருகக்கடவுள் குறித்து பண்டையத் தமிழரிடம் பல்வேறு வழிபாட்டு முறைகளும் நம்பிக்கைகளும் இருந்துள்ளதை சங்க இலக்கியப் பாடல்களின் வழி அறியமுடிகிறது.

# மயிலம் முருகன் அருட்பனுவல்களில் பக்திநெறி

முனைவர் **ச. திருநாவுக்கரசு,**
தமிழ்த் துறைத்தலைவர்,
ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள்
தமிழ், கலை, அறிவியல் கல்லூரி,
மயிலம் - 604 304

தமிழ் இலக்கிய நெடும்பரப்பில் காலந்தோறும் பேசப்படுவது வழிபாட்டு நெறி. ஆறறிவு படைத்த மனிதன் மனிதனாக வாழவும், புனிதனாக உயரவும் வழிகாட்டுவன சமயநெறிகள். ஒவ்வொரு சமய நெறிகளின் வழி மக்கள் கடவுளை வழிபட்டு நல்வழிப்பட்ட சமூகத்தை உருவாக்குகின்றனர். அறுவகைச் சமய நெறிகளுள் ஒன்றாக விளங்கும் கௌமாரத்தின் தலைவன் முருகனைக் குறித்து பாடப்பெற்ற மயிலம் தலத்து அருட்பனுவல்களை இக்கட்டுரை ஆராய்கிறது.

மலையும் மலைசார்ந்த குறிஞ்சி நிலத்துக்கும் உரிய தலைவனாக முருகன் போற்றப்படுகின்றான். (சேயோன் மேய மைவரை உலகு - தொல்.பொருள்) மலை நிலத்தில் மட்டுமின்றி நிலப்பகுதிகளிலும் அவன் எண்ணற்ற கோயில் கொண்டு அருள்பாலித்து வருகின்றான். எந்த ஒரு தெய்வத்துக்கும் இல்லாத அருமையும் பெருமையும் முருகப் பெருமானுக்குத் தமிழ் இலக்கியத்தில் உண்டு. அதுதான் 'தமிழ்க்கடவுள்'என்கிற அடைமொழி. முருக வழிபாடு பன்னெடுங் காலமாகத் தமிழர்கள் போற்றி வருவது. தமிழ்க் கடவுளான முருகனுக்குத் தமிழகத்தில் மட்டுமின்றி இந்தியா முழுவதிலும், மலேசியா, சிங்கப்பூர், ஆஸ்திரேலியா என உலகம் முழுவதிலும் எண்ணற்ற ஆலயங்கள் உள்ளன.

கந்தன், சரவணன், காங்கேயன், சிலம்பன், சிவகுமாரன், சேனாதிபதி, ஆறுமுகன், காங்கேயன், வேலன், குமாரன், சுவாமிநாதன், குருநாதன் எனப் பல்வேறு திருநாமங்களைக் கொண்டு தன்னை வணங்கும் பக்தர்க்கு அருளை வாரி வழங்கும் வள்ளலாக முருகன் விளங்குகின்றான்.

சைவம், வைணவம், கவுமாரம், காணாபத்யம், சாக்தம், சவுரம் என்னும் ஆறு சமயங்களுக்கும், மூலாதாரம். சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களுக்கும், வன்மை, பதம், மந்திரம், புவனம், தத்துவம், கலை ஆகிய ஆறு வழிகளுக்கும் முதல்வன் ஆறுமுகனே எனப் போற்றுவார் ஸ்ரீசாந்தானந்த சுவாமிகள்.

**குன்றிருக்கும் இடமெல்லாம் குமரனிருக்கும் இடம்** என்ற தொடர் மலைநிலத் தெய்வமான முருகன் உறையும் இடத்தைச் சுட்டுகின்றது. அறுபடை வீடுகளில் மட்டுமின்றி குன்றுகளில் உறையும் குமரக்கடவுள் மணக்கோலத்துடன் இருந்து அருள் பாலிக்கும் திருத்தலம் மயிலமாகும்.

**மயிலம்**

விழுப்புரம் மாவட்டத்தில் பல கோயில்கள் குகைக்கோயில்களாகவும், கட்டுமானக் கோயில்களாகவும் அமைந்துள்ளன. அவற்றுள் முருக வழிபாட்டில் புகழ் வாய்ந்தது மயிலம் முருகன் கோயில். மயிலம் எனும் ஊர் தமிழக வீரசைவத் தலங்களுள் குறிப்பிடத்தக்கது. இங்குப் புகழ்மிக்க முருகன் கோயில் ஒன்று உள்ளது. இவ்வூர் மலை, மலையடிவாரம், பாளையம், மயிலம் ஊர்ப்பகுதி என்று நான்கு பிரிவுகளாக அமைந்துள்ளது. மலையில் திருமடமும் கோயிலும் உள்ளன. அடிவாரத்தில் கல்வி நிலையங்களும், சத்திரங்களும் உள்ளன. பாளையத்தில் அரசாங்க அலுவலகங்கள் உள்ளன. (சோமலே, தென்னாற்காடு மாவட்டம், பக்.294)

மயில் வழிபட்ட தலம் மயிலம் என்பர் சிலர். சூரபத்மன் மயில் வடிவாக இருந்து முருகனை நோக்கித் தவம் செய்த இடம் மயிலம் என்பர் வேறு சிலர். படிந்த தோகையை உடைய ஒரு மலையும், உடலும் தலையுமாக உள்ள பிறிதொரு மலையும் ஒன்றன் பின் ஒன்றாக இணைந்த மயில் போலத் தோற்றம் தருவதால் மலையும் ஊரும் மயிலம் என்று பெயர் பெற்றுள்ளது என்பர் இன்னும் சிலர். (திருக்கோயில்கள் ப.400) வேறு சிலர் இம்மலையை ஓங்கார வடிவமான மலை என்றும் கூறுகின்றனர் என்பார் செந்தில் துறவி (முருகன் தலம் முப்பது ப.110) மயிலமலை, மயிலாசலம், மயூரகிரி, மயூராசலம் என்னும் பெயர்களால் அழைக்கப்பெறும் இத்தலம் குன்றுதோறாடலில் ஒன்றாக விளங்குகின்றது.

கயிலாயவாசன் சிவபெருமான் கட்டளைக்கிணங்க கயிலாயத்தில் மேற்கு வாயில் காவலராக இருந்த சங்குகன்னர், பொம்மையார் பாளையம் கடற்கரைப் பகுதியில் உருத்திராக்கம், திருநீறு, காவியுடை, மாத்திரைக்கோல் முதலிய சிவசின்னங்களுடன் தோன்றி, பெருமுக்கல் முதலான மலைகளில் கடுந்தவமியற்றினார். அக்காலத்து நாரதர் தோன்றி மயிலம் தலத்தின் சிறப்புணர்த்தி தவமியற்றுமாறு கூற 32 ஆண்டுகள் கடுந்தவமியற்றி முருகப்பெருமானின் அருள் பெற்றார் என மயூராசல புராணம் உரைக்கின்றது. மயிலம் பொம்மபுரத் திருமடத்து குருமரபு வாழ்த்து இச்செய்தியைப் பதிவு செய்கிறது.

*பரசிவமார் திருக்கயிலைப் பரம்பரையின்*
*வீரசைவ பரமே காட்டப்*
*பரனருளால் பொம்மபுரக் கடலுதித்த*
*சங்கு கன்னப் பாலசித்தர்*
*வரமயிலார் முருகனுப தேசமுடன்*
*வந்துகுரு வாகி யாண்ட*
*திரமிகுபேர் சிவஞான பாலயநற்*
*குருமரபு சிறந்து வாழி!*

முருகனைக் குருவாகக் கொண்டுதாம் பெற்ற இனிய அனுபவத்தை மயிலம் திருத்தலத்திற்கு வருகை தரும் அனைவரும் பெறவேண்டும் என்ற விழைவில் ஸ்ரீபாலசித்தர், மணக்கோல மாமுருகனாக, **குருவாய் வருவாய் அருள்வாய் குகனே** எனும் அருணகிரிநாதரின் வாக்கை மெய்ப்பிக்கும் வகையில் மயிலத்தில் உறைந்து அருள்புரியச் செய்தார் என்பது வரலாற்று உண்மை. இத்தகைய பல்வேறு சிறப்பியல்புகளைத் தன்னகத்தே கொண்ட மயிலம் திருத்தலத்தைப் பாடிப் பரவசப்பட்டோர் பலராவர். அவர்களுள் அருணகிரிநாதர், பாம்பன் சுவாமிகள், பாரதிதாசன், திரு.வி.க., ஆ. சிவலிங்கனார் போன்றோர் குறிப்பிடத்தக்கவராவர். கருணை மிக்க கந்தப்பெருமானின் திருவடிகளைச் சரணடைந்து அவனுக்கு நாம் சொந்தமாகிவிட்டால், அவனது அருள் நம் சந்ததிக்கே வந்து சேரும் என்பது வாரியாரின் வாக்கு.

முருகன் மீது பக்தி செலுத்தினால் கலிநீங்கி முக்திப் பேற்றை அடையலாம். அஞ்சுதலை அடையும் ஆன்மாவுக்கு, ஆறுதலை வழங்கும் அருள் வள்ளலான மயிலம் முருகனைக் குறித்து பல புலவர்கள் பாடியுள்ளனர்.

மயிலத்து அந்தாதி, மயிலமாலை, ஸ்ரீமயிலத்து இரட்டைமணிமாலை, மயிலவேள் அகவல், மயிலாசல மாலை, முருகன் அருள்வேட்டல், கார்த்திகைக் கதம்பம், திருமயிலைச் சந்நிதிமுறை, பஞ்சாங்கப் பாமாலை, திருப்பதிகம், நட்சத்திரப் பதிகம், யோகப் பதிகம், கரணப் பதிகம், ஸ்ரீமயிலாசல மாலை, திருமயிலை அந்தாதி, மயிலாசல சதகம், பஞ்சரத்தினம், திருமயிலை அந்தாதி, மயிலாசலசதகம்,பஞ்சரத்தினம்,திருமயிலைத் தேவாரம்,திருமயிலைதுயரப் பதிகம்,திருமயிலைநாதர் பதிகம், திருமயிலை வடிவேல் முருகர் பதிகம், திருமயிலைத் தேவாரப் பண்கொல்லி, திருமயிலை சத்குரு நவரத்தினம், திருமயிலை அருள் பதிகம், ஸ்ரீமயிலாசல அனுபூதி, வேலும் மயிலும் தேவாரப்பண். 32 ஆகிய பல்வேறு தலைப்புகளை உள்ளடக்கிய பக்திப் பனுவலாக மயிலம் முருகன் அருட்பனுவல் விளங்குகின்றது.

*ஆளக் கடனாம் அறுமுகனே வள்ளிமண*
*வாளக் குகனேஅயில் ஏந்தி–கோழிக்*
*கொடியனே மாமயிலை கோலா கலனின்*
*அடியனே காக்கும் அருள்.*(மயிலம் முருகன் அருட்பனுவல்கள்.147)

மயிலம் மலையில் வீற்றிருக்கும் வள்ளிமணாளன் கையில் வேலேந்தி, சேவல் கொடி ஏந்தி உலக உயிர்களைக் காக்க வல்லவன் என்பதை இப்பாடல் சுட்டுகின்றது. **'ஒருகால் நினைக்கில் இருகால் தோன்றும்'** எனும் தொடர் முருகப்பெருமானின் பேரருளைச் சுட்டுகின்றது.

சிவபெருமானின் மறுவடிவாகத் திகழும் முருகன், சூரனை வெல்லப் போருக்குப் புறப்பட்டபோது தாயிடம் ஆசி பெற்று பார்வதியின் சக்தியெல்லாம் ஒன்று திரட்டிய சக்திவேலைப் பெற்றான். சக்திவேலுடன் கூடிய முருகனே சூரனைவென்று வெற்றி வாகை சூடுகிறார். ஆணவத்துடன் திரிந்த சூரனை முருகப்பெருமான் கொல்லவில்லை. அவனது ஆணவத்தை மட்டும் கொன்று,

அவனை இரண்டாகப் பிளந்து மயில், சேவல் என்ற இரு உயிர்களாக மாற்றி ஒன்றைத் தமது வாகனமாகவும், மற்றொன்றைக் கொடியாகவும் ஏற்றுக் கொண்டார் கருணை வள்ளலாகிய முருகன். வாக்கிற்கு எட்டாத கந்தப்பெருமான் தியானத்தில் ஆழ்ந்து குருமூர்த்தியாகத் திகழ்பவர். ஈசனுக்கும் உமாதேவிக்கும் புத்திரனாகப் பிறந்தவர் குகப்பெருமான் என்பதைக் கீழ்க்கண்ட சுலோகம் சுட்டுகிறது.

*"வாசா மகோசரம் ஸ்கந்தம் சிதுத்யான விஹாரிணம்*
*குரு மூர்த்திம் மஹேஸானம் வந்தேகுஹம் உமாஸீதம்!*

(குரு பஞ்சரத்தினம்)

'எந்தக் கடவுளும் கந்தக் கடவுளுக்கு மிஞ்சாது' எனக் கூறிய பாம்பன் சுவாமிகள், மயிலம் திருத்தலத்தைக் குறித்து பத்துப்பாடல்கள் பாடியுள்ளார். "சிந்தை மயங்காமல் என்னை சித்தாந்த வீட்டிடை வை" எனத் தெளிந்த மெய்ஞ்ஞானத்தை மயிலம் முருகனிடம் வேண்டுகின்றார் சுவாமிகள். 'கலிக்கும் (கலியுகம்), கிலிக்கும் (பயம்) கந்தனை எண்ணு' என்ற பழமொழிக்கு ஏற்ப வடிவேல் அறிய வஞ்சகம் இல்லை' என்றபடி வாழ்வை வளமாக்கிக் கொண்டவர்கள் பலராவர்.

*காம வேட்கையினால் பவமுறுவினையும் கன்மம் மேன்மேல் இடும் துணிபு*
*நாமமே எங்கும் தழைத்திடும் புலனும் நைந்து நைந்துஅகம் குழைந்துஅயரும்*
*நேமமும் இலனாய்ப் பாமரம் இவனாய் நினைவுணர் விளக்கமும் இலனேற்கு*
*தாமதம் இலனாய்த் தனித்துஅருள் மயிலை சயிலனே அகில நாயகனே.*

(ஸ்ரீ மயிலாசலமாலை. 18)

அகிலத்திற்கெல்லாம் தலைவனாக விளங்கும், மயில மலையில் கோயில் கொண்டுள்ள முருகப்பெருமான் தாமதமின்றி வந்து அருள் செய்பவன். உலகியல் ஆசையினால் கட்டுண்டு, மீண்டும் மீண்டும் பிறப்பெடுத்து அல்லல்படும் ஆன்மாக்களுக்கு, பிறப்பை ஒழித்துப் பேரின்பத்தை நல்க வல்லவன் முருகனே என்பதை மேற்கண்ட பாடல் சுட்டுகின்றது. பிறந்தார் உறுவது பெருகிய துன்பம்: பிறவார் உறுவது பெரும் பேரின்பம், எனும் மணிமேகலை கூற்று எண்ணக்கத்தக்கது.

தமிழ் மாதங்கள் பன்னிரண்டுக்கும் ஒவ்வொரு செய்யுளாக திருமயிலை சந்நிதிமுறை பஞ்சாங்கப் பாமாலையில் மாதப்பதிகம் இடம்பெற்றுள்ளது. இப்பதிகத்துள் அமைந்த சித்திரை மாதச் செய்யுள், பக்தர் இடர் விலக்கிக் காத்து அருள்புரிபவன், புண்ணியன் மயிலை முருகன் என்பதைப் பின்வரும் நிலையில் சுட்டுகின்றது.

*புத்தரை வாதினில் வென்றோன் அருட்சுதப் புண்ணியனே*
*இத்தரை மீதுநற் பத்தரை ரெட்சித்து இடர்விலகச்*
*சத்திரை வேலும் மயில்மிசை ஏறித் தனயன்முனம்*
*சித்திரை மாதம் வருவாய் மயிலைச் சிரோன் மணியே*

(பஞ்சாங்கப் பாமாலை.1)

**முடிவுரை**

தமிழகத்தில் காணப்பெறும் சிறப்புமிக்க திருத்தலங்களுள் மயிலம் பொம்மபுர ஆதீனத் திருமடத்தில் அமைந்துள்ள முருகன் கோயில் குருவருளை வழங்கும் தலமாக விளங்குகின்றது. கலியுகத்தில் மக்களைக் காத்து அருள் புரிகின்ற கருணை தெய்வமாக கந்தக் கடவுள் விளங்குகிறார்.

முருகன் ஒருதொகுப்புத் தெய்வம். முருகனை வணங்கினால் பல கடவுளரை வணங்கி அடையும் பயன்களை எல்லாம் நாம் ஒருங்கே பெறமுடியும். மகனுக்குச் செய்யும் சிறப்பால் தந்தை தாயாகிய சிவனும் உமாதேவியும், தம்பியைப் போற்றுவதால் சகோதரனாகிய விநாயகரும், மருமகனை வழிபடுவதால் மாமனாகிய திருமாலும், தலைவனை வணங்குவதால் தேவரும் முனிவரும் ஆகிய அனைவரும் மகிழ்ச்சி அடைந்து அருள்புரிவர்.

அடியவர் வேண்டும் இகபர நலன்களை வேண்டியவாறே விரும்பிக் கொடுத்தருளும் பெருந்தன்மை வாய்ந்த முருகன் திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி, சுவாமிமலை, திருத்தணி, பழமுதிர்சோலை என ஆறுபடை வீடுகளில் அமர்ந்ததோடு மட்டுமின்றி மந்திரம் ஒன்று ஆயிரமாய் வளர்ந்துபயன் தந்திடும் ஒண்மயிலைத் தண்மலையில் வீற்றிருந்து அருள் பாலிப்பதை மயிலம் முருகன் அருட்பனுவல்களின் வழி அறிய இயலுகிறது. **'மொழிக்குத் துணைமுருகா எனும் நாமங்கள்'** என உணர்ந்து கந்தரனுபூதியைப் பெற்று களிப்படையலாம் என்பதை இக்கட்டுரை உணர்த்துகின்றது.

# ஆறுமுகனும், ஆறுபடை வீடுகளும்

திருமதி.அ. திலகவதி,
தமிழ்த்துறை,
உதவிப் பேராசிரியை,
காமராஜ் கல்லூரி,
தூத்துக்குடி -3.

பழந்தமிழர்கள் தமது வாழ்நாளில் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து பகுதிகளாகப் பிரித்தனர். அதில் குறிஞ்சிப் பகுதிக்கு உரியவன் முருகப்பெருமான் எனக் குறித்தனர். இதனால் முருகனைக் குறிஞ்சிக் கிழவன் எனச் செந்தமிழ் நூல்கள் கூறும். செந்தமிழ் நாட்டின் சொந்தக் கடவுளான முருகப்பெருமான் தமிழ்நாட்டில் மட்டுமல்லாது வட இந்தியாவிலும், கடல் தாண்டி அயல்நாடுகளிலும் அளவிடற்கரிய வண்ணம் எழுந்தருளி இருக்கும் ஆறுமுகக் கடவுளான முருகனின் ஆறுபடை வீடுகளைப் பற்றி அறிந்துகொள்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**ஆறுமுகனின் தோற்றம்**

சிவபெருமானது நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு தீப்பொறிகள் உண்டாயின. அவற்றை நெருப்புக் கடவுளும், காற்றுக் கடவுளும் வாங்கிச் சென்று கங்கைக் கரையில் இருந்த சரவணப் பொய்கையில் ஆறு தாமரைகளில் இட்டனர். அவற்றில் ஆறு குழந்தைகள் தனித்தனியே தோன்றின. அவற்றைப் பராசக்தி ஒன்று சேர்க்க ஆறுமுகன் உதயமானார். ஐந்து பூதங்களால் ஆன உடலும் உயிரும் சேர்ந்தது வாழ்க்கை. முருகப்பெருமானின் தோற்றமும் அப்படியே. இதனைக் கந்தபுராண பாடல்,

*"அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்*
*பிரம்மாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்*
*கருணை கூர்முகங்களாலும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே*
*ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகமுய்ய"*

கூறுகிறது.

**ஆறுபடை வீடுகள்**

தமிழ்நாட்டில் இந்து சமயக்கடவுள்களில் ஒருவரும், தமிழ்க்கடவுள் எனக் கருதப்படுபவருமான முருகப்பெருமானுக்குச் சிறப்பானவையாகக் கொள்ளப்படும். ஆறு கோயில்கள் ஒவ்வொன்றும் அவருடைய படைவீடு எனப்படுகிறது. இந்த ஆறு இடங்களும் ஒருமித்து ஆறுபடைவீடுகள் என அழைக்கப்படுகின்றன. அவை (1) திருப்பரங்குன்றம் (2) திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்) (3) திருவாவினன்குடி (பழநி) (4) திருவேரகம் (சுவாமிமலை) (5) குன்றுதோறாடல் (திருத்தணி) (6) பழமுதிர்ச்சோலை என்பனவாகும்.

**திருப்பரங்குன்றம்**

முருகனின் ஆறுபடை வீடுகளில் முதலாவது படைவீடாகத் திகழ்வது திருப்பரங்குன்றம் ஆகும். திருப்பரங்குன்றம் முருகன்கோவில் மதுரைக்குத் தென்மேற்கில் சுமார் எட்டு கி.மீ தொலைவில் உள்ளது. இங்குதான் முருகன் இந்திரனின் மகளான தெய்வானையைத் திருமணம் செய்து கொண்ட நிகழ்வு நடந்ததாகப் புராணங்கள் தெரிவிக்கின்றன. இக்கோவிலில் முருகன் மணக்கோலத்தில் காட்சிதருகிறார். முருகன் அமர்ந்த கோலத்தில் இருப்பது சிறப்பு, இத்தலத்தில் மலைவடிவில் சிவபெருமான் அருள்புரிகிறார். சிவனின் பெயரால் இத்தலம் திருப்பரங்குன்றம் எனப்படுகிறது. முருகனின் அருகில் நாரதர் தாடியுடன் இருப்பது குறிப்பிடத்தக்கது.

**திருச்செந்தூர்**

திருச்செந்தூர் முருகனின் ஆறுபடை வீடுகளில் இரண்டாம் படைவீடு என்று போற்றப்படுகிறது. இது கடலோரத்தில் அலைகள் வீச அமைந்துள்ளதால் அலைவாய் என்றும் அழைக்கப்படுகிறது. இத்தலம் கைலாயத்திற்குச் சமமானது. முருகன் சூரனை வெல்வதற்கு முன்னும் பின்னும் தங்கிய இடம். இவ்விடத்தில் முருகன் சூரனை அழித்ததாகக் கந்தபுராணம் கூறுகிறது. இவரது திருவடிகளைப் படகிற்குச் சமமாகச் சொல்கிறார்கள். அதனால்தான் கடலின் முன்பு உள்ள இத்தலத்திலுள்ள முருகனின் திருவடிகளை வணங்கிப் பிறவிப்பெருங்கடலைக் கடப்பதாக நம்பிக்கை உள்ளது. இப்படை வீடு திருநெல்வேலிக்குத் தெற்கே சுமார் அறுபது கி.மீ தொலைவிலும், தூத்துக்குடியிலிருந்து சுமார் நாற்பத்தைந்து கி.மீ தொலைவிலும் உள்ளது.

**பழநி**

பழநி, முருகனின் மூன்றாம் படை வீடாகும். நாரதர் சிவனுக்கு அளித்த ஞானப்பழம் தனக்குக் கிடைக்காததால் முருகன் கோபம்கொண்டு ஆண்டியின் கோலம்பூண்டு இந்த திருத்தலத்தில் தங்கிவிட்டதாகப் புராணங்களில் கூறப்படுகிறது. பழநி, சித்தர்கள் வாழ்ந்த புண்ணிய பூமியாகும். மருந்தே மலையாக அமைந்த தலம் இதுவாகும். பழநியில் கால்வைத்தாலே பாதிநோய் தீரும். மலை ஏறிவிட்டால் முழுநோயும் நீங்கும். பன்னிரெண்டு ஆண்டுகளுக்குத் தொடர்ந்து காலை நான்கு மணிக்கு எழுந்து, நீராடி கிரிவலம் வந்து மலைமீது ஏறி முருகன் திருவடிநாடி, தியானத்தில் அமர்ந்தால் அனைத்தும் ஒன்றே என்ற அற்புதத்தத்துவ விளக்கம் பெறுவதுடன் வாழ்க்கை என்றால், இன்னதென்று உணரும் ஞானஒளியையும் பெறலாம். இங்கு முருகனுக்கு அபிஷேகம் செய்யப்பட்ட பஞ்சாமிர்தம், பால், தீர்த்தம் இவற்றை வாங்கிச் சாப்பிட்டால் நோய் தீரும். ஒரு கோயிலுக்கு அபூர்வ சக்தி அளிப்பவை அங்குள்ள மூர்த்தி (சிலை), தீர்த்தம், தலம் (அமைவிடம்) ஆகியவையாகும். பழநி கோயிலுக்கு அபூர்வசக்தி அளிப்பது சிலையாகும். இது போகர்சித்தரால் நவபாஷானத்தால் உருவாக்கப்பட்டதாகும்.

### சுவாமிமலை

முருகனின் நான்காவது படைவீடு சுவாமிமலையாகும். கும்பகோணத்திலிருந்து சுமார் ஆறு கி.மீ தொலைவில் உள்ளது இப்படைவீடு. முருகன் தனது தந்தை சிவனுக்குப் பிரணவ மந்திரத்தின் பொருளைக் கூறியதால் இங்கு குடிகொண்டுள்ள முருகனுக்குச் சுவாமிநாதன் எனப்பெயராயிற்று. தன்னை விட தன் பிள்ளைகள் அறிவுடையவர்களாக இருப்பது இப்பரந்த உலகத்தில் வாழும் உயிர்களுக்கெல்லாம் நன்மையைத் தரும் என்கிறார் வள்ளுவர். அந்த வழியில் தன் பிள்ளையின் வாயால் மந்திரத்தின் பொருளைக்கேட்டு மகிழ்ந்தார் சிவன். அதுவும் தன் பிள்ளை குருவாக வீற்றிருக்க, தானே சீடனைப்போல் அமர்ந்து கேட்டார். அதனால் சிவகுருநாதன் என்ற பெயரை முருகப்பெருமான் பெற்றார்.

### திருத்தணி

திருத்தணி, முருகனின் ஐந்தாம் படை வீடு ஆகும். இவ்விடத்தின் மலையின் வள்ளியை முருகன் திருமணம் செய்துகொண்ட தலமாகும். திருத்தணி குன்றின்மீது முருகனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட திருத்தணி முருகன் கோயில் உள்ளது. திருப்புகழ் பாடிய அருணகிரிநாதரால் பாடல்பெற்ற தலமிது. முத்துச்சாமி தீட்சிதராலும் பாடப்பட்ட தலம். இக்கோயிலை தணிகை முருகன் கோயில் என்றும் அழைப்பர். அழகே உருவாகப் பொலிவுடன் காட்சிதரும் முருகன் திருத்தணியில் மார்பில் காயம்பட்ட தடத்துடன் இருக்கிறார். இதனைச் சூரனுடன் போரிட்டபோது ஏற்பட்டகாயம் என்கிறார்கள். திருச்செந்தூரில் சூரனை வதம் செய்த முருகன் இங்கு வந்து கோபம் தணிந்து சாந்தமாக அமர்ந்தார். கோபம் தனிந்த இடம் என்பதால் தணிகை என இவ்வூர் பெயர் பெற்றது. அபிஷேகச் சந்தனம் இத்தலத்தில் பிரசாதமாகத் தரப்படுகிறது. இதனைப் பக்தர்கள் நீரில் கரைத்துக் குடிக்கின்றனர். இதனால் நோய் நீங்கும் என்பது நம்பிக்கை.

### பழமுதிர்ச்சோலை

பழமுதிர்ச்சோலை முருகனின் ஆறாம்படை வீடாகும். முருகப்பெருமான் சிறுவனாய் வந்து ஔவையாரைச் சோதித்தது இங்குதான் என நம்பப்படும் இடம். இங்குள்ள முருகன் கோயில். விஷ்ணுகோயிலான அழகர் கோவில் மலைமீது அமைந்துள்ளது. அருணகிரிநாதர் இத்தலம் மீது திருப்புகழ் பாடியுள்ளார். ஆறாவது படைவீடாக விளங்கும் சோலைமலை மதுரையிலிருந்து இருபது கி.மீ தொலைவில் உள்ளது. அவ்வைகிழவியிடம் சுட்டபழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? என்று சாதுர்யத்துடன் உரையாடிய முருகன் இங்கு கோயில் கொண்டிருக்கிறார். உலக உயிர்கள் அனைத்தும் பழங்கள். அப்பழங்கள் மீது பாச பந்தம் என்னும் மண் ஒட்டியிருக்கிறது. அதனை [illegible] மட்டும் போதாது. இறையருள் என்னும் மெய்யறிவு [illegible] உணர்த்த சுட்டிப்பையனாக வந்து திருவிளையாடல் [illegible] வழிபா[illegible]களுக்கு கலை[illegible]

அறிவால் அறிந்து உன் இருதாள் இறைஞ்சும் அடியார் இடைஞ்சல் களைவோனே என்று அருணகிரிநாதர் இவரைப் போற்றுகிறார்.

**முடிவுரை**

மலையும் மலைசார்ந்த பகுதியுமே குறிஞ்சி நிலமாகும். குறிஞ்சி நிலத்தின் கடவுளாக முருகன் விளங்குவதால்தான் குன்றுகள் இருக்கும் இடமெல்லாம் குமரன் இருப்பான் என்று கூறுவர். முருகன் மயிலை வாகனமாகவும், சேவல் கொடியைக் கையில் ஏந்தியவனாகவும். பன்னிரு கரங்கள் உடையவனாகவும். தோள் வலிமை உடையவனாகவும். ஆறு முகங்களை உடையவனாகவும் விளங்குகின்றான். ஒளி தருவதற்கு ஒரு முகமும், அடியார்க்கு வரம் அளிப்பதற்கு ஒரு முகமும், அந்தணரின் வேள்வியைக்காப்பதற்கு ஒரு முகமும், மெய்ப்பொருள் உணர்த்துவதற்கு ஒரு முகமும், தீமையை அழிப்பதற்கு ஒரு முகமும், வள்ளியுடன் மகிழ்ந்திருப்பதற்கு ஒரு முகமும் என ஆறு முகங்களையும் உடையவன் முருகன். அரசர்களையும் பொருளுடைச் செல்வர்களையம் ஏற்றிப் பாடிவந்த காலகட்டத்தில் இறைவனைப் புகழ்ந்து பாடுதல் ஒன்றே ஏற்றம் தரும் என்னும் நோக்கில் எழுதப்பட்ட ஒரே நூல் திருமுருகாற்றுப்படை என்பதாகும். முருகன், தன்மீது அன்பு கொண்டு வழிபடும் அடியவர்களுக்குப் புண்படா உடம்பும், புரைபடா மனமும், பொய்படா ஒழுக்கமும் உயிரின் முக்தியையும் பரிசாகத் தந்து காப்பான். அப்படிப்பட்ட ஆறுமுகனின் ஆறுபடை வீடுகளைப் பற்றி இக்கட்டுரையின் வழியாக அறியமுடிகிறது.

# அருணகிரிநாதரின் இலக்கியங்கள்

முனைவர் **திலகவதி சண்முகசுந்தரம்**
அமுத நிலையம், பத்மா நகர்
பாரதியார் பல்கலை அஞ்சல்
மருதமலைச் சாலை
கோயம்புத்தூர் - 641 046

உலக மக்கள் உயர்ந்த வாழ்வைப் பெறவேண்டும் என்ற தனிப் பெருங்கருணை கொண்டவர் அருணகிரிநாதர். முருகப் பெருமானின் வழிவழி அடிமையாகிய இவர், முருகனின் திருவருளால், திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தரனுபூதி, திருவகுப்பு, வேல்விருத்தம், மயில்விருத்தம், சேவல் விருத்தம், திருவெழுகூற்றிருக்கை ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். இவை பற்றிக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம். இவர்பாடிய அனைத்து இலக்கியங்களின் கதாநாயகர், தெய்வம் எல்லாம் முருகனே.

## திருப்புகழ்

'திருப்புகழ் பாடு' என்று முருகனே பெயர் வைத்து, அடியெடுத்துக் கொடுக்கப் பிறந்த பிள்ளை திருப்புகழ். "செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பென எனக்கருள்கை மறவேனே"; "முன் அருணை நாடதில் ஓது திருப்புகழ்" (திருப்புகழ் 890; 425; 792) என்கின்றார். பதினாறாயிரம் திருப்புகழ்ப் பாடல்களில் 1307 பாடல்களே கிடைத்துள என்பர் செங்கல்வராயர். 1324 பாடல்கள் வானதி பதிப்பகத்தில் அச்சிட்டுள்ளனர். செவிவழிச் செய்திகள் பலவாறாகப் பரவியுள்ள நிலையில், செங்கல்வராயர் அவை தவறு; உண்மையில் நல்ல மனை, மக்கள், சுற்றம் என்று வாழ்க்கையில் வாழ்ந்தவர். விதிவசத்தால் இன்பத்துறையில் எளியரானார் என்று அருணகிரிநாதர் பாடிய பாடல்களைக் கொண்டே நிறுவுகின்றார். பெண்முகம் பார்த்த என்னைச் சண்முகம் பார்க்க வைத்துத் தம் புகழ் பாடும் திறமருளித்தன் அடியார் கூட்டத்தோடும் என்னைச் சேர்த்துவைத்த திருவருளை என்னென்பேன்? தன் பன்னிருதோளில் என் சொல்லையே மாலையாக அணிந்தான் முருகன் என்கின்றார்.

திருப்புகழ்ச் சந்தப்பாவிற்கு ஆதிகர்த்தா அருணகிரிநாதரே. நான்கடிகள் கொண்டு, ஒரு அடியில் இரண்டு சீர்கள் முதலாக 26 சீர்கள் வரை கொண்ட பாடல்கள் தொங்கல் என்று தனிச்சொல் அமைந்து, வல்லின எழுத்துகளே மிகுந்தும், மெல்லின எழுத்துகளே மிகுந்தும், இடையின எழுத்துகளே மிகுந்தும், நெட்டெழுத்துகளே மற்றும் குற்றெழுத்துகளே மிகுந்தும் அமையும்படி பல பாடல்கள் பாடியுள்ளார். பூமியதனில் பிரபுவான புகலியர் வித்தகர் திருஞானசம்பந்தரைப் போல இவரது கவிகளும் அமிர்தகவிகளே. அவரைப் போலவே திருவெழுகூற்றிருக்கையும் பாடியுள்ளார். ஒரு பெரிய பாட்டிற்குள்,

அதன் இறுதி வரிகளை மட்டுமே தனியாக எடுத்தால் அது ஒரு குட்டிப்பாட்டாக அமைந்திருக்கும். (ககனமும் (319); கருப்புவிலில் (173)) பாட்டுக்குள் பாட்டு.

இவர் தேவாரம், திருவாசகம், திருமந்திரம், திருக்குறள், பிரபந்தங்கள், இராமாயணம், பாரதம் போன்ற பல இலக்கியங்களோடு காமசாஸ்திரங்களையும் பயின்றுள்ளார் என்பது இவரது திருப்புகழ்ப் பாக்களில் காண முடிகின்றது. (அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும், பக்.2,3) பெண்களைப் பற்றிய வருணனை, அவர் தம்மோடு கூடியிருந்தபோது பெற்ற இன்பம், மனம் மாறியபோது அவர்களை வைதல் போல்வன பிறவும் இவரைப்போல யாராலும் கூறிவிட முடியாது என்னும் படிக்குத் திருப்புகழ்ப் பாக்கள் அமைந்துள்ளன. சிவபெருமானுக்குத் தேவாரம் போல, முருகனுக்கு அமைந்தது திருப்புகழ். அறுசமய சாத்திரப் பொருளாக முருகனைக் கூறி, சமய சமரசத்திற்கு வித்திட்டவர் இவரே எனலாம். அறுசமயக் கடவுளரைப் பற்றி, இவர் பாடியுள்ளதைப் போல அந்தந்தக் கடவுளை வழிபடுபவர்கூடப் பாடியதில்லை. (உம்-1, தேவேந்திரசங்க வகுப்பு) அதனாலேயே நாற்றிசைகளிலும் இவரது பாடல்கள் பாடப்பெற்றன. பாடப்பெற்றதைத் தாமே கேட்கும் பேறு பெற்றார் (பக்தர்கணப்பிரிய).

அசுரர்களை வதம் செய்து, தேவர்களைக் காக்கவே முருகப்பெருமான் அவதாரம் செய்தார் என்பது கந்தபுராணம். அருணகிரிநாதர் பாடிய ஒவ்வொரு திருப்புகழ் பாடலிலும் முதற்பகுதி, தனது வேண்டுதல்; இரண்டாம் பகுதி முருகனின் அழகு, வீரம், புகழ், பெருமை, அருள் தேவர்களைக் காக்க அசுரர்களை அழித்த விரல் - இவையே கூறப்பெற்றுள்ளது. செந்தமிழ்பாடும் வல்லமையும், நல்ல புலமையும், ஞானத்தையுமே வேண்டுவார். அடியார்க்கு நல்ல பெருமாளாகிய முருகப் பெருமான் வேண்டியதை வேண்டியாங்குத் தந்தருள்கிறார். பழனியில் ஜெபமாலை (அபகார); திருச்செந்தூரில் நடன தரிசனம் (தண்டையணி); பிரபுடதேவராஜன் உள்ளிட்ட அனைவரையும் திருவண்ணாமலையில் காட்சி பெறச் செய்து சம்பந்தாண்டானை வென்றது (அதலசேடனாராட); இப்படிப் பல அற்புதங்கள் விரிப்பின் பெருகும்.

தேவார மூவருக்குப் பிறகு, இவரே தலங்கள்தோறும் சென்று முருகனைப் பாடியவர். அறிவும் அறிதத்துவங்களும் இமைப்பொழுதில் அறியும் அருளைப் பெற்றவர். இன்னும் பல்வேறு சிறப்புகளையும், புனிதத்தையும், ஆழ அகலத்தையும் உடையதால் திருப்புகழ் சமுத்திரத்தில் நீராடுவதற்கு ஒப்பாகும் என்பார் செங்கல்வராயர். திருப்புகழ்ப் பாக்களை நமக்குத் தேடித் தொகுத்து வகுத்து எளிமையாக்கிக் கையில் உள்ள இருப்பவலாக்கித் தந்தவர்களே திரு. செங்கல்வராயரும், அவரது தந்தையார் வடக்குப்பட்டு திரு. சுப்பிரமணியம் பிள்ளையுமே ஆவார். கருவறை முதல் கல்லறை வரை மனித வாழ்வைப் படம் பிடித்துக் காட்டி, இறுதியில் இறைவன் திருவடியைச் சேரும் வாழ்வே பிறவியின் பயன். நானும் நீயும் ஆக ஏகபோகமாய் இருக்கும் சுகத்தை வேண்டும் பாடல் அதி அற்புதம் (862) சைவ சித்தாந்தக் கருத்துகளை நூலில் பல இடங்களில் பாடி, ஐந்து

முகமே ஆறுமுகம் என்பதையும், தான் ஒரு சைவசித்தாந்தி என்பதையும் நிறுவுகின்றார் அருணகிரிநாதர்.

**கந்தரந்தாதி**

"இலகு – கந்தரந்தாதி மேல் ஆசையாவது உயிர்த்தோழியெனும் நந்தாதி(நம்தாதி) மேலான நட்பு" என்று தணிகையுலா கூறும். திருச்செந்தூரில் புலமையும், பிரசித்தியும் பெற்றவரும், வில்லிபாரதம் பாடியவருமான வில்லிபுத்தூராரை வாதில் வெல்வதற்காகப் பாடியது. சி,சீ,செ,சே,தி,தீ,தெ,தே என்ற எட்டெழுத்துகளை மட்டுமே பாட்டின் முதலெழுத்துக்களாகக் கொண்டு பாடியுள்ளார் அருணகிரிநாதர். குறிப்பாக 'திதத்தத்தத்' எனத் தொடங்கும் 54ஆவது பாடலுக்குப் பொருள் சொல்ல முடியாமல் தம் தோல்வியை ஒப்புக் கொண்டு, இதுவரை தான் மற்றவர்களுக்குச் செய்துவந்த கொடுமையைப் போலத் தன் செவிகளையும் அரிந்துவிடும்படி தான் பயன்படுத்தி வந்த காதரியும் கருவியாகிய குறடுகளை அருணகிரிநாதரிடம் கொடுத்தார் வில்லிபுத்தூரார். ஆனால் 'என் வேலை அதுவல்ல; நீங்கள் இனிமேல் இத்தகையதொரு செயலை யாருக்கும் செய்து விடக்கூடாது' என்று கூறி அவரைத் தண்டிக்காமல் கருணைகூர்ந்து விடுத்தார். 'கருணைக்கு அருணகிரி' என்ற தனிப்பாடலும் இதனால் எழுந்தது. கந்தரந்தாதிப் பாடல்களுக்குப் பொருள் விளங்குவது கடினம். வில்லிபுத்தூராரின் உரை கொண்டே உணர்ந்து கொள்ள முடியும். இதனாலேயே 'கந்தரந்தாதியைப் பாராதே கழுக்குன்றத்து மாலையை நினையாதே' என்ற பழமொழியும் உண்டாயதென்பர். வில்லிபுத்தூராரின் ஆடம்பரங்கள் அல்லது அக்காலப் புலவர்களின் படாடோபங்களைக் கண்டவர், தன்னையும் அந்த ஆணவ அழுக்கு அசுத்தப்படுத்திவிடக் கூடாதென எண்ணினார்.

திருச்செந்தூரிலிருந்து பாடிய போதிலும் தான்பிறந்த திருவண்ணாமலை விநாயகரையும், உண்ணாமுலை அம்மையையுமே முதலில் நினைந்து பாடுகின்றார். சுவாமிமலைக் கோவிலைக் கட்டியவன் கோச்செங்கட்சோழன் (3), முருகப் பெருமான் வள்ளியை மணந்ததனால் பெற்ற சீதனங்கள்-ஊதுகொம்பு, சேவல்கொடி, வேலாயுதம், மயில்வாகனம், மலையாட்சி ஆகியவை (8); வள்ளிநாச்சியார் தினையைக் குற்றுவதற்கு யானையின் தந்தத்தைப் பறித்துக் கொடுத்தார் முருகன்(11); பிரம்மனைச் சிறை செய்தது! முருகன் திருக்கைவேல் (14), நெற்றியில் நீறிடும்போது, சீர்காழி (திருஞானசம்பந்தர் பிறந்த ஊர்), அமராவதி (முருகர் தேவர்களைக் காத்த ஊர்), திருத்தணி (முருகர் வள்ளியை மணம் செய்து வந்து அமர்ந்த ஊர்) என்ற மூன்று தலங்களையும் தியானித்து, மொழிந்து நீறிட வேண்டும் (29), தும்மும் போது குமரசரணம் என்று சொல்லுங்கள் உய்வீர்கள் (97), தேவயானையின் கலவி இன்பத்தைக் காட்டிலும் அதிக இன்பத்தை முருகருக்குக் கொடுத்தது திருமுருகாற்றுப்படை நூல் (51), கூன் பாண்டியனுக்கு, முன்னும் பின்னும் என்று இரண்டு கூன்கள் இருந்தனவாம். சம்பந்தப் பெருமான் அவற்றை நீக்கியருளினார் (56), முருகன் அடியார்களும் பஞ்சாட்சர மந்திரத்தை ஜெபிக்கலாம் (75), இறைவனின் பிரகாசம் சேரச்சேர, பொறுமை

கூடிவரும்; கோபம் அழிந்து போகும் (84) போன்ற அருமையான பெருமை மிக்க செய்திகளைக் கந்தரந்தாதியில் அருணகிரிப் பெருமான் பாடியுள்ளார். சிவபெருமானுக்குத் திருக்கோவையார் போல, முருகனுக்குக் கந்தரந்தாதி.

**கந்தரலங்காரம்**

திருமாலின் திருவடி மேலும், கீழும், மாவலிச் சக்கரவர்த்தியின் தலையிலும் பட்டது போல, முருகவேளின் திருவடி தேவர்தலைமீதும், மயிலின் மீதும், அருணகிரி நாதரின் பாவடி ஏட்டிலும் பட்டதென்பதும், தனக்கு முருகன் திருவடி தீட்சை செய்தான் என்பதும் (15) மிகச் சிறந்த கருத்து நயம்; நிலையில் என்றும் திரியாதிருங்கள்; தானம் என்றும் இடுங்கள் (16), முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பான் முருகன் (22), (நத்துப்புரை முடியீர்! நல்லறிவு சற்றுமில்லீர்-கந்தபுராணம்) என்ற கருத்து தைரியத்தையும், முருகனிடம் நமக்குள்ள உரிமையையும் ஒருசேரக் காட்டுகிறது. பெண்மயக்கு முழுதும் ஒழிந்த நிலையில் பாடப்பெறும் பாடல் 29. காட்டில் குறத்தி பதத்தே கருத்தைப் புகட்டில் வீட்டில் புகுதல் மிக எளிது என்று சுருக்கவழியை நமக்கும் சொல்லித் தருகிறார். இங்ஙனம் மனித வாழ்வின் நிலைகளைப் படம் பிடித்துக் காட்டுவதோடு, முருகனே தமக்கு எல்லாமாக இருந்து அருள்புரிவான் எமனையும் எட்டி உதைக்கலாம் என்கின்றார்.

**கந்தரனுபூதி**

"கந்தரனுபூதி பெற்றுக் கந்தரனுபூதி சொன்ன எந்தை அருள்நாடி இருக்கும் நாள் எந்நாளோ?" என்பார் தாயுமானவர். "அனுபூதி ஐம்பதுமே ஆருயிர் பேரின்ப அனுபூதி நல்கும் அணி" என்று தணிகை உலா கூறுகின்றது. சிவபெருமானுக்குப் பத்தாம் திருமுறையாகிய திருமந்திரம் போல முருகப்பெருமானுக்கு மந்திர நூலாக அமைவது கந்தரனுபூதி. கிளியின் உடலில் புகுந்தபின் பாடியது என்பர். (இடையன் உடலில் புகுந்தபின் திருமந்திரம் பாடிய திருமூலர் போல) ஆனால் இதை ஆராய்ந்து பார்க்கும் போது கிளியாக இருந்து பாடியது திருவகுப்பே எனலாம். "ஏழையின் இரட்டை வினையாயதோர் உடற்சிறை இராமல் விடுவித்தருள் நியாயக்காரன்" என்று வேளைக்காரன் வகுப்பில் அருணகிரிநாதரே கூறுகின்றார். கந்தரலங்காரம் போலவே சுவாமிகள் தவமிருந்த நிலையிலும், கலக்கம் உற்றிருந்த நிலையிலும், பேறு பெற்ற ஞான நிலையிலும், உபதேச நிலையிலும் என்று பல நிலைகளில், அப்போதைக்கப்போது பாடியவை என்றும், கந்தரலங்காரத்திற்கு முன்பாடியவை என்றும், சிறந்த பாராயண நூல் என்றும் செங்கல்வராயர் தமது ஆராய்ச்சியில் கூறுவார். 'சுகசொருபம் வேண்டும்' என்று அருணகிரியார் கேட்ட வண்ணமே கிளியின் (சுகம்-கிளி என்றும் பொருள் பெறும்) ரூபத்தைப் பெற்று, என்றும் பிரியாமல் திருத்தணிகையில் முருகப் பெருமானின் தோள்மீது இருந்து பாடும் அருள் பெற்றார். வேதன் முதலாக உள்ள விண்ணவர்கள் சூடிக் கொள்ளும் மலர்ப்பாதத்தனாகிய முருகன், வள்ளி நாச்சியாரின் பாதத்தைத் தன் சிரசில் சூடிக் கொள்ளும் அருள் திறம் அன்புடைய ஆன்மாக்களைக் கருணை கூர்ந்த முருகப் பெருமான் வலிய

வந்து ஆட்கொள்ளும் கருணை, இதுவே வள்ளி சன்மார்க்கம், சிவனுக்கு உரைத்த இந்த வள்ளிசன்மார்க்க உபதேசத்தை எனக்கும் நீ குருவாக வந்து அருளவேண்டும் என்றெல்லாம் கருத்துகள் பொதிந்த அனுபவத்தின் வெளிப்பாடு - கந்தரனுபூதி - அவரவர் வீட்டிற்கு அருகில் உள்ள கிணற்று நீரோ, குளத்து நீரோ-புனித நீராகக் கருதி நீராடுவதற்கு ஒப்பாகும் கந்தரனுபூதியை அனுபவித்து அருளைப் பெறுவது.

**திருவகுப்பு**

அருணகிரிநாதர் மதுரையில் "வரிசை தரும் பதம் அதுபாடி, வளமொடு செந்தமிழ் உரை செய்ய அன்பரும் மகிழவரங்களும் அருள்வாயே" என்று கேட்ட வேண்டுகோளே, திருவகுப்பில் சீர்பாத வகுப்பிற்கு வித்தாக அமைந்தது. 'திருஞான சம்பந்தர் முருகரே' என்ற கருத்து, திருப்புகழிலும், கந்தரந்தாதியிலும் மட்டும் தான் கூறப்பெற்றுள்ளது. மற்ற நூல்களில் கூறப்பெறவில்லை. திருப்புகழில் மட்டும் தான் வயலூர் கூறப்பெற்றுள்ளது. திருவகுப்பில், "பெண்மயக்கு, அதிலிருந்து தன்னை விலக்கு" என்ற பேச்சுக்கே இடமில்லை. அதேபோல யம பயத்தை நீக்கியருள் என்பதும் பாடப்பெறவில்லை. இறைவனை அனுபவிக்கும் பேரின்ப அனுபூதி நிலையிலிருந்தே பாடுகின்றார். 'அருணை நகரின் ஒரு பக்தனிடும் திருப்புகழ் மதாணிக்காரன்' என்று தன்னைப் படர்க்கை இடத்தில் வைத்துப் பாடுவதாலும், அருட்சிறப்பும், அனுபூதிச் செல்வமும் முற்றிய நிலையில், சித்திகள் யாவும் கைகூடிய பின்பு, கிளியான பின்பு பாடப்பெற்றவை திருவகுப்புப் பாடல்கள். உன் தலத்தில் இருக்கும்படியான சுகசொரூபம் தா என வேண்டியவாறே பெற்றவர் அருணகிரிநாதர். சீர்பாத வகுப்பு முதல் சிவலோக வகுப்பு வரை 18 வகுப்புகள் பாடியுள்ளார். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் சிறப்பும் மேன்மையும் பொருந்தியுள்ளன. உதாரணத்திற்கு இவர் பாடிய பாடல்களின் தன்மையை உணர்ந்து முருகனே 'பலே' என்று பாராட்டுவது போல அமைந்திருப்பது வேல்வகுப்பு. "பருத்தமுலை சிறுத்த இடை எனத் தொடங்கி வேலே" என முடியும் இப்பாட்டில் முதல் எழுத்தும் இறுதி எழுத்தும் சேர 'பலே' என்று அமைந்து பாராட்டும்படி இருப்பது மிகச் சிறப்பாகும். திருவகுப்புப் பாடல்களை அனுபவிப்பது கங்கையில் நீராடுவதற்குச் சமம். இவற்றை ஓதி இன்புற வேண்டும்.

வேல்விருத்தம், மயில் விருத்தம், சேவல் விருத்தம் இவை மூன்றும் முறையே வேலின், மயிலின், சேவலின் தன்மை, சிறப்பு, பெருமை, வீரம், முருகனுக்கு இவை மூன்றும் உதவியாக இருந்த தன்மை முதலிய மேன்மைகளைக் கூறுவதாகும். 'ஆடும் பரி, வேல், அணிசேவல் எனப்பாடும் பணியே பணியாய் அருள்வாய்' எனக் கந்தரனுபூதியில் வேண்டிய வண்ணம், தனித்தனியே பத்துப் பத்துப் பாடல்கள் அமையப்பாடப் பெற்ற நூல்களாகும். கடலின் நடுவில் மாமரமாக நின்ற சூரபன்மனை, வேலானது வேகமுடன் சென்று இருகூறாகப் பிளந்தது. ஒருகூறு மயிலாகவும், ஒருகூறு சேவலாகவும் மாறி அண்டமெல்லாம் நடுங்கும்படி தன் சிறகுகளைப் படபடவென்று அடித்துக்

கொண்டு அதிவேகமாக அவை இரண்டும் ஆணவத்தோடு வர, முருகன் கருணைக்கண் கொண்டு அவற்றை நோக்கம் செய்தருள, அப்படியே பணிந்து, அடங்கி ஒடுங்கி முருகப் பெருமானின் திருவடியைத் தாழ்ந்து வணங்கின. மயிலைத் தன் வாகனமாகவும், சேவலைத் தன் கொடியாகவும் வைத்தருள் புரிந்தான் முருகப் பெருமான். ஞானமே வடிவான வேல் பதிந்ததும், மயிலும் சேவலும் (சூரன், பன்மன் என்ற இரண்டு உருவினன் சூரமன்பன்) ஆணவம் அடங்கி, யாருக்கும் கிட்டாத உயர்ந்த நிலையை அடைந்தன. முருகப் பெருமானை வணங்கும் அன்பர்கள் அனைவரும் சூரபன்மனையும் வணங்கினர் ; வணங்குகின்றனர் ; எப்போதும் அவ்வண்ணமே வணங்குவர். வேலுண்டு வினையில்லை; மயிலுண்டு பயமில்லை; கந்தனுண்டு கவலையில்லை மனமே என்று அடியார் கூட்டமெல்லாம் துன்பம் நீங்கப் பெற்றனர். பேரின்பம் அடைந்தனர்.

*“ஆறிருதடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்*
*கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்*
*ஏறிய மஞ்ஞை வாழ்க யானை தன் அணங்கு வாழ்க*
*மாறிலா வள்ளி வாழ்க, வாழ்க சீர் அடியாரெல்லாம்”*

என்ற கந்தபுராணம் வாழ்த்துப் பாடலில் கச்சியப்ப முனிவர் சேவலையும் மயிலையும் சேர்த்து வாழ்த்தும் பேற்றினைக் கண்டுணர்கின்றோம். முருகனைப் பாடுமுன் ‘வேலும் மயிலும் துணை’ என்று வாழ்த்துக் கூறித் தொடங்குவோம். சேவல் என்பதற்குத் துணை என்றும் பொருளுண்டு என்பர் செங்கல்வராயர்.

**திருவெழுகூற்றிருக்கை**

‘திருஞானசம்பந்தரைப் போலவே அமிர்தகவி தொடை பாட அடிமையெனக்கருள்வாயே’ என்று திருப்புகழில் வேண்டிய வண்ணமே பாடும் வரம் பெற்றவர் அருணகிரிநாதர். திருஞானசம்பந்தர், ‘திருவெழுகூற்றிருக்கை’ பாடியுள்ளார். மற்ற பாடல்களை, சித்ரகவித்துவ சத்தமிகுந்த திருப்புகழ் பாக்கள் உள்ளிட்ட அனைத்தையும் போலவே ‘திருவெழுகூற்றிருக்கை’யையும் அருணகிரிநாதர் பாடியுள்ளார். ஒன்று முதல் ஏழு வரையுள்ள எண்ணிக்கை அமையப் பாடுவது இதன் அமைப்பாகும். ஆனால் இவர் பாடிய திருவெழுகூற்று இருக்கையில் சிலபாகங்கள் குறைவாக உள்ளதென்பார் செங்கல்வராயர். இறைவனது புகழையும் பெருமையையும், கருணைத் திறத்தினையும் பொருளாகக் கொண்டு பாடியுள்ளார். ஆக, இவரது நூல்கள் அனைத்தும் முருகப்பெருமானின் முற்கூறிய பல்வேறு அருட்திறங்களை விதந்து விதந்து பாடி மகிழ்வன. அதே நேரத்தில் அருணகிரிநாதரது புலமை, நாற்கவிகளையும் முத்தமிழால் பாடும் வல்லமை, நவரச நாவன்மை, சந்தக் கவி வித்தகம், இசைபாடும் இனிமை, தாளங்களை அமைத்திருக்கும் திறம் ஆகியவற்றைப் பறை சாற்றுவதுடன், நேரிலேயே முருகப்பெருமானை பலமுறையும் கண்டு ஆனந்தித்தவர் என்பது தெள்ளெனத் தெரியவருகின்றது. நமக்கும் அத்தகைய அருள்கிட்டும். பாடுவோம், பணிவோம், பாதமலர் சூடுவோம்.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில் "முருகு"

முனைவர் பு.இரா. திலகவதி,
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,
சி.க.நா.ம.கல்லூரி,
கடலூர்.

திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமானின் மீது பாடப்பட்ட பிள்ளைத்தமிழ் நூலே திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ் ஆகும். திருச்செந்தூர் ஆறுபடை வீடுகளில் ஒன்று. தலம், தீர்த்தம், மூர்த்தி எனும் மூன்றாலும் சிறப்புப்பெற்றது. இப்பிள்ளைத்தமிழைப் பாடியவர் பகழிக்கூத்தர் என்பவராவார். இவர் சேதுமன்னர் ஆட்சிக்கு உட்பட்ட செம்பி நாட்டைச் சேர்ந்த சன்னாசிக் கிராமத்தில் பிறந்தவர். தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கசடறக் கற்ற பெரும்புலவர். இவர் தமக்கு ஏற்பட்ட வயிற்றுவலிக் கொடுமை தாங்காமல் வருந்தினார். பின், திருச்செந்தூர் முருகனைப் பாடி தம் நோயைத் தீர்த்துக்கொள்ள உறுதி பூண்டார். இப்பிள்ளைத்தமிழ் நூலைப்பாடி முருகன் சந்ததியில் அரங்கேற்றி மகிழ்ந்தார். முருகன் அருளால் நோய் நீங்கப்பெற்றார். திருச்செந்தூர்த் திருக்கோயிலில் முருகப்பெருமானின் பூசை முடிவில் ஓதுவார்களால் திருப்புகழோடு சேர்ந்து ஓதப்பட்டு வரும் பெருமை உடையதாக திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் விளங்குகிறது. பிள்ளைத்தமிழ் என்பது கடவுளர்களையோ மக்களுள் மாண்புற்றார்களையோ பிள்ளைமைப் பருவத்தினராக்கி அவ் இளம்பருவ நிலைகளைச் சுவைபடப் புகழ்ந்து பாடப்பெறுவது ஆகும். முருகக்கடவுளைச் சிறுகுழந்தையாக எண்ணி பத்துப் பருவங்களில் முருகனுடைய சிறப்புகளை அழகுமிளிர பகழிக்கூத்தர் பாடியுள்ளார்.

இக்கட்டுரையில் "முருகு" என்பது "அழகு" என்று பொருள்படும் வகையில் பயன்படுத்தப்பெறுகிறது. "முருகு" என்பது பல பொருள் குறிக்கும் ஒரு சொல்லாகும். அப்பல பொருள்களுள் மணம், இளமை, கடவுள்தன்மை, அழகு என்ற நான்கும் சிறப்பாகக் குறிக்கத்தக்கன. தமிழ்க்கடவுள் முருகன் என்றென்றைக்கும் அழகுடனும் இளமையுடனும் திகழ்வதால் தமிழர்கள் "முருகன்" என்று பெயரிட்டு அழைத்தனர். முருகையுடையவன் முருகன். திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில், 1. திருச்செந்தூர் அழகு, 2. முருகனின் வடிவழகு, 3. முருகனின் அருளழகு என்ற மூன்று நிலைகளில் இக்கட்டுரை ஆராய முற்படுகின்றது.

**திருச்செந்தூர் அழகு**

திருச்செந்தூர் நகரம் கடற்கரையை ஒட்டி அமைந்துள்ளது. ஆகையால் இப் பிள்ளைத்தமிழ்ப் பாடல்களில் கடல் அழகு, கடற்கரை மணல் அழகு போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன. தமிழகத்தின் கிழக்குப்

பக்கத்தில் (குணக்கடல்) அமைந்துள்ள கடற்கரையோரம் இந்நகரம் அமைந்து உள்ளது. நூற்பயனைக் கூறுகின்ற பாடலில்,

*"மருநாள் மலர்ப்பொழில் உடுத்ததட மெங்கும்அலை*
*வாய்கொழித் தெறியுமுத்தை*
*வண்டலிடும் எக்கர்புடை சூழ்திருச் செந்தில்"*
- திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்

என்கிறார் புலவர். கடலின் அழகும் சிறப்பும் இங்குச் சுட்டப்படுகின்றது. திருச்செந்தூர் அலைகளால் சூழப்பட்டுள்ள நகரம் என்பதனை "அலையெறி திருநகர்' என்று அழகுடன் குறிப்பிடப்படுகின்றது. முருகப்பெருமான் குடிகொண்டுள்ள கடற்கரையானது கடற்கரை மணல் பிளப்பில் வரிகளை உடைய சங்கு என்ற உயிரினம் சூல் கொண்டுள்ள ஆமையின் முதுகினில் ஏறி விளையாடும் அழகியத் தன்மையினை உடையதாக உள்ளது. வாளை மீன்கள் குதித்து எழுந்து விளையாடும் கடல் திருச்செந்தூர் நகரில் அமைந்துள்ளது. சிற்றில் விளையாடுவதற்கு வசதியாக அமைந்துள்ள இடம் திருச்செந்தூர் கடற்கரை ஆகும். மேலும் திருச்செந்தூர் கடலில் முத்துக்கள் ஏராளமாக விளைகின்றன. அன்னப்பறவை, வலம்புரிசங்கு, நாரைகள் போன்ற உயிரினங்கள் நிறைந்த கடற்கரை திருச்செந்தூர் கடற்கரையாகும். இளம் எருமையானது பசிய இலையினைக் கடித்துச் சாப்பிடுகின்றது. பலா, வாழை போன்ற பழமரங்கள் நிறைந்தது திருச்செந்தூர். தென்றல் காற்றும் சங்கும் ஊர்ந்து செல்லும் திருச்செந்தூர் நகரம் வண்டல் நீர்ச்சுழியும் குராமரமும் கரும்பு ஆட்டும் இயந்திரமும் கொண்டது. முல்லைக்கொடியாகிய வேலியின் உள்ளே காட்டுக்கோழிகள் உள்ளன. பருத்த காம்புகளை உடைய பசுக்கள் பால் சொரிகின்ற வீடுகள் நிறைந்துள்ள நகரம். வண்டுகள் கழுநீர் மலரில் அமர்ந்து தேன் உண்ணும். வாழைச்சோலைகளும் வண்டினங்களும் கல்மலையாகிய மதிற்சுவரும் மணற்குன்றுகள் தோறும் அன்னப்பறவையும் உள்ள நகரம் திருச்செந்தூர் ஆகும்.

*"வயலும் செறிந்த கதலிவன*
*மாடம் செறிந்த கதலிவன*
*மலர்க்கா வெங்குந் தேனினிரை*
*மாலைதோறுந் தேனினிரை"*
- பா.எ.45

என்ற பாடல் வரிகள் திருச்செந்தூர் அழகினை வெளிப்படுத்தும். மங்கலப்பாடல் ஒலிப்பதற்கு பல வாத்தியங்களும் திண்டிமம் என்ற ஒருவகை மங்கல வாத்தியமும் ஒலிக்கும் நகரம் திருச்செந்தூர். மூங்கிலை உடைய காடும் மதயானைகளும் காட்டாறும் கரும்பு போன்ற விளைபயிர்களும் கொண்ட நகரமும் ஆகும். திருச்செந்தூரின் அழகினைப் பற்றி பகழிக்கூத்தர் குறிப்பிடும்போது கடல்அழகு, நகரஅழகு, இயற்கைவளஅழகு, காட்டழகு, உயிரினங்களின் அழகு போன்ற சிறப்புகளை எடுத்துரைத்துள்ளார்.

**முருகனின் வடிவழகு**

திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில் மிகவும் சிறப்பாக முருகனின் வடிவழகு பகழிக்கூத்தரால் வருணிக்கப்பட்டுள்ளது. செங்கீரைப்பருவத்தில்

முருகன் தன்னுடைய சிறிய கால்களில் தண்டை அணிந்துள்ள அழகு சுட்டப்படுகின்றது.

*"... ... சிறு பண்டியுந் தண்டையும்*
*பாதமும் புழுதி யாடச்*
*சிகரவரை அரமகளிர் சிறுமுறுவ லாடநீ*
*செங்கீரை யாடி யருளே!"* பா.எ.16

தாலப்பருவத்தில் முருகனின் தோற்றப்பொலிவும் அவன் அணிந்துள்ள அணிகலன்களின் அழகும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. நவமணிகள் பதிக்கப்பட்ட அணிகலன்களை அணிந்த பன்னிரு புயங்களை உடையவன். நீண்ட காதுகள்தோறும் பருவயிரக் குண்டலங்களை அணிந்தவன். சூரியனின் ஒளியும் மழுங்கும்படியான சந்திரன் போன்ற வட்டமான அமுதம் வழியும் முகத்தினை உடையவன். சொல்லுதற்கரிய வடிவழகினை உடைய திருநுதலில் திருநீற்றின் முக்கீற்றுத் தொகுதியை உடையவன். தாமரைமலர் போன்ற கைகளில் கங்கணம் அணிந்தவன்.

*"அரைவடமும் தண்டையும் மின்புரை யரைமணியுங்*
*கிண்கிணி யுங்கல னணியு மாறா வீறார்சீர்*
*அறுமுகமுந் தொங்கல் சுமந்தபன் னிருகரமும*
*குண்டல முங்குழை யழகும் ஆரார் பாராதார்"* - பா.எ.28

முருகனை வீரா! தீரா! என்று விளித்துப் பாடும் நிலைப் போற்றத்தக்கது. சப்பாணிப் பருவத்தில் முருகன் திருவடிகளில் பொன் ஆபரணங்கள் மின்னுகின்ற காட்சியும், அரைமுடியழகும், கைக்கடகப் பூண்களின் அழகும் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

*"கருதிய தமனிய மணியரை வடமிடு*
*கட்டுவ டத்தோடுங்*
*கழலிடு பரிபுரம் ஒலியெழ மணியுமிழ்*
*கைக்கட கப்பணும்"* பா.எ.37

முருகனிடம் காணப்படும் சேவல் உடல் வெண்மையாகவும் கொண்டை சிவந்த நிறமாகவும் காணப்படும் அழகு போற்றப்பட்டுள்ளது. முருகனின் நடையழகு, தவழ்ந்து வரும் அழகு, சப்பாணி கொட்டும் அழகு, சிறுதேர் உருட்டும் அழகு, முருகன் அணிந்துள்ள ஆபரணங்களின் அழகு, முருகனின் தோற்றப்பொலிவு ஆகியன முருகனின் வடிவழகில் வருணிக்கப்பட்டுள்ள திறம் பாராட்டத்தக்கது.

**முருகனின் அருளழகு**

இறைவன் என்பவன் தனது அடியார்களின் துன்பங்களைப் போக்கி நன்மைகளை அருளுபவன் ஆவான். இந்த நிலையில் முருகன் தன் பக்தர்களுக்கு அருள் வழங்கும் திறம் இங்கு ஆராயப்பெறுகின்றது. இங்கு, "முருகவேள் காடும் காவும் கவின்பெறு துருத்தியும் யாறுங் குளனும் வேறுபல் வைப்பும் சதுக்கமும் சந்தியும் புதுபூங்கடம்பும் மன்றமும் பொதியிலும்

கந்துடை நிலையிலும் எழுந்தருளித் தன்னை வழிபடும் அடியார்க்கு அருள் சுரந்தருள்வான" என்ற சான்றோரின் சிந்தனை போற்றத்தக்கதாகும். "முத்தமிழால் வைதாரையும் வாழ வைக்கும் முதல்வ!" என்று அருணகிரியாரும் கூறுவர் அசுரர்களிடமிருந்து தேவர்களையும் மக்களையும் காப்பாற்றி அருள் வழங்கியவன் முருகப்பெருமான் ஆவான்.

திருப்பரங்குன்றத்திலுள்ள சரவணப்பொய்கையில் சிவவழிபாடு செய்தார் நக்கீரர். அப்பொய்கையில் விழுந்த அரசிலையின் ஒரு பாதி நீரிலும் மற்றொரு பாதி நிலத்திலும் பொருந்துமாறு வீழ்ந்தது. நீரில் விழுந்த பகுதி மீனாகவும் நிலத்தில் விழுந்த பகுதி பறவையாகவும் வடிவுற்று ஒன்றையொன்று இழுத்துக் கொண்டிருக்கும் காட்சியில் மயங்கியதைக் கண்ட சிவபூதம் நக்கீரரைப் பற்றித் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பூசை வழுவியர்களுடன் சேர்த்துக் குகையில் அடைத்துப் பின் புசிக்கவேண்டும் என்றிருப்பதை உணர்ந்த நக்கீரர் முருகப் பெருமானை முன்னிலைப்படுத்தி திருமுருகாற்றுப்படை பாடவே, முருகன் தோன்றிப் பூதத்தையும் துரத்தி, சிறையிலிருந்தவர்கள் அனைவரையும் விடுதலை செய்து மகிழ்வித்தார். இக்கருத்தினை,

*"நீர்கொண்ட வாவிதனில் நிற்குமொரு பேழ்வாய்*
*நெடும்பூதம் அதுகொண் டுபோய்*
*நீள்வரை யெடுத்ததன் கீழ்வைக்கும் அதுகண்டு*
*நீதிநூல் மங்கா மலே*
*சீர்கொண்ட நக்கீர னைச்சிறை விடுத்தவா*
*செங்கீரை யாடி யருளே'* பா.எ.13

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகின்றது.

முருகன் இலக்குமி, திருமால், பிரமன் போன்றோர்களைப் பயப்படாதீர்கள் என்று கூறி ஆட்கொண்டவன். ஆகையால் தேவர்கள் "அரகர" என்று முருகனைப் போற்றித் தொழுகின்றனர். ஏழு கன்னிமார்கள் முருகனை வணங்குகின்றனர். அனைவருக்கும் முருகன்தன்னுடைய அருளினை வழங்கி துன்பங்களைப் போக்குபவன் ஆவான்.

தேவர்கள். இந்திரன், அளகாபுரி மன்னனாகிய குபேரன், பதினெட்டுச் சிவகணத்தார்,ஒளிதருகின்ற சூரிய சந்திரர் ஆகியோரும் முருகனைத் துதித்தனர்.

*"அமரரும் அமரர்க் கிறைவனுநீ*
*டளகைந ராதியும் ஈரொன் பதின்மரும்*
*அருமறை முனிவோருஞ்*
*சுடருந் தருமிரு சுடரும் பரவிய*
*தோகைய ரெழுவருமுத்*
*தொழின்முக் கடவுளும் அவரவர் தங்குறை*
*சொல்லித் துதிசெய்தார்"* பா.எ.21

இமயமலை வரை படையெடுத்துச் சென்று தமிழகத்தின் புகழை நிலைநாட்டியவன்பாண்டியன். அத்தகைய சிறப்புமிக்க தமிழ்மன்னனுக்கு

முருகன் அருள் புரிந்தவன். புரவலர்கள் எல்லோரும் முருகனைக் கண்டு அடிதொழுது வணங்குவர். பிரமனும், சங்கரியும், சதுமறையும் விரும்பி முருகனைத் தங்களுக்கு அருள் தருவாயாக என்று வேண்டுவதை,

*"திசைமுகனுஞ் சங்கரி யுஞ்சது மறையும் இறைஞ்*
*சும்பரை அம்பிகை சிறுவா"* -பா.எ.28

என்ற பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

ஆதிநூல் முருகனே! ஆதிநூல் கூறும் பொருளும் முருகனே! தீமைகளை அழிப்பவன் முருகனே! அனைத்து உயிர்களிலும் அணுவின் அணுவாய் உள்ளவனும் முருகனே ஆவான். சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்ற நான்கு வகை முக்தி நிலையும் அளிப்பவன். எல்லாவற்றிற்கும் மேலாக தீமைகளை அகற்றி நன்மை தருபவன் முருகன்.

"தீதினை அகற்றிநின் திருவருள் புரிந்தவா
சிறுதேர் உருட்டி யருளே' -பா.எ.98

திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில் "முருகு" என்ற இக்கட்டுரையில் முருகன் கோயில் கொண்ட திருச்செந்தூரின் இயற்கையழகு, கடற்கரையழகு. நகரத்தின் அழகு போன்றவையும் முருகனின் தோற்றப்பொலிவு, அவன் அணிந்துள்ள ஆபரணங்களின் அழகு ஆகியனவும் அசுரர்களை அழித்துத் தேவர்களைக் காப்பாற்றிய முருகனை தேவர்கள் முதல் மனிதர்கள் வரை வணங்கப்படுகின்ற நிலையும் முருகன் அனைவருக்கும் அருள்புரியும் திறமும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. சொல்லழகு, பொருளாழம், கற்பனைத்திறம் பலவும் ஒருங்கே அமைய பகழிக்கூத்தர் இப்பிள்ளைத்தமிழைப் பாடியுள்ள திறம் போற்றத்தக்கதாக உள்ளது.

**பயன்பட்ட நூல்**

திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ், கழகப்பதிப்பு, 1927.

# திருமுருகாற்றுப்படையில் முருகன்

**மு. திலகம்,**
தமிழ்த்துறை, உதவிப்பேராசிரியர்,
கம்பன் மகளிர் கலை அறிவியல் கல்லூரி,
திருவண்ணாமலை.

பழந்தமிழகத்தில் பெரும்பான்மையான மக்களால் தமிழ்ப்பெருங் கடவுளாக வழிபடப்பட்டவர் முருகக்கடவுள். **"சேயோன் மேய மைவரை உலகமும்"** என குறிஞ்சி நிலத்திற்கு உரிய கடவுளாக முருகனை குறிப்பிடுகின்றது தொல்காப்பியம். எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் சங்க இலக்கியம் எனப்படும். இவற்றுள் பத்துப்பாட்டுள் ஐந்து நூல்கள் ஆற்றுப்படை நூலாகவே அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. (அதாவது திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம்). ஆற்றுப்படை நூல்கள் தமிழ்மொழிக்கே உரிய சிறப்பாகும். தான்பெற்ற இன்பத்தை பிறரும் பெறவேண்டும் என்ற அடிப்படை பண்பாட்டோடு படைக்கப்பட்டதுதான் இவ்வாற்றுப்படை நூல்கள். முருகன் அருளைப் பெற்ற புலவன் ஒருவன் அவன் அருளைப் பெற விழையும் புலவனை முருகனிடம் ஆற்றுப்படுத்துவது திருமுருகாற்றுப்படை எனப்படும். இந்நூலின் வழி முருகனின் தன்மை, அவனுடைய செயல், பன்னிரு கரங்களின் சிறப்பு, அசுரரை வென்றது, அவன் அருள் வழங்கும் நேர்த்தி ஆகியவற்றை அறியமுடிகின்றது.

**முருகனின் இயல்பு**

*"உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு*
*பலர் புகழ் ஞாயிறு கடல் கண்டாஅங்கு*
*ஓஅற இமைக்கும் சேண்விளங்கு அவிர் ஒளி"* (திரு.முரு 1-3)

இவ்வுலகத்தில் சூரியனைத் தவிர சிறந்தது ஒன்றுமில்லை. அச்சூரியனைப் போன்றவன் முருகன். கதிரவன் தோன்றும் போது உலகத்து இருள் நீங்குவது போல முருகனின் அருளால் உயிரிகளின் ஆணவ இருள் நீங்கும்.

*"உறுநர்த் தாங்கிய மதன் உடை நோன்தாள்*
*செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை"* (திரு.முரு 4-5)

முருகன், தன்னை அடைந்த அன்பர்களின் தீவினையைப் போக்கி அறியாமையை போக்கும் வலிய திருவடிகளை உடையவன்.

*"பராரை மராஅத்து உருள் பூந் தண்தார்*
*புரளும் மார்பினன்"* (திரு.முரு 10-11)

பருத்த அடியை உடைய செங்கடம்பின் தேர்ச்சக்கரத்தைப் போன்று விளங்கும் மலரால் தொடுக்கப்பட்ட மாலையை மார்பினில் கொண்டவன்

முருகப்பெருமான். செங்காந்தள் மாலையை தனது திருமுடியில அணிந்திருப்பவன் முருகன்.

**முருகனின் வீரம்**

*''கவிழ் கிணார்*
*மா முதல் தடிந்த மறு இல் கொற்றத்து*
*எய்யா நல்இசை செவ்வேற் சேஎய்''* (திரு.முரு.59-61)

அவுணரின் (அசுரரின்) நல்ல வெற்றி நீங்கிடக் கீழ் நோக்கிய மலர்க்கொத்துனை உடைய மாமரத்தை வெட்டிய குற்றம் இல்லாத வெற்றியையும், நல்ல புகழையும், சிவந்த வேலையும் உடையவன் முருகப் பெருமான்.

தலைகீழாய் நின்ற மாமரம் என்றது நல்ல நெறியில் செல்லாது தீய வழியில் போன உயிர் என்பது குறிப்பிடத்தக்கது. அதாவது தீ நெறியை தடுத்தற் பொருட்டே அவ்வாறு செய்தான் என்பதும் புலனாகிறது.

"கடலில் மாமர வடிவில் நின்ற சூரபன்மனை முருகக் கடவுள் இரு கூறாக்கினார். அதில் ஒரு கூறு கோழி அதனை தன் கொடியில் கொண்டார். ஒரு கூறு மயில் அதனை தம் ஊர்தியாகக் கொண்டார்'' என்று கந்தபுராணம் குறிப்பிடுவதிலிருந்து பகைவருக்கும் அருளக்கூடியவன் முருகன் என்பது புலனாகிறது.

*எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்*
*''நன்னர் நெஞ்சத்து இன்நசை வாய்ப்ப*
*இன்னே பெறுதி, நீ முன்னிய வினையே''* (திரு.முரு.62-66)

முருகப்பெருமானின் செம்மையான மலர்ப்பாதங்களை நினைக்கும் மேன்மையான மனத்தோடு, நல்வினைகளை விடாது செய்து வரும்போது விரும்பியபடியே வீடுபேற்றினை அடையலாம். (முருகனின் அருள்பெற்ற இரவலன் ஒருவன் மற்றொரு இரவலனைப் பார்த்து கூறுவது)

*''மனன் நேர்பு எழுதரு வாள் நிற முகனே''* (திரு.முரு.90)

அன்பால் நினைக்கக்கூடியவரின் உள்ளத்தில் அவர் எண்ணிய வடிவில் ஒளியாகக் காட்சியளிக்கக்கூடியவன்.

**வரம் அளிக்கும் முருகன்**

*''ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகி*
*காதலன் உவந்து வரம் கொடுத்தன்றே ஒருமுகம்''*
(திரு.முரு 93-94)

தன்னை வணங்கும் அடியவருக்கு வேண்டியவை இவை எனத் தானே அறிந்து அவற்றை அளிக்கக் கூடியவன் முருகன்.

*"மந்திர விதியின் மரபுளி வழாஅ*
*அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே ஒருமுகம்"* (திரு.முரு.95-96)

அந்தணர் செய்யும் வேள்விகளுக்கு இடையூறு ஏற்படாத வண்ணம் முருகன் காத்தருள்வான் என்பதும் பெறப்படுகிறது.

*"எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்*
*திங்கள் போலத் திசை விளக்கும்மே ஒருமுகம்"* (திரு.முரு.97-98)

மீண்டும், பேரின்பத்தை அளிக்கக்கூடியவன் முருகப்பெருமான் என்பதை உணரமுடிகின்றது.

*"செறுநர்த் தேய்த்து செல் சமம் முருக்கிக்*
*கறுவுகொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே ஒருமுகம்"*

தீவினையால் செய்து திரியும் இயல்புடையவரைக் கொன்றே நன்னெறி உய்க்க வேண்டும் ஆதலின் (அசுரரை அழித்து வேள்வியைக் காத்தல்) இச்செயல் முருகனுக்கு இன்றியமையாததாகப் பெறப்படுகின்றது.

**முருகனின் அருள்திறம்**

*"தெய்வம் சான்ற திறல்விளங்கு உருவின்,*
*வான்தோய் நிவப்பின் தான்வந்து எய்த,*
*அணங்குசால் உயர்நிலை தழீஇ,*
*பண்டைத்தன் மணம்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி,*
*அஞ்சல் ஓம்புமதி, அறிவல் நின்வரவு என,*
*அன்புடை நல்மொழி அளைஇ, விளிவுஇன்று*
*இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து*
*ஒருநீ ஆகித் தோன்ற விழுமிய*
*பெறல் அரும் பரிசில் நல்குமதி"* (திரு.முரு. 287-295)

"தெய்வத்தன்மை பொருந்திய வலிமையான தோற்றத்தையும், அருளை வழங்க தானே எழுந்தருளி, தனது பெரிய உருவத்தை அடக்கிக் கொண்டு, மணம் கமழும் அனைவராலும் விரும்பப்படும் இளமை அழகை நமக்குக் காட்டி வீடுபேற்றைப் பெறக் கருதி வந்த உனது வருகையை முன்னரே அறிவேன். அது உனக்கு அரிது எனும் அச்சத்தை விடுத்து உன் நிலையை உயர்த்துபவன் முருகன். இப்பேருலகில் ஈடு இணையற்றவனாகத் தோன்றும்படிச் செய்ய வல்லவன் நமக்கு வீடுபேற்றை அளித்தருள்வான்" என்று ஒரு இரவலன் மற்றொரு இரவலனிடம் முருகன் அருளை வாரி வழங்குபவன் எனக் குறிப்பிடுவதை அறியமுடிகிறது.

**முடிவுரை**

"நெஞ்சில் ஒருகால் நினைக்கின் இருகால் தோன்றும்
முருகா என்று ஓதுவார்முன்"

என்ற வெண்பா, அன்பர் மனத்தில் முருகா எனக் கூறி ஒரு முறை எண்ணும்போது, அப்பெருமானின் திருப்பொற்பாதம் காணப்பெறும் என்பதன் மூலம் முருகா என ஓதியே அவனுடைய பொற்பாதங்களை உறுதியாகப் பற்றிக்கொள்ளலாம் என்பதும்,

*"நக்கீரர் தாம் உரைத்த நன்முருகாற்றுப் படையைத்*
*தற்கோல நாடோறும் சாற்றினால் - முற்கோல*
*மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்*
*தான் நினைத்த எல்லாம் தரும்"*

என்ற இவ்வெண்பாவின் வழி நக்கீரர் அருளிய இத்திருமுருகாற்றுப்படையை ஓதி வந்தால் முருகன் நம்முன்னே தோன்றி, நம்மனத்துயரைப் போக்கி, நாம் நினைத்த பயனையும் அளிக்கவல்லவன் என்பது திண்ணம்.

# தமிழிலக்கியங்களில் அறியலாகும் முருகன்

இரா. தேவி.
முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஓலைச்சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

தமிழ்க்கடவுள் முருகன் குறித்த பதிவுகளைத் தமிழிலக்கியங்களின் வாயிலாகப் பதிவு செய்வதாக இவ்வாய்வுக் கட்டுரை அமையப்பெறுகின்றது.

**முருகன்**

முருகனென்றால் அழகன் என்று பொருள். முருகனை முருகு என்றும் கூறுவர். முருகு என்பதற்கு இளமை, முருகன், மணம், அழகு, தெய்வத்தன்மை, வெறியாட்டாளன் என்றெல்லாம் அகராதி பொருளுரைக்கின்றது. பழந்தமிழ் இலக்கியங்களுள் சேயோன், முருக, ஆலமர்ச்செல்வன், மலைமகளின் மகன், பகைவருக்குக் கூற்றுவன், குறிஞ்சி நிலக்கிழவன் என்பன போன்ற பதிவுகள் காணப்படுகின்றன. முருகனைதத் தமிழ்க்கடவுள் என்றும் கூறுவர். சரவணப் பொய்கையில் பிறந்தானென்றும், அப்பொய்கையுள் இருந்த ஆறு தாமரை மலர்களில் தோன்றிய கந்தனைக் கார்த்திகைப் பெண்டிர் அறுவர் வளர்த்ததாகக் கூறப்படுகிறது. இச்சரவணப் பொய்கை எங்குள்ளது என்பது பற்றி எவருக்கும் தெரியவில்லை.[1] எனினும் முருகனின் ஆறுபடை வீடுகளில் மூன்றாம் படைவீடான திருவாவினன்குடியில் முருகன், குழந்தை வேலப்பர் என்ற பெயரில் அழைக்கப்படுகின்றார் என்றும், இத்தலத்தின் தீர்த்தம் சரவணப்பொய்கை என்றும், இந்தச் சரவணப் பொய்கையானது மற்ற படைவீடுகளில் உள்ள தல தீர்தங்களைப் போன்று சதுர வடிவிலோ, வட்ட வடிவிலோ இல்லாமல் கிணறு போன்று அமைந்துள்ளது என்கிற பதிவினை இணைய வெளியில் காண முடிகின்றது. இதனைத் திருப்பூர் மாவட்டம், உடுமலை வட்டம், வீதம்பட்டி வருவாய் கிராமத்தின் உட்கடைக் கிராமமான பொம்மநாயக்கன் பட்டியைச் சேர்ந்த சட்டிசாமி என்கிற சாது திருப்பணி செய்துள்ளார் என இங்குள்ள கல்வெட்டு தெரிவிக்கிறது.[2] இது ஆய்வுக்குரியது. இலக்கியத்துள் அப்பொய்கை எங்கிருக்கின்றது என்பதற்கான சான்றுகள் இல்லை. அவ்வாறு ஆறு பெண்கள் வளர்த்த ஆறு குழந்தைகள் ஒருருவம் பெற்று ஆறுமுகன் என்கிற பெயரோடு வளர்க்கப்பட்டான் என்பது தொன்மக் கதை.

**கொற்றவையின் மகன்**

பெண் தெய்வமான கொற்றவை பாலை நிலக் கடவுளாகவும் வெற்றிக் கடவுளாகவும் போற்றப்படுகின்றாள். முருகக் கடவுளும் வெற்றியின் தலைவனாகவே அமையப் பெறுவதால் கொற்றவையின் மகனாகப் போற்றப்படும் நிலையைத் திருமுருகில் காணமுடிகின்றது.

*"அறுவர் பயந்த ஆறுஅமர் செல்வ*
*ஆல்கெழு கடவுள் புதல்வ மால்வரை*
*மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே*
*வெற்றி வெல்போர் கொற்றவை சிறுவ"*[3]

என்பதன் வழி கார்த்திகைப் பெண்டிர் வளர்த்தமையால் ஆறுஅமர் செல்வனென்றும், ஆல்கெழு கடவுளான தட்சிணாமூர்த்தி வடிவிலுள்ள சிவனின் மகனெனவும் இமவான் மகளான பார்வதியின் மகனெனவும் வெற்றிக் கடவுளான சக்தியின் புதல்வனெனவும் முருகன் வழங்கப்பெறுதலை அறியலாம்.

### முருகனின் புகழ்

திருமுருகாற்றுப்படையின் 250வது பாடல் வரி தொடங்கி 275வது வரிகள் வரை முருகனின் புகழ் பதிவு செய்யப்பட்டுள்ளது. அவை முறையே, ஆறுஅமர் செல்வன், ஆல்கெழு கடவுட்புதல்வன், மலைமகள் மகன், மாற்றோர் கூற்றுவன், கொற்றவை சிறுவன், பழையோள் குழவி, தானைத் தலைவன், மாலை மார்பன், நூலறி புலவன், செறுவில் ஒருவன், பொருவிறல் மள்ளன், அந்தணர்ச் செல்வன், அறிந்தோர் புகழுக்குரியவன், மங்கையர் கணவன், மைந்தர் தலைவன், வேலையுடைய பெருஞ்செல்வன், குறிஞ்சிக் கிழான், புலவர் தலைவன், புகழினையுடைய முருகன், வேண்டியன தருபவன், இல்லாதவருக்குத் தருபவன், பெரியோர் ஏத்தும் தலைவன், போர்மிகு பொருநன் என்பன போன்ற நிலையில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

### தமிழ்க்கடவுள்முருகன்

மேற்கண்ட புகழ்மிகு செய்திகளை நோக்கும் பொழுது முருகன் குறிஞ்சி நிலத்தின் தலைவனாக, குறிஞ்சி நிலத் தாயின் மகனாக இருந்துள்ளான் என்பது தெளிவாகின்றது. புகழ்மிக்க ஒருவரைச் சான்றுகாட்டிதான் இன்னாரின் தம்பி, இன்னாரின் புதல்வன் என அவரின் கொள்கை மற்றும் கோட்பாடுகளைக் கடைபிடிப்பவர் கூறிக் கொள்ளுதலைப் போன்று, போரின் வெற்றிக் கடவுளாக கொற்றவை இருப்பதால் முருகனும் போர்க்குணம் மிக்கவனாதலால் கொற்றவை சிறுவனெனப்பட்டான். மேலும் புகழ் சிறப்பை நோக்கும் பொழுது நூலறி புலவனாகவும், புலவர்களின் தலைவனாகவும், பெரியோர் மற்றும் சிறியோரின் தலைவனாகவும், வேண்டியவருக்கு பொருள் தந்தும், இல்லாதவருக்கு அருள் தந்தும், வேற்படையை உடைய தலைவனாகவும் இருந்துள்ளான் என்பது தெளிவாகின்றது. இவற்றின் வழியாக குறிஞ்சி நிலத்தில் இருந்த ஒரு மாந்தனே பின்னாளில் கடவுளாக அறியப்பெற்றிருக்க வேண்டும் என்றே எண்ணத் தோன்றுகின்றது. கோவை இளஞ்சேரன் தனது கட்டுரையில், மணமும் அழகும் இளமையும் எழுச்சியும் புதுமையும் பொலிந்த ஒரு பெருமகன் தமிழ் நிலத்தில் வாழ்ந்தான். அவன் முருகன் எனப்பட்டான். அம்முருகன் மக்கட்குப் பற்றுக் கோடாக விளங்கினான். திரட்சியுள்ள தூண் போன்று திகழ்ந்தான். களிற்றையும் பிணைக்கும் வல்லமை கொண்ட வீரனாக விளங்கினான். பற்றுக்கோடு, திரட்சி, தூண் என்னும் பொருள் செறிந்த 'கந்து' என்னும் சொல்லால் கந்தன்

எனப்பட்டான்[4] என்கிற கூற்றும் இவண் நோக்கத்தக்கது. ஆயினும், தமிழறிந்த புலவர் மெச்சும் தமிழ்க்கடவுளாக முருகன் இருந்துள்ளான் என்பது தெளிவு. முதற் சங்கத்துள் அகத்தியனார், இறையனார், முருகவேள் உள்ளிட்ட பலர் புலவர்களாக இருந்துள்ளனர் என்பதும் இவண் நோக்கத்தக்கது.

*"ஆறு முகத்தால் அஞ்சிய சூரன்*
*இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை*
*அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி*
*அவுணர் நல்வலம் அடங்கக் கவிழ்இணர்*
*மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றத்து*
*எய்யா நல்இசை, செவ்வேல் சேஎய்"*[5]

சூரபதுமன் குதிரை முகத்தையும், மனித உடலையும் கொண்ட உருவினன். அதனால் இருபேர் உருவின் ஒருபேர் யாக்கையன் எனப்படுகிறான். அத்தகைய சூரனை ஆறுமுகன் ஆறு வடிவங்களில் சென்று அவனை அஞ்சச் செய்து அசுரர்களின் ஆற்றலை அடங்கச் செய்து, மாமரமாக இருந்த சூரனை இரண்டாகப் பிளந்து கொன்று வெற்றி பெற்றான். அதற்குக் காரணமாக இருந்தது அவனது சிவந்த வேலாகும். ஆகையால் செவ்வேல் சேஎய் என்றும் அழைக்கப்படுகின்றான்.

**கடம்ப மரத்தடியில் முருகன்**

*'நிலவரை அழுவத்தான் வானுறை புகழ்தந்து*
*புலவரை அறியாதபுகழ் பூத்தகடம்ப மர்ந்து*
*அருமுளி மரபின் ஆன்றவர் நுகர்ச்சியின்*
*இந்நிலத் தோடும் இயைகெனக் கீத்தநின்*
*தண்பரங் குன்றத்து'*[6]

என்ற பரிபாடல் அடிகளின் வழி அறிவின் எல்லையாலும் அளந்தறிய இயலாத பெரும் புகழினோடும் கடம்ப மரத்தின் அடியில் முருகன் அமர்ந்திருந்தான் என்கிற பதிவு காணப்படுகின்றது.

**மூதறிவின் மகன் முருகன்**

*ககனமும் வானும் புவனமும் காணவிற் காமன் அங்கத்*
*தகனம் முன்செய்த தவப்பெரு மாற்குத் தடக்கை யும்செம்*
*முகனும் முந்நான்கு இருமூன்று எனத்தோன் றியமூ தறிவின்*
*மகனும் உண்டாய தன்றோ வல்லிநீ செய்த வல்லபமே*[7]

என்கிற பாடலடிகளில் முருகன் அறிவின் திருமகனென்பது தெளிவாகின்றது. பூமியில் வாழ்பவர்களும், வானுலகில் வாழ்பவர்களும், இடைப்பட்ட உலகங்களில் வாழ்பவர்களும் என எல்லோரும் கண்டு வியக்கும்படி கரும்பு வில்லை ஏந்திய மன்மதனின் உடலை எரித்த தவத்தில் சிறந்த சிவபெருமானுக்கு நீண்ட வலிய கைகளையும் சிவந்த திருமுகமும் பன்னிரு கரங்களும் ஆறு முகங்களும் என்று பல விதங்களிலும் பெருமை கொண்ட

தகப்பன் சுவாமியான திருமுருகன் மகனாக உண்டாக்கும் வல்லமை அமைந்தது அபிராமி தேவியே உன்னுடைய வல்லமையால் தானோ என்பதின் வழி முருகன் அறிவின் திருமகன் என்பதை அறிந்துக் கொள்ள முடிகின்றது.

முருகனை நினைத்தவருக்குத் துணையாவது, முருகனென்றாலே வேலும் மயிலும் சிறப்பெனக் கொள்ளப்பெறும். அவனது அடியார்கள் வேலையும் மயிலையுமே துணையாகக் கொள்வதுமுண்டு. வேலே துணையென திருமுருகாற்றுப்படை[8] விளக்குகின்றது. புலவர் ஒருவர் இவ்வாறு கூறுகிறார். முருகனின் கையில் இருக்கும் வேலானது, வீரம் பொருந்திய கூர்மை உடையது. தேவர்களைச் சிறை மீட்டது. வலிமையுடையது. கடலில் பாய்ந்து சூரனை வென்றது. வெற்றியுடையது. குன்றையும் துளைத்தது. அந்த வேலே எனக்கும் துணையாக அமையும் என்கிறார் அப்புலவர். வேலினைப் புகழும் இவர் பயன்படுத்தும் சொற்கள் அழகியல் மிக்கவை, வீரவேல், தாரைவேல், தீரவேல், செவ்வேள், திருக்கைவேல், வாரி குளித்த வேல், கொற்றவேல், குன்று துளைத்த வேல் என்பதே அச்சொற்களாகும்.

**இன்ன பிற பெயர்கள்**

முருகன், செந்தில் முதல்வன், மாயோன் மருகன், ஈசன் மகன், ஒருகை முகன் தம்பி, கடம்பன், கதிர்வேலன், பன்னிரு கை கோலப்பன், வேலப்பன், மலைக்கிழவோன் என்பன போனற பெயர்களும் திருமுருகாற்றுப்படையில் காணப்படுகின்றன. இவ்வாறாக முருகனின் சிறப்பு, அழகியல் வருணணைகள், தெய்வ நிலை, தமிழறி புலவன் உள்ளிட்ட செய்திகள் திருமுருகாற்றுப்படையில் காணப்படுகின்றன. மேற்கண்ட செய்திகளின் வழி நோக்கும் பொழுது, குறிஞ்சி நிலக் கடவுளாக இருந்து அங்குள்ளோரை வேல் தொழிலால் காத்து, அசுரர்களை அழித்து, காக்கும் கடவுளாகி, தமிழறி புலவனாகவும் இருந்து, தமிழ்க் கடவுளாகவும் முருகன் இருந்துள்ளமை தெளிவாகின்றது.

**வேலன்வெறியாட்டில்முருகன்**

போரில் வெற்றி கருதிய வீரன் ஒருவன், தீயை வளர்த்தான். அத்தீயில் தன்னையே அவிப்பலியாக்கி உயிர்விட்டான். உயிர்பலி கொடுத்துத் தெய்வத்தை வழிபடும் மரபானது தொன்று தொட்டு தமிழ் மரபில் இருந்து வந்துள்ளது.

*"கடியுடை வியல்நகர்க் காவல் கண்ணி*
*முருகு எனவேலன் தரூஉம்*
*பருவ மாகப் பயந்தன்றால் நமக்கே"*[9]

*"மெய்ம்மலி உவகையன் அந்நிலைகண்டு*
*முருகு என உணர்ந்து முகமன் கூறி*
*உருவச் செந்தினை நீரோடு தூஉய்'*[10]

என்ற வரிகளின் வழி வேலன் வெறியாட்டு நிகழ்ந்தமையும், அவ்வெறியாட்டுக் கடவுளாக முருகன் இருந்தானென்பதையும் அறிந்துக் கொள்ள முடிகின்றது. மேலும் வெறியாட்டின் போது புலாலுணவு படைக்கப்பட்ட செய்தியும் காணக்கிடைக்கின்றது. இன்றைய நிலையில் இம்மாதிரியான உணவுப் படையல் இக்கடவுள் வழிபாட்டில் இல்லை, ஆயினும் சிறுதெய்வ வழிபாடுகளில் இவ்வாறான படையல் இன்றளவிலும் இருப்பது இவண் எண்ணத்தக்கது.

தமிழ்க் கடவுளாக முருகன் இருந்ததுவும், தமிழறி புலவனாகவும், பழந்தமிழரின் தொன்று தொட்ட கடவுளாக முருகன் இருந்துள்ளமையும் தெளிவு. மேலும் 'வேலன் வெறியாட்டோடு' தொடர்புடைய கடவுளாக முருகன் இருந்துள்ளமையை அறிந்துக் கொள்ள முடிகின்றது. மூதறிவின் மகனாகவும் கொற்றவையின் மகனாகவும் இன்னபிற தமிழ்ப் பெயர்களால் முருகன் அறியப்பட்டிருப்பதும் தமிழிலக்கியங்களின் வாயிலாக அறிந்துக் கொள்ள முடிகின்றது.

**சான்றேண் விளக்கம்**

1. சேயன். ப.127. ம.சோ, விக்டர். மு.பதிப். 2012. யாத்திசைப் பதிப்பகம். அரியலூர்,.
2. சரவணப் பொய்கை. விக்கிபீடியா இணையதளம்.
3. சங்க இலக்கியம். பத்துப்பாட்டு - மூலமும் உரையும். திருமுருகு.(255-258), ச.வே. சுப்பிரமணியன். இரண்டாம் பதிப்பு. 2010. மணிவாசகர் பதிப்பகம். சென்னை.
4. சங்க இலக்கியம். பத்துப்பாட்டு - மூலமும் உரையும். திருமுருகு.(104-106), ச.வே. சுப்பிரமணியன். இரண்டாம் பதிப்பு. 2010. மணிவாசகர் பதிப்பகம். சென்னை.
5. ஆராய்ச்சிக் கட்டுரைகள். ப. 2. கோவை. இளஞ்சேரன். மு.பதிப்.1991. மீரா நிலையம். சென்னை.
6. பரிபாடல்மூலம். செம்மொழித் தமிழ். ம.வே, பசுபதி. பா.எ.,19 த.ப.க.தஞ்சை.
7. அபிராமி அந்தாதி மூலமும் உரையும். பா.எண் 65. 4ஆம்பதிப்பு 1990. நெல்லிப்பேழை.
8. சங்க இலக்கியம். பத்துப்பாட்டு - மூலமும் உரையும். திருமுருகு. (57-61), ச.வே. சுப்பிரமணியன். இரண்டாம் பதிப்பு. 2010. மணிவாசகர் பதிப்பகம்.சென்னை.
9. அகநானூறு. செம்மொழித் தமிழ். ம.வே, பசுபதி.232.த.ப.க. தஞ்சை.
10. அகநானூறு. செம்மொழித் தமிழ். ம.வே, பசுபதி.272. த.ப.க. தஞ்சை.

# சங்க இலக்கியத்தில் முருகனுக்குரிய இடங்கள்

முனைவர் ஜெ. தேவி,
பேராசிரியர் & துறைத் தலைவர்,
இலக்கியத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 010.

**பரங்குன்றம்**

இஃது இன்றுள்ள மதுரைக்குத் தென்மேற்கில் ஏறத்தாழ ஐந்துகல் தொலைவில் உள்ளது. இது சங்க காலத்திலேயே முருகனுக்குரிய தலமாய் விளங்கியது என்பது,

*"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்*
*சினமிகு முருகன் தண்பரங் குன்றம்'*

என மதுரை மருதன் இளநாகனார் பாடிய அகநானூற்றுச் செய்யுளாலும்,

*'கொடி நுடங்கு மறுகிற் கூடற் குடாஅது*
*பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய*
*ஒடியா விழவின் நெடியோன் குன்றம்'*

என எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் பாடிய அகநானூற்றுச் செய்யுளாலும் (149) அறியலாம். பரங்குன்றின் மீது சோலைகள் மிகுந்திருந்தன. மலையிலிருந்து அருவிகள் கீழ்நோக்கி இழிந்தன. சோலைகளாலும் அருவிகளாலும் அம்மலை 'தண்பரங்குன்றம்' எனப்பெயர் பெற்றது. சோலைகளில் காந்தள் மலர்களும் தோன்றிக் கொடியின் செம்மலர்களும் பிறவும் கார் காலத்தன்மையை உணர்த்தின. மலைமீது முருகன் கோவில் இருந்தது. அங்கு அகிற்புகை கமழ்ந்தது; பாணர், யாழ் வாசித்தனர்; வண்டுகள், இசை பாடின; குழலர், குழல் வாசித்தனர். தும்பிகள் இசை முழக்கின; முழவு, ஒலித்தது; விறலியர், நடனமாடினர்; பாடினி, இனிய பாக்களைப் பாடினாள். மயில்கள் தோகையை விரித்தாடின. சுனைகளில் அடியவர் நீராடினர். பிரிந்து சென்ற கணவர் விரைவில் வந்து தம்மைச் சேர வேண்டும் என்று தலைவியர் முருகனை வேண்டிப் பூசையிட்டனர். பாண்டியன் தன் அரசமாதேவியருடனும் அமைச்சரோடும் படைகளோடும் பரங்குன்றின் மீது ஏறினான்; முருகனை வழிபட்டான். அவனுடன் வந்த யானைகளும் குதிரைகளும் மலையடிவாரத்திற் கட்டப்பட்டன. இதனால், அடிவாரப் பகுதி பாண்டியன் பாசறையாய்க் காட்சியளித்தது.

திருமாலும் சிவனும் பிரமனும் இந்திரன் முதலிய தேவரும் முருகனைக் காண்பது காரணமாகப் பரங்குன்றத்தில் வந்து தங்கினர். அதனால்

பரங்குன்றம் அத்தேவர்களின் பழைய இடமாகிய இமயக்குன்றத்தை ஒத்தது. இத்தகைய தெளிவான வருணனை திருமுருகாற்றுப்படையில் இல்லை. 'பரங்குன்றம்' கூடலுக்கு மேற்கில் உள்ளது. மதுரைக்கும் பரங்குன்றத்திற்கும் இடையில் வயல்களில் உள் தாமரை மலர்களில் வண்டுகள் இரவில் தங்கும்; வைகறையில் தேன் நாறும் நெய்தற்பூவில் உள்ள தேனை நுகரும்; ஞாயிறு தோன்றியவுடன் பரங்குன்றத்தில் பரங்குன்றத்தைப் பற்றிய செய்தி திருமுருகாற்றுப்படையில் காணப்படுகிறது.

**அலைவாய்**

இது கடல் அலைகள் மோதும் கரையோரத்தில் உள்ளது; அலையிடத்து அமைந்துள்ள கோவிலாதலின் அலைவாய் எனப்பட்டது போலும்! பின்னர் இப்பெயர் அக்கோவில் உள்ள ஊருக்குப் பெயராயிற்று என்னலாம். இது 'செந்தில்' என்றும் பெயர் பெறும் என்று அறிஞர் கூறுவர். இக்காலத்தில் செந்தூர் என்றும் திருச்செந்தூர் என்றும் வழங்கப்படுகிறது. இது திருநெல்வேலி மாவட்டத்தில் கடற்கரையில் காயற்பட்டினத்திற்குத் தெற்கில் உள்ளது. இது அகநானூற்றில்,

*'திருமணி விளக்கின் அலைவாய்ச்*
*செருமிகு சேஎய்'*

என்றும், புறநானூற்றில்,

*'வெண்டலைப் புணரி மலைக்கும் செந்தில்*
*நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறை'*

என்றும் வழங்கப்பட்டுள்ளது. தொல்காப்பியம் களவியல் நூற்பா 23க்குரிய மேற்கோள் பாடல் ஒன்றில்,

*'வரைவயிறு கிழித்த நிழல்திகழ் நெடுவேல்*
*திகழ்பூண முருகன் தீம்புனல் அலைவாய்'*

என்பது காணப்படுகிறது.

இங்ஙனம் பாராட்டப் பெற்ற அலைவாய், 'நன் மக்கள் புகழ்தற்குரியது; சிறப்பினையுடையது; புகழினையுடையது. அங்கு வான் வழியே சென்று முருகன் தங்குவான்' என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

**ஆவிநன்குடி**

*'முருகன் நற்போர் நெடுவேள் ஆவி*
*அறுகோட் டியானைப் பொதினி'*

என்றும்,

*"முழவுறழ் திணிதோள் நெடுவேள் ஆவி*
*பொன்னுடை நெடுநகர்ப் பொதினி"*

என்றும் அகநானூற்றுப் பாடல்களில் வருகின்றதைக் காண, ஆவிக் கோமானுக்குரிய நகர் 'பொதினி' என்பது தெரிகிறது. இப்பொதினியே காலப்போக்கில் 'பழனி' என மாறி வழங்கப்படுகிறது என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. சங்க காலத்தில் பழனி மலை நாட்டை வேள் ஆவியின் குடியினர் ஆண்டு வந்தனர். அவருள் வையாவிக் கோப்பெரும்பேகன் என்பவன் மயிலுக்குப் போர்வை தந்த வள்ளல், இத்தகைய ஆவி குடியினர் வாழ்ந்த ஊர், ஆவி குடி எனப்பட்டது போலும்! சங்க காலத்தில் இவ்வூரில் முருகன் கோவில் இருந்திருக்குமாயின், பரங்குன்றம், அலைவாய் போல இவ்வூரும் சங்கப் புலவராற் பாடப்பட்டிருக்கும். அங்ஙனம் பாடப்படாமையால், இவ்வூரில் சங்க காலத்திற்குப் பின்பே முருகன் கோவில் உண்டாயிருத்தல் வேண்டும் என்று கருதலாம்.

இன்றுள்ள பழனி என்னும் தலத்தில் மலையடிவாரத்தில் உள்ள கோவிலே 'ஆவி நன்குடி' என்னும் ஊரைச் சேர்ந்த பழைய கோவில், மலைமீதுள்ள கோவில் பிற்காலத்தது.

**ஏரகம்**

இது மலை நாட்டகத்தொரு திருப்பதி என்று நச்சினார்க்கினியர் கூறியுள்ளார். ஏரகத்து முருகன் கோவிலில் நாற்பத்தெட்டு ஆண்டுகள் பிரமசரியம் விரதம் காத்த வேதியர் மந்திரங்கள் கூற, ஈரவுடையை அணிந்த அருச்சகர் முருகனுக்குரிய ஆறெழுத்து மந்திரத்தைச் சொல்லி அருச்சனை செய்தனர் என்ற திருமுருகாற்றுப்படை கூறுகின்றது. இனி ஏரகம் எதுவாய் இருத்தல் கூடும் என்பது இங்கு ஆராயத்தகும்.

பத்துப்பாட்டிற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், கி.பி. 14-ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர். அவர் திருப்பரங்குன்றம் முதலிய இடங்கள் இன்ன நாட்டினன் என்று கூறாமல், ஏரகம் பற்றி வரும் இடத்தில் மட்டும் 'ஏரகம் மலை நாட்டகத்ததொரு திருப்பதி' என்று கூறியிருத்தல் கவனித்தற்குரியது.

'திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவி நன்குடி என்னும் மூன்றும் தமிழ் நாட்டவை; அவை எங்கு உள்ளன என்று தமிழர்க்குக் கூறத்தேவை இல்லை. தமிழகத்திற்கு அப்பாற்பட்டது ஏரகம் ஆதலின், அது இன்ன நாட்டகத்து என்று கூறுதல் நமது கடமை; என்று கருதியவர் போல நச்சினார்க்கினியர் 'ஏரகம்' மலைநாட்டகத்தொரு திருப்பதி என்று கூறினர் போலும்! சிலப்பதிகாரம் குன்றக்குரவையுள்,

*'சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமும் நீங்கா இறைவன்'*

என முருகன் திருப்பதிகளுள் அக்காலச் சிறப்புப் பெற்றவை குறிக்கப்பட்டுள்ளன. சிலப்பதிகார அரும்பத உரையாளர் வெண்குன்றைச் 'சுவாமிமலை' எனக் கூறியுள்ளார். சிலப்பதிகாரத்திற்கு முதலில் அரும்பத உரையும் பின்பு

அடியார்க்கு நல்லார் விரிவுரையும் தோன்றியிருத்தலே இயல்பு; எனவே, அடியார்க்கு நல்லார்க்கு அரும்பதவுரையாசிரியர் முற்பட்டவர் எனக் கொள்வதே பொருந்தும். அடியார்க்கு நல்லார் நச்சினார்க்கினியர்க்கு முற்பட்டவர். நச்சினார்க்கினியர் கி.பி. 14ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவர். எனவே, அடியார்க்கு நல்லார் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவர். எனவே, அடியார்க்கு நல்லார் காலம், ஏறத்தாழக் கி.பி. 13 அல்லது 14ஆம் நூற்றாண்டு எனலாம். அரும்பதவுரையாளர் அவர்க்கு முற்பட்டவராதலின், அவர் காலம் ஏறத்தாழ கி.பி. 12 அல்லது 13ஆம் நூற்றாண்டு எனலாம். எனவே, கி.பி. 12 அல்லது 13ஆம் நூற்றாண்டினரான அரும்பதவுரை ஆசிரியர் 'சுவாமிமலை வேறு, ஏரகம் வேறு' என்று தெளிவாகக் கூறியுள்ளார் என்பது இங்கு அறியத்தகும். ஆயினும், கி.பி. 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அருணகிரிநாதர், 'சுவாமி மலைதான் ஏரகம்' என்று பல பாக்களில் குறித்துள்ளார்.

இனி, நக்கீரர் ஏரகத்தைப் பற்றி யாது கூறியுள்ளார் என்பதைக் காண்போம். 'ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்' என்னும் அறுதொழிலின் வழுவாதவரும் நற்குடிப்பிறந்தவரும் நாற்பத்தெட்டாண்டு வரை பிரமசரிய விரதம் காத்தவரும், அறம் கூறும் கோட்பாட்டினையும் முத்தீச்செல்வத்தையும் உடையவருமாகிய அந்தணர் முருகப்பெருமானை வழிபடும் காலமறிந்து மந்திரங்களைக் கூற, (அருச்சகர்) நீராடுங்கால் தோய்க்கப்பட்ட ஆடை உடம்பிலே கிடந்து காயும்படி உடுத்து முருகனைத் தலைமேற் குவித்த கையினராய்த் துதித்து, ஆறெழுத்து மந்திரத்தை நாவில் உச்சரித்து, நறிய மலர்களை எடுத்து அருச்சனை புரிவர். முருகன் அந்நிலையில் மகிழ்ந்து ஏரகம் என்னும் ஊரில் இருப்பன்.

இது நச்சினார்க்கினியர் உரையின் கருத்து. இதிற் 'கூற' உச்சரித்து, என வரும் இரண்டு வினைகள் இரு திறத்தாரைக் குறிப்பவையாகக் கொள்வதே நேரிது. அங்ஙனம் கொள்ளின், மந்திரங்களைக் கூறுவோர் வேறு, ஆறெழுத்துச் சொல்லி மலர் தூவி அருச்சிப்பவர் வேறு என்பதை அறியலாம். பெரிய கோவில்களில் இங்ஙனம் இரு திறத்தினர் இருந்து வழிபாடு செய்தல் உண்டு.

இரு செயல்களையும் அருச்சகரே செய்தனர் எனக் கொள்ளின் 'கூற' என்பதைக் 'கூறி' என மாற்றிக் கொள்ள வேண்டும். இங்ஙனம் இரு செயல்களையும் ஒருவரே செய்தல் சிறிய கோவில்களில் உண்டு. ஏரகத்தில் அருச்சனை புரிந்தவர் நீராடி ஈரத்துணியுடனே இருந்து அருச்சனை செய்தனர் என்பதை,

*'புலராக் காழகம் புலர உடீஇ'*

என்னும் நக்கீரர் வாக்கால் அறியலாம்.

தென்கன்னட மாவட்டத்தில் புத்தூர் வட்டத்துக கிழக்குக் கோடியில் மேற்கு மலைத்தொடரின் மேற்குப் பக்கத்தில் சஹ்யாத்திரி மலைகளில் ஒன்றான குமார பருவதம் இருக்கின்றது. இப்பகுதி துளு நாட்டைச் சேர்ந்தது.

இதனை அடுத்துக் குமாரக்ஷேத்திரம் அல்லது சுப்பிரமணிய க்ஷேத்திரம் என்னும் சிற்றூர் உள்ளது. அதில் கோவில் கொண்டுள்ள பெருமானுக்குக் குமாரசாமி என்பதே பெயர். குமாரசாமி எழுந்தருளியுள்ள இடம் குமாரக்ஷேத்திரம் என்றும், அந்த இடத்தை அடுத்துள்ள மலை குமாரமலை என்றும், அம்மலையிலிருந்து வரும் சிற்றாறு குமாரதாரை என்றும் பெயர் பெற்றுள்ளன.

இங்குக் கூறப்பட்ட குமாரக்ஷேத்திரம் மலை நாட்டகத்தது ஆதலாலும், க்ஷேத்திரமும் மயலயம் ஆறும் மூர்த்தியும் 'குமார' என்றே தொடங்கப்படுவ தாலும், ஏரகத்து அருச்சகர் 'நமக்குமாராய' என்னும் மந்திரத்தை உச்சரித்து அருச்சனை புரிந்தனர் என்று நச்சினார்க்கினியர் கூறுதல் இத்தலத்திற்கு மிகவும் பொருத்தமாய் அமைந்துள்ளது என்பதாலும் அருச்சகர் ஈர ஆடையுடனே இருந்து அருச்சித்தல் இங்கு இன்றும் நடைபெறுதலாலும் இத்தலமே நக்கீரரால் குறிக்கப்பட்ட ஏரகமாய் இருக்கலாம் என்று கருதுதல் பொருத்தமாகும்.

**பழமுதிர்ச்சோலை**

மதுரையை அடுத்துள்ள அழகர் மலை அடிவாரத்தில் அழகர் கோவில் இருக்கின்றது. அழகர் மலை திருமால்இருஞ்சோலை மலை என்றும், பழமுதிர்சோலை மலை' என்றும், அழகர் கோவில் முன்பு முருகன் கோவிலாய் இருந்தது என்றும், அழகர் கோவிலுக்கு எதிரில் முருகன் கோவில் இருந்து அழிந்துவிட்டது என்றும் பல செய்திகள் கூறப்படுகின்றன. திருமுருகாற்றுப் படையில் கூறப்பட்டுள்ள 'பழமுதிர் சோலைமலை' என்பது அழகர் மலையைக் குறிக்கின்றதா என்பது இங்கு ஆராயத்தகும்.

**சிலப்பதிகாரம்**

இரண்டாம் நூற்றாண்டின் முற்பாதியில் செய்யப்பட்ட சிலப்பதிகாரத்தில் 'திருமால் குன்றம்' என்று இன்றைய அழகர் மலை சொல்லப்பட்டுள்ளதென்பது நம்பப்படுகிறது. மேலும், திருமால் கோவில் அக்குன்றின்மீதே இருந்தது என்றே அந்நூல் கூறுகின்றது. அங்கு முருகன் கோவிலும் இருந்திருக்குமாயின், இளங்கோ அடிகள் அதனைக் குறித்திருப்பார் அல்லரோ?

**அகநானூறு**

அகநானூறு 59ஆம் செய்யுளில் அச்செய்யுளைப் பாடிய மதுரை மருதன் இளநாகனார் என்ற புலவர்,

*'சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்*
*சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து*
*அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை'*

என்று மதுரையை அடுத்துள்ள திருப்பரங்குன்றத்தைப் பாடியுள்ளார். மதுரை மருதன் இளநாகனார் என்பவர் மதுரையைச் சேர்ந்தவர் என்பது தெளிவு. அவர் காலத்தில் அழகர் மலைப் பகுதியில் சிறப்புப் பெற்ற முருகன் கோவில் இருந்திருக்குமாயின், அதனையும், குறித்திருத்தல் கூடுமன்றோ?

அகநானூற்றில் எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் என்ற புலவரும் 149-ஆம் செய்யுளில்,

*'நெடுநல் யானை அடுபோர்ச் செழியன்*
*கொடிநுடங்கு மறுகிற் கூடற் குடாஅது*
*பல்பொழி மஞ்ஞை வெல்கொடி யுயரிய*
*ஓடியா விழவின் நெடியோன் குன்றத்து'*

என்று முருகனது திருப்பரங்குன்றத்தையே பாடியுள்ளார். மதுரைக்கு அருகில் உள்ள அழகர் மலைப் பகுதியில் இப்புலவர்கள் காலத்தில் திருப்பரங் குன்றத்தைப் போல முருகன் கோவில் கொண்ட மலை ஒன்று இருந்திருக்குமாயின், இப்புலவர்கள் அதனைப் பாடாது விட்டிருப்பார்களோ?

**கலித்தொகை**

'கலித்தொகை' என்னும் சங்கநூலில் 93-ஆம் செய்யுளில்,

*'ஈரணிக் கேற்ற வொடியாப் படிவத்துச்*
*சூர்கொன்ற செவ்வேலாற் பாடிப பலநாளும்*
*ஆராக் கனைகாமங் குன்றத்து நின்னொடு*
*மாரி யிறுத்த கடவுளைக் கண்டாயோ?'*

என்னும் அடிகள் திருப்பரங்குன்றத்தைக் குறிப்பதாகவே நச்சினார்க்கினியர் பொருள் கூறியுள்ளார். அவ்வுரையாசிரியரே அந்நூல் 27ஆம் செய்யுளில் வந்துள்ள, 'வென்வேலான் குன்று' என்பதற்கு 'முருகன் திருப்பரங்குன்றே' என்றே குறித்துள்ளார். இந்த இரண்டு செய்யுட் பகுதிகளிலும் திருப்பரங்குன்றத்தை வெளிப்படையாகக் குறிக்கும் சொற்கள் இல்லை ஆயினும், மதுரையிலே பிறந்து வளர்ந்த நச்சினார்க்கினியர் திருப்பரங்குன்றத்தையே குறித்திருப்பது கவனிக்கத் தகுந்தது. அவர் கி.பி. 14 அல்லது 15ஆம் நூற்றாண்டினர் என்னலாம். சங்க இலக்கியங்களுக்கு உரை எழுதிய அப்பேரறிஞர், மதுரைக்கு அண்மையில் அழகர் மலைப்பகுதியில் மெய்யாகவே ஒரு முருகன் கோவில் இருந்திருக்குமாயின், அதனைக் குறித்திருத்தல் கூடுமன்றோ?

**முடிவுரை**

இவ்வாறு சங்க இலக்கிய்களில் முருகனுக்குரிய இடங்களாக இக்கட்டுரையில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. முருகப் பெருமான் தமிழரின் தனிப்பெரும் கடவுள். கொற்றவை சேயான முருகனும் தமிழர் பண்பாட்டு வாழ்வில் நீங்கா இடம்பெற்றிருக்கின்றன என்பதை இக்கட்டுரையின் மூலம் அறியலாம்.

# கிருபானந்த வாரியார் பார்வையில் முருகன்

**ச. தேன்மொழி**
உதவிப் பேராசிரியர்
வரலாற்றுத்துறை
அ.வீ.வா. புஷ்பம் கல்லூரி
பூண்டி, தஞ்சாவூர்.

ஓம் என்பது பிரணவம் ப்ர – என்பது சிறப்பு என்ற பொருளைத் தரும். நவம் - புதுமை, ப்ரநவம் என்ற இரண்டும் புணர்ந்து பிரணவம் என்றாயிற்று. சிறந்த புதிய ஆற்றலைத் தருவது பிரணவ மந்திரம். பிரணவப் பொருளான தெய்வம் முருகன். முருகன் என்ற சொல்லில் முருகு – பகுதி, அன் - ஆண்பால் ஒருமை விகுதி. முருகு அன் என்ற பகுதி விகுதிகள் சேர்ந்து முருகன் என வந்தது[1]. என்று குறிப்பிடுகிறார் திருமுருக கிருபானந்த வாரியார்.

**ஆறுமுகன்**

கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, மேல், கீழ் என்ற ஆறு திசைகளிலும் அவருடைய பார்வையுள்ளது. ஆறுதிசைகளும் முகங்களையுடையவர். அதனால் ஆறுமுகன். இது எழுத இயலாது 'எழுதரிய அறுமுகம்' என்கிறார் அருணகிரிநாதர். ஈசானம், தத்புருஷம், வாமதேவம், அகோரம், சத்யோஜாதம் என்ற ஐந்துடன் அதோமுகமும் சேர்ந்து ஆறுமுகம்.

*"வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிறங்கி*
*ஐந்து முகத்தோடு அதோமுகமும் - தந்து*
*திருமுகங்கள் ஆறாகிச் செந்தழந்தன் ஆறும்*
*ஒருமுகமாய்த தீப்பொறியா றுய்ப்ப"* -கந்தர் கலிவெண்பா

ஆறு முகங்களிலிருந்து வெளிப்படும் ஒளிகள் ஆறு வகைகள்.

1. ஞானபிரகாசம்
2. ஞானானந்தப் பிரகாசம்
3. சர்வஞான வியாபகப் பிரகாசம்
4. சர்வ பரிசுத்த பிரமஞானானந்த அருட்பிரகாசம்
5. சுத்தஞான சாட்சிப் பிரகாசம்
6. அநாதி நித்தியப் பிரமஞானானந்த சிவப்பிரகாசம்[2]

**கந்தரநுபூதி**

*நெஞ்சக்கன கல்லு நெகிழ்ந்துருகத்*
*தஞ்சத்தருள் சண்முக னுக்கியல்சேர்*
*செந்சொல்புனை மாலை சிறந்திடவே*
*பஞ்சக்கர வானை பதம்பணிவாம்.*

"ஐயனே! நீயே புகலிடம்; வேறு தஞ்சம் இல்லை" என்று கூறி அடியார்கள் ஒத்தும்பொழுது, அந்த அடியார்கட்கு அருள்புரிகின்ற ஆறுமுகப் பெருமானுக்கு ஓதுவார் - கேட்போர்களுடைய கடினமான உருவாகாத உள்ளமும் உருகுமாறு, இயல் தமிழான செவ்விய சொற்களால் தொடுத்த கந்தரநுபூதி; என்ற இந்தப் பாமாலை சிறப்பு அடையும் பொருட்டு, ஐந்து திருக்கரங்களையுடைய யானைமுகப் பெருமானுடைய இரண்டு திருவடி மலர்களையும் யாம் வணங்குவோம்[3]. பரமனை நினைத்து உருகி நிற்பாரது ஆணவ இருளை இறைவன் போக்கி அருளுகின்றான்.

*"உருகு மடியவர் இருவினை மிருள்பொரும்*
*உதய தினகர! இமகரன் வலம் வரும்*
*உலக முழுதொரு நொடியினில் வலம்வரு பெருமாளே",* - திருபுகழ்

ஊனுக்குள் உயிர் உறைகின்றது. உயிருக்குள் இறைவன் இருக்கின்றார். முதலில் ஊன் உருகவேண்டும் பிறகு உயிர் உருக வேண்டும். உருகிய உயிரில் இறைவன் அத்துவிதமாக் கலந்து விடுகிறான். அரக்கில் தங்கமும், தங்கத்தில் மணியும் இருக்கின்றன. முதலில் அரக்கும், பின்னர் தங்கமும் உருகினால் அதில் உள்ள இரத்தினமணி தங்கத்தில் பதிந்துவிடுகின்றது. இவ்வாறு உருகும் அடியார்கட்கு, மூவர்க்கும் தேவர்க்கும் மற்ற யாவர்க்கும் அரியனாகிய இறைவன் எளியனாகின்றான்[4].

**திருவுருவ வகைகள்**

திருவுருவ வகைகள் முருகக் கடவுளுக்கு பதினாறு அவை[5],

*"ஞானசக்திதர; ஸ்கந்தோ தேவஸேனாபதிஸ்ததா*
*ஸுப்ரஹ்மண்யோ கஜாருடச் சரகானன ஸ்ம்பவ;*
*கார்த்திகேய; குமாரச்ச ஷண்முகஸ் தாரகாந்தக;*
*ஸேநாநீ பரஹ்மசாங்தாச வல்லீ கல்யாயணஸுந்திர;*
*க்பாலச்ச க்ரௌஞ்சபேத்தாச சிகிவாஹன ஏவச ஏதரு ஸ்வாமிநாமாநி*
*ஏதேஷாம் ப்ரதிருபாணாம் தியான பேதமதோச்யதே!*

1.சந்திதர ஸ்வாமி 2.ஸ்கந்த ஸ்வாமி 3.தேவ சேனாபதி ஸ்வாமி, 4.ஸ்ப்ரஹ்மண்ய ஸ்வாமி, 5.கஜவாஹன ஸ்வாமி 6.சரவணபவ ஸ்வாமி 7.தாரகாரி ஸ்வாமி 8.ஸேனானி ஸ்வாமி, 9.ஷண்முக ஸ்வாமி 10.குமார ஸ்வாமி 11.ஸேனானி ஸ்வாமி 12.ப்ரஹ்மசாஸத்ரு ஸ்வாமி, 13.வல்லீ கல்யாண சுந்திர ஸ்வாமி 14.பால ஸ்வாமி 15.கிரௌஞ்சபேத்ந ஸ்வாமி, 16.சிசிவாஹன ஸ்வாமி என ஆகும். இதன் விளக்கம் பின்வருமாறு:

**1. சக்திதர ஸ்வாமி**

ஒரு திருமுருமும், இரு திருக்கரங்களுடன் இடக்கரத்தில் வஜ்ரமும், வலக்கரத்தில் இச்சா ஞான கிரியா சக்தி வடிவாகிய வேலாயுதமும் ஏந்திக் கொண்டு அகர வதம் பொருட்டு நின்ற திருவுருவம்.

**2. ஸ்கந்த ஸ்வாமி**

ஒரு திருமுகமும் இரு புயங்களும், அரையல் கோவணமுங் கொண்டு, வலக்கரத்தில் தண்டை ஊன்றி, இடக்கரத்தைத் தொடையில் வைத்து செம் மேனியுடன் விளங்குகின்ற திருவுருவம்.

**3. தேவசேனாபதி ஸ்வாமி**

சூரியப்பிரகாசமும், பன்னிரு திருக்கண்களும் ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கரங்களும், புன்முறுவலும், வலக்கரத்தில் சக்தி, வாள், அங்குசமம், கேடயம், பாசம், சேவல், தாமரை, வரதமும் ஆகிய இவைகளைத் தாங்கி, தேவர்களையும் மூவர்களையும் தனக்குச் சேனைகளாகக் கொண்டு நின்ற திருவுருவம்.

**4. ஸ்வரஹ்மண்ய ஸ்வாமி**

சிவந்த நிறமும் சந்திரகாந்திப் பிரகாசமும், ஆரகேயூரம் முதலிய சிறந்த அணிகலன்களும், ஒரு முகமும், நான்கு திருக்கரங்களும், அபய வரதமும், வேலும் சேவற்கொடியுள் தாங்குதலுங் கொண்டு மிகவும் வரதராய் விளகுகின்ற திருவுருவம்.

**5. கஜவாஹன ஸ்வாமி**

ஒரு திருமுருகம், இரு திருகண்களும், நான்கு திருக்கரங்களும், வலக்கரங்களில் வேலும் அபயமும், இடக்கரங்களில் சேவற்கொடியும் வரதமுங்கொண்டு வேண்டியவற்றையெல்லாம் வழங்குவதாய் நின்ற திருவுருவம்.

**6. சரவணபவ ஸ்வாமி**

ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கண்களும், பன்னிரு திருக்கரங்களும் கொண்டு தேவகணங்களால் உபாசனை செய்யப்பட்டு, நல்லவர்களால் பூசிக்கப்பட்டு, வலக்கரங்களில் சக்தி, மணி, வாள், தாமரை சேவல் அபயமும் இடக்கரங்களில் பாசம், தண்டம், டங்கம், பாணம், வில், வரதம் இவைகளை ஏந்தி நின்ற திருவுருவம்.

**7. கார்த்திகேயய ஸ்வாமி**

ஆறு திருமுகங்களும், ஆறு திருக்கரங்களும் பால சூரியப் பிரகாசமும், வலக்கரங்களில் சக்தி, வாள், அபயமும், இடக்கரங்களில் குலிசம், கேடயம், வதரமும் தாங்கி சாதுக்கள் வழிபட விளங்குகின்ற திருவுருவம்.

**8. குமார ஸ்வாமி**

ஒரு திருமுருகமும், நான்கு திருக்கரங்களும், வலக்கரங்களில் சக்தி, வாள், இடக்கரங்களில் கொடி, கேடயம் உடையவராய் விளங்குகின்ற திருவுருவம்.

**9. ஷண்முக ஸ்வாமி**

சிந்தூர காந்தி நிறமும், மயில் வாகனமும், ஆறு திருமுகங்களும், தெய்வானை சமேதமும், பன்னிரு திருக்கண்களும், பன்னிரு திருக்கரங்களும் கொண்ட வலக்கரங்களில் சக்தி, பாணம், வாள், கொடி, தண்டு, அபயமும், இடக்கரங்களில் வில், வஜ்ரம், தாமகிர, கேடகம், வரதம், சூலம் இவைகளைத் தாங்கி அருள் வடிவாய் நின்ற திருவுருவம்.

**10. தாரகாரி ஸ்வாமி**

பன்னிரு திருக்கரங்களில் இடத்தில் முறையே வரதம், அங்குசம், சேவற் கொடி, கேடகம், வில், வஜ்ரம், வலத்தில் அபயம், பாசம், சக்கரம், கடகம், உலக்கை, சக்தி இவைகளைத் தாங்கித் தாரகனை வதைத்த திருவுருவம்.

**11. ஸேநாநி ஸ்வாமி**

ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கரங்களும், வலத்தில் அபயம், வாள், சக்கரம், அங்குசம், சக்தி, சூலம், இடத்தில் வரதம், குலிசம், பாசம், தாமரை, தண்டம், கதை இவைகளை ஏந்திய வடிவங்கொண்டு தேவர்களைச் சைந்யமாகக் கொண்டு நின்ற திருவுருவம்.

**12. பிரம்மசாஸ்த்ரு ஸ்வாமி**

ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும், இடக்கரங்களில் வரதமும் குண்டிகையும், வலக்கரங்களாக அபயமும் உத்திராக்ச மாலையும் உடையவராய் நான் முகக்கடவுளுக்கு உபதேசித்த திருவுருவம்.

**13. வல்ல"கல்யாண சுந்திர ஸ்வாமி**

உருத்திராக்ச மாலையும், குண்டிகையும், வரதாவயமும் உடைய திருக்கரங்களுடன், வள்ளியம் மையாருடன் திருமால் நீர்க்கலசத்து தாரை வார்க்கலுமம் செய்யப் பட்டவராய் எல்லா அமரர்களும் சேவிக்க விளங்குந் திருவுருவம்.

**14. பால் ஸ்வாமி**

குழந்தை உருவாய் மேல் தூங்கிய இரு கரங்களும் அக்கரங்களில் தாமரைமலர் இரண்டு கொண்டு அம்மையப்பனுக்கு இடையால் அமைந்திருக்குந் திருவுருவம்.

**15. கிரௌஞ்சபேதன ஸ்வாமி**

ஆறு திருமுகங்களும், எட்டுத் திருக்கரங்களும், அபயம், வாள், வேல், வரதம், குலிசம், வில், கடகம் என்ற ஆயுதங்களை முறையே வலமும் இடமுங் கொண்டு தேவ சேனைகள் சூழத் திரௌஞ்சத்தைப் பிளந்த திருவுருவம்.

**16.சிசிவாஹன ஸ்வாமி:**

பவளநிறமும், ஒரு திருமுகமும், நான்கு திருத்தோள்களும், வஜ்ரம், வேல், வரதம், அபயம் இவைகளுடன், மயில் வாகனத்தில் ஊர்ந்த வண்ணமாய் அமரர்களுடைய இடரை நீக்கிய திருவுருவம்.

**நிறைவுரை**

'வேலை வணங்குவதே எமக்கு வேலை' என்று வணங்கும் அடியாரது துயரநீக்கவல்லவர் முருக பெருமான். மணம், இளமை, கடவுட்டன்மை, அழகு என்பன இந்நான்கு பொருளடங்கிய ஒரு சொல்லால் பண்டைத் தமிழ் மக்கள் முழுமுதற்பொருளை அழைத்தது வியப்பேதுமில்லை. இயற்கை மணமும் மாறா இளமையும் எல்லாப் பொருளையுங் கடந்தொளிருந்தன்மையும், அழியா அழகும் இறைவனிடத்தில் கண்டு அப்பொருள்கள் முறையே உறைதற்கிடம் பெற்றுள்ள முருகம் என்னுஞ்சொல்லை அவ்விறைவனுக்குப் பழந்தமிழ் மக்களின் கூர்ந்த மதி இதன் மூலம் புலனாகிறது.

**துணை நூற்பட்டியல்**

1. கிருபானந்த வாரியார், முருகன், குகஸ்ரீவாரியார் பதிப்பகம், சென்னை.3வது பதிப்பு 2010 ப.கி
2. மேற்படி ப.17
3. கிருபானந்தவாரி, கந்தரநுழதி, வானதிபதிப்பகம் சென்னை எட்டாம்பதிப்பு 1985 பக் 17-18
4. மேற்படி ப.19
5. கிருபானந்தவாரியார், முருகன் ப.70-76.

# குருவாய் வருவாய் அருள்வாய்

முனைவர் **கோ.ப. நல்லசிவம்**
உதவிப் பேராசிரியர்,
மெய்யியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்- 613 010.

தமிழில் முருக வழிபாடும் முருகனைப் பாடும் இலக்கியங்களும் சங்க காலந்தொட்டே இருந்து வரினும் அருணகிரிநாதர் பாடிய முருக இலக்கியங்கள் தனித்துவம் வாய்ந்தவை. கௌமாரம் எனப்படும் தனித்த முருக வழிபாட்டின் வேத நூல் என்றே திருப்புகழைக் குறிக்கலாம். மேலும் அருணகிரிநாதர் பாடிய கந்தர் அனுபூதி, கந்தரலங்காரம், கந்தரந்தாதி, வேல் விருத்தம், மயில் விருத்தம், சேவல் விருத்தம், திருவகுப்பு முதலிய முருக இலக்கியங்களும் தத்துவ நிலையிலும் வழிபாட்டு நிலையிலும் போற்றத்தக்கன.

அருள் நிலையில் உமையம்மை இகம் எனும் இவ்வுலக வாழ்வில் வளத்தையும் சிவம் பரம் எனும் வீடுபேற்றையும் அருளுவதாக தத்துவங்கள் குறிப்பிடுகின்றன. ஆனால் திருப்புகழில் அருணகிரிநாதர் அம்மையப்பர் வடிவாகவே முருகப்பெருமானைக் காண்பதால் இகபர சௌபாக்யம் அருள்வாயே என்று இகம் பரம் இரண்டையும் அருளுபவனாக முருகப்பெருமானைப் போற்றுகிறார். அருணகிரிநாதர் முருகனைக் கண்டு அனுபவித்த அனுபூதிமான் ஆவார்.

தமிழர்தம் தனிப்பெரும் கடவுளாகப் போற்றப்படும் முருகன் சங்க காலத்தில் குறிஞ்சிக் கடவுளாக விளங்கிய தன்மையால் இன்றுவரை குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம் என்று முருகப்பெருமான் தலங்கள் பெரும்பாலும் குறிஞ்சி நில மலைகளாகவே இருக்கின்றன. தமிழ்க்கடவுளாம் முருகனுக்கு அவர் சூட்டிய பாமலைகள் முந்துதமிழ் மாலைகளாக விளங்குகின்றன. தமிழையும் சைவத்தையும் எப்படி பிரிக்க இயலாதோ அதுபோலவே முருகக்கடவுளையும் தமிழையும் பிரிக்கவியலாது.

**அருணகிரிநாதரின் பார்வையில் தமிழும் முருகனும்**

அருணகிரிநாதர் சந்தத்தமிழிசை வல்லவர். முருகப்பெருமானைத் தமிழில் பாடுதற்குப் பண்ணிசைப் பாவலரான திருஞானசம்பந்தரைப் போல, தமக்கும் அத்திறன் வரவேண்டும் என்று முருகப்பெருமானையே வேண்டுகிறார். தம்முடைய சந்தத்தமிழிசைக்கு ஞானசம்பந்தரையே குருவாகக் கருதுகிறார் அருணகிரிநாதர். மேலும் திருஞானசம்பந்தருக்குப் பின் ரதபந்தம் எனும் திருவெழுகூற்றிருக்கை பாடியவர் அருணகிரிநாதர் மட்டுமே. அருணகிரிநாதரின் வேண்டுதல்,

*புமியதனிற் ப்ரபுவான புகலியில்வித் தகர்போல*
*அமிர்தகவித் தொடைபாட அடிமைதனக் கருள்வாயே.*
(கயிலைத் திருப்புகழ்)

என அமைகிறது. முருகனைத் தமிழாகவே பார்க்கிறார் அருணகிரிநாதர். அவர்தம் திருப்புகழில்,

இகபரமதற் கிறையோனே
இயலிசையின்முத் தமிழோனே. (சென்னிமலைத் திருப்புகழ்)
...... *முதிய மாதமிழிசைய தாகவே*
*தெள்ளு தமிழ் பாடத் தெளிவோனே*
*செய்ய குமரேசத் திறலோனே.* (வள்ளிமலைத் திருப்புகழ்)

எனவரும் அடிகளைக் காணலாம். மேலும் குருஉபதேசமாக சிவபெருமானுக்கு ஓங்காரத்தின் பொருளைத் தமிழில் அருளினார் என்று குறிப்பிடுகிறார். சான்றாக,

*கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத் தெரியக்*
*கொஞ்சித் தமிழால் பகர்வோனே.* (பொது)

அகத்தியனார்க்குத் தமிழ் அருளிய தன்மையை,

*சிவனைநிகர் பொதியவரை முநிவனக மகிழஇரு*
*செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே.*
(திருச்செந்தூர் திருப்புகழ்)

என்று குறிப்பிடுகிறார்.

குரு

குரு எனும் சொல்லாட்சி ஆன்மிகத் துறையில் அதிகமாகக் கையாளப்படுவதாகும். குரு என்பது இரண்டு எழுத்துகளின் கூட்டாக இல்லாமல் இரண்டு நுணுக்கமான பொருளைக் கொண்டதாகும். கு என்பது இருள்-ஆணவம்- மறைத்தல் என்றும், ரு என்பது நீக்குதல் அல்லது நீக்குபவர் என்றும் பொருள் கொள்ளப்படுகிறது. எனவே குருவானவர் ஆன்மாக்களைப் பற்றியிருக்கும் மூலமலமாகிய ஆணவத்தைத் தம் உபதேசத்தால் நீக்குபவர் என்று புரிந்துகொள்ளலாம். ஆணவம் அறிவுக்கு மறைப்பாற்றலைச் செய்வதால் அறிவு ஞானத்தை அடையமுடியாமல் தடுமாறுகிறது. எனவே மறைப்பாற்றலைக் கட்டுப்படுத்தி அறிவைத் துலக்கம் செய்வது இன்றியமையததாகும். இவ்வாறு ஆன்மாக்களின் ஆணவமலத்தைப் போக்கும் குரு எப்படி இருக்க வேண்டும் என்று பட்டினத்தார் குறிப்பிடுகிறார். அப்பாடல்,

*பேய்போற் திரிந்து பிணம்போல் கிடந்து இட்ட பிச்சையெல்லாம்*
*நாய்போல் அருந்தி நரிபோல் உழன்று நன்மங்கையரைத்*
*தாய்போல் கருதி தமர்போல அனைவர்க்கும் தாழ்மை சொல்லி*
*சேய்போல் இருப்பர் கண்டீர் உண்மை ஞானம் தெளிந்தவரே.*
(பட்டினத்தார்)

என்பதாகும். மேற்சொன்ன தகுதிகளோடு விளங்கும் குருவானவரின் சிறப்பைத் திருமூலர்,

*தெளிவு குருவின் திருமேனி காண்டல்*
*தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்*
*தெளிவு குருவின் திருநாமம் செப்பல்*
*தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே.* (திருமந்திரம்)

என்கிறார். எனவே அறிவு அறியப்படுவது ஞானம் உணரப்படுவது என்பதைப் புரிந்துகொள்ளலாம். பல்வேறு நூல்களால், ஐம்பொறிகளால் அறியப்படுவன அனைத்தும் அறிவு என்றும் கல்வி என்றும் அறியலாம். ஆயின் ஞானமாகிய பேரறிவு குருவினால் உணர்த்தப்படுவதாகும். ஆன்மாக்கள் ஆணவம் கன்மம் மாயை எனும் மும்மலப்பற்றி நீங்கி சரியை கிரியை யோகம் எனும் பக்குவநிலைகளைக் கடக்கும் போது இறைவனே குருவை அனுப்புவான் அல்லது இறைவனே குருவடிவம் தாங்கி வருவான் என்பது ஆன்மிக நம்பிக்கை மட்டுமல்ல அருளாளர் வாக்கு. அந்நிலையே சுந்தரர், மாணிக்கவாசகர், அருணகிரிநாதர் ஆகியோர் அடைந்தனர் என்பது அருள் வரலாறு. தாயுமானவர்,

*மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினவர்க்கு ஒரு*
*வார்த்தை சொல சற்குரு வாய்க்கும் பராபரமே* (பராபரக்கண்ணி)

என்கிறார். எனவே ஆன்மா குருவை நாட வேண்டிய அவசியமில்லை. ஆன்மா பக்குவமடைந்தால் சற்குரு வாய்க்கும் என்பது போதருகிறது.

**குருவாய் வந்த குருபரன்**

அருணகிரிநாதருக்கு முருகனே குருவாக வந்து உபதேசம் செய்தான் என்ற குறிப்பு திருப்புகழ் மற்றும் கந்தரனுபூதியில் நிரம்ப உள. முருகன் கந்தனாக வந்து அருள் செய்தான் என்கிறார். முருகனுக்கு ஆயிரம் திருநாமங்கள் இருக்கும் போது கந்தன் என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்தக் காரணம் உண்டு. தமிழில் கந்தன் என்ற சொல் கந்து т அன் என்று பிரித்துப் பொருள் கொள்ளப்படுகிறது. கந்து என்றால் பற்றுக்கோடு என்று பொருளாகும் எனவே ஆன்மாக்களுக்குப் பற்றுக்கோடாக விளங்குகின்ற காரணத்தினால் முருகனுக்குக் கந்தன் என்று பெயர். எனவே தனக்குப் பற்றுக்கோடாக இருக்கும் முருகனோடு தனக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கந்தர் அனுபூதியாக அருளியுள்ளார். கந்தரனுபூதியில் தனக்குக் குருவாக வந்து உபதேசம் செய்த மந்திரத்தையும் குறிப்பிடுகிறார் அருணகிரிநாதர். அம்மந்திரம் முருகா என்றோ, குமரா என்றோ, ஓம் சரவணபவ என்றோ அமையவில்லை. முருகன் உபதேசித்த மந்திரம் சும்மா இரு சொல்லற என்பதாகும். இதுவே அருணகிரிநாதர் ஞானம் பெற அமைந்த மகாமந்திரமாகும். இதனை அவரே,

*சும்மா இரு சொல்லற என்றலுமே*
*அம்மா பொருளொன்றும் அறிந்திலமே.* (கந்தரனுபூதி 1)

கந்தரனுபூதியில் குறிப்பிடுகிறார். வள்ளலாரும் சும்மா இருத்தலைப் பற்றிச் சிந்தித்திருக்கிறார். சும்மா இருக்கும் சுகம் என்று வருமோ என்று ஏக்கத்துடன் காத்திருப்பதாக அருட்பாவில் குறிப்பிடுகிறார். சும்மா இருத்தல் என்பது மிக உயர்ந்த ஞானநிலை. புலனைந்தையும் கட்டுப்படுத்தி வைத்திருத்தலைக் குறிக்கும் தத்துவமாகும். மேலுமம் ஐவகை வாக்குகளான சூக்குமம், பைசந்தி, மத்திமை, சூட்சும வைகரி, தூல வைகரி ஆகியவற்றையும் அடக்கி வைத்திருத்தலும் சும்மா இருத்தலின் உள்ளடக்கமாகும். தாயுமானவர், பட்டினத்தார் ஆகியோரும் சும்மாயிருத்தல் தத்துவம் குறித்து விதந்தோதியுள்ளனர். அறிவு பேரறிவாம் ஞானநிலை அடைதற்கு இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் என்ற நிலைகளைக் கடக்கவேண்டும் என்பது சைவ சித்தாந்த கொள்கை. அதற்கு அடிப்படை சும்மா இருத்தலாகும்.

கந்தரனுபூதி 51 பாடல்கள் கொண்டதாகும். இந்த எண்ணிக்கைக்கும் தத்துவத்திற்கும் தொடர்பு உண்டு. தனக்கு உபதேசம் செய்த குருநாதரின் திருவடிகளுக்கு குரு காணிக்கையாக இந்த அனுபூதி மாலையை அணிவிக்கின்றார். 51 பாடல்கள் 51 பூக்களாகும். அவை நம் உடலில் அமைந்துள்ள ஆறு ஆதாரங்களில் உள்ள மந்திர எழுத்துக்களின் எண்ணிக்கையாகும். அவை,

| | |
|---|---|
| மூலாதாரம் | - 4 எழுத்துகள் |
| சுவாதிட்டானம் | - 6 எழுத்துகள் |
| மணிபூரகம் | - 10 எழுத்துகள் |
| அநாகதம் | - 12 எழுத்துகள் |
| விசுத்தி | - 16 எழுத்துகள் |
| ஆக்ஞை | - 2 எழுத்துகள் |
| அதற்கு மேல் | - 1 எழுத்து |

ஆக மொத்தம் 51 எழுத்துகளாகும். இத்தத்துவத்தின் அடிப்படையே கந்தரனுபூதிச் செய்யுள்களின் எண்ணிக்கையாகும். இதனை அருணகிரிநாதரே,

*மாத்ருகாபுஷ்ப மாலை கோலப்ர அளிபாட*
*வளா பாதத்தில் அணிவேனே*

என்பதைக் குறிக்கிறார். உபதேசம் பெற்ற அருணகிரிநாதர் முருகனிடம் பாடும் பணியையே தனக்கு நிரந்தரமாக அருளுமாறு வேண்டுகிறார். பொதுவாக இறைஞானம் பெற்றவர்களின் வேண்டுதல் இதுவாகவே உள்ளது. பரிபாடலில் இடம்பெறும், யாமிரப்பவை, பொன்னும் பொருளும் போகமும் அல்ல நின்பால், அன்பும் அருளும், அறனும் என்றாங்கு எனவருவதும், இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால், மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே என்ற திருநாவுக்கரசரின் விருப்பமும் குறிப்பிடத்தக்கதாகும். அருணகிரிநாதரும்,

*ஆடும் பரிவேல் அணிசேவலெனப்*
*பாடும் பணியே பணியாய் அருள்வாய்* (கந்தரனுபூதி 1)

என்றே வேண்டுகிறார். இப்படிப் பாடிப்பணிந்த அருணகிரிநாதர் முருகனைப் பல்வேறு திருநாமங்களால் அழைத்து மகிழ்கிறார். அவற்றுள், சண்முகன் (ஆறுமுகங்களை உடையவன்), யானை சகோதரன்(விநாயகர் சகோதரன்), முருகன்(கண்டாரால் விரும்பப்படும் தன்மையையுடைய அழகுடையவன்), வேலவன் (அம்மை கொடுத்த வேலாயுதம் கொண்டவன்), தயாபரன் (கருணைக் கடவுள்), குமரன்(இளையோன்), கிரிராசகுமாரிமகன் (பர்வதராசனின் மகளான பார்வதியின் மகன்), நிராகுலன் (கலக்கம் இல்லாதவன்), நிர்ப்பயன் (அச்சமற்றவன்), சுரலோக சிகாமணி (தேவர்களின் முடிமணியாகத் திகழ்பவன்), பெம்மான் (பெருமையுடைய தலைவன்). தனிவேல் முனி ((முனிவர்களால் தியானிக்கப்படுபவன்). குரு (ஆன்மாக்களுக்கு சற்குருவாக விளங்குபவன்), கதிர்வேல், குகன் (உயிர்களின் உள்ளமாகிய குகையில் இருப்பவன்), குருபுங்கவன் (சிவபெருமான், அகத்தியர் முதலியவர்களுக்கு உபதேசித்தவன்), எண்குணம் (தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்றை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயற்கை உணர்வினனாதல், இயல்பாகவே பாசத்திலிருந்து விடுபட்டவன், பேரருளுடைமை, முடிவிலா ஆற்றலுடைமை, வரம்பிலா இன்பமுடைமை ஆகிய எண்குணங்கள்), சுரலோகத் துரந்தரன் (தேவருலகத்தைக் காத்தவன்), விமலன் புதல்வன்(சிவபெருமான் நெற்றிக்கண் தோன்றியவன்), அதிகன் (மேலானவன்), அநகன்(பாவம் இல்லாதவன்), அபயம் (உயிர்களுக்குப் பாதுகாப்பளிப்பவன்), சூர பயங்கரன் (அசுரர்களுக்கு அச்சமளிப்பவன்), அயில்வேல் அரசு, விக்ரமன்(வலிமையும் நீதிமுறையும் உடையவன்), நாக புரந்தரன், வேள் (எல்லோர்க்கும் தலைவன்), மயில் வாகனன் (மயில் எனும் சூரனை வாகனமாக் கொண்டவன்), விரதன் (அடியார்களைக் காக்கும் விரதம் உடையவன்), வரதன் (வரம்பிலா வரங்களை அருளுபவன்), குமரேசன் (குமரன், ஈசன் என்பனவற்றின் கூட்டுச்சொல்), சுரபூபதி (மண்ணுலகம், விண்ணுலகம் இரண்டிற்கும் தலைவன், மகிபன், குணபூதரன், வானவன், அமுதன், ஞானகரன் (ஞானத்தின் இருப்பிடம்), தற்பரம் (வீடுபேற்றை அளிப்பவன்) என்பன குறிப்பிடத்தக்கன.

**மனத்திற்கு உபதேசம்**

முருகனிடம் உபதேசம் பெற்ற அருணகிரிநாதம் நேரிடையாக மக்களுக்கு உபதேசம் செய்யாமல் முதற்கண் தம்மனத்தை அதற்கேற்றாற்போல பக்குவப்படுத்திக் கொள்ள முனைகிறார். பின்னரே மக்களுக்கு அறிவுறுத்துகிறார். இதனை,

*கெடுவாய் மனனே கதிகேள் கரவா*
*திடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்* (கந்தரனுபூதி 7)

*கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்று*
*உய்வாய் மனனே* (கந்தரனுபூதி 14)

*..... மனனே பொறையாம் அறிவால்*
*அரிவாய் அடியோடும் அகந்தையையே.* (கந்தரனுபூதி 37)

எனவருவனவற்றால் அறியலாம். மனதில் அகந்தையிருந்தால் ஞானம் பெற முடியாது எனவே அகந்தையைப் போக்க வேண்டும் தம் மனத்தை முன்னிலைப்படுத்திக் குறிப்பிடுவது போல் நமக்கு அறிவுறுத்துகிறார்.

**சற்குருவாக வந்து ஜபமாலை தந்தமை**

குருவின் மூலமாக உபதேசம் எனும் ஞான அறிவுரை பெற்றபின் தாம் அடைந்த ஞானத்தை உணர்வதும் தொடர்ந்து தியானிப்பதும் ஒரு சீடனின் கடமையாகிறது. தியானிப்பதற்கு நம்முடைய அருளாளர்கள் மனதில் தியானமும், திருவாயில் மந்திர உச்சரிப்பும், கையில் மந்திர ஜபத்தோடு உருத்திராக்கமாலையை எண்ணுதலும் ஆகிய செயல்பாடுகளைக் குறித்து உள்ளனர். திருஞானசம்பந்தர் நமச்சிவாயத்திருப்பதிகத்தில் அக்கு மாலை கொடு அங்கையில் எண்ணுவார் என்று இச்செயன்மையை விதந்து குறிப்பிட்டுள்ளமை ஈண்டு ஒப்பு நோக்ககத்தக்கதாம். இங்கே அருணகிரிநாதருக்கு முருகன் உபதேசம் செய்ததோடு மட்டுமல்லாமல் ஜபமாலையையும் தந்தருளினான் என்பதைத் திருப்புகழ் மூலமாக அறியலாம். சான்றாக,

*அபகார நிந்தை பட்டுழலாதே அறியாத வஞ்சரைக் குறியாதே*
*உபதேச மந்திரப் பொருளாலே உனைநான் நினைந்தருள் பெறுவேனோ*
*இபமாமுகந்தனுக்கு இளையோனே இமவான் மடந்தை உத்தமி பாலா*
*ஜபமாலை தந்த சற்குருநாதா திருஆவினன்குடிப் பெருமாளே.*
(பழநி திருப்புகழ்)

இத்திருப்புகழ் வழியாக முருகன் சற்குருவடிவாக வந்து உபதேசம் செய்தமை, ஜபமாலை தந்தமை இரண்டும் அகச்சான்றாக அறியப்படுகிறது.

**நிறைவாக...**

அருளாளர்கள் தாம் அடைந்த இறையனுபவத்தைத் தாம் மட்டும் அனுபவியாமல் சகலருக்கும் அதன் இன்பம் கிடைக்க வேண்டும் என்பதே அவர்களின் பெருவிருப்பமாக இருந்துள்ளது. இவ்விருப்பம் தான் இலக்கியங்களாக நமக்குக் கிடைத்துள்ளன. திருமூலரும் தாம் அடைந்த ஞானத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது, யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்று திருமந்திரம் எழுந்த சூழலைப் பாடுகின்றார். அவ்வண்ணமே உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம் அடைந்த தவ முதல்வர் சம்பந்தர். திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் உள்ளிட்ட நாயன்மார்கள், ஆழ்வார்கள் வரிசையில் அருணகிரிநாதரும் தாம் அடைந்த அருளை, ஞானத்தை இலக்கியங்களாகப் பதிவு செய்தமையே திருப்புகழ்.

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் - ஓர் அறிமுகம்

முனைவர் சு. நாகேஸ்வரி,
தமிழ்த்துறை விரிவுரையாளர்,
அரசு மகளிர் கலைக்கல்லூரி (தன்னாட்சி)
புதுக்கோட்டை-622001.

சங்கரலிங்கம் என்ற இயற்பெயரைக் கொண்ட தண்டபாணி சுவாமிகள். நெற்கட்டும் செவல் எனும் ஜமீன் கிராமத்தில் தானாதிபதியாக இருந்து வந்த செந்தில் நாயகம்பிள்ளைக்கும் பேச்சி முத்து அம்மையாருக்கும் 1839 ஆம் ஆண்டு பிறந்தார். 28.11.1839 விகாரி-கார்த்திகை 16 ஆம் தேதி ஹஸ்த நட்சத்திரத்தில் ஒரு தவக்குழந்தை அவதரித்தது. தம்பதிகள் பல ஆண்டுகள் தவமாய் தவமிருந்து பெற்ற அந்த குழந்தைக்குச் சங்கரலிங்கம் என்று பெயரிட்டு அழைத்து வந்தனர். சங்கரன் கோயிலில் எழுந்தருளியுள்ள சங்கரநாராயணர் அர்ச்சகர் வடிவில் வந்து இப்பெயரைச் சூட்டுமாறு கூறியதாகவும் அறிய முடிகிறது. தமிழ்நாட்டில் வாழ்ந்த தமிழ்ப்புலவர். பலவிதச் சிறப்புகளுக்கு உரியவர். இவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் என்னும் திருப்புகழ்ச் சுவாமிகள் என்றும் அழைக்கப்பட்டார்.

### இளமைப் பருவம்

சிறுவன் சங்கரலிங்கம் 6 வயதாகியிருக்கும் போது தனது தந்தையை இழக்க நேரிடுகிறது. அதனால் கல்வியும் தடைபடுகிறது. சுரண்டை எனும் ஊரில் வசித்து வந்த அவரது பெரிய தந்தையார் சுந்தரலிங்கத்தின் அறிவாற்றலைக் கண்டு தம்மோடு அழைத்துச் சென்று சுரண்டையில் கல்வி பயில ஏற்பாடுகள் செய்தார்.

முத்தமிழையும் தம் இரு கண்கள் எனப் போற்றி வாழ்ந்தவர். தந்தையின் நண்பரான சீதாராம நாயுடு என்பவரால் இவருக்கு முருகன் மீது பக்தி உருவாயிற்று. ஆரம்பக் கல்வியை முடித்த இவர். இளம் வயதிலேயே தமிழில் மிகுந்த புலமைப் பெற்றார். எட்டு வயதிலேயே கவிதை எழுதும் ஆற்றில் பெற்றார்.

சித்திரா நதிக் கரையோரம் அமைந்துள்ளது பூமி காத்தாள் அம்மன் கோயில். ஒரு முறை அக்கோயில் திருவிழாவிற்கு வந்த சிலருக்கு இந்த அம்மனுக்கு பூமிகாத்தாள் எனப் பெயர் ஏற்படக் காரணம் என்ன? எனும் வினா எழுந்தது, பெரியவர்களுக்கே சரியாக விளக்கம் சொல்லத் தெரியாத வேளையில் அங்கு விளையாடிக் கொண்டிருந்த 8 வயதுச் சிறுவன் சங்கரலிங்கம். பூமிகாத்தாள் என்ற அம்மனுக்கு அப்பெயர் எப்படி அமைந்தது என்ற காரணத்தைக் கூறி பாடுதற்கு அரிய வெண்பாவில் அதைப் பாடினார்.

*"அமுதம் கடையும் நாள் ஆலம் வெடித்துத்*
*திமுதமெனத் தீயெரித்துச் சென்ற(து) - அமுதமெனத்*

*தீக்கடவுள் உண்டார் திருக்கண்டத்தைப் பிடித்துக்*
*காத்ததனாற் பூமி காத்தாள்"*

என்று நேரிசை வெண்பாவில் அமைத்துப் பாடினார். அன்று முதல் பாடல்கள் புனையத் தொடங்கினார். இவர் இலட்சம் பாடல்களைப் பாடியுள்ளார்.

**மணவாழ்க்கை**

மக்கள் மத்தியில் கந்தவேளின் அடியாராக தண்டபாணி சுவாமிகள் வலம் வந்த காலத்தில் சுந்தரத்தம்மை என்ற பெண்மணியை திருமணம் செய்து கொண்டார். மயிலம் கோயில் முருகப் பெருமாள் சந்நிதியில் கந்தவேர் ஆணையிட்டபடி ருத்ராட்சம் அணிவித்து அவரை மனைவியாக ஏற்றுக் கொண்டார்.

**முத்தமிழ் முருகனின் உத்தமத் தொண்டர் - படைப்புகள்**

*"தண்டபா ணிப்பேர்த் தவமுருக தாசமுனி விண்ட கவி*
*யாவும்செவ் வேள் தனதாக் கொண்டதால் எத்தகைத்தானாலும்*
*இயற்றல் எளிதன்றோ வித்தகர் டோற்றும் சிறப்பாமே"*

**முருகதாச சுவாமிகள்**

சங்கரலிங்கத்தின் குருவான சீதாராம நாயுடு என்பவர், அவருக்கு விநாயகர், லெட்சுமி, முருகப்பெருமான், ஷசஹரம் ஆகிய மந்திரங்களை உபதேசித்தார். அதன் தொடர்ச்சியாக தினமும் வேல் வழிபாடு செய்து முருகக்கடவுளைப் போற்றும் அருமையான செந்தமிழ்ப் பாடல்களை இயற்றி, அவற்றை ஏட்டில் எழுதி வரலானார் சங்கரலிங்கம். அதோடு தவசிக் கோலம் கையில் தண்டு, கமண்டலம் தாங்கி நடந்தே பல தலங்களுக்குச் சென்று தெய்வீகப் பாடல்கள் பல பாடினார். மக்களிடையே பக்தி நெறியை வளர்த்தார்.

முருகப் பெருமானையே பரம்பொருளாகக் கொண்டு வாழ்ந்த இவர் சைவ, வைணவ பேதமின்றி துளசிமணியும், ருத்ராட்சமும் சமமாக அணிந்து விபூதி, திருமண் விளங்கக் காட்சியளிப்பாராம். முருகப் பெருமானின் முகங்கள் ஆறும் ஆறு மதத்தை காட்டுவன என்னும் தண்டபாணி சுவாமிகளின் பாடல் இதோ,

*"குருவும், கணபதியும் கொற்ற மழுவானும்*
*திருமடந்தைக் காவலனும் சேனரில்-*
*வருசுடரும் தேவினத்தின் தாயான சிற்சித்தியும்*
*முருகோன் மூவிரண்டாக் காட்டும் முகம்"*

19 ஆம் நூற்றாண்டில் முருகன் வழிபாடு தழைத்தோங்கப் பாடுபட்டவர். பழநிக்கு பலமுறை சென்று அங்கே அருள்மழை பொழியும் தண்டபாணி சந்நிதியில் பலமுறை வீழ்ந்து வணங்கி சந்தக்கவி பாடத் தொடங்கினார். அந்த அற்புதநூல், ஆயிரம் பாடல்களைக் கொண்ட 'பழநித் திருவாயிரம்' பிறகு பழநியில் சீர் ஆஸ்ரமம் (மடம்) நிறுவி அங்கேயே தங்கி சக்தி வடிவேல் வழிபாடு செய்து

வரலானார். இவரது எழுத்தாணியான 'சர்வ சாதாரணி' கொண்டு எழுதத் தொடங்கினால்... இவர் மனம் செல்லும் வேகத்துக்கு எழுத்தாணியால் எழுத இயலாது. பாடல்கள் அருவிப் பிரவாசம் போல் வேகமாக பெருகக்கெடுத்து ஓடும்.

ஒரு முறை தென்காசி அருகிலுள்ள திருமலை (பைம்பொழில்) குமாரசாமி கோயில் திருச்சந்நிதியில் நின்று முருகப்பெருமான் புகழைப் பாடிப் பரவினார். அப்போது அருணகிரிநாதருக்குக் குருவாய் எழுந்தருளி காட்சியளித்தது போன்று தம்மையும் ஆட்கொள்ள வேண்டும் என்று பணிந்து பலமுறை வேண்டினார். ஆனால் இறையருள் கிடைக்காததால் இனி உயிருடன் இருந்து பயனில்லை என்று தீர்மானித்து மலையிலிருந்து விழுந்து புரண்டார். அப்போது திருமலைக் கந்தன் அவர் உணராதவாறு அவரைக் கையில் ஏந்தி மலையடிவாரத்தில் கொண்டு சேர்த்தார்.

இவர் மருத்துவத்தைப் பற்றி விளக்கும் 'வாகடப் பிள்ளைத் தமிழ்', முசுகுந்த நாடகம், சித்திரக்கவி வகையில் மாலை மாற்று, சதுரபந்தம் மற்றும் அறுவகை மதத்துக்குரிய எழு கூற்றிருக்கை, 8, 9, 10 (தசாங்க) கூற்றிருக்கை ஆகியவற்றை பாடியவர் இதில் 8,9,10 ஆகியவற்றை பாடியவர். இதில் 8,9,10 ஆகியவற்றை இதுவரை தமிழ் இலக்கியத்தில் எவரும் பாடியதில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இவர் இயற்றிய'வண்ணத்தியல்பு' மற்றும் அறுவகை இலக்கணம் (786 சூத்திரங்கள்) ஆகியவை தமிழ்மொழிக்குப் புதிய அணிகலன்களாகும். தொல்காப்பியருக்கு பிறகு வண்ணத்தில் ஈடுபாடு கொண்டு பாடியவரும் இலக்கணம் வகுத்தவதும் இவர் ஒருவரே.

அருணகிரியார் அருளிய கந்தரலங்காரம் போன்று, வேல் அலங்காரம், மயில் அலங்காரம், வீரவாகுத்தேவரின் வாள் அலங்காரம், முருகானந்த ல□ரி மற்றும் திருச்செந்தூர் முருகப்பெருமான் ஆணைப்படி ஷோடச நூல் (16 பிரபந்தம்-1838 பாடல்கள்) முதலியன இவர் எழுதிய நூல்களில் குறிப்பிடத்தக்கவை.

திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் மீதும் 'திருஎழு கூற்றிருக்கைப்' பாடினார். அன்றிரவு பெருமாள் இவர் மனவெளியில் ஒரு வைணவ வயோதிகர் வடிவில் காட்சியளித்து எழு கூற்றிருக்கைக்காக எழுநூறு பொன்தரக் கடமைப் பட்டிருக்கிறேன் எனச் சீட்டெழுதி கையொப்பமிட்டுத் தந்ததைக் கண்டார்.

பெருமாளே! உமது திருவருள் இருந்தாலே போதுமே!

எழுநூறு பொன்சீட்டு ஏன் அனுப்பினீர்? என்ற ஈற்றடி கொண்ட ஒரு பதிகமும் பாடிப் பெருமானின் அருமை பெருமைகளைப் போற்றி இன்புறுகிறார்.

தமிழ் எழுத்துக்கள் 247 ஒவ்வொன்றுக்கும் ஒரு குறள் வீதம கொண்ட 'வருக்கக்குறள்' என்ற நூலும், தமிழ் எழுத்துக்களின் இதழ் முயற்சியால் (உதடு) ஒட்டுதலும், குவிதலும் உண்டாகிற 119 எழுத்துக்களை மட்டும் பயன்படுத்தி உருவான 10 பாடல்கள் கொண்ட 'குவிபா ஒருபது' என்ற பதிகமும், தமிழ் அலங்காரம் என்ற நூலும் இவரது கவித்துவத்தையும் ஆற்றலையும்

திறம்பட சுட்டிக்காட்டும். தமிழ் இலக்கணத்தில் பாடாத பா அமைப்பு எதுவுமே பாக்கியில்லை என்று கூறலாம்.

இவர் பாடியுள்ள புலவர் புராணம் 3,003 கவிகள் கொண்டு 72 புலவர்களது வரலாறுகளை விவரிக்கிறது. விழுப்புரம் அருகில் பசு பூஜித்த 'திருவாமாத்தூர்' என்னும் திருத்தலத்தைத் தமது தவத்துக்கு ஏற்ற இடமாகக் கொண்டு எல்லை தாண்டா விரதத்துடன் வாழ்ந்தார். அந்தத் தலத்துக்குப் புராணம், கலம்பகம் உள்ளிட்ட 3,482 பாடல்களைப் பாடியுள்ளார். அங்குக் கௌமார மடம் ஒன்றை ஸ்தாம்பித்தார். கோவை ராமானந்த சுவாமிகளுக்குத் தீட்டை அளித்தார்.

| | | |
|---|---|---|
| தில்லை நடராஜர் மீது | - | தில்லைத் திருவாயிரம் |
| திருவரங்கன் மீது | - | திருவரங்கத் திருவாயிரம் |
| சூரியன் மீது | - | ஞாயிறு திருவாயிரம் |
| திருவண்ணாமலை கார்த்திகை | | |
| தீபத் திருவிழா பற்றிய சஹஸ்ரதீபம் | - | திருவிளக்காயிரம் |

தெய்வத் திருவாயிரம், ஏழாயிரப் பிரபந்தம், திருவாமாத்தூர் பதிகச் சதகம், சதகப் பதிகம் முதலியன இவர் இயற்றிய நூல்களுள் குறிப்பிடத்தக்கன. இவர் தமது பாடல்களில் முற்பிறவில் தாம் அருணகிரிநாதராகப் பிறந்தவர் என்றும், இதை முருகப்பெருமானே தம்மிடம் பலமுறை கூறியதாகவும் குறிப்பிடுகிறார்.

முத்தமிழையும் தம் இரு கண்கள் எனப் போற்றி வாழ்ந்தவர். இவரின் ஆன்மீகக் கொள்கை என்பது சமூக சீர்திருத்த பார்வை கொண்டதாகும். பிரித்தானிய எதிர்ப்பு, பெண்கல்வி, கைம்பெண் மறுமணம், வடமொழி எதிர்ப்பு போன்ற முற்போக்கு சீர்திருத்தக் கொள்கைகளைத் தம் பாடலின் மூலம் வெளிப்படுத்தியவர். ஆங்கிலேயர் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து 19-ம் நூற்றாண்டில் கொடுங்கோல் புரியும் ஆட்சியைக் கண்டித்து 'ஆங்கிலியர் அந்தாதி' என்ற நூலை எழுதினார். கோவை சரவணம் பட்டியில் கௌமாரமடம் நிறுவியதும் இவரது ஞான வாழ்வில் முக்கியமான ஒன்று.

**சிறப்புகள்**

தேவாரமூவர், அருணகிரிநாதருக்குப் பிறகு அதிகமான ஸ்தல வழிபாடு செய்து, பதிகங்கள் பல பாடிய பெருமை தண்டபாணி சுவாமிகளுக்கு உண்டு. அவற்றில் 222 தலப்பாடல்கள் அடங்கும். ஒரு தலத்திற்குச் சென்றால் அந்த ஊரில் கோயில் கொண்டுள்ள எல்லா தெய்வங்களையும் பாடும் நெறி கொண்டவர் தண்டபாணி சுவாமிகளின் வழக்கம்.

வடலூர் ராமலிங்க சுவாமிகளை சந்தித்து அடிக்கடி அளவளாவுவது தண்டபாணி சுவாமிகளின் வழக்கம். வளவனூர் ஷண்முக சுவாமிகள், யாழ்பாணம் மஹாவித்வான் பிள்ளையவர்கள், வண்ணக்களஞ்சியம் 'நாகலிங்கம் முனிவர்' 'திரிசுரபுரம் மகாவித்வான்' மீனாட்சி சுந்தரம்பிள்ளை, அஷ்டாவதானம் கல்யாண சுந்தரம், மாம்பழக்கவிசிங்க நாவலர் போன்ற பெரியோர்கள் இவரது நண்பர்கள்.

அவிநாசி முதல் வேலூர் வரையிலான 218 ஊர்களுக்கும், கேரளம் மற்றும் இலங்கைக்கும் இவர் சென்றுள்ளார்.

தனது பதின்மூன்று வயதில் அகப்பொருளின் துறைகளை அமைத்துச் சந்த யாப்பில் 'வண்ணம்' என்ற பெயரில் பாடல்களைப் பாடுவதில் வல்லமை பெற்றிருந்ததால் வண்ணச்சரபம் என்றும் அழைக்கப்பட்டார். தமிழன்பர்கள் இவரின் பெயருக்கு முன்னால் வண்ணச்சரபம் என்பதையும் இணைத்தனர். அருணகிரி நாதரின் அடியொற்றி முருகனின் திருப்புகழை விரும்பிப் பாடிக்கொண்டே இருந்ததால் திருப்புகழ் சுவாமிகள் என்றும் சிறப்பிக்கப்பட்டார்.

உச்சி முதல் உள்ளங்கால் வரை திருநீறு பூசிக் கொண்டார். இடுப்பில் கல்லாடை அணிந்து கொண்டார். கையில் தண்டாயுதம் ஏந்திக் கொண்டார். இந்தக் கோலத்தில் விளங்கிய இவரை மக்கள் 'தண்டபாணி சுவாமிகள்' என்று போற்றினார்கள்.

சங்கரலிங்கம் முருகனின் அடியவர் ஆனார் முருகன் புகழ் பாடினார். ஆகவே இவர் 'முருகதாசர்' என்று அழைக்கப்பட்டார். இவரது தோற்றத்தைக் கண்டு 'தண்டபாணித் தொண்டர்' தண்டபாணி சுவாமிகள், முருகதாசர் என்றெல்லாம் மக்கள் அழைக்கலாயினர். பல புரட்சிக் கருத்துக்களைத் தனது பாடல்கள் மூலம் வித்திட்டவர்.

தமிழுக்கும், தமிழிசைக்கும் இலக்கணம் தந்தவர். இவரது இலக்கண நூல்கள் முன்னோரின் கருத்துக்களோடு முரண்பட்டவை அல்ல. எனினும் பிற இலக்கண ஆசிரியர்களைப் போல முன்னோர் இலக்கண நூற்பாக்களை இவர் எடுத்தாளவில்லை. தமிழ்மொழியின் வளர்ச்சி நிலையைக் கருத்தில் கொண்டு இலக்கணம் பாடியுள்ளார்.

**இறுதிக்காலம்**

இறுதிக் காலத்தில் அரிசி உணவைத் தவிர்த்து பயறு உணவுகளை உட்கொண்டார். கடும் தவத்தால் இவரது உடலில் வெப்பம் மிகுதியாகி உடல்நிலை மிகவும் பாதிக்கப்பட்டு 1898 ஆம் ஆண்டு இறைவனடி சேர்ந்தார்.

ஆறெழுத்து மந்திரம் ஒரு கோடி ஜபித்து, தினசரி வேல்பூஜை செய்து வந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் 05.07.1898 அன்று (விளம்பி-ஆனி-23, திருவோண நட்சத்திரம்) முருகப் பெருமான் திருவருளில் கலந்தார். திருமால் கோயில் திருவிழா ஹஸ்த நட்சத்திரத்தில் தொடங்கி திருவோணம் நட்சத்திரத்தில் நிறைவு பெறுவது போல், தண்டபாணி சுவாமிகளும் ஹஸ்தத்தில் தோன்றி ஓணத்தில் அருட்சமாதி கொண்டார்.

**முக்கியக் குறிப்பு:** இக்கட்டுரையில் தொகுத்து கூறப்பட்டுள்ள அனைத்து விவரங்களும் வலைதளத்தில் இருந்து பெற்றவை.

# திருமுருகாற்றுப்படையில் முருகன்

முனைவர் **வெ. நிர்மலா,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அ.சு. அரசுக் கலைக்கல்லூரி,
திருத்தணி-631 209.

முருகன் வழிபாட்டைப் பற்றிய செய்திகளைத் திருமுருகாற்றுப்படை முழுவதும் சிறப்பாகத் தருகிறது. குமரவேலை மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது திருமுருகாற்றுப்படை. முருகன் மெய்பொருளை மக்களுக்கு வழங்குகிறான். மெய்ப்பொருள் பற்றிப் பேசுவது இவ்வாற்றுப்படை என்று சொல்லலாம். இவ்வாற்றுப்படை பற்றி ஒரு கதை உண்டு. ஒரு மலைக் குகையிலே முன்னமே 999 பேர் அடைக்கப்பட்டுள்ளனர். அதைக் காத்து வந்தது ஒரு பூதம். ஆயிரமாவது ஆள் கிடைத்தவுடன் 1000 பேரையும் சேர்த்து உண்ணுவது என்று முடிவு செய்திருந்தது. ஆயிரமாவது ஆளாக நக்கீரர் போய்ச் சேர்ந்தார். பூதம் குகையில் 1000 பேரையும் அடைத்து விட்டுக் குளிக்கச் சென்றது. அந்த நேரத்தில் நக்கீரர் தாம் வணங்கும் முருகன் மீது அவன் அருளைப் பெறப் பாடியது திருமுருகாற்றுப்படை.

தொல்காப்பியர் ஐவகை திணைகளாகிய முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை ஆகியவற்றை ஐவகை நிலங்களாகக் குறிப்பிடுவர். திணைக்குரிய கருப்பொருள்களில் கடவுளரையும் மக்களையும் திணைநிலை மக்கள் என்று குறிப்பிடப்படுவர். குறிஞ்சிக்கு முருகனை திணைநிலைக் கடவுளராகத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். திணை நில மக்கள் என்ற கோட்பாட்டிற்கு ஏற்பத் திணைநலைத் தெய்வங்கள் அவ்வத்திணைநிலை மக்களால் மட்டுமே போற்றி வழிபடப்பட்டனர். குறிஞ்சி நில மக்களின் வழிபாடு குன்றக் குரவை. குறிப்பிட்ட ஓர் இனமக்களுக்குரிய தெய்வமாக முருகன் விளங்கினான் என்ற குறிப்புத் தொல்காப்பியத்தால் பெறப்படுகிறது. தொல்காப்பியர் முருகனைத் சேயோன் என்று கூறுகிறார்.

*சேயோன் மேய மைவரை உலகமும்*

முருகன், மேகன் சூழ்ந்த மலையுடைய குறிஞ்சி நிலத்தின் தலைவன்.

**திருமுருகாற்றுப்படையில் முருகன்**

சேயோனைக் குறிக்கின்ற பெயர்கள் பலவற்றுள்ளும் 'முருகு' என்னும் சொல் குறிப்பிடத் தக்கதாகும். முருகு என்னும் சொல் மணம், அழகு என்னும் பொருள்களில் ஆளப்பட்டுள்ளது. முருகன் மறக்கருணையாலும் அறக்கருணையாலும் உலகத்தை உய்விக்கின்றான் என்ற செய்தியைப் பல நூல்களும் குறிப்படுகின்றன. குறிப்பாக அவன் கைகள் மறக்கருணையைச் செய்வதற்கும் பாதங்கள் அறக்கருணையைச் செய்வதற்கும் உரியவையாகும் என்பதனை,

*உறுநர்த் தாங்கிய மதனுடைய நோன்றாள்*
*செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை*

**முருகனின் தோற்றமும் பெருமையும்**

*உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடல் கண்டாங்கு*
*ஓஅற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி*
*உறுநாட் தாங்கிய மதன்உடை நோன்தாள்*
*செறுநாட் தேய்த்த செல்உறழ் தடக்கை*
*மறுஇல் கற்பின் வாள்நுதல் கணவன்* (திருமுருகாற்றுப்படை)

உலக உயிர்கள் அனைத்தும் மகிழும் படியாகக் கதிரவன் கிழக்கே தோன்றுகிறான். அவன் மேருமலையைச் சுற்றி வருகின்றான். உலகோர் அனைவரும் அவனைப் புகழ்கின்றனர். அக்கதிரவனைப் போன்ற செம்மையான ஒளியையுடையவன் முருகன். தம்மைச் சார்ந்தவர்களைக் காப்பாற்றுகின்ற அழகையும் வலிமையையும் உடைய பாதங்களையுடையவன். தம்மைப் பகைத்தவர்களைத் தேய்க்கின்ற இடிபோன்ற பெரிய கைகளையுடையவன்.

**கடம்பமாலை மார்பினன்**

கார் காலத்தில் முதலில் பெய்த மழையில் தழைத்த பெரிய அடிமையுடைய செங்கடம்ப மரத்தில் இருந்து மலர்ந்த தேர்ச்சக்கரம் போன்ற வட்ட வடிவுடைய மலர்களால் கோத்த மாலையை மார்பில் முருகன் அணிந்திருந்தான். இதனையே

*தலைப்பெயல் தலைஇய தண்நறுங் கானத்து*
*இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து*
*உருள்பூந் தண்தார் புரளும் மார்பினன்* (திருமுருகாற்றுப்படை)

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

**சூரர மகளிர்**

மேல் உலக மகளிர் அழகால் பிறருக்கு அச்சத்தையும் உண்டாக்குவதால் அவர்களைச் சூரர மகளிர் என்று அழைத்தனர். அத்தகைய சூரர மகளிர் பெரிய மூங்கில்கள் உயர்ந்து வளர்ந்த மிக உயரமான மலையில் வாழ்கின்றனர்.

*மால்வரை நிவந்த சேண்உயர் வெற்பில்*

என்றும்,

*காந்தள் கண்ணி சூடிய சென்னியன்*
*மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கத்து*
*சுரும்பும் மூசாச் சுடர்ப்பூங் காந்தள்*
*பெருந்தண் கண்ணி மலைந்த சென்னியன்* (திருமுருகாற்றுப்படை)

என்றும் வரும் தொடர்கள் காட்டும். சூரர மகளிர் ஆடும் சோலை மிக உயரத்தில் இருப்பதால் வண்டுகளும் அங்குள்ள மலர்களைச் சென்று மொய்ப்பதில்லை. அத்தகைய உயர்ந்த மலையில் உள்ள மென்மையான காந்தள் மலர்களை ஒன்றாகக் கட்டிய தலை மாலையை அணிந்த தலையை உடையவன் முருகன்.

*சூரனை வென்ற வேலன்*
*பார்முதிர் பனிக்கடல் கலங்க உள்புக்கு*
*சூர்முதல் தடித்த சுடர்இலை நெடுவேல்* (திருமுருகாற்றுப்படை)

பாறைகள் மிகுந்த காரணத்தால் குளிர்ச்சியாக அமைந்தது கடல். அக்கடலினுள் சூரபன்மன் சென்று ஒளிந்தான், மாமரமாக நின்றான். அம்மாமரத்தை இரண்டாகப் பிளந்து சூரனைக் கொன்றது ஒளி பொருந்திய இலையையுடைய நீண்ட வேல். அவ்வேல் முருகனுக்குரியது.

**மாமரத்தை வெட்டிய செல்வன்**

சூரபன்மன் குதிரை முகத்தையும் மனித உடலையும் கொண்டுள்ள பெரிய வடிவினன். அதனால், '*இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை*' என்று சொல்கிறார். அத்தகைய சூரபன்மனை ஆறுவகையான வடிவங்களில் முருகன் சென்று அவனை அஞ்சச் செய்து அசுரர்களின் ஆற்றலை அடங்கச் செய்து மாமரமாக இருந்த சூரனை இரண்டாகப் பிளந்து கொன்று வெற்றி பெற்றான். அதற்குக் காரணமாக இருந்தது அறிய முடியாத புகழையுடைய சிவந்த வேல். அதனால், '*செவ்வேல் சேய்*' என்று அழைக்கப் பெறுகிறான்.

*இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை*
*அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி*
*அவுணர் நல்வலம் அடங்கக் கவிழ்இணர்*
*மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றத்து*
*எய்யா நல்இசை செவ்வேல் சேஎய்* (திருமுருகாற்றுப்படை)

இதில் முருகனின் சிறப்பு பற்றி அறிய முடிகிறது.

**வழிப்படுத்தல்**

*சேவடி படரும் செம்மல் உள்ளமொடு*
*நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்*
*செலவுநீ நயந்தனை ஆயின் பல உடன்*
*நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப*
*இன்னே பெறுதி நீ முன்னிய வினையே* - திருமுருகாற்றுப்படை

முருகனின் பாதங்கள் செம்மையானவை, சிவந்தவை. அந்தச் சேவடியை அடையும் உள்ளத்தோடு செல்கின்றவன் நல்ல செயல்களைச் செய்ய விரும்புகின்ற கொள்கையுடையவன். ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குச் செல்லுவதற்குரிய விருப்பத்தினையுடையவன். நல்ல உள்ளத்தை

உடையவன். நீ மனப்பூர்வமாக முருகனை அடைய விரும்பினால் இப்போதே அடையலாம். நீ நினைக்கின்ற செயலைச் செய்க.

**முடிவுரை**

முருகனுக்கு உள்ள பல பெயர்களில் ஆறுமுகங்களை உடைய சிறப்பு நோக்கிப் பொதுவாக ஆறுமுகன் என்று அழைக்கப்படுகிறான்.

1. உலகப் புற இருளை நீக்கும் கதிர்கள் பல கதிர்களையுடையது. முருகனுடைய ஒரு முகம் பல கதிர்களையுடைய கதிரவன் போன்று ஒளி பொருந்தியதாகக் குற்றமின்றிப் பிரகாசமாக விளங்குகிறது. முருகன் முகம் அவனைப் பார்த்தோரின், நினைத்தோரின் அக இருளை நீக்குகின்றது.

2. வேண்டியவர்களுக்கு வேண்டியனவற்றை மகிழ்ந்து கொடுப்பதாக ஒரு முகம் அமைகிறது. அவனை விரும்புகின்றவர்கள் அவனைப் பாராட்டிப்புகழ்ந்து துதிக்கும் போது மகிழ்ச்சியோடு விருப்பத்தோடு அவன் வேண்டியதைத் தருகிறான். அதற்கு ஒருமுகம் அமைகிறது.

3. அறவழியில் செல்லும் அந்தணர்கள் மந்திரங்களை ஒலித்து வேள்வி செய்கின்றார்கள். மரபு வழியில் அவ்வேள்வி அமைகின்றது. அவ்வேள்வியை ஏற்று நினைத்து மகிழ்கிறது ஒருமுகம்.

4. சந்திரன் போன்று தண்மையாகக் குளிர்ச்சியோடு எல்லாத் திசைகளையும் நோக்கி இனிமையைத் தருகின்றது ஒருமுகம். அம்முகம் விருப்பமுற உயிர்களை நாடுகின்றது.

5. தீமையையும் கொடுமையையும் கொண்ட பகைவர்களைச் சினத்தோடு அடக்கிப் போரில் வெல்லுகின்ற ஆற்றலைக் கொண்டுள்ளது ஒருமுகம். அம்முகம் சினத்தோடு காணப்பெறுகிறது. அம்முகத்தின் நோக்கம் தீமையை அழிப்பதே.

6. ஊலகிற்கு இன்ப வாழ்வை உணர்த்த வேண்டி குறமகளாகிய கொடி போன்ற அழகுடைய இடுப்பையுடைய வள்ளியோடு மகிழ்வாக முறுவல் செய்து கொண்டு ஒருமுகம் உள்ளது. இவ்வாறு ஆறுமுகங்களும் ஆறு செயல்களைச் செய்து கொண்டு இருக்கின்றன.

# முருகனின் வெற்றிவேல்

**பச்சையப்ப தேவராசன்**
2-27 கோயில் தெரு
இலளிகம்
தருமபுரி மாவட்டம்.

வேல், சாவா மூவாப் பேரின்ப வடிவமாயிலங்கும் பேரருட் சக்தியான முருகனின் ஞான சக்தி வடிவாக விளங்குகின்றது. வேல் வழிபாடு, அருணகரிநாதர் காலம் தொட்டு வளர்ந்து வருவதை நாம் உணர முடிகிறது. முருக பக்தர்கள் வடிவேலினையே வடிவேலனாக – முருகப் பெருமானாகக் கருதி வழிபடும் நிலையும் தற்போதும் நடைமுறையில் உள்ளது.

**வேலின் அமைப்பு**

வேலானது, இருளினை அகற்றக் கூடிய சுடர் ஒளிகளான தீ, சூரியன் மற்றும் சந்திரன் ஆகிய இயற்கைச் சக்திகளை விளக்கக்கூடிய ஒரு குறியீடு என்று அருணகிரிநாதர், தமது 'வேல்' வகுப்பில் குறிப்பிடுகின்றார்.

*"சுடர்ப்பரிதி ஒளிப்ப,நில ஒழுக்குமதி ஒளிப்ப அலை*
*அடக்குதழல் ஒளிப்ப, ஒளிர் ஒளிப்பிரபை வீசும்"*

அதாவது சூரியனது வெப்ப ஒளியும், சந்திரனது தண்ணொளியும், வடவைத் தீயின் கூடிய ஒளியும் வேலின் ஒளிக்கு முன் பயந்து ஒளிக்குந் தன்மையன. வேல் ஞானத்தின் திருவுருவம் ஆகையால், அந்த ஞானம் நீண்டு, அகன்று, கூர்மையாக உள்ள அறிவின் அடையாளமாகத் திகழ்கிறது. அறியாமையாகிய இருளை ஒழித்து, தூய இன்பமாகிய ஒளியை நிலை நாட்டுவது ஞானமானதால், முருகனின் கைவேல், கதிர்வேல் எனவும் பெயர் பெற்றது.

அகண்ட சித்சக்தியே வேல். ஞானம், அறிவு, வேல், சக்தி என்பவை ஒரு பொருள் கிளவிகள். அறிவு, ஆழம், அகலம், கூர்மை, என்று மூன்று இலக்கணங்களையுடையது. வேலின் அடிப்பகுதி ஆழம்; இடைப்பகுதி அகலம்; நுனிப்பகுதி கூர்மை. இந்த மூன்றும் உடையது வேல்.

'கல்லாடம்' என்ற நூலில் (72:1-8) திருப்பரங்குன்றத்தில் உறைகின்ற முருகனின் கையில் உள்ள வேலின் சிறப்பைப் பற்றி கீழ்க்கண்டவாறு விவரிக்கப்படுகிறது. "அந்த வேல், பிரமனைப் போல நான்முகங் கொண்டு, அவன் தாமரைப்பூவில் இருந்தாற் போன்று நல்ல உள்ளத்தினர் நெஞ்சில் வீற்றிருந்தது; திருமால் போல அரக்கரை அழித்து, நெய்யுண்டு இருந்தது. சிவபெருமானைப் போலத் திரிபுரம் எரியூட்டி, எவ்வுலகமும் தொழுது எழுதற்குக் காரணமாக இருந்தது".

**வேலின் தத்துவம்**

முருகனின் முக்கியமான ஆயுதம் சக்திவேல் ஆகும். அது தத்துவார்த்தமாக மனிதன் பெற வேண்டிய அறிவைக் குறிக்கின்றது. முருகன், தன் வேலால் சூரபத்மன், சிங்கமுகன், தாரகன் ஆகிய மூன்று அரக்கர்களையும் அழித்தான். இந்த மூவரையும் கொன்றது என்பது, இறைவன் மும்மலத்தையும் நீக்கினான் எனப் பொருள்படும். சூரபத்மன் ஆனவ மலத்தையும், சிங்க முகன் - கன்ம மலத்தையும், தாரகன் - மாயை என மும்மலத்தையும் நீக்குவதாக 'சூரசம்மாரம்' விழா தத்துவார்த்தமாகக் கொண்டாடப்படுகிறது. ஆக, முருகனின் வேல், அஞ்ஞானத்தை அழித்து, ஞானத்தை வழங்கும் சின்னமாக விளங்குகின்றது.

**வேலின் சிறப்பு**

மற்றெல்லா படைக்கலன்களை விடவும் வேலுக்குத் தனிச் சிறப்பு உண்டு. 'வெற்றி கொள்' எனும் பொருள் தருகின்ற "வெல்" என்ற வேர்ச்சொல்லின் அடிப்படையில் பிறந்ததே 'வேல்' ஆகும். முருகனின் சக்தி வேலானது, அடியார்களின் அச்சத்தைப் போக்கக் கூடியது; இருவினையைக் கடியக் கூடியது; அகம்பாவச் சூரனை வென்றடக்கி தெய்வத்தன்மை அருளுவது; நெஞ்சத்து இருளைப் போக்கிக் கவலையை நீக்குவது ஆகும்.

முருகனின் வேலானது, ஞான சக்தியைக் குறிப்பதாக திரு.வி.க. தமது 'முருகன் அல்லது அழகு' என்ற நூலில் கூறுகின்றார்.

வேலின் மற்றுமொரு சிறப்பு; முருகன் தாரகாசுரனை வதம் செய்யத் திருவுளம் கொண்டு, தம் திருக்கையில் அமைந்த வேலாயுதத்தை நோக்கி, "தாரகன் என்னும் அசுரனையும், சஞ்சலம் விளைக்கும் கிரவுஞ்ச மலையையும், ஒரு நொடிப் பொழுதினுள் பிளந்து உயிருண்டு, புறத்தே போந்து, பூதர்களையும் நூறாயிரத் தொன்பது வீரரையும் மீட்டு இங்கு வருக" என்று கூறி எய்தினார். அவ்வேல், முருகனின் கட்டளையை நிறைவேற்றி விட்டு, மீண்டும் முருகவேளின் திருக்கரத்தில் முன் போல் அமர்ந்தது. (ரா.பி. சேதுப்பிள்ளையின் 'வேலின் வெற்றி' பக் 53) வேல் எப்பொழுதும், முருகனின் கையில் தான் இருக்கும் என்பது விளங்குகிறது.

**முருகன் யாரிடமிருந்து வேலைப் பெற்றான்?**

முருகனைச் சார்ந்து விளங்கும் வடிவேல், ஞானசக்தியாகும். இதை உமையம்மை 9 நாட்கள் தவமிருந்து மிக்க சக்தியைத் திரட்டி, முருகனுக்குக் கொடுத்தாள் என்ற நம்பிக்கை மக்களிடையே நிலவுகிறது. ஆனால், கந்த புராணமோ, சிவபெருமான்தான் முருகனுக்கு வேலாயுதத்தைக் கொடுத்ததாக உரைக்கிறது. பலவேறு அண்டங்களில் உள்ள எவ்வுயிரையும் உண்ணவல்ல, எப்படைக்கும் தலைமையானதொரு தனச்சுடர்வேல் ஒன்றினைச் சிவபொருமான் முருகவேளிடம் கொடுத்தார் என்று கீழ்வரும் கந்தபுராணப்பாடல் விளக்குகின்றது.

*"ஆயதற் பின்னரேவின் மூதண்டத் னதம்பெரும் பூதமும் அடுவது*
*ஏய பல்லுயிரும் ஒருதலை முடிப்பது ஏவர்மேல் விடுக்கினும் அவர்தம்*
*மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி மன்னுயி ருண்பது எப்படைக்கும்*
*நாயகமாவது ஒரு தனிச்சுடர்வேல் நல்கியே மதலைகை கொடுத்தான்."*

வேலைக் கொடுத்தது சிவபொருமான்; அதனை வெற்றியுடன் செலுத்துவதற்கான சக்தியைமுருகனுக்குக் கொடுத்தவள் உமை' என்கிறார்புலவர் கீரன். (ஸ்ரீ கந்த புராணம் ப.44)

**வேலின் திறம்**

வேலின் வீரத்தினை திருமுருகாற்றுப் படையின் பின்னுள்ள கீழ்வரும் தனிப்பாடல் நன்கு விளக்குகின்றது.

*"வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறை மீட்ட*
*தீரவேல் செவ்வேள் திருக்கை வேல் - வாரி*
*குளித்தவேல் சூர்மார்புங் குன்றுந்*
*துளைத்த வேல் உண்டே துணை."*

*பாரதியார், வேலைப் பற்றி கூறுவது:*
*"வீரத் திருவிழிப் பார்வையும் - வெற்றி*
*வேலு மயிலும் என் முன்னின்றே – எந்த*
*நேரத்திலும் எனைக் காக்குமே"*

*"வெற்றி வடிவேலன் - அவனுடை*
*வீரத்தினைப் புகழ்வோம்.*
*சுற்றி நில்லாதே போ – பகையே*
*துள்ளி வருகுது வேல்."*

**முருகன் வேற்பதிகம்:-**

சேலம் சமயப்பிரசார நிலையம் வெளியீடான 'சத்ரு சங்கார வேல் பதிகம்' நூலில் உள்ள முருகன் வேற்பதிகப் பாடல்கள் ஐந்தும் வேலின் திறம் பற்றியே பேசுகின்றன. அவற்றில் இரண்டு மட்டும் இங்கே:

*"சக்திவேல், வாட்டம் தவிர்க்கும் வேல், இன்பருளும்*
*முக்திவேல், செந்தில் முதல்வன் வேல் - புத்தியுள்ளோர்*
*பன்னும்வேல், சான்றோர் பணியும்வேல், பல்கதிரின்*
*மின்னும் வேல், சண்முகன் கைவேல்"* (1)

*"இன்றை யிடர் போக்கும் இனியவேல் சின்னாட்கள்*
*சென்று வருந் துயரம் தீர்க்கும் வேல் - துன்று பொய்*
*வஞ்சனைகள் அற்றார் வணங்குவேல் மாற்றலரை*
*வெஞ்சமர்க்கண் வீட்டு மயில் வேல்"* (5)

**சத்ருசங்காரவேல் பதிகம்**

அதே நூலில் பதிப்பிக்கப்பட்டுள்ள "சத்ரு சங்காரவேல் பதிகம்" 10 பாடல்களும் வேலின் சிறப்பையே பகலுகின்றன. அந்த பத்து பாடல்களின் இறுதி வரிகள்

*"தர்க்கமிட நாடினரைக் குத்தி எதிர் ஆடிவிடும்*
*சத்ரு சங்கார வேலே"*

என்று முடிகின்றன.

**வேல் அலங்காரம்**

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அருளிய வேல் அலங்காரத்தின் முதல் பாடலும் இறுதிப்பாடலும் வருமாறு:-

*"திருவருள் சக்தி வடிவான வேற்படை செந்நிற வேள்*
*ஒருவனுக்கே சொந்தமென்பார் உண்டாயினும் உற்றுணரும்*
*பருவமுள்ளார்க் கெண்ணில் வேதாகமங்கள் பகர்ந்த தெய்வத்து*
*உருவம் எல்லாம் அது தானா விளங்கிடும் உண்மையிதே."*

*"மாலே யனையவர் கொண்டாடும் சண்முக வானவன் கை*
*வேலே உனக்கொரு விண்ணப்பம் என்னை வெறு மனத்தோர்*
*பாலே அலைந்து தவயாமல் காத்துப் பழைய தொண்டர்*
*போலே மகிழவைத்து என் கரத்தாற் செய்யும் பூசை கொள்ளே"*

**கவசங்கள்**

கவசங்கள் என்றாலே, பாதுகாக்கும் கருவியைக் குறிக்கும். ஒவ்வொரு தெய்வத்தின் மீதும் பல மகான்கள் கவசங்கள் பாடியுள்ளனர். அவ்வாறு முருகன் மீதும் அடியார்கள் பலர் கவசங்கள் பாடியுள்ளனர். இங்கு தேவராய சுவாமிகள் பாடிய கந்த சஷ்டி கவசத்தையும், பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அருளிய சண்முக கவசத்தை மட்டும் எடுத்துக் கொள்கின்றோம்.

கந்தர் சஷ்டி கவசத்தில் 65வது வரியில் "அடியேன் வதனம் அழகுவேல் காக்க" என்று துவங்கி 103வது வரியில் "காக்க காக்க கனகவேல் காக்க" என்பது வரை, 36 வகையான வேல்களின் பெயரைச் சொல்லி, அவை ஒவ்வொன்றும் நமது ஒவ்வொரு உறுப்பையும் "காக்க காக்க" என்று பிரார்த்திக்கின்றார்.

அதைப்போலவே, சண்முக கவசத்தில் உள்ள 30 பாடல்களில் 10 –வது பாடலில் இருந்து 26வது பாடல்வரை 16 வகையான பேர்கள் கொண்ட வேல்கள் நமது உறுப்புக்களை "காக்க காக்க" என்று வேண்டுகின்றார்.

இதிலிருந்து, அடியார்கள் வடிவேலினையே வடிவேலனாகக் கருதி வழிபடும் வழக்கம் தொன்று தொட்டு நிலவி வருகிறது என்பது புலனாகிறது.

**அருணகிரிநாதர் வணங்கும் வேல்**

அருணகிரிநாதர் தாம் அருளியுள்ள திருப்புகழ், கந்தர் அநுபூதி, கந்தர் அலங்காரம், வேல்வகுப்பு, வேல்வாங்கு வகுப்பு, பூத வேதாள வகுப்பு, கந்தர் அந்தாதி ஆகியயாவற்றிலும் வேலின் சிறப்பை மிக அழகாக எடுத்துரைக்கின்றார். அவற்றில் சிலவற்றை மட்டும் பார்ப்போம்.

**1. கந்தர் அநுபூதி**

கந்தர் அநுபூதியின் முதல் பாடலிலேயே அருணகிரிநாதர்,

*"ஆடும்பரி வேல் அணிசேவல் எனப்*
*பாடும் பணியே பணியாய் அருள்வாய்"*

என்று மயில், வேல், சேவல் என்ற மூன்றினை முருகனைக் குறிக்கும் பொழுது குறிப்பிடுகின்றார். மயிலை ஆடும்பரி என்றும் சேவலை அணிசேவல் என்றும் கூறிய அவர், வேலை மட்டும் 'வேல்' என்று மட்டும் குறிப்பிட்டுள்ளார். ஆனால் அதன் பிறகு பல பாடல்களில் வேலினது சிறப்பை தனிவேல், அயில்வேல், கூர்வேல், திகழ்வேல், சுடர்வேல் என்று 41 இடங்களில் வேலினது பெருமையைக் கூறுகின்றார். சூரபத்மன் சேவலும் மயிலுமாக மாறியதால், மயிலும் சேவலும் அசுர சம்பந்தம் உடையவை. சேவலையும் மயிலையும் பார்க்க, வேல் மிகவும் பெருமையுடையது. ஒருபுறம் மயிலும், மறுபுறம் சேவலும் நிற்க, நடுவில் நடு நாயகமாக நின்று வேல் அருள் புரிகின்றது.

**2. பூதவேதாள வகுப்பு**

சூரியன் பன்னிருவர் வடிவையும் உருக்கி வடிவெடுத்தாற் போன்ற மாசற்ற பேரொளியைத் தன்னகத்தே கொண்டது வேல் என்பதை, "திவாகரர் வடிவை உருக்கி எடுத்த திருக்கை வேல்" என்று பாடுகின்றார்.

**3. கந்தர் அலங்காரம்**

அருணகரிநாதர் தாம் அனுட்டித்ததும் உலகோருக்கு உபதேசித்ததுமான ஒரு விரதம் வேலின் தியானமே.

*"தேரணியிட்டுப் புரமெரித் தான்மகன் செங்கையில் வேற்*
*கூரணி யிட்டணு வாகிக் கிரௌஞ்சுங் குலைந்தரக்கர்*
*நேரணி யிட்டு வளைந்த கடகம் நெளிந்தது சூர்ப்*
*பேரணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே'* (கந்.அலங். 3)

இந்த பாடலில் முருகப்பெருமானின் வேலின் பெருமையைக் கூற வந்த சுவாமிகள், முப்புரம் எரித்த சிவபெருமானின் பெருமையைக் கூறி, அதன்பிறகு முருகனின் வேலின் சிறப்பை எணடுத்துரைக்கின்றார்

**வேலின் பஞ்சகிருதிதியம்**

"கண்ணாடியில் தடம் கண்ட வேல்" (திருப். 908) ஆதலின், தோற்றமும், வீரவாகுத் தேவரையும் நக்கீரரையும் காத்து அளித்த காரணத்தால் திதியும், சூர சங்காரம் செய்ததால் சங்காரமும், அடியாரிடத்து வெம்மையை மறைத்துத் தண்ணருள் காட்டியும், பகைவரிடத்துத் தண்மையை மறைத்து வெம்மையைக் காட்டியும் ஒழுகுதலால் திரோபவமும், அருணகிரியார் நாவிலும் குமரகுருபரர் நாவிலும் பொறித்து நலந் தந்த காரணத்தால் அனுக்கிரகமும் ஆகப் பஞ்ச கிருத்திய சக்தி வேலிடத்து உண்டு என்பது விளக்கமாகின்றது.

(திருப்புகழ் எண்களும் உரையும் வேலின் பஞ்ச கிருத்தியமும் உமா பதிப்பகம் வெளியிட்ட" திருப்புகழ் மூலமும் உரையும்" – உரையாசிரியர் தணிகை மணி வ.சு.செங்கல்வராய பிள்ளை)

முருகனின் வெற்றிவேலை, வடிவேலனாகவே நினைத்து வழிபடும் வழக்கம் தொன்று தொட்டு நிலவி வருவது புலனாகிறது. அத்துடன், வினை தீர்க்கும் மருந்தாக வேல் முருக வழிபாட்டில் முக்கிய இடம் பெற்றுள்ளதையும் அறியமுடிகிறது. இங்ஙனம் வேலின் பெருமையையும் சிறப்பையும் நன்கு உணர்ந்தே அறிஞர்கள் 'வேல்' என்ற பெயரைத் தனித்தோ, தங்கவேல், கதிர்வேல், ஞானவேல் என்று அடைமொழி கொடுத்தோ மக்களுக்குச் சூட்டுகின்றனர்.

# முருகப் பெருமானின் தலப்புராணங்கள்

ச. பத்மப்ரியா,
ஆய்வியல் நிறைஞர், இசைத்துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

தமிழ்க் கடவுள் முருகப் பெருமான் வீற்றிருக்கும் தலங்கள் பல இருப்பினும் கொங்கு நாட்டில் உள்ள பிரசித்தி பெற்ற தலங்களின் புராணங்களையும் அதன் பிணிதீர்க்கும் சிறப்பையும் இக்கட்டுரையில் காண்போம். மாவட்டங்களின் வாரியாக பிரித்து இக்கட்டுரையில் கூறப்பட்டுள்ளது.

**கோவை மாவட்டம்**

மருதமலையில் வீற்றிருக்கும் சுப்பிரமணிய சுவாமி மருதாசல மூர்த்தியாக உள்ளார். இதன் தல விருட்சமாக மருத மரம் உள்ளது. தல தீர்த்தமாக மருது சுனை உள்ளது. மருத வரை என்பது புராணப் பெயர் ஆகும். இதன் சிறப்பு திருமண தோஷம், நாக தோஷம் நீங்கவும், விஷபூச்சி கடிபட்டவர்கள் இத்தல விபூதியை நீரில் கரைத்து சாப்பிட நோய் குணமாகும். தோல் வியாதி குணமாகும் தலமாக இது விளங்குகிறது. மனநிம்மதி கிடைக்க பாம்பாட்டிச் சித்தரை வழிபடலாம்.

சரவணம்பட்டியில் - ரத்தினகிரி முருகன் பால முருகன் என்ற பெயரில் அமர்ந்துள்ளார். இதனுடைய சிறப்பு யாதெனில் சுயம்பு விநாயகராக அமர்ந்திருக்கிறார். ஆறுமுக தீர்த்தம் இதனுடைய தல தீர்த்தமாக உள்ளது. விரும்பிய வாழ்க்கைத் துணை அமைய, புத்திர பாக்கியம் ஏற்பட, பயம், தீராத நோய்கள் விலக, மனக்குறை விலகப் பெறலாம். பூ பறிக்கும் சடங்கு இங்கு விசேஷமாக நடத்தப்படுகிறது. தங்கள் கையால் மலர்களைப் பறித்து இறைவனுக்குச் சூட்ட விரும்பிய துணை கிடைக்கும் என்பது ஐதீகம்.

ஊதியூர் மலையில் உத்தண்ட வேலாயுத ஸ்வாமி மூர்த்தியாக உள்ளார். கொங்கண சித்தர் தங்கி தவம் செய்தார். அவர் ஊதி ஊதி பொன்வேலை செய்தார். மட்டமான உலோகங்களுடன் பச்சிலை சாற்றினைக் கலந்து செம்பொன் வேலை செய்ததால் ஊதியூர் என்று ஆனது. இன்றும் மண்குழாய்கள் காணப்படுகின்றன. இதன் சிறப்பு யாதெனில் வளமான வாழ்வுடனும் செல்வ செழிப்புடனும் வாழலாம்.

கிணத்துக்கடவு சுவாமி வேலாயுத மூர்த்தியாக உள்ளார். மாங்கனிக்காக கோபங்கொண்டு பழனி செல்லும்போது இங்குள்ள பாறையின்மேல் ஒரு காலை பதித்தார். மருத்துவ மூலிகை நிரம்பிய மலை. மைசூர் திவான் கால்புண் குணப்படுத்திய மலை கல்வியில் சிறந்து விளங்கலாம் என்பது ஐதீகம். செஞ்சேரி மலையில் வேலாயுத ஸ்வாமி மூர்த்தியாக உள்ளார். தல தீர்த்தமாக சைலோதக தீர்த்தம், தியான தீர்த்தம், சரஸ்வதி தீர்த்தம்,

லட்சுமி தீர்த்தம், கானாச்சுனை தீர்த்தம் உள்ளது. பூர்வ புண்ணிய தோஷம் உள்ளவர்கள் 11 பௌர்ணமி தினத்தில் தாமரை மலர் மாலை சாற்றி மாதுளம்பழங்கள் படைத்து, நெய் தீபமேற்றி வணங்க சாபம் தீரும். புதிதாக தொழில் தொடங்க இங்குப் பூ கேட்டல் சிறப்பு வாய்ந்தது. கஷ்டத்திற்கு ஆலோசனை சொல்பவராக இருக்கிறார். மனநோய் குணமடையக்கூடிய தலமாக விளங்குகிறது.

குமரன் கோட்டத்தில் ஸ்வாமிநாதர் மூர்த்தியாக உள்ளார். அறியாமை அகல, வலிமை ஊக்கம் பெற, மனதில் வைராக்கியம் ஏற்பட, தீமை அகல, மகிழ்ச்சி பெருக அறுபடை முருகனே ஒரே இடத்தில் இருப்பது சிறப்பு. ஒரே கல்லினால் ஆன நவக்கிரஹம் சக்தி வாய்ந்தது

அனுவாவி சுப்ரமணியர் கோவிலில் சுப்ரமணியர் சுயம்பு மூர்த்தியாக உள்ளார். கானாச்சுனை தல தீர்த்தமாக உள்ளது. ஊற்று நீரின் ஆரம்பம் எங்கு உள்ளது எனக் கண்டறிய முடியவில்லை. ஆஞ்சனேயர் சஞ்சீவி மலையை எடுத்துச் சென்றபோது வழியில் ஏற்பட்ட தாகத்தைப் போக்கிய சுனையாகும். இதன் நேர் தென்புறம் மருதமலை. அனுவாவி சுப்ரமணியர் கோவிலில் ஏறி இறங்கினால் மருதமலைக்குச் செல்லலாம். இதன் சிறப்பு குழந்தை பாக்கியம். சூரிய உதயத்திற்கு முன் சில நாட்கள் இங்கு குளித்து வழிபட்டு வந்தால் மனநோய், தோல் நோய் அகலும்.

சொர்ண மலையில் முருகன் குழந்தை வேலாயுத ஸ்வாமியாக உள்ளார். கோவை மாவட்டத்தில் காளம்பாளையம் வட்டத்தில் உள்ளது. இன்றும் சித்தர்கள் நடமாட்டம் உள்ளது. செல்வம் புத்திரபேறு கிடைக்கும். இம்மலையில் தூய காற்றும் அமைதியும் வலம் வரும் போது பெற முடிகிறது. மாணவர்கள் இம்மலை முருகனை வழிபட கல்வியில் சிறப்படையவர்.

அன்னூர் வட்டத்தில் உள்ள குமரன் குன்றில் உள்ள முருகர் கல்யாண சுப்ரமணிய ஸ்வாமியாக உள்ளார். வில்வம், வேம்பு, அரசு, காட்டு மல்லி போன்றவை தல விருட்சமாக உள்ளது. காலை மாலை இரு வேளைகளிலும் இறைவனைப் பூஜித்து வர உடல் நோய் மன நோய் நீங்கும். குரு இருந்த மலையில் முருகன் குழந்தை வேலாயுத ஸ்வாமியாக உள்ளார். காணாச்சுனை தலத்தீர்த்தமாக உள்ளது. சுருநொச்சி என்ற மூலிகைச் செடி இங்கு உள்ளது. குழந்தை பாக்கியம், திருமணத்தடை போக்குதல், திருஷ்டி நீக்குதல் ஆகியவை இம்மலையின் சிறப்பு.

**நீலகிரி மாவட்டம்**

மஞ்சூர் வட்டத்தில் தண்டாயுதபாணி ஸ்வாமி மூர்த்தியாக உள்ளார். அரச மரம் தல விருட்சமாக உள்ளது. இவருடைய அலங்காரத்தை முதல்நாள் இரவே குருநாதர் ஸ்ரீகிருஷ்ணா நந்தாஜி கனவில் தோன்றி கூறுவார். இந்த ஆலயத்தின் சிறப்பு நோய் நீக்குதல், ஆயுள் பலம், கல்வி, செல்வ செழிப்பு போன்றவையாகும்.

எல்க் மலையில் முருகன் பாலதண்டாயுதபாணியாக உள்ளார். நீல நாராயண தீர்த்தம் தல தீர்த்தமாகும். மலேசியாவில் உள்ள பத்து மலை முருகன் போல இவரும் உள்ளார். மூச்சுத் திணறல், இரத்தக் கொதிப்பு, கை, கால், மூட்டு வலி பிரச்சனைகள் தீரும்.

**திருப்பூர் மாவட்டம்**

திருமுருகன் பூண்டியில் முருகன் திருமுருகநாத ஸ்வாமியாக உள்ளார். முருக தீர்த்தம், பிரம்ம தீர்த்தம், மகாமக தீர்த்தம், ஞான தீர்த்தம், துர்வாஸ தீர்த்தம், அக்னி தீர்த்தம், இந்திர தீர்த்தம் என ஒன்பது வகையான தீர்த்தங்கள் இருந்தன. தற்போது முருக தீர்த்தம், பிரம்ம தீர்த்தம், மகாமக தீர்த்தம், ஞான தீர்த்தம் ஆகியன கிணற்று வடிவில் உள்ளன. மனநோய் உள்ளவர்கள் அரை மண்டலம் காலை மாலை நேரங்களில் நீராடி வழிபட குணமாகும்.

சிவன் மலையில் முருகன் சுப்பிரமணிய ஸ்வாமியாக உள்ளார். தொரட்டி மரம் தல விருட்சமாக உள்ளது. காசி தீர்த்தம் தல தீர்த்தமாக உள்ளது. திருநள்ளாறு சூரியனார் கோவில்களை வழிபட்ட புண்ணியம் பெற முடிகிறது. சிவ +அசலம் +பதி = சிவாசலபதியாக உள்ளார். தீராத காய்ச்சலுக்கு தீர்வு காண்பவராக உள்ளார். சுரலோக நாயகி ஸமேத ஜுரஹரேஸ்வரராக வீற்றிருக்கிறார். காய்ச்சல் வந்தவர்கள் மிளகு ரசம் வைத்து இங்கு வந்து பூஜை செய்தால் காய்ச்சல் நீங்கும்.

வட்டமலையில் முருகன் முத்துக்குமார ஸ்வாமியாக உள்ளார். சரவண தீர்த்தம் தல தீர்த்தமாக உள்ளது. செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் செவ்வரளி மாலை சாற்றி வழிபட நிச்சயம் பலனுண்டு. இடி விழுந்த சுனையானதால் சுவையாக உள்ளது.

**ஈரோடு மாவட்டம்**

மலையப்பாளையம் உதயகிரியில் முருகன் முத்துவேலாயுத ஸ்வாமியாக உள்ளார். சரவணப்பொய்கை தீர்த்தம் தல தீர்த்தமாக உள்ளது. இந்த தீர்த்தத்தில் பொட்டுக்கடலை வெல்லம் இட்டு வழிபட தேமல், தோல்வியாதி நீங்கும். சுகப்பிரசவம் நடைபெறும்.

பச்சைமலையில் முருகன் சண்முகநாதராக உள்ளார். ருத்ராபிஷேகம் செய்து அர்ச்சனை செய்து வந்தால் கல்வி, கேள்விகளில் சிறப்பு, ஐஸ்வர்யம் கிடைக்கும். கடன் தொல்லை தீரும்.

பவளமலையில் முருகன் முத்துக்குமார ஸ்வாமியாக உள்ளார். இங்குச் செவ்வாய் தோறும் திரிசதார்ச்சனை நடைபெறும். ஒரு முகத்திற்கு ஐம்பது அர்ச்சனை நடைபெறுகிறது. அதுபோல ஆறு முகத்திற்கு முன்னூறு அர்ச்சனை செய்து வழிபட அரசியல் வெற்றி, தொழில் அபார வளர்ச்சி, எதிரியை முறியடித்தல், செவ்வாய் தோஷம் போக்குதல் போன்றவை நடைபெறும்.

திருச்செங்கோட்டில் முருகன் செங்கோட்டு வேலவராக காட்சி தருகிறார். இங்குத் தேவ தீர்த்தம், கணபதி தீர்த்தம், நாக தீர்த்தம், சிவ தீர்த்தம், குமார தீர்த்தம், பாபநாச தீர்த்தம் ஆகியன தல தீர்த்தங்களாக உள்ளன. பாபநாச தீர்த்தத்தில் திடமதி என்னும் அந்தணனை பேய் ஒன்று பிடித்த போது அகத்திய முனிவரின் அறிவுரைப்படி அவன் இத்தீர்த்தத்தில் நீராடி தன் பிணி நீங்கப் பெற்றான். சென்னிமலையில் முருகன் சுப்பிரமணிய ஸ்வாமியாக உள்ளார். புளியமரம் தல விருட்சமாக உள்ளது. புஷ்பகிரி, கரைகிரி, மகுடகிரி என வேறு பெயர்களும் உண்டு. கந்தசஷ்டி கவசம் அரங்கேறிய தலம். திருமஞ்சனத் தீர்த்தம் தினமும் பொதி காளைகள் மூலம் படிக்கட்டு வழியாக எடுத்துவந்து அபிஷேகம் நடைபெறுகிறது. மாமாங்க தீர்த்தம் பன்னிரெண்டு ஆண்டுக்கு ஒரு முறை கோடை காலத்திலும் கூட தீர்த்த விநாயகர் முன்பு வழிந்தோடும். இங்கு இருபது தீர்த்தங்கள் உள்ளன. சிவாலய சோழன் உடற்பிணி நீங்கிய தலம். விவசாய செழிப்பு, ஆயள் பலம், நோய் தீர்த்தல் இத்தலத்தின் சிறப்புகள்.

கதித்த மலையில் முருகன் வெற்றி வேலாயுதனாக உள்ளார். இங்கு முருகன் அகத்தியரின் பூஜைக்கு நீர் தேவைப்படும் நேரத்தில் தன் வேலை தரையில் குத்தி ஒரு ஊற்று ஏற்படுத்தி நீரை வரவழைத்தான். இன்றும் ஊற்று வற்றாமல் இருக்கிறது. குழியில் இருந்து ஊற்று தோன்றியதால் ஊத்துக்குளி என்ற பெயர் வந்தது. திருமணத்தடை, பிரிந்த தம்பதியர் ஒன்று சேர்தல் இத்தலத்தின் சிறப்பு.

கொருமடுவு மலையில் முருகன் பாலதண்டாயுதபாணியாக உள்ளார். இங்கு குடும்ப ஒற்றுமைக்காகவும், மன அமைதிக்காகவும், தொழில் வளத்திற்காகவும் பிரார்த்தனை செய்யப்படுகிறது. திருவாரூர் போல பிரம்மஹத்தி தோஷம் நீக்கும் தலம். திண்டல் முருகன் வேலாயுத ஸ்வாமியாக உள்ளார். தீபஸ்தம்பம் வெளியே உள்ள தலம். செவ்வாய், வெள்ளி கிழமைகளில் எலுமிச்சை பழம் வைத்து வழிபட எண்ணிய எண்ணம் நிறைவேறும். புதிய வாகனம் வாங்குபவர்கள் இங்கு வந்து வழிபட்டு செல்கின்றனர். இடும்பன் மூலம் முருகனின் அருளை பெற்றுக் கொள்வது வழக்கமாக உள்ளது.

**சேலம் மாவட்டம்**

குமரகிரியில் முருகன் தண்டாயுதபாணியாக உள்ளார். குமர தீர்த்தம் தல தீர்த்தமாக உள்ளது. விபத்திற்கு பூஜை செய்யும் தலமாக உள்ளது. விபத்தில் அடிபட்டவர்களுக்கு திரிசதை அர்ச்சனை செய்து விருச்சிப் பூவில் பன்னீர், சந்தனம் கலந்து பூஜை செய்து வணங்கினால் குணமடைவர். படிப்பூஜை செய்து வந்தால் ஆயள் நீளும். மாம்பழம் நைவேத்தியம் படைத்தால் புத்திர பாக்கியம் கிடைக்கும்.

வடசென்னி மலையில் முருகன் பாலசுப்ரமணியராக உள்ளார். வசிஷ்ட தீர்த்தம் தல தீர்த்தமாக உள்ளது. ஒரே தலத்தில் மூன்று கோல வடிவில் அருள்பாலிக்கிறார். குழந்தை வடிவத்தில் பாலசுப்ரமணியராகவும், துறவு

வடிவத்தில் தண்டாயுதபாணியாகவும், குடும்பநிலை வடிவத்தில் உற்சவர் வள்ளி தெய்வானை சமேதராகவும் உள்ளார். மலைப்பாதையில் உள்ள அவ்வையார் சிலை அருகில் கல் வைத்து வழிபட வீடுகட்ட நினைப்பவர்களுக்கு வீடுகட்டும் பாக்கியம் கிடைக்கும்.

ஊத்து மலையில் முருகன் பாலசுப்ரமணியராக வீற்றிருக்கிறார். அகத்தியர் அகத்திய நூலை எழுதிய இடம். தல விருட்சமாக வில்வ மரம் உள்ளது. இத்தலம் வியாபார மேன்மைக்கு ஏற்றதாக உள்ளது.

கஞ்ச மலையில் முருகன் பாலமுருகனாக வீற்றிருக்கிறார். கரு நெல்லி மரம் தல விருட்சமாக உள்ளது. தங்கம், இரும்பு, பூ வியாபாரம் செழிப்புடன் விளங்கும். பதினைந்து வகையான நோய்கள், மயக்கம், மனோவியாதிகளை குணப்படுத்தும் தலமாக விளங்குகிறது.

**நாமக்கல் மாவட்டம்**

மோகனூர் மலையில் முருகன் பாலசுப்ரமணியராக வீற்றிருக்கிறார். பழநி போலவே மேற்கு நோக்கி அமைப்பில் உள்ளது. இங்கு பிரார்த்தனை செய்ய அறிவு, தன்னம்பிக்கையுடன் செயலாற்றும் குழந்தை பிறக்கும்.

பேளுக்குறிச்சி ஆலயத்தில் முருகன் பழநி ஆண்டவராக உள்ளார். யானைப்பாழி தீர்த்தம் தல தீர்த்தமாக உள்ளது. இத்தீர்த்தத்தில் நீராடி வழிபட தோல், எலும்பு நோய் தீரும். இத்தீர்த்தம் இரும்புச் சத்து நிறைந்ததாக உள்ளது. பிறப்பை வேட்டையாடி முக்தி அளிக்கும் இடம்.

அலவாய்ப்பட்டி கொங்கண மலையில் முருகன் பாலசுப்ரமணிய ஸ்வாமியாக உள்ளார். கார்த்திகை மாதம் வழிபட குடும்பப் பிரச்சனை தீரும். பிரிந்தவர் ஒன்று சேர்வர். பூப்படைதல் பிரச்சனை, கர்ப்பபை கோளாறு பாதிப்பு தீர சுனை நீரை பருகுவது பலன் தரும்.

குருசாமிபாளையம் ஆலயத்தில் முருகன் சிவசுப்ரமணிய ஸ்வாமியாக உள்ளார். ஒன்பது வெள்ளி செவ்வாய்கிழமைகளில் நெய் தீபமேற்றி வழிபட தோஷம் நீங்கும். வயிறு சம்பந்தமான பிரச்சனை தீரும்.

**முடிவுரை**

கொங்கு மண்டலத்திலுள்ள முருகன் ஆலயங்கள் நோய் தீர்க்கும் தலங்களாகவும் உள்ளது. எனவே இத்தலங்களை வழிபட்டு அருணகிரி நாதர் பாடிய திருப்புகழ் பாடல்களை பாடி நாம் நோயின்றி வாழலாம்.

**குறிப்புகள்**

1. முரளி ஜி.ச. தமிழக சிவத்தலங்கள், சதுரா பதிப்பகம், சோமங்கலம்.
2. லட்சுமிபதி ர. - தினமலர் கோயில்கள், வார இதழ், 2017.

# ஐங்குறுநூற்றில் வேலன் வெறியாடல்

த. பரிமளா
முனைவர் பட்ட ஆய்வாளர்,
இராணி மேரிக் கல்லூரி, சென்னை.

சங்க இலக்கியங்கள் பண்டைய தமிழரின் வாழ்வைக் காட்டும் கண்ணாடியாகும். தமிழர் சங்க காலத்தில் வாழ்ந்த முறை, வீரம், கொடை, போர்ச் செய்திகள், வணங்கிய தெய்வங்கள், வணங்கிய முறை, கொடைத்திறம், வீரம், காதல் வாழ்க்கை போன்றவற்றைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறியலாம். எட்டுத்தொயையில் ஒன்றான ஐங்குறுநூற்றின் வழி "வேலன் வெறியாடல்" எனும் நிகழ்வின் செய்திகளை இக்கட்டுரையில் காணலாம்.

**ஐங்குறுநூறு**

ஐங்குறுநூறு கடைச்சங்க கால நூலாகும். இது காதல் ஒழுக்கத்தைப் பாடும் அக நூலாகும். அதன்கண் மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்ற வரிசையில் திணைக்கு நூறு வீதம் ஐந்து திணைக்கும் 500 பாடல்கள் அமைந்துள்ளன.

ஐந்து திணைகளையும் ஓரம் போகியார், அம்மூவனார், கபிலர், ஓதலாந்தையார், பேயனார் என்ற ஐவர் முறையே பாடியுள்ளனர்.

ஐங்குறுநூற்றில் முருகப் பெருமானை வழிபடும் நிகழ்வு குமரன் இருக்கும் இடமான குறிஞ்சியிலும், மருதத்திலும் இடம்பெற்றுள்ளது.

**வேலன் வெறியாடல்**

"வெறி" என்ற சொல் மணம், உணர்ச்சிக் கொந்தளிப்பு ஆகிய பொருள்களைக் குறிக்கும். மணம் மிக்க முருகனுக்கு மணப்பொருட்களைப் பரப்பி மறியாட்டை அறுத்துக் கொண்டாடுவது "வெறி" என்றும், "வெறியாட்டு" என்றும், "வெறியயர்தல்" என்றும் கூறப்பட்டது.

குறிஞ்சி நிலத் தெய்வமான முருகனுக்குக் குறிஞ்சித் திணையிலேயே அதிகளவு "வேலன் வெறியாடல்" நிகழ்வு நடத்தப்படுகிறது.

வெறியாட்டு நிகழ்ச்சியை முன்னின்று நிகழ்த்துபவன் 'வேலன்' என்று கூறப்படுபவன். முருகனின் வேலைக் கையில் உடையவன். இவன் வயதில் முதிர்ந்தவன் இதனை,

*"பொய்யா மரபின் ஊர்முது வேலன்*
*கழங்கு மெய்ப் படுத்துக் கன்னம் தூக்கி"* (ஐங். 245)

எனும் பாடல் வரியால் அறியலாம். வேலன் ஊருக்கு ஒருவனாய் விளங்குபவன். அவன் கிழங்குப் போட்டுப் பார்த்து அதன் மேல் தெய்வம் வரச்செய்து

பிறகு, அக்கழற்காய்க்குக் கன்னம் என்ற தாயத்தை அணிவித்து வெறியாடி, இவளை வருத்தியவன் முருகன் என்பான். இதனை,

*"முருகென மொழியு மாயின்"* (ஐங்.247)

எனும் பாடல் வரியால் அறியலாம். அக்காலத்தில் ஊர் மக்கள் வேலன் சொல்வது உண்மை என்று நம்பினர். "வெறியாடல்" என்பது சங்ககால நம்பிக்கையும், மரபுமாகும்.

**கழற்காயைக் கொண்டு வேலன் குறி கூறும் முறை**

வேலன் தலையில் ஆடையைக் கட்டிக் கொள்வான். கையில் வளைந்த கொம்பு ஒன்றை வைத்திருப்பான். அக்கொம்பில் பல கிளைகள் இருக்கும். ஒவ்வொரு கிளையிலும் ஒரு பை தொங்கும். அப்பைகளில், கழற்காய்களை அள்ளி எடுத்து முருகன் முன் வைப்பான். காய்களின் எண்ணிக்கையைக் கணக்கிட்டு குறி சொல்லுவான். குறி சொல்லும் இடத்தில் பழைய மணலை மாற்றிப் புதுமணல் பரப்பப்படும். இதனை,

*"பெய்ம்மணல் முற்றம் கவின்பெற இயற்றி"* (ஐங். 248)

எனும் ஐங்குறுநூற்றின் பாடல் வரியால் அறியலாம். மேலும் "கன்னந்தூக்கல்" எனும் முறையும் உள்ளது. அதாவது கன்னம் என்பது மந்திரத்தகடு உள்ளே வைத்த தாயத்து ஆகும். இதனை தலைவியின் கைகளில் கட்டி விடுவது "கன்னந் தூக்கல்" எனப்படும். இச்செய்தியை,

*"பொன்னகர் வரைப்பின் கன்னம் தூக்கி"* (ஐங்.247)

எனும் பாடல்வரி உணர்த்துகிறது.

**வெறியாடல் நிகழ்த்தப்பட காரணம்**

தலைவி காதல் நோயால் மேனி வேறுபடுவர். உடல் மெலிவர். தலைவியின் உடல் மெலிவினைக் கண்ட பெற்றோர் அவளை வீட்டைவிட்டு வெளியே போகவிடாமல், வீட்டுக்குள் அடக்கி வைத்தனர். எனவே அவள் தலைவனைக் காணாது "பிரிவுத் துயரால்" மேலும் மெலிந்தாள். பெற்றோர் இது தெய்வக் கோளாறு போலும் என கருதி அருளாடும் வேலனை அழைத்து "வெறியாட்டிற்கு" ஏற்பாடு செய்வர். இந்நிகழ்வு குறிஞ்சித் திணைக் கடவுளான முருகனுக்குக் குறிஞ்சியிலே மட்டுமன்றி, மருதத் திணையிலும் நிகழ்த்தப்படுகிறது. இதனை,

*"உண்துறை அணங்குஇவள் உறுநோய் ஆயின்*
*தண்சேறு கள்வன் வரிக்கும் ஊரற்கு"* (ஐங்.28)

எனும் மருதத்திணை பாடல் வரியால் அறியலாம்.

**வெறியாடலை விலக்கி "அறத்தோடு நிற்கும்" தோழி**

நற்றாயும், செவிலத்தாயும் தலைவியின் மெலிவைக் கண்டு "வேலன் வெறியாடல்" நிகழ்த்த நினைத்தனர், வெறியாடலைத் தடுக்க நினைக்கும் தோழி, அன்னையே! தலைவியின் மெலிவுக்குக் காரணம் காதல் நோயாகும்.

இதனை அறியாதவேலன் மலைக் கடவுளாகிய முருகனை வாழ்த்தி வணங்கி வெறியயர்தலால், அந்நோய் தீரும் என்கிறான். ஆனால் தலைவியின் நோய்க்கு மருந்து வெறியன்று என்று கூறி வெறியாடலைத் தடுத்து, தலைவியின் காதலைச் செவிலிக்கு உணர்த்தி அறத்தோடு நிற்கிறாள். இதனை,

*"கறிவளர் சிலம்பின் கடவுள் பேணி*
*அறியா வேலன் வெறி எனக்கூறும்"* (ஐங்.143)

எனும் பாடல்வரி மற்றும் கீழ்க்காணும் பாடல்வரிகளால் அறியலாம்.

*"முருகுஎன மொழியு மாயின்*
*அருவரை நாடன் பெயர்கொலோ அதுவே"*

இவ்வாறு தோழி வெறியயர்தலைத் தடுத்து அறத்தோடு நிற்கிறாள். இதுவே களவு கற்பாக மாற்றப்படும் நிகழ்வாகும்.

**முடிவுரை**

"வேலன் வெறியாடல்" என்பது சங்க கால மரபாகும். ஐங்குறுநூற்றில் வேலன் வெறியாடல் மூலம் குறிஞ்சிக் கடவுளான முருகனின் வேறு பெயர்களான சிலம்பின் கடவுள், வெற்றிவேல் போன்றவற்றை அறிய முடிகிறது.

ஐங்குறுநூறு அக இலக்கியமாயினும், அதில் குறிஞ்சி மக்களுக்குப் பிரச்சனை ஏற்படும் போது அதைத் தீர்க்கும் முறையிடும் கடவுளாக முருகப் பெருமான் விளங்கியதை அறியமுடிகிறது. மேலும் மலைக்கடவுளான முருகனின் புகழ் மருதம் வரையிலும் பரவி அங்கும் "வேலன் வெறியாடல்" நிகழ்த்தப்பட்டு உள்ளது. இவையே ஐங்குறுநூறு மூலம் அறியப்படும் "வேலன் வெறியாடல்" பற்றிய செய்திகளாகும்.

# மலைக்கடவுள் முருகன்

முனைவர் இரா. பழனியம்மாள்
உதவிப் பேராசிரியர், தமிழ்த் துறை
சி. கந்தசாமிநாயுடுமகளிர் கல்லூரி
கடலூர்.

முருகு என்றாலே அழகு என்று பொருள். தமிழக்கடவுள் முருகன் என்பது பொது வழக்காறாகக் கருதப்படுகிறது. முருகவழிபாடு தொடக்ககாலம் முதல் அண்மைக்காலம் வரை தமிழ் மக்களின் வாழ்வியலோடு ஒன்றரக் கலந்துவிட்ட வழிபாட்டு முறையாகும். முருகனின் சிறப்பை இலக்கண நூலான தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், திருமுறைகள், வைணவ இலக்கியங்கள் போன்ற பல இலக்கியங்கள் முருகனின் சிறப்பை உயர்வாகப் பேசுகின்றன என்பதை இக்கட்டுரையில் காணலாம்.

**தொல்காப்பியம்**

*"சேயோன் மேய மைவரை உலகம்"*

என்று தொல்காப்பியர் குறிஞ்சி நிலமக்களின் வழிபாட்டு தெய்வமாக சேயோனைக் கூறியிருக்கின்றார்.

**சேயோன்**

குறிஞ்சி நில மக்களுக்கு உரிய தெய்வம் சேயோனாகிய முருகன், முருகனின் அவதாரம், தோற்ற வருணனை, ஆறுபடை வீடுகளில் எழுந்தருளியிருக்கும் முருகன் பற்றிய செய்திகள், ஒவ்வொருபடை வீட்டிலும் வழிபடப்பெற்ற முறை போன்ற செய்திகள் திருமுருகாற்றுப்படை விளக்கமாகவும் விரிவாகவும் கூறுகிறது. மேலும் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, கலித்தொகை, குறிஞ்சிப்பாட்டு போன்ற சங்க இலக்கியங்களில் முருகனைப் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. தமிழ்க்கடவுள் என்று வணங்கப்படும் முருகனை சங்கப் புலவர்கள் குடுகு, முருகன், சேய், சேயோன், வேள், செவ்வேள், நெடுவேல், வேலன் என்றப் பெயர்களால் அழைப்பர்.

**திருப்பரங்குன்றத்தில் முருகன் வழிபாடு**

கலித்தொகையில் முருகன் குறிஞ்சிநிலத் தெய்வமாக சுட்டப் பெறுகின்றார். திருப்பரங்குன்றத்தில் முருகன் வழிபாடு நடைபெறுவதையும் குறிப்பிடத்தவறவில்லை. மக்களின் வாழ்வானது முதன் முதலில் தொடங்கப்பட்ட இடம் மலைப் பகுதி எனப் பல அறிஞர்கள் சுட்டுகின்றனர். மலையும் மலையைச் சார்ந்த பகுதியையும் குறிஞ்சி நிலம் எனப் பண்டையத் தமிழர்கள் வகுத்துக் கொண்டனர். அக்குறிஞ்சி நிலக் கடவுளாக முருகனே போற்றப்பட்டான் என்பதை கலித்தொகையும் சுட்டுகின்றது.

இன்றைய காலத்தில் பெரும்பாலான மலைக்கோயில்கள் முருகனுக்குரிய ஆலயங்களாகத் திகழுகின்றன. முருகன் மலைக்கடவுள் என்ற செய்தியை மற்ற சங்க நூல்கள் சுட்டுகின்றன. மேலும் முருகன் சிவபெருமானின் மகன் என்றும் அவன் சிறந்த அழகுடையவன் என்ற குறிப்பும் திருப்பரங்குன்றத்தில் விழாநடைபெற்றதை "ஆல அமர் செல்வன் அணிசால் மகன் விழாக் கால்கோல்" (மருதக்கலி) என்று முருகப் பெருமான் குறித்த பல செய்திகளைக் கலித்தொகையில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**திருச்செந்தூரின் சிறப்பு**

*"நெடுவேல் திகழ்பூண் முருகன் தீம்புனல் அலைவாய்"*

என்று தொல்காப்பியமும்,

*"வெண்டலைப்புணரி அலைக்குஞ் செந்தில்"*

என்று புறநானூறும்,

*"திருமணிவிளக்கின் அலைவாய்"*

என்று அகநானூறும்,

*"உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுசீரலைவாய்"*

என்று திருமுருகாற்றுப்படையும் போற்றுகின்றன. பக்தர்களைக் காக்க பாலமுருகனாகவும், சூரனைசம்ஹாரம் செய்தவனாகவும், தேவர்களைக காத்து நின்ற திருத்தலமாகவும் திருச்செந்தூர் விளங்குகிறது.

**முருகவழிபாடு**

முருகவழிபாடு தொன்மைமிக்கது. சிவனின் மகனான முருகனுக்கும் தமிழர்களுக்கும் இருக்கக் கூடிய தொடர்பு என்பது வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்டதாகும். தமிழர்களின் பண்பாட்டோடும், மொழியோடும், தத்துவத்தோடும், பழக்கவழக்கங்களோடும் முருகன் வழிபாடுபின்னிப் பிணைந்திருந்த தன்மையைச் சங்ககால இலக்கியங்களான திருமுருகாற்றுப்படை, பரிபாடல் போன்றவை கூறுகின்றன.

திருச்செந்தூரில் கார்த்திகைத் திருநாள் கார்த்திகை மாதத்தில் கொண்டாடப்படுகிறது. வைகாசி மாதம் விசாக நட்சத்திர தினம் முருகனின் ஜென்ம நட்சத்திர தினமாகக் கொண்டாடப்படுகிறது. கந்த சஷ்டிவிரதம் சூரசம்ஹாரம் சிறப்பாகக் கொண்டாப்படுகிறது. அருணகிரியாருக்கு முருகன் தன் நடனக் காட்சியைக் காட்டியருளிய தலம் திருச்செந்தூர்.

**வெறியாட்டு**

வேலன் ஆடுகின்ற ஆடலை சங்க இலக்கியங்கள் வெறியாடல் எனக் குறிப்பிடுகின்றன. வேலன் வெறியாடும் போதுமுருகனின் சிறப்புகளைப் புகழ்ந்து பாடுதல் மரபு. அவற்றைப் பரிபாடல்,

*"வேலன் ஒத்தும் வெறியும் உளவே
அவைவாயும் அல்லபொய்யும் அல்ல"*

என்று விளக்குகிறது.

**முடிவுரை**

தமிழ்க் கடவுளாகவும் சிவன் பார்வதிக்கு மகனாகவும் சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றியவனாகவும் கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டவனாகவும் விநாயகருக்குத் தம்பியாகவும் திருமாலுக்கு மருமகனாகவும் எனப் பலவாறாகக் குறிப்பிடப்படுகிறான் முருகன். குன்று இருக்குமிடம் எல்லாம் குமரன் இருக்குமிடம் எனும் பெருமைக்குரியவன். தமிழ் மக்கள் முருகனை மலைத் தெய்வமாகக் கண்டார்கள். முருகனே மக்களின் உள்ளத்தை மிகவும் கொள்ளை கொண்டவன் என்றும் போரில் சிறந்தவன் என்றும் போற்றுகின்றனர்.

# ஆறுமுகமும், பன்னிரு கரங்களும்

மு. பழனியம்மாள்
உதவிப் பேராசிரியர்
தாகூர் கலைக் கல்லூரி
புதுச்சேரி 605 008.

திருமுருகாற்றுப்படை என்னும் இந்நூல் பத்துப்பாட்டின் கடவுள் வாழ்த்து போல அமைந்துள்ளது. இந்நூல் 317 அடிகளைக் கொண்டது. இந்நூலை இயற்றியவர் நக்கீரர் ஆவார். திருமுருகாற்றுப்படை நூலுக்குப் புலவராற்றுப்படை என்ற மற்றொரு பெயரும் வழங்கப்பெறுகிறது.

**ஆற்றுப்படை**

பொதுவாக ஆற்றுப்படை நூல்கள், பரிசில் தரும் தலைவனைத் தேடிச் சென்று பாணன் பரிசில் பெற ஆற்றுப்படுத்துவதாக அமைந்திருக்க, திருமுருகாற்றுப்படை நூல் முருகன் திருவருளைப் பெறுவதற்காக அன்பர்களை ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது இதன் தனிச்சிறப்பாகும். மேலும் தெய்வங்கள் பல இருப்பினும், முருகனுக்கே முதலிடம் தந்து தனி ஆற்றுப்படை நூல் எழுந்துள்ளது இதன் பெருமையை மேலும் மிகுவிக்கிறது.

**அறுபடை வீடுகள்**

குன்றுதோறும் குடி கொண்டவன் முருகன் என்றாலும் அவன் குடிகொண்ட கோவில் தலங்கள் என்று குறிப்பிடப்படுபவை ஆறு இடங்கள் ஆகும். அவையாவன, 1. திருப்பரங்குன்றம், 2. திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்), 3. திரு ஆவினன்குடி (பழநி), 4. திரு ஏரகம் (சுவாமிமலை), 5.குன்றுதோறாடல் (திருத்தணிகை), 6. பழமுதிர்ச்சோலை (அழகர்கோவில்). இவ் ஆறு படைவீடுகளில் முருகன் குடி கொண்டிருக்கும் சிறப்பினையும், முருகனது ஆறு முகங்களும், பன்னிரு கரங்களும் செயல்படும் விதத்தினையும் இக்கட்டுரை திறம்பட எடுத்துரைக்கிறது.

**1. திருப்பரங்குன்றம்**

முருகப்பெருமான், அடியவர்களின் மனமாசுகளைப் போக்கி அவர்களுக்கு அருள் வழங்கும் தன்மையுடையவன். கடம்ப மலர்கள் சூடிய மார்பினையும், பகைவரை வென்ற வலிய திருக்கரங்களையும் உடையவன். போர்க்களத்தில் சூரன், பதுமன் என்னும் இரு அரக்கர்களை அழித்து வெற்றி கொண்ட புகழினை உடையவன்.

இப்படிப்பட்ட எல்லையில்லாத புகழையுடைய செவ்வேள், சுனைப் பூக்களில் தேனை உண்ண வண்டினம் மொய்ப்பதைப் போல, தன்னை நாடிவரும் அடியவர்கள் மனம் மகிழும்படி அருள் வழங்கத் திருப்பரங்குன்றத்தில் வீற்றிருப்பவன்.

**2. திருஆவினன்குடி (பழநி)**

கருடக் கொடியை உடைய திருமாலும், காளைக் கொடியை உடைய முக்கண்ணனும், ஐராவதம் என்னும் யானை மீதேறி வரும் இந்திரனும், உயிர்களைப் படைக்கின்ற நான்முகனும் வணங்கும் தேவர்களின் தலைவன் முருகன். கற்புடைய தெய்வானை அம்மையுடன் திருஆவினன்குடியில் இருந்தபடி அருள்மழை பொழியும் தன்மையுடையவன் முருகன்.

**3. திரு ஏரகம் (சுவாமிமலை)**

அரிய மறைபொருளான ஆறெழுத்து மந்திரமாகிய சரவணபவ என்னும் மந்திரத்தை, தங்கள் வாயால் உச்சரித்தபடி மனம் விரும்பி போற்றி பரவிப் பலரும் தொழ வருவர். இப்படி வருபவர்களின் மனம் மகிழ, இதயம் குளிர வேலனாகிய முருகன் சுவாமிநாதப் பெருமானாக, திருஏரகம் என்னும் சுவாமிமலையில் அருளாட்சி புரிகின்றான்.

**4. குன்றுதோறாடல் (திருத்தணிகை)**

பலவிதமான வாத்தியக் கருவிகளை இசைத்தும், ஆட்டுக்கடா மீதமர்ந்தும், மயில் மீதேறியும், சேவல் கொடி ஏந்தியும் வளர்ந்துயர்ந்த கோலம் உடையவராய், வளை அணிந்த கை உடையவராய், இசை நரம்பு போலும் இனிய குரலுடைய பாடும் மகளிருடன், பட்டாடை இடையிலே இறுகக்கட்டி அந்த மால்மருகன் குன்றுதோறும் விளையாடும் கொள்கையுடையவனாய் வீற்றிருக்கின்றான்.

**5. பழமுதிர்ச்சோலை**

பார்த்தவர் மகிழும் பழமுதிர்ச்சோலை பகுதிக்கு உரியவன் குன்றுதோறாடும் குமரன், குகன், கந்தன், கடம்பன், முருகன், கார்த்திகேயன் ஆவான். இப்படிப்பட்ட பெயர்களைத் தாங்கிய முருகப் பெருமானை நீ வணங்கியவுடன், கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் ஒப்பற்ற பெருஞ்செல்வப் புகழ் உடையவனாக நீ திகழ, உயர்ந்த மலைக்கு உரியவனான குமரப் பெருமான் அருளுவான் என்று ஆற்றுப்படுத்துகிறான்.

**6. திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)**

அங்குசத்தால் உண்டான வடுக்கள் புள்ளியாக இருக்கும் மத்தகத்தில் அணிவித்த பொன்மாலை, நெற்றிப் பட்டத்துடன் அசைந்தாட, இரு பக்கமும் தொங்க விடப்பட்ட ஒலியெழுப்பவும் எவராலும் தடுத்து நிறுத்த முடியாத எமனைப் போலவும், காற்றைப் போலவும் விரைந்து செல்லும் யானைமேல் மாலை-மகுடம்-தாமரை-கமண்டலம்-கோடகம் என்னும் ஐந்து வகை அலங்காரப் பொருட்களும் திருத்தமுற அமைந்திருக்க, முருகன் அமர்ந்திருப்பதே ஓர் அழகிய திருக்காட்சியாகும். யானை மீதேறி அமர்ந்துள்ள முருகனின் திருமுடி மீது சூட்டப்பட்டுள்ள கிரீடத்தில் உள்ள இரத்தினங்கள் மின்னலைப் போல ஒளிவீசித் திகழும். காதுகளில் அணிந்துள்ள மகர குண்டலங்கள் நெடுந்தூரம்

ஒளிவீசுவது போலிருக்கும். இத்தகைய சிறப்புடைய முருகப் பெருமானின் திருமுகங்கள் ஆறும் அருள் ஒளி வீசித் திகழும்.

**ஆறுமுகம் ஆன பொருள்**

அருள் வீசித் திகழும் முருகனின் ஆறு திருமுகங்களில் ஒன்று இருள் சூழ்ந்த இவ்வுலகின் துயரங்களை எல்லாம் போக்கி அடியவர்களுக்கு அருள் வழங்கி, வழிகாட்டி அருளும் இன்னொரு திருமுகம். அவனை வாழ்த்தி வணங்கி வழிபடும் பக்தர்களுக்கு வேண்டும் வரம் அளித்து மகிழ்ந்திருக்கும். வேத விதிகளின்படி வேள்விகள் செய்யும் அந்தணர்க்கு உதவும் இன்னொரு திருமுகம். கருணை பொழியும் மற்றொரு திருமுகமோ கற்றவர் மனத்திருள் போக்கி, அவர்கள் மதிநலம் நிலவொளி போலப் பரவி நேர்படச் செய்யும். ஐந்தாவதாக இன்னொரு திருமுகம் பகைவரை அழித்து, பக்தர்களைக் காக்கும் பரசிவமுகமாகும். ஆறாவது திருமுகம் கொடி போன்ற இடையையுடைய குறமகள் வள்ளியோடிருந்து மகிழும் அன்பு முகமாகும். இவ்வாறாக இவ்வாறு திருமுகமும் ஒவ்வொரு விதமான அருட்செயல்களை நிகழ்த்திய வண்ணமாயிருக்கும்.

*அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே ஒருமுகம்*
*எஞ்சிய பொருள்களை ஏம்உற நாடித்*
*திங்கள் போலத் திசை விளக்கும்மே ஒருமுகம்*
*செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்*
*கறுவுகொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே ஒருமுகம்*

(திருமுருகாற்றுப்படை 96-100)

**வரம் தரும் பன்னிரு திருக்கரங்கள்**

திருமுருகனின் ஆறு திருமுகங்களும் பக்தர்களுக்கு அருள்பொழிய அவனுடைய பன்னிரு திருக்கரங்களும் பக்தர்களுக்கு உதவுவதற்கே உள்ளன. இவற்றை நக்கீரப் பெருமான் அழகுற வர்ணிக்கிறார்.

பொன்மாலை புரளும் அகன்று விரிந்த அவனது மார்பில் உத்தம இலட்சணம் காட்டும் சிவந்த மூன்று ரேகைகள் பொருந்திய தோளுடன் பொருந்தியுள்ள திருக்கரங்கள் வலிமையானவை. வள்ளன்மை வாய்ந்தவை. போர்க்களத்தில் பகைவர் மார்பைப் பிளந்து பின்பு அவற்றை மீளப் பெற்றுக் கொள்ளும் தன்மையுடையவை.

இப்படிப்பட்ட அவனது பன்னிரு திருக்கரங்களில் ஒருகரம் வானத்து தேவர்களுக்கு வரம் தர எடுத்ததாகும். அதற்கு இணையான இன்னொரு கரம் இடுப்பில் ஊன்றியது. ஒருகரம் பட்டாடை சூடிய தொடைமேல் வைத்தபடி இருக்க, இன்னொரு கரம் அங்குசம் ஏந்தியிருக்கும். இரு திருக்கரங்களில் கேடயமும், வேலாயுதமும் தாங்கியிருக்கும். ஒரு கரம் மார்பொடு பொருந்தி ஞான முத்திரை காட்ட, இன்னொரு கரம் மார்பில் புரளும் செபமாலையைப் பற்றியபடி இருக்கும்.

ஒருகரம் வளையல் அசைய மேல் சுழற்றிக் களவேள்வி முத்திரை காட்ட அதற்கு இணையான இன்னொரு கரம் இனிய ஒலி எழுப்பும் மணி தாங்கியிருக்க, ஒரு கரம் நீலநிற வானம் அமுதமழை பொழிய, இன்னொரு கரம் தேவ மகளிர்க்குத் திருமண வாழ்த்து கூறும். இவ்வாறாக திருமுருகனின் பன்னிரு திருக்கரங்களும் அவ்வவற்றிற்குரிய பணிகளைச் செய்து அருள் பாலிக்கின்றது.

*விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது*
*ஒருகை, உக்கம் சேர்த்தியது ஒருகை*
*நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசை அசை இயது ஒருகை*
*அங்குசம் கடாவ ஒருகை, இருகை*
*ஐயிரு வட்டமொடு எஃகு வலம் திரிப்ப, ஒருகை*
*மார்பொடு விளங்க, ஒருகை* (திருமுருகாற்றுப்படை 107-112)

## தொகுப்புரை

திருமுருகாற்றுப்படையில் ஆறுபடை வீடுகளின் சிறப்புகளும், அங்கு வீற்றிருக்கும் முருகப் பெருமானின் அழகும் திறம்பட வர்ணிக்கப்பட்டு உள்ளன. முருகன் ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கரங்களும் கொண்ட கோலத்தை உடையவன். இத்தகைய சிறப்பு வாய்ந்த அழகுக் கோலத்தை ஒவ்வொரு திருமுகமும், திருக்கரமும் செயல்படும் விதத்தை நக்கீரப் பெருமான் வருணித்துள்ள விதம் பக்திச் சுவையும், பழந்தமிழ் இனிமையும் கலந்த கவிச்சுவை என்பதைப் படிப்பவர் உள்ளம் அறிந்து மகிழும் எனலாம்.

# திருவாமாத்தூர் குருவும் சிரவணம்பட்டி சீடரும்

பனையபுரம் **அதியமான்**
23/1193, 29ஆம் குறுக்குத் தெரு
திருவள்ளுவர் நகர்
திருவான்மியூர்
சென்னை - 600 041.

அறுவகை சமயங்களும் ஒன்றாகப் போற்றப்படும் கௌமார சமயத்தின் தூண்களாகத் திகழ்பவர்கள், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும், அவரின் சீடரான சிரவணம்பட்டி இராமானந்த சுவாமிகளும் என்பது சமய உலகம் அறிந்த உண்மை.

**வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்**

கௌமார மடம் அமைத்தவர். வடலூர் இராமலிங்க சுவாமிகளின் நண்பராகவும், முருகப்பெருமானின் அடியாராகவும் திகழ்ந்தவர். இவரது கவிதைத் திறத்தால் வண்ணச்சரபம் என்ற பட்டம் பெற்றவர். ஆன்மிக வாதியான இவர், ஆங்கிலேயருக்கு எதிராகத் தனியே ஆங்கிலேயர் அந்தாதி எழுதிய விடுதலைப் போராட்ட வீரர்.

**தோற்றம்**

இவரது பெற்றோர் சைவ மரபில் வந்த செந்தில்நாயகம் பிள்ளை, பேச்சிமுத்தம்மை ஆவர். கி.பி.1839ல் திருநெல்வேலி மாவட்டத்தில் அவதரித்து, விழுப்புரம் மாவட்டம், திருவாமாத்தூரில், கி.பி.1898ல் ஒளி வடிவாய் ஜீவ சமாதியானவர் இவர். அருட்பெருஞ்சோதி வள்ளலாருக்கு உற்ற நண்பராகத் திகழ்ந்தவர். இவரும் ஜீவகாருண்யத்தை உலகுக்கு எடுத்துரைத்தவர். அருணகிரிநாதரின் மறுபிறவியாகத் தோன்றியவர்.

**சுவாமிகளின் சிறப்புகள்**

கோவை இராமானந்தர், நாடகத் தந்தை சங்கரதாஸ் சுவாமிகள் போன்றோருக்குக் குருவாக விளங்கியவர். சைவம், வைணவம் உள்ளிட்ட ஆறு சமயங்களுக்கும் பாடல்கள் இயற்றியவர். சித்திக்கரவிக்குத் தண்டபாணி சுவாமிகள் எனப் பெயர் பெற்றவர். ஒரு லட்சத்திற்கும் மேலான தெய்வீகப் பாடல்களை இயற்றியவர் இவர். இவர் புதுச்சேரியைச் சேர்ந்த வேலாயுதம் பிள்ளை என்பவரின் திருமகளான திருமலை அம்மை என்பவரை, வாழ்க்கைத் துணையாக, மயிலம் சந்நிதானத்தில் மணம் புரிந்தார். அவர்களுக்குக் குழந்தைச் செல்வங்களும் பிறந்தன. முருகனின் அடியாரான சுவாமிகளுக்கு, முருகன் பல்வேறு வடிவங்களில் அருள் வழங்கினாலும், ஒருமுறை கூட, நேரில் காட்சி தரவில்லை. இதற்காகப் பொதியமலை அருகே உள்ள திருமலை என்ற மலையில் ஏறினார். முருகனைக் கண்டால் திரும்பி வருவேன்,

இல்லையெனில் இறந்துவிடுவேன் என்று சபதம் செய்து, மலையுச்சியை அடைந்தார். அங்கிருந்து முருகனை நினைத்து, கீழ்நோக்கி உருளத் தொடங்கினார். அவர் மலையடிவாரத்தை அடையும் போது, இரத்தக் காயங்களுடன் மூர்ச்சையாகிக் கிடந்தார். அவரை அவரது சீடர் அருணாலசலத் தொண்டைமான், செங்கோட்டைக்கு அழைத்துச் சென்ற இளைப்பாற்றினார். அன்றிரவு, முருகப்பெருமான் சுவாமிகளின் கனவில் வந்து அருளாசியும், ஆறுதல் மொழிகளையும் கூறினார். சில நாட்கள் சென்ற பின், வள்ளியம்மை, குறத்தி வடிவில் வந்து தமது திருக்கரத்தால் இவருக்குத் திருநீறு இட்டு, இரத்தக் காயங்களில் திருநீறைப் பூசி அக்காயங்கள் குணமாக வழிவகுத்தார்.

இறைவனின் ஆணைப்படி, சுமார் பத்து ஆண்டுகள் திருவாமாத்தூரில் தங்கி, கௌமார மடம் அமைத்து வாழ்ந்தவர். திருப்புகழ் சுவாமிகள், முருகதாஸ் சுவாமிகள் என வழங்கும் இந்த மகானே, வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார்.இந்த மகானின் கௌமார மடம் அவரது வழித்தோன்றல்களால், விழுப்புரத்திற்கு அருகாமையில் உள்ள திருவாமாத்தூரில், இன்றும் சிறப்புடன் நிர்வகிக்கப்பட்டு வருகிறது. இம்மடத்தில் சுவாமிகள் வழிபட்ட விநாயகரையும், முருகனின் வேலையும் இன்றும் தரிசிக்கலாம். இதே போல, பழனி தண்டயுதபாணி சுவாமியின் சிலையும் உள்ளது. இவற்றை வழிபட்டால் பழனிக்குச் சென்று வந்த பலன் கிடைக்கும் என்பது நம்பிக்கையாக உள்ளது. இந்த மடத்தில் சுவாமிகள் ஓலைச்சுவடிகளில் எழுதிய பாடல்கள் இன்றும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. ஆன்மிகவாதியான இவர், ஆங்கிலேயர்களுக்கு எதிராக தனியே "ஆங்கிலேயர் அந்தாதி" எழுதி, வெள்ளையர் எதிர்ப்பைத் தெரிவித்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

**பலிகளைத் தடுத்தல்**

இவர் பல்வேறு இடங்களில் பலி பூஜையினைத் தடுத்து, சைவ வழிபாட்டை நடத்த உதவினார். உதடுகள் ஒட்டாமல் பாடுவது நிரோட்டகம் என்ற பாடலாகும். இவ்வாறு நிரோட்டகப் பாடல்களை எழுதுவது புலமை வாய்ந்த ஒன்றாகக் கருதப்பட்டு வந்தது. நிரோட்டகம் என்ற வடமொழிக்குப் பதிலாக இதழகல் அந்தாதி என்ற பெயரில் சிவபெருமான் மீது சிவநேக பாதம் என்றும், திருமால் மீது அரியேகத்தான் என்றும், தனித்தனியே முப்பது பாடல்கள் வீதம் பாடியுள்ளார்.

**சிரவை இராமானந்த சுவாமிகள்**

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளைக் குருவாகக் கொண்டவர். இவரும் கௌமார மடம் நிறுவி, இறையுணர்வை வளர்த்தவர். முருகப் பெருமான் மீது உள்ள பற்றின் காரணமாக இல்லற வாழ்க்கையை விட்டு விலகியவர். கோவை மாநகரில், சிரவை ஆதீனத்தைத் தோற்றுவித்தவர்.

**தோற்றம்**

சிரவணப்பட்டியில் வாழ்ந்த வேலப்ப கவுண்டர்-ஆண்டாள் அம்மை தம்பதியினருக்கு இரத்தினாசல முருகனின் அருளால் தெய்வக்

குழந்தையாய்த் தோன்றியவர், இராமானந்தர் ஆவார். இவர் கி.பி.1857ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் பிறந்தார். இவரது இயற்பெயர் இராமுக்குட்டி என்பதாகும். கந்தர் நாடி சாதகம் என்ற நூலில் இராமானந்தர், அகத்திய முனிவரின் அம்சமாகப் பூமியில் தோன்றியவர் என்ற குறிப்பு உள்ளது குறிப்பிடத்தக்கது. இராமுக்குட்டி இளம்வயதிலேயே அதிகாலையில் எழுந்து நீராடுதல், இறைவழிபாடு செய்தல், தோத்திர நூல்ளைப் படித்தல், தனியாகத் தவமியற்றுதல் ஆகிய செயல்களை மேற்கொண்டு வந்தார். பெற்றோரின் வற்புறுத்தலுக்காக மணம் புரிந்து கொண்ட சுவாமிகள், குடும்ப வேலைகளைக் கவனித்துக் கொண்டுவரும் போது முருகப்பெருமானை நினைத்துக் கீர்த்தனை ஒன்றை இயற்றினார். அன்றிரவு செந்திலாண்டவன் காட்சி தந்து திருச்செந்தூருக்கு வருமாறு கட்டளையிட்டு மறைந்தார்.

### வழிகாட்டிய வள்ளல்

திருச்செந்தூர் செல்வதற்குப் பெரியோர்கள் அனுமதிக்க மாட்டார்கள் என்பதால், யாருக்கும் தெரியாமல் நடை பயணமாகவே புறப்பட்டார். வழியெங்கும் தலங்களைத் தரிசித்துச் சென்ற சுவாமிகளுக்குச் செந்தில்நாதனே ஒளியாகவும், சிறுவனாகவும் வழிகாட்ட, திருச்செந்தூர் சென்றடைந்தார். இது இறைவன் செயலே என்று உணர்ந்த இராமானந்தர், காசி சுவாமிகள், மௌன சுவாமிகள் என அனைவரோடும் பழகி வந்தார். இதற்கிடையில், சிரவணம் பட்டியில், இராமானந்தரைக் காணாமல் தேட ஆரம்பித்தனர். மௌன சுவாமிகள் தகவலின் பேரில், சிரவணம்பட்டியிலிருந்து வந்து, இராமானந்தரை அழைத்துச் சென்றனர்.

### பழனி பயணம்

சிரவணம்பட்டி வந்த இராமானந்தருக்கு மீண்டும் இருப்புக் கொள்ளவில்லை. இந்த முறை இவருக்குப் பழனி தண்டாயுதபாணி மீது ஈடுபாடு ஏற்பட்டது. அதனால் பழனியாண்டவரைத் தரிசிக்க விரும்பினார். தம் பெற்றோரின் அனுமதியின் பேரில், பழனி சென்று, பழனியாண்டவனை மனம் மகிழத் தரிசித்தார். அங்கேயே முருகன் மீது ஒரு பதிகம் பாடினார்.. . . . .விட்டாலும் பிழைபொறுக்கப் பிதாநீ தானே! எனப் பாடி முடித்தவுடன் முருகப்பெருமான் தன்னை நோக்கிக் காட்சி தருவதை உணர்ந்தார்.

### குருநாதரைச் சந்தித்தல்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், பழனிமலை அடிவாரத்தில் சரவணப் பொய்கைக்கு அருகே ஒரு மடம் அமைத்துத் தங்கியிருந்தார். சிரவணம்பட்டிக்கு அருகேயுள்ள சாமக்குளம் வெங்கடரமணதாசர் மூலமாக, தண்டபாணி சுவாமிகளைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. அதன்படி, கி.பி. 1880ஆம் ஆண்டில் பழனி சென்ற இராமானந்தர், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளைச் சந்தித்து, அவர் திருமுன் வீழ்ந்து வணங்கி, தமக்கு உபதேசம் செய்து தம்மைச் சீடராக ஏற்று அருள் வழங்குமாறு கேட்டுக்கொண்டார்.

அவரது ஈடுபாட்டை உணர்ந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், இராமானந்தருக்கு திருஆறெழுத்தை உபதேசித்து, கௌமார உண்மைகளை விளக்கியருளினார். அப்போது இராமானந்தருக்கு முருகப்பெருமானே நேரில் நிற்கும் காட்சி தோன்றியது. அதன்பின், மீண்டும் ஒருமுறை சந்திக்கும் போது, கல்லாடை அணிந்து, தவக்கோலம் பூண்டார்.

**ஆலயங்கள் அமைத்தல்**

குருநாதரின் ஆணைப்படி, நியமங்களை முடித்து திருநீறு, உருத்திராட்சம் அணிந்து, சூரியனை வணங்கி, பழனியாண்டவர் படத்திற்கு முறைப்படி வழிபாடு செய்து வந்தார். கூடவே தம் தந்தையாரின் விருப்பப்படி, விவசாயத்தையும் கவனித்து வந்தார். தந்தையாருக்கு இவரது முருகப் பற்று விருப்பமானதாக இருந்தாலும், அதை வெளிக்காட்டிக் கொண்டால் இவன் சாமியாராகிவிடுவான் என அஞ்சி, அதைக் காட்டிக் கொள்ளவில்லை. இராமானந்தர் தம் குருநாதரின் உபதேசப்படியே, ஒழுக்க நெறியில் வாழ்ந்து வந்தார். தன்னை நாடி வந்த அன்பர்களின் நோய்களையும் மனக் கவலைகளையும் அறவே நீக்கினார். இவரிடம் திருநீறு பெற்று மகப்பேறு வெற்றவர்கள் ஏராளம். இவருடைய இளைய சகோதரர் வெங்கடசாமி-குட்டியம்மை தம்பதியருக்கு திருநீறு வழங்கி ஆசி கூறினார். அதன் பேரில் அவர்களுக்கு பிறந்த குழந்தை கந்தசாமியே பின்னாளில் சிரவை ஆதீனத்தின் இரண்டாவது சந்நிதானமாகத் திகழ்ந்தது.

**குருநாதர் தரிசனம்**

இராமானந்தருக்குத் தம் குருநாதரை மீண்டும் தரிசிக்க வேண்டும் என்ற ஆவல் எழுந்தது. பழனியில் சுவாமிகள் தங்கி இருப்பதை அறிந்து, உடனே புறப்பட்டுச் சென்றார். அங்கே சுவாமிகள் தாம் இயற்றிய பழனித் திருவாயிரம் என்னும் நூலைப் படித்துக் காட்டினார். இராமானந்தரும் அங்கேயே சில நாட்கள் தங்கியிருந்து குருநாதரின் பக்திச் சுவையையும், தமிழ் இலக்கியச் சுவையையும் அனுபவித்தார்.

**தவச்சாலை வாழ்வு**

சிறிது காலம் கழித்து இராமானந்தரின் தந்தையார் இயற்கை எய்தினார். குடும்பப் பொறுப்பு முழுவதும் இவர் மீது விழுந்தது. என்றாலும், இல்லறத்தின் மீது இவருக்கு இருந்த பற்று குறையத் தொடங்கியது. தமது ஊரின் அருகே உள்ள சின்னவேடன்பட்டிக்கு அருகில் தவச்சாலை அமைத்து தியானத்தில் மூழ்கி இருந்தார்.

**திருவாமாத்தூர் பயணம்**

விழுப்புரத்தை அடுத்துள்ள திருவாமாத்தூரில் வண்ணச்சரபம் சுவாமிகள் திருமடம் அமைத்து, தவம் செய்யும் செய்தியை இராமானந்தர் அறிந்தார். அங்குச் சென்று சில நாட்கள் தங்கியிருந்தார்.

**நிஷ்டை அனுபவம்**

இராமானந்தர் தமது திருமடத்தில் அமைந்திருந்த குகையினுள் ஒரு மண்டலம் உணவு ஏதும் உட்கொள்ளாமல் தவநிஷ்டையில் இருந்தார். அப்போது அவருக்குப் பல்வேறு தெய்வீக அனுபவங்கள் கிடைத்தன. இதன்பின், தமது அடியார்கள் சரியை, கிரியை, நெறிகளில் ஈடுபட்டு உயர்வடைய வேண்டும் என்று விரும்பி, தமது சொந்த ஊரான சிரவணபுரத்தில் தமது சொந்த நிலத்தில் 1890ஆம் ஆண்டு சித்தி மகோற்கட விநாயகர் ஆலயம், தண்டபாணிக் கடவுள் திருக்கோயில், கௌமார மடலாயம் முதியவற்றை நிறுவினார். சுவாமிகளின் திருப்பணியில் சபாபதி சுவாமிகள், விளாங்குறிச்சி சுந்தர சுவாமிகள், இராசு சுவாமிகள், அரங்கப்ப சுவாமிகள், அரங்க முத்து சுவாமிகள், சின்னசாமி சுவாமிகள் முதலியோர் ஈடுபட்டனர். இராமானந்த சுவாமிகள் சாதுக்களைக் கொண்டு ஆலய பூஜையை அமைத்தது குறிப்பிடத்தக்கது. தண்டபாணித் தெய்வத்தின் முன் இராமுக்குட்டி கவுண்டர் என்ற தம் இயற்பெயரைத் துறந்து, இராமானந்த சுவாமிகள் என்ற தீட்சை நாமத்தைச் சூட்டிக் கொண்டார்.

சுவாமிகள் தோத்திர வடிவிலும், சாத்திர வடிவிலும் பல்வேறு பாடல்களை இயற்றினார். அதே போல, தத்துவ விளக்கமாக, ஆத்மராம சரிதம் என்ற உரைநடை நூலையும் எழுதினார். சண்முகமாலை, பதிகம், அந்தாதி, கீர்த்தனை ஆகிய அனைத்தையும் ஒன்றாகத் தொகுத்து இராமானந்தத் திரட்டு என்ற பெயரில், கி.பி.1921ஆம் ஆண்டு வெளியிட்டார். இராமானந்த சுவாமிகள் ஏறத்தாழ 1000 பாடல்களை இயற்றியுள்ளார்.

**குருவுக்கு மரியாதை**

இராமானந்தர் தமது குருவான வண்ணச்சரபம் சுவாமிகள் மீது அளவற்ற மதிப்பும் மரியாதையும் வைத்திருந்தார். அதனால் அவரது ஒவ்வொரு குரு பூஜையிலும், கலந்து கொண்டு தமது அன்பை வெளியிட்டார்.

**முருகனடி சேர்தல்**

தமது 99ஆவது வயதில் 1956ஆம் ஆண்டு மார்கழி மாதம் 7ஆம் நாள் வெள்ளிக்கிழமை அன்று தமது தவச்சாலையான கனகசபைக் கட்டிடத்தில் நாற்காலியில் இருந்தபடியே நிஷ்டையில் கூடி, முருகப்பெருமானின் திருவடியில் கலந்தார். இவர் தோற்றுவித்த சிரவை ஆதீனம், வைணவச் சேக்கிழார், கவிக்கடல் தவத்திரு கந்தசுவாமி சுவாமிகள், கஜபூஜை திருப்பணி சக்ரவர்த்தி சுந்தர சுவாமிகளை அடுத்து, தற்போது சிரவை ஆதீனம், தவத்திரு குமரகுருபர சுவாமிகள் அவர்களின் தலைமையில் திருப்பணிகளைத் தொடர்ந்து செய்து வருகிறது.

# தமிழரின் வாழ்வியலில் முருக வழிபாடு

**க. பாக்கியராஜ்,**
ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வாளர்,
பெரியார் ஈ.வெ.ரா கல்லூரி (தன்னாட்சி),
திருச்சிராப்பள்ளி – 620 023.

உலகில் மக்களாய்ப் பிறந்த எல்லோரிடமும் வழிபாடு என்பது நிலவி வருகிறது. வழிபடுதல் என்பதே வழிபாடு என்றாயிற்று. வழிபடுதலாவது, பின் தொடர்ந்து சென்று சேருதல் அல்லது அடியொற்றுதலாகும். நம்மைக் காட்டிலும் அகவையிலும் அனுபவத்திலும் அறிவிலும் ஆற்றலிலும் குணத்திலும் மிக்கவரைப் பின்தொடர்தலும் அடியொற்றுதலும்தாம் வழிபாடு ஆகும். இவ்வழிபாடு பெற்றோர் வழிபாடு, ஆசிரியர் வழிபாடு, மூத்தோர் வழிபாடு, நீத்தார் வழிபாடு, தெய்வ வழிபாடு எனச் சில வகைப்படும். அனைத்து வழிபாடுகளும் பழங்கால முதலே இருந்து வருவன. இந்த வழிபாடுகளில் மிகச் சிறந்தது தெய்வ வழிபாடாகும். தெய்வங்கள் பல. ஒரு குறிப்பிட்ட தெய்வத்தை வழிபடும்போது அஃது அத்தெய்வத்தின் வழிபாடு ஆகிறது. அவ்வகையில், முருகன் என்னும் தெய்வத்தை வழிபடும் வழிபாடு முருக வழிபாடு என்ற பெயரைப் பெறுகிறது. இவ்வழிபாடு தமிழர் தம் வாழ்வியலில் கால்கொண்ட சூழலை இலக்கியச் சான்றுகளோடு ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தெய்வ வழிபாடு**

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில், ‘வழிபடு தெய்வம்’ (தொல். பொருள். செய்யுளியல், நூ.110) என்ற தொடர் காணப்படுகிறது. இதனால் தெய்வங்களை வழிபடுதல் அவர் காலத்திற்கு முன்பிருந்தே நிலவி வருவது புலனாகிறது. கருப்பொருள்களின் வரிசையில் முதலில் இடம் பெறுவது தெய்வமாகும் (தொல்.பொருள்.அகத். நூ.18). தமிழர் தாம் வாழும் நிலங்களை மலை, காடு, வயல், கடல் என நான்கு பிரிவுகளாகப் பிரித்து அவற்றை முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப் பெயரிட்டு அவற்றின் தொகுதியை ‘நானிலம்’ என்று வழங்கினர். அவ்வந் நிலங்களில் வாழ்ந்த மக்கள் ஆதி காலம் தொட்டுத் தத்தமக்கென்று தனித்தனித் தெய்வ வழிபாடுகளை மேற்கொண்டிருந்தனர். இவர்கள் தெய்வங்களைத் தங்கள் உள்ளுணர்வின் வாயிலாக அறிந்தனர்.

**தெய்வம் தேர்தல்**

ஒரு நிலத்திற்குரிய தெய்வம் இன்னொரு நிலத்தில் வழிபாட்டிற்கு உகந்ததாக அமையவில்லை. அம்முறையில் மலைப்பகுதியான குறிஞ்சி நிலத்து மக்களுக்கு மட்டும் ஏற்ற வழிபாடாக முருகன் என்ற தெய்வத்தின் வழிபாடு அமைந்தது. இந்நிலத்தை விரும்பித் தங்கி நிலைபெற்ற தெய்வமாய்,

அவ்வப்போது தோன்றி வெளிப்படுவதன் காரணமாக இம்மக்கள் இத்தெய்வத்தையே தங்கள் வழிபாட்டிற்கு உரியதாகத் தேர்ந்து கொண்டனர். சேயோன், நெடுவேள், செவ்வேள், வேலன் ஆகியன இத்தெய்வத்தின் பழைய வேறு பெயர்களாம். இவற்றுள், 'சேயோன்' என்ற பெயர் மட்டுமே தொல்காப்பியத்தில் காணப்படுகிறது. (தொல்.பொருள்.அகத். நூ. 5). மற்றப் பெயர்கள் எல்லாம் அகப்பாடல்களிலும் புறப்பாடல்களிலும் தெரியவருகின்றன.

**சேயோன்**

'சேயோன்' என்பதுதான் முருகனுக்கு வழங்கிய தொன்மைப் பெயராதல் வேண்டும். இது செய்யோன் என்ற சொல்லின் மரூஉ வழக்காகும். இச்சொல், 'சிவந்த நிறமுடையவன்' என்னும் பொருளது. 'பவழத் தன்ன மேனி' (குறுந்தொகை, கடவுள் வாழ்த்து) என்பது திருமகளைச், 'செய்யோன்' எனச் சுட்டுதல் இவண் ஒப்பு நோக்கத்தக்கது. செய்யோன் என்பது மருவிச் சேயோன் என்றாயிற்று. அவ்வந்நிலத்துத் தெய்வங்களை அறிமுகப்படுத்தும் தொல்காப்பிய நூற்பாவின் முதலடியில், 'மாயோன்' என்றிருத்தலால் அதற்குப் பொருந்தும் வகையில் இரண்டாம் அடியில், 'சேயோன்' என்ற சொல் தொல்காப்பியரால் கையாளப்பட்டது. செய்யோன் எனச் சொல்லுதலே அவர் கருத்தாகும். மாயோன் + கருமை நிறமுடைய முல்லை நிலத்துத் தெய்வம் (மா+கருமை). இச்சொல்லின் பொருளாலும் சேயோன் என்பது சிவந்த நிறமுடையவன் என்னும் பொருளதாய் முருகனைக் குறித்ததை உணரலாம். மாயோள்+கருமை நிறமுடைய பெண் தெய்வம் கொற்றவை. 'சேய்' என்பது குழந்தை எனவும் பொருள்படும். சிவன், பார்வதியின் மகனாதலால் 'சேயோன்' என்பதும் பொருந்தும்.

**தமிழர் வழிபாடு**

பழமை வாய்ந்த வடமொழி இருக்கு வேதத்தில் முருகன் என்ற தெய்வத்தின் பெயர் இடம்பெறவில்லை. பிற்காலத்து உபநிடதங்களிலும் இத்தெய்வப் பெயர் காணப்படவில்லை. இவற்றால் வடநாட்டினர் இத்தெய்வ வழிபாட்டை மேற்கொள்ளவில்லை என்றறியலாம். இருக்கு வேதம் போன்று தொன்மையுடைய சங்க இலக்கியங்களில் இப்பெயர் பரவலாகத் தெரியவருவதால் தமிழ் நாட்டினராலேயே இத்தெய்வ வழிபாடு அதிகம் மேற்கொள்ளப்பட்டு வந்தது என்பது புலனாகிறது. இவ்விலக்கியங்களில் முருகனைப் பற்றியும் முருக வழிபாட்டைப் பற்றியும் அரிய செய்திகள் பல அறியப்படுகின்றன. அக நூல்களில் குறிஞ்சித்திணைப் பாடல்களிலும் புறநூல்களில் தெய்வப் பெயர்களை வரிசைப்படுத்திச் சொல்லும் பாடல்களிலும் இவை பயின்று வருகின்றன. முருகனைப் பற்றி மட்டுமே விரிவாகக் கூறும் பாட்டுக்களாகப் பத்துப்பாட்டின் திருமுருகாற்றுப்படை பாட்டும், தொகை நூல்களில் ஒன்றான பரிபாடலின் செவ்வேள் பாட்டுக்களும் அமைகின்றன. முருக வழிபாடு தமிழர் வாழ்வில் வேருன்றி நிலைபெற்றதை இப்பாட்டுக்கள் விளக்கமாக எடுத்துரைக்கின்றன.

**இருவகை வழிபாடு**

முதல் நூலான தொல்காப்பியத்தில் சேயோன் என்ற பெயர் மட்டும் காணப்படுகின்றதே தவிர, மற்று முருக வழிபாட்டைப் பற்றிய செய்திகள் எவையும் இதன் மூன்று அதிகாரங்களிலும் இடம்பெறவில்லை. கடைச்சங்க நூல்களாகிய திருமுருகாற்றுப்படையிலும் பரிபாடலிலும் முருக வழிபாடு எவ்வாறெல்லாம் மேற்கொள்ளப்பட்டது என்பது குறித்து நிரம்பிய செய்திகள் உள்ளன. தமிழர் தனித்தனி இருவகை வழிபாடுகளை மேற்கொண்டிருந்தனர் என்பதைத் திருமுருகாற்றுப்படை தெரிவிக்கிறது.

**முதல் வகை**

ஒரு வழிபாடு குறிஞ்சி நிலத்து மக்கள் ஆற்றிய வழிபாடாகும். தொகை நூல்களில் காணும் அகப்பாடல்கள் விவரிப்பது இத்தகு வழிபாடேயாம். இம்மக்களுடையது கோயில் வழிபாடு அன்று வெட்டவெளி வழிபாடாகும். இவர்கள் பரந்த நிலத்தில் ஆணும் பெண்ணுமாய்க் கூடி, வேலன் ஒருவனது தலைமையில் வெறியாட்டுக்கு வேண்டிய பொருள்களோடு குரவைக் கூத்தாடித் தினையரிசியைப் பரப்பி ஆட்டுக்குட்டியை (செம்மறி) அறுத்து வெறியாடல் நிகழ்வித்து வழிபாடு இயற்றுவர். குரவைக் கூத்தாடும்போது முருகனது பல்வேறு புகழ்களைச் சொல்லிப் பரவுவர். இங்கு உருவ வழிபாடு கிடையாது. இம்முறையில் வழிபடும்போது இத்தெய்வம் மகிழ்ச்சியுற்றுத் தன்னை வெளிப்படுத்தி அருள்புரியும் என்பது மலைவாழ் மக்களின் எண்ணமாகும்.

**இரண்டாம் வகை**

இன்னொரு வழிபாடு, குறிஞ்சி நிலத்தினர் அல்லாத ஏனைய நகரத்து மக்கள் ஆற்றிய வழிபாடாகும். திருமுருகாற்றுப்படையும் பரிபாடலும் கூறுவது இத்தகு வழிபாடேயாகும். இது கோயில் உருவ வழிபாடாகும். முதல்வகை வழிபாட்டில் இடம்பெற்ற வேலன் தலைமை, குரவைக்கூத்து, மறியறுத்தல், வெறியாட்டு என்னும் நிகழ்வுகளில் எதுவும் இவ்விரண்டாவது வகை வழிபாட்டில் இடம்பெறமாட்டாது. முருகன் விரும்பி உறையும் இடங்களான பரங்குன்று, அலைவாய், ஆவினன்குடி, ஏரகம் ஆகிய நான்கு தலங்களில் நடைபெறும் வேறுவேறு வழிபாடுகள் திருமுருகாற்றுப்படையிலும் பரிபாடலிலும் விவரிக்கப்படுகின்றன. எனவே, இவை வெட்டவெளி வழிபாடுகளாய் ஆகாமல், மேற்கூரையோடு கூடிய தலவழிபாடுகளாயின.

**வழிபாட்டு முறை**

ஒவ்வொரு தல வழிபாட்டிலும் முருகனைச் சுட்டிய பல்வேறு செய்திகள் எடுத்துரைக்கப்படுகின்றன. இத்தெய்வத்தின் பிறப்பு, வளர்ப்பு, திருவுருவச் சிறப்பு, விரும்பி அணியும் மலர்கள் (காந்தள், வெண்கடம்பு, வெட்சி), உயர்த்திய கொடிகள் (சேவல், மயில்), ஊர்ந்து செல்லும் ஊர்திகள் (மயில், யானை, ஆட்டுக்கிடாய்), குன்றம் எறிந்தது, சூர் முதல் தடிந்தது முதலான செயற்கருஞ் செயல்கள் ஆகியன இன்றியமையாத செய்திகளாய் இவ்விரு நூல்களிலும்

கூறப்படுகின்றன. இவைதாம் வழிபாட்டிற்குரிய துதிகளாம். இத்தெய்வத்தை வழிபடுபவர்கள் தேவமகளிர், மானிடமகளிர், முனிவர்கள், திருமால் முதலான பிற தெய்வங்கள், அந்தணர்கள் ஆகியோராவர். திருமுருகாற்றுப்படையில் செவ்வேளை நோக்கி உச்சரிக்கும் மந்திரம் ஆறு எழுத்துக்கள் உடையது என்ற செய்தி சிறப்பாகச் சுட்டப்படுகிறது (பத்துப்பாட்டு, திருமுருகாற்றுப்படை, அடிகள்,186-187). அம்மந்திரம் 'நமோ குமாராய' என்பதாகும். இதனால், 'சரவணபவ' என்னும் ஆறெழுத்து வடமொழி மந்திரம் பிற்காலத்தது என்பது பெறப்படுகிறது.

**குமார மந்திரம்**

குமரன் என்பது 'எக்காலத்தும் இளையவன்' என்னும் பொருள் தரும் தமிழ்ச் சொல்லாகும். 'இப்பெயரை உச்சரித்து முருகனை வணங்குகிறேன்' என்பது 'நமோ குமாராய' என்னும் மந்திரத்தின் விளக்கமாகும் (உச்சரித்தல்ஸ்ரீபலமுறை திரும்பத்திரும்பச் செல்லுதல்). 'சரவணபவ' என்னும் மந்திரத்தின் விளக்கம். 'நாணற்காட்டுப் பொய்கையிடத்துப் பிறந்த இறைவன்' என்பதாகும். (சரவணம்ஸ்ரீநாணற்காடு பவம் ஸ்ரீபிறப்பு). பூவும், புகையும், சந்தனமும் வழிபாட்டிற்குரிய பொருள்களாக அமைகின்றன. இங்ஙனம், பழந்தமிழர் இருவகைப்பட்ட வழிபாடுகளை மேற்கொண்டு முருகனை வழிபட்டனர்.

**இடைக்காலத் தமிழர் வழிபாடு**

சங்க காலத்தை அடுத்த இடைக்காலத்தில் தோன்றிய பதினெண் கீழ்க்கணக்கில் இக்காலத்து முருக வழிபாடு பற்றிய செய்தி ஏதும் காணப்படவில்லை. திருவள்ளுவர் திருக்குறளில் முருகனைப் பற்றிக் குறிப்பிடவில்லை. இதனாலேயே அவர் காலத்தில் முருக வழிபாடு நிகழவில்லை என்று கருதக் கூடாது. இத்தெய்வத்தைப் பற்றிச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லாததால் அவர் கூறாது விடுத்தார் எனலாம். சிலப்பதிகாரம், பூம்புகாரில் முருகனுக்குக் கோயில் இருந்ததாக உரைக்கிறது (இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், புகார்க்காண்டம், இந்திரவிழவூர் எடுத்த காதை, அடி-170). இச்சான்றினால் அங்கு இத்தெய்வ வழிபாடு நிலவியிருத்தல் வேண்டும் என்பது புலனாகும்.

பின்னர் எழுந்த தேவாரம் முதலான சைவ சமயம் சார்ந்த பக்தி இலக்கியங்களில் முருகன் என்ற பெயரின் பரியாயப்பெயர் ஆங்காங்குச் சுட்டப்படுகிறது. எனினும், பெரிய அளவில் முருக வழிபாடு பற்றிய செய்திகள் இடம்பெறவில்லை. நாயன்மார்கள் வாழ்ந்த காலத்தில் சிவவழிபாட்டுக்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டதால் முருகவழிபாடு பரவலாக மேற்கொள்ளப்படவில்லை என்றுணரலாம். சங்க காலத்தில் பெருகி வளர்ந்த முருக வழிபாடு இடைக்காலத்தில் குன்றித் தேய்ந்ததை இவை காட்டுகின்றன. பழந்தமிழரும் முருகனைப் பல தெய்வங்களுள் ஒரு தெய்வமாக வைத்து வழிபட்டனரேயன்றி, இத்தெய்வம் மட்டுமே முழுமுதற் பொருள் என்ற கருத்தில் வழிபடவில்லை.

## முழு முதல் கோட்பாடு

முருகனே முழுமுதல் என்ற கோட்பாடு உருவானது ஆதிசங்கரர், குமரனைப் பரம்பொருளாகக் கொண்டு வழிபடும், 'கௌமார' சமயத்தை நிறுவிய பின்னர் ஆகும். இதன் விளைவாய்த் தமிழ்நாட்டிலும் பிற்காலத்தில் முருகனுக்குப் பரத்துவம் கற்பித்துக் கூறும் போக்கு நிலவியது. இதன் பிரதிபலிப்பைப் பதினாறாம் நூற்றாண்டிற்குப் பின்னர்த் தோன்றிய புலவர்களால் இயற்றப்பட்ட நூல்களில் காணலாம். கந்த புராணம், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், கந்தர் கலிவெண்பா, திருப்புகழ், சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் முதலான நூல்களில் முருகனே முழுமுதல் என்ற கோட்பாடு அழுத்தம் திருத்தமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்நூற்றாண்டுகளில் வாழ்ந்த தமிழரிடையே முருக வழிபாடே தனித்துவம் பெற்று மிக அதிகமாகக் கால்கொண்டு நிலைபெற்றதற்கு இந்நூல்கள் துணைபுரிந்தன. அந்நிலைமை தொடர்ந்து இன்றுள்ள தமிழரிடையேயும் நிலவுகிறது.

## முடிவுரை

சங்ககாலத் தமிழருடைய முருக வழிபாடுதான் இக்காலத் தமிழருடைய முருக வழிபாடாக உள்ளது. எனினும், வழிபாட்டு முறைகளில் மாற்றம் காணப்படுகிறது. சங்க இலக்கியங்கள் கூறும் வழிபாட்டிற்கும் இன்றுள்ள நடைமுறை வழிபாட்டிற்கும் வேறுபாடு உண்டு. வேறுபாடு இருந்தாலும் முருகன் எல்லாக் காலத்துத் தமிழராலும் வணங்கப்பட்ட தவிர்க்க முடியாத தெய்வமாக விளங்குகிறது என்பதை நாம் ஒப்ப வேண்டும்.

# தமிழ் இலக்கிய வரலாற்றில் முருகக்கடவுள்

**கோ. பாபு,**
உதவிப் பேராசிரியர் (தவில்)
இசைத்துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
சிதம்பரம்.

சங்ககாலம் முதல் இக்காலம் வரையில் முருகக்கடவுளைத் தமிழ்க்கடவுளாகப் போற்றி வருகிறோம். தமிழ் இலக்கிய வரலாற்றில் முருகக்கடவுள் பெறும் சிறப்பிடம் குறித்து ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது. "சேயோன் மேய மைவரை உலகமும்" (தொல்.பொருள். அகத்.5) முருகனைக் குறிஞ்சி நிலத்தின் தெய்வமாகத் தொல்காப்பியர் கூறுவார். சேயோன் என்பதற்கு முருகன், செவ்வேள் எனும் பொருள்களும் உண்டு. ஆனால் சேயோன் எனும் சொல் சங்க இலக்கியங்களில் ஓரிடத்தும் இடம் பெறவில்லை. சேய் என்பதற்குத் தொலைவு, சிவப்பு, குழந்தை, மகன் எனும் பொருள்கள் உள்ளன. இங்குக் குறிஞ்சி நிலத் தாய் தெய்வமான கொற்றவையின் மகன் எனும் பொருளையே சேய் எனும் சொல் தருகிறது. பழந்தமிழர் இயற்கை அழகையே கடவுளாகக் கொண்டு வணங்கினர். பச்சைப் பசேல் என்று காணப்பட்ட இயற்கையழகை மால் என்று வழங்கியதைப் போல் செவ்விய இயற்கையழகைச் சேய் என்று போற்றினர். இயற்கை வழிபாட்டின் அடிப்படையிலேயே சேயோன் என்ற பெயர் தோன்றியதாகக் கூறுவார் திரு.வி.க.

### முருகனின் பிறப்பு

வேதகாலமான கி.மு.500 கால கட்டத்தில் வடநாட்டில் சிவன், விஷ்ணு, முருகன், துர்க்கை போன்ற தெய்வங்கள் பல்கிப் பெருகின. "பைங்கட் பார்ப்பான் உமையொடு புணர்ந்த காம வதுவையுள் அமையாப் புணர்ச்சி அமைய நெற்றி இமையா நாட்டத் தொருவரங் கொண்டு" (பரிபாடல் 527.49) "அறுவர் பயந்த ஆறமர்ச் செல்வன்" (திருமுருகாற்றுப்படை) எனும் சங்க இலக்கியங்கள் முருகனின் பிறப்பு பற்றிக் கூறும், இந்திரனின் வேண்டுகோளின்படி ஒருமுறை சிவன் - உமையம்மை ஆகியோர் புணர்ச்சியைத் தவிர்த்து கருவினைச் சிதைத்து இந்திரனின் கையில் கொடுத்தனர். இந்திரனிடமிருந்து ஏழு முனிவர்கள் கருவினைப்பெற்று வேள்வித் தீயில் இட்டனர். பின் அக்கருவினை வானின் வடதிசையில் உறையும் ஏழு மகளிருள் கடவுள் கற்பினையுடைய அருந்ததி நீங்கலாக ஏனைய கார்த்திகை பெண்கள் அறுவரும் உண்டனர். அக்கார்த்திகைப் பெண்கள் கருவினை வளர்த்து இமய மலையில் உள்ள சரவணப் பொய்கையில் தாமரைப் பாயலில் அறுவரும் ஒருசேரப் பெற்றெடுத்தனர். முருகன் பிறந்ததால் இதழ் வாடாமல் அத்தாமரை மின்னியது. ஆகவே சரவணப் பொய்கையில் என்றும் நீர் வற்றாது காணப்படுகிறது.

### முருக வழிபாடு

இந்தச் சமயத்தில் முருகனை வழிபடுவது கௌமாரம் எனும் பிரிவாக இருந்தது. ஆனால் அது தமிழகத்தில் வளர்ச்சியடையாது வடநாட்டில் மட்டுமே இருந்தது. தமிழகத்தில் சைவ சமயம் தன்னுடைய நெறிமுறைகளோடு ஒத்திருந்த முருக வழிபாட்டைத் தன்னோடு இணைத்துக் கொண்டது. முருகனோடு தெய்வானை. சூரசம்ஹாரம் போன்றவற்றை இணைத்து முருகனை சுப்பிரமணியாகவும், கந்தனாகவும் முன்னிலைப்படுத்தி வைதீக ஆரிய கடவுளாக மாற்றினர். இவ்வாறு குறிஞ்சி நிலக் கடவுளாக இருந்த முருக வழிபாடு இன்று சைவ சமயக் கடவுளாக வளர்ச்சி பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

### நேர்ச்சை

இறைவனுக்குச் செலுத்தும் காணிக்கை நேர்ச்சை ஆகும். இதனைத் தொல்காப்பியர் தெய்வக்கடம் என்பர். முருகனுக்கு நேர்ச்சைப் பொருளாக மயில், குடாரி, பிணிமுகத்து, யானை ஆகியவற்றைப் பொன்னால் செய்து காணிக்கையாக்கினர் என்று பரிபாடல் கூறும்.

### வெறியாட்டு

தெய்வம் மக்கள் மீதேறி ஆடுவதை வெறியாட்டு என்பர். சங்க இலக்கியங்களில் வேலன், வெறியாட்டு எனும் சொற்கள் மிகுதியாக வருகின்றன. வேலன் எனும் சொல் முருக வழிபாட்டில் துணைநின்ற பூசாரியைக் குறித்து வந்தது. முருகக் கடவுளின் முன்னே வேலன் ஆடும் ஆட்டத்தை வெறியாட்டு என்பர். வேலன் காந்தள் மாலையை அணிந்து வேலைத் தாங்கி ஆடுவான். எனவேதான் முருகன் வேலன் என்று அழைக்கப்பட்டான் என்பதை, "வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டு அயர்ந்த காந்தளும்" (தொல்.புறம்.5) என்று தொல்காப்பியர் கூறுவார். "கொள்கவழ மிச்சில் மறுஅற்ற மைந்தர் தோள்எய்தார் மணந்தார் முறுவல் தலையளி எய்தார் - நின்குன்றம் குறுகிச் சிறப்பு உணாக்கால்" (பரிபாடல் 19 90-94) கன்னிப் பெண்கள் முருகன் பூசையில் யானையின் மிச்சிலை உண்ணும் அக்கால நம்பிக்கையைப் பரிபாடல் மூலம் அறியலாம்.

### முருகனின் இருப்பிடம்

குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருப்பான் என்னும் முதுமொழிக்கேற்ப முருகன் குடியிருக்கும் இடங்களாக கடுவன் இளவெயினனார், "அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும் கால்வழக்கு அறுநிலைக் குன்றமும் பிறவும்" (பரிபாடல்) என்று கூறுகிறார். "அணங்குடை முருகன் கோட்டத்து" (புறம்.199), "திருமணி விளக்கின் அலைவாய்ச் செருமிகு சேஎய்" (அகம்.266) திருச்செந்தூர் முருகன் கோவில் பற்றி சங்க நூல்கள் அகநானூறும் புறநானூறும் கூறும். "விண்பொரு நெடுவரை குறிஞ்சிக் கிழவ" (திருமுருகாற்றுப்படை-267), "பழமுதிர்ச் சோலை மலைகிழ வோனே" (திருமுருகாற்றுப்படை 317) முருகனின் அறுபடை வீடுகளாக நக்கீரர் பின்வருமாறு கூறுவார்.

1. திருப்பரங்குன்றம் (மதுரை), 2. திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்), 3. திருஆவிநன்குடி (பழனி), 4.திருவேரகம் (சுவாமிமலை), 5.குன்றுதோறாடல் (மலைப்பகுதி) 6. பழமுதிர்ச்சோலை (மதுரை) இவற்றோடு மருதமலை, இலஞ்சி குமாரசாமி கோவில், தென்காசி, திருமலைக்கோவில், ஆய்குடி, புளியங்குடி முருகன் கோவில்களும் பிரசித்திப் பெற்றவை. முருகன் கோவில்கள் அனைத்திலும் தைப்பூசம், கந்தசஷ்டி, பங்குனி உத்திரம் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. அறுபடை வீடுகளில் ஒன்றான திருவேரகம் என்னும் சுவாமிமலையை மலை நாட்டகத்து திருப்பதி என்பார் நச்சினார்க்கினியர். இயற்கை மணமும், இளமையும் எல்லாவற்றையும் கடந்தொளிரும் தன்மையும் அழியா அழகும் இலங்கும் இறைவனை முருகன் எனும் சொல்லால் அழைத்த தமிழர் கூர்த்த மதி புலனாகிறது என்பார் திரு.வி.க.

**முருகனைப் பற்றி எழுந்த நூல்கள்**

அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச்சிந்து, திரு.வி.க.வின் முருகன் அல்லது அழகு, பகழிக் கூத்தரின் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ், குமரகுருபரரின் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், கந்தர் கலிவெண்பா, அருணகிரிநாதரின் கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி, கந்தர் அந்தாதி, வேல் விருத்தம், மயில் விருத்தம், கச்சியப்ப சிவாச்சாரியாரின் கந்த புராணம், தணிகை புராணம் போன்ற நூல்கள் முருகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு எழுந்த நூல்களாகும். சங்க இலக்கியங்களான அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை, பரிபாடல், கலித்தொகை, பெரும்பாணாற்றுப்படை, பட்டினப்பாலை, மதுரைக்காஞ்சி, சிலப்பதிகாரம், திருவிளையாடல் புராணம் ஆகிய நூல்களும் முருக வழிபாடு பற்றியும் முருகனின் சிறப்புப் பற்றியும் எடுத்துக் கூறுகின்றன.

**இலக்கியங்கள் காட்டும் முருகன்**

“வெண்வேலான் குன்றில் விளையாட்ட யானகலேன் என்னோடுந் தோழிமீ வம்மெல்லாம்” (சிலம்பு, வாழ்த்துக்காதை 10) முருகப் பெருமான் வீற்றிருக்கும் குன்றத்திலே எப்போதும் ஓடியாடி விளையாடிக் கொண்டிருப்பேன் என்றும் தன்னை அங்குக் காணலாம் என்றும் தோழிகளிடம் கண்ணகி கூறுகிறாள். கடலாடு காதையில் மாதவியாடிய பதினொரு வகை ஆடல்களில் முருகனின் கூத்து முறையே துடி, குடை விவரிக்கிறார் இளங்கோ. “திருந்தப் புவனங் களீன்றபொற் பாவை திருமுலைப்பாலை அருந்திச் சரவணப் பூச்தொட்டி லேறி யறுவர் கொங்கை” (கந்தரலங்காரம் 5) பாலமுருகனுக்குத் திருமுலைப்பால் ஊட்டி வளர்த்தமையை அருணகிரிநாதர் கூறுகிறார்.

பாலுமுருகனுக்குத் திருமுலைப்பால் ஊட்டி வளர்த்தமையை அருணகிரிநாதர் கூறுகிறார். “முத்தமிழ்சேர் வித்துவசனக்கூட்டம் கலை முற்றிலும் உணர்ந்திடும் கொண்டாட்டம் நெஞ்சில் முன்னுகின்ற போது தொறும் தென்மலையில் மேவுகுறு முனிக்கும் அச்சம் செனிக்கும்” (அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச்சிந்து) இது கழுகுமலையில் கோயில் கொண்டுள்ள

முருகப் பெருமானுக்குக் காவடி எடுத்துச் செல்வோர் பாடுவதாய் அமைந்துள்ளது. "முழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல் வெண்துகில் மடித்தலம் நனைப்ப அம்மை மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி எம்பிரான் மார்பினிற் குரவையாடி முழவுமுதிர் துடியினிற் சிறுபறை முழக்கி யனல்மோலி நீர்பெய்த வித்து முளைமதியை நெளியரவின் வாய்மடுத் திளமானின் முதுபசிக் கறுகடுத்தி விழவுமுதிர் செம்மேனி வெண்நீறு தூளெழ மிகப்புழுதி யாட்டயர்ந்து விரிசடைக் காட்டினின் திருவிழிகள் சேப்பமுழு வெள்ளநீர்த் துளையம் ஆடி குழவுமுதிர் செவ்விப் பெருங்களி வரச்சிறு குறும்புசெய் தவன்வருகவு குழவுகமழ் தருகந்த புரியில் அருள்குடிகொண்ட குமரகுரு பரன்வருகவே" (முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்) முருகனின் திருவிளையாடலை வருகைப் பருவத்தில் குமரகுருபரர் நயம்பட விளக்குகின்றார்.

**முருகனுக்கு வழங்கப்படும் வேறுபெயர்கள்**

ஆறுமுகம், முழவுத்தோளன், திருமலை, சரவணன் செந்தில், கந்தன், சுப்பிரமணி, கார்த்திகேயன், நயத்தகுகுமரன், கடம்பன், கதிர்வேலன், செவ்வேளன், தலைவன், குமரன் ஆய்தேரோன், அடும்பபோராளன் போன்ற பெயர்களால் முருகன் அழைக்கப்படுகிறான். மக்களும் மேற்கண்ட முருகனின் திருப்பெயர்களைச் சூட்டி முருகன் அருள்பெற்று மகிழ்ச்சியுடன் வாழ்கிறார்கள்.

# முருக வழிபாட்டில் மந்திரங்களின் நம்பிக்கை

**ச. பாலசரஸ்வதி,**
உதவிப்பேராசிரியர்,
எஸ்.டி.என்.பி. வைணவ மகளிர் கல்லூரி,
குரோம்பேட்டை, சென்னை - 44.

சக்திதரன், ஸ்கந்தன், சேனாபதி, சுப்பிரமணியன், கஜவாகனன், சரவணபவன், கார்த்திக்கேயன், குமாரன், சண்முகன், தாரகாரி, சேனானி, பிரம்ம சாஸ்தா, வள்ளி கல்யாண சுந்தரர், பாலசுவாமி, கிரௌஞ்சபேதன், சிகி வாகனன் எனப் பல்வேறு சிலை அமைப்பில், பல காலங்களாக தமிழகத்தில் உருவ அமைப்போடு முருக வழிபாடு மேற்கொள்ளப்படுகிறது. இறை கொள்கை அனைத்துமே நம்பிக்கை அடிப்படையாக வைத்தே தோன்றியவை. கோவில்களிலும், மூலத்தானத்திலும் மந்திரத்தகடும், உள்ளதாகவும், சித்தர்கள் சமாதியின் மேலே கோயில் அமைப்பதாகவும் நம்பிக்கை உண்டு, எனவே சக்தியைக் கோயில்களில் மந்திரங்கள் மூலம்தங்கள் வேண்டுதலில்வெற்றி பெறவும் முடியும் எனநம்பப்படுகிறது.

மந்திரங்கள் ஒருமைப்பாடு, ஈர்ப்புத்தன்மை, செயல் வெற்றி போன்ற காரணங்களுக்காகப் பயன்படுத்தப்படுகின்றன. தமிழகத்தின் முருக வழிபாட்டிலும் மந்திர உச்சாடனங்கள் மற்றும் மாந்திரீகச் சடங்குகள் ஆகியவை இடம் பெற்றுள்ளன. சடங்குகள், தந்திரங்கள், புனைந்துரைகள், தத்துவங்கள் ஆகியவற்றை உள்ளடக்கிய மாந்திரீக வழிபாடுகள் மூலம் செயல்களை நிகழச்செய்யும் கிரியா ஊக்கி இயந்திரங்கள் எனப்படும். தாயத்துகள் மற்றும் சக்கரங்கள் எனப்படும் தாமரைப்பூ வடிவிலான வரைபடங்கள் ஆகியவை பயன்படுத்தப்படுகின்றன.

முருகவழிபாட்டில் ஆறு கோணச்சக்கரம் முக்கியமானதாயுள்ளது. தியானம் செய்கையில்மன ஒருமைப்பாட்டிற்குஓர் ஆதாரமாய் ஆறுகோணச் சக்கரம் பயன்படுத்தப்படுகின்றது. ஹென்றிச் சிம்மர் குறிப்பிட்டபடி[1] நுனிப்பாகம் மேல் நோக்கி இருக்குமாறு அமைக்கப்பட்டுள்ள முக்கோணம் ஆண் இன விருத்தி உறுப்பாகவும், கீழ்நோக்கி அமைக்கப்பட்ட முக்கோணம் பெண் உறுப்பாகவும் பாவிக்கப்படுகின்றது. அவை முறையேலிங்கம் மற்றும் யோனி எனக் கொள்ளப்படுகின்றன. அவ்விரு முக்கோணங்களுக்கும் நடுவில் அமைந்துள்ள மையப்புள்ளியானது உயிர்ச் சக்தியெனக் கொள்ளப்படுகின்றது. ஈர்ப்புச் சக்தியான அப்புள்ளி கந்தன் எனப்படுகின்றது. இவற்றைச் சுற்றி இரு தனிப்பட்ட வட்ட வளையங்கள் வரையப்பட்டு உள் வட்டத்தில் ஆறுதாமரை இதழ்களும், வெளிவட்டத்தில் 12 தாமரை இதழ்களும் வரையப்பட்டிருக்கும். அவற்றைச் சுற்றி பூபுரம் எனப்படும் மூன்று ஒத்த அளவுடைய இடைவெளியுடன் மூன்று சதுரங்கள் நான்கு பக்கங்களிலும் வாயில்களுடன் வரையப்பட்டிருக்கும்.

இச்சக்கரத்தினைப் பயன்படுத்தித் தியானம் மூலம் உடலியக்கத்திற்குக் காரணமாக விளங்கும்உள்மனதைக் கட்டுப்படுத்தி உயர்நிலை எய்தப் பயன்படும் இரு கருவியாக இச்சக்கரத்தினைக் கொள்ளலாம்.

திருமந்திரத்தில் கூறப்பட்டுள்ள "நமசிவாய" என்ற ஐந்தெழுத்து அல்லது பஞ்சாட்சர மந்திரத்தினையொட்டி முருகனுக்கு "சரவணபவ" என்ற ஆறெழுத்து அல்லது ஷடாட்சர மந்திரம் பயன்படுத்தப்படுகின்றது. அது ஆகர்ஷணம், மாரணம், மோகனம், தம்பனம், உச்சாடனம், வசியம் எனப்படும். "ஷட்கணம்" அல்லது ஆறு வகைப்பணிகளுக்குப் பயன்படுத்தப்படுகின்றது. மேலே கூறப்பட்ட ஐந்தெழுத்து அல்லது ஆறெழுத்து மந்திரங்களை முறைமாற்றி உச்சரிப்பின் விளைவுகள் வேறுபட்டதாயிருக்கும் என்ற நம்பிக்கை இந்திய வழிபாட்டுமுறைகளிலும் வேரூன்றலாயிற்று.[2]

சிவபெருமானின் ஐந்தெழுத்து மந்திரங்கள் கீழ்க்கண்டவாறு 25 சதுர கட்டங்களுக்குள் அடைக்கப்பட்டிருக்கும்.[3]

| | | | | |
|---|---|---|---|---|
| ந | ம | சி | வா | ய |
| ம | சி | வா | ய | ந |
| சி | வா | ய | ந | ம |
| வா | ய | ந | ம | சி |
| ய | ந | ம | சி | வா |

முருகனின் ஆறெழுத்து மந்திரமானது கீழ்க்கண்டவாறு 36 கட்டங்களுக்குள் அடைக்கப்பட்டுப் பயன்படுத்துப்படுகின்றது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ச | ர | வ | ண | ண | வ |
| ர | வ | ண | ப | வ | ச |
| வ | ண | ப | வ | ச | ர |
| ண | ப | வ | ச | ர | வ |
| ப | வ | ச | ர | வ | ண |
| வ | ச | ர | வ | ண | ப |

தமிழகத்தில் ஆறு வகைப் பணிகளுக்காக மேற்கண்ட சதுரங்களுக்குப் பதில் வேறு முறைகளும் பின்பற்றப்படுகின்றன. அவற்றுள் ஒன்று கீழ்க்கண்டவாறிருக்கும்.[4]

மந்திரங்களைக் கீழ்க்கண்டவாறு பலவகைப்பட்ட மரப் பலகைகளில் எழுதிவைத்து 1- 8 முறைகள் உச்சரித்தால் தாம் விரும்பிய பலன்களைப் பெறலாமென நம்புகின்றனர்.

| எண் | பயன் | மந்திரம் | மரம் | உச்சரிப்பு |
|---|---|---|---|---|
| 1 | வசியம் | ஓம்ரீம் ஐயும் கிலியும் ஒளம் சரவண பவ | விலவம் | 1008 |
| 2 | ஆகர்ஷணம் | ரீம் ஐயும் கிலியும் சௌம் ஓம் ரவண பவச | வெண்நாவல் | 1008 |
| 3 | மோகனம் | ஐயும் கிலியும் ஔம் சௌம் ஓம் ரீம் வண பவசர | அலரி | 1008 |
| 4 | தம்பனம் | கிலியும் ஔம் சௌம் ஓம் ரீம் ஐயும் ணபவ சரவ | ஆலம் | 1008 |

| | | |
|---|---|---|
| 5 உச்சாடனம் | ஓளம் செளம் ஓம் ரீம் ஐயும் கிலியும் பவ சரவண பலா | 1008 |
| 6 மாரணம் | செளம் ஓம் ரீம் ஐயும் கிரியும் ஓளம் வப சரவண வில்வம் | 1008 |

அருணகிரிநாதருக்குப் பின்னரே தமிழகத்தில் முருக வழிபாடு புத்துயிர் பெறலாயிற்று. வேலனை வெறியாடி வேண்டித் தமது தேவைகளை நிறைவு செய்து கொள்ளலாமென்ற நம்பிக்கை கொண்டிருந்தனர். முருக வழிபாட்டிலும் அந்த நம்பிக்கையின் சார்பில் மந்திரங்கள் இனைக்கப்பட்டுள்ளன எனக் கொள்வது பொருந்தும்.

**ஆய்விற்குதவிய நூல்கள்**

1. Henrich Zimmer, Myths and symbols in Indian Art and Civilisation, P-147.
2. O| malley Popular Hinduism> P-189.
3. திருமந்திரம் 904.
4. தமிழகத்தில் முருக வழிபாடு - மா.காந்திதாசன் (முருக வழிபாட்டில் மந்திரங்கள் ப-152).

# சங்க இலக்கியத்தில் முருகனின் வடிவமும், வழிபாடும்

முனைவர் வெ. பானுமதி
உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
ஸ்ரீ சாரதா மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சேலம் -16

சங்ககால மக்கள் இனக்குழுச் சமுதாயமாக வாழ்ந்து வந்தனர். இனக்குழுச் சமுதாயத்தில் பல்வேறு வகையான தெய்வங்களும், நம்பிக்கைகளும் வழிபாடுகளும் நிலவின. வழிபாடும் வழிபாட்டு முறையும் மக்களுடைய வாழ்வில் இணைந்தே இருந்தன. காலச்சூழல், சமூகம், மனிதனின் மனநிலை இவற்றைப் பொறுத்தே வழிபாட்டுமுறை மாறுபடுகிறது. அவ்வகையில் சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் முருகக் கடவுளை எவ்வாறு வழிபட்டனர், வழிபாட்டில் வைத்துள்ள பொருட்கள், சடங்கு முறைகள், நம்பிக்கைகள் போன்றவற்றை ஆராய்ந்து விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## சேயோன் வழிபாடு

சேயோன் மேய மைவரை உலகமும் தொல்காப்பியர் கூறும் மைவரை உலகில் குறிஞ்சி நில சேயோனாகிய முருக வழிபாடு கூறப்படுகிறது. குறிஞ்சி நிலத்து மக்களாகிய மலைவாணர் செவ்வேளை வழிபட்டு மன்னுயிர்களின் பசியும் பிணியும் பகையும் நீங்கி பருவமழை பொழிய மலைவளம் பெற அருள் புரிய வேண்டும் எனச் சேயோனை வழிபட்டனர். இத்தகைய செவ்வேள் வழிபாட்டினைச் சங்க இலக்கிய குறிஞ்சித்திணைப் பாடல்களும் திருமுருகாற்றுப்படையும் பரிபாடலும் சிறப்புடன் எடுத்துக் கூறுகின்றன.

## முருகனின் தோற்றம்

மனித இனத்தில் கடவுள் நம்பிக்கை உடையவரே பெரும்பான்மையினராக உள்ளனர். கடவுளுக்கான வடிவம் என்பது வழிபடுகின்ற மக்களின் மனநிலையைப் பொருத்து கட்டமைக்கப்படுகிறது. வழிபடுகின்ற மக்களின் சமூக பொருளாதார வாழ்வியல் சூழலே கடவுளின் வடிவத்தையும் வடிவமைக்கிறது. தனிமனிதனாலும் சமூகக் குழுவாலும் செயல்படுத்த முடியாதவற்றை இறைமையின் துணையுடன் நடத்த முற்படுகின்றான். மனிதன் இறைமையின் செயலுக்குத் தன்னிடம் இல்லாத சக்தி இருப்பதாக நினைக்கிறான். தமிழர்கள் கூட முருகு எனப்பட்ட ஓர் ஆற்றலையே முதலில் வணங்கினர். பின்னர் தனி மனிதன் சிந்தனை வளர்ந்த போதுதான் "முருகு", "முருகன்" ஆக்கப்பட்டான். இவ்வகையான குறிகளும், குணங்களும், குலங்களும் கொண்ட கடவுள்களும் அந்தந்தச் சமூகத்தின் தேவைக்கேற்ப அமைந்தவையாகும். தெய்வங்களின் வடிவம் அவை சார்ந்த சமூகத்தின் தேவைகளையொட்டி அமைந்துள்ளன.

திருப்பரங்குன்றத்தில் இருக்கின்ற இறைவனாகிய முருகன் மயில் மீது பேரொளிப் பிழம்பாக அமர்ந்து அன்பர்களுக்கும் காட்சித்தருவான். அப்போது குற்றமற்ற கற்பினையுடைய தன் மனைவி தெய்வானையை ஒருபக்கத்தில் கொண்டு தெய்வானையின் கணவனாய் காட்சியளிக்கிறார் என நக்கீரன் கூறுகிறார்.

குறிஞ்சி நிலத்தின் பறவைகளில் அழகுடைய பறவை மயில் என்பதை அறிந்த மக்கள் அவ்வழகுடைய பறவையின் மீது முருகன் அமர்ந்து வருவது அழகு என்று நினைத்தே மயிலை முருகனின் வாகனமாக கொண்டிருக்க வேண்டும்.

"எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பான்" என்கிறார் சிவஞான சித்தியார். இவ்வரிகளின் மூலம் இல்லற வாழ்வின் மேன்மை கணவனும், மனைவியும் சேர்ந்து இருப்பதே என்பதை இறைமையோடு தொடர்புபடுத்தி உணர்த்தப்படுகிறது. எனவே முருகனும் தெய்வானையும் இணைந்து காட்சி தருவது உயர்ந்த பண்பாக அடையாளப்படுத்தப்பட்டது.

முருகனைக் கடம்பமாலை புரளும் மார்பினன் என்கிறார் நக்கீரர். முருகன் கடம்ப மரத்திற்கு ஒப்பானவனாக காணப்படுகின்றான். தலையிலே காந்தள் மலர்களைக் கொண்டு தொடுத்துக் கட்டிய மாலையை அணிந்திருக்கிறாள். கடம்ப மலரும், காந்தள் மலரும் குறிஞ்சி நிலத்தின் அடையாளத்தைத் தாங்கி நிற்கின்றன.

திருச்செந்தூரில் முருகன் ஆறுமுகத்தோடு தோன்றுகிறார். ஆறுமுகத்தை உடைய இறைவனுக்குப் பன்னிரு கைகள் அமைந்துள்ளன. பன்னிரு கைகளுக்கும் தொழில்களை வரிசைப்படுத்துகிறார்.

சேய் என்பது செந்நிறமுடைய செவ்வேளைக் குறிக்கும். மணம், மொழி, மெய் உலகுகளைக் கடந்து சேய்மையில் நிற்றலான் முருகன் சேயோன் எனப்பட்டான் எனக் கருத்துரைப்பர். செவ்வேளின் நிறம் கதிரவன் ஒளி ஒளிக்கும் என்பார் கடுவனிளவெயினனார். கொழுந்து விட்டெரியும் தீயின் நிறம் உவமையாக்குவர் நப்பண்ணனார்.

மக்களின் வாழ்வியல் சூழலில் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள தங்களது இறைவன் எத்தகைய தோற்றத்தில் இருந்தால் அவர்களைத் துன்பத்திலிருந்து விலக்கி நயம் பயக்கும் என்ற விருப்பத்தின் வெளிப்பாடாகவே இவ்விதமான வடிவங்களில் முருகனை வழிபட்டனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

*"ஞாயிற் றேர் நிறத்தகை"* (பரி. 5.12)
*"உருவும் உருவத்தீ யொத்தி"* (பரி. 19-99)

இவ்விரு உவமைகள் தவிர அவர் நிறத்துக்கு வேறு உவமை காணப்பட்டிலது.

**முருகனின் வழிபாடு**

தமிழ்ச் சமூகத்தின் வழிபாட்டுக் கூறுகளை நாம் ஆய்கின்ற போது இருவிதமான போக்குகளைக் காணமுடியும். மனித வாழ்வின் ஒவ்வொரு கால கட்டத்திலும் சமூக தேவைகள் மாறுபட மாறுபட மனிதர்கள் வழிபட்ட தெய்வங்களின் பண்புகள் தோற்றங்கள் வழிபாடுகள் போன்றவையும் மாற்றம் பெற்றே வந்தது. சங்க கால வாழ்வில் குறிஞ்சி நிலக்கடவுள் முருகன் சிறுதெய்வ வழிபாட்டின் கட்டமைப்பில் காணப்படுகின்றான். திருமுருகாற்றுப் படையில் சில இடங்களில் பெருந்தெய்வ வழிபாட்டின் தொன்மமான மந்திரச் சடங்குகளுடன் வழிபடுவதைக் காணமுடிகிறது. இரு வழிபாட்டு போக்குகளும் தமிழ்ச் சமூகத்தின் ஆன்மீக சூழலில் முருகன் வழிபாட்டில் செயல்படுவதைத் திருமுருகாற்றுப்படை தெளிவுபடுத்துகிறது. குறிஞ்சி நிலக் கடவுளாகத் தோன்றிய முருகன் பெருந்தெய்வமாக சிவன், பார்வதியின் மகனாக வளர்ந்த சூழலும் கவனிக்கத்தக்கது.

**சிறுதெய்வ வழிபாட்டில் முருகன்**

சங்க காலத்தில் முருகனோடு தொடர்புடையதாக வெறியாட்டு நிகழ்ந்தது. முருகனுக்குரிய வேலினைக் கையில் ஏந்தி ஆடியோன் வேலன் எனப்பட்டான். வேலனின் வெறியாடல் பற்றிய அகப்பாடல்கள் கூறுகின்றன.

இடுக்கண் யாவற்றிற்கும் முருகனே காரணம் என்று கூறுவது வேலனுடைய இயல்பு. மகளின் மெலிவுக்குக் காரணம் யாதென அறியாத தாய் ஊர் வேலனைக் கூப்பிட்டுக் கேட்டாள். அவன் சில சடங்குகளை இயற்றி முருகனே அவள் மெலிவுக்குக் காரணம் என்று கூறுவாள். இது பற்றிய குறிப்புகள் பலவாகக் கிடைக்கின்றன. தலைவியின் மெல்லிய தோள் நெகிழ்விற்கு முருகனே காரணம் என்று கூறிய வேலனைக் குறுந்தொகையும் ஐங்குறுநூறும் கூறுகிறது. வெறியாடும் களம் அகன்றதாக இருந்தது. அக்களத்தின் கண் செந்நெல்லின் வெண்பொறிகள் சிதறிக்கிடந்தன.

*"வேலன் புனைந்த வெறியயர் களத்தொறும்*
*செந்நெல் வான்பொறி சிதறியன்ன"* (குறுந் - 53)

வெறியாடும் வேலன் கழற்காயைத் தன் மெய்யிலணிந்து கொண்டான். படிமம் அமைந்த கலத்தினைத் தூக்கிக் கொண்டு முருகனே தலைவியை அச்சுறுத்தியதாக கூறினான்.

*"பொய்யா மரபின் ஊர்முது வேலன்*
*கழங்கு மெய்ப்படுத்துக் கன்னந் தூக்க*
*முருகென மொழியும்"* (ஐங்-45)

வெறிக்களத்தில் மணல் பரப்பினர்.

*"பெய்ம்மணல் முற்றம்"* (ஐங்-248)

வெறியாட்டின் அசைவுக்கு மயிலின் ஆட்டமும் விறலியின் ஆட்டமும் உவமைகளாகக் கூறப்பட்டுள்ளன.

**பலியிடுதல்**

வெறியாடும் பொழுது ஆட்டுக் குட்டியைப் பலியிடுதல் மரபாகும். அதன் குருதியினைத் தினையரிசியோடு சேர்த்துத் தூவுவர்.

*'மறிக்குரல் அறுத்துத் தினைப்பிரப் பிரீஇ'* (குறுந்-265)

சிறிய தினையினை மலரோடு விரவிச் சிதறுவதும் ஆட்டுக்கிடாயினை அறுப்பதும் திருமுருகாற்றுப்படையில் கூறப்பட்டுள்ளது. வெறியாட்டின் போதும், பிற விழாக்களின் போதும் இன்னிசைக் கருவிகள் முழங்க ஆடலும், பாடலும் நிகழ்வது வழக்கமாக இருந்தது.

*"வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்*
*குழலகவ யாழ்முரல ..."* (பட்டினப் -155-158)

இச்செய்திகள் மூலம் முருகனை வழிபட குரவையாட்டு வெறியாட்டு, காவடியாட்டம், இசைக்கருவிகளை இசைத்து வழிபடுதல் போன்றவை அடித்தட்டு மக்கள் பயன்படுத்திய வழிமுறை என்பதையும் அறியமுடிகிறது.

மலைப்பக்கத்தில் உள்ள நல்ல ஊர்களைப் பசியும், பிணியும், பகையும் அண்டாது இருக்க வேண்டும் என்பதற்காக குறமகள் கொழுத்த கிடாயினது குருதியோடு பிசைந்த தூய வெள்ளரிசியைச் சிறு பலியாக இட்டு பலியிடத்தில் வைத்தனர் என நக்கீரர் குறமகள் முருகனை வழிபட்ட சூழலைக் குறிக்கிறார். இதன் மூலம் பலியிட்ட முருகனை வழிபட்டச் செய்தியையும் அறிய முடிகிறது.

**பெருந்தெய்வ வழிபாட்டில் முருகன்**

பூணூற் சடங்கிற்கு முன் ஒரு பிறப்பு, பின் ஒரு பிறப்பு என இரு பிறப்பினை உடையவர்களான அந்தணர்கள் தாங்கள் வழிபடவேண்டிய முக்காலமும் அறிந்து பூணூலையும் புலராத ஆடையையும் அணிந்து கொண்டு கைகளைத் தலைமேலே குவித்து வணங்கிய வண்ணம் முருகப்பெருமானைப் புகழ்ந்து பாடிகொண்டு ஆறு எழுத்துக்களைக் கொண்டுப் பெறுவதற்கு அருமையான சரவணபவ என்னும் மந்திரத்தை நாவினை அசைத்து பலமுறை ஒலித்தும் மலர்களைத் தூவி முருகனைத் திருவேரகம் என்னும் திருத்தலத்தில் வழிபட்டனர். வேதங்களைக் கற்ற அந்தணர்கள் பூக்களை மட்டுமே முருகன் மீது தூவி "சரவணபவ" என்ற வேத மந்திரத்தைப் பலமுறை நாவினை அசைத்து ஒலித்து வழிபட்டனர் என்று நக்கீரர் கூறுகிறார். இச்செய்தி பெருந்தெய்வ வழிபாட்டை வெளிப்படுத்துகிறது.

முருகவேலை வழிபடச் செல்வோர் தம்முடன் சந்தனம், பலவகை நறும்புகைகள், நந்தா விளக்கு, மண மலர்கள், முழவு, மலரி, கயிறு, மயில், குடாரி, யானை, குழை, பூவாடை, வேல் முதலியன கொண்டு செல்வர்.

**வழிபாட்டு மரபில் நம்பிக்கைகள்**

பரிபாடலில் முருகன் பற்றிய பாடல்களில் பயின்று வந்துள்ள நம்பிக்கைகளாவன:

சூள் பொய்ப்பின் தெய்வம் வருத்தும் என்பதை,

*"என்னை அருளி அருள் முருகுசூள் சூளின்*
*நின்னை அருள்இல் அணங்கான் மெய்வேல் தின்னும்"* (8:65 -66)

என்ற அடிகளிலும் சிறந்த அறங்களைச் செய்பவர் தேவர் உலகம் அடைவரஎன்ற நம்பிக்கையை,

*"அறம் பெறிது ஆற்றி, அதன் பயன் கொண்மார்*
*சிறந்தோர் உலகம் படருநர் போல"* (19:10-11)

என்ற அடிகளிலும் வேள்வியின் வாயிலாக விரும்பியதைப் பெறலாம் என்பதை,

*"வேள்வியின் அழகுஇயல் விளம்புவோரும்"* (19:43)

என்ற அடியும் தெளிவாக்குகின்றன. தன் மகளுக்கு ஏற்பட்ட நோயை நீக்க வெறியெடுக்கும் அன்னை முருகவேலுக்குப் பலியிட்டால் நோய் நீக்கும் என நம்பியதை நற்றிணைப் பாடல் எடுத்துரைக்கிறது.

*"வெறிஎன உணர்ந்த உள்ளமொடு மறி அறுத்து*
*அன்னை அயரும் முருகு"* (நற்: 47: 9-10)

நாட்டு வளம் பெருக மழை வேண்டி தெய்வத்தை வழிபட்டு மழை வரும் என நம்பினர் பழந்தமிழர். இதனை,

*"மலைவான் கொள்கென உயிர்ப்பலி தூஉய்*
*மாரிஆன்று மழைமேக்கு உயர்க எனக் ...."* (புறம்: 143:1-3)

எனும் பாடல் புலப்படுகிறது.

**முடிவுரை**

இல்லற வாழ்வின் மேன்மையை உணர்த்த தெய்வானையோடு காட்சி தந்த முருகன், அதர்மத்தை அழிக்க ஆறுமுகத்தோடு காட்சி தருகின்றான். துறவின் புனிதத்தைப் போற்ற ஆண்டியாய் நிற்கின்றான். இசையால் ஆடிப் பாடி வணங்கத் தக்கவனாகவும், பலியிட்டு வணங்கத் தக்கவனாகவும், சரவணபவ என்று மந்திரம் சொல்லி வணங்கத் தக்கவனாகவும் எல்லா நிலையிலும் உள்ள தமிழ் மக்களின் கடவுளாக முருகன் இருப்பதை சங்க இலக்கயங்கள் உணர்த்துகின்றன.

# கந்தர் கலிவெண்பாகாட்டும் முக்கனிகள்

முனைவர் மு. பானுமதி,
ஆர்.9, 'இளங்கோவில்'
கோவைப்புதூர்
கோயம்புத்தூர் - 641 042.

முருகப் பெருமானைப் போற்றிக் குமரகுருபரர் இயற்றிய கந்தர் கலிவெண்பா மூன்று பகுதிகளாக அமைந்துள்ளன. இவற்றின் பொருள் பற்றி அறியும் நோக்கில் இக்கட்டுரை அமைந்துள்ளது.

## குமரகுருபரர் வரலாறு

திருநெல்வேலி மாவட்டத்தில் ஸ்ரீ வைகுண்டம் என்னும் நகரில் கைலாசபுரம் என்னும் பகுதியில் சண்முகசிகாமணிக் கவிராயருக்கும், சிவகாமசுந்தரி அம்மையாருக்கும் சஷ்டி விரதத்தின் பலனாக குமரகுருபரர் ஆனித் திங்கள், திருவாதிரை நாளில் அவதரித்தார். நான்கு வயது வரை குமரகுருபரர் பேசும் திறனின்றி இருந்தார். இவரின் பெற்றோர் திருச்செந்தூரில் விரதம் இருந்து வேண்டியதன் பலனாக சண்முகநாதரின் அருளினால் குமரகுருபரர் 'சண்முகவிலாசம்'என்னும் கோயில் மண்டபத்தில் அமர்ந்து 'பூமேவு செங்கமலப் புத்தேளும்' எனத் தொடங்கி கந்தர் கலிவெண்பாவினைப் பாடிமுடித்தார்.

## நூல் அமைப்பு

கந்தர் கலிவெண்பா என்பது இந்நூலின் பெயர். கந்தர் என்பது முருகப் பெருமானின் திருநாமம். கலிவெண்பா என்பது தமிழ்ப் பாடலில் ஒருவகை. தமிழில் உள்ள நான்கு வகைப் பாக்களில் வெண்பா, கலிப்பா என்ற இரு பாக்களும் சேர்ந்து அமைந்தது கலிவெண்பா. இதுவெண்பாவின் ஒருவகை. சிவபெருமான் சம்பந்தமும், உமாதேவியால் சம்பந்தமும் பெற்ற முருகப் பெருமான் மீது, கலிப்பாவின் சம்பந்தமும், வெண்பாவின் சம்பந்தமும் பெற்ற கலிவெண்பாவினால் பாடப்பட்டது. கந்தர் கலிவெண்பா என்று திரு கி.வா.ஜ. அவர்கள் சுவையாகக் குறிப்பிடுகிறார். பூக் கண்ணிகளால் உருவாக்கப்படும் பூமாலை போன்று 122 கண்ணிகளால் உருவாக்கப்பட்ட இப்பாமாலை 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும்.

## மூன்றுபகுதிகள்

கந்தர் கலிவெண்பாவில் முதல் பகுதி சைவ சித்தாந்தக் கருத்துகளும், அடுத்த பகுதி முருகனுடைய வரலாறும், நிறைவுப் பகுதியாக முருகனிடம் விண்ணப்பித்துக் கொள்ளும் வேண்டு கோளும் அமைந்து சைவ சித்தாந்த நூல், கந்தபுராணம், சஷ்டி கவசம் இவற்றின் சுருக்கமாக விளங்குகின்றது. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பதாக கந்தர் கலிவெண்பாவில் அமைந்துள்ள மூன்று பகுதிகளிலும் சிலவற்றைக் காண்போம்.

**முதல் பகுதி- சைவசித்தாந்தக் கருத்துக்கள்**

கந்தர் கலிவெண்பாவின் முதல் பகுதியாக விளங்கும் சைவ சித்தாந்தக் கருத்துகளில் முருகனைப் போற்றிப் புகழ்கிறார் குமரகுருபரர். சித்தாந்த சாத்திரங்களும், உபநிடதங்களும் பரமசிவனுக்கு என்ன என்ன கொள்கைகள் கூறப்பட்டுள்ளதோ அவற்றை எல்லாம் முருகனுக்கு அமைத்துக் கந்தர் கலிவெண்பா பாடியுள்ளார் எனில் முழுமுதற் கடவுளான சிவத்தில் முருகனைக் காண்கிறார் என்பதைவிட சிவத்தையே முருகனாகக் கொண்டு பரமசிவனே முருகனாக எழுந்தருளியிருப்பதாகக் கொள்கிறார் குமரகுருபரர்.

*'பூமேவு செங்மலப் புத்தேளும் தேறரிய*
*பாமேவு தெய்வப் பழமறையும் தேமேவு*
*நாதமும் நாதந்த முடிவும் நவைதீர்ந்த*
*போதமும் காணாதபோதமாய்'* -கந்தர் கலிவெண்பா

தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரம்மாவினால் இறைவனை அறியமுடியாது. பிரம்மா எப்போதும் உரைப்பது வேதம் அந்த வேதத்தினாலும் இறைவனை அறிய முடிவதில்லை. தெய்வத் தன்மை உடைய நாதத்தினாலும் இறைவனைக் காணமுடியாது. அதற்கு முடிவான இடத்திலும் இறைவனைக் காணமுடியாது. குற்றம் இல்லாத அறிவினாலும் இறைவனை அறியமுடியாது. அதாவது வேதத்தை உரைப்பது பிரம்மா, வேதம் உரைப்பது இறைவனை இவ்விருவரினாலும் கூட இறைவனை அறியமுடியாது. அறிவு அனுபவத்தைக் கொடுக்காது ஆதலால் பக்தி என்னும் அனுபவத்தின் துணைகொண்டே இறைவனை அறியமுடியும் என்கிறார்.

இவ்வாறாக 36 தத்துவங்களாக உள்ள சைவசித்தாந்த கருத்துக்கள் முதலில் நாததத்துவமாகவும் இறுதித் தத்துவம் பூமி அல்லது மண் என்பதாகவும், இவை எவற்றிலும் இறைவன் அடங்கமாட்டான் என்பதாகவும் உள்ளது. இம் 36 தத்துவங்களைக் கந்தர் கலிவெண்பாவில் சைவசித்தாந்தக் கருத்துக்களின் எளிய சுருக்கமாக அமைத்து முதல் பகுதியில் குமரக் கடவுளைப் போற்றியுள்ளார்.

**இரண்டாம் பகுதி,கந்தபுராணச் சுருக்கம் :**

கந்தர் கலிவெண்பாவின் இரண்டாம் பகுதியாக முருகப் பெருமானின் அவதாரமும், அழகும், திருவிளையாடல்களும் கூறப்பட்டுள்ளது.

*'அன்னவள் கண்டு அவ்வுருவம் ஆறினையும் - தன் இரண்டு*
*கையால் எடுத்தணைத்துக் கந்தன் எனப் பேர் புனைந்து*
*மெய்யாறும் ஒன்றாக மேவுத்துச் - செய்ய* (கந்தர் கலிவெண்பா)

அம்பிகை ஆறு ஒளிகளையும் தன் இரண்டு கைகளாலும் சேர்த்து எடுத்து அணைக்க ஆறுமுகமும், பன்னிரு திருக்கரங்களும் உடையவனாக ஞானமும் அருளும் தோன்ற நின்றான் முருகன். கந்தன் எனப் பெயர் பெற்றான் என்று முருகக் கடவுளின் அவதாரம் கூறுகிறார் குமரகுருபரர்.

*'ஓதிய ஐந்து ஓங்காரத்து உள்ளொளிக்குள் உள்ளொளியாய்'*
- கந்தர் கலிவெண்பா

ஓங்காரம் என்பது ஓர் அடையாளம், முருகன் தனது வாகனமாகிய மயிலை அணைத்து நிற்பதைக் கோடிட்டுப் பார்த்தால் அது பிரணவமாகத் தோன்றும் என்று சப்தமாக விளங்கும் ஓங்காரத்தை உள்ளத்தில் தியானிப்பவர்கள் முருகப் பெருமானை உள்ளொளியாகக் காண்பர் என்று ஓம்கார வடிவழகு காட்டுகிறார் குமரகுருபரர். மற்றும்,

*'தெவ்வர் உயிர் சிந்தும் திருமுகம்'*
*'பேரின்ப வாழ்வுதரும் செய்ய மலர்முகம்'*
*'ஆகமங்கள் யாவும் முடிக்கும் கமலமுகம்'*
*'போகம் உறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும்*
*மோகம் அளிக்கும் முகமதி*
*'வரம் பலவும் தந்தருளும் தெய்வமுகம்'*
*பாச இருள் துறந்துபல் கதிரிந் சேதிவிடும்*
*வாசமலர் வதனமண்டலம்'* - கந்தர் கலிவெண்பா

பகைவரை அழிக்கும் வீரத்திருமுகம் ஒன்று, பேரின்ப வாழ்வு தரும் ஞானத் திருமுகம் ஒன்று, ஆகமங்களை அறிவிக்கும் மலர்த்திருமுகம் ஒன்று, வள்ளிக்கும், தெய்வானைக்கும் காட்டும் காதல் திருமுகம் ஒன்று, வரம் பலவும் கொடுக்கும் அருள் திருமுகம் ஒன்று, உள்ளத்து இருளை அகற்றும் சோதித்திருமுகம் ஒன்று என்று ஆறு திருமுகங்களைக் குறிப்பிடுகின்றார். இவ்வாறாக 'கேசாதிபாத வருணனை' என்னும் திருமுடி, திருமுகம் ஆறு, பன்னிரு கரங்கள், மணிமார்பு, திருவடி என்று தலை முதலாக பாதம் வரை திருமுருகனின் திருக்கோலத்தைப் போற்றிப் புகழ்கிறார் குமரகுருபரர். மேலும்,

*'மூவர் குறைமுடித்து விண்ணம் குடியேற்றித் தேவர்*
*சிறைவிடுத்து ஆட்கொண்டு அளித்த தேவே'*
- கந்தர் கலிவெண்பா

பிரமன், திருமால், உருத்திரன் ஆகியவர்களுடைய மனக்குறையை நிவர்த்தி செய்து (சூரபன்மனை அழித்து) சிறையில் வாடிய தேவர்களை மீட்டு வாழ வைத்தான் முருகன் என்று முருகப் பெருமானின் அவதார நோக்கத்தைக் கூறுகிறார்.

**மூன்றாம் பகுதி - இறைவனிடம் விண்ணப்பம்**

'பழுத்த தமிழ்ப் புலமை பாலித் - தொழுக்கமுடன்
*இம்மைப் பிறப்பில் இருவாதனை அகற்றி*
*மும்மைப் பெருமலங்கள் மோசித்துத் - தம்மைவிடுத்*
*தாயும் பழைய அடியாருடன் கூட்டித்*
*தோயும் பரபோகம் துய்பித்துச் - சேய*
*கடிஏற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட் கொண்*
*டடியேற்கு முன்னின் றருள்'*.

நல்ல தமிழ்ப் புலமையினைக் கொடுத்து அதன் பயனான ஒழுக்கமும் எனக்கு அளிக்கவேண்டும். ஆணவம், கண்மம், மாயை என்ற உணர்வு அகற்ற வேண்டும். அதற்கு நல்லோர் உறவு வேண்டும். இறைவனுடன் இணையும் போகமாகிய பரபோகத்தை அளிக்கும் பரமானந்தம் வேண்டும். இனிப் பிறவாதிருக்க உனது திருவடியாகிய முக்தி என்னும் வீட்டை அருள்வாயாக என்று முருகப் பெருமானிடம் வேண்டி விண்ணப்பிக்கிறார் குமரகுருபரர்.

**நிறைவுரை**

இவ்வாறாக குமரகுருபரர் முதலில் பரம்பொருளின் தத்துவத்தையும், பின்பு அவரது அவதாரத்தையும், நிறைவாக இறைவனிடம் செய்யும் பிரார்த்தனையும் என்பதான மூன்றுப குதிகளை, ‘கந்தர் கலிவெண்பாவில்’ முக்கனியாக அளித்துள்ளார். இம்முக்கனியின் சுவையினையும், பயனையும் குமரகுருபரரின் கருணையினாலும் இறைவனின் திருவருளினாலும் பெறும்பேறினை அடைவோம்.

**பார்வை நூல்கள்**

1. கந்தர் கலிவெண்பா, குமரகுருபரர்
2. கந்தர் கலிவெண்பா, கி.வா.ஜகந்நாதன் (உரை).

## சங்க இலக்கியத்தில் முருகன்

முனைவர் சா. பூங்கொடி
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
ஸ்ரீ சாரதா மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சேலம்

செம்மொழியான தமிழ் மொழியின் பெருமையைப் பறைசாற்றும் விதமாக அமைகின்ற சங்க இலக்கியங்கள் பண்டைய மக்களிடையே வழக்கிலிருந்த பழக்க வழக்கங்களை எடுத்தியம்பும் கலாச்சாரப் பெட்டகங்களாகத் திகழ்கின்றன. வழிபாடு என்பது சமூக வாழ்வின் ஓர் அங்கமாகும். தம் முன்னோர்களின் மரபுப்படி மக்களால் மேற்கொள்ளப்படும் வழிபாட்டின் மூலம் அக்காலத்து மக்களின் வாழ்வியலைச் சற்றுக் கணிக்கவியலுகின்றது. சங்ககால வழிபாடுகளுள் சிவன், திருமால், முருகன், பிரம்மன், மன்மதன், கொற்றவை போன்ற நிலம் சார்ந்த தெய்வங்கள் இடம்பெற்றுள்ளன. சங்ககால மக்களின் வாழ்க்கையானது இயற்கை, கடவுள் நம்பிக்கை இவற்றுடன் தொடர்புடையதாகவே அமைந்துள்ளதைச் சங்கப் பாக்கள் எடுத்துரைக்கின்றன. ஐவகை நிலத்தையும், மக்களையும் உரைக்கும் இலக்கியம் மக்களுக்கான தெய்வ வழிபாட்டையும் எடுத்துரைக்கின்றது. இந்நிலையில் குறிஞ்சி நில தெய்வமாகிய முருகப்பெருமானின் சிறப்பகளை எடுத்துரைக்கும் விதமாக இக்கட்டுரை அமைகின்றது.

### முருகன் வழிபாடு

அழகிற்கும், இளமைக்கும் தமிழுக்கும் குறியீடாக விளங்கும் முருகன் பழந்தமிழ் இலக்கியங்களில் சேயோனாகச் சுட்டப்படுகின்றான். முருகனுக்குரிய வேறுபெயர்களாகச் செவ்வேள், நெடுவேல், விறல்வேள், சேயோன், நெடியோன், முருகு, முருகன் போன்ற சிறப்புப் பெயர்களாகவும், இறை, கடவுள், தெய்வம், என்பவை பொதுப்பெயர்களாகவும் இலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றன. *சேயோன் மேய மைவரை உலகம்* என்ற தொல்காப்பிய அடிக்கு, குறிஞ்சி நிலமும் அந்நிலத்துக்குக் கடவுளாக முருகனும் சுட்டப்படுகின்றான். உயர்ந்தோங்கும் மலையுடன் வாழ்ந்க மக்களுக்குக் கடவுளாக முருகன் குறிப்பிடப்படுவதால் பழந்தமிழர் மலைமீது வாழ்ந்தனர் என்பது புலப்படுகிறது.

*“மன்ற வேங்கை மலர்சில கொண்டு*
*மலையுறை கடவுள் குலுமுதல் வழுத்தித்*
*தேம்பணிச் செய்த ஈர்னருங் கையல்”*

என்ற அடிகள் மலையுறைக் கடவுளான முருகனுக்கு வேங்கைப்பூ கொண்டு வழிபாடு நடத்தினர் என்பதைக் காட்டுகின்றன. காதல் கொண்ட மகளிரின் மெய் வேறுபாடும் முருகனால் ஏற்பட்டது என்ற எண்ணம் பழந்தமிழ்ச் சமுதாயத்தில் நிலவி இருந்ததை அக்கால நூல்கள் வாயிலாக அறிய முடிகின்றது.

*"வேறியென உணர்ந்த வேலன்"*
*"வேலன் வெறிஅயர் களத்து"*

என்ற அடிகள் காதலரின் அக உணர்வுக்கு முருகனின் வழிபாடு ஒரு ஊகமாக அமைந்திருந்தது என்பதைப் புலப்படுத்துகின்றன.

**முருகனின் பிறப்பு**

சிவபெருமானுக்கும் உமையம்மைக்கும் மகனாகப் பிறந்தவன் முருகன் என்பதைப் பல இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. சனகாதி முனிவர் நால்வருக்கும் ஞானம் உபதேசிக்கக் கல்லால மரநிழலில் வீற்றிருக்கும் மகேசன் மகன் நீண்டுயர்ந்த மூங்கில் நிறைந்த இமயவன் மலையரசி உமையம்மையின் அருமைச்செல்வன் முருகன் என்பதை,

*"ஆல்கெழு கடவுள் புதல்வ மால்வரை*
*மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே*
*வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ"*

என்ற அடிகள் சுட்டுகின்றன. இந்திரன் சிவபெருமானுக்கும், உமாதேவிக்கும் குழந்தை பிறக்கக் கூடாது என விரும்புகிறான். இதனைச் சிவனிடம் வேண்டுகிறான். ஆனால் அதற்கு முன்பே உமாதேவி கருவுற்றிருந்தாள். சிவன் இந்திரனுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற அக்கருவைப் பல துண்டங்களாக வெட்டினான். அக்கருவை முனிவர் எழுவர் பெற்றத் தீயை மூட்டி அதில் அவியோடு பெய்தனர். பின்னர் முனிவர் மனைவியருள் அருந்ததி நீங்கலாகக் கார்த்திகைப் பெண்டிர் அறுவரும் உண்டு கருப்பங்கொண்டு சரவணப்பொய்கையில் தாமரைப் பூவாகிய பாயலில் ஆறுமுகனைப் பெற்றனர். அதனை அறிந்த இந்திரன் அக்குழந்தையை வச்சிராயுதத்தால் எறிய அந்த ஆறு வடிவம் ஒன்றாகி அவனைக் கொன்றது என்ற செய்தியினை,

*"நெடும்பெரும் சமையத்து நீலப் பைஞ்சனை*
*ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப*
*அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ"*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன.

**முருகன் திருமணம்**

முருகன் இந்திரன் வேண்டுகோளின் படி பங்குனி உத்திர நன்னாளில் தெய்வானையை மணந்து கொள்கிறார். முருகன் தெய்வானை திருமண வைபவத்தைக் காண பார்வதி பரமேசுவரன் விமானத்தில் வான்வழியாக வருகின்றனர். இந்நிகழ்வை,

*"ஆன காலை அரியயன் நாபொணா*
*ஞான நாயகன் நங்கையுந் தானுமோர்*
*மான மேல் கொண்டு மாயிருஞ் சாரதர்*
*சேனை சூல்தரச் சேணிடைத் தோன்றினான்"*

என்று கந்தபுராணத்தில் கச்சியப்ப சிவாச்சாரியார் பாடியுள்ளார். இதேபோன்று முருகன் தெய்வானையைத் தன்னுடைய மனைவியாகக் கொண்ட செய்தியினைத் திருமுருகாற்றுப்படையில்,

*"மறுஇல் கற்பின் வாணுதல் கணவன்"*

என்ற அடிகள் எடுத்தியம்புகின்றது. குறிஞ்சிக் கடவுளாகிய முருகன் குறவர் மடமகள் வள்ளியைக் களவு மணம் புரிந்தார் என்பதை,

*". . . . . . . . . . ஒரு முகம்*
*குறவர் மடமகள் கொடிபோல் நசுப்பின்*
*மடவரல் வள்ளியோடு ஒருகை அமர்ந்தன்றே"*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. முருகக்கடவுள் தெய்வானையைக் கற்பு மணம் புரிந்து பின் வள்ளியைக் களவு மணம் புரிந்தான் என்பது புலப்படுகின்றது.

**முருகனின் வாகனம்**

முருகன் ஆட்டுக்கிடாயைத் தன் வாகனமாகக் கொண்டுள்ள செய்தியை சங்கப் பாக்கள் எடுத்துரைக்கின்றன. நாரத முனிவர் செய்த வேள்வியிலிருந்து தோன்றிய ஆட்டுக்கிடாய் மூன்று உலகங்களையும் துன்புறுத்தியது. அதனைக் கண்டு தேவர்கள் முருகப் பெருமானிடம் முறையிட்டனர். முருகக் கடவுள் அதனை அடக்கித் தன்னுடைய ஊர்தியாக்கிக் கொண்டார். மேலும், கடலுக்குள்ளே மாமரமாய் நின்ற அசுரனைத் தடிந்த பொழுதில் இரு கூறுபட்ட உடலில் ஒன்று மயிலாகவும் மற்றொன்று கோழியாகவும் வர, அவற்றை ஊர்தியாகவும் முருகப்பெருமான் கொண்டான் என்ற செய்தியனை,

*"தகரன் மஞ்ஞையுடன் புகர் இல் செவிலி அம்*
*கொடியன் நெடியன் தொடி அணி தோளன்"*

என்ற திருமுருகாற்றுப்படையின் அடிகள் எடுத்துரைக்கின்றன. இவ்வாறாக முருகனின் வாகனம் என்று சொல்கையில் மயிலும், ஆட்டுக்கிடாயும் சுட்டப்படுகிறது. ஆனால் இன்றளவில் முருகனின் வாகனம் பெரும்பாலும் மயிலென்று கொள்ளப்படுகின்றது.

**வேலன் வெறியாட்டு**

சங்ககால மக்கள் சடங்கு முறைகளின் மீது மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதனைச் சங்கப் பாக்கள் எடுத்துரைக்கின்றன. காதல் கொண்ட தலைவியரது மெய் வேறுபாட்டிற்குக் காரணம் அறிய வெறியாட்டு நடைபெறுகிறது. இற்செறிக்கப்படும் தலைவி தலைவனைக் காணாது பெரும் மன உளைச்சலுக்கு ஆளாவதும், அவள் மேனியழகு குறைவதும் நற்றாயும், செவிலியும் மகளின் உடல் வேறுபாட்டுக் காரணம் தெய்வக் கோளாறு எனக் கருதுவதும் வேலனை அழைத்து வந்து வெறியாட்டுக்கு ஏற்பாடு செய்வதும் அவன் கழங்குப் போட்டு பார்த்து இது தெய்வக் கோளாறுதான்

என உறுதிப் படுத்தி அதனைத் தீர்ப்பதற்கு வழி வெறியாடலே என்பதும், வெறியாட்டு என்னும் பண்பாட்டின் அடிப்படையாகும். இதனை,

*"என்மகள் துயர் மருங்க அறிதல் வேண்டுமெனப்*
*பல்பிறப்பு இரீஇ அறியா வேலன்"*

என அகநானூறு சுட்டுகின்றது. இச்சடங்குமுறை அகத்திணையில் தலைவியின் மெய் வேறுபாட்டை அறிந்த தாயின் செயல்பாடாக உள்ளதைப் பழந்தமிழ் இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. "சமுதாயச் சடங்கிற்கும் கற்பொழுக்கத்திற்கும் இடையே ஒரு போராட்டத்தை வெறியாட்டில் காணலாம்" என்பார் வ.சுப. மாணிக்கம்.

*"தீயின் அன்ன ஒண்செங்காந்தள்*
*தூவல் புதுமுகை ஊண்செத்து*
*அறியாது எடுத்த புன்புறச் சேவல்*
. . . . . . . . . . . . . . . . . . . .
*வேறிகளம் கடுக்கும் வியலறைதோறும்*
*மணஇல் கமழும் மாமலைச்சாரல்"*

என்ற அடிகள் செழித்து வளர்ந்த காந்தள் செடியில் மொட்டு நெருப்பு போன்ற வண்ணத்தில் மாமிசத் துண்டு போன்று இருந்தது. அதனை ஊண் எனக் கருதி பருந்து எடுத்துச் சென்றது. பிறகு ஊண் இல்லை என அதனை உண்ணாது போட்டுவிட்டது. அவ்வாறு சிதறப்பட்ட காந்தள் மெட்டுகளின் இதழ்கள் பாறையில் கிடந்தன. அக்காட்சி வேலன் வெறியாடும் களம் போன்று இருந்தது என்பதனை எடுத்துரைக்கின்றது. இவ்வாறாக முருகப்பெருமானின் வழிபாடுகளில் வேலன் வெறியாட்டும் ஒருவகை வழிபாட்டு முறையாக அமைந்துள்ளமையை அறியமுடிகின்றது.

**முடிவுரை**

காலங்காலமாக மக்களிடையே நிலவி வரும் நம்பிக்கைகளுள் அடிப்படையாகத் திகழ்வது கடவுள் நம்பிக்கையாகும். அவ்வகையில் தமிழ்க் கடவுளான முருகப்பெருமான் முழுமுதற் கடவுளாகத் திகழ்கின்றான். இத்தகு இறைவனை, *வாசித்துக் காண ஒணாது பூசித்துக்கூட ஒணாது வாய்விட்டுப் பேச ஒணாது* என்கிறார் அருணகிரியார். கண்களால் காண இயலாத கடவுளை மனதினால் வழிபட்டு வந்துள்ளனர் சங்க மக்கள் என்பது புலப்படுகின்றது. சங்க காலம் தொடங்கி இன்றுவரை முருகப்பெருமானின் பெருமைகளைத் தமிழ்மக்கள் போற்றி வந்துள்ளமை சங்கப் பாக்கள் வழி அறியலாகின்றது.

# சிற்பத்துறையில் பழனிமலை முருகனின் நவபாசாணச் சிலை

**பொன்னி செல்வநாதன்,**
சிற்பக்கலை ஆராய்ச்சியாளர்

ஆதிகாலந்தொட்டு இறைவனுடைய பல்வேறு திருக்கோலங்களைச் சிற்பசாஸ்திர இலக்கணப்படியும் மனங்கவர் தோற்றத்துடன் வழிபாட்டிற்குரிய படிமங்களாக அமைக்கப்படுகின்றன. அவ்வாறு வடிவமைக்கப்படுகின்ற இறை வடிவங்களை எந்தெந்தப் பொருட்கள் கொண்டு அமைத்திடலாம் என்பதற்குத் திவாகரம், பிங்கலம் போன்ற இலக்கண நூல்கள் மற்றும் சிற்ப நூல்களிலும் குறிப்புகள் காணக்கிடக்கின்றன. அவற்றுள் சான்றாகக், "கல்லும் உலோகமும் செங்கல்லும் மரமும், மண்ணும் சுதையும் தந்தமும் வண்ணமும், கண்ட சருக்கரையும் மெழுகும் என்றிவைபத்தே சிற்பத் தொழிற் குறுப்பாவன." எனத் திவாகரம் நூலில் உள்ள செய்யுளைக் குறிப்பிடலாம்.

ஆக, மேற்கண்ட செய்யுளில் சுட்டிக்காட்டுகின்ற பொருட்களானவை கல், உலோகம், செங்கல், மரம், மண், சுதை, தந்தம், வண்ணம், கடுசர்க்கரை மற்றும் மெழுகு போன்றவையாகும். இதனை உறுதிப்படுத்துகின்ற வகையில் நம்முடைய பழங்கோயில் கருவறைகளில் நிறுவப்பட்டிருக்கின்ற மூல பிம்பங்கள் பெரும்பாலானவை கற்சிலைகளாகவோ, ஐம்பொன் சிலைகளாகவோ மரச்சிற்பங்களாகவோ அல்லது மண்ணால் ஆன சிலை வடிவங்களாகவோ காணப்படுகின்றன.

இப்பொருட்களுக்கு அடுத்தபடியாக சிற்பவுலகில் நவபாசாணம் எனும் கிடைத்தற்கரிய பொருளினால் ஆக்கப்பட்ட சிலையமைப்பு பற்றிய செய்திகளும் சொல்லப்படுகின்றது. அதுவென்ன நவபாசாணம்? என்று ஆய்வு நோக்கில் பலவாறாக கேள்விகள் எழுந்த வண்ணமும் அதனைத் தொடர்ந்து பலவிதமான கண்டுபிடிப்புகள் வந்த வண்ணமும் இருக்கின்றன. இருந்தாலும் நவபாசாணம் என்பது இன்றுவரை பேரறிஞர்களுக்கும் ஆராய்ச்சியாளர்களுக்கும் சிற்ப வல்லுநர்களுக்கும் மட்டுமின்றி தமிழ் கூறும் நல்லுகத்திற்கே ஒரு புதிர் நிறைந்த பொருளாகும்.

**தமிழகத்தில் நவபாசாணச் சிலை**

இந்நிலையில் பரந்து காணப்படுகின்ற தமிழ்நாட்டில், நவபாசாணத்திலான சிற்ப வடிவங்கள் இருக்கின்றனவா என்று ஆய்ந்திடின், முருகனின் ஆறுபடை வீடுகளில் சிறப்புடன் விளங்கி வருகின்ற பழனி மலையில் காணக்கிடைக்கின்றது. பழனிமலை கருவறையில் வீற்றிருக்கும் அருள்மிகு தண்டாயுதபாணியின் மூல மூர்த்தியானது நவபாசாணத்தினால் அமைந்து காணப்படுகின்ற திருமேனியாகும். இச்சிலையானது பதினென் சித்தர்களில் ஒருவராகிய போகரால் வனையப்பட்டதாக ஆய்வறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இவர் இரசவாதம், மூலிகை போன்றவற்றில் நிபுணத்துவம் வாய்ந்தவர்.

ஆகையால் நவபாசாணங்களைப் பக்குவப்படுத்திப் பழனிமலை முருகனின் திருமேனியைச் சமைத்ததாகவும் பற்பல ஆய்வுகளின் மூலம் தெரியவந்திருக்கின்றது. மேலும், இத்திருமேனியின் மீது சாத்தப்படுகின்ற திருநீர், சந்தனம் போன்ற அபிசேக திரவியங்கள் மருத்துவ சத்தைப் பெற்று சிறந்த ஔசதமாக மாறிவிடுவதையும் அறிவியல் அடிப்படையில் உறுதிப்படுத்தப் பட்டிருக்கின்றது.

**நவபாசாணம் என்றால் என்ன?**

சமஸ்கிருதத்தில் நவ எனில் புதியது அல்லது ஒன்பது என்ற பொருளாகும். பாசாணம் எனில் நஞ்சு, மருந்து அல்லது கல் எனும் வெவ்வேறு பொருள்களைக் கொண்டிருக்கிறது. ஆகையால் நவபாசாணம் என்பது ஒன்பது வகையான கூட்டுப்பொருட்களின் சேர்க்கையைக் கொண்டுள்ளதாக ஆய்வில் தெரிய வருகின்றது.

இதனைப் பேரறிஞர் ஆகம பண்டிதர் திரு.சபாரத்தின சிவாச்சாரியார் அவர்கள் மிகவும் எளிமையாக விளக்கம் தருகின்றார். அவருடைய கூற்றினை உற்றுநோக்கிடும்போது நமக்குப் புலப்படுவது - நச்சுத்தன்மை வாய்ந்துள்ள தாதுக்களை முறையான அளவுடன் ஒன்றுடன் ஒன்றாக கலந்திடும்போது அக்கலவையானது அதன் விஷத்தன்மை முறிந்து மருத்துவத்தைப் பெற்று விடுகிறது. அதாவது அமிர்தம் எங்ஙனம் விஷமாக மாறுகிறதோ அங்ஙனமே விஷம் என்கின்ற பாசாணமானது அமிர்தமாக மாறமுடியும் என்பதே சித்தர்களுடைய முடிபாகும். இதனை உறுதிப்படுத்துகின்ற வகையில் பழனிமுருகனின் நவபாசாணத் திருமேனி மிகச்சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது.

சிற்ப நூல்களில் நவபாசாணம் குறித்த தகவல்கள் மிகவும் அரிதாகவே காணப்படுகின்றன. ஆனால் சித்தர் நூல்களில் பாசாணம் எனும் பெயரில் பல பெயர்களைக் காண முடிகிறது. குறிப்பாக நவபாசாணத் திருமேனியை உருவாக்கிட்ட சித்தப்பெருமான் போகரால் ஆக்கப்பட்ட போகர் நிகண்டு 1200, போகர் 7000, சூத்திரத்திரட்டு போன்ற சுவடிகளில் காண முடிகிறது.

இத்துடனில்லாமல் அகத்திய மகரிஷியின் நூல்களிலும், சித்த மருத்துவ நூல்களிலும் நவபாசாணம் பற்றிய குறிப்புகள் ஆங்காங்கே சுட்டிக்காட்டப் பட்டிருப்பதாக ஆய்வுகளின் வாயிலாகத் தெரிகின்றது.

மேலும், மறைந்த பத்மபூசண் டாக்டர்.வை.கணபதி ஸ்தபதி அவர்களுடைய ஆய்வேட்டினில் நவபாசாணத்தின் ஒன்பது வகையான தாதுக்கள் இவையிவை என்று " Hinduism today"யின் பேட்டி ஒன்றினில் குறிப்பிட்டிருக்கின்றார். அவையாவன, திருமுருகல், கௌரி, கார்முகில், ரக்தா. இந்திரகோபம், அஞ்சனம், குங்குமம், பவழமுத்து, லவனம் என்பவையாகும். இந்நிலையில் வேறெங்கெல்லாம் நவபாசாணத்தைப் பற்றிய குறிப்புகள்

காணப்படுகின்றன என்று உற்று ஆராய்ந்துப் பார்க்கின், அபிதான சிந்தாமணி-தமிழ்க் கலைக்களஞ்சியம் எனும் நூலில் நவபாசாணம் என்பது 32 வகையென்றும் அவற்றினில் ஒரு வகை இதுதான் என்று சாதிலிங்கம், மனோசிலை, காந்தம், தாரம், கெந்தி, ரசகற்பூரம், வெள்ளைப்பாசாணம், கௌரிப்பாசாணம், தொட்டிப்பாசாணம் போன்ற ஒன்பது பொருட்களின் பெயர்களைக் குறிப்பிடுகின்றது.

நவபாசாணம் என்பவை இவையிவைதான் என்று சிவகங்கையின் அரசு அருங்காட்சியகத்தில் மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டிருக்கின்ற நவபாசாணத்தின் மாதிரிகள் அனைவரையும் வியப்பில் ஆழ்த்துகின்றது. அவையாவன, வீரம், கந்தகம், பூரம், லிங்கம், வெள்ளைப் பாசாணம், மிருகோர்சிங்கி, கௌரிப் பாசாணம், பாதரசம் என்பவை யாகும்.மேற்கண்ட நிலையில் நவபாசாணச் செய்திகளை நுணுகி ஆய்ந்திடின் நவபாசாணத்தின் தன்மை, செய்முறை, அவற்றின் விஞ்ஞான நுட்பம், அவை கிடைக்கக்கூடிய இடங்கள் போன்ற செய்திகளை அறிய வாய்ப்பிருப்பதாகவும் நம்பப்படுகின்றது.

**பழனிமலை முருகனின் நவபாசாணச் சிலையமைப்பு**

அகில இந்திய மண்ணில் சிற்பங்கள் செய்வதற்குரிய பொருட்கள் வெவ்வேறாக இருப்பினும் அவற்றிற்குரிய அளவியல் அழகியல் யாவும் சிற்பயிலக்கணத்தைப் பின்பற்றியே அமைக்கப்படுகிறது. ஆகம சிற்ப நூல்களாகிய மயமதம், சிற்பரத்தினம் சிற்பச்செந்நூல், குமாரதந்திரம், பூஜா பத்ததிகள், சுக்கிரநீதி போன்ற பழம் ஏடுகள் இதனைப் பறைசாற்றுகின்றன. தொன்மை வாய்ந்த இச்சுவடிகளில் காணக்கிடைக்கின்ற செய்திகளைக் கொண்டு சிற்ப வல்லுநர்கள் அனைத்துப் படிமங்களையும் இலக்கணத்துடனும் மனங்கவர் கோலத்திலும் இயற்றுகின்றனர். அங்ஙனமே கடுசர்க்கரையால் ஆன படிமங்களையும் வெற்றிகரமாகச் செய்து முடித்துள்ளனர். கடுசர்க்கரைப் படிமங்களானது கடினமான சுக்கான் கற்களைப் பொடித்து உரிய சாந்துக் கலவையுடன் செய்யப்படுவதாகும். உற்றாய்ந்திடும்போது கடுசர்க்கரை மற்றும் நவபாசாணப் படிமங்கள் இரண்டிற்கும் உண்டான அடிப்படை செயல்முறை ஒன்றேயாம். இவற்றின் பொருட் கலவை வெவ்வேறாகயிருப்பினும் இவற்றின் சூலக்கூடு (skeletal structure) மரக்கோல்களைக் கொண்டே அமைக்கப்படுகிறது.

சுருங்கச் சொன்னால், சுதைப் படிமங்களைச் செய்யும்போது சிற்பியானவர் படிமத்தின் உடலமைப்பினை உறுதிப்படுத்திடுவதற்குச் செப்புக் கம்பியைக் கொண்டு உடல்கூட்டினை வடிவமைப்பர். பின்னர் அதன்மீது செங்கல் துண்டுகளைக் கொண்டு ஒட்டவைத்து அதன்மீது சுண்ணம் அல்லது சிமெண்ட் கலவையினைப் பூசி சிற்பயிலக்கணக் கோட்பாடுகள் சிறிதும் மாறிடாமல் இறைத்தன்மை வாய்ந்ததாக அப்படிமத்தை படைப்பர். விளக்கிச் சொல்ல வேண்டுமாகில் ஒரு படிமத்தின் கூட்டை உறுதிப்படுத்தப் பயன்படும் செப்புக்கம்பியானது எலும்பாகவும், செங்கல் துண்டுகள் மற்றும் சுண்ணம்

கலவை சதையாகவும் தோலாகவும் எடுத்துக் கொள்ளப்படுகின்றது. இதே செயல்முறையில்தான் சித்தர் போகராலும் பழனி முருகனின் நவபாசாணச் சிலை ஆக்கப்பட்டிருக்க வேண்டும். மேலும், போகரால் ஆக்கப்பட்ட நவபாசாணத் திருமேனியானது சிற்பயிலக்கணத்தில் குறிப்பிடப்பெறும் உத்தம தசதாளம் என்ற அளவியல் முறையைப் பின்பற்றி மிகவும் பொலிவுடன் அமைக்கப் பட்டிருக்கிறது. நின்ற கோலத்தில் அசல வடிவமாக காணப்படுகின்ற இத்திருமேனியை நன்றாகத் தேர்ச்சிபெற்ற சிற்பியால் மட்டுமே செய்திட இயலும். அப்படியெனில் சித்தர் போகர் சிற்பவல்லுநராகவும் இருந்துள்ளார. எனவேதான், முருகனின் இவ்வரிய நவபாசாணத் திருமேனியின் வடிவமைப்புக் காலங்கள் கடந்தும் மலை உச்சியில் கம்பீரமாகக் காட்சியளிப்பதாகக் காலஞ்சென்ற சில்பகுரு. டாக்டர்.வை.கணபதி ஸ்தபதி அவர்கள் வலியுறுத்திக் குறிப்பிடுவார்.

**முடிவுரை**

நவபாசாணம் என்று சொல்லக்கூடிய மூலிகை தாதுக்கள் கிடைப்பதற்கு அரிதிலும் அரிதெனவும், அப்படிக் கிடைத்து விட்டாலும் அபிதான சிந்தாமணியில் குறிப்பிடப்பெறும் 32 வகையான நவபாசாணத்தில் எந்த வகையைப் பின்பற்றுவது போன்ற ஆய்வுகளுக்கு விடை தெரியாது பயணித்துக் கொண்டிருக்க நேரிடலாம். ஆகையால், விந்தையும் விஞ்ஞானமும் சூக்குமமும் கொண்டிருக்கும் இந்த நவபாசாணக் கலவையினால் ஆக்கப்பட்ட பழனி ஆண்டவருடைய திருமேனி உலகத்திலேயே காண்பதற்கு அரிதிலும் அரிதான வகையைச் சார்ந்த திருமேனியாகிறது. சிற்பக்கலையின் இலக்கணத்திலிருந்து எள்ளளவும் பிறழ்ந்திடாமல் எழில்நிறைந்த கோவணாண்டியாக பல்நூற்றாண்டுகளையும் தாண்டி உறுதிப்பாட்டுடன் புதிர் நிறைந்த படைப்பாக இருந்து வருகின்றது எனில் மிகையில்லை.

**வழிநூல்கள்**

1. கணபதி ஸ்தபதி, வை., (1978), சிற்பச்செந்நூல், தொழில் நுட்பக் கல்வி இயக்ககம், சென்னை.
2. சுப்ரம்மண்ய சாஸ்திரி,க்ஷே.சம்., (2004), மயமதம், தஞ்சாவூர் மஹாராஜா சரபோஜியின் சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.
3. Dr.Prof.M.S. Saravanan (1988) - A scientific analysis of Palani Antavaridol,http://murugan.org/research/saravanan.htmPaper presented at the 1st International Seminar on Skanda-Murukan.
4. Dr.V.Ganapathi Sthapati (1993), Deteriorating Palani Hills Idol -Center of controversy Hinduism Today|s web edition, Hawaii, USA.

# முருகப் பெருமானின் சிற்ப வடிவங்கள்

கே. மகேஸ்வரி
முனைவர் பட்ட ஆய்வாளர்
சிற்பத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சை.

முருகன் சங்க இலக்கியங்களில் முருக என்ற சொல்லால் குறிக்கப் பட்டுள்ளான். கலைக்களஞ்சியம் என்ற நூலில் முருகு என்ற சொல்லுக்கு இளமை, மனம், அழகு, தெய்வம் என்றெல்லாம் பொருள்படும். முருகன் என்ற சொல் அகநாநூற்றிலும், புறநானூற்றிலும் ஆளப்பட்டுள்ளது. தொல்காப்பியர் காலத்திலேயே முருகன் குறிஞ்சி நிலக் கடவுளாகச் சுட்டப்பட்டுள்ளான் என்பதை சேயோன் மேய மைவரை யுலகமும் என்ற தொடர் குறிப்பிடுகிறது. இதற்கு நச்சினிர்க்கினியர் செங்கேழ் முருகன் காதலித்தவான் தாங்கிய வரைசூழ் உலகமும் என்று பொருள் கூறுகிறார். கேழ் என்பதற்கு நிறம் என்பது பொருள். அதாவது, சிவந்த நிறத்தையுடைய முருகப்பெருமான் விரும்பி உறைகின்ற இடம் என்பதைக் குறிக்கிறது. இதன் மூலம் முருகன் எழுந்தருளிருக்கும் தலங்களைப் பற்றியும் அவற்றின் சிறப்பினையும் இக்கட்டுரையின் வாயிலாக அறியலாம்.

### புராணப் பின்னனியில் முருகன்

தனிப் பதிகங்களாகக் கோயில்களும், தெய்வங்களும் பாடப்பட்டதன் வளர்ச்சியாகப் புராணங்களும் தமிழகத்தில் தோன்றின. மூர்த்தி, தீர்த்தம், தலம் என்ற மூன்றின் சிறப்புகளையும் நாட்டு நகரச் சிறப்புகளையும் தல புராணங்கள் விளக்குகின்றன. தென்னாட்டு முருகன் கோயில்களில் மிகப் பெரியது "செந்திலம்பதி" சூரபத்மனை அழிப்பதற்காகப் புறப்பட்ட முருகனைத் தாரகாசுரன் வழிமறித்த போது அவனையும் அவனுக்குத் துணையாய் நின்ற கிரௌஞ்ச் மலையையும் அழித்துவிட்டு, முருகன் தன் படையோடு தேவசேனாபதியாக திருச்செந்தூர் வந்து தங்கியதாக புராணங்கள் மூலம் தெரிந்துக்கொள்ள முடிகிறது. குருநாதனாக முருகன் காட்சியளிக்கும் தலம், திருவேரகம் (சுவாமிமலை) இத்தலத்தைக், "குருமலை" என்று அருணகிரிநாதர் தம் திருப்புகழில் குறிப்பிட்டுள்ளார். அவை,

*"நிறைமதி முகமெறு மொளியாலே*
*குறமகள் தனைமனை மருள்வோனே*
*குருமலை மருவிய பெருமானே"*

என்று குறிப்பிடுகிறார். இதேபோன்று தேவாரம், பன்னிரு திருமுறைகள், 18 வியாச புராணங்கள், நாலாயிர திவ்யப் பிரபந்தம் போன்றவைகள் முருகனைப் பற்றி அறிந்துக்கொள்வதற்கு முதன்மை அகராதிகளாக விளங்குகின்றன.

**வரலாற்றுப் பின்னணி**

பல்லவர் காலத்துப் பல நூற்றாண்டுகள் முன்னரே, பாண்டிய மன்னர்கள் குடைவரைக் கோயில்கள் அமைத்தார்கள் என்பதை திருப்பரங்குன்றம் கோயில் அமைப்பின் மூலம் காணலாம். மலைச்சுவரோடு பதிந்திருக்கிறபடியால் மூலவருக்கு அபிஷேகங்கள் செய்யப்படுவதில்லை. அபிஷேகங்கள் அனைத்தும் அவர் திருக்கரத்தில் உள்ள வேல் படைக்குத்தான். திருப்பரங்குன்றம் பராந்தகன் நெடுஞ்சடையனின் தானைத்தலைவன் சாத்தான் கணபதி இதனை உருவாக்கியதாகக் கல்வெட்டு கூறுகிறது. இதேபோன்று கி.பி நான்காம் நூற்றாண்டில் கோச்செங்கணான் என்ற சங்க கால சோழ வம்சத்து அரசரால் கட்டப்பட்ட எழுபது மாடக்கோவில்களில் சிக்கல் சிங்காரவேலர் கோவில் ஒன்றும் இக்கோவில் விஜயநகர வம்சத்து சிற்றரசர் பிரபுட தேவராயன் காலத்தைச் சார்ந்தது என்பதை வரலாற்றுச் செய்தி கூறுகிறது. நக்கீரர் 3ம் படைவீடாக தனது திருமுருகாற்றுப்படையில் திருஆவினன் குடியைக் (பழனி) குறிப்பிடுகிறார். இத்தலம் மூவேந்தர்களாலும் கொங்குநாட்டு மன்னர்களாளும் மதுரை நாயக்க மன்னர்களாலும் ஆளப்பெற்றது.

**முருகனுக்குரிய பெயர்கள் மற்றும் உருவங்கள்**

**1. ஞானசக்திதரர்**

ஒருமுகம் இரண்டு கரங்களும் கொண்டு வலக்கரத்தில் வேலும், இடக்கரம் தொடைமீது கொண்டு அமைந்தது. வேலானது இச்சா, கிரியா, ஞான சக்தியினை உணர்த்துவதால் ஞானசக்திதரர் என்று பெயர். இக்கோவில் திருத்தணி, திருக்கண்டியூரில் அமைந்துள்ளது.

**2. கந்தசாமி**

ஸ்கந்தம் என்பது தோளினைக் குறிக்கும். வலிமையான தோல்களை உடையவன் என்கிற பொருளோடும், கந்து என்கிற சொற்றொடருக்குத் தண்டாயுதம் என்கிற பொருளும் கொண்டு தமிழில் இச்சொல் கந்தன் என வழங்கப்படுகிறது. இருக்கின்ற இடம் பழனி.

**3. ஆறுமுக தேவசேனாபதி**

ஆறுமுகங்களும், பன்னிரு கரங்களும் கொண்டு தெய்வயானையினை இடப்பாகத்தில் அனைத்து அபயக்கரம் ஒன்றும் இதர பத்து கரங்களில் ஆயுதங்கள் உடனும் விளங்குபவர். தேவர்கள் சேனைக்குத் தளபதி என்கிற பொருளும் கூட, இத்தலம் சென்னிமலையில் அமைந்துள்ளது.

**4. சுப்ரமணியர்**

ஒருமுகம் நான்கு கரங்களும் கொண்டு அபய முத்திரையுடன் சேவல், தாமரை கொண்டு திகழ்பவர். சு பிரம்மம் ண்யம் என்று பிரித்துப் பார்க்கும் போது சு என்பது ஆனந்தத்தையும், பிரம்மம் என்பது பரம்பொருளையும் ண்யம் என்பது அந்த பரம்பொருளிலிருந்து தோன்றி ஒளிர்பவர் முருகன்

என்பதையும் குறிக்கும். சிவனும் முருகனும் ஒன்றே என்பதே உணர்த்தும் பதமிது, அதனானலேயே திருவிடைக்கழியில் இரண்டு சண்டேசர், மாமியார் ஸ்தானத்தில் மருமகள், திருக்குரா, மகிழமரம் தல விருட்ஷம் என அனைத்தும் இரண்டாக உள்ளன. இக்கோவில் திருவிடைக்கழியில் உள்ளது.

**5. கஜவாகனர்**

இந்திரனின் ஜராவதமே முருகனின் வாகனமாக அமைந்துள்ளது. இவ்வமைப்பு சூரனை வெல்வதற்கு முன்னர் இருந்தநிலை. இந்த நிலையில் உள்ள முருகன் உத்திரமேரூர், சுவாமிலை, திருத்தணி, சிதம்பரத்தில் கீழ் கோபுரம் மேல் மாடியில் ஒரு முகம் நாற்கரங்களுடன் திகழ்கிறார்.

**6. சரவணபவர்**

ஆறுமுகங்கள் கொண்டு பன்னிரண்டு கரங்களோடு அமர்ந்த கோலம். நாணல்கள் அமைந்த கானகத்தின் சரவணப் பொய்கையில் தோன்றியவர் என்ற பொருள். தந்தைக்கு ஐந்து எழுத்து என்றும் தனயனுக்கு ஆறெழுத்து, மாமனுக்கு எட்டெழுத்து என்றும் கூறுவர். இத்தலம் திருப்போரூர், சென்னிமலை ஆகிய இடங்களில் உள்ளன.

**7. கார்த்திகேயர்**

கார்த்திகைப் பெண்டிர் போற்றிய இவர் ஆறு முகங்களுடன் 12 கரங்கள் கொண்டு அமர்ந்த கோலத்தில் உள்ளவர். கார்த்திகை நட்சத்திரத்தில் இவரை வழிபடுவதால் விஷேச பலன் தரும். இத்தலம் தாராசுரம், ஐராவதேஸ்வரர் கோவில் (இது இரண்டாம் இராஜேந்திரன் கட்டியது) மற்றும் குடந்தை கும்பேஸ்வரர் கோயிலில் அமைந்துள்ளது.

**8. குமாரசாமி**

ஒருமுகம் நான்கு கரங்களுடன் வள்ளி நின்ற கோலத்தில் உள்ள உருவம். இத்தலம் குமாரக்கோயில், நாகர்கோயிலில் உள்ளது. மற்றொன்று கங்கைகொண்ட சோழபுரத்தில் உள்ள பஞ்சலோகத் திருமேனி.

**9. சண்முகர்**

ஆறு திருமுகங்களும், 12 கரங்களும் கொண்டு வள்ளி, தெய்வானையோடு மயில் மீது அமர்ந்த கோலம். இத்தலம் திருச்செந்தூர், மயிலை, குன்றக்குடி, பொரவாச்சேரி, எட்டுக்குடி, சிக்கல், சிறுவாபுரி, திண்ணியம் ஆகிய இடங்களில் உள்ளன.

**10. தாரகாந்தக மூர்த்தி**

ஆறுமுகங்கள் 12 கரங்களும் கொண்டு நின்ற கோலம். சூரபத்மன் தம்பி தாரகாசுரனை அழித்த கோலம் இத்தலம் விராலிமலை, உத்திரமேரூர் ஆகிய இடங்களில் உள்ளது.

**11. சேனாபதி, சேனானி**

தேவர்படைக்குத் தலைமை வகித்த இவர் ஆறுமுகங்களும் 12 கரங்களும் கொண்டு அமர்ந்த கோலம். இத்தலம் தேவிகாபுரத்தில் அமைந்துள்ளது.

**12. பிரம்மசாஸ்தா**

பிரம்மனின் படைப்புத் தொழிலை மேற்கொண்ட கோலம். ஒருமுகம் நாற்கரங்களும் கொண்டு நின்ற கோலம். இத்தலம் ஆனூர், திருக்கண்டலம், குமரக்கோட்டம், திருப்போரூர், பாகசாலை, சிறுவாபுரி, சென்னை வளசரவாக்கம், பொன்னேரி, மருங்கூர் ஆகிய இடங்களில் கானப்படுகிறது.

**13. வள்ளி கல்யாணசுந்தரம்**

பிரம்ம யாகம் செய்ய வள்ளித் திருமணம் நடந்த திருக்கோலம். இத்தலம் சிறுவாபுரி, திருபோரூர் ஆகிய இடங்களில் உள்ளது.

**14. பாலசுப்பிரமணியர்**

குழந்தை வடிவில் ஒருமுகம் இரு கரங்களும் கொண்டு ஓர் கரத்தில் தாமரையும் மற்றொரு கரத்தை இடையில் வைத்திருக்கும் கோலம். இத்தலங்கள் ஆண்டார்குப்பம், குமரன் குன்று, தேனாம்பேட்டை, திருமயிலாடி, வடசென்னிமலை, ஊத்துமலை, காந்தமலை, கபிலர்மலை, வெண்ணைமலை, உள்ளூர் (திருவனந்தபுரம்) ஆகிய இடங்களில் உள்ளது.

**15. கிரவுஞ்ச பேதனர்**

ஆறு முகங்களும் எட்டு கரங்களும் கொண்டு மயில் வாகனத்தில் மேல் இருந்து கிரவுஞ்ச மலையினைப் பிளந்து தாரகாசுரரை அழித்த கோலம். இத்தலம் திருநெல்லிக்கா, திருக்குறுங்குடி, திருநனிபள்ளி ஆகிய இடங்களில் உள்ளது.

**16. மயில் வாகணர்**

ஒருமுகம் நாற்கரங்களோடு சூரனை வேலினால் பிளந்தபோது சேவல், மயிலாக மாறியபோது எடுத்த கோலம். இவ்வமைப்பு பொதுவாக அனைத்து கோயில்களிலும் உச்சவரர்களாக உள்ளது.

**17. அக்னி ஜாதர்**

இருமுகங்களும் எட்டுக்கரங்களும் கொண்டு யாக அக்னி வளர்க்கும் உருவம். இவரே வழிபடும் பொழுது யாகம் செய்த பலன் கிடைக்கும் என்பது நம்பிக்கை.

**18. சௌரபேயர்**

நான்கு முகங்களும் எட்டுக் கரங்களும் கொண்டு எட்டுக் கண்களுடன் தாமரை மலர்மேல் நின்ற கோலம். திரிபங்க நிலை இத்தலம் சென்னிமலை, கனககிரி ஆகிய இடங்களில் உள்ளது.

**19. காங்கேயர்**

ஒருமுகம் மூன்று கண்கள் நாற்கரங்களுடன் கங்கையின் மைந்தன் என்கிற பொருளின் அமைந்த பெயர். இவரை வழிபடுவதால் சிவானந்தப் பேறு கிட்டும்.

**20. குகன்**

குகைகளில் கோயில் கொண்டிருப்பதாலும் பக்தர்கள் இதயக் குகையில் உள்ளதாலும், இப்பெயர். கருநிறம், ஒருமுகம், முக்கண், நாற்கரம் இவரது கோலம். வஜ்ஜிரம், சூலத்துடன் வரத அபய முத்திரையுடன் மனைவியரோடு கோலம்.

**21. பிரம்மச்சாரி**

ஒரு முகம் மற்றும் இரு கரங்களுடன் உள்ள கோலம். அரைஞாண் கோவணமும் தரித்து தண்டத்துடன் இருப்பார். இது குழூரில் உள்ளது. (கேரள மாநிலம்).

**22. குருவான நின்ற கோலம்**

பிரணவ உபதேசம் செய்யும்போது கைகட்டி, வாய்பொத்தி சிவன் நிற்க குருவான முருகன் ஒருமுகம் அறுகரம், எதிரே கல்லால மரத்தின் கீழ் சனகாதியர்கள் சூழ உமையுடன் சிவன் உபதேசன் கேட்கும் நிலை. இத்தலம் திருப்போரில் செப்பு வடிவ அமைப்பில் உள்ளது.

**முடிவுரை**

முருகனின் சிற்பவடிவங்களைக் கூறும் பொழுது 22 வடிவங்களில் முதன்மையானதாகவும் ஒரே மாதிரியான அமைப்பினை உடையதாகவும் ஆறுமுக தேவசேனாபதி. சரவணபவர், கார்த்திகேயர், சண்முகர், தாரகாந்தக மூர்த்தி, சேனாபதி, சேனானி, கிரவுஞ்சபேதனர் ஆகிய சிற்பங்கள் ஆறு முகங்களுடனும் பன்னிரு கரங்களுடனும் நிறைய இடங்களில் காணமுடிகிறது. இச்சிற்பங்களில் மிகவும் அறியதாக காணப்படுபவை காங்கேயர், குகன், தேசிகர் ஆகிய சிற்பங்கள் ஒருமுகம், மூன்று கண்கள், கருமை நிறத்துடனும் காணப்படுகிறது. இறைவழிபாடு என்று வரும்பொழுது முருக வழிபாடு முதன்மையானது என்றும், தமிழ் இலக்கியத்தின் வாயிலாக முருகனே முதற் கடவுளாகவும், தமிழ்க் கடவுளாகவும் இருந்து வருவதை இக்கட்டுரை வாயிலாக காணமுடிகிறது.

# திருப்புகழ் காட்டும் திருவேரகம்

**டே. மகேஸ்வரி**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
சி. கந்தசாமி நாயுடு மகளிர் கல்லூரி,
கடலூர் - 1.

முருகனின் அறுபடை வீடுகளில் நான்காவது வீடாகக் குறிக்கப் பெறுவது சுவாமிமலை எனும் திருவேரகம் ஆகும். அருணகிரிநாதர் இங்குள்ள முருகனைப் பற்றிப் பாடிய பாடல்கள் நான்காம் திருமுறையாக உள்ளது. நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் திருவேரக முருகனைக் கூறும்போது,

*ஆறெழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி*
*நாஇயல் மருங்கில் நவிலப் பாடி*
*விரைஉறு நறுமலர் ஏத்திப்பெரிது உவந்து*
*ஏரகத்து உறைதலும் உரியன்'*

இவ்வாறு தன்னை நாடி வரும் பக்தர்களுக்கு மனம் குளிர அருள் பாலிக்கிறார்.

**திருவேரகம்**

அருணகிரிநாதரின் திருப்புகழில் சுவாமிமலை திருப்புகழ் 38 பாடல்களைக் கொண்டுள்ளது. ''சுவாமிநாதசுவாமி (செய்குன்று) மலைமேல் எழுந்தருளியிருக்கிறார். சிவபெருமான் முருகக்கடவுள் பிரணவ உபதேசம் செய்த வரலாற்றினாலும், கந்தபுராணம் கடவுள் வாழ்த்தில் ''பிறவி நீத்திடும் தாரகத் துருவமாந் தலைமை யெய்திய ஏரகத் தறுமுகன்" என்பதாலும் இத்தலம் சுவாமிமலை எனப் பெயர் பெற்றது. சுவாமிமலையில் உள்ள அறுபது படிகளும் பிரபவ முதல் அஷய ஈறாக உள்ள ஆண்டுகளைக் குறிக்கும் என்று குடந்தைப் புராணம் சுவாமிமலை படலத்தில் திரிசிரபுரம் மகாவித்வான் திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் கூறியுள்ளார்கள்."[1]

**திருவேரகமுருகன்**

இங்குள்ள முருகனைப் பாடும்போது கடப்பமாலை சூடுபவன், கதிர்வேலன், குறமகள் தலைவன், நக்கீரரை ஆண்டவன், சிவன் உமாதேவி ஈன்றவன் எனப் பலவாறு புகழப்படுகிறது.

*கடிமா மலர்க்கு ளின்ப முளவேரி கக்குநண்பு*
*தருமா கடப்ப மைந்ததொடை மாலை*
......... ...... ......
*வடிவார் குறத்திதன் பொனடிமீது நித்தமுந்தண்*
*முடியான துற்று கந்துபணி வோனே"*

என்று பலவாறு புகழப்படுகிறது.

**அருணகிரிநாதர் வேண்டுவன**

திருவேரக திருப்புகழில் அருணகிரிநாதர் விரும்பிவேண்டுவன மண், பொன், பெண், பொருள் முதலியவற்றின் மீது உள்ள ஆசையை முற்றிலும் அறுக்கவேண்டும் என்று வேண்டுகிறேன். அதேவேளையில் முருகனின் அருள் மட்டுமே வேண்டும் என்று விரும்புகிறார்.

**மூவாசை**

மனித வாழ்வில் மண், பொன், பெண் முதலானவற்றால் பல இன்னல்களை மக்கள் சந்திக்கின்றனர். இதனால் வரும் வாழ்வு நெருப்பு மயமானதென்று உணராமல், பாம்பின் வாயில் அகப்பட்டத் தேரை துன்புறுவது போன்றது என்கிறார்.

*"அவாமரு வினாவ சுதைகாணு மடவாரெனு*
*மவார்கன லில்வாழ் வென்றுண ராதே*
*அராநுகர வாதை யுறுதேரை கதிநாடும*
*றுவாகி யுளமால் கொண்டத னாலே"* (திருப்புகழ், சுவாமிமலை- 5)

இத்தகைய நிலையில் அஞ்ஞானம் நிறைந்த என்னை அதிலிருந்து மீட்டல் வேண்டும் என்று வேண்டுகிறார்.

*"சிவாய மெனுநாம மொருகாலு நினையாததி*
*மிராகர னைவாழ் வென்னருள் வாயே*
*திரோதமல மாறுமடி யார்களரு மாதவர்*
*தியானமுறு பாதந்தரு வாயே"* (திருப்புகழ், சுவாமிமலை - 5)

**மனிதப்பிறவி**

முற்பிறப்பினை உணர முடியாத மனிதப் பிறவியானது ஒருவரை யொருவர் இன்னார், இனியவர் யாரென்று அறிந்துகொள்ள முடியாமலும், நல்வினை தீவினையென்ற இருவினைகளினால் இன்ப துன்பங்கள் அனுபவிப்பதை 'உலையிலிட்ட மெழுகைப்போல்' உருகி அழியும் தன்மை உடையது என்கிறார்.

*"ஒருவரையு மொருவ ரறியா மலுந்திரிந்*
*திருவினை யினிடர்கலி யொடாடி நொந்துநொந்*
*துலையிடு மெழுகதென வாடிமுன் செய்வஞ்சனை யாலே"*
(திருப்புகழ் - சுவாமிமலை -9)

மேலும், முற்பிறப்பில் செய்த வஞ்சனையால் சூத்திரதாரி ஆட்டும் மரப்பாவை போல் ஆடியும், ஒரு கணத்தில் ஒளி செய்து மறையும் மின்னலைப்போல் நிலையற்ற வாழ்வின் பின்னர் வெந்தழியும் உடலினனான என்னைத் தேவரீரது அடியவர்களில் ஒருவராக ஏற்று அருள்புரிய வேண்டும் முருகனிடம் வேண்டி நிற்கிறார்.

*"ஒளிபெறவெ யெழுபுமர பாவை துன்றிடுங்*
*கயிறுவித மெனமருவி யாடி விண்பறிந்*
*தொளிரு மினலுருவ தெனவோடி யங்கம் வெந்திடவேனைக்*
*கருதியொரு பரமபொரு ளீது என்றுஎன்*
*செவியிணை யினருளியுரு தாகி வந்தஎன்*
*கருவினை யொடருமல முநீறு கண்டுதண்ட ருமாமென்*
*கருணை பொழி"* (திருப்புகழ் - சுவாமிமலை - 9)

**குற்றம் உணர்த்துக**

அருணகிரிநாதர் தன்னால் ஐம்புலன்களையும் அடக்கி வாழும் தன்மை அற்றவனாக விளங்குவதால் துன்பமுற்று, குற்றமுடையவனும், மூடனும் மட்டியுமாகிய நான் அருட்செல்வமற்று வறுமையடைகிறேன். கருணைக் கடலான முருகா எனக்கு அருள் வழங்காமல் இருப்பதற்கு காரணம் யாது?. என் மீது உள்ள குற்றம் யாது கூறு என்று விளிக்கிறார்.

*"சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்*
*தவமுறை தியானம் வைக்க அறியாத*
*சடகசட மூடமட்டி பவவினையி லேசனித்த*
*தமியன்மி டியால் மயக்க முறுவேனே*
*கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளைசப்பு*
*கயிலை மலைநாதர் பெற்ற குமரோனே"* (திருப்புகழ்,சுவாமிமலை,12)

**விலைமாதர்**

திருவேரக திருப்புகழில் 38 பாடல்களில் அதிக பாடல்கள் விலைமாதர் தொடர்பால் விளையும் இன்னல்களாக பலவற்றைக் குறிப்பிடுகிறார். அதை விரித்துக் கூறின் கட்டுரை விரியும்.

இவ்வாறு அருணகிரிநாதர் முருகனிடம் அருள் வேண்டியும், வேண்டாதவற்றை நீக்கவும், முருகனின் பெருமைகளையும் விரித்துக் கூறியள்ளமை சிறப்புடையனவாகத் திகழ்கின்றது.

## தமிழரின் வாழ்வியலில் முருக வழிபாடு

**ச. மல்லிகா,**
பிரம்மா இல்லம், எண். 70 சக்தி நகர்,
நேரு நகர் மேற்கு, காளப்பட்டி அஞ்சல்,
கோயம்புத்தூர் - 641 018.

### போற்றி வழிபாடு

கந்தா போற்றி, கடம்பா போற்றி, கதிர்வேலா போற்றி, கார்த்திகேயா போற்றி, செந்தில்நாதா போற்றி, சிங்கார வேலா போற்றி, சண்முகா போற்றி, சரவணா போற்றி என முருகனைப் போற்றி வழிபடுவது நமது வழக்கம்.

*உயிர் எழுத்துக்கள் போற்றி*
*அகரத்தின் கருவாய் ஆனவனே போற்றி*
*ஆறு மகனாய் பிறந்தாய் போற்றி*
*இதயத்தின் ஒளியான இறைவா போற்றி*
*ஈனம் அழிக்க பிறந்தவனே போற்றி*
*உதிப்புதர எழுத்து எழுச்சியே போற்றி*
*ஊகம் ஊக்கம் தந்தாய் பாற்றி*
*எண்ணத்தில் எப்போதும் நின்றாய போற்றி*
*ஏட்டுக் கல்வியின் குருவே போற்றி*
*ஐக்கியம் ஆனேன் முருகா போற்றி*
*ஒகரத்தில் ஏறி வருவாய் போற்றி*
*ஓங்காரப் பொருளாய் அமர்ந்தாய் போற்றி*
*ஔடதம் இயங்கும் இயக்கமே போற்றி*
*ஆயுதம் ஏந்திய வேலவா போற்றி*

### தமிழ்க் கடவுள்

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி நிலமாகும். இந்த நிலத்திற்கு உரிய கடவுள் முருகன். (குறிஞ்சி நில மக்கள் பேசும் மொழி தமிழ். தமிழ் கடவுள் முருகன்). சத்தியோ ஜாய்தம், தட்புருசம், வாமதேவம், ஈசானம், அகோரம் என்ற ஐந்து முகத்துடன், அடியவர்க்கு அருள்கொடுக்கும் கீழ்நோக்குப் பார்வையுடன் கூடிய ஆறாவது முகமாகிய திருவதனம் இணைத்து ஆறு முகங்களில் இருந்து அனல் பொறி பிறக்கச் செய்தார் சிவன். ஆறுமுகனாகப் பிறந்தார் முருகன். அனலில் பிறந்து புனலில் வளர்ந்து உருவாகிய காரணத்தினால் கந்தன் என்றும் பெயர் பெற்றார். அழகு என்றால் முருகன். முருகன் என்றால் தமிழ்க் கடவுள். தமிழ் வேறு முருகன் வேறு அல்ல.

முருகனுக்குக் கண்கள் பன்னிரெண்டு. தமிழுக்கு உயிர் எழுத்துக்கள் பன்னிரெண்டு. முருகனுக்கு ஆயுதம் வேல் ஒன்று. தமிழ் எழுத்துக்களில்

ஆய்தம் ஒன்று. முருகனுக்கு முகங்கள் ஆறு. தமிழின் இன எழுத்துக்கள் ஆகிய வல்லினம், மெல்லினம், இடையினம் என இன எழுத்துக்கள் ஆறு முருகனுக்குச் சிரம் ஆறு, அருள் கரங்கள் பன்னிரெண்டு. முருகனின் சிரமும், கரமும் சேர்ந்து பதினெட்டு . தமிழில் மெய் எழுத்துக்கள் பதினெட்டு. எனவே, முருகனே தமிழ். தமிழே முருகன். எனவே, நாவாரப் பாடி உருகி முருகு என வழிபடுவது தமிழ் கடவுள் முருக வழிபாடு.

**கார்த்திகை தீப வழிபாடு**

ஆறு முருகனும் ஆறு கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டதால் கார்த்திகேயன் எனப் பெயர் பெற்றார். ஆறு முகங்களைப் பெற்றதால் ஆறுபடை வீட்டையும் கொண்டவர் ஆனார். பழத்திற்காக நின்ற வீடு பழநீ. தந்தைக்கு உபதேசம் செய்ய அமர்ந்த வீடு சுவாமிமலை. சூரனை போரில் வெற்றிகொள்ள எழுந்தது திருச்செந்தூர். தெய்வானையை மணம் புரிந்த வீடு திருப்பரங்குன்றம். வள்ளியை கலப்பு மனம் புரிந்த வீடு தணிகைமலை. வள்ளி-தெய்வயானையுடன் காட்சி தந்தது பழமுதிர்ச் சோலை என ஆறுபடை வீடு கொண்ட முருகப் பெருமானைக் கார்த்திகை மாதத்தில் 30 நாளும் தீபம் ஏற்றி வழிபடும் போது இல்லம் நல்லறமாகத் திகழும். மேலும் இம்மாதத்தில் திருக்கார்த்திகை அன்று தீபம் ஏற்றி முருகனை வழிபடுவது தமிழர் வழிபாடுகளில் ஒன்று.

**தனித்து இயங்கும் முருக வழிபாடு**

பழத்திற்காக ஆண்டியின் கோலத்தில் நிற்கும் மலை. பழம் நீ = பழநீ மலை. பழம் என்றால் வித்து. தமிழுக்கு வித்தாகிய ஞானக் கடவுள் முருகன். பந்தம், பாசம், உறவு, பகை இவற்றிற்கு அப்பாற்பட்டவர் பழநி மலை முருகன். ஸ்ரீபழனி ஆண்டவர் என அழைக்கப்படுகிறார். அன்பே உருவான பாலமுருகன் பழத்திற்காகவா தனியாக நின்றார்? மக்களுக்கு அருளும், ஞானமும் கொடுக்கவும், தனது கருணை பார்வையால் நலன்கள் தரவும் அல்லவா தனித்து நின்று தனக்கு என்று பக்தர்களைக் கொண்டு குறை தீர்க்கும் வள்ளலாக உள்ளார் முருகன். அகோரே விஸ்வரூபம் எடுத்த வீரபத்திரன் பெரிய கோவில் தளங்களில் தனி சன்னதியில் மக்கள் குறைபோக்கி உடல் ஆரோக்கியம், உள்ள ஆரோக்கியம், திருமணத்தடைகள் போக்கி வருகிறார். தனிக் கோவில்களும் வீரபத்திரனுக்குத் திருக்கடையூர், இராமேசுவரம் போன்ற திருத்தலத்தில் உள்ளது.

**மலைப்படி வழிபாடு**

மக்கள் தங்கள் குறைகளை முருகனிடம் சொல்லிக் குறை போக்க வேண்டி மலைப்படிகளை நீரால் சுத்தம் செய்து மஞ்சள் குங்குமம் வைத்து ஒவ்வொரு படியாக மஞ்சள், குங்குமம் வைத்துக்கொண்டே படி ஏறி முருகனை தரிசனம் செய்து தங்கள் குறை போக்கிய முருகனுக்கு நன்றி சொல்லும் வகையில் வழிபடுவது “படி வழிபாடாகும்”.

**வேல் வழிபாடு**

*"கன்றும் வெயிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்கள்*
*நொய்யிற் பினவள வேணும் பகிர்மின்க ளுங்கட்கிங்நின்*
*வெய்யிற் கொதுங்க வுதவா உடம்பின் வெறுநிழல் போல்*
*கையிற் பொருளு முதவாது காணுங் கடைவழிக்கே".*

உலகினரே இவ்விடத்து வெய்யிலுக்கு ஒதுங்கி நிற்க உதவாத இந்த யாக்கையின் பயனற்ற நிழலைப் போல் மரண காலத்தில் ஆன்மா புறப்பட்டுச் செல்லும் இறுதி வழிக்கு உங்கள் கையிலுள்ள பொருளும் துணை செய்ய மாட்டாது என்பதை உணர்ந்து கொள்ளுங்கள்.

ஆதலால், கூர்மை மிகுந்து ஒளி செய்கின்ற வடித்தெடுத்த வேற்படையையுடைய முருகப் பெருமானை வணங்கி ஏழைகளுக்கு எக்காலமும், நொய்யிற் பாதியனவாயினும் பங்கிட்டுக் கொடுங்கள். வேல் என்பது ஞானம், கூர்மை உடையது ஆகும். இதனை விளக்கும் பரமாசிரியர், மாணிக்கவாசகனார்

*"கூர்ந்த மெய்ஞ் ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தில்*
*நோக்கியரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே"*

என்கிறார். வேல் ஞானம் ஒளிர்வது ஆகும். அறியாமை ஆகிய இருளை நீக்கும் தன்மை உடையது. இதனை உணர்த்தவே சுவாமிகள் வெயிற்கதிர் என்று வேலைச் சிறப்பித்தார். வடிவேல் என்பது ஏனைய வேல்போல உலைக்களத்தில் காய்ச்சி வடித்தது அன்று. பாச ஞான பசுஞானங்களில் வடித்தெடுத்த பதிஞானம் என்பதாகும். ஒரு பொருளை தர்மம் செய்யும் போது தான் கொடுத்ததாக எண்ணுவது கூடாது. முருகவேல் கொடுத்ததைத் தருகிறேன் என எண்ண வேண்டும் அவ்வாறு எண்ணிக் கொடுத்தால் பிறவாத இன்பம் பெறலாம். எனவே, வேலனை வாழ்த்தி வணங்கி வழிபடுவது வேல் வழிபாடாகும்

**கொடி வழிபாடு -கொடிமர அமைப்பு**

கொடிமரம் கோவிலுக்கு முன்புறம் அமைக்கப்படுவது. அது மனிதன் யோக நிலையில் நிமிர்ந்து அமர்ந்து இருக்கும் போது முதுகுத் தண்டைக் குறிக்கக் கூடியது. அதாவது, அணு ஆதாரச் சக்கரங்களின் நிலை கடந்து ,ஆத்மா அனுபவம் அடைவதையும், விருப்ப சித்திகள் கை கூடுவதையும் குறிப்பிடுவது யோக சாஸ்திரம் ஆகும்.

ஐந்து அங்குல கொடிமரம் - புதனுக்கான எண் - 5. அறிவு, புத்திசாலித்தனம், சாமர்த்தியம் இவற்றால் எல்லா செயல்களையும் வெற்றிகரமாக அமைத்துத்தருவது ஐந்து அங்குல கொடிமரம். ஆறு அங்குல கொடிமரம்- சுக்கிரனுக்கு ஆன எண் - 6. எனவே, கொடிமரம் ஆறு அங்குலத்தில் பீடம் அமைக்கப்படுகிறது. அழகு, ஈர்ப்பு, வசதி வாய்ப்பு,

பொலிவு, மக்கள் தொடர்பு, புகழ் போன்ற அனைத்தையும் தரக்கூடியது ஆறு அங்குலகொடி மரம். பதினாறு அங்குல கொடி மரம் - கேதுவின் எண் - 7. பதினாறு அங்குல கொடி மரம் 16. இது ஞானத்தின் அடையாளம். எழுச்சி, தெய்வசக்தி தெய்வ அருள் ஞானிகளின் அருள் கிடைக்கக் கூடியது. எனவே, தடைகள், துன்பங்கள் வராமல் தடுக்கக் கூடியது. பதினாறு அங்குல கொடிமரம். இருபத்தேழு அங்குல கொடிமரம் - செவ்வாய்க்கு உரிய எண்- 9. 27. உழைப்பு, துணிச்சல், செயல்திறன், முனைப்பு, சோர்வின்மை, செவ்வாயின் ஆதிக்கம். எனவே எதையும் துணிந்து செய்து முடிக்கும் துணிவு கொடுக்கும். கொடி மரத்துக்கு அடியில் சுதர்சன எந்திரம் வைக்கப்படுவதால் தீய சக்திகள் புக முடியாது. எனவே தான் கோவில்களில் கொடி மரத்தை தாண்டி சுதர்சன சக்கரத்தை எதிர்த்து தீய சக்திகள் உள்ளே போக முடியாது. கொடி மரத்தை வணங்கி அமர்ந்து தியானம் செய்யும் போது எந்திர சக்தியின் பலன் நமக்கு கிடைத்து நன்மை பெறலாம்.முருகனின் கொடி சேவல் கொடி பகைவர்க்கும் கருணை காட்டிய கந்தனை வணங்கும் போது சாந்தமும், ஆனந்தமும் உண்டாகும்.

### மயில் வழிபாடு

சூரனை வதம் செய்யாமல் மன்னித்து ஒரு பாதி உடலை மயிலாகவும் ,மறு பாதி உடலை சேவலாகவும் மாற்றிய முருகன். சேவலை தனது கொடியில் வைத்துக் கொண்டார். மயிலை தனது வாகனமாக வைத்துக் கொண்டார். மயில் தேசிய பறவை. முருகா என்றால் மயிலும் பறந்து வரும் என்று பக்தி வரலாறுகள் சொல்கின்றன .

### காவடி வழிபாடு

முருகனுக்கு ஆடுவதும், பாடுவதும் பிடித்த ஒன்று .எனவே பக்தர்கள் அலகு குத்தி காவடி எடுத்து முருகனை சந்தோசப் படுத்துவது தமிழர் கடவுள் வழிபாட்டில் ஒன்று.

### நடை பயண வழிபாடு

தைபூச பழனி முருகன் தண்டபாணி அருள் பெற பக்தர்கள் காலம். காலமாக நடந்து வந்து அருள் பெருகின்றனர் குமரக்கடவுள் இருக்கும் குன்று தோறும் நடைபயணம் ஏற்று காவடி ஆடி வீடுகளிலும் வைத்து வழிபாடு நடத்தி, கோவிலிலும் வைத்து வழிபாடு நடத்தி நடைபயணம் சென்று ஆடிப்பாடி முருகனைக் கண்குளிரக் கண்டு வருவதே முருக பக்தர்களுக்கு ஆனந்தத்தையும் பரசவத்தையும் தரும்.

### முருக பக்தி வழிபாடு

முருக பக்தர்கள் தை பூசத்திற்கு மாலை போட்டு ஆறுபடை வீடுகளுக்குச் சென்று முருகன் அருள் பெற்று வருகிறார்கள். உள்ளம் உருகிமுருகன் பாடல்களைப்பாடி முருக பக்தர்களுக்கு அன்னம், தண்ணீர்,

நீர் மோர், பழம் என தர்ம காரியம் செய்யும் பக்தர்கள். முருகபக்தர்கள் தங்க இடம் கொடுத்து, மண்டபம், சத்திரம் இவற்றின் வழியாக பக்தர்களுக்குச் சேவை செய்யும் பக்தி. முருகன் கோயில்களைப் பராமரிப்பதில் தங்களை இணைத்துக் கொண்ட ஆதினம், கௌமார சுவாமிகள், தவயோக பக்தி. நாள் தோறும் முருகனை வணங்கும் பக்தி. வாரம் ஒருமுறை, மாதம் ஒரு முறை எனக் கண்டு வணங்கும் பக்தி. ஆண்டு தோறும் மாலை அணிந்து முருகனைத் தரிசிக்கும் பக்தி. சினிமாவில் பக்தி, நாடகத்தில் பக்தி, தொலைக்காட்சியில் பக்தி இப்படி முருகபக்தி காலம். காலமாக வளர்ந்து கொண்டே வருகிறது. முருகன் இருக்கும் குன்றுகளையும், மலைகளையும் இயற்கை சூழ பாதுகாத்து நம் பின் வரும் தலைமுறைகள் பக்தி பரவசத்தோடு கண்டு வணங்கி மகிழப் பாதுகாக்க வேண்டும். பக்தி அமைதி தரும். அன்பு தரும். கருணை கொள்ளும், பகை விரட்டும், நேசம் வைக்கும், சாதி, மதம் கடந்ததே முருக பக்தி. ஓம் சரவணபவ எண்ணும் ஆறு எழுத்து மந்திரத்தை உச்சரித்து முருகன் அருள் பெறுவதே முருகபக்தி வழிபாடு .

### சித்தர் வழிபாடு

சித்தர்களுக்கு எல்லாம் சித்தர் முருகன். முருகனை வணங்கி சித்தி பெற்றவர்கள். மகான்கள் திருமூலர், கருவூரார், அகத்தியர், புண்ணாக்கீசர், சட்டைநாதர், அழுகன்னர், மச்சமுனி, தேரையர், புலிப்பாணி, குதம்பை சித்தர், பாம்பாட்டி சித்தர், இராமதேவர், கோராக்கர், சுந்தரானந்தர், கமலமுனி, இடைக்காடார், போகர் போன்றோர் சித்திகளும் தமிழகத்தில் இருப்பதால் சித்தர் வழிபாடும் சிறப்பு பெற்று மக்களைக் காத்து வருகிறது.

### முடிவுரை

கோயமுத்தூரில் கௌமார நெறியை மூல இயக்கமாகக் கொண்ட சிரவணபுரக் கௌமார மடாலயம் தனிச் சிறப்புடையது. குமரக் கடவுளை வணங்கி தமிழ்ப் புலமைகளையும் வளர்த்தும் வருகிறார்கள். தவத்திரு இராமானந்த சுவாமிகள், தாத்திரு கந்தசாமி சுவாமிகள், தவத்திரு கஜபூஜை சுந்தரசுவாமிகள், தவத்திரு குமரகுருபர சுவாமிகள் முருகன் அடிபணிந்து தமிழ் வளர்த்து பாமாலை பாடி வழிபாடு செய்கிறார்கள்.

# 'முருகாற்றுப்படுத்த' முருக வழிபாடு

முனைவர் மீனாட்சி மு.
தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு)
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 21

என் வழி தனி வழி என்பது இன்றைய இளைய தலைமுறையின் இதயம் கவர்நத வாசகம். ஆனால், அறுபதுகளிலேயே தன்வழி தனிவழி என்று தனக்கேயுரிய பாணியில் தமிழ் இலக்கியத்தை அணுகிய பேராசிரியர் முனைவர் துரை அரங்கசாமி. "பசும்புல் மூதா தைவந்தாங்கு விருந்தே காமம் பெருந்தோளோயே" என்ற தொடருக்கு அவர் கூறிய விளக்கம் இன்றைய உளவியலாளரை மூக்கின் உச்சி சுட்டுவிரல் சேர்க்க வைக்கும். அந்த வகையில், ஏனையவை போலவே திருமுருகாற்றுப்படையும் ஆற்றுப்படுத்தப்படுபவர் பெயராலமைந்தது என்று 'அன்புநெறியே தமிழர்நெறி' என்ற நூலில் அவர் தரும் புதிய பார்வை குறிப்பிடத்தகுந்தது. அந்த விளக்கத்தின் சரி - தவறுகள், ஏற்புடைமை இன்மைகள் முதலியனவெல்லாம் விவாதத்திற்கு உரியனவாகலாம். ஆனால் அந்தப் பார்வை காட்டும் தமிழரின் பக்திநெறி, கால இட எல்லைகள் கடந்து நிற்கும் சிறப்பினது. 'முருகாற்றுப்படுத்த' ஏழன் பொருளைப் பிறர் விவரிக்க, இரண்டன் பொருள் இவர் கொள்வது இறைவனுக்கும் உயிர்களுக்கும் இடையிலான பிணைப்புப் பற்றியது.

முருகனை உயிர்களிடம் ஆற்றுப்படுத்துவதாய்ச் சொல்வதன் முதற்சிறப்பு முன்னிய வினையை முடித்தற்கான முனைப்பு முருகனிடமே உண்டு. உயிர்களிடம் கிடையாது என்பது. மனித இயல்பை நன்கறிந்துதான் கற்பெனும் பொறுப்பை இயற்கை பெண்ணிடம் தந்திருக்கிறது என்றும் ஆணிடம் கொடுத்திருந்தால் ஐயோடா நம்மால் முடியாதென்று பாதியிலேயே போட்டுடைத்துவிட்டுப் போய்க் கொண்டே இருந்திருப்பான் என்றும் நகைபடத் திருக்குறளார் கூறியதன் ஆழமான உண்மை, உள்ள உறுதி உடையோரிடமே வினையை ஒப்படைக்க வேண்டுமென்பது. உயிர்களை முருகனிடம் ஆற்றுப்படுத்தினால் அவை அவ்வழிச்சென்று உய்தியுறும் என்ற உறுதியில்லை, அறிவு, ஆற்றல், முயற்சி முதலியவற்றின் குறைபாட்டால் பல உயிர்கள்; திசைமாறலாம். இடையில்தடைப்பட்டுத் திரும்பிவிடலாம். திகைத்து நிற்கலாம். முடிவுவரை செல்லாமல் முயல்போல் தூங்கிவிடலாம். முயல் - ஆமைக்கதை உணர்த்தும் 'முயலாமைப்' பிழை உயிர்களிடம் நிறையவே உண்டு. அது மட்டுமா? ஐயங்களில் சிக்குண்டு அலைப்புறலாம். அவ்வளவு ஏன், அறுபடை வீடுகளை அடைந்து ஆண்டவன் கருவறைமுன் நிற்கும்போதும் அடங்காமல் அலைபாயும் மனங்கள் எத்தனை? இப்படி ஆற்றுப்படுத்திய வழியில் சென்று அடையவேண்டிய இறை அருளை அடையும் என்ற உறுதியில்லாத உயிர்களை ஆற்றுப்படுத்துவதைவிட எவ்வுயிர் எத்தன்மைத்தாயினும் எல்லா உயிர்களையும்

தன்வழிப்படுத்தும் அருளும் ஆற்றலும் கொண்ட முருகனை உயிர்களிடம் ஆற்றுப்படுத்தினால் உறுதியாக உயிர்களை உய்விக்கும் வழியாக அது அமையும். குறிக்கோளைவிட்டுத் தறிகெட்டு ஓடும் குழந்தைகளைத் துரத்திப் பிடித்து வந்து நன்னெறியில் மீட்பிக்கும் பெற்றோர் போல இறைவன்முன் நிற்கும்போது உலகாயத எண்ணங்களில் ஓடி ஓடி அலைப்புறும் உயிர்களை ஆட்கொண்டு உய்விப்பவன் இறைவன். அவனை உயிர்களிடம் ஆற்றுப் படுத்தினால்தான் உயிர்கள் உய்வுறல் உறுதி.

முருகனை ஆற்றுப்படுத்துவதன் அடுத்த நோக்கம் இறைவனை அடைந்து முக்தியுற வேண்டுமென்ற உயிர்களின் ஆசையை விடவும் உயிர்கள் தன்னை வந்தடைந்து பேரின்பம் பெற வேண்டும் என்ற இறைவனின் அருளுணர்வு வலிமையானது. கவனக்குறைவோ, திறமையின்மையோ காரணம் எதுவாயினும் கல்வியில் பின்னடைந்த மாணவரையும் இழுத்துவந்து அனைவருக்கும் அறிவூட்டும் ஆசிரியர்போல் காட்டிய வழியைவிட்டு விலகிச்செல்வோரையும் மீட்டு வருபவன் இறைவன். எனவேதான், வழிபடு தலமெல்லாம் வந்தருளிக் காத்திருக்கும் அடியவரைக் காத்தருளுமாறு முருகனை நக்கீரர் ஆற்றுப் படுத்துவதாகப் பொருள் காண்கிறார் துரையரங்கனார்.

ஆற்றுப்படைக்கு மாற்றுப்பொருள் காண்பதற்கு மற்றுமொரு காரணமும் உண்டு. பெற்ற பெருவளம் பெறார்க்கு அறிவுறுத்தல் கூத்தர் பாணர் பொருநர்க்கெல்லாம் கூடிவரும் செயலாகும். வழிகாட்டும் தகுதியும் ஆற்றலும் அவர்கட்கு உண்டு. ஆனால் சேவடிபடரும் செம்மல் உள்ளமொடு நலம்புரி கொள்கைப் புலம்புரிந்துறையும் செலவு நயந்தோர்க்கு வழிகாட்ட முற்படும் உயிர்களுக்கு, ஆற்றுப்படுத்தும் தகுதி அமைந்திருத்தல் அரிது. உயிர்கள் பெற்றிருப்பது சுட்டறிவு. முற்றறிவினன் முருகனை முழுமையாய் அறிந்தவர் யார்? அறியாதோர் பிறரை ஆற்றுப்படுத்தல் எங்ஙனம்? ஆனால் இறைவனை ஆற்றுப்படுத்த அன்பு மட்டுமே தேவை. ஆற்றுப்படுத்தப்படுபவனே அனைத்தும் அறிவான். முனைகின்ற வினையில் தடையோ தவறோ நிகழ வாய்ப்பே இல்லை.

இவ்வகையில் ஆற்றுப்படை என்ற சொல்கூட ஆழமான பொருளினது. வழியைச் சுட்டும் சொற்களில் ஆறு என்பதற்கு அறுத்துச்செல்வது என்று விளக்கம் தரப்படுகிறது. தடைகளைத் தகர்;த்தும், தகர்க்க முடியாவதற்றைத் தவிர்த்து வளைந்து சென்றும் பலவகை நிலம் கடந்து ஒருமுகமாய் முன்னேறிக் கடலைச் சென்றடையும் ஆற்றல் கொண்ட நீர்ப்பெருக்கே ஆறு. அதேபோல் இறையருட் பெருங்கடலைச் சென்றடையும் வழிகளில் சோதனைகளையெல்லாம் வென்று அவன் திருவடி சேர்வதும் ஓர் ஆற்றின் கடல்நோக்கிய பயணம் போன்றது. உலகப்பற்றை அறுத்து வழிகண்டு அவ்வழியில் முன்னேறத் தடையாகும் ஐம்புல வேட்கை ஈர்ப்புக் கற்களைத் தகர்த்தும் அறியாமை மரங்களைச் சாய்த்தும் நுங்கும் நுரையுமாய்ப் பொங்கிப் பிரவகிக்கும் பக்தி வெள்ளத்தில் பரவசமாய்ப் பயணம் செய்து இறை அருளாகிய பேரின்பப் பெருங்கடலை அடைய வேண்டும். எத்தனை உயிர்கள் அத்தகு ஆற்றல்

பெற்றிருக்கும்? இறைவனை உயிர்களிடம் ஆற்றுப்படுத்திவிட்டால் உயிர்களின் குற்றங்குறைகளை அறுத்து நெறிப்படுத்தித் தடையாகும் சிற்றின்பக் கற்களையும் மனச்சலன மரங்களையும் அகற்றித் தன் அன்பு வெள்ளத்தில் மிதக்கச் செய்து அவனே தன் அருட்கடலில் சேர்ப்பித்துவிடுவான் அல்லவா? அடைய வேண்டிய அவனிடமே அழைத்துச் செல்ல வேண்டிய பொறுப்பைக் கொடுத்துவிட்டால், வாங்கிய கடனை வசூலிக்கும் பொறுப்பை வங்கிகளே ஏற்பது போல் உயிர்களின் பிறவிக்கடனைத் தீர்க்கும் பொறுப்பைப் பெம்மானே ஏற்றுக்கொள்வான். அவ்வகையில் உயிர்கள் உய்வழி அறிந்த முருகனை உயிர்களிடம் ஆற்றுப்படுத்துதல் பொருந்தும் செயல்தானே!

அதுமட்டுமன்று, தான் பெற்ற பெருவளம் பெறார்க்கு அறிவுறுத்தி அவர்களும் சென்று பயன்பெறச் சொன்ன பக்கம் தானே ஆற்றுப்படை. முருகனை ஆற்றுப்படுத்துவது என்ற விளக்கத்திலும் ஆழமாக நோக்கினால் உயிர்களை ஆற்றுப்படுத்துவதே உட்கிடை என்பது புலனாகும். ஏனெனில் உயிர்களின் செயல் என எதுவும் இல்லை. அனைத்தினுள்ளும் இருந்து இயக்குபவன் இறைவன். ஆனால் ஊனுடம்பு ஆலயத்தில் உள்ளக் கோவிலினுள் உறைபனை வெளியே தேடுவதும், அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த மூர்த்தியாகி அகிலாண்டகோடி எல்லாம் நிறைந்துள்ளவனுக்குக் குறிப்பிட்ட சில இடங்களில் கோவில் கட்டிக் கும்பிடுவதும், அவன் அருளுக்கு இடம் மட்டுமின்றிக் காலமும் கணித்து இன்ன இடத்தில் இன்ன நாளில் கூடி இன்னின்ன படைத்து இவ்வாறு சடங்குகளாற்றி இன்னின்ன பயன்கள் பெறலாம் என பட்டியலிடுவதுடன் வகுத்தான் வகுத்த வகையில் நிறைவுடன் வாழாமல் வேண்டுதல்கள் வைத்து நேர்த்திக்கடன்கள் நிறைவேற்றுவதுமாய் உயிர்கள் அலைகின்றன. இறையருள் பெற்ற ஒருவன் இந்த உயிர்களை ஆற்றுப்படுத்துகிறான். "ஐயன்மீர் கேளுங்கள். அவன் அருளால்தான் அவன்தாள் வணங்கவேண்டும் என்ற எண்ணமே எழும். அவனைச் சென்றடையும் ஆற்றல் நமக்கில்லை என்பதை உணர்ந்து என் இதயத்தில் வந்தருளுமாறு வேண்டினேன். அவன் அருள் பெற்றேன். நீங்களும் நான் சென்ற அதே வழியில் சென்று அவனருளைப் பெறுங்கள்" என ஆற்றுப்படுத்துகிறான். தாங்கள் வழிபடுதலமெல்லாம் வந்தருளுமாறு முருகனை ஆற்றுப்படுத்துவது என்ற விளக்கத்தின் உட்கிடை. அப்படி வேண்டுவதே அவன் அருள் பெறும் வழி என்று உயிர்களை ஆற்றுப்படுத்துவதுதானே!

எல்லாம் சரிதான். ஆனால் அவன்தான் தானே வந்து தலையளி செய்பவனாயிற்றே. அவனுக்குச் சொல்ல வேண்டுமா? அப்படியே என்றாலும் சொல்லிவிடத்தான் முடியுமா? கடல் நீரைக் கைகொண்டு அளந்து கணக்கிட முற்பட்ட கதையாக அல்லவா இருக்கிறது? அறியாமை மட்டுமா, சிறிது ஆணவமும் ஒட்டியிருக்கிறதே எனக் கேட்கலாம். உண்மைதான். ஆனால் அறியாமையும் ஆணவமும் உள்ளத்திற்கு உவப்பாகும் இடங்களும் உண்டல்லவா? பின்புறம் பிணைத்த உள்ளங்கையினுள் ஒளித்து வைத்திருப்பது தாய்க்குத் தெரியாது என்று நினைப்பதோடு தனக்குப் பின்னால் ஓசை கேட்டால்

முதுகுப்புறம் தெரிய முழுவதுமாய்த் திரும்பிப் பார்க்கும் குழந்தையின் அறியாமை தாய்க்குக் குதூகலம் தருதவதல்லவா. தனக்குத் தேவையான பொருளைத் தான்இருக்குமிடம் வந்து தருமாறு கேட்கும் பிள்ளையின் வேண்டுகோளைத் தாய் விரும்பியோடி நிறைவேற்றுவதில்லையா? உள்ளப்பட்ட நகை நான்கனுள் பேதைமையும், பெருமிதம் விளைக்கும் உணர்வுகளில் கொடையும் கொள்ளப்படல் உணர்த்தும் உண்மை என்னவெனில், சில அறியாமைகள் மனதுக்கு இனியவை. சில ஆணவப் போக்குகள் மகிழ்ச்சி தருபவை என்பது. உயிர்களின் அறியாமையும் ஆணவமும் இறையருளின் முன்னர்ச் சிறுபிள்ளைத்தனமானவை.

'நண்பனாய், மந்திரியாய், நல்லாசிரியனுமாய், பண்பிலே தெய்வமாய், பார்வையிலே சேவகனாய்' வருவான் என்று பாரதி பாடியதும், 'தந்தது உன்தன்னைக் கொண்டது என்தன்னைச் சங்கரா யார்கொலோ சதுரர்' என்று கேட்டதும், கண்ணப்பரின் காலும் சாக்கியரின் கல்லும் பூசலாரின் மனமும் தத்தம் வழியில் உணர்;த்திய பக்தியை ஏற்று அருளியதும் அன்பினால் வழிபடும் எந்த வழியும் உயிர்களை இறைவனிடம் சேர்க்கும் என்பதை உணர்த்துபவை.

நெல்லுக்கு உப்பென்ன நிறைபொன்னே வழங்கும் அன்பினன் இறைவன். உயிர்கள் அழைக்காமலே வருபவன். அவனிடம் செல்லும் வழியறியாத உயிர்கள் அவன் இருக்கின்ற இடமான இதயத்தைவிட்டு எங்கெங்கோ தேடியலைகின்ற 'ஞானத் தங்கங்கள்' கண்டு அவன் சிரிக்கின்ற சிரிப்பொலி பரங்குன்று தொடங்கிப் பழமுதிர்சோலை வரை எதிரொலிக்கிறது. படைவீடுகள் மட்டுமின்றிப் பாரெங்கும் கேட்கிறது.

முருகன் என்ற சொல்லுக்குத் திரு.வி.க. தரும் விளக்கம், அன்பே சிவம் எனும் திருமூலரின் தத்துவம் எனப் பல கருத்தியல்களின் இணைப்பாக அன்புநெறியே தமிழர் நெறி என்ற உண்மையை உணர்த்துவது 'முருகாற்றுப்படுத்த' என்ற தொடர்க்கு முருகனை ஆற்றுப்படுத்துவது என்ற விளக்கம். நூலின் கருத்தென அதை ஏற்காதோரும் நுவல் பொருட் சிறப்பைப் போற்றவே செய்வர். நவில்தொறம் நூல் நயம் காணமுடிவதன் அடிப்படையே இத்தகு புதிய பொருள்கோள்கள்தான்.

# ஒப்பியல் நோக்கில் கண்ணதாசன் கவிதைகளும், சங்கக் கவிதைகளும் (முருகக் கடவுள்)

கா. முத்தரசி
முனைவர் பட்ட ஆய்வாளர்
அகராதியியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 10

ஆதிகால மக்கள் தம்மை மீறிய இயற்கைச் சக்திகளான ஐம்பூதங்களிடத்தில் எழுந்த அச்சம், அழகு, வியப்பு போன்ற காரணங்களால் அவற்றை வழிபடத் தொடங்கினர். இவ்வழிபாட்டு நம்பிக்கை இதுகாறும் நிலைபெற்று வருவதற்கு காரணம் இது ஓர் உயர்ந்த வாழ்க்கைநெறி என்று மக்கட் சமுதாயம் நம்பி ஏற்றுக் கொண்டிருப்பதாகும். அந்நம்பிக்கைக்குரிய தமிழ்க் கடவுளாகக் கருதப்படுகின்ற முருகனைப் பற்றி சங்கக் கவிதைகளுடன் கண்ணதாசன் கவிதைகளும் ஒப்பிடுவதாக அமைகிறது இக்கட்டுரை.

## தமிழ்ச் சமூகமும் முருக வழிபாடும்

தமிழ்ச் சமூகத்தில் தொன்றுதொட்டு வழிபட்டு வருகின்ற கடவுள்களில் முருகன் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளான். அவ்வகையில் முருக வணக்கத்திற்குத் தோற்றமாயிருந்தது சங்க கால அகப்பொருள் இலக்கியங்களில் “வேலன் வெறியாட்டு” என்ற வழிபாட்டுமுறை குறிப்பிடத்தக்கதாகும். இவ்வழிபாடு “களவு” வாழ்வில் ஈடுபட்ட தலைவி, தலைவனைக் காணாத நிலையில் தலைவியின் உடல் மெலிந்து பசலை நோய்க்கு ஆட்படுகிறாள். இந்நோய் தலைவனால் வந்துள்ளது என அறியாத நற்றாய் (தலைவியின் தாய்) வேலனுக்கு வெறியாட்டு நடத்துகிறாள். அவற்றை,

*வெறி என உணர்ந்த உள்ளமொடு மறிஅறுத்து*
*அன்னை அயரும் முருகநின்*
*பொன்நேர் பசலைக்கு உதவா மாறே* (நற்.47)

இதே சங்க அகப்பாடலில் ஆடு பலி கொடுத்து முருக வழிபாடு செய்வதால் பொன் போன்ற பசலை நீங்கா என்கிறாள் நற்றிணை தோழி. இவ்வாறு குறிஞ்சி நிலமக்கள் தம் தெய்வமான முருகக் கடவுளை வணங்கினர். தொல்காப்பியத்தில் திணைநிலை மக்கள் என்றவாறே திணைநிலைத் தெய்வங்களும் குறிக்கப்பட்டிந்தன.

*மாயோன் மேய காடு உறை உலகமும்*
*சேயோன் மேய மை வரை உலகமும்*
*வேந்தன் மேய தீம் புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்* (தொல்.பொரு.அகம்.5)

என நால்வகை நில தெய்வங்களும் சுட்டப்பட்டுள்ளது. இதில் சேயோன் மை வரை மலை நிலமான குறிஞ்சிநில தெய்வமாக சுட்டப்பட்டது[1].

இது ஓர் இனக்குழு வழிபாட்டு முறையாக குறிஞ்சி நிலமக்களான வேட்டு இன வாழ்வில் முருக வழிபாடு தொடக்கம் பெற்றது எனலாம்.

**புராணங்களின் வருகையும், உறவு முறையும்**

தொல்காப்பியத்தில் தெய்வங்களுக்குள் உறவு முறைகள் சுட்டப்பட வில்லை. சங்க இலக்கியங்களில் காலத்தால் பிந்தையதான பரிபாடல் திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை இவற்றில் முருகனின் பிறப்பு, உறவு முறை காணப்படுகிறது. பரிபாடலில் மகன் என்றும் பிறப்பும் சிவன் உமையின் மகன் முருகன் என்றும் கூறுகிறது.

*காஅய் கடவுட் சேஎய்! செவ்வேள்!* (பரி.5:13)

இங்குச் செவ்வேள் என்பது முருகனைக் குறிப்பதாகும். அச்செவ்வேள் கடவுளின் மகன் என்கிறது பரிபாடல். மேலும் சிவன், உமையின் மகன் கார்த்திகை மகளிர் அறுவரால் வளர்க்கப்பட்டனர் என்று கூறுகிறது பரிபாடல்.

*உமையடு புணர்ந்து, காம வதுவையுள்*
*அமையாப் புணர்ச்சி அமைய நெற்றி*
*இமையா நாட்டத்து ஒரு வரம் கொண்டு*
- - - - - - - - - - - - - - - - - - - - -
*அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்* (பரி.5:28-45)

இங்கு உமை சிவன் இருவருக்கும் திருமணம் நடந்ததாகவும் முருகன் சிவனின் நெற்றிக்கண்ணிலிருந்து வந்த தீப்பொறியின் வழியாக கார்த்திகை மகளிர் அறுவரால் சரவணப் பொய்கையில் வளர்க்கப்பட்டது என்று இயம்புகிறது பரிபாடல். ப. ஞானம் தமிழ் இலக்கியத்தில் முருகக்கடவுள் என்ற நூலில் உறவு, பிறப்புப் பற்றி பரிபாடலில் புராணக் குறிப்பினையே ஆசிரியர் கூறியுள்ளார் என்பதற்கு "என்ப" என்னும் சொல்லால் அச்செய்தியை முடித்திருப்பதால் உணரலாம். அதற்கு உரை கூறுகின்ற பரிமேலழகரும் பௌராணிகர் கூறுவதாகக் குறிப்பிடுவதால் அறியலாம் என்கிறார். இதன்வழி இன்று நடைமுறையில் சொல்லப்பட்டு வருகிற முருகக் கடவுள் பிறப்பு வரலாறு தமிழ் மரபு அல்ல என்பது அறியலாகிறது. மேலும் திருமுருகாற்றுப்படையில் கடவுட் புதல்வன், மலைமகள், கொற்றவை, பழையோன் என உமையைப் பல பெயர்களில் விழித்து அவர்களின் மகன் என்கிறார் நக்கீரர்.

*அறுவர் பயந்த அறுமர் செல்வ*
*ஆல்கெழு கடவுட் புதல்வ! மால்வரை*
*மலைமகள் மகனே! மாற்றோர் கூற்றே!*
*வெற்றி வெல் போர்க் கொற்றவை சிறுவ!*
*இழை அணி சிறப்பின் பழையோள் குழவி!* (திருமு.255-259)

என்கிறார். இதனையே கவிஞரும் தம் கவிதையில் உமைக்கு பல பெயர், நலம் எனக் குறிப்பிட்டு மகனைக் காணாமல் தேடுவதாகவும் அவன் சிங்கப்பூரில் உள்ள பினாங்கு நகருக்கு அவன் வந்துவிட்டதாகவும் கூறும் கவிஞர், பிள்ளையை காணவில்லை என்று தாய் கண்கலங்குவது இயல்பாக உள்ளச் சமூக சூழலில் சிவன் கண்கலங்குவதாகக் கூறுகிறார் கண்ணதாசன்.

*வாஞ்சையுடன் மீனாட்சி*
*மதுரையிலே தேடுகிறாள்*
*மகன்முகத்தைக் காண வில்லை!*
*வண்ணமயில் விசாலாட்சி*
*காசியிலே வாடுகிறாள்*
*மைந்தனிடம் கருணை யில்லை!*
*காஞ்சிநகர்க் காமாட்சி*
*மகன்முகத்தைக் காண்பதற்குக்*
*கவலுறுகிறாள் கிட்ட வில்லை!*
*காடுநட மாடுசிவன்*
*கன்னி இளந் தென்னகத்தில்*
*கண்கலங்கல் தீர வில்லை!*
*தெளிவான பினாங்குநகர்*
*தேடியவன் வந்து விட்டான்* (தொ.5:ப.131)

தமிழர்கள் தங்கள் (பிழைப்புத் தேடி) சென்ற இடத்திலும் தன் கடவுள் நம்பிக்கையும் கொண்டு சென்றதை அறியலாம். மேலும், மாங்கனி முருகனுக்குக் கொடுக்காததால் கோபித்துக் கொண்டு பழனிக்கு வந்து ஆண்டிக் கோலத்தில் நின்றதையும், அப்பொழுது சிவன், பார்வதி முருகனைத் தேடிவந்து நீயே ஞானப்பழம் என பார்வதி கூறியதாகக் கூறப்படும் புராணச் செய்தியை ஞாபகப்படுத்துகிறது கவிஞரின் கவிதை வரிகள். திருமுருகாற்றுப்படையில் பழனித்தலத்தில் தெய்வயானையுடன் முருகன் காட்சியளிப்பதாக கூறுகிறது. ஆவினன்குடியே தற்பொழுது பழனி என அழைக்கப்படுகிறது.

*தாஇல் கொள்கை மடந்தையொடு சிலநாள்*
*ஆவினன்குடி அசைதலும் உரியன், அதா அன்று*
(திருமுருகு.175-176)

இங்கு மடந்தை என்பது தெய்வயானையைக் குறிப்பதாக உரையாசிரியர் வழி அறியப்படுகிறது.

**ஆற்றுப்படுத்தலும் - முருகக் கடவுளும்**

*யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்* என்ற வகையில் தான் பெற்ற செல்வத்தைப் போல பிறரும் பெறவேண்டும் என்ற நோக்கத்தில் பரிசில் பெற்ற சான்றோரிடத்துச் செல்லும் வழியை வறியவருக்கு கூறி அவன் சிறப்பையும் எடுத்துக் கூறி ஆற்றுப்படுத்துவதாகும். இதனைத் தொல்காப்பியப் புறத்திணையியல் வாயிலாக அறியலாம்.

*கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்*
*ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்*
*பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்*
*சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்* (தொல்.புறம்.நூ.36)

என்று கூத்தர், பாணர், பொருநர், விறலி இவர்கள் ஆற்றுப்படுத்தி வாழ்ந்தது குறிப்பிடப்படுகிறது. சங்கத் தொகைநூல்களுள் பத்துப்பாட்டில் முதல் ஐந்து நூல் ஆற்றுப்படை நூல். இதில் முதலாவதாக உள்ள திருமுருகாற்றுப்படை

மட்டுமே கடவுள் அருள் பெற ஆற்றுப்படுத்துவதைக் கூறுகிறது. மற்றைய நான்கு ஆற்றுப்படைகளும் பொருட்செல்வம் பெற ஆற்றுப்படுத்தப்பட்டதாகும். வேறெந்த கடவுளிடத்தும் மக்களை ஆற்றுப்படுத்தியதாவது வழக்கில் இல்லை எனலாம். முருகனிடம் ஆற்றுப்படுத்தியதாக அகநானூற்றினில் காணப்படுகிறது.

*முருகு ஆற்றுப் படுத்த உருகெழு நடுநாள்* (அகம்.22:11)

மேலும் திருமுருகாற்றுப்படையில் முருகனின் அறுபடை வீடும் அறுமுகம் பன்னிருகைகள் மூலம் அவன் வழங்கக்கூடிய அருளை கூறுகிறது. சிங்கப்பூரில் வீற்றிருக்கும் முருகனை வணங்கினால் கிடைக்கும் அருளை கவிஞர் கூறுவதாவது:

*மூவார் முருகன் முன்னிலையில்*
*முழந்தா ளிட்டு வேண்டியவர்*
*மூவார் இறவார் பிணியில்லார்*
*ஆவார் வாழ்வார் உயர்வாரென்(று)*
*அறிவோம் என்போம் அவன்காவல்* (தொ-5, ப.129)

*கோவிலில் இருத்தல் நன்றாம்*
*குறைவிலா வாழ்க்கை சேரும்!*
- - - - - - - - - - - - - - -
*தமிழர்தம் குலத்தைக் காக்க*
*நெய்வாச குழலா ரோடும்*
*நேயர்கள் வருக! வாழ்க!* (தொ-5, ப.130)

என்ற கவிஞர் முருகன் மூப்பில்லாதவன் என்கிறார். மூப்பு தளர்ச்சியை அளிக்கும். தளர்ச்சியில்லா என்றும் இளமையோடு முருகன் காட்சிப்படுத்துகிறார். புராணச் செய்திகளைக் குறிப்பிட்டாலும் முருகன் தமிழர் கடவுள் அதனால் தம் குலத்தைக் காப்பவன். அவனிடத்தில் வந்து அருளைப் பெற ஆற்றுப்படுத்துகிறார் கவிஞரும்.

**தொகுப்புரை**

- ☐ தமிழ்ச் சமூகத்தில் முருக வழிபாடு வேலன் வெறியாட்டாக குறிஞ்சிநில மக்களின் தெய்வமாக இருந்தது.
- ☐ புராணங்களின் வருகையின் காரணமாக ஒரு நில தெய்வம் நானில மக்களாலும் வணங்கப்பட்டது. ஆனாலும் அவன் இருப்பிடம் குன்றாகவே குறிக்கப்பட்டது.
- ☐ தொல்காப்பியர் காலம் முதல் சங்க இலக்கிய முற்பாதிவரை கடவுள்களுக்குள் உறவு முறையில்லை.
- ☐ ஆற்றுப்படுத்துதல் என்பது சங்க சமூகத்தின் மனிதநேயப் பண்பு ஆற்றுப்படை முதல் கவிஞர் கண்ணதாசன் வரை அப்பண்பாடு தொடர்வதை உணரலாம்.

# பரிபாடலில் 'செவ்வேள்'

முனைவர் ச. முத்துலெட்சுமி
உதவிப்பேராசிரியர்
ஸ்ரீமத்.சி.பா.சு.த.க.அ.கல்லூரி,
மயிலம்

*அஞ்சுமுகந் தோன்றில் ஆறுமுகந் தோன்றும்*
*வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும் - நெஞ்சில்*
*ஒருகால் நினைக்கின் இருகாலுந் தோன்றும்*
*முருகாஎன் றோதுவார்முன்*

'ஓம்' என்னும் பிரணவ மந்திரத்தின் உட்பொருளான 'முருகா' என்ற சொல் அழகு என்ற சொல்லுக்கு உறைவிடமாகத் திகழ்கின்றது. இச்சொல் இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி ஆகிய மூன்றையும் குறிப்பதாகும். பண்டைய காலத்தில் 'கௌமாரம்' எனும் தனித்த மதமாக இருந்த முருகன் வழிபாடு பின்பு சைவ சமயத்துடன் இணைந்து மெருகேறத் தொடங்கியது.

*அரும்பெறல் மரபின் பெரும்பெயர் முருக*

என்று நக்கீர தேவனார் கூறுவதைப் போல தமிழர்களின் பண்பாட்டோடும், மொழியோடும் தத்துவத்தோடும், பழக்க வழக்கங்களோடும் தொன்றுதொட்டு இம்முருக வழிபாடு பின்னிப் பிணைந்திருக்கக் கூடிய தன்மையைச் சங்க இலக்கியமான பரிபாடல் மிகச் சிறப்பாக எடுத்தியம்புகிறது. 'ஓங்கு பரிபாடல்' என்னும் அடைமொழியால் போற்றப்படும் பரிபாடல் தமிழ் நாட்டின் எல்லாப் பகுதிகளையும் கொண்டு அமையும் செய்யுளாக அல்லாமல் மதுரை நகரைப் பற்றியும், மதுரை நகருக்கு வளம் தந்த வையை பற்றியும், மதுரையைச் சேர்ந்த திருப்பருங்குன்றத்துச் செவ்வேளாகிய திருமுருகனைப் பற்றியும், மதுரையை அடுத்துள்ள திருமாலிருங் குன்றத்து நெடுவேளாகிய மாயோனையும், கொற்றவை தெய்வத்தைப் பற்றியும் பாடுவதாகப் பரிபாடல் அமைந்துள்ளதால் இந்நூல் மதுரையின் சிறப்பைப் பற்றிச் சொல்லுவதற்கு எழுந்த நூல் என்றும் கூறுவதுண்டு. நாம் மையமிட்டுப் பார்க்கும் செவ்வேள் பற்றி எட்டுப் பாடல்களைக் கொண்டும், 612 அடிகளைப் பெற்றும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

**செவ்வேள் - விளக்கம்**

இயற்கை வழிபாட்டின் ஒரு கூறான சூரிய வணக்கமே பின்னர் முருக வழிபாடானது என்று கூறுவர். இதனைப் 'பரிபாடற்திறன்' எனும் நூலில் செவ்வேள் வணக்கம் பற்றி எழுதிய 'சாரங்கபாணி' என்னும் ஆசிரியர் 'மாக்கடலினின்று நிவந்தெழுந்த இளஞாயிற்றின் இயற்கை அழகில் உள்ளந் தோய்ந்த அன்பர்கள் அதனையே இறையென வழிபட்டு வணங்கினர். அதுவே பின்னர் நீல மயில் மீது வீற்றிருக்கும் செவ்வேள் வழிபாடாக மலர்ந்தது' என்று விவரித்துள்ளார்.

சங்க இலக்கியங்களில் 'செவ்வேள்' என்னும் பெயர் பரிபாடலில் மட்டும்தான் இடம்பெற்றுள்ளது இதன் சிறப்பாகக் கருதப்படுகிறது. முருகனைப் பற்றிய பாடல்கள் அனைத்திற்கும் 'செவ்வேள்' எனும் தலைப்பில் பெயரிட்டு அமைத்தனர். 'செவ்வேளைக் குறிக்கும் பழைய சொல்லான 'சேயோன்' என்பதனைத் தொல்காப்பியத்தில் காணலாம். இச்சொல் விகுதியே இன்றி 'செய்' எனப் பரிபாடலில் வந்துள்ளது. இதனையே நச்சினார்க்கினியர், 'செய்யவன்' என்பதைச்'சேயோன்' எனக் கூறியிருக்கவேண்டும்.

*எய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்*
*சேவடி படரும் செம்மல் உள்ளமொடு* (முருகு.61, நச்சர். உரை.)

'சேஎய்' என்பது 'காஅய் கடவுட்சேய் செவ்வேள்', என 'மகன்' என்ற பொருளிலும் (பரி.செவ்வேள்.5,பா.வ.13) சேஎய் குன்றம்' என, 'செம்மை' என்ற பொருளிலும் வழங்கப்படுகின்றது.

*'சிற்றிடை அழகுறச் செவ்வேல் காக்க'*
*'விந்து விந்து மயிலோன் விந்து*
*முந்து முந்து முருகவேள் முந்து'*

என்ற கந்தசஷ்டி கவசம் பாடுகின்றது. 'வேள்' என்ற சொல், மன்மதன், முருகன் என்ற இருவருக்கும் பொதுவாக அமைந்ததால் 'கருவேள்' என்பது மன்மதனையும், 'செவ்வேள்' என்பது முருகனையும் அடைமொழி கொடுத்துக் குறிப்பிட்டனர் போலும். முருகனுக்கு, கார்த்திகேயா, சுப்பிரமணியா, தண்டாயுதபாணி, சண்முகா என்றும், இளமையாய் இருத்தலின் 'குமரன்' என்றும், திருமாலுக்கு மருமகனாய் இருத்தலின் 'மாஅல் மருகன்' என்றும், 'வெறிகொண்டான்' என்றும், ஆறு முகங்கள் இருப்பதால் ஆறுமுகம் என்றும் பல பெயர்களுண்டு.

*ஆயிரங் கோடி காமர் அடிகெலாந் திரண்டொன் றாகி*
*மேயின எனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னில்*
*தூயநல் எழிலுக் காற்றா தென்றிடின் இணைய தொல்லோன்*
*மாயிஞ் வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்*

-கந்தபுராணம்

ஆயிரங்கோடி மன்மதன்களின் அழகுகள் அனைத்தும் ஒன்று கூடினாலும் முருகப் பெருமானுடைய திருவடியின் தூய எழிலுக்கு இணையாகாது என்று செவ்வேளின் அழகினைக் கந்தபுராணம் கூறுகின்றது. செவ்வேள் - முருகன் - ஞானத்தை உண்டாக்குபவன். தன்னுடைய செந்நிறத்தாலும், செம்மையான பண்பாலும் உலகத்திலுள்ள அனைத்து ஆன்மாக்களையும் உபசரிப்பவன், இதனையே, *முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பான் முருகன்* என்று தமிழ்க் கடவுளாகிய முருகப்பெருமான் தன்னுடைய பண்பாலும், தமிழாலும் வைதாரை வாழ வைப்பவன் என்று அருணகிரிநாதரும் குறிப்பிடுகின்றார்.

**செவ்வேள் பிறப்பு**

திரிபுரத்தை அழலால் எரித்த பின்பு சிவபெருமான் உமையோடு சேர்ந்திருந்தான். இந்திரன் சிவபெருமானிடத்து ஒரு வரம் பெற்று இச்சேர்க்கையால் தோன்றிய கருவை அழிப்பாயாக என வேண்டினான். சிவபெருமான் இந்திரனுக்குக் கொடுத்த வரத்தின்படி அக்கருவினைச் சிதைத்தான் சிதைக்கப்பட்ட கரு அமரர் சேனைக்குத் தலைவனாகும் என ஞானத்தால் உணர்ந்த தெய்வ முனிவர்கள் எழுவரும் இந்திரனுக்கு ஊறு வாராதென உறுதி கூறி அவனிடமிருந்து அச்சிதைந்த கருவை ஏற்றுச் சென்றார்கள். அதனை அம்மாதவர் வேள்வியின் கண் இட்டனர். பின்னர் அதனை அருந்ததி நீங்கலாகக் கார்த்திகை மகளிர் அறுவர்க்கும் வழங்கினர். இவ்வறுவரும் அதனை உண்டு சூழுற்றுப் பின் இமய மலையிலுள்ள சரவணப் பொய்கையில் தாமரைப் பூவாகிய பாயலில் குழந்தையை ஈன்றனர். ஈன்ற அப்பொழுதே இந்திரன் கோபங் கொண்டு முனிவர்களுக்குத் தான் கொடுத்த வரத்தை மீறிவச்சிராயுதத்தால் அவற்றை வெட்டினான். (பரி.செவ்வேள்.5.28-54).

ஆறு துண்டமாகச் சிதைந்தன. ஆறு துண்டமும் ஆறு குழந்தைகளாகிப் பின் ஒன்றாயின. குழந்தைப் பருவத்திலேயே முருகனிடம் இந்திரன் தோல்வியுற்றதால் முருகனுடைய இவ்வாற்றலைக் கண்ட அக்னிதேவன் தன் மெய்யிற் பரித்துக் கோழியை முருகனுக்குப் பரிசாகக் கொடுத்தான். இந்திரன் மயிலை அளித்தான். எமன் வெள்ளாடு நல்கினான். (பரி.செவ்வேள்.5.55-65).

முருகனைக் கார்த்திகை மகளிர் உமையம்மை ஆகிய இருவருக்கும் மகனெனப் பரிபாடல் கூறுகின்றது. (பரி.செவ்வேள்.8.127-128), 9.1-10). வசிட்டன் மனைவியான அருந்ததி, சிவன், முருகன் கடவுளரைவிடப் பெருமை வாய்ந்தவள் என்பதை நிறுவவே முருகன் பிறப்புப் பற்றிக் கதைகட்டிவிடப்பட்டுள்ள ஒரு செய்தி என்று மறைமலையடிகள் தன் கருத்தினைப் பதிவு செய்துள்ளார். (மறைமலையடிகளார், தமிழர்மதம், ப. 207).

**செவ்வேள் உறுப்பு**

செவ்வேள் முருகன் ஆறு தலைகளையும், இளங்கதிர் மண்டிலம் போன்ற முகத்தினையும் உடையவர். (பரி.செவ்வேள்.5.10-15) அது மட்டுமல்லாமல் தன் பன்னிரு கைகளிலும் பன்னிரு படைகளைக் கொண்டுள்ளார். (பரி.5.63-68) அவர்தம் முந்நான்குத் தோளும் முழவினை ஒக்கும். இதனையே,

*என்னிருளை நீக்கம் இமையோக் கிடர்க்கடியும்*
*பன்னிரு தோட் பாலன் பாதம்*

என்கிறது சங்கற்ப நிராகரணம். முருகனது பேரறிவைவினையும், பேராற்றலையும் புலப்படுத்தவே ஆறு தலைகளையும், பன்னிருகை, தோள்களையும் உடையவராக அவரை உருவகஞ் செய்துள்ளனர்.

மலைபோன்ற ஆற்றலும் அகலமும் கொண்ட செவ்வேளின் மார்பு. அதன்கண் வாளால் வெட்டப்பட்ட வெற்றித் தழும்புகள் நிறைய உள்ளன என்பதிலிருந்து அவருடைய வீரம் நன்கு விளங்கும். (பரி.செவ்.9.27-28) சந்தனர்

முதலிய நறுமணப் புகை கமழ மலர் மாலையும் முத்து மாலையும் செவ்வேள் மார்பினை அணிசெய்கின்றன. (பரி.செவ்.9.28-29) இதனையே,

*திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ*
*மயில்கண் டன்னமடநடை மகளிரொடு* (முருகு. 255)

திருத்தமாக அமைந்த மணிகளாலான வடங்களையுடைய மேகலையை அணிந்த இரகசிய உறுப்பில் அசையும்படி தழையை உடுத்து, மயிலைக் கண்டாற் போன்று வருகின்ற மெத்தென்ற நடையையுடைய பெண்களோடு முருகன் எழுந்தருளுகிறார். பரிபாடலில் மட்டும் காணப்படக் கூடிய ஒரு செய்தியாக, செவ்வேள் தன் திருவடியில் தோளாலாகிய செருப்பினை அணிந்துள்ளான் என்பதை,

*புரிமென பீலிப்போழ் புனைஅடையல்* (பரி.செவ்.21.3-7)

என்ற வரியால் அறியலாம்.

மிதியடியைப் புனைந்துரைத்தல் என்ற செய்தி நல்லச்சுதனார் பாடல் ஒன்றிலேதான் காணப்படுவது இங்கே குறிப்பிடத்தக்கது. முருகனது ஆடை செந்நிறமானது. பசும் பூணினையும், முத்தாரத்தினையும் அணிந்துள்ளார். கடப்பந்தாரும், முத்துமாலையும் அவர்தம் மார்பினுக்கு அழகு சேர்க்கின்றன. (பரி.செவ்.19,97) செவ்வேளுக்குரியது கடப்பு ஆதலில், பெரும்பாலான புலவர்கள் அவரைக் கடப்பந்தார் சூடியவராகவே பாடியுள்ளனர் (பரி.செவ்.5.81,21.,10-11) சேவலும், மயிலும் வரைந்த கொடிகளே முருகனுக்குரியன என்பதை,

*ஒருதிறம், பாடினி முரலும் பாலைஅம் குரலின்*
*நீடுகிளர் கிழமை நிறைகுறை தோன்ற*
*ஒருதிறம், ஆடு சீர்மஞ்ஞை அரிகுரல் தோன்ற*
*மாறு மாறு உற்றன போல்மாறு எதிர்கோடல்* (பரி.செவ். 17)

என்று பரிபாடல் கூறுகின்றது. யானையையும், மயிலையும் ஊர்தியாக உடையவர் செவ்வேள் (பரி.செவ்.19.28,8-67). கடுவனிளவெயினாரும், நல்லழிசியாரும் பாடிய பாடல்களால் முருகனுடைய யானை ஊர்தியின் பெயர் 'பிணிமுகம்' என்பதை,

*போர்கள் தோறும் பகைவரை வென்றமையால்*
*உண்டான புகழ்நிறைந்த*
*பிணிமுகம் என்னும் களிற்றி யானை யாகும்*
(பரி.செவ்.நல்லச்சுதனர்.1-7)

பரிபாடல் கூறுகின்றது.

*ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி* (முருகு. 247)

என்று திருமுருகாற்றுப்படையில் நக்கீரரும்.

*பிணிமுக மஞ்ஞை செருமுகத் தேந்திய* (கல்லாடம். 7)

என்று நற்றாய் வருந்துவதாக அமைந்துள்ளது. வெறியாட்டத்தைப் பரிபாடல் விரிவாகக் கூறவில்லை. செவ்வேளைப் பாடிப் பரவும் வேலனைப் பற்றிக் கூறும்போது சொல்லளவில், 'வெறியாட்டம்' பற்றிய குறிப்பு காணப்படுகிறது. (பரி.செவ்.5.13-15, 9.44)

**பரிபாடலின் சிறப்பு**

- பரிபாடலின் முதற்பாடல் திருமாலைப் பற்றியதாதலின் இதற்கெனத் தனிக்கடவுள் வாழ்த்தில்லை.
- பரிபாடல் பாண்டிய நாட்டை மட்டும் சிறப்பித்துக் கூறுவதாக அமைந்துள்ளது.
- பழமுதிர்ச்சோலை முருகனுக்குரியது என்று முருகாற்றுப்படை கூறுவதற்கு மாறாக பரிபாடலோ அதனைத் திருமாலுக்குரியதாகக் கூறுகின்றது.
- திருமால், சிவன், அயன் முதலிய கடவுளர்கள் திருப்பரங்குன்றத்திற்கு முருகனை வணங்கச் சென்றனர் என்று பரிபாடல் கூறுவதிலிருந்து முருகனின் பெருமை நன்கு விளங்கும்.
- பரிபாடலுக்கென்று தனியாகப் பண் வகுக்கப்பட்டுள்ளது.
- கந்தபுராணம் பிரணவப் பொருளை அறியாததால் நான்முகனை முருகன் சிறைவைத்ததாகக் கூறப்படும் செய்தி பரிபாடலில் காணப்படவில்லை.
- சூரபதுமனைக் கொன்ற வரலாறு பரிபாடலில் காணப்படுகிறது.
- யமன் ஆட்டினை முருகப்பெருமானுக்குப் பரிசளித்ததாகப் பரிபாடலில் கூறப்பட்டுள்ளது. ஆனால் நாரதர் வேள்வியினின்று ஆடு வந்ததாகக் கந்தபுராணம் கூறுகின்றது.

பரிபாடலில் அமைந்துள்ள செவ்வேள் கருத்துக்களை ஆராய்ந்து பார்க்கும்போது உலகத்திலுள்ள தீய சக்திகளை அழித்து மக்களுக்கு நன்மை அளிக்க வேண்டும் என்ற அடிப்படையிலும், தன்னுடைய பண்பாலும் ஆற்றலாலும் மக்களைக் காத்து நிற்கின்றது செவ்வேள்.

*வேலை வணங்குவதே எமக்கு வேலை*

என்று வணங்கும் அடியாரது துயரைப் போக்கும் வேலையைச் செய்யும் வேலை ஏந்திய செவ்வேளை எவ்வேளையும் மறவாதவர் வாழ்வில் உய்யும் வழியினை அடைவர். செவ்வேளின் பெருமை அளவிடற்கரியது. விண்ணுக்கும் மண்ணுக்கும் அடங்காமல் வெள்ளமாக வரும் கங்கை நீரை ஒரு சொம்பில் கொணர்ந்து இதுதான் கங்கை நீர் என்று தருவது போல செவ்வேளின் பெருமையை இக்கட்டுரையில் அடக்கிவிட முடியாது.

## தமிழ்க்கடவுள் முருகன்

பேராசிரியர். **முத்துஜெயராமன்**
தலைமையாசிரியர் (ஓய்வு)
ஈ. கீரனூர், திட்டக்குடி
கடலூர் (மாவட்டம்)

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்"* (தொல்.பொ.அகம். நூ. 5)

என்று தொல்காப்பியர் சுட்டும் 'சேயோன் மேய மைவரை உலகம்' என்பது மலைக்குத் தலைவன் முருகன் என்றும் சேயோன் என்றும் அழைத்துள்ளதைக் காணலாம். அன்பின் ஐந்திணையில் தலையாயதாகிய குறிஞ்சி நிலத்தின் கடவுள் ஆவார். பண்டைய காலத்தில் கௌமாரம் என்றும் தனித்த மதமாக இருந்துள்ளன. பின்பு கௌமாரம் சைவ மதத்துடன் இணைந்தது. இவற்றின் வழித் தோன்றிய சிவபெருமானுக்கும் பார்வதிக்கும் மகனாகப் பிறந்தவர் முருகன் ஆவார். சிவபெருமான் தனது நெற்றிக்கண்களிலிருந்து நெருப்பினைவிட அதைக் தாங்கிய வாயுபகவன் சரவணப்பொய்கை ஆற்றில் விட்டார் அந்த நெருப்புகள் ஆறுமுகம் கொண்டு கார்த்திகைப் பெண்களிடம் வளர்ந்தான். அன்னையான பார்வதி ஆறு குழந்தைகளையும் ஒருசேர அணைக்கும்பொழுது ஆறு முகனாக முருகன் தோன்றினான் என்று இந்து சமய நூல்கள் கூறுகின்றன.

முருகு + அன் = முருகன். முருகு என்பதற்கு அகில், அழகு, தேன், இளமை, கள், இளமை, குமரன், வாசனை, வெறியாட்டாளன் என்று பொருள் தருகிறது முருகன் என்ற சொல்லிற்கு அழகு, இளமை என்று பொருள்படும், ஆகவே முருகன் என்றால் அழகன், என்பதாகும். முருகனுக்கு வேறு பெயர்களும் வழங்கப்படுகின்றது, சேயோன், ஆறுமுகம், குமரன், குகன், கார்த்திகேயன், வேலன், செவ்வேள், சண்முகம், சரவணன், சுப்பிரமணியன், வேலாயுதம், கந்தன் என்றும் பலப் பெயர்களில் அழைத்து வருகின்றனர்.

**முருகனின் பிறப்பு**

தமிழ்க்கடவுள் முருகன் என்று எல்லோராலும் அழைக்கப்பெறும் முருகப்பெருமான் பாண்டியதேவன் ஆவன். மீனாட்சி என்னும் தாடாதகைப் பிராட்டிக்கும், சுந்தரபாண்டியனுக்கும் பிறந்த உக்கிரபாண்டியன் எனும் இயற்பெயர் கொண்டவனாகக் கருதப்படுகிறார். மலையத்துவசப் பாண்டியனுக்கும் சூர சோழனின் மகளாக காந்தன் மாணிக்கம் பிறந்தவளே தாடாதகைப்பிராட்டி என்றும் மீனாட்சி ஆவாள். குறிஞ்சி நிலத்தலைவன் எனப் பிற்காலத்தே தொல்காப்பியம் போன்ற இலக்கய நூல்கள் குறிப்பிடும் முருகன் மருத நிலக்கிழவனே ஆவான். ஏனெனில் நால்வகை நிலங்களும் மருத நிலவேந்தர்காவே ஆளப்பட்டது.

பழங்காலத்தில் தமிழகத்தின் மேல் நடந்த பகைவர்களின் பெரும் படையெடுபை ஆறு இடங்களில் படைவீடு அமைத்து தமிழினம் காத்தப் பாண்டிய வேந்தனே முருகன் ஆவான். அறுபடைவீடு எனக் கொள்ளப்படும் முருகனின் இன்றைய திருத்தலங்கள் எல்லாம் தமிழகம் காக்க முருகனால் அமைக்கப் பட்ட படைவீடுகளே ஆகும்.

திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் முருகனை வேந்தர் மரபினன் எனவும் மள்ளர் (பள்ளர்) எனவும் கீழ்கண்ட வரிகளில் குறிப்பிடுகின்றார்.

*"செருவில் ஒருவ பொருவிறல் மள்ள"* (செய்யுள் 262)

*"அறம் பெறல் மரபின் பெரும் பெயர் முருக"* (செய்யுள் 269)

இங்கு அரும் பெறல் மரபு என மள்ளர் மரபை நக்கீரர் குறிப்பிடுகின்றார். மள்ளர் மரபினரைச் சேர, சோழ, பாண்டிய வேந்தர்களாக சங்க இலக்கியங்கள் முதல் பிற்கால இலக்கியங்கள் வரை புகழ்ந்து பாடப்பட்டிருப்பது அறியப்படுகின்றது. இப்பள்ளரே தொல்காப்பியம் போற்றும் மருத நிலவேந்தன் (இந்திரன்) வழிவந்த இன்றை குலத்தவரே (தேவேந்திர குலத்தவர்) எனவும் இன்று அழைக்கப்படுகின்றன. எனவே, முருகன் மருதநிலத்து மள்ளர் குலத்தைச் சார்ந்தவன் எனும் போது அவன் மருத நிலக்கிழவனாகவும் தமிழனாகவும் ஆகிறான்.

**முருக அவதாரம்**

முருகப்பெருமான் அவதாரத்தின் நோக்கமே அசுரன் சூரபத்மனையும் அவனது சேனைகளையும் அழித்துத் தேவர்களைக் காப்பதாகும். அதன்படியே சூரபத்மனை அழித்தார். மயிலை வாகனமாகவும் சேவலைக் கொடியாகவும் கொண்டார். முருகன் தெய்வானைப் பெண்ணுடன் திருமணம் செய்த இடமே திருப்பரங்குன்றம் ஆகும். திருப்பரங்குன்றத்தில் ஆண்டு தோறும் முருகன் தெய்வானையை திருமண விழா மரபுவழிச் சடங்காக இன்றும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. சூரனை அழித்தபின் தேவேந்தினின் மகளாகிய தெய்வானையை முருகன் மணமுடிப்பதாகப் புராணங்கள் கூறுகின்றன. திருமணம் முடிந்த பின் மாமனார் வீட்டிற்கு மணமக்கள் மறுவீடு செல்லுதல் என்பது தமிழர் மரபு ஆகும். அம்மரபுப்படியே சிவனும் பார்வதியும் முருகன் தெய்வானை திருமணம் முடிந்த பின் மணமக்களை முருகனின் மாமனாரான தேவேந்திரன் இல்லத்திற்கு மறுவீடு அனுப்பிவைக்கின்றனர். இவற்றைப் பின்பற்றி இன்றும் தமிழர்களின் திருமண நிகழ்வுகள் பின்பற்றுவருகின்றன.

முருகனும் தெய்வானையும் மறுவீட்டிற்கு வருவது இன்றைய தேவேந்தர்களின் (பள்ளர்களின்) அற மடத்திற்கே ஆகும். தொல்காப்பியம் போற்றும் மருதநில வேந்தனே தேவேந்திரன் (இந்திரன்) அவனே மருத நிலத்தமிழர்களான பள்ளர்களின் வழிவந்தோன் என்பதும் இதன் மூலம் தெளிவாகிறது. பள்ளர் குலத்து மரபினனான தேவேந்தரனின் மகளான தெய்வானையை முருகன் மனம் புரிந்ததிலிருந்து முருகன் பள்ளர் குலத்தவன்

என்பதையும், அவர் தமிழர் மரபினன் என்பதை எவராலும் மறுக்க இயலாது. நக்கீரர் தன் திருமுருகாற்றுப்படையில் முருகன் பள்ளன் எனக்கூறும் இலக்கியச் சான்றோடு மேலே கூறப்பட்ட முருகன் தெய்வானை திருமணச் சடங்கை நடைமுறைச் சான்றாக இணைத்துப்பார்கையில் முருகன் தமிழனே என்பது தெள்ளத்தெளிவாக விளங்குகிறது.

கி.பி. 1528 - ல் எழுதப்பட்ட பழனிச்செப்புப் பட்டயம் முருகனுக்கும் பள்ளர்களுக்கும் உள்ள தொடர்பைத் தெளிவாகச் சுட்டுகிறது. தங்களின் முன்னோராகிய முருகனுக்கு அக்காலத்திலேயே 'தேவேந்தரர் அறமடம்' அமைத்து கோவிலுக்கு வரும் அனைவருக்கும் பள்ளர்கள் அன்னமிட்ட செய்தியும், இச்செலவிற்காக தமிழ்நாடு முழுவதும் உள்ள தேவேந்திரக் குலத்தார் மடத்திற்கு நன்கொடை வழங்கிய செய்தியும் சிறப்பாக கூறப்பட்டுள்ளது. தம் முன்னோனாகிய முருகனுக்குக் கோயில்கட்டிய பள்ளர்கள் பழங்காலத்தில் இருந்து இன்று வரையும் பழனி முருகன் கோயிலில் முதல் மரியாதைப் பெற்று வருகின்றனர். இவ்வாறு முருகனுக்கும் தமிழருக்கும் உள்ள உறவே இச்செப்புப் பட்டயம் மேலும் உறுதிசெய்கிறது.

திருச்செந்தூர் முருகன் கோயிலில் பள்ளர்களுக்கு பதினெட்டு அறமடங்கள் பழங்காலம் தொட்டு இருந்து வருகின்றன. திருச்செந்தூரில் உள்ள பிற அறமடங்களுக்கும் பல்வேறு வேறுபாடுகள் உள்ளன. பள்ளர்களின் அற மடங்கள் மட்டும் அதிக எண்ணிக்கைக் கொண்டதும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலான மிகப்படமையானதும் ஆகும். பாண்டியர்களாகிய பள்ளர்களின் வீழ்ச்சிக்குப்பின் தெலுங்கு வடுகர்களும் அவர்களின் அடியாட்களும் கோயில்களைக் கொள்ளையிட்டதோடு அதைத் தொடர்ந்து கோயில்களைக் கைகொள்ளும் வகையில் அவர்களுக்கென மடங்களையும் உருவாக்கிக் கொண்டனர்.

கழுகுமலை முருகன் கோவில் தேர்த்திருவிழா பள்ளர்களால் தேரோட்டப்பட்டு ஆண்டுதோறும் மிகச்சிறப்பாக கொண்டாடப்படுகிறது. பாண்டியர் வீழ்ச்சிக்குப்பின் கோவில் நிர்வாகம் தெலுங்கு வடுகர்களால் பள்ளர்களிடமிருந்து பிறக்கப்பட்டது. எனினும் இன்று கருமலை முருகன் கோவிலில் பள்ளர்களுக்கு மரபுசார்ந்த முதல் மரியாதை செய்யப்பட்டு வருகிறது.

முருகனுக்கும் தமிழுக்கும், முருகனுக்கும் பள்ளர்களுக்கும் உள்ள உறவானது இரத்தம் சார்ந்த உறவாகும். முருகன் பள்ளர் வழிவந்த பாண்டிய வேந்தன் என்பதாலேயே முருகனையும் தமிழையும் பிரிக்க முடியாது. எனவேதான் ஆரியம், திராவிடம், தலித்தியம் என எத்தனை எத்தனையோ பெருங்கேடுகள் மேலெழுகின்ற போதிலும் அவற்றை எல்லாம் எடுத்தெறிந்து துள்ளியெழுகிறது வேலாகும்

# திருப்புகழில் இசை அணிகள்

**S. முரளி**
உதவிப்பேராசிரியர் (தவில்)
இசைத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

இசை அணிகள் மிகுந்த இலக்கியம் என்றும் சாஸ்த்திரிய இசைக்கு ஒப்பான இலக்கியமாகும். அதுபோல 'முத்தைத்தரு' என்ற முதலடியைச் சிவகுமாரன் எடுத்துப் பாடிய அன்றிலிருந்து தமிழ்நாட்டிலுள்ள பல ஊர்களிலும், நகரங்களிலும், எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுள் மீது எண்ணற்ற சந்தப் பாக்களை இயற்றினார் அருணகிரியார். அப்பாக்களின் தொகுப்பே 'திருப்புகழ்' ஆகும். இன்று 1307 பாக்களே கிடைத்துள்ளன. அவற்றில், 1008 பாக்களில் சந்தங்கள் அமைந்துள்ளன. சிற்றின்பத்தை விரும்பாமல் மற்றின்பத்தையே மனம் நாடவேண்டுமென்று பாடல் தோறும் வற்புறுத்துகின்றார். வேதம், உபநிடதம், ஆகமம், புராணம் ஆகியவற்றில் அமைந்த அரிய நுட்பங்களையெல்லாம் அறிந்து, தெளிந்து இசைத்தமிழ்ப் பாக்களாகப் பாடியுள்ளார். திருப்புகழ் பா வகையை முதலில் புதிய முறையில் அமைத்தவர் அருணகிரியாரே. இசை, லய, தாள அம்சங்களுக்கு உயர்ந்த தரத்தைத் தரவல்ல உருப்படிகளே செவ்வியல் தரமிக்கது எனலாம். அவ்வழி "திருப்புகழில் உள்ள இசை அணிகளை எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தாயுமானவர் பாடல்**

செவ்வியல் தரத்திற்கு அருணகிரியார் கையாண்டுள்ள வார்த்தைகளும் பக்க பலமாகும். வார்த்தைகளிலே சந்தங்களை வாழ வைத்தவர் அருணகிரியார். இதனைத் தாயுமானவர்,

> உதிருங்கனியை நறும்பாகில் உடைத்துக் கலந்து தேனைவடித்
> *தூற்றிஅமுதின் உடன்கட்டி ஒக்கக் குழைந்த ருசிபிறந்து*
> *மதுரங்கனிந்த திருப்புகழ்ப் பாமாலை*

எனத் திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் பாடிய பெரியார் போற்றிப் புகழுகிறார். தாயுமாணவர் திருப்புகழின் இனிமையைக் கூறுமிடத்து,

> *ஐயா ! அருணகிரி யப்பா ! உனைப்போல*
> *மெய்யாக ஓர்சொல் விளம்பினர் யார்?*

என்று உணர்ச்சி ததும்ப நூலாசிரியரை வியந்துரைக்கின்றார்.

**அருணகிரியார் மொழிகள்**

அன்பின் சிறப்பையும், ஈதலின் பெருமையையும், அடியார் நேசத்தையும், தொண்டின் அருமையையும் அருணகிரிநாதர் விரிவாக விளக்குகின்றார். 'வாக்கிற்கு அருணகிரி', 'கருணைக்கு அருணகிரி' என

இவரைப் பாராட்டுவர். அனுமனை அவர் வருணிக்கும் முறை அவருடைய சொல்லாட்சித் திறத்திற்கு ஒரு தக்க சான்றாகும்.

*இலங்கையில் இலங்கிய இலங்களுள் இலங்கருள் இலெங்கணும்*
*இலங்கென – முறையோதி - இடுங்கனல் குரங்கு*

எனக் கூறுகின்றார். இதில் சந்தச் செவ்வியல் நமக்குப் புலனாகிறது. அவருடைய சந்த நடைக்கு ஒரு சான்று:

*குயில்மொழிக் கயல்விழித் துகிரிதழ்ச் சிலைநுதல்*
*சரிமுகத் திளநகைக் கனகுழற் றனகிரிக்*
*கொடியிடைப் பிடிநடைக் குறமகள் திருவினைப் புணர்வோனே*

இவர் அருளிய பிற நூல்கள்: திருவகுப்பு, கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரனுபூதி, வேல் விருத்தம், மயில் விருத்தம் ஆகிய பக்திச் சுவை இலக்கியங்களாகும்.

### திருப்புகழ் இசை அணிகள்

திருப்புகழ் இசை நிகழ்ச்சிகள் இன்று ஏராளம். திருப்புகழ்ப் பாடல்கள் 15ம் நூற்றாண்டில் இயற்றப்பட்டிருப்பினும் 1914-18 ஆம் ஆண்டுகளில்தான் செவ்விசை அரங்குகளில் அறிமுகமாயின. தேவாரடியார்களால் கோயில் வழிபாட்டு முறையில் பாடப்பட்டு, பின்னர் கருநாடக இசையரங்கு தோற்றம் பெற்றபோதே இசையரங்கின் இறுதியில் 'துக்கடா'வாக திருப்புகழ் இடம்பெற்றது. பெரும்பாலும் காஞ்சிபுரம் நாயனா பிள்ளை, சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை, மதுரை சோமு, சீர்காழி கோவிந்தராசன் போன்றோரின் இசையரங்குகளில் திருப்புகழ்ப் பாடல்களுக்குச் சிறப்பிடம் அளிக்கப்பட்டு வந்துள்ளன. தமிழிசைச் சங்கம் இது போன்ற தேவார, திருப்புகழ்ப் பாசுர அரங்குகளை ஊக்குவித்தன.

| | | |
|---|---|---|
| 1. முத்தைத்திரு | சண்முகப்ரியா | மிஸ்ரசாபு |
| 2. துள்ளுமதவேட்கை | அம்சாநந்தி | திச்ரமட்யம் |
| 3. அபகார நிந்தை | சக்ரவாகம் | கண்டஜம்பை |
| 4. இயலிசையிலுசித | உசேனி | அங்கதாளம் |
| 5. காதிமோதி | சங்கராபரணம் | அங்கதாளம் |
| 6. நிறைமதிமுகமெனு | அம்சாநந்தி | ஆதி |
| 7. முந்துதமிழ் மாலை | அரிகாம்போதி | ஆதி |

இவை திருப்புகழ் உலகில் புகழ்பெற்ற பாமாலைகள் ஆகும்.

### திருப்புகழ் இசைக்கலைஞர்கள்

திருப்புகழ்ப் பாடல்களின் இசை முறைகள் ஒருகால கட்டத்தில் 'மரபு' என்று ஏற்கத்தக்க முறையில் அமைக்கப்பட்டிருந்தன எனத் தெரிகிறது. எவ்வாறு தேவார இசை திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த மதங்க சூளாமணி என்ற பெண்மணியைக் கொண்டு சீரமைக்கப்பட்டதோ, அவ்வாறே திருப்புகழ் இசையும் ஒரு கால கட்டத்தில் சீரமைக்கப்பட்டுள்ளது என்று

கூறலாம். அத்தகைய சீரமைப்புக்கு வழிவகுத்த பெருமை காஞ்சிபுரம் நாயனா பிள்ளை, சித்தூர் சுப்பிரமணியபிள்ளை முதலானோரைச் சாரும். இவர்கள் செவ்வியல் இசை அரங்குகளில் சாதனையாளர்கள் ஆவர்.

காஞ்சிபுரம் நாயனாபிள்ளை அவர்களின் இசையமைப்பில் உருவான திருப்புகழ்ப் பாடல்களை அவர்தம் சீடர் சித்தூர் சுப்பிரமணியபிள்ளை அவர்கள் சுரதாளக் குறிப்புடன் அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாக 1952-ல் வெளியிட்டு திருப்புகழ் மரபிசை வடிவங்களைப் பாதுகாத்தார். இவர்களைப் பின்பற்றி திருவீழிமலை சுப்பிரமணிய பிள்ளை, நடராசசுந்தரம் பிள்ளை, திருப்பாம்புரம் சாமிநாத பிள்ளை, ஆலத்தூர் சகோதரர்கள், புதுக்கோட்டை மான் பூண்டியன் பிள்ளை, தட்சிணாமூர்த்தி பிள்ளை, பழனி முத்தையா பிள்ளை, மன்னார்குடி கொன்னக்கோல் பக்கிரியா பிள்ளை ஆகியோர் திருப்புகழ் இசைப் பணியில் ஈடுபட்டு தாங்கள் நிகழ்த்திய செவ்விசை அரங்குகளில் பாடியும் வாசித்தும், பிறருக்குக் கற்பித்தும் இப்பாடல்கள் பரவுவதற்குப் பெருந்தொண்டாற்றினர். வேலூர் அப்பாத்துரை ஆச்சாரியாரின் புதல்வர் வேலூர் டி.ஏ.சம்பந்தமூர்த்தி ஆச்சாரியும், இசைப்பேரறிஞர் தண்டபாணி தேசிகரும் திருப்புகழைச் செவ்விசை அரங்குகளில் பாடிப் பரப்பியவர்களுள் குறிப்பிடத் தகுந்தவர்கள். இவை அனைத்தும் செவ்வியல் தன்மைக்குத் திருப்புகழை ஏற்ற நிலைக்கு எடுத்துச் செல்லுகின்றன.

**திருப்புகழ் இசை ராகங்கள்**

திருப்புகழ்ப் பாடல்கள் பக்தியைக் கருவூலமாகக் கொண்டுள்ளதால் இப்பாடல்கள் பஜனைகளிலும், காலாட்சேபங்களிலும் குழுவினராக பாடப்பட்டு வருகின்றன. இக்குழுக்களில் பாடப்பட்டு வரும் இசை முறைக்கு வழிகோலியவர் வள்ளிமலை சுவாமிகள் ஆவார். இவர் பாடிய முறையைப் பின்பற்றி இவருடைய சீடர்களான திருப்புகழ்மணி டி.எம். கிருஷ்ணசாமி ஐயர், சாமி ஐயர் ஆகியோர் தமிழகமெங்கிலும் நூற்றுக்கணக்கில் பஜனை சபைகள் நிறுவி இப்பஜனை மரபைக் காத்தவர். தற்போது அரங்குகளில் மரபு வழியாகப் பாடப்பட்டு வரும் ஒருசில திருப்புகழ்கள் வருமாறு:

| | | |
|---|---|---|
| 1. கைத்தல நிறைகனி | நாட்டை | ஆதி |
| 2. நாதவிந்து கலாத | செஞ்சுருட்டி | ஆதி |
| 3. சரணக் கமலாலயத்தை | ஜென்சுடி | திச்ரரூபகம் |
| 4 மருவே செறிந்த | அரிகாம்போதி | ஆதி |
| 5. ஒருபொழுதும் | அடாணா | அங்கதாளம் |
| 6. அகரமுமாகி | சுத்தசாவேரி | ஆதி |
| 7. கரிய பெரிய | சாரங்கா | திச்ரநடை |
| 8. கடலைப் பொரியவரை | தோடி | ஆதி |
| 9. அமுதமூறு சொலாகிய | சிந்துபைரவி | ஆதி |
| 10. ஏறுமயிலேறி | மோகனம் | கண்டநடை |

இந்த ராகங்கள் அனைத்தும் செவ்வியல் இசை அரங்கில் புகழ்பெற்ற ராகங்கள் ஆகும். கடின சந்தங்கள் இருந்த போதிலும் தற்போது எளிமையாக்கப்பட்ட

விதத்தில் திருப்புகழ் பாடப்பட்டு வருகின்றன. மேலும் நடைமுறை வழக்கிலுள்ள தாளங்களான ஆதி, ரூபகம், திரிபுடை, ஜம்பை போன்ற சுலபமான தாளங்களில் அமைக்கப்படுவது குறிப்பிடத்தக்கது.

**முடிவுரை**

இவ்வாறு பக்தி இலக்கியங்களுள் திருமுறை, திருவருட்பா, திருவிசைப்பா, திருவாசகம், திருமறை, திருமந்திரம், திருப்புகழ் என திருவால் விளைந்த பாக்கள் அனைத்தும் செவ்வியல் தன்மை பெற்றவையே எனலாம். திருப்புகழ் உலகிற்கு வழங்கியுள்ள சமய, ஆன்மீக, தத்துவ நெறிக்கொள்கையோடு மட்டும் நின்று விடாமல் இசையியல் அடிப்படையில் செவ்வியல் இலக்கண விதிமுறைகளின் சந்த சாஹித்ய கோட்பாடுகளுக்கு முழுதும் இடம் அளித்துள்ள பக்தி இலக்கியமே திருப்புகழ் ஆகும். உயரிய இலக்கணம் என்று ஆராயும் போது சந்த தாளங்கள் ஒன்றே திருப்புகழின் அமைப்பிற்கு வெளிச்ச நிலையை எடுத்துக் காட்டும் கருவியாக திருப்புகழை எடுத்துக் கூறலாம். தமிழிசையாய் மலர்ந்து, பிறமொழிப் பாடல் இலக்கணங்களுக்கு அருமருந்தாய் எழுந்த ஊட்டச் சத்து நிறைந்த உன்னதப் படைப்பே அருணகிரியாரின் திருப்புகழ் பாடல்கள் ஆகும். இந்திய இசையின் செவ்வியல் தன்மையை எடுத்துரைக்கும் பாங்கில் திருப்புகழ் சந்த பாடல்கள் தனது சாஹித்ய கருத்தோவியத்தால், ஏழிசை இலக்கணத்தால் உயர்ந்த இசை அணிகளை கொண்டுள்ளது என்பதில் ஐயமில்லை.

# திருவேரகத் திருப்புகழில் சைவ சித்தாந்தக் கூறுகள்

முனைவர் க. முருகேசன்
தமிழ்த்துறைத் தலைவர்
கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி
கோயம்புத்தூர் - 641 029

வேதத்திலுள்ள நுண்மான் பொருள்களும், ஆகமங்களிலுள்ள அரிய கருத்துக்களும், புராணங்களிலுள்ள அறநெறிகளும், இசைக் கூறுகளும், ஓசை நயங்களும், தாளகதிகளும் திருப்புகழில் ஒருசேரக் குவிந்திருக்கின்றன. மானுட உயிர்கள் ஓதி உய்யும்பொருட்டு, தேனூறும் தீந்தமிழால் அருணகிரிநாதர் பாடிய தமிழ்மறையாகிய திருப்புகழ் பரகதிக்கு ஏணியாகவும், அருள்கடலுக்கு ஏற்றமாகவும், மனத்தளர்வுக்கு ஆணியாகவும் பிறவி மாசறுக்கும் அரமாகவும் விளங்குகின்றது. முருகப் பெருமானுடைய திருவருளை எளிதாகப் பெறுகின்ற நெறி திருப்புகழை உள்ளம் உருகி ஓதுவதேயாகும் என்பதை "அளப்பில் கீதம் சொன்னார்க் கடிகள்தாம் அருளுமாறே" என்ற அப்பர் பெருமானின் அருள்வாக்கினால் அறியமுடிகின்றது. ஆறுபடை வீடுகளுள் நான்காம் படை வீடாகிய திருவேரகம் என்ற சுவாமிமலைக்கு அருணகிரியார் பாடியுள்ள 38 பாடல்களில் விறகினில் தீயாகவும் பாலில் படுநெய்யாகவும் மறைந்து கிடக்கின்ற சித்தாந்தக் கூறுகளை இக்கட்டுரை எடுத்துரைக்கின்றது.

## திருப்புகழும் சைவ சித்தாந்தமும்

சிவபெருமானுக்கு முருகக் கடவுள் பிரணவ உபதேசம் செய்த வரலாற்றினாலும், கந்தபுராணம் கடவுள் வாழ்த்தில், "பிறவி நீத்திடும் தாரகதி துருவமாந் தலைமை யெய்திய ஏரகத் தறுமுகன்" என்பதாலும் இத்தலம் சுவாமிமலை எனப்பெயர் பெற்றது. இத்தலத்தில் உள்ள அறுபது படிகளும் பிரபவ முதல் அக்ஷய ஈறாக உள்ள ஆண்டுகளைக் குறிக்கும் என்று குடந்தைப் புராணம் குறிப்பிடுகின்றது. "வந்த வினையும் வருகின்ற வல்லினையும் கந்தன் என்று சொல்லக் கலங்கி ஓடும்" வினைகளைத் தீர்க்கும் வேலனது திருப்புகழ் நவமணிகள் நிறைந்த அமுதக் கடலாகத் திகழ்கின்றது. 'சைவம்' என்ற சொல் சிவம் என்றும் செந்தமிழ்ச் சொல் அடியாகப் பிறந்தது; சிவத்தோடு தொடர்புடைமை என்னும் பொருளில் வழங்குவது; சிவத்தைப் பற்றிய நிலையையும், சிவத்தைப் பற்றிய நூல்களையும், அவனடி சேர்தற்குரிய நெறிகளையும் இச்சொல் குறிக்கின்றது. சித்தம்+அந்தம் = சித்தாந்தம். சித்தம் என்றால் உண்மை என்ற பொருளும், அந்தம் என்றால் முடிவு என்ற பொருளும் உண்டு. சித்தாந்தம் என்பது உண்மைகளின் முடிவு. தத்துவம் என்ற வடசொல்லுக்கு உண்மை என்று பொருள். தம்-உள்ள, துவம்-உண்மை; உள்ளதாம் தன்மை உண்மை. எல்லாத் தத்துவங்களின் முடிந்த முடிபாக இருப்பதால் சித்தாந்தம் என்பது முடிந்த முடிபு ஆகும்.

"சிவாகமங்களில் ஞானபாதம் என்பது வேதத்தின் ஞானகாண்டப் பொருளைத் தெளிவுற விளக்குவது. அந்த விளக்கமே சைவசித்தாந்தம். வேதத்தின் ஞானகாண்டம் வேதாந்தம் எனப்படுவதால் ஞானகாண்டத்தின் தெளிபொருளாகிய சைவசித்தாந்தம் வேதாந்தத்தின் தெளிவாகின்றது. அதாவது வேதத்தின் ஞானகாண்டத்தில் குறிப்பாகச் சொல்லப்பட்ட தத்துவக் கொள்கைளைத் தெளிவுபெற விரித்து விளக்குவது சைவ சித்தாந்தம்" என்ற கருத்து இங்கு நோக்கத்தக்கது (அருணை வடிவேல் முதலியார், சித்தாந்த தெளிவியல் ப.68)

**விணை தீர்க்கும் வித்தகன்**

*"இருவினை புனைந்துஞான விழிமுனை திறந்துநோயி*
*னிருவினை யிடைந்து போக மலமூட*
*இருளற விளங்கியாறு முகமொடு கலந்து பேத*
*மிலையென இரண்டு பேரு மழகான*
*பரிமள சுகந்தவீத மயமென மகிழ்ந்துதேவர்*
*பணியவிண் மடந்தை பாத மலர்தூவப்*
*பரிவுகொ டனந்தகோடி முனிவர்கள் புகழ்ந்துபாட*
*பருமயி லுடன்குலாவி வரவேணும்*
*அரியய னறிந்திடாத அடியினை சிவந்தபாதம்*
*அடியென விளங்கியாடு நடராஜன்*
*அழலுறு மிகும்பின் மேனி மகிழ்மர கதம்பெணாகம்*
*அயலணி சிவன்புராரி யருள்சேயே*
*மருவலர்கள் திண்பணார முடியுடல் நடுங்கஆவி*
*மறலியுண வென்ற வேலை யுடையோனே*
*வளைகுல மலங்குகாவி ரியின்வடபுறஞ் சுவாமி*
*மலைமிசை விளங்குதேவர் பெருமாளே"*

(திருவேரகத் திருப்புகழ், பா.4)

என்ற திருப்புகழில் சைவசித்தாந்தக் கருத்துக்கள் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. பிறவிப் பிணிக்குக் காரணமாயுள்ள நல்வினை, தீவினையென்னும் இருவினைகளும் பயந்து பின்வாங்கியோடிப் போகவும், அறியாமைக்குக் காரணமாயுள்ள ஆணவமென்னும் இருள் மலம் தேய்ந்தழியவும், அதனால் ஞானவொளி வீசப்பெற்று விளக்கமுற்று, தேவரீருடைய ஆறுதிருமுகங்களின் கருணைப் பிரவாகத்தில் கலந்து, பரமான்மாவாகிய தேவரீரும், சீவான்மாவாகிய அடியேனும் நல்ல மணம் வீசும் மலரும் அதன் மணமும் போல் இரண்டற்று அத்துவிதமாகக் கலந்து, தேவர்கள் வந்து வணங்கவும், விண்மாது திருவடிமேல் கற்பக மலர்மாரி பொழியவும், எண்ணிறந்த பலகோடி முனிவர் குழாங்கள் மிக்க அன்பு கொண்டு புகழ்ந்து பாடவும், பெரிய மயிலின்மீது எழுந்தருளி வரவேண்டுமென வேண்டுகின்றார்.

சைவ சித்தாந்தம் உள்ளனவாகிய பொருள்கள் அனைத்தையும் பதி, பசு, பாசம் என்ற மூன்று வகையுள் அடக்கிக் கூறுகின்றது.

அம்முப்பொருள்களின் உண்மை நிலையை அளவை முறையால் ஆராய்ந்து கண்ட முடிவே சைவ சமயத்தின் தத்துவக் கொள்கையாக அமைந்துள்ளன.

உலகம் அனைத்தையும் தன் விருப்பத்தின்படி, படைத்துக் காத்து அழிப்பவராய், தான் பிறரால் படைக்கவும், காக்கவும். அழிக்கவும் படாதவராய் என்றும் ஒரு தன்மையராய் இருப்பவரே கடவுள். இதுவே கடவுள் பொருளின் இலக்கணமாகிறது. உயர்திணை, அஃறிணை என்னும் பாகுபாடும் ஆண், பெண் என்ற பால்பாகுபாடும் உலகத்துப் பொருட்களுக்கு உரியனவே தவிர, உலகைக் கடந்து நிற்கும் கடவுளுக்கு இப்பாகுபாடுகள் எதுவுமில்லை. "ஒன்றென்றது ஒன்றே காண் ஒன்றே பதி" என்ற சிவஞானபோத உதாரண வெண்பா பதியாகிய காப்பாளனுக்கு இலக்கணம் உரைக்கின்றது.

சிவயோகமாகிய பெரிய செயலைச் செய்து நிறைவு பெறுவதற்குச் சரியை கிரியை நெறிகள் அடித்தளமாகின்றன. ஆதலால் இருவினை ஒப்பு நிகழ வேண்டும் என்றும்; சாதாரண மனிதனுக்கு மூடப் பெற்றிருக்கின்ற ஞானவிழி சிவயோகிகட்குத் திறந்திருக்கும் என்றும்; எல்லாவற்றையும் எல்லாக் காலத்தையும், எல்லாப் பொருள்களையும் அறிகின்ற தடைபடாத ஞானம் உண்டாக வேண்டும் என்றும் பாடுகின்ற அருணகிரிநாதர், பிறவிக்குக் காரணமாகவுள்ள நல்வினை தீவினை இரண்டும் சமமுற்றபோது இறைவன் திருவருட் காட்சியுண்டாகும் என்று தெளிவாக்குகின்றார். இக்கருத்திற்கு,

*"இருவினை யின்பத்துன்பத் திவ்வுயிர் பிறந்திருந்து*
*வருவது போவதாகும்"*

என்ற சிவஞான சித்தியார் அடிகளையும்,

***"உணங்கி லாததோர் வித்துமேல் விளையாம லென்வினை ஒத்தபின்***
***கணக்கில்லாத் திருக்கோல நீவந்து காட்டினாய் கழுக்குன்றிலே"***
(திருவாசகம்)

என்ற திருவாசக அடிகளையும் அரணாகக் காட்டமுடியும்.

*"ஒரு பொருளுங் காட்டா திருளுருவம் காட்டும்*
*இருபொருளுங் காட்டா திது"*

என்ற திருவருட்பயன் அடிகளின்படி ஆணவ இருள் பூத இருளினும் மிக்க வலிமையுடையது. எல்லாப் பொருளையும் மறைக்கும் பூத இருள், தன்னைக் காட்டி நிற்கும். ஆனால் ஆணவ இருள் தன்னையுங் காட்டாது, தான் மறைத்த ஆன்மாவையுங் காட்டாது, பிறபொருளையும் காட்டாது என்பதை 'மலமூட இருள்' என்ற சொற்றொடரால் உணர்த்துகின்றார். உயிரானது இருவினையொப்பு கைவரப் பெற்று மலநிவர்த்தி ஆனவுடன் சக்தி பதிந்து சிவத்துடன் இரண்டறக் கலந்து பூரண இன்பத்தைத் துய்க்கின்றது. அங்ஙனம் அத்துவிதமுற்று தேவர் பணியவும், விண்மடந்தை தண்மலர் தூவவும், முனிவர்கள் புகழ்ந்து பாடவும், மயில் வாகனத்தின் மீது இன்பமாக உலகமெலாம் உலாவி வரவேண்டுமென வேண்டுகின்றார். இதனை "ஆறுமுகமொடு கலந்து பேதமில்லையென" என்ற அடிமூலம் உணர்த்துகின்றார்.

*"இருவினைமு மலமுமற இறவியொடு பிறவியற*
*ஏகபோகமாய் நீயு நானுமாய்*
*இறுகும்வகை பரமசுகம் அதனையருள்"*

என்று மற்றொரு திருப்புகழில் விண்ணப்பம் செய்கின்றார். யாம் காண்போம் என்று அகந்தை கொண்டோர் யாராயினும் அவனது திருவடித் தாமரையைக் காணமுடியாது. அன்புநெறி ஒன்றினாலேயே அவனை எளிதில் உணர முடியும்; அப்பரமகதி விண்ணோர்கள் ஏத்த மறைந்திருப்பான்; கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச் சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று அருள்செய்வான்.

*"சிவாயமெ னுநாமமொ ருகாலுநி னையாததி*
*மிராகரனை வாவென் றருள்வாயே*
*திருரோதம லமாறும டியார்களை ருமாதவர்*
*தியான முறு பாதந் தருவாயே"*
(திருவேரகம், திருப்புகழ், பா.5)

என்ற பாடலடிகளில் "சிவாய" என்ற சிறந்த மந்திரத்தை ஒரு முறையாவது நினையாத அஞ்ஞானம் நிறைந்த அடியேனை "வருக" என்று அழைத்து, திரோதமல நீக்கமுடைய அடியார்களும் அரிய பெரிய தவசீலர்களும் தியானம் செய்கின்ற தேவரீருடைய திருவடியைத் தந்தருளீர் என வேண்டுகின்றார்.

மந்திரங்களுக்குள் தலைசிறந்த "சிவாய" என்ற மந்திரத்தை நினைக்கும்போது கோடி வினைகள் நீங்கி விடுமாதலால், அவ்வாறு நினையாமல் பாம்பின் வாயிலுள்ள தேரையின் மகிழ்ச்சிபோல் இயமன் பாசக் கயிற்றில் அகப்பட இருக்கும் உயிர்கள் சிற்றின்பங்களைக் கண்டு மயங்கி அறிவிழந்து கேடுறுகின்றன. திரோதமலம் என்பது மறைப்புச் சக்தி. ஆன்மாக்களுக்கு அநாதியே செம்புக்குக் களிம்பு போலுள்ள ஆணவ மலத்தை நீக்கும் பொருட்டுத் திரோதமலத்தை இறைவன் தந்தருளினார். ஆணவமலம் அநாதி; மாயையும் கன்மமும் இறைவன் அறுதொழிலிற்படத் தந்தவை. இம்மூன்றும் சடமாதலால், தொழிற்படுத்த திரோத சக்தியை அருளினார். தேரை அசைப்பதற்குச் சன்னமும் மூங்கிலுமிருந்தும் தொழிற்படுத்த மனிதனை அனுப்புவதைப் போன்றதாகும். முருகவேளின் திருவடிகள் திரோதமலம் நீங்கிய அடியார்களாலும் தவம்செய்த தவமுனிவர்களாலும் தியானித்து அறிவு விழியால் காணத்தக்கது என்கிறார் வாரியார் சுவாமிகள்.

*"ஆனாத பிருதிவிப் பாச நிகளமும்*
*மாமாய விருளுமற் றேகி பவமென*
*ஆகாச பரமசிற் சோதி பரையைய டைந்துளாமே*
*ஆறாறி னதிகமக் க்ராய மநுதினம்*
*யோகீச ரெவருமெட்டாத பரதுரி*
*யாதீத மகளமெப் போது முதயம நந்தமோகம்"*
(திருவேரகம், திருப்புகழ், பா.6)

என்ற திருப்புகழில், நீங்குவதற்கு அரிய மண்ணாசை என்ற விலங்கும், பெரிய மயக்கத்தைச் செய்யும் ஆணவ இருளும் ஒழிந்து, ஒன்றுபட்ட தன்மையென்று கூறுமாறு ஆகாயம்போல் பரந்து பெரிய ஞானசோதியான பராசக்தியை அடைந்து, நினைவு இன்றி நிலைத்து நின்று, முப்பத்தாறு தத்துவங்களுக்கு அப்பாற்பட்டதாய், முற்பட்டதாய் என்றும் யோகசீா் எவரும் எட்டாததான துரியம் கடந்ததாய், உருவமில்லாததாய், எப்போதும் தோற்றம் அளிப்பதாய், அளவற்ற அன்பைத் தருவதாய், விண் முதலிய சகல வாழ்வுப் பொருளாய், உலகத்தின் முதலும் முடிவுமாய், உண்மை அறிவாய், அயன் அரி அரன் என்ற மூவர்க்கும் மூலகாரணமாய், ஐயம் இன்றி நீண்டு அழிவின்றித் தானே மெய்யாந் தன்மையதாய், ஆதாரம் இன்றி நிற்பதாய், அழிவில்லாத சோதியாய், வடிவம் இன்றி மாறுதலின்றி நிற்பதாய் விளங்கும் இன்ப வெள்ளமாம் சிவத்துடன் அடியேன் இனிது சேர்வது எப்போது என வேண்டுகின்றார் அருணகிரிநாதர்.

"ஆசா நிகளந் துகளா யினபின் பேசா அநுபூதி பிறந்ததுவே" என்ற கந்தர் அநுபூதி வாக்கின்படி ஆசையாகிய சங்கிலியால் கட்டுண்டு கிடக்கும் உயிர்களுக்குப் பெரிய மயக்கத்தைச் செய்யும் ஆணவ இருள் ஒழிந்தால் சிவாநுபூதி உண்டாகும். இன்பமாகிய வெள்ளத்துடன் அதாவது சிவத்துடன் உயிரானது ஒன்றுபடுகிறது என்றும் மிகவுயர்ந்த அநுபவப் பொருளை வாக்கிறந்த வளமையை விளக்கிக் காட்டி சிவாத்துவிதத்தின் பெருமையை உணர்த்துகிறது" என்றும் வாரியார் சுவாமிகள் குறிப்பிடுகின்றார் (திருப்புகழ் விரிவுரை, திருவேரகம், ப.30). இப்பாடலில் 'ஆறாறினதிகமக்ராய' என்ற சொல் முப்பத்தாறு தத்துவங்களைக் குறிக்கின்றது. ஆன்ம தத்துவம்-24, வித்யா தத்துவம்-7, சிவதத்துவம்-5 ஆக மொத்தம் 36 என்ற கருத்தும், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்ற மூன்றுக்கும் அப்பாலுள்ள துரியம் கடந்த நிலையில் நிற்பது துரியாதீதம் என்ற கருத்தும் உணர்த்தப்பட்டுள்ளது.

*"நாவேறு பாமணத்த பாதார மேநினைத்து*
*நாலாறு நாலுபற்று வகையான*
*நாலாரு மாகமத்தி னூலாய ஞானமுத்தி*
*நாடோறு நானுரைத்த நெறியாக*
*நீவேறெ னாதிருக்க நான்வேறெ னாதிருக்க*
*நேராக வாழ்வதற்கு அருள்கூர*
*நீடார்ச டாதரத்தின் மீதேப ராபரத்தை*
*நீகாணெ னாவனைச்சொ லருள்வாயே"*

(திருவேரகம், திருப்புகழ், பா.18)

என்ற திருப்புகழில் இருபத்தெட்டு சிவாகமங்கள் சொல்லப்படுகின்றன. வேதம் பொதுநூல்; ஆகமம் சிறப்பு நூல்; ஆகமம் என்ற சொல்லுக்கு வந்தது என்று பொருள். இறைவனுடைய நாவிலிருந்து வந்தது எனப்படும். ஆ-சிவஞானம், க-மோட்சம், ம-மலநாசம் என்றவாறு மலத்தைக் கெடுத்துச் சிவஞானத்தைக்

கொடுத்து மோட்சத்தை அருள்வது ஆகமம் எனப் பொருள்படுகின்றது. இருபத்தெட்டு ஆகமங்கள் : காமிகம், யோசகம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்ரபேதம், விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்னேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுரம், கிரணம், வாதுளம் என்பனவாகும். இவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு பாதங்களுடன் கூடியவையாகும்.

மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களுக்கும் அப்பாற்பட்ட ஆனந்த மேலை வெளியில் விளங்கும் பரவெளியை அனுபவிப்பதற்கு இருவினையொப்பு நிகழ்ந்து மலபரிபாகமுற்று சக்தி பதிந்து அருள்பதிந்து பின் அத்துவிதநிலை எய்தவேண்டும் என்று ஞானாசிரியர் சுட்டுகின்றார்.

தீவினையாகிய வெயிலால் வாடி, நரக வேதனையென்னும் தழலால் வெந்து, பிறவித் துன்பமென்னும் வெப்பத்தால் வெதும்பியுள்ள ஆன்மாக்களுக்கு ஆண்டவனே குளிர்ந்து ஈறிலா இன்பத்தை விளைவிப்பதால் இறையருள் "ஈரஅருள்" எனச் சுட்டப்பட்டுள்ளது.

### தொகுப்புரை

சிவமும் முருகனும் வேறுவேறல்லர் என்ற உயர்ந்த ஞானவெளியில் அருணகிரியார் அருட்பயணம் செய்கின்றார். ஆணவ மல இருள் நீக்கம் பெற வேண்டும் என்பதிலும் மலபரிபாகமுற்று சிவானந்த அனுபவத்தில் திளைக்க வேண்டும் என்பதிலும் பெருவிருப்பம் கொண்டுள்ள அருணகிரியார் இதற்கு மறுதலையாகவுள்ள மங்கையார்பால் ஏற்படும் தொடர்புகளை நீக்கியருளுமாறு இறைவனிடம் வேண்டுகின்றார். திருவேரகத் திருப்புகழில் உயிரின் இயல்பு நிலையும், ஆணவ மலத்தின் மறைப்பும், மாயையின் காரியங்களும் திரோத சக்தியின் சிறப்பும் பாடப்பட்டுள்ளன. இறைவன் திரோத சக்தியைக் கொண்டு தொழிற்படுத்தி உயிர்களுக்கு ஏற்படும் இருளை நீக்கியருளுகின்ற தன்மை நயமாகப் பாடப்பட்டுள்ளது. முடிந்த முடிவாகச் சொல்லப்பட்ட சைவசித்தாந்த நெறியில் முப்பத்தாறு தத்துவங்களைப் பற்றியும் இருபத்தியெட்டு ஆகமங்களைப் பற்றியும் அருணகிரியார் விதந்தோதுகின்றார். ஆறுபடை வீடுகளில் அழகாகக் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானைப் புகழ்ந்து பாடிய, அருணகிரியார் சைவ சித்தாந்தக் கூறுகளைப் பாடல்களில் பதிவு செய்துள்ள பாங்கு திருவேரகத் திருப்புகழில் மிகுதியாக இடம்பெற்றுள்ளது.

# இலக்கியத்தில் முருகன் அன்றும் - இன்றும்

ச. மோகன்
10, ஜீவா தெரு, பசும்பொன் நகர்
பழங்காநத்தம், மதுரை—625 003.

உலகமொழிகளில் எண்ணற்ற மொழிகள் இருப்பினும் ஒரு சில மொழிகளே தனித்துவமும், சிறப்பும் பெற்றுத் திகழ்கின்றன. குறிப்பாக இலத்தீன் சட்ட மொழியாகவும், பிரெஞ்சு காதல் மொழியாகவும், ஆங்கிலம் வணிக மொழியாகவும் உலகளவில் போற்றப்படுகினறன. அவற்றிற்கும் மேலாக தமிழ்மொழி வையகம் முழுவதும் "தெய்வீக மொழி" என்ற தனி மாண்பினைப் பெற்றுள்ளது. தெய்வீக மொழியாம் தமிழ் மொழியில் பக்தி இலக்கியங்கள் காலத்தால் அழியாமல் நிலைத்து நின்று இன்று வரை வளர்சசி பெற்ற வரும் இலக்கியத்தில் முருகனைப் பற்றி அன்றும் இன்றும் ஆய்வதே இக்கட்டுரை.

**திருமுருகாற்றுப்படையில் முருகனின் தோற்றம்**

சங்க இலக்கியங்களில் ஒன்றாகப் போற்றப்பெறும் பத்துப்பாட்டில் முதலிடம் பெறுவது திருமுருகாற்றுப்படை ஆகும். இதனை இயற்றியவர் மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரனார் ஆவார். திருமுருகாற்றுப்படையில் திரு என்ற சொல்லிற்கு அழகு, ஒளி, சிறப்பு, பொலிவு, செல்வம், தெய்வத்தன்மை, கண்டாரால் விரும்பப்படும் தன்மை போன்ற பொருள்கள் தமிழ்ப் பேரகராதியில் கூறப்படுகின்றன. முருகாற்றுப்படை என்னும் தொடருக்கு, "வீடு பெறுவதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடு பெற்றான் ஒருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்துவது" என்னும் பொருளில் நச்சினார்க்கினியர் உரை அமையப்பெற்றுள்ளது. திருப்பரங்குன்றத்தில் முருகனின் காட்சியாக,

*"மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்து*
*எய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்"* (திருமுருக. 60-61)

மா வடிவமாக நின்ற சூரனைக் கொன்ற வெற்றியும், புகழுமுடைய செந்நிற வேலை ஏந்திய வடிவமாக முருகனின் தோற்றத்தினைத் திருச்சீரலைவாயில்,

*"ஐவேறு உருவின் செய்வினை முற்றிய*
*முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி*
*மின்னுறழ் இமைப்பின் சென்னிப் பொற்ப*
*நகைதாழ்வு துயல்வருஉம் வகையமை பொலங்குழை*
*சேண்விளங்கு இயற்கை வான்மதி சுவைஇ"* (திருமுருக. 83-87)

ஐந்துரு கொண்ட முடியில் பதித்துள்ள திருமணிகள் பொலிவுற, மகரக்குழை திங்களைச் சூழ்ந்த விண்மீன்கள் போல ஒளிவீச முருகன் காட்சியளிப்பததாக திருஆவினன்குடியில்,

*"தாவில் கொள்கை மடந்தையொரு சின்னாள்*
*ஆவினன்குடி அசைதலும் உரியன்அதா அன்று"* (திருமுருக.75-76)

குற்றமற்ற கற்பினையுடைய மடந்தையாகிய தெய்வானையோடு சில நாள் திரு ஆவினன்குடி என்னும் தலத்தின்கண் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளதாகவும், திருஏரகத்தில்,

*"விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்து*
*ஏரகத்து உறைதலும் உரியன்அதா அன்று"* (திருமுருக.188-189)

நல்லமலர்களை எடுத்து அர்ச்சித்து வழிபடவும் அதற்கு மிகவும் மகிழ்ந்து திரு ஏரகம் என்னும் தவத்தின் கண் அம்முருகப்பெருமான் எழுந்தருளி இருத்தலும் உரியன என்று குன்றுதோறாடலில்,

*"நரம்பார்த் தன்ன இன்குரல் தொகுதியொடு*
*குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்*
*மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்*
*முழுவுறழ் தடக்கையின் இயல ஏந்தி*
*மென்தோள் பல்பினை தழீஇத் தலைத்தந்து*
*குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே அதாஅன்று"*
(திருமுருக. 212-217)

யாழிசை போன்ற இனிய குரலினைக் கொண்ட மகளிர் கூட்டத்தோடு, இசையில் உடுத்திய உடையினனாக, மத்தளத்தை ஒத்த தன் பெருங்கைகளினால், மென்தோளினராகிய மாண்பினைப் போன்ற மகளிரைத் தழுவிக்கொண்டு குன்றுதோறும் ஆடல் புரியும் நிலை பெற்ற பண்பினன் முருகன் என்று பழமுதிர்ச் சோலையில்,

*"ஆமா நல்லேறு சிலைப்பச் சேணின்று*
*இழுமென இழிதரும் அருவிப்*
*பழமுதிர் சோலை மலைகிழ வோனே"* (திருமுருக. 315-317)

கரிய கொம்புகளையுடைய "ஆமா" என்று காட்டுப் பசுவின் வகையைச் சேர்ந்த நல்ல காளைகள் முழங்க, மிக உயரத்திலிருந்து ஓசையோடு இறங்கி வருகின்ற "சிலம்பாறு" என்னும் அருவியுடைய "பழமுதிர்ச்சோலை" மலைக்கு உரிமை உடையோனாகிய முருகக்கடவுள் ஆவர். இங்ஙனம் முருகன் மக்கள் விரும்பும் வண்ணம் எழுந்தருளியிருப்பான் என்று ஆற்றுப்படுத்துவோன் கூறும் கூற்றாக அமைவதே திருமுருகாற்றுப்படையின் மாண்பாகும்.

**சிலப்பதிகாரத்தில் முருகன்**

ஐம்பெருங்காப்பியங்களில் முதன்மைக் காப்பியமாகத் திகழும் சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகள் குறிஞ்சித் திணைக்குரிய சிறப்பினையும், முருகனைப் பற்றியும் குன்றக்குரவையில் குறிப்பிட்டுள்ளார். இதனை,

*"மலைவேங்கை நறுநிழலின் வள்ளி போல்வீர்"* (சிலப். 24.3)

என்று கண்ணகியைப் பார்த்துக் கூறுகின்றார். கண்ணகி கணவனொடு வாகனம் சென்ற காட்சியைக் கண்ட அம்மக்கள் அவ்விருவருக்கும் நெடுவேள் குன்றமாகிய பறம்பின் தாழ்வரையில் வேங்கை மரத்தின் நிழலில் கோயிலெடுத்தும் தம் வழிபடு கடவுளாகிய முருகனுக்குச் செய்வதற்குரிய வழிபாட்டு முறைகளைச் செய்யும்படி அறிவுறுத்துகின்றனர். இக்காட்சியினை இளங்கோவடிகள்,

*"தொண்டகம் தொடுமின் சிறுபறை தொடுமின்*
*கோடுவாய் வைம்மின் கொடுமணி இயக்குமின்*
*குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின்"* (சிலப். 16-18)

என வருகின்ற பகுதிகளில் திருமுருகாற்றுப்படையின் தாக்கங்களாக,

*"தொண்டகச் சிறுபறைக் குரவை அயர"* (திருமுருக. 197)
*"கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி"* (திருமுருக. 246)
*"நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி"* (திருமுருக 239)

காணமுடிகின்றது.

**மணிமேகலையில் முருகன்**

குறிஞ்சி நிலக்கடவுளான முருகன் கடம்பமாலையினைச் சூடியவன் என்பதனைத் திருமுறுகாற்றுப்படையில் நக்கீரர்,

"உருள்பூந் தண்தார் புரளும் மார்பினன்" (திருமுருக. 11)

அதனை மணிமேகலையில், "காரலர் கடம்பன்" (மணி.4.49) என்று சாத்தனார் முருகனைக் குறிப்பிடுக்கின்றார். மேலும் இரவுஞ்ச வடிவில் வந்த அசுமனை முருகன் அழித்த வரலாற்றினை,

*"குருகுபெயர்க் குன்றம் கொன்றோன்"* (மணி. 5.13)

என்றும்,

*"முருகச் செவ்வி"* (மணி 5.13)

போன்றவைகள் அனைத்தும் முருகன் மீதுள்ள பக்தியைக் காணமுடிகின்றது.

**சீவகசிந்தாமணியில் முருகனின் உவமை**

சீவகசிந்தாமணியை இயற்றிய திருத்தக்கத்தேவர் சீவகனுக்கு முருகனை உவமையாக விளக்குகின்றார் என்பதனை,

*"பூவினுள் பிறந்த தோன்றல் புண்ணியன் அனைய நம்பி"*(சீவக. 316)
*"முனைவனுக்கு இறைஞ்சினான் முருகவேள் அனான்"* (சீவக. 815)

என வரும் பகுதிகளை உற்று நோக்கினால் சமணக் காப்பியத் தலைவனாகிய சீவகனுக்கு அருகனை உவமை கூறாமல் முருகனை

உவமையாகக் கூறும் நிகழ்வானது எல்லையற்ற பேரழகினையே முருகனிடம் காணமுடிகின்றது.

**பெருங்கதையில் முருகனின் உவமை**

வேளிரின் காப்பியத் தலைவனான உதயணனுக்கு,

*"பத்திரா பதிமிசைப் பனிக்கடற் பிறந்த*
*வெஞ்சூர் தடிந்த அஞ்சுவரு சீற்றத்து*
*முருகவேள் அன்ன உருவுக்கொள் தோற்றத்து"*
(பெருங். 1.42 : 229-231)

என வரும் பகுதியில் முருகனை உவமையாகக் கூறியுள்ளார். கடலில் தோன்றிய சூரபன்மாவைத் தடிந்த முருகன் பிணிமுகம் என்னும் களிற்றின் மிசை அமர்ந்து காட்சி தருதல் போல் சீவகன் பத்திராபதி என்னும் பட்டத்து யானையின் மேல் காட்சியளிக்கிறான். அழகே வடிவான முருகனைத் தன்னே..ரில்லாத காப்பியத் தலைவனான சீவகனுக்கு உவமையாகக் கூறியுள்ள நிகழ்வானது முருகனின் நிலையான அழகையே வலியுறுத்துவதாக சமணரின் உட்கருத்தாகவே உள்ளது.

**கந்தபுராணத்தில் திருமுருகாற்றுப்படை**

கச்சியப்பர் பாடிய கந்தபுராணத்தில் திருமுருகாற்றுப்படையில் கூறப்பட்ட திருத்தலங்கள் எடுத்து கையாளப்பட்டுள்ளன. பாயிரப் பகுதியில்,

*"திருப்பரங் குன்றமவர் சேயைப் போற்றுவாம்*
*சீரலை வாய்பரு சேயைப் போற்றுவாம்*
*ஆவினன் குடிவரும் அமலற் போற்றுவாம்*
*ஏரகத் தறுமுகன் அடிகள் ஏத்துவாம்*
*குன்றுதோ றாடிய குமரற் போற்றுவாம்*
*பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்"* (கந்த. 1.2:12-17)

ஆறுபடை வீட்டிலும் முருகனைப் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

**திருப்போரூர் சிதம்பர சுவாமிகளின் முருகன் தாலாட்டு**

திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் அருளிச் செய்த திருப்போரூர் சந்நிதிமுறை முருகனையே முதற் கடவுளாகக் கொண்டு பாடப்பெற்ற பலவகைப் பிரபந்தங்களின் தொகுப்பில், அனுபூதிமானாகிய சிதம்பர சுவாமிகள் அருளிச் செய்த பாடலான,

*"சமரபுரித்தேவா! தணிகைமலைத் தேனோ!*
*அமரும் பழநி மலைக்கான மணிவிளக்கோ!*
*சீரலைவாய் முத்தோ! திருப்பரங்குன் றத்தரசோ!*
*ஏரகத்தில் என்றும் இருந்த பெருவாழ்வோ!*
*பழமுதிர் சேலைப் பரனோ! குறிஞ்சிக்*
*கிழவனென நல்லோர் கிறைக்கும் பெருமானே!"*

குழந்தையாகிய முருகனைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டும் கார்த்திகைத் தாய்மார்கள் பாடுவதாகச் சிதம்பரச் சுவாமிகள் பாடியுள்ளார்.

**வள்ளலார் கண்ட கந்தகோட்டம்**

இராமலிங்க வள்ளலார் தமது வாழ்வின் அருட்பணியில் கருத்தை நாட்டினார். செந்தமிழ்த் தெய்வமும், தகப்பன்சாமியும் குகனுமான முருகனை வழிபடு கடவுளாகக் கொண்டு அன்பாலுருகி இன்பப்பாமாலை தொடுத்து மனமார அணிவித்து வந்தார். மாலை தோறும் கந்தப்பெருமான் கோயிலில் பரவசம் பொங்கித் ததும்பும் பாமாலை புனைந்து வழிபடும் நம் குமரனை மனமுருகி வழுத்தி வந்த அருமையை ஐந்தாம் திருமுறையில்,

*"மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும்; நோயற்ற*
*வாழ்வினான் வாழ வேண்டும்*
*தருமமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்*
*தலமோங்கு கந்தவேளே*
*தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி*
*சண்முகத் தெய்வமணியே!"*

கந்தக்கோட்ட முருகனை வழிபடுகின்றனர்.

**ஏனைய இலக்கியங்கள்**

முருகன் பேரில் பிள்ளைத்தமிழ், கலம்பகம், உலா, பதிகம் எனப் பல பிரபந்தங்கள் அருளிச் செய்துள்ள புலவர்களில் குறிப்பிடத்தக்கவர் 19ம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், பாம்பன் சுவாமிகள், கிருபானந்தவாரியார், திரு.வி. கலியாணசுந்தரனார், கி.வா. ஜகந்நாதன் ஆகியோர்கள் எழுதிய கட்டுரைகள் , சொற்பொழிவுகள் மக்களிடையே பரவச் செய்த மெய்த்தொண்டர்களாவார்கள். மகாகவி பாரதியும்,

*"வில்லினை ஒத்த புருவம் வளைத்னை வேலவா – அங்கு*
*வெற்பு நொறுங்கிப் பொடிப்பொடி ஆனது வேலவா"*

என்று முருகனைப் பற்றிப் பல பாடல்கள் புனைந்துள்ளார். மேலும் முருகனை வழிபடுவோர் தமிழகத்தில் மட்டுமின்றி தமிழர் வாழும் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஆஸ்திரேலியா , ஐரோப்பா, அமெரிக்கா, கனடா உள்ளிட்ட ஏனைய உலக நாடுகளிலும் வாழ்கின்றனர்.

மேற்குறித்த செய்திகள் சங்க காலம் முதல் அன்றும் இன்றும் பிறவியில் சிறந்த மானிடப்பிறவியின் பயனாக முருகனின் திருநாம மகிமைகளை உணர்ந்து வணங்கி வழிபட்டு வையத்தள்ள வாழ்வாங்கு வாழ்ந்து நற்பேறினை அடைவோமாக.

# கொங்கு நாடும் முருகன் கோயில்களும்

**பழ.ச. மோகன்ராசு**
பதிக்கவுண்டர் தோட்டம்
வேதாம்பாள் நகர்
கணபதி, கோயம்புத்தூர் - 641 006.

நம் கொங்கு நாடு பல்வேறுபட்ட மக்கள், சமுதாயம், சமயம் போன்ற பல்வேறு விதமான சூழ்நிலை நிலைவினாலும் இங்குள்ள ஆதிகுடிகள் யாவும் இறைவன் ஒருவனையே அதிகம் வணங்கினர். அவர் அழகு என்ற சொல்லுக்குப் பொருள். ஞானம் என்ற சொல்லுக்கு வடிவம் எனப் பல்வேறுப்பட்ட வர்ணணைகளில் வர்ணிக்கலாம். அவர் தாம் கொங்கில் உள்ள குன்றுகளில் எல்லாம் காட்சியளிக்கும் முருகன், வேலன், தண்டாயுதபாணி, குழந்தை வேலாயுதம் என்ற பல்வேறுபட்ட தமிழ் பெயர்களுக்கு சொந்தக்காரன்.

கொங்கு நாட்டில் ஓர் குழு ஒன்றுகூடி ஓர் கிராமம் என்ற சூழ்நிலையை அமைத்து வாழத்தொடங்கினால். அங்கு இறைவனான முருகன் குடிகொண்டிருப்பார். கொங்கின் சூழ்நிலையைப் பல்வேறு நிலைகளில் பலர் வர்ணித்தாலும் சமயம் என்று சொன்னால் கௌமாரமே இங்குத் தழைத்தோங்கிக் காணப்பட்டது. முருக பக்தருள் மிகச்சிறந்த சித்த ஞானியான அருணகிரிநாதரும், இங்குள்ள தலங்களில் திருப்புகழ் பாடல்பாடி சிறப்பித்துள்ளார். போகர் போன்ற மருத்துவ சித்தர்களும் இங்கு வாழ்ந்தவர்களே! நாம் மனம்மாறப் போற்றிப்பாடும் கந்தசஷ்டி கவசம் கூட இங்குத்தான் பாடப்பட்டது. அதன்படி கொங்கு நாட்டில் உள்ள முருகன் தலங்களை ஆய்வு செய்து தொகுத்துள்ளேன்.

**மருதமலை ஆண்டவர் (மருதமலை)**

இக்கோவிலில் முதன்மைக் கடவுளான முருகன் இங்குச் சுப்பிரமணிய சுவாமி என்றும், தண்டாயுதபாணி என்றும், மருதாசலமூர்த்தி என்றும் அழைக்கப்படுகிறார். அருணகிரிநாதரால் திருப்புகழில் பாடல்பெற்ற தலம் இது. முருகப்பெருமானின் ஏழாவது படைவீடாகக் கருதப்படும் மருதமலை. முற்காலத்தில் கொங்கு வேட்டுவ மன்னர்களால் பராமரிக்கப்பட்டுள்ளது. தேவாரப்பாடல் பெற்ற தலமான திருமுருகன்பூண்டி கோயில் கல்வெட்டுகளில் மருதமலை கோயில் 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக தகவல்கள் உள்ளன. முருகன் கோயிலுக்கு அருகில் பாம்பட்டிச் சித்தர் குகைக்கோயில் அமைந்துள்ளது. இவர் பதினெட்டுச் சித்தர்களில் ஒருவர். மருதமலை கோயிலில் ஆதி மூலஸ்தானத்தில் சுப்பிரமணியர் வள்ளி தெய்வயானையுடன் மூவரும் சுயம்புலிங்க வடிவில் உள்ளனர். இங்கு வள்ளியின் சுயம்பு உருவம் தெய்வயானையை விட சற்று உயரமாகக் காணப்படுகிறது.

**பாலதண்டாயுதபாணி (பழனி)**

வளமிகு கொங்கு நாட்டில் குன்று இருக்கும் இடமெல்லாம் முருகன் காட்சியளிப்பான். அதனில் சிறப்பிக்கும் வகையில் ஆறுபடை வீடுகளில் ஒரு பகுதியாக பழனி இங்கு அமைந்துள்ளது. கருவறையில் ஆண்டிக்கோலத்தில் காட்சி கொடுக்கும் இறைவனைக் காணலாம். இங்குச் சுப்பிரமணியரின் வலக்கையில் தண்டம் பிடித்திருப்பதால் தண்டாயுதபாணி என்ற பெயரும் உண்டு. இடக்கையை இடுப்பில் ஊன்றியுள்ள இறைவன் மேற்கு முகமாய் நின்று அருள் பாலிக்கிறார். சுவாமி நவபாசாணத்தால் ஆனவர். ஒன்பது வகை பாசாணத்தை ஒன்று கூட்டிச் சிலையைச் செய்தவர் போகர் ஆவார். பதினெண் சித்தர்களில் ஒருவர் அவருக்குப் பின் அவர் சீடர் புலிப்பாணியும் அவருக்குப்பின் அவர்கள் மரபில் வந்தோரும் பூசீத்து வந்துள்ளனர். போகன் சமாதி உட்பிராகாரத்தில் தென்மேற்கு மூலையில் உள்ளது. அவர் பூசித்த அருள்மிகு புவனேஸ்வரி அம்பாளின் திருமேனியை நாம் இன்றும் இங்குக் காணலாம். மூலஸ்தாணத்திற்கும் இந்த சமாதிக்கும் சுரங்கப்பாதை ஒன்று இருப்பதைக் காணலாம். தண்டாயுதபாணியை வழிபட்டு வாழ்ந்தவர்கள் அகத்தியா, போகர். சேரர்கோன், வசுமந்தன், சொர்ணஆதித்தன், நித்தியானந்தன், ஸ்ரீயன், பிரமர், இந்திரர் அக்னி ஆகியோர்.

**அனுவாவி சுப்பிரமணியர் கோவில் (கணுவாய்)**

கோவை நகரிலிருந்து 18 கி.மீ தொலைவில் மேற்குத் தொடர்ச்சி மலையில் மருதமலைக்குப் பின்புறத்தில் இக்கோயில் அமைந்துள்ளது. இங்கு 500 அடி மலை உயரத்தில் அனுவாவி சுப்பிரமணியர் காட்சியளிக்கிறார். இங்குள்ள நீர்வீழ்ச்சி எக்காலத்தும் வற்றுவதில்லை. இச்சிற்றருவியில் நீராடினால் தீராத நோய்களும் மனநோயும் தீரும். இக்கோயில் கிருத்திகை விழாவுக்குப் புகழ் பெற்றது. இவ்வூர் அருகில் சின்ன தடாகம் என்னும் ஊர் உள்ளது. அங்கு குருடிமலை ஒன்று அமைந்துள்ளது. அம்மலையில் அரங்கநாதசுவாமி காட்சியளிக்கிறார். அங்குள்ள முருகன் செவ்வகக் கல்லாக வழிபடுகின்றனர். இம்முருகனை அருணகிரிநாதர் பாடியுள்ளார்.

**ஓதிமலையாண்டவர் (ஓதிமலை அன்னூர்)**

புன்செய் புளியம்பட்டி மேட்டுப்பாளையம் சாலையில் 8 கி.மீ தொலைவில் உள்ள இரும்பொறை என்ற கிராமத்திற்கு வடக்கில் 3 கி.மீ தொலைவில் உள்ளது. ஓதிமலை அருள்மிகு முருகன் சன்னதி இம்மலையின் உச்சியில் முருகன் 5 முகங்களும் 8 கரங்களும் கொண்டு தனி முருகனாக வித்தியாசமாகக் காணப்படுகிறார். ஆறுமுகங்கள் கொண்ட முருகனைப் பார்த்திருப்பீர்கள். ஐந்து முகங்கொண்ட முருகனை இங்கு மட்டுமே கண்டு தரிசிக்கலாம். இரும்பறை என்பது பரமனை அடைத்த இரும்பறை என்று பொருள்படும். மலையடிவாரத்தில் போகர் யாக குண்டம் உள்ளது. போகருக்கு வழியனுப்ப ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்ட ஆறுமுகன் மலையிலிருந்து இரங்கி வந்ததாகவும் எஞ்சிய ஐந்து முகங்களும், எட்டு

கரங்களும் கொண்டு மலையில் விளங்குகிறார் என்று சொல்லப்படுகிறது. ஒரே ஒரு கல்வெட்டு மட்டும் கிரந்த எழுத்தில் காணப்படுகிறது. இக்கோயில் 300-1000 வருடங்கள் பழமையானது. இதனை ஞானமலையும் என்பர். திருப்புகழ் பாடல்பெற்ற தலமாகும்.

**செஞ்சேரிமலை முருகன் (வேலாயுதசுவாமி)**

செஞ்சேரிமலை சுல்தான்பேட்டை அருகில் உள்ளது. தென்-சேரி கிரி என்று பழம் பெரும் பெயர் கொண்ட இத்திருத்தலமானது அருள்மிகு முருகன் அருள்புரியும் தலங்களில் மிக முக்கியமானது. மந்திரகிரி என்ற பெயரும் இம்மலைக்கு உண்டு. மூலவரான இறைவனுக்கு மந்திராசலமூர்த்தி என்றும் திருபெயர் உண்டு. கிழக்கு நோக்கி அமைந்துள்ள இக்கோயிலில் மூலவர் ஆறுமுகங்களோடு காட்சியளிக்கிறார். மலையின் மீது பாறைகளுக்கு இடையில் ஐந்து சுனைகள் இருக்கின்றன. இவை எக்காலத்திலும் வற்றுவதேயில்லை. இந்த முருகனை அருணகிரிநாதர் பாடியுள்ளார். இங்குக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

**கல்யாண சுப்பிரமணியசாமி (குமரன்குன்று அவினாசி)**

மேட்டுப்பாளையம்-அன்னூர் நெடுஞ்சாலையில் 10 கி.மீ தொலைவில் உள்ளது. அருள்மிகு கல்யாண சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் அமைந்துள்ளது. இங்குச் சுப்பிரமணியர் குன்றின்மீது காட்சியளிக்கிறார். தமிழ் ஆண்டு சித்திரை முதல் நாளில் சூரிய ஒளி இறைவனின் திருமேனி மீது படுவது பேராச்சரியம். இக்கோயில் 19ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இங்குத் தைப்பூசத் திருநாள் சிறப்பு. தமிழ் முறைப்படியே பூசைகள் நடத்தப்படுகின்றனர்.

**சிவன்மலை முருகன் (ஈரோடு)**

சிவன் சுப்பிரமணியர் கோயில் அருணகிரிநாதரால் திருப்புகழ் பாடப்பெற்ற பெருமை கொண்ட முருகன் கோயில் ஆகும். சிவவாக்கியர் சித்தர் சிவன்மலையில் தங்க தமது விருப்பதெய்வமான முருகப்பெருமானுக்குத் திருக்கோயில் எழுப்பி வழிப்பாட்டார். சிவன் திரிபுரத்தை அழிக்க மேரு மலையை வில்லாகப் பயன்படுத்தியபோது அதிலிருந்து சிதறிய ஒரு சிறுபகுதியே சிவன்மலை எனப்படுகிறது. இது பார்வதி மற்றும் அகத்தியர் சிவனை நோக்கித் தவம் செய்த தலம். வள்ளி மலைக்குச் சென்று வள்ளியை மணம்முடித்த முருகன் வள்ளியுடன் இங்குக் குடிகொண்டதாகவும் வரலாறு உள்ளது. இந்த வரலாறு சிவமலைக்குறவஞ்சிப் பாடலில் கூட குறிப்பிட்டுள்ளார். உத்தரவுப்பெட்டி என்ற கண்ணாடிப் பெட்டியின் மூலம் சிவ உத்தரவுகளைப் பெறுகின்றனர்.

**திருச்செங்கோடு (அர்த்தநாரீசுவரர் வேலவர்)**

திருச்செங்கொடு இம்மலை மீதுள்ள முருகனே செங்கோட்டு வேலவன் கொங்கு நாட்டுத் தலங்களில் இத்தலம் மூன்றாவது திருத்தலமாக

விளங்குகிறது. மலைமீது பல கோயில்கள் உள்ளன. திருச்செங்கோடு வேலவரின் கோயில் சிறப்பானது. செங்கோட்டு வேலவரிடம் அருணகிரிநாதர் மிகவும் ஈடுபாடு கொண்டவர். திருப்புகழ் கந்தர் அலங்காரம் கந்தரனுபூதியில் திருச்செங்கோடு வேலவர் பற்றி ஒரு பாடல் இருக்கக் காணலாம். 13ஆம் நூற்றாண்டு பாண்டியர்கள் கட்டிய பாண்டிஸ்வரர் கோயில் வரடிகல் என்ற மலைக்குன்றின் மீது உள்ளது. குன்றின் அடிவாரத்தில் பஞ்சபாண்டவர் படுக்கைகள் உள்ளன. இங்கு மூலவர் அர்த்தநாரீசுவரர் ஆவார்.

**சென்னிமலை முருகன் (ஈரோடு)**

சென்னிமலை பெருந்துறைக்கு அருகில் அமைந்துள்ளது. அருணகிரிநாதர் திருப்புகழில் ஐந்து பாடல்களில் சென்னிமலை முருகனை துதித்துப்பாடியுள்ளார். தேவராயசுவாமிகள் கந்தசஷ்டி கவசத்தின் சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக ….. என அந்நூலை இங்கு அரங்கேற்றினார். சென்னிமலைக்கு மேற்கே சுமார் மூன்று கி.மீ தூரத்தில் நொய்யல் ஆற்றின் கரையில் கொடுமணல் என்ற குக்கிராமத்தில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு பண்ணையக்காரர் ஒருவரின் பெரும் பண்ணையில் நூற்றுக்கணக்கான பசுமாடுகள் இருந்தன. அதில் ஒரு மாடு மட்டும் அதன் மடியில் பால்வற்றி காணப்பட்டது. இதனைக் கண்டுபிடிக்க பண்ணையர் முடிவு செய்து அந்த மாட்டின் பின்னே சென்ற போது ஒரு இடத்தில் பால் தானாக சுரந்துக்கொண்டு இருந்தது. அங்குச் சென்று தோண்டியபோது அழகு திருமேனியில் முருகனின் சிலை காணப்பெற்றது. ஆனால் அதன் இடுப்பு பகுதி மற்றும் சிலை முற்றுப்பெறாமல் இருந்தது. அதனைச் சீர்செய்ய சிற்பியை அழைத்து ஊழியில் செதுக்கினான் ஊழி பட்டதும் இரத்தம் வடிந்தது. அதனை அப்படியே பிரதிஷ்டை செய்தனர் என்பது வரலாறு. இங்குள்ள குகையில் பதினெட்டு சித்தர்களின் ஒருவரான பின்நோக்கு சித்தர் இக்குகையில் இறைவனை வழிப்பட்டதாகக் கல்வெட்டு ஒன்று உள்ளது. (சென்னிமலையில் தயிர் புளிப்பதில்லை).

**சுப்பிரமணியசுவாமி (பொள்ளாச்சி)**

விவசாய வளம் செழிக்கும் செழிப்பான ஊர் பொள்ளாச்சி. இவ்வூரின் பெயர்க்காரணங்களை இரண்டு விதமாகக் கூறுகின்றனர். தமிழகத்தின் வாரச்சந்தைகளில் பொள்ளாச்சி வாரச்சந்தை பெயர் பெற்ற சந்தையாகும். சிற்றூர்களை வாய்ச்சி என அழைப்பர் பொழில்களுக்கு இடையில் அமைந்த வாய்ச்சி பொழில்வாய்ச்சி என வழங்கப்பட்டு நாளடைவில் இடம்பெயர் மருவி பொள்ளாச்சி என வழங்களாயிற்று. ஆயிரம் ஆண்டுகள் பழமையான இந்த ஆலயம் கொங்கு சுந்தரபாண்டியன் கொங்கு திரிபுவனசக்ரவர்த்தி விக்ரமசோழன் ஆகிய அரசர்கள் ஆண்ட காலத்தில் கட்டப்பட்டுள்ளது என்பதை கல்வெட்டு குறிப்புகள் மூலம் அறியலாம். தெற்குச் சுவரில் கொச்சி அரச பரம்பரையைச் சார்ந்த மன்னர் பெரும்படப்பு சொருபத்தின் ஆறாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றுள்ளது. இதில் இக்கோயிலின் பெயர் திருவகத்தீசுவரமுடையார் கோயில்

எனக் காணப்படுகிறது. எனவே இத்தலம் சிவத் தலமாக இருந்திருக்கக் கூடும். மூலவர் முருகன் திருவாச்சி மற்றும் மயில் சிலைகள் ஒரே கல்லில் ஆனவை என்பது சிறப்பாகும்.

**திருமுருகன் பூண்டி (அவினாசி)**

கொங்கு நாட்டுப் பாடல்பெற்ற ஏழு தலங்களில் இதுவும் ஒன்று. இங்கு திருமுருகநாதர் காட்சியளிக்கிறார். அவினாசி அருகில் திருமுருகன் பூண்டியில் அமைந்துள்ளது. முருகப்பெருமான் சூரசம்மாரத்தால் ஏற்பட்ட பாவங்கள் நீங்க இங்கு இறைவனை வழிப்பட்டார். அதனால் திருமுருகன் பூண்டியாயிற்று. அருணகிரிநாதர் இத்தலத்தின் மேன்மையைப் பாடியிருக்கிறார். திருமுருகன் பூண்டியில் திருகேசுவுக்குத் தனிக்கோயில் உள்ளது. கந்தமாபுரி, முல்லைவனம், மாதவிவனம் என்பன இத்தலத்திற்குப் பிற பெயர்கள் உண்டு. கல்வெட்டுகள் பல உள்ளன. ஆடல் மகளிருக்கு அரசன் வழங்கிய உரிமைகள் குறித்து கல்வெட்டுகள் காணப்படுகிறது.

**விராலிக்காடு அருள்மிகு சென்னியாண்டவர் (சோமனூர்)**

கொங்கு நாட்டுக் குன்றுகள் எல்லாம் முருகன் அழகன் காட்சியளிப்பான். அதன்படி ஈரோடு மாவட்டம் விராலிக்காடு எழுந்தருளியுள்ள சுப்பிரமணியசுவாமியே காண்போர் அவ்வூர் மக்கள் தைப்பூசத் திருநாளில் சென்னிமலை வரை சென்று முருகனைத் தரிசித்து வந்தனர். ஆனால் மிகத்தொலைவில் உள்ளதால், அந்த ஊரில் உள்ள தன்னை வழிபட முடிவு செய்தனர். அதன் பெயர் தான் விரலிக்காடு ஆகும். இத்திருத்தலம் முன்னூறு ஆண்டுகள் பழமை வாய்ந்தது ஆகும்.

**அருள்மிகு உத்தண்ட வேலாயுதசாமி (ஊதியூர்)**

கொங்கு நாட்டில் குமரப்பெருமான் கோயில் கொண்ட மலைகளுள் ஒன்று ஊதியூர் மலை. கொங்கு மண்டல சதகம் எனும் நூலில் இம்மலையின் பெருமைகள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. அருணகிரிநாதர் இத்தலப்பெருமானை போற்றிப் பாடியுள்ளார். தமிழ்நாட்டில் தோன்றிய சித்தர்களுள் முதன்மையானவர் அகத்தியர் அவரது சீடரான போகர், தேரையர், கொங்கணர் ஆகியோர் பசி, பட்டினி என வாடிய மக்களின் குறைகளைத் தங்கள் யோக ஆற்றலால் நிவர்த்தி செய்து வந்தனர். ஒரு சமயம் அவர்கள் காங்கேய நாட்டு மக்களின் வறுமையைப் போக்கும் விதமாக மக்களை ஒன்று திரட்டி மூலிகைகள் கொண்ட இம்மலைக்குத் தீவைத்து புகைமூட்டி ஊதியதால் ஊதிமலை என்றும், கொங்கணர் சித்தர் தவம் செய்து நெருப்பு ஊதி பொன் தயாரித்ததால் பொன்ஊதிமலை எனவும் கூறுகின்றனர். இக்கோவிலின் தென்புறத்தில் சுனை உள்ளது.

**இரத்தினக்கிரி முருகன் (சரவணம்பட்டி)**

சிவனை நோக்கி யுகங்கள் பல கடுந்தவம் இருந்து ஆண்ட சராசரங்களையும் அழிவிலாது அடக்கி ஆளும்படி வரம்பெற்ற அசுரன்

தேவர்களைத் தொடர்ந்து கொடுமைப்படுத்தி வந்தான். அவனது இன்னல்களுக்குப் பயந்த தேவ தலைவன் இந்திரன் உட்பட தேவர்கள் அனைவரும் அசுரனின் கண்ணுக்குப் புலப்படாமல் ஒளிவு மறைவாக வசித்து வந்தனர். அப்போது ஒரு முறை இந்திரன் மறைந்திருந்ததைக் கண்ட அவரை துன்புறுத்துவதற்காக வந்தான். இதனை அறிந்த இந்திரன் அவனிடம் இருந்து தப்பிப்பதற்காக ஓடினார். அவ்வாறு ஒடிவந்த அவர் இரத்தினக்கிரிமலை மீது ஏரிக் கொள்ள இடம் தேடினார். அப்போது அங்கு இந்திரனுக்குக் காட்சி தந்த குமரகடவுள் அவரைத் தலைவாகனமாக மயிலாக மாற்றிக்கொண்டார்

**குழந்தை வேலாயுதசுவாமி (குருந்தமலை மருதூர்)**

இம்மலை 15 அடி உயரம் உடையது. சுற்றியுள்ள பெருமலைகளைக் கண்ணூற்று இந்த குருந்தமலையே நோக்கும்போது இதன் இளமை தன்மை தெரியும் சின்னஞ்சிறு குழந்தைகளிடமும் கள்ளமில்லா பிஞ்சு உள்ளங்களிலும் இறைவன் குடி கொண்டு இருப்பவர் குழந்தை வேயாயுதசுவாமி மேற்கு நோக்கி காட்சியளிக்கிறார். சுமார் நான்கு அடி உயரத்தில் பழனி முருகன் போல் காட்சியளிக்கிறார். அகத்தியர், அருந்தவன், ஆதவன் பூசித்த தலம். குருந்தமலை வடக்கே பகாசுரன்மலை அருளாக ஆரவள்ளி, சூரவள்ளி இருப்பதாகக் கூறுகின்றனர். இங்குக் காணச்சுனை என்ற பெயரில் சிறியபொந்து போல ஒருசுனை உள்ளது. இதன் புராணப் பெயர் குரு இருந்த மலை.

**சொர்ணமலை (வேலாயுதசலாம்)**

மேற்குத் தொடர்ச்சி மலைத்தொடரில் குருந்தமலை, துய்யமலை, பாச்சமலை, தண்டிமலை ஆகிய மலைகளுக்கு நடுவே மணிமுத்தா நதியின் தென்புறம் காளம்பாளையம் என்றும் அழகிய கிராமத்தில் அமைந்துள்ளது. சொர்ணமலை தூய காற்றும் அமைதியும் நிலவும் இம்மலையில் ஏராளமான சித்தர்கள் தங்கித் தவம் செய்ததாகவும் இன்றளவும் அவர்களுடைய நடமாட்டம் இருப்பதாகவும் நம்பப்படுகிறது. ஷோய்சால மன்னர்கள் காலத்தைய சிற்பங்கள் காணப்படுகின்றது.

**பழனியாண்டவர் (சாலையூர்)**

பழனியாண்டவர் மேற்கு நோக்கி காட்சியளிக்கிறார். இவர் நடுகல் போன்ற அமைப்பாகவே காட்சியளிக்கிறார். என்றாலும் அதில் வேலின் திருவுரு இருப்பது சிறப்பு. சாலையூர் முருகப்பெருமாள் நடுகல் தோற்றத்தில் அருள்பாலிப்பதாகக் சொல்லுகிறார்கள். சுமார் 1500 ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கி இன்றுவரை நடுக்கல்லை கடவுளாய் ஏற்று வழிபட்டுவரும் தலம் சாலையூர்.

**பாலதண்டாயுதபாணி (எலகம்பாளையம்) சிறுமுகை**

சித்தர்களால் உருவாக்கப்பட்டதால் பாலதண்டாயுதபாணி மிகச்சிறப்பு மிக்கதாகக் கருதப்படுகிறது. பாண்டிய மன்னர் ஆட்சிக் காலத்தில் கருவறை அமைக்கப்பெற்று வடிப்படப்பட்ட தலம். கோயிலுக்கு சற்று முன்பாகவே இங்கு கந்தனை ஸ்தாபித்த காலேஸ்வர சித்தரின் நிர்விகல்ப சமாதி பீடம் உள்ளது. சனிதோசம் நிவர்த்தி அடையும் தலம்.

## இலக்கியங்களில் சுப்பிரமணியனும் சுந்தர மொழிகளும்

**வ.சு. யசோதா,**
முனைவர் பட்ட ஆய்வு மாணவி,
பேரூர் தமிழ்க் கல்லூரி, கோயம்புத்தூர்.

"ஆறு" என்ற சொல்லிற்கு வழி, நெறி என்று பொருள், அழிந்து போகும் உலகியல் செல்வங்களைப் பெறுவதற்கு ஒருவரை ஆற்றுப்படுத்துவதை விட அழியாத முக்தி பெறுவதற்கு அதனை அழிக்கவல்ல முருகனிடம் மக்களை ஆற்றுப்படுத்திட நக்கீரரால் பாடப்பட்டதே திருமுருகாற்றுப்படையாகும், அவ்வகையில் முருகப் பெருமானின் பெருமைகளையும், இலக்கியங்கள் சுட்டும் இன்ப நுகர்வுகளையும் "சுப்பிரமணியனும், சுந்தரமொழிகளும்" என்னும் கட்டுரையில் ஆய்வதே இதன் நோக்கமாகும்.

### ஆற்றுப்படையில் சுப்பிரமணியன்

கொடுமைகளைச் செய்யும் வலிய வில்லினாலே உயிர்களைக் கொல்லுதலைத் தொழிலாக உடைய வேடுவர்கள் நெடிய மூங்கிலில் விளைந்த அரிசியினால் ஆக்கின இனிமை மிகுந்த கள்ளின் தெளிவை, மலையைச் சார்ந்து இருக்கின்ற சிறுகுடி வாசிகளான தங்கள் சுற்றத்தாருடன் பகிர்ந்துண்டு களித்துக் குறிஞ்சி எனும் மலை நாட்டுக்குரியதான தொண்டகம் என்னும் சீறிய பறையைக் கொட்டி அதன் ஒலிக்கு ஏற்றாற்போலக் கைகோர்த்து ஆடுகிற கூத்தாகிய குரவைக் கூத்தை ஆணும், பெண்ணும் சேர்ந்து ஆடுவர், மத்தளம் போன்ற பெரிய கையினாலே தெய்வப் பெண்களின் கையைத் தழுவி எடுத்து, முதல் கைகொடுத்து விளையாடுதல் செய்வார், இவ்வாறு விளையாடுதலை மலைகள் தோறும் நிகழ்த்துவது குமரவேலின் பண்பென நக்கீரர் ஆற்றுப்படுத்துகிறார்,

*மென்தோள் பல்பிணை தழீஇத் தலைத்தத்து*
*குன்றுதோறாடலும் நின்றதன் பண்பே அதாஅன்று*
(திருமுருகாற்றுப்படை 214-215)

### திருப்புகழில் சுப்பிரமணியன்

கிளி உருவில் அருணகிரியார் தணிகை சேர்ந்து தணிகாசலபதியின் கையிலே தங்கி விட்டார் என்றும் சிலர் கற்பனை செய்து பார்த்திருக்கிறார்கள், இதற்குத் தணிகை திருப்புகழில் ஆதாரம் உள்ளதாக குறிப்பு ஒன்று உள்ளது, "உனக்கடிமை உற்று உன் தலத்தினில் இருக்கும்படி பாராய் திருத்தணி இருக்கும் பெருமாளே" (திருப்புகழ் 264) "அருணகிரி நாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்" என்ற நூலில் திரு.செங்கல்வராயபிள்ளை அருணகிரியாரின் கிளி மொழியினைக் குறித்துப் பின்வருமாறு கூறுகிறார், ஆதலினால் நீ தணிகைக்கு வந்து "நின்பதயுகப் பரசித்தி என்பன வகுத்துரைக்க நின்

பணிதமிழ் தாயத்தை அருள்வாயே" என வேண்டினவாறு சீர்பாத வகுப்பு பாதிபாடி ஆனந்த நிலையில் கிளி கூவிகை என ஆசி கூறினார்.

**திருவருட்பாவில் சுப்பிரமணியன்**

"சுத்தனைப் பத்தி வலைப்படு மவனைத் தணிகையிற் தண்டிறைஞ் சுவனே" (திருவருட்பா-தரிசன வேட்கை 9 (418) முக்தி உலகை உடையவனும், முக்தியைப் பெறுவதற்குக் காரணமாய் விளங்குபவனும், யாவர்க்கும் முதல்வனும், அழகனும், மூன்று கண்களையுடைய பித்தனான சிவனைத் தன் தந்தையாகக் கொண்ட செல்வமகனும், பெரியோர்களின் உள்ளத்தில் எழுந்தருளும் தூயவனும், அடியவர்களின் அன்பெனும் வலைக்குட்படுபவனும், தூயநிலையில் காட்சி தருபவனும், துரியாதீதத்தில் ஓங்கார ஒலியாய்த் திகழ்பவனும், எக்காலத்தும் உன்னதமான தூயஞானச் சுடருமானவனுமாகிய குமரக்கடவுளை தணிகையில் கண்டு மகிழ்வேனென்று வள்ளலார் தணிகை முருகனை காணும் வேட்கையை தன் அருட்பா பாடல்மூலம் வெளிப்படுத்தியுள்ளார்,

**திருத்தணிகையாற்றுப்படையில் சுப்பிரமணியன்**

திருத்தணிகையாற்றுப்படையை இயற்றியவர் கச்சியப்ப முனிவர் ஆவார், இவர் திருத்தணிகையில் சைவ வேளாளர் குலத்தில் 18ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஈடிணையற்ற கவிக்கொண்டலாக விளங்கிய மாபெரும் புலவராவார், எல்லையில்லாத நான்கு பொருள்களையும் கொடைக்கடனாக நீங்கள் குறித்த அளவைவிட எட்டு மடங்கு அதிகமாக முருகக்கடவுள் அருள்செய்து, இன்முகமாக நின்று செய்யும் தொண்டின் காரணமாகப் பக்தியில் ஆழ்த்துவார் என்று முருகக்கடவுளைக் கச்சியப்ப முனிவர் போற்றிப் புகழ்ந்துள்ளார், "காரண நோயும் கையிகந்து இரிய அகம்படித் தொழின்மையின் அழுத்துவன் அன்றே" (திருத்தணிகையாற்றுப்படை 325-329)

**கந்தரந்தாதியில் சுப்பிரமணியன்**

அந்தத்தை ஆதியாக வைத்துப் பாடுவது அந்தாதி ஆகும், அந்தாதிக்குச் "சொற்றொடர்நிலை" என்ற பெயரும் உண்டு, பாரதம் பாடிய வில்லிப்புத்தூராருக்கும், அருணகிரிநாதருக்கும் இடையே ஏற்பட்ட இலக்கியச் சொல்லரங்கப் போட்டியால் உருவான நூல்தான் "கந்தரந்தாதி", இது நூறு பாடல்களால் அந்தாதித் தொடையில் அமையப்பெற்ற முருகப்பெருமானுக்குரிய சிறந்த அகத்துறை நூலாக விளங்குகிறது, "சேர்ப்பது மாலய நீயோற் பலகிரித் தெய்வவள்ள" (கந்தரந்தாதி-59) தணிகைமலைக்குத் தென்புறத்திலுள்ள சுனையில் நீலோற்பல மலர்க்கொடியை நட்டு வளர்த்து, அதன் பூக்களைக் கொண்டு காலை, மாலை, நண்பகல் எனும் மூன்று வேளைகளில் இந்திரன் வழிபட்டான், அவனால் உருவாக்கப்பட்டது நீலோற்பல மலர்ச்சுனையாகும்.

**பதிற்றுப்பத்தந்தாதியில் சுப்பிரமணியன்**

திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி தணிகைமலையில் கோயில் கொண்டுள்ள முருகனைக் குறித்து கச்சியப்ப முனிவரால் பாடப்பெற்றதாகும், அந்தாதி என்பது முன்னுள்ள செய்யுளின் இறுதியிலுள்ள எழுத்து, அசை, சீர், அடி ஆகிய நான்கனுள் ஒன்று பின்வரும் செய்யுளுக்கு முதலாக அமையுமாறு வருவதாகும், இந்நூலில் "விருந்து" எனும் வனப்பு அமைந்த சொற்றொடர்நிலைச் செய்யுளாகும், "தீய லங்குகாட் டிடுவதோர்ந்திமனுளஞ் பதந்தொழாவ, தேலாய்" (பதிற்றுப்பத்தந்தாதி-60) அழகிய கடம்ப மாலையை அணிந்த தணிகையான் பாதம் தொழாமல் அழிந்து ஒசியும் தன்மை வாய்ந்த சுடுகாட்டுக்குச் செல்லக்கூடிய உடலையே போற்றி வளர்த்து வருவதன் பொருளற்ற தன்மை கூறப்படுகிறது.

**கந்தர் அனுபூதியில் சுப்பிரமணியன்**

மூர்த்தி சிறிதாயினும் கீர்த்தி பெரியது போல அளவில் சிறிய அனுபூதி நூல் பொருளால், பொருள் விரிப்பால், நினைப்பால் மிகப்பெரிய மந்திர நூலாகும், அறுசுவையின் சுவையைக் காண வேண்டுவோர் அச்சுவைகளைச் சுவைத்தாலன்றி சுவை அறியாதது போல, அனுபூதி நிலையை அனுபூதி மூலமே பெற வேண்டும்,

*உருவாய் அருள்வாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்*
*கருவாய் உருவாய் கதியாய் விதியாய்*
*உருவாய் வருவாய் அருள்வாய் குகனே"* (கந்தர் அனுபூதி)

**முடிவுரை**

உலகங்கள் எல்லாவற்றையும் காப்பாற்றவும் சுப்பிரமணியன் இருக்கும் இடம் சென்று அடைபவர்களின் நோய்கள் பலவற்றை நீக்கவும் செல்பவன் எம்பெருமான், குலாவுகின்ற ஆறுமுகங்கள் ஆறு பணிகளைச் செய்கின்றன, அத்தகைய ஆறுமுகங்களைக் கொண்டு விளங்கும் சுப்பிரமண்ணியன் மீது ஏராளமான இலக்கிய நூல்கள் சுந்தரமொழிகளால் பல புலவர்களால் பாடப்பட்டுள்ளன.

# மனமே முருகன்

**ந. யுவனேஸ்வரி**
உதவிப்பேராசிரியர்,
மனிதவள மாண்புத் துறை,
கோபி கலை அறிவியல் கல்லூரி,
கோபிசெட்டிபாளையம் -638453

இருபத்தொன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்து கொண்டிருக்கும் நாம் பல வகையாக நவீன உபகரணங்களைப் பயன்படுத்தினாலும் இன்றும் வழிபாட்டு முறைகள் ஆதிகாலம் தொட்டு ஒரே மாதிரியே காணப்படுகின்றன. இப்போழுது திருவிழா கொண்டாட்டங்களாக இருக்கும் விழாக்கள் ஆதிகாலங்களில் இறைவனைப் போற்றி நன்றி செலுத்தும் பூஜையாக செய்து வந்தனா். சங்க கால இலக்கியங்களில் முருகன் வழிபாடு சிறப்பாக இருந்ததைக் காண்கிறோம். இக்கட்டுரையில் நாம் திருமுருகாற்றுப்படை, குறிஞ்சிப்பாட்டு, சமயங்களில் காணப்படும் முருக வழிபாட்டு முறைகளைக் காணலாம். மனமாக விளங்கும் முருகனே, மனதை செம்மைபடுத்தும் மருந்தாகவும் விளங்குகிறான் என்பதை நக்கீரர், கபிலா் பாடல்களின் மூலம் அறிய முடிகிறது. இதற்குத் தொல்காப்பியம் சான்று கூறுகிறது.

### திருமுருகாற்றுப்படையில் முருகன் வழிபாடு

### இயற்கையே முருகன்

முருக வழிபாடே இயற்கை வழிபாடு என்று வாழ்ந்து வந்தனா் பைந்தமிழா். மக்களின் மன மாசுகளைப் போக்கி வீடுபேறு அடைய செய்பவன் முருகன். இதனை

*“உறுநர்த் தாங்கிய மதனுடைய நோன்றாள்*
*செறுநர்த் தேய்த்த செல்லுறத் தடக்கை*
*மறுவில் கற்பின் வாணுதல் கணவன்”* (திருமுருகு 4-6)

வேலனைச் சாதிக்காய், காட்டுமல்லிகை போன்ற மாலையை அணிந்த சிவந்த ஆடையும், அசோகத்தளிரும், காலில் கச்சையையும் கட்டிக் கொண்டு, வெட்டி மாலை சூடி காட்சி அளித்தான்.

*“செய்யன் சிவந்த ஆடையன் செல்வரைச்*
*சேயலைத் தண் தயிர் துயல் வரும் காதினன்*
- - - - - - - - - - - - - - - - - - - - - -
*குன்று தொறு ஆடலும் நின்ற தன் பண்பே”* (முருகு – 205-212)

### அந்தனா்

ஈர ஆடை உடுத்தி, தலைக்குமேல் கைகளைக் கூப்பி ஆறு எழுத்து மந்திரத்தை (சரவணபவ) உச்சரித்து இசைக் கருவிகள் மீட்டி இலக்கண வரையறையில் பாக்கள் தொகுத்து வழிபட்டனர்.

**ஊர்மக்கள்**

வீடுகளிலும், தெருக்களிலும் பசு சாணம் இட்டு, தோரணம் கட்டி, சிறு பூக்கள் தூவி, வாசனை புகையூட்டி, குறிஞ்சிப்பாடல் பாடி இசைக்கருவிகள் ஒலிக்க முருகனுக்கு விழா எடுத்தனர்.

*"சிறுதினை மலரொடு விரைஇ மறிஅறுத்து*
*வாரணக் கொடியொடு வயிற்படநிறீஇ*
*ஊர் ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்"* (திருமுருகு. 218 - 220)

**வேடவர்கள்**

குறிஞ்சி நில மக்கள் வேடவர்கள் என்பதால் இவர்களிடயே முருகன் வழிபாடு அதிகமாகக் காணப்படுகிறது. முருகனுக்கு வாசமும் தேனும் நிறைந்த புதுமலர்கள் தூவி செந்நிற நூலால் காப்புக் கட்டி தேனும் திணை மாவும் வைத்தும், இரத்தம் கலந்த அரிசியைப் படையல் இட்டு வழிபட்டனர்.

*"மதவலி நிலை இய மாத்தாட் கொழுவிடைக்*
*குருதியொடு விரைஇய நூவெள்ளரிசி*
*சிம்பலிச் செய்து பலபிரப்பு கிரீஇச்"* (திருமுருகு. 232,234)

**குறவர்கள்**

நறுமண மலர்களையும், அழகிய கொடிகளையும் சூடிக்கொண்டு வாசனை திரவியங்களையும், சந்தனத்தையும் உடலில் பூசிக்கொண்டு தேன் கலந்த கள்ளை முருகனுக்குப் படைத்து பறை முழங்க முருகனைப் புகழ்ந்து பாடி ஆடி மகிழ்ந்து வணங்கினர்.

*"பைங்கொடி நறக்காய் இடை இடுபுபேலன்*
*அம்பொதிப் புட்டில் விரைசுக்குளவியொடு*
- - - - - - - - - - - - - - - - - - -
*குன்றகக் சிறுகுடிக் குளையுடன் மகிழ்ந்து*
*தொண்டகச் சிறுபறைக் குரவை அயர்"* (திருமுரு. 190-197)

ஆற்றுப்படை என்றாலே கூத்தரும், பாணரும் தாம் புகழ்ந்து பாடி அரசர்களிடம் இருந்து பெற்று வந்த செல்வத்தைப் போற்றிப் பிற பாணர், கூத்தர் வறுமை நீங்க வழி கூறவதே ஆற்றுபடை செய்தி அகும். அதில் திருமுருகாற்றுப்படை வீடு பேறு பெறும் வழியை மக்களுக்கு கூறுவதாக அமைந்ததே ஆகும். அதை நச்சினார்க்கினியார் *"வீடு பெறுதற்குச் சமைந்தோனோர் இரவலனை வீடு பெற்றான் ஒருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்துவது"*. வீடு பேறு கிடைக்க முருகனை வழிபடு என்று கூறுகிறார்.

**குறிஞ்சிப்பாட்டில் முருகர் வழிபாடு**

குறிஞ்சிக்குக் கபிலர் என்று பெயர் பெற்றவர். குறிஞ்சி நில வளங்களையும், மக்களின் வாழ்க்கை முறைகளையும் இயற்கை அழகின்

வருணனைகளையும் முருகர் வழிபாட்டையும் தெள்ளத் தெளிவாக குறிஞ்சிப் பாட்டில் காணமுடிகிறது. ஆரிய அரசன் பிரகதத்தனைத் தமிழ் அறிவித்ததற்குக் கபிலர் பாடியது.

**மகளிர் வழிபாடு**

மாலை வேளையில் பெண்கள் முருகனை விளக்கேற்றி வழிபட்டனர். அதன் பின்பே மற்ற வேளைகளைச் செய்தனர் இதை இன்றும் கார்த்திகை மாதத்தில் தீபத்திருநாளாக முருகனைப் போற்றும் நாளாக தமிழர்கள் வழிபடுகின்றனர். இதை குறிஞ்சிப்பாட்டிலும் நெடுநல்வாடையிலும் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

*"இரும்பு செய் விளக்கின் ஈர்ந்திரி கொளீஇ*
*நேல்லும் மலரும் தூவக் கை தொழுது"* (நெடுதல் 42-43)

*"பூந்தொழ மகளிர் சுடர்தலைக் கொளுவி"* (குறிஞ்சிப் 224)

**வெறியாடுதல்**

சங்ககாலத் தமிழர்களிடம் தெய்வ நம்பிக்கை மிகுந்திருந்தது. நோய் நீங்கும் பொருட்டு தெய்வத்தை வேண்டுவர். மலர்களையும், வாசனைப் பொருள்களையும் கொண்டு தெய்வத்தை வணங்கினர்.

கடவுளுக்குப் பலியிட்டுப் பூசை செய்வதே வெறியாட்டுதல் ஆகும். நோய் ஏற்பட்டாலும், உடல்நலம் கெட்டாலும், தெய்வத்தின் குறையாகவே கருதிப் பூசை செய்வது குறிஞ்சி மக்களின் வழிபாடாக இருந்தது.

*"பரவியும் தொழுதும் விரவு மலர் தூயம்*
*வேறு பல் உருவின் கடவுட் பேணி"* (குறிஞ்சி 5-6)

தாய் தனது மகளின் மனதிலிருக்கும் பிரச்சனையால் உடல் மெலிந்திருப்பதைக் கண்டு வருந்தினாள். தலைவியோ அழகு நலன் கெட்டு அணிகலன்கள் கழலப் பெறுகிறாள். இந்நிலையைக் கண்ட தாய், தலைவிக்கு வெறியாட்டு நிகழ்த்துகிறாள் என்பதைக் கபிலர் பாடல்வழி ஒப்பு நோக்கத்தக்கது

**தொல்காப்பியத்தில் சான்று**

இலக்கண நூலாம் தொல்காப்பியத்தில் குறிஞ்சி மக்கள் வழிபடும் முறைகளைப் பற்றியும் காணப்படுகிறது. மேலும் குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் புகழ்பாடும். பாட்டும், கூத்தும் (குறவை கூத்து) இருக்கும் வரை தமிழும் வாழும். சிவனின் உடுக்கை ஒலியில் இருந்து தோன்றியது தமிழும், சமஸ்கிருதமும் என்று வீரசைவம் கூறுகிறது. ஆரியர்கள் சமஸ்கிருதமும், அகத்தியரால் தமிழும் பரப்பப்(காக்க)பட்டதாகக் கூறுகின்றனர். அகத்தியரின் முதன்மை சீடர் தொல்காப்பியரே தமிழை காக்க வந்த கடவுள் முருகன் என்றும், தமிழ்க் கடவுள் முருகன் என்றும் கூறுகிறார்.

*"சேயோன் மேய மைவரை உலகமும்"* (தொல், பொருள்.நூ.5)

குறிஞ்சி நிலமக்கள் வேடவர்கள், குரும்மை இனத்தவர்கள் தனது வெற்றியைக் கொண்டாடும் விதமாகவும் முருகனுக்குத் தனக்கு ஆற்றலை தந்ததிற்கு நன்றி செலுத்தும் வகையில் வெறியாடல் என்ற பெயரில் முருகனை வழிபட்டதாகக் கூறப்படுகிறது.

*"வெறியறி சிறப்பின் செவ்வாய் வேலன்*
*வெறியாட்டயர்ந்த காந்தளும்"* (தொல், பொருள், புறத் நூ.5)

**சமயம்**

"சமயம் - சமைக்கப்பட்டது சமயம் வகுக்கப்பட்ட கொள்கைப்படி வாழ நன்னெறிகள் அளிப்பது இறைவனோடு ஒன்றச் செய்வது" (சைவ சித்தாந்த அகராதி கழக வெளியீடு, அ.கி. மூர்த்தி). உலகில் வாழ்கின்ற எல்லோரும் ஒரே மூலத்திலிருந்து வந்தவர்கள் தாம் என்ற எண்ணத்தை வைத்துக் கொண்டு ஒருவருக்கொருவர் ஒத்தும் உதவியும் வாழவேண்டும் என்ற ஒரு நெறியைச் சமயம் என்று சொன்னார்கள் சமம் + இயம் = சமயம் சமயநெறி என்று ஆனது.

**இந்து மதத்தில் ஆறு சமயங்கள்**

சைவம் (சிவன்), சாக்தம் (சக்தி), வைணவம் (வி'ணு), சௌரம் (சூரியன்), காணபத்தியம் (கணபதி), கௌமாரம் (முருகன்) ஆகும். கருத்திற்கு ஒத்த தெய்வநிலை தேர்வு செய்து வழிபட்டபோது, காலத்திற்குக் காலம் இடத்திற்கு இடம் மக்கள் அறிவின் வளர்ச்சிக்கு ஏற்ப இறைவழிபாடு வேறுபட்டது. இயற்கையின் நிலைகளும் ஆற்றல்களும் மறைபொருளாக இருப்பதால் அவற்றைப் பொதுவாக மக்கள் உணர்ந்து கொள்ள வழியில்லை. எனவே, அம்மறை பொருட்களின் குறிப்பை உணர்த்தும் வடிவங்களை வணக்கத்திற்குரிய தெய்வநிலை தேர்வுகளாக்கிக் கொடுத்தனர்.

**கௌமார சமயம்**

மனத்தின் உயர்வை அறியும் முயற்சியில் அகம் நோக்கித் தவம் செய்த சித்தர்கள் மனத்தின் அடித்தளமே அறிவாக, இறைநிலையாகிய சிவமாக உணர்ந்தனர் பஞ்சதன் மாத்திரைகள் என்ற விளக்கத்தோடு மனமும் சக்தி என்ற விண்துகளான உயிரின் அலையே என உணர்ந்தார்கள். சிவம், சக்தி கூட்டால் இந்தப் பிரபஞ்சத்தில் *அழுத்தம், ஒலி, ஒளி, சுவை, மணம், மனம்* என்ற ஆறு நிகழ்ச்சிகள்தாம் உண்டு என்று உணர்ந்தனர். இப்பிரபஞ்ச நிகழ்ச்சிக்கும், உயிரினங்களின் இன்ப துன்ப உயர்வுகளாகவும் உள்ளன. இவையே மனித வாழ்வின் ஆதாரமாகவும் உள்ளன. அவையே தெய்வத்தன்மை என்பதை புரிந்து கொண்டனர். இந்த அழுத்தம், ஒலி, ஒளி, சுவை, மணம், மனம் என்பதே குமரக்கடவுளின் ஆறு முகங்களாக இருப்பதாக உணர்ந்தனர். இவர்களைக் கௌமார சமயத்தினர் என்று போற்றினர். இவர்களே பிரபஞ்ச பரிணாம நிகழ்வுகளை முழுமையாக புரிந்து கொண்டவர்கள்.

**நாத்திகத்தில் முருகன் வழிபாடு**

மனமே முருகன், மனதை இயக்குபவரும் முருகன். மனமான யூகசக்தியுடன் விளக்குபவன் முருகன். ஐந்தறிவிலிருந்து ஆறாவதாக சிறப்புற்றிருக்கும் மனிதன் அனுமான சக்தி என்னும் வியூக சக்தியே மிகப் பெரிய ஆற்றலாகக் கொண்டு விளங்குகிறான். இதையே அறிவு என்றும் புத்திசாலித்தனம் என்றும் சாதுரியம் என்ற இறைவனை அடையும் வழி என்றும் போற்றகின்றனர்.

ஒருவனின் மனதை முழுமையாகக் புரிந்துகொள்ள வேண்டும் என்றால் அவன் காந்த தத்துவத்தை விளங்கிக்கொள்ள வேண்டும். இப்பிரபஞ்சத்தில் முழுவதும் காந்த அலையாக நிறைந்துள்ளது. அந்த காந்தம் என்பது வேதாத்ரி மகரிசீ அவர்கள் இறைத்துகள் என்று கூறுகின்றார். இவ்விறைத்துகள் சுத்த வெளியிலிருந்து தோன்றியதாகக் கூறுகின்றார். இந்த இறைத்துகள்களின் தொகுப்பே உயிர் என்றும் கூறுகின்றார். இவ்வுயிர்த்துகள்கள் ஜீவ உடம்பை இயக்கும் பொழுது அது ஜீவகாந்தமாக மாறுகிறது. ஜீவகாந்தமே உயிரினங்களின் மனமாக இயங்குகிறது. ஐந்து புலன்களின் வழியாக ஜீவகாந்தம் இயங்கும் பொழுது அழுத்தம், ஒலி, ஒளி, சுவை, மணம் என்ற ஐயுணர்வாகவும், மூளையின் வழியாக இயங்கம் போது இவ்வைந்து உணர்வுகளையும் உணரக்கூடிய மனமாகவும் செயல்படுகிறது.

இவ்வாறு புலன்கள் மூலம் பெற்ற அனுபோக அனுபவங்களெல்லாம் மூளையில் புள்ளி அளவில் சுருங்கி, அங்கிருந்து காந்த அலையாக உடலில் ஓடிக் கொண்டிருக்கின்ற ஜீவகாந்தத் களத்தில் கலந்து விடுகின்றன. ஜீவகாந்தக் களத்தில் அடங்கியுள்ள அனுபோக அனுபவங்களின் தொகுப்பே மனதின் தன்மை எனப்படுகிறது. இம்மனதைச் செம்மைப்படுத்தும் போது ஒரு மனிதன் ஆறாவதறிவில் முழுமை பெற்று இறைநிலை என்ற வீடுபேறை அடைய முடியும் என்று ராஜயோகத்தைப் பின்பற்றும் ஞானியர்கள் நம்புகின்றனர். அக்காலச் சித்தர்களும் குண்டலினி யோக தவயோகிகளும் மனமானது இறைநிலையோடு ஒன்றுதலே வீடுபேறு என்று நம்பினர்.

**முடிவுரை**

“மனிதனே உன் அமைப்பே மாவண்டத்தின் சிறப்பு, மனம் என்ற பெரும் பொருளை மனதாலே உணர்ந்திடுவாய் ...” (மாக்கோலம்) என்று வேதாத்ரி மகரிஷி கூறுகிறார். முருக வழிபாடு என்பது எந்நிலையில் இருந்தாலும் மனதைச் செம்மைப்படுத்தும் ஒரு வழிமுறையே.

# முருகு இலக்கியங்களில் மெய்ப்பொருளியல் சிந்தனைகள்

முனைவர் **ஏ. யோகசித்ரா,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அறிஞர் அண்ணா அரசு மகளிர்
கலைக்கல்லூரி, வாலாஜாபேட்டை- 632513
வேலூர் மாவட்டம்.

ஆன்மாக்களாகிய உயிர்கள் பாசத்தினின்று விடுபட இயலாத நிலையில் உள்ளதை சித்தாந்த சாத்திரங்கள் உணர்த்துகின்றன. இந்நிலையில் பக்திப் பனுவல்கள் இறை இன்பத்தை ஏற்படுத்த முகிழ்ந்தன எனலாம். முருகப்பெருமானின் திருவருள் நிலையை, உணர்த்தத் தோன்றிய இலக்கியங்களில் காணப்படும், மெய்ப்பொருளியல் சிந்தனைகளை வெளிக்கொணரும் நோக்கில் இவ்வாய்வுக்கட்டுரை அமைந்துள்ளது.

**பக்தி நெறியின் புலப்பாடு**

கடவுளை அடைவதே வாழ்க்கையின் குறிக்கோள் என்பதும், பிறப்பிலிருந்து மூப்பு அடையும் வரையில் பல்வேறு பருவங்களில் புலனடக்கமில்லாமல் மக்கள் தங்கள் நெறியினின்று மாறுபட்டுச் சென்று விடுகின்றனர். இதனை உணர்த்த, இறைவனின் பெருமையை அறிந்துகொள்ளுதல் இன்றியமையாததாகும்.

இறைவன் எல்லாம் பொருள்களுமாய் நின்றும், உடலுயிர்போல வேறறக் கலந்து நின்றும் காட்சியளிப்பவன். இறைவனை அனுபவமாக உணர்வார்க்கு உள்பொருளாயும், அவ்வாறன்றி ஆராய்ந்துணர்வார்க்கு இல்பொருளாயும் விளங்குபவன். இவ்வாறான இறைவன் தன் பெருமையைக் கச்சியப்பர்,

*"காலமுங் கருமமுங் கடந்த தோர்பொருள்*
*மூலமுண் டோவென மொழிகின் றார்சிலர்*
*மேலுமுண் டோசில விளம்ப விஞ்ஞையின்*
*பாலுறு முணர்ச்சியே பரமென் பார்சிலர்"* (கந்த.பாயிரப்., பா.22)

என வியந்து போற்றியிருப்பது எண்ணத்தக்கது.

**பக்தியின் மறைபொருள் உணர்த்தல்**

கந்தபுராணத்துள் கந்தனது பேராற்றலையும், பெருமாட்சியினையும் பக்தி நுட்பத்தோடு இனிதே புலப்படுத்தியுள்ளார் கச்சியப்பர். காப்பிய நாயகனாகக் கந்தப்பெருமான் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத பெருஞ்சிறப்புடைய அறிவின் நாயகனாக விளங்குகின்றான். படைப்புக்கடவுளாகிய நான்முகனுக்கும், அகத்திய முனிவர்க்கும் பிரணவத்தின் உட்பொருளை உணர்த்திய ஞான

நாயகன் அவன். அவனைப் 'பால் மணம் மாறாப் பாலகன்' என எண்ணியவன் சூரபதுமன். அவனே கந்தவேளின் உண்மை நிலையை உணர்ந்து,

*"கோலமா மஞ்ஞை தன்னிற் குலவிய குமரன் தன்னைப்*
*பாலனென் றிருந்தேன் அந்நாள் பரிசிவை உணர்த்திலேன்யான்*
*மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்*
*மூலகா ரணமாய் நின்ற மூர்த்தியின் மூர்த்தி யன்றோ!*

(கந்தபுராணம் 4:13:433)

எனக் கூறி வியந்து நிற்றல் மனங்கொள்ளத்தக்கது.

**முக்திப்பேறு அருளல்**

வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதன் குறிக்கோள் அகப்பற்றாகிய யான் என்பதனையும், 'எனது' என்ற புறப்பற்றினையும் துறந்து, பரமன் திருவடியினை அடைக்கலமாக உயிர் அடைவதே யாகும். இதைக் கச்சியப்பர் பல இடங்களில் பாங்குடன் எடுத்துரைப்பதை அறியலாம். சான்றாக,

*"ஆதலின் நமதுசக்தி ய(று)முருகன் அவனும் யாமும்*
*பேதகம் அன்றால் நம்போற் பிரிவிவன் யாண்டும் நின்றான்*
*ஏதமில் குழவி போல்வான் யாவையும் உணர்த்தான் சீரும்*
*போதமும் அழிவில் வீடும் போற்றினார்க்கு அருளவல்லான்"*

(கந்தபுராணம் 1:14:19)

என வருஞ் செய்யள் முத்திப்பேறு அடையும் விதத்தை எடுத்தியம்புகிறது.

**கற்பனை நயம்**

காப்பியத்திற்குத் தேவையான அறிவார்ந்த கருத்துக்கள் பல இருப்பினும் அவற்றைக் கற்பவர் சுவைக்குமாறு கற்பனை மாட்சியுடன் கூறுதல் சிறப்பானதாகும். சூரபத்மனுடன் கந்தன் புரிந்திடும் போர்க்களத்தில் கந்தனது பெருமையைக்,

"காலமாய்க் காலமின்றிக் கருமமாய்க் கருமமமின்றிக்
*கோலமாய் கோலமின்றிக் குணங்களாய்க் குணங்களின்றி*
*ஞானமாய் ஞாலமின்றி அநாதியாய் நங்கட்கெல்லாம்*
*மூலமாய் இருந்தவள்ளல் மூவருமுகங் கொண்டுற்றான்"*

(கந்தபுராணம், 4:13:70)

ஏனத் திருமால் கூறிக்காட்டுதல் கற்பனை மாட்சி அடிப்படையில் சிந்திக்கத்தக்கது. திருமுருகனின் திருப்பேருருவத்தினைக் கண்டு வியந்து மயங்கிய சூரபதுமன் தன் வாக்கில்,

*"ஆயிரங்கோடி காமர் அழகெலாந் திரண்டொன்றாகி*
*மேயின எனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னில்*
*தூயநல் லெழிலுக் காற்றா தென்றிடின் இனைய தொலலோன்*
*மாயிரு வடிவிற்கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்.*

(கந்தபுராணம் 4:13:437)

எனக் கூறிக் காட்டுதல் கற்பனை மாட்சியினைப் புலப்படுத்துவதாகும். உயிர்கள் தம்மைப் பற்றி நன்கு உணராமல் உழன்று வாழ்கின்றன. அவற்றை நன்னெறியில் செலுத்திட ஆங்காங்கு பக்திச் சுவை ததும்பிய கருத்துக்கள் கூறப்படுகின்றன. எனினும் மெய்ப்பொருளினை நாடுவார்க்கு மெய்ப்பொருட் கூறுகள் கதை நிகழ்ச்சிகள் வாயிலாக உணர்த்தப்படுகின்றன. கந்தனது தோற்றமே கருணையை மகிழ்வித்தற் பொருட்டு என்பதும், உலக உய்திக்காகவே பக்தி இலக்கியங்கள் அமைந்து சிறக்கின்றன என்பது நிதர்சனமாகும்.

**பக்தியையும் முக்தியையும் அருளல்**

அருணகிரிநாதரின் அனுபவ உணர்த்தல்களே சந்தப் பாடல்களாக மிளிர்ந்தன. முருகப்பெருமானின் மெய்ஞான தவத்திற்கு ஆட்பட்டு, 12 ஆண்டுகள் கழித்து தவ நிலையில் இருந்து திருப்புகழ் பாடும் பேற்றுக்கு உட்பட்டார். முருகக்கடவுள், 'முத்தைத்தரு பத்தித் திருநகை' என்ற அடியை எடுத்துக் கொடுத்து பாடப்பெற்ற சிறப்பையுடையது திருப்புகழ். வயலூரை அடைந்த அருணகிரிநாதர், பொய்யாக் கணபதி சன்னதிமுன் 'கைத்தல நிறைகனி' என்ற திருப்புகழ் பாடலையும் பாடித்துதித்தார்.

**திருப்புகழின் சந்த இனிமை**

திருப்பகழ் பாடல்கள் கருத்தாழமும், சொல்லாழமும் இனிய சந்தமும் நிறைந்தவை எனலாம்.

"*முத்தைத்தரு பத்தித் திருநகை அத்திக்கிறை சத்திச்சரவண*
எனத் தொடங்கி,
*குலகிரி குத்துப்பட ஒத்துப் பொரவல பெருமானே.*" (திருப்புகழ் - 6)

என முடியும் பாடலில் வெண்முத்தை நிகர்த்த அழகான பல்வரிசையும், இளநகையும் அமைந்த தேவயானையின் தலைவனே, சக்திவேல் ஆயுதத்தை ஏந்தும் சரவணபவக் கடவுளே, மோட்ச வீட்டுக்கு ஒப்பற்ற ஒரு விதையாக விளங்கும் ஞான குருவே என்று துதிக்கும் முக்கண்ணார், பரமசிவனார்க்கு வேதங்களுக்கு முதன்மையான 'ஓம்' என்னும் மந்திரத்தை உபதேசித்து மும்மூர்த்திகளில் எஞ்சியுள்ள பிரம்மா, திருமால் ஆகிய இருவரும் முப்பத்து முக்கோடி தேவர்களும் அடிபணிய நின்றவனே, இராவணனுடைய பத்துத் தலைகளும் சிதறி விழுமாறு அம்பை விட்டு, ஒப்பற்ற மந்தர மலையான மத்தைக் கொண்டு பாற்கடலைக் கடைந்து ஒரு பகற் பொழுதை வட்டமான சக்ராயுதத்தால் இரவு ஆக்கி நண்பனாகிய அர்ச்சுனனுக்குத் தேர்பாகனாக வந்து தேரினைச் செலுத்திய பசுமையான நீலமேகவண்ணன் திருமால் பாராட்டும் பரம்பொருளே. பரிவோடு என்னைக் காத்தருளும் நாள் ஒன்றும் உண்டோ? தித்தித்தெய என்ற தாளத்துக்கு ஒத்து சிலம்புகள் அணிந்த நாட்டியப் பாதங்களை வைத்து காளிதேவி திசைகளில் எல்லாம் சுழன்று தாண்டவம் செய்யவும், கழுகளோடு பேய்கள் சோர்ந்து ஆடவும், எட்டுத் திசைகளிலும் உலகங்களைத் தாங்குகின்ற அஷ்ட பைரவர்கள் இந்த அழகிய கூடத்துக்கு

ஏற்ப, தாள ஓசையைக் கூறவும், போர்க் களத்தில் கிழக்கோட்டான்கள், வட்டமாகச் சுழன்று மேலே எழவும், விரோத மனப்பான்மையே கொண்ட அசுரர்களைக் கொன்று பலி கொடுத்து, அசுரர்குல மலை கிரௌஞ்சகிரி துளாக, தர்மவழிக்குப் பொருந்த, போர் செய்யவல்ல பெருமாளே, எனும் பாடல் அருணகிரிநாதர் முருக இறையருளால் பாடம்பெற்ற திருப்பாட்டாகும். சந்த கதியோடு விளக்கம் பெற்றதாகும்.

**சித்தாந்த கருத்துக்களின் பிழிவு**

மனிதப் பிறவியின் வாழ்வு நிலையானது பல பருவ நிலைகளைக் கடந்து, முக்திப் பேறுக்கு உரிய உணர்வு நிலைகளைச் சுட்டும் பாடல் 'கருவடைந்து' எனும் திருப்புகழ் பாடலாகும்.

*"கருவடைந்து பத்துற்ற திங்கள் வயிறிருந்து முற்றிப் பயின்று*
எனத் தொடங்கி,
*அருள்பரங்கி ரிக்குட்சி றந்த.... பெருமாளே* (திருப்புகழ் - 9)

என முடியும் பாடலில் கருவிலே சேர்ந்து, பத்து மாதங்கள் தாயின் வயிற்றில் இருந்து, கரு முற்றிப் பக்குவம் அடைந்து, கடைசியில் பூமியில் பிறந்து, குழந்தையின் வடிவத்தில் தோன்றிய, குழந்தையை அங்குக் கழுவியெடுத்து, சுரக்கும் முலைப்பால் ஊட்டுவிக்க, தரையிலே கிடந்தும், அழுதும், உள்ளங்கைகளைக் கொட்டியும், தவழ்ந்தும், நடைபழகியும், அரைநாண் கட்டியும், காலில் சதங்கையும், காதில் இட்ட அணியும், பொன் கொலுசு, தண்டை போன்றவைகளை அணிந்தும், முதிர்ந்து வளர்ந்து வயது ஏறி அருமையான பெண்களின் நட்பைப் பூண்டு, நோய்வாய்ப்பட்டு, அலைந்து திரிந்தது போதும். உனது அருள் கடாட்சத்தை எப்போது பெறுவேனோ? சூரியன், இந்திரன் வெற்றி வாகை அரசர்களையும், ஒப்பிலா திருமால் வயிற்றிலே பிறந்த கர் இனத் தலைவன், நெடிய நீலன் அக்கினியின் கூறாகவும், ருத்ர அம்சம் அநுமன் என்றும். ஒப்பில்லாத தேவர்கள் யாவரும் இன்னின்ன வகையில் வந்து இப்பூமியில் சேர்ந்திட, தன் அரிய படைக்குத் தலைவர் எனத் தேர்ந்து, அசுரர்களின் சுற்றமென்னும் கூட்டத்தை வெற்றி கொண்ட இராமன் புகழும் குணம் வாய்ந்த மருமகனே. பிரம்மாவையும் தண்டித்து உலகத்தையும் படைத்து, அன்புடன் அருள்பாலிக்கும் திருப்பரங்குன்றத்தில் வீற்றிருக்கும் பெருமாளே எனும் பாடலை ஆன்மாவின் (உயிர்களின்) இயல்புகளை விளக்கி, முக்திப்பேறு அடையும் வழியை நல்குவதாக அமைகிறது. உயிர்கள் பிறந்து மாயையில் உழன்று மீண்டும் இறையருளால் உய்த்து, முக்திப்பேறு அடையும் நிலைக்குச் செல்வது பதி, பசு, பாசம் எனும் முப்பொருள் மெய்யியலை உணர்த்துவது எண்ணுதற்குரியது.

**கந்தர் அநுபூதி பாடல்களில் பொருண்மை**

பேரின்ப உணர் நிலையைச் சுட்டி அருணகிரிநாதர் இறையருளால் ஆட்கொள்ளப்படுதலை இப்பாடல் வழி உணர்த்தியுள்ளமை கருதத்தகும்.

*"உல்லாச நிராகுல யோக இதச்*
*சல்லாப விநோதனும் நீ அலையோ?*
*எல்லாம் அற, என்னை இழந்த நலம்*
*சொல்லாய், முருக சுரபூ பதியே"* (கந்தர் அநுபூதி-2)

உல்லாசம் மங்காத உள்ளக் களிப்பும் நிராகுல.....துன்பமற்ற நிலையும் யோக.... யோக சொருபனும், இத....நன்மை பயப்பவனும், சல்லாப விநோதனும்...... அடியார்களிடம் இனிமையாகவேபேசி திருவிளையாடல் புரிபவனும் நீ அலையோ......நீ தானே முருகா.....எல்லா அற..... உரை அவிழ் உணர்வு அவிழ, உயிர் அவிழ என்னை இழந்து அனுபவிக்கும் பேரின்ப நிலையைச் சொல்லாய், மற்றவர்களுக்கு நீயே எடுத்துச் சொல்லவேண்டும்.

**ஐம்பூதங்களும் நீயே எனல்**

*வானோ? புனல் பார் கனல் மாருதமோ?*
*ஞானோ தயமோ? நவில் நான் மறையோ?*
*யானோ? மனமோ? எனை ஆண்ட*
*இடம்தானோ? பொருளாவது சண்முகனே,* (கந்தர் அநுபூதி-3)

சண்முகனே......ஆறுமுகக் கடவுளே......பொருளாவது.....நித்திய அழிவில்லாத பொருள் என்பது எது? வானோ.......ஆகாயமோ? புனல்...... தண்ணீரோ..... பாரோ.....நிலமோ?......கனலோ......நெருப்போ, மாருதமோ...காற்றோ?..... ஞானோதயமோ....... அறிவு தோன்றும் இடமோ?........நவில் நான் மறையோ?........ஓதப்படும் நான்குவேதங்களோ? யானோ.....நான் ஆண்ட இடம் தானோ..... என்னை ஆட்கொண்ட இடம்தானே, என பஞ்சபூதத்தினைச்சுட்டி மனத்தினை ஆட்கொண்டவிதத்தின் நிலை அறியப்படுகிறது.

**தொகுப்புரை**

சைவ ஆகம மெய்ப்பொருளியல் நுட்பங்களைக் கூர்ந்து நோக்கும் தன்மை கந்தபுராணத்துள் நிரம்ப உள்ளன. முருகப்பெருமானது பேராற்றலையும், பெருமாட்சியினையும், கற்பவர்கள் புரிந்து கொள்ளும் சுவையான உத்தியாக 2532 கிளைக்கதைகள் உள்ளன. கச்சியப்பருக்கு முருகப்பொருமான் திகடச் சக்கரச் செம்முகனமந்துளான்' என்று அடியெடுத்துக் கொடுத்தமை எண்ணுதற்குரியது. அருணகிரிநாதர் திருவருணை திருக்கோயிலில் சந்தங்களால் சிறப்புப்பெற்ற திருப்புகழ் பாடல்களைப் பாடிய பெருமை முருகப்பெருமானின் திருவருளே யாகும். அருணகிரிநாதருக்குச் 'சும்மா இரு சொல்லற' என்னும் மௌன வழியையும் கூறி 'முத்தைத்தரு பத்தித் திருநகை' என அடியெடுத்துக் கொடுத்த பெருமையும் இறைப்பேற்றினால் நிகழ்ந்தது எனலாம். முருக இலக்கியங்கள், சைவ ஆகம மறைபொருளை உணர்த்தி, பக்தி மார்கத்தின் நிலையில் முக்திப்பேற்றுக்கு உரியதை நல்குவன எனலாம், பதி, பசு, பாசம் எனும் முப்பொருளை அறிந்து, மெய்ஞானத்தில் திளைத்து முருகப்பெருமானால் ஆட்கொள்ளப்படுவது திண்ணம்.

# அருணகிரிநாதரின் திருப்புகழில் முருகப்பெருமான்

முனைவர் பீ ரகமத்பீ
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
பாரதியார் கலை அறிவியல் கல்லூரி,
தேவியாக்குறிச்சி, ஆத்தூர் வட்டம்,
சேலம் மாவட்டம் -636112.

எம்பெருமான் கந்தனின் அருள்பெற்ற அருணகிரிநாதர் முருகப் பெருமானின் மீது உருகி உருகித் திருப்புகழைப் பாடியுள்ளார். திருப்புகழைப் பாடப்பாட வாய் மணக்கும் எண்ணமெல்லாம் சிறக்கும். வாழ்வு ஒளி வீசும். சிந்தை தெளிவுறும், நினைக்குந்தோறும் உள்ளமெல்லாம் இனிக்கும். அருணகிரியாரின் முருகனின் பெருமைதனைப் படிக்கப் படிக்க படித்தவருக்கு ஏற்றமுண்டாகும்.

*'பரவிடு னனுதினம் மனமகிழ் வுறவணி*
*பணிதிகழ் தனிகையி லுறைவோனே*
*பகர்தரு குறுமகள் தருவமை வனிதையு*
*மிருபுடை யறவரு பெருமாளே'*

என்ற பாடல் வரிகளில் உலகில் உள்ள சகல உயிர்களும், தேவர்களும், முனிவர்களும், திருத்தணிகை மலையில் வந்து முருகனை நாள்தோறும் துதி செய்து வழிபடுகிறார்கள். எப்பொழுதும் பக்தி மணம் கமழும் திருத்தணிகை மலை என்றும் திருப்பாற்கடல் கடைந்தபோது வாசுகி என்ற நாகராஜன் கயிறாக இருந்ததால் அவனது உடம்பு புண்ணாகியது. அதனால் வாசுகியெனும் நாகராஜன் திருத்தணி மலைக்கு வந்து முருகக் கடவுளை வேண்டி உடலில் ஏற்பட்ட புண் நீங்கப் பெற்றான் என்று பாடியுள்ளார்.

*'விஷ ஐந்து தலையரவு தொழுகின்ற தணிமலை'* (திருப்புகழ்)

என்று முலைப்புளக திருப்புகழிலிலும் பாடியுள்ளார். வள்ளியும் தெய்வயானையும் முருகப் பெருமானின் வலப்புறமும், இடப்புறமுமாக விளங்க திருத்தணியில் முருகவேள் எழுந்தருளியிருக்கின்றார். வள்ளி இச்சா சக்தி, தெய்வயானை கிரியா சக்தி என்று பொருள் கொண்டால் நமக்கு வேண்டிய நலன்கள் இரண்டு இகபரம் ஆகும். இகத்தில் உள்ள நலன்கள் அனைத்தும் இம்மண்ணுலகில் தோன்றி வளர்ந்த வள்ளியம்மையார் மூலம் அப்பன் அருளுவான். பரத்துக்குரிய நலன்கள் அனைத்தையும் விண்ணுலகில் தோன்றி வளர்ந்த தெய்வயானையம்மையாரைக் கொண்டு அருளுவான் என்றும் மூன்றாவது நலமாகிய முக்திப் பேற்றினைக் கையில் வேல் தாங்கிய முருகப் பெருமான் அருளுவான் என்றும் அருணகிரிநாதர் பாடியிருப்பது வியப்புற வைக்கிறது.

*'இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்*
*இடுக்கினை யறுத்திடு மெனவோதும்*
*இசைத்தமிழ் நடத்தமி ழெனத்துறை விருப்புட*
*னிலக்கண இலக்கிய கவிநாலுந்*
*தரிப்பவ ருரைப்பவர் நினைப்பவர் மிகச்சக*
*தலத்தினில் நவிற்றுத லறியாதே*
*தனத்தினில் முகத்தினில் மனத்தினி லுருக்கிடு*
*சமர்த்திகள் மயக்கினில் விழலாமோ?*

திருத்தணிகை முருகப் பெருமானே அயலூர் செல்பவர்கள் கையில் இருப்பாக அவல் கொண்டு செல்வார்கள். அது அவர்களின் பசிக்கு உணவாக உதவும். அது போன்று திருப்புகழானது அன்புடன் ஓதுகின்ற அடியார்களது துன்பங்களை நீக்குகின்றது என்ற உண்மையை எடுத்துக் கூறுகின்ற இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழை இலக்கண இலக்கியத்துடன் நான்கு கவிகளால் அன்புடன் உள்ளத்தில் பதிப்பவர்களும், வாக்கால் பாடுபவர்களும், மனத்தால் நினைக்கும் அன்பர்களை இவ்வுலகில் பாராட்டிப் புகழ்வதைவிட, தனத்தாலும், முத்தாலும் மயக்கி உள்ளத்தை உருக்குகின்ற ஆற்றல் படைத்த பொது மாதர்களின் மயக்கமாகிய படுகுழியில் விழுந்து விடுவேனோ? மாட்டேன் என்று அருணகிரிநாதர் பாடியிருப்பது சிறப்பு. மேலும் உலகத்தில் அருட்தமிழ் அடியவர்கள் வாடி வருந்துவதையும் அருணகிரியார் அழகாகக் குறிப்பிட்டுள்ளார்.

*'உடையவர்க ளேவ ரெவர்களென நாடி*
*உளமகிழ ஆக கவிபாடி*
*உமது புகழ் மேரு கிரியளவு மான*
*தெனவுரமு மான மொழிபேசி*
*நடைபழகி மீள வறியவர்கள் நாளை*
*நடவுமென வாடி முகம் வேறாய்*
*நலியுமுன மேயு னருணவொளி வீசு*
*நளினஇரு பாத மருள்வாய்'*

என்ற திருத்தணிகைத் திருப்புகழில், திருத்தணிகை மலையின் மீது உலாவுகின்ற பெருமிதம் உடைய முருகா, செல்வம் படைத்தவர்கள் யார்? யார்? என்று தேடிக் கொண்டு போய் அவர்கள் மனம் மகிழும்படி, ஆசு கவிகள் பாடியும், உங்களது புகழ் மேருகிரிபோல் அளவில்லாதது என்று வலிமையான புகழ்மொழிகளைக் கூறியும், ஓயாமல் நடந்து, நடந்து சென்றும், பழைய படியே திரும்பி வா, மறுபடி வா என்று திருப்பி அனுப்புவார்கள். அந்தப் புலவர்கள் அகமும், உடலும், மனமும் நொந்து வருந்துவதை விட எம் பெருமானே, முருகா, அப்பனே, பெருமாளே, சிவந்த ஒளி வீசுகின்ற தாமரை போன்ற உன் திருவடிகளைத் தந்தருள்க! என்று அருணகிரியார் இறைஞ்சுகிறார். முருகனிடம் தன் விருப்பம் மட்டுமல்லாமல் மற்றவருக்காகவும் இறைஞ்சினாலும் முருகப் பெருமான் அருள்புரிவார் என்ற நம்பிக்கையை அருணகிரியார் குறிப்பிட்டுள்ளார்.

அருணகிரியார் முருகனை எண்ணமெல்லாம் நிறைத்துப் பாடும் ஒவ்வொரு திருப்புகழிலும் சண்முகனின் பெருமைதனை மணம் கமழ கமழப் பாடியுள்ளார்.

*'உய்யஞா னத்துநெறி கைவிடா தெப்பொழுது*
*முள்ளவே தத்துறைகொ குணர்வோதி*
*உள்ளமோ கத்திருளை விள்ளமோ கப்பொருளை*
*உள்ளமோ கத்தருளி வுறவாகி*
*வையமே ழுக்குநிலை செய்யுநீ திப்பைழய*
*வல்லமீ துற்பலச யிலமேவும்*
*வள்ளியா நிற்புதிய வெள்ளில்தோய் முத்தறி*
*கிள்ளிவீ சுற்றுமலர் பணிவேனோ*
*பையரா வைப்புனையு மையர்பா கத்தலைவி*
*துய்வே ணிப்பகிர திகுமாரா*
*பையமால் பற்றிவளர் சையமேல் வைக்குமுது*
*நெய்யனே சுற்றியகு றவர்கோவே*
*செய்யுமால் வெற்புருவ வேய்யவேல் சுற்றிவிடு*
*கையமால் வைத்ததிரு மருகோனே*
*தெய்வயா னைக்கிளைய வெள்ளையா னைத் தலைவ*
*தெய்வயா னைக்கினிய பெருமாளே'*

என்ற திருத்தணிகை திருப்புகழில் படமெடுத்தாடும் நாகத்தை அணிகலனாக அணிந்த சிவபெருமானுடைய இடப்பாகத்தில் உள்ள உமையம்மைக்கும், ஜீய சடாமுடியில் உள்ள கங்காதேவிக்கும் குமாரரே, மெல்ல உமக்குப் பிடித்த வுள்ளிமலை மீது முதிர்ந்த பாசம் கொண்டவரே, மலைநில குறமக்களுக்குத் தலைவரே, கிரௌஞ்ச மலையே உருகும்படி வேலெறிந்தவரே, அன்பான இலக்குமி தேவிக்கு மருமகனே, தெய்வத் தன்மையுடைய விநாயகருக்கு இளையவரே, ஐராவத யானைக்கு அரசரே, தெய்வயானை யம்மைக்கு இனியவரே, பெருமிதம் உடையவரே, பிறவித் துன்பத்தினின்றும் அடியேன் உய்யும் பொருட்டு ஞான நெறியை எந்த நாளும் கைவிடாது வேத நூல்களை விடாது ஓதி, எனக்குள்ள மயக்க இருள் நீங்க, விரும்பத்தக்க மெய்ப்பொருளைக் கருதும் விருப்பத்தை அடியேனக்கு, அருள்புரிக. உம்மை உறவு கொண்டு ஏழுலகங்களையும் நீதியை நிலைநாட்டிக் காப்பவனே, பழமையான திருவல்லத்திலும் நீலோற்பல கிரியான திருத்தணிகையிலும் வாழும் கருணையனே, வில்வ இலை உண்டு உன்னைப் பூஜித்து உமது மலரடிகளையே பணிய மாட்டேனா? முருகா, முருகா என்று உருகி உருகிப் பாடியுள்ளார்.

மூன்றாவது படை வீடாகிய திருவாவினன்குடி (பழநி) பற்றிய திருப்புகழில் எம்பெருமான் அழகன், அறிவன், காப்போனாகிய முருகனை,

*'நாத விந்துக லாதீ நமோநம*
*வேத மந்த்ரசொ ரூபா நமோநம*
*ஞான பண்டித நாமீ நமோநம வெகுகோடி*
*நாத சம்புகு மாரா நமோநம*
*போக அந்தரி பாலா நமோநம*
*நாக பந்தம யூரா நமோநம பரசூரர்*
*சேத தண்டவி நோதா நமோநம*
*கீத கிண்கிணி பாதா நமோநம*
*தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ*
*தீப மங்கள ஜோதீ நமோநம*
*ஜீய அம்பல லீலா நமோநம*
*தேவ குஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்*

என்ற திருப்புகழில், நாதங்களுக்கெல்லாம் மூலகாரணமானவனே நமோ நம போற்றி போற்றி, வேத மந்திரமாக இருப்பவனே போற்றி போற்றி, அறிவில் சிறந்த குருவானவனே போற்றி போறிற, நாத வடிவான சிவனின் குமரனே போற்றி போற்றி. அழகு ரூபமான உமாவதியின் பாலனே போற்றி போற்றி, நாக ஆபரணத்தையும் மயில் வாகனத்தையும் கொண்டவனே போற்றி போற்றி. கொடும் அசுரர்களை அடியோடு அழித்தவனே போற்ற போற்றி, குளிர்ச்சியான ஒலியெழுப்பும் கிண்கிணி எனும் பாத சதங்கை அணிந்தவா போற்றி போற்றி, தீரனே, சூரனை சம்ஹாரம் செய்தவனே போற்றி போற்றி. ஜீயவனே, எல்லோருக்கும் பொதுவானவனே லீலைகள் புரிபவனே போற்றி போற்றி, தேவர்களின் செல்லப்பிள்ளை போன்ற முருகனே போற்றி போற்றி .

*'அலைபுனல் தலைசூடிய பசுபதி மகனாகிய*
*அறுமுக் வடிவே அருள் குருநாதா*
*அசுரர்கள் குடியேகெட அமரர்கள் பதியேபெற*
*அதிரிடும் வடிவேல்விடு மதிசூரா*
*தலையய னறியாவொரு சிவகுரு பரனேயென*
*தரணியி லடியார்கண நினைவாகா*
*சகலமு முதலாகிய அறுபதி நிலைமேவிய*
*தடமயில் தனிலேறிய பெருமாளே'*

என்ற பாடலடிகள் ஆறு திருப்பதிப் பற்றிய 455 திருப்புகழில் கங்கையைத் தன் தலையில் சூடிய சிவபெருமானின் மகனே, ஆறுமுகம் கொண்ட அழகனே, அடியவருக்கு அருள்தரும் குருவானவனே, தேவர்களை அசுரர்களிடமிருந்து காத்து தேவலோகத்தை தேவர்களுக்கு வழங்கியவனே, பகைவர்களைக் குத்திக் கிழித்திடும் வேலினைக் கையிலேந்திய நிலவு போன்ற ஒளி வீசும் சூரனே, தலை, முடிகாண முடியாத அளவிற்கு உயர்ந்த பரம்பொருளாகிய சிவனின் மகனே, இவ்வுலகினில் அடியவர் கூட்டம் பெருகி நின்னை நித்தம் நினைத்து வணங்கி வருகிறார்கள். உலகில் உள்ள அனைத்திற்கும் முதல்வனே, அறுபடை வீடமர்ந்த முருகனே, அழகு மயில் வாகனனே,

பெருமாளே என்றெல்லாம் பாடி இருப்பது மனதை உருகிக் கனியச் செய்யும்படி அமைந்துள்ளது.

*'கனைத்த திர்க்குமிழ் பொங்கு கார்க்கட லொன்றினாலே*
*கறுத்த றச்சிவத் தங்கி வாய்த்தெழு திங்களாலே*
*தனிக்க ருப்புவிற் கொண்டு வீழ்த்தச ரங்களாலே*
*தகைத்தொ ருத்தியெய்த் திங்குயாக்கைச ழுங்கலாமோ*
*தினைப்பு னத்தினைப் பண்டு காத்தம டந்தைகேள்வா*
*திருத்த ணிப்பதிக் குன்றின் மேற்றிகழ் கந்தவேளே*
*பனைக்க ரக்கயத் தண்டர் போற்றிய மங்கைபாகா*
*படைத்த ளித்தழிக் குந்த்ரி மூர்த்திகள் தம்பிரானே'*

என்ற திருத்தணிகைத் திருப்புகழில் முன்னாள் தினைப்புனங்காத்த வள்ளிநாயகியின் கணவரே, திருத்தணியென்ற திருப்பதின் மீது திருவுருவுடன் நின்றருளும் கந்தக் கடவுளே, பனை போன்ற துதிக்கையையுடைய ஐராவத யானைக்கு உரியவரான தேவவளர்த்த தெய்வயானை அம்மையை ஒரு பக்கத்தில் கொண்டவரே, படைத்துக் காத்து ஒகுக்கும் மும்மூர்த்திகளுக்கும் தனிப்பெருந் தலைவரே, ஒலித்து அதிர்ந்து பொங்குகின்ற இந்தக் கருங் கடலாலும் கோபித்து மிகச் சிவந்த நெருப்பைப் போல உதிக்கின்ற சந்திரனாலும், ஒப்பற்ற கரும்பு வில்லை ஏந்தி மன்மதன் ஏவுகின்ற மலர்க்கணையாலும், வாடித் தனித்த இவன் இளைத்து இங்கு உடம்பு சோர்வு அடையலாமோ? முருகா அருள்வாய் என்று இறைஞ்சுகிறார் அருணகிரியார்.

அருணகிரிநாதர் தான் தவறான பாதையில் சென்று, திருந்தியபின் முருகனால் காப்பற்றப்பட்டவர். முருகனை எண்ணித் தவமிருந்து முருகனருளால் திருப்புகழ் பாடியருளினார். முருகன் மீது அவர் எத்துணைப் பற்றுக் கொண்டவர் என்பதை அவரது ஒவ்வொருத் திருப்புகழிலும் வெளிப்படுத்தியுள்ளார். திருத்தணிகைத் திருப்புகழைப் படிக்கப் படிக்க வாய் மட்டும் மணக்காது, நம் மனம், வாழ்க்கை, செயல்கள், உடல் உறுப்புகள் ஒவ்வொன்றும் செம்மையுறும், சீர்மைப் பெறும், சிறப்புப் பெறும். மனம் குளிர்ச்சி பெறும். நம்மைச் சுற்றி கருணை வழிந்தோடும். கெட்ட காரியங்கள் எதுவும் செய்யத் தோன்றாது. நன்மை மட்டுமே புரியத் தோன்றும். வாழ்வே வளம் பெருகும்.

# அகநானூறு மற்றும் பரிபாடலில் முருக வழிபாடு

முனைவர் **ஜெ. ரஞ்சனி,**
உதவிப் பேராசிரியர், கல்வியியல் துறை,
சாஸ்த்ரா பல்கலைக்கழகம்,
திருமலைசமுத்திரம், தஞ்சாவூர்.

சமூக வாழ்வு மேம்பாடு அடைய சமய வழிபாடு அவசியம். சமயம் மட்டுமல்லாமல் அரசன், சான்றோன், பெரியோன் ஆகியவர்கள் வழிபட வேண்டும் என்ற பண்பாட்டு நெறிகளை சொல்லித் தருவது சமயம் ஆகும்.

வழிபாடு என்பது இந்து மதத்தில் யாகம் செய்வதின் தொடக்கமாக இருந்தது. இவ்வழிபாட்டில் வேள்வி, வேதம் முதலியவற்றைச் செய்து கடவுளை வழிபட்டனர். குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த பழங்குடியினர் முருகனை வழிபட்டனர். எட்டுத்தொகை நூல்களான அகநானூறு, பரிபாடலில் முருக வழிபாட்டினை நாம் காணமுடிகிறது. பரிபாடலில் எட்டுப் பாடல்கள் செவ்வேள் பற்றிய பாடல்களாகும். முறையே கடுவனிள வெயினனார், ஆசிரியன், நல்லந்துவனார், குன்றம்பூதனார், கேசவனார், நல்லாசியார், நப்பண்ணார், நல்லச்சுதனார் போன்ற புலவர்கள் பாடியுள்ளனர். குன்றம்பூதனார் இருபாடல்களைப் பாடியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**அகநானூற்றில் முருகன் வழிபாடு**

முற்காலத்தில் தமிழ்க் கடவுளாய் முருகனை வழிபட்டனர். முருகன் வழிபாட்டினை வேலன் வெறியாட்டுச் செய்தியின் மூலம் நாம் அறிய முடிகின்றது. காதல் வயப்பட்ட தலைவியின் மேனி மாற்றத்தினைத் தீர்க்க வேலன் வெறியாட்டு என்ற நிகழ்ச்சியினை நடத்தி முருகனை வழிபடுவர் என்பதைச் சங்க இலக்கியம் நமக்கு மிகுதியாக காட்டுகின்றன. முருகன் வழிபாடு பற்றி அகநானூறு குறிப்பிடும்போது,

*"சூர்மருங்கு அறுத்த சுடர்இலை நெடுவேல்*
*சினம்மிகு வேந்தன் தண்பரங் குன்றத்து"* (அகம் : பா.59)

என்ற வரிகளில் முருகன் தெய்வப் பண்புகள் அன்றி, வீரப்பண்பு உடையவனாக திகழ்கிறான் என்பதைக் காட்டுகின்றது.

**முருகன் வலிமை**

*"புரிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு*
*முருகன் அன்ன சீற்றத்துக் கருந்திறல்"* (பா.68)

என்ற அகநானூற்று வரிகளில் ஒலியை யொத்தக் கடுஞ்சீற்றத்துடனும் பகைவரை எதிர்க்கக் கூடியவனாகிய முருகனின் வலிமையை இவ்வடிகள்

தெளிவுறுத்துகின்றன. கடல் அலைகள் வந்து மோதுகின்ற மதில் சுவர் சூழ்ந்த செந்தில் கோயிலில் வீற்றிருக்கும் முருகப் பெருமான்,

*"படியோர் தேய்த்த பல்புகழ் தடக்கை*
*நெடுவேள் ..........."* (அகம். பா.22)

பகைவரை அழித்த வலிமை மிக்க கரங்களை உடைய நெடுவேளாகிய முருகனை,

*"முருகன் சீற்றத்து குரிசில்"* (பொருள் - 181-வது வரி)

என்று குறிப்பிடுகின்றது.

**வெறியாட்டயர்தல்**

தமிழரின் வழிபாட்டு முறையில் மிகவும் பழமையானது வெறியாட்டு என்பதாகும். மனிதர் மேல் தெய்வர் ஏறி வருவதுண்டும் என்ற நம்பிக்கையில் இருந்து உருவானது ஆகும். சங்க காலத்தில் முருகனோடு தொடர்புடையதாக இவ்வெறியாடல் திகழ்ந்தது. முருகனுக்குரிய வேலினைக் கையில் ஏந்தி ஆடக் கூடியவன் வேலன் என்றழைக்கப்பட்டான். வெறியாட்டயர்வோன் முருகனை வேண்டி தன் குலத் துன்பத்தை போக்க சொல்லுவான்,

*"பெண்போழ் கடம்பொடு குடி இன்சீர்*
*ஐதுஅமை பாணி இரிஇ கைபெயரா*
*செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்*
*வெறிஅயர் வியன்களம் பொற்ப"* (அகம் : பா.98)

வெறியாடும் வேலன் கடம்பமலரைச் சூடிக் கொள்வான். இனிய சீர் அமைந்த தாளத்தோடு கூடிய முருகக் கடவுளின் பெரும் புகழினைக் கூறி ஆடுவான். வெறியாடும் களம் அகன்றதாகவிருந்தது. அக்களத்தின் கண் செந்நெல்லின் வெண் பொறிகள் சிதறிக்கிடந்தன என்று கூறப்படுகின்றது.

**முருகனுக்கு உயிர்பலி கொடுத்தல்**

தான் கலந்து கொள்ளும் போரில் தன் பக்கம் வெற்றி பெற விழைந்த வீரன் ஒருவன் தீயை வளர்த்தான். தனது பக்க வெற்றிக்காக அத்தீயில் தன்னையே அவிப்பலியாக்கிக் கொண்டு விழுந்து உயிர் நீத்தான். உயிர்ப்பலி கொடுத்துத் தெய்வத்தை வழிபாடு செய்யும் வழக்கம் இருந்து வந்துள்ளது. மேலும் வெறியாட்டினைக் கூறும்போது,

*"கடியுடை வியல்நகர்க் காவல் கண்ணி*
*முருகுஎன வேலன் தருஉம்*
*பவருமாப் பயந்தன்றால் நமக்கே"* (அகம்., பா.232)

என்ற வரிகளினாலும்,

*"மெய்ம்மலி உவகையான் அந்நிலைகண்டு*
*முருகுஎன உணர்ந்து முகமன் கூறி*
*உருவச் செந்தினை நீரோடு தூவி தூஉய்"* (அகம்., பா.272)

என்ற வரிகளாலும்,

*"உருகெழு சிறப்பின் முருகுமனைத் தழிஇக்*
*கடம்பும் கணனும் பாடி நுடங்குடி"* (அகம்., பா.138)

என்ற வரிகளாலும் வேலன் வெறியாட்டு என்ற முறையில் பண்டையத் தமிழ் மக்கள் முருகனை அதிகமாக வழிபட்டு இடையிறாத தெய்வ விழாக்களும் நிகழ்த்தி ஆடிப்பாடியும் பலிகொடுத்தும் இரவில் வழிபாடு நிகழ்த்தினர் என்ற செய்திகளை அறிய முடிகின்றது.

**பரிபாடலில் முருக வழிபாடு**

பரிபாடல் செவ்வேள் முருகனை அதிக அளவில் போற்றும் நூலாகும். பண்டையத் தமிழர் முருகனிடம் உலகியலை வேண்டாமல் அருளையும் அன்பையும் அறத்தையும் வேண்டினார்கள் என்பதைப் பரிபாடல்,

*"யா அமிரப்பவை*
*பொருளும் பொன்னும் போகமும் மல்ல நின்பால்*
*அருளு அன்பு மறனு மூன்றும்*
*உருளிணர்க் கடம்பி னொலிதா ரோயே"* (பரிபாடல்-578-81)

**உருவச் சிறப்பு**

கந்தவேளின் உருவ அழகைப் பரிபாடலில் கடுவனிளவெயினனார் செவ்வேளின் நிறம் கதிரவன் ஒளியை ஒத்தது என்று கூறுவார். தலை, கைகள் இளங்கதிர் மண்டிலம் போன்ற முகத்தினை உடையவர் கந்தவேல். (பரி 5:10), கந்தவேல் தன் பன்னிரு கைகளிலும் பன்னிரு படைகளை கொண்டுள்ளார் (பரி.,5:63-68), அவர்தம் முந்நான்கு தோளும் முழவினை ஒக்கும் (பரி., 5:11), முருகன் பேரறிவையும், பேராற்றலையும் புலப்படுத்தவே ஆறு தலைகளையும், பன்னிரு கைகளையும் உடையவராக அவரை உருவகம் செய்துள்ளனர் என கூற முடிகின்றது (மாணிக்கவாசகர் வரலாறும், காலமும் தொகுதி, உ.வ.487).

**படைகள், கொடி, ஊர்தி**

செவ்வேளைப் பற்றிப் பாடிய புலவர்கள் அனைவரும் முருகனது படைகள், கொடி, ஊர்தி பற்றிய சிறப்புகளை அழகுற எடுத்துரைக்கின்றனர்.

கந்தவேளைப் பாடிய புலவரெல்லாம் அவர்தம் வேற்படையினையும், சூரபதுமனை அழித்ததையும் தவறாது குறிப்பிட்டுள்ளனர். வேல் பரிபாடலில் "சுடர்ப்படை" (14-18) ஏந்திலை (17-2) எனப் பல பெயரால் அழைக்கப்படுகின்றது. பல தேவர்கள் வழங்கிய பதினொறு படைகளும் முருகனிடம் இருந்தது

(பரி., 5:63-68). சேவலும் மயிலும் எழுதிய கொடிகளே முருகனுக்கு உள்ளன (பரி., 17–48). யானையையும், மயிலையும் ஊர்தியாக உடையவர் செவ்வேள் (பரி.,19:28, 8–67). முருகனுடைய யானை ஊர்தியின் பெயர் “பிணி முகம்” என்பதையும் அறிய முடிகின்றது (பரி., 5-2, 17–49).

**வெறியாட்டு**

வெறியாட்டத்தைப் பரிபாடல் விரைவாகக் கூறவில்லை. கந்தவேளைப் பாடிப் பரவும் வேளைப் பற்றிக் கூறும்போது சொல்லளவில், வெறியாட்டம் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. (பரி.,5: 13–15, 9:44)

**முடிவுரை**

நெடுந்தொகையில் வெறியாட்டு நிகழ்வின் மூலம் வேலனை வழிபட்ட முறை காணப்படுகின்றது. பரிபாடலில் முருகனின் உருவ வழிபாடு, அழகுணர்வு, அறுபடை வீடு, முருகன், சூரபதுமனை அழித்த வரலாறு முதலியவை விளக்கப்பட்டுள்ளன. பரிபாடலில் கந்தவேள் அனைவருக்கும் அருளும் தெய்வமாகவும், சூரனை அழித்த தேவசேனாதிபதியாகவும் சித்தரிக்கப்பட்டு உள்ளமை நோக்கத்தக்கது.

# நற்றிணையில் 'முருகும் களவும்'

**அ. ரபேக்கா ஏஞ்சல்,**
ஆய்வியல் நிறைஞர்,
அயல்நாட்டுத் தமிழ்க் கல்வித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 10.

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை பத்துப்பாட்டில் முதன்மை பெறுவது எட்டுத்தொகை. இவ்எட்டுத்தொகையில் *'நல்ல'* என்ற அடைமொழி பெற்று முதன்மையாக வருவது நற்றிணை. சங்க இலக்கியங்கள் அனைத்தும் தமிழரின் வாழ்வியலை வெளிப்படுத்துவன. இவ்விலக்கியங்களை அகம், புறம் என்ற பாகுபாட்டில் பிரித்துணர்ந்து காதலை அகத்திலும், வீரத்தைப் புறத்திலும் காணலாம். *'கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய் முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப'* என்ற தொல்காப்பிய நூற்பா திணையின் அடிப்படையில் அகத்திணைக்கு இலக்கணம் வகுக்கிறது. இதன் அடிப்படையில் நற்றிணை பாடல்களில் களவு ஒழுக்கம் இடம்பெறுகிறது. களவு ஒழுக்கத்தில் தலைவன் பிரிந்து செல்லும் காலத்தில் வேலாடுவது வழக்கம். 'முருகு' என்ற சொல் முருகக்கடவுளைக் குறித்து வருவதையும் களவு காலத்தில் முருகனை வழிபடுதல் விதத்தினையும், தலைவனைக் கூறுமிடத்திலும், உவமிக்கும் இடத்தினையும் வெளிக்கொணர்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### சங்க காலத் தமிழ்க்கடவுள் 'முருகன்'

சங்க இலக்கியங்களைத் திணையின் அடிப்படையிலும் கரு, உரிப்பொருள் அடிப்படையிலும் நோக்கும்பொழுது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப் பிரிக்கின்றனர். அவ்வகையில், *"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ அவ்வகை பிறவுங் கருவென மொழிப"* என்ற தொல்காப்பிய நூற்பா தெய்வத்தினை முதன்மைப்படுத்துகிறது. மேலும் திணையின் அடிப்படையில் நானிலங்களுக்கும் தெய்வத்தினைக் கூறுகிறது. இதனை,

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்*
*சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"*

என்கிறது. இதில் குறிஞ்சித் திணையின் கடவுளாக 'சேயோனை' குறிப்பிடுகிறார். இங்குச் சேயோன் என்பது முருகனைக் குறித்தது. எனவே சங்கக் காலத் தமிழரிடம் கடவுளைப் பற்றிய சிந்தனைகள் எழுந்துள்ளது புலனாகிறது.

சிலப்பதிகாரத்தில் வரும் *'குன்றக்குரவை'* முருக வழிபாட்டைக் காட்டுகிறது. நக்கீரரின் திருமுருகாற்றுப்படையும், பரிபாடலில் எட்டுப்பாடல்களும் முருகனையே பாடுகின்றன. சங்கப்பாடல்களில் முருகனைப் பற்றிய குறிப்புகள் நிரம்பக் கிடைக்கின்றன. குறுந்தொகையில் முதற்பாடலில் முருகனைப் பற்றிய செய்திகள் வருகின்றன.

**தொல்காப்பியம் கூறும் 'களவு'**

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் அகத்திணையியல் மற்றும் புறத்திணையியலை அடுத்துக் களவியல் மூன்றாவதாக அமைந்துள்ளது. இன்பத்திற்குப் பொது இலக்கணமாக அகத்திணையியலிலும் அதற்கு இனமாகிய பொருளும் அறனுங்கூறும் புறத்திணையை அதன் புறத்து நிகழ்தலிற் புறத்திணையியலிலும் கூறி ஈண்டு அவ்வின்பத்தினை விரித்துச் சிறப்பிலக்கணம் கூறுதலின் இ∴து அகத்திணையோடு இயைபுடையதாயிற்று என்று பொருள் தருகிறார் நச்சினார்க்கினியர்.

*"இன்பமும் பொருளு மறனு மென்றாங்*
*கன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கிற்*
*காமக் கூட்டங் காணுங் காலை*
*மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுட்*
*டுறையமை நல்லியாழ்த் துணைமையோ ரியல்பே"*

என்ற நூற்பாவின் வழி களவியலுக்கான இலக்கணத்தை அறியமுடிகிறது. மேலும் தொல்காப்பியர்,

*"வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலித*
*லாக்கஞ் செப்ப னாணுவரை யிறுத்த*
*னோக்குவ வெல்லா மவையே போறன்*
*மறத்தன் மயக்கஞ் சாக்கா டென்றச்*
*சிறப்புடை மரபினவை களவென மொழிப"*

என்று களவியலுக்கான பொதுவான இலக்கணம் ஒன்றைத் தருகிறார். இதன்வழி களவியலில் ஈடுபடும் தலைவன் தலைவியின் ஒன்பது வகையான களவொழுக்கத்தினை அறியமுடிகின்றது.

**நற்றிணையில் 'முருகு'**

நற்றிணையில் முருகு என்ற சொல் இடம்பெறுகிறது. இச்சொல் முருகக்கடவுள் என்ற பொருளில் கையாளப்படுகிறது. நற்றிணையில் காணப்படும் களவொழுக்கம் பற்றிய செய்திகளில் முருகனைப் பற்றியும் குறிப்பிடுகின்றனர். தலைவனின் மலைநாட்டைக் கருதும் இடத்திலும், தலைவனைப் பிரிந்து தலைவி துன்புறும்போது *'வேலன்'* வெறியாட்டு நடைபெறும் இடத்திலும் முருகன் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. பிரமசாரி, நல்வெள்ளியார், அம்மள்ளனார், கபிலர் போன்றோர் குறிஞ்சி திணையில் பாடியுள்ளார்கள்.

இக்குறிஞ்சித்திணை இடம்பெறும் பாடல்கள் அனைத்திலும் *'முருகு'* என்ற சொல் உள்ளது. இச்சொல் முருகக் கடவுளைப் பொருண்மையாகக் கொண்டு பாடப்பெற்றுள்ளது.

**வேண்டுதலின் உறவுநிலை**

களவுக் காலத்தில் பிரிந்த தலைவனை நினைத்து வருந்தும் தலைவியை நோக்கி *'இவள் முருகனால் வருத்தப்பட்டாள்'* என்று கூறுமிடத்தில் தோழியானவள் முருகனை வணங்கும்போது கோபம் கொள்கிறாள். தலைவியின் காமநோய் முருகனால் வந்ததென்று தாய் கருதி வெறியாட்டு எடுக்கிறாள். இவ்விடத்தில் 'முருகனே! இதனை நீ அறியாமையின் உண்மையில் நீ அறிவற்றவனே ஆவாய் என்கிறாள் தோழி. வெறியாட்டு விலக்கவும் உண்மை அறிவுறுத்தவும் தோழி இதனை வாய்ப்பாகக் கொண்டாள். இதனை தொல்காப்பியம் *"கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும் ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்"* (தொல்.கள.115) என்ற நூற்பாவில் மகளுடைய உடலில் மாறுபாடு ஏற்பட்டதைக் கண்டு தாய் கழங்கு பார்ப்பாள் என்கிறது. வேலனை அழைத்து வெறியாடுவாள் (நற்றிணை, கு.வெ.பாலசுப்பிரமணியன், ப.60). களவுக் காலத்தில் தலைவியின் துன்பம் கண்டு கடவுளர்களில் ஒருவனாக நீ இருந்தாலும் உறுதியாக அறிவற்றவனே எனினும் நீ வாழ்வாயாக என்பதை,

*"கார் நறுங் கடம்பின் கண்ணி சூடி,*
*வேலன்வேண்ட, வெறி மனை வந்தோய்!*
*கடவுள் ஆயினும் ஆக;*
*மடவை மன்ற வாழிய முருகே!"* (நற்றிணை, பா.34)

இப்பாடல் வெளிப்படுத்துகின்றது. இத்தன்மை முருகன் மீது கொண்டுள்ள பக்தியின் தன்மையையும் கடவுளைத் தங்களின் உறவுநிலை என எண்ணியே கோபம் கொள்கின்றனர் என்பதையையும் காட்டுகிறது.

**பலியிட்டு வேண்டுதல்**

மக்கள் தம் வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் நம்பிக்கைகளை நழுவவிடாமல் காப்பாற்றி வருகின்றனர். *'நம்பினோர் கெடுவதில்லை'* என்பதுதான் இவர்களின் பெரும் நம்பிக்கையாகும் (நாட்டுப்புறவியல், ப.154) என்று சு.சண்முகசுந்தரம் குறிப்பிடுவதுபோல் கடவுளை வணங்கும் பொழுது பலியிட்டு வேண்டுவது நம்பிக்கையைச் சார்ந்ததாகக் கொள்ளலாம். இதன் அடிப்படையில் தலைவிக்குத் தலைவனை விட்டுப் பிரிந்ததால் பசலை நோய் ஏற்படுகிறது. வெறியாட்டு நிகழ்த்தினால் நோய் தீருமென்று கருதி ஆட்டையறுத்து முருகவேளை வணங்குகிறாள்.

*"அணங்கு அறி கழங்கின் கோட்டம் காட்டி,*
*வெறி என உணர்ந்த உள்ளமொடு மறி அறுத்து,*
*அன்னை அயரும் முருகு நின்*
*பொன் நேர் பசலைக்கு உதவாமாறே"* (நற்றிணை, பா.47)

என்ற பாடல்வரிகள் இதனை உணர்த்துகிறது. களவுக் காலத்தில் நடக்கும் பிரிவு நிகழ்ச்சி நடைபெறும். இத்தருணத்தில் பிரிவின் துயரால் தலைவியின் உடல் மெலிந்து பசலை ஏற்படுகிறது. இந்நிலையினைக் கண்டு தலைவியின் தாயானவள் வேலனை வழிபடுவாள். இவ்வழிபாட்டில், 'மறி' என்பது ஆட்டினைக் குறிக்கும். அவ்ஆட்டினை பலியிட்டு தன் நம்பிக்கையை வெளிப்படுத்துகிறாள்.

**தன்னில் வைத்துக் கூறல்**

தலைவியை விட்டுப் பிரிந்து மீண்டும் சந்திக்கும் பொழுது தலைவன், சிறிய கண்ணும் பெரிய சீற்றமும் கொண்டதாய் விளங்கும் ஆண்பன்றி சேற்றில் உழுதலால் அதனுடைய முதுகுப்புறத்தில் புழுதிபடிந்திருக்கும். அத்தகைய பன்றி, சுருக்குவார் வைத்த பிளவிலே விழுந்தது. விழுந்தவுடன் அவ்வாரினை விலக்கிக் காட்டு நாய்கள் சூழ்ந்து பன்றியைக் கொன்றன. நாய்கள் பற்றிக் கொண்ட மிகுதியான தசைகளை அவை கொண்டுச் செல்லாத வண்ணம் அவற்றை விலக்கும் கானவர், அவ்விறைச்சியைச் சிறுகுடிக்குக் கொண்டு வருகின்றனர். இத்தகைய சிறுகுடியில் முருகவேளுடன் கூடிச் சென்ற வள்ளி நாயகியைப் போல நீ விளங்குகின்றாய் என்று கூறும் இடத்தில் முருகனைத் தன்னில் வைத்து கூறுகின்றான். இதனை,

"நோயும் நெகிழ்ச்சியும் வீடச்சிறந்த
வேய் வனப்புற்ற தோளை நீயே,
என் உயவு அறிதியோ, நல்நடைக் கொடிச்சி
முருகு புணர்ந்து இயன்ற வள்ளி போல, நின்
உருவு கண் எறிப்ப நோக்கல் ஆற்றலெனே" (நற்.பா.82)

என்ற பாடல் கூறுகிறது. முருகனையும் வள்ளியையும் உவமையாகக் கூறுகிறான் தலைவன். அம்மள்ளனார் இயற்றிய இப்பாடலில் கண்ணின் ஒளியால் காண இயலாதவனானேன். அவள் பார்வையால் அவளையன்றிப் பிறிதொன்றும் காண இயலாதவனாகினான் என்று வெளிப்படுகிறது. இங்கு **'முருகு'** தலைவனுக்கும் **'வள்ளி'** தலைவிக்கும் என உவமித்துக் கூறுவது தன்னில் வைத்து கூறல் வெளிப்படுகிறது.

**தலைவி புலம்புதலிடத்தில்**

தலைவன் தன் வனப்பிழக்குமாறு பிரிந்ததால் 'நார்இல் மார்பு' என்கிறாள். தலைவன் தானே வந்து காதல் செய்து களவில் ஈடுபட்டான். ஆனால் தற்போது அவன் பிரிந்து துன்பம் தருகின்றான். இதனை நான் எங்ஙனம் பொறுத்துக்கொள்வேன் என்று புலம்பும் இடத்தில் முருகனுடைய வலிமையையும் சினமுடைய யானையின் தந்தத்தையும் கூறி அத்தகைய மலைநாட்டின் தலைவன் என்கிறாள். தலைவனைக் கூறும் ஒவ்வொரு இடத்திலும் இத்தகைய உவமை இடம்பெறுவது குறிப்பிடத்தக்கது.

*"முருகு உறழ் முன்பொடு கடுஞ்சினம் செருக்கிப்*
*பொருத யானை வெண் கோடு கடுப்ப"* (நற்றிணை, பா.225)

என்று கபிலர் பாடுவதிலிருந்து இவற்றைக் காணலாம். மலைநாட்டுத் தலைவனைக் குறிஞ்சித் திணைக்குரிய கடவுளோடு ஒப்பிடுகின்றனர்.

**முடிவுரை**

சங்க இலக்கியங்களில் முருகன் பற்றிய குறிப்புகள் மிகுதியாகக் கிடைக்கின்றன. எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான நற்றிணையில் அகம் குறித்த செய்திகள் கிடைக்கின்றன. களவு ஒழுக்கம், தலைவன் தலைவி கற்பொழுக்க இடம்பெறுகின்றன. தலைவன் பிரிந்து செல்லும் பிரிவுத் துயர் நிகழ்ச்சிகளும் காணக் கிடைக்கின்றன. திணையின் அடிப்படையில் நோக்கும்போது குறிஞ்சித் திணையில் களவுக் காலப் பிரிவு நிகழ்ச்சியைக் கூறும்போது முருகப் பெருமான் கடவுள் பற்றிய தகவல்கள் வெளிப்படுகிறது. நற்றிணையில் **'முருகு'** என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த **'முருகு'** என்ற சொல் முருகனைக் குறித்தே வருகிறது. இம்முருகப்பெருமானை உறவாக நினைத்தும், தன்னில் ஒருவனாக நினைத்தும் வைத்துப் போற்றுகின்றனர் என்பது இதன்மூலம் வெளிப்படுவது புலப்பாடு. தலைவனைக் குறித்து வரும் இடங்களில் குறிஞ்சிக் கடவுளான முருகக் கடவுள் இடம்பெறுவது இதன்வழி வெளிப்படுகிறது.

# திருப்புகழில் தாளக்கலை

**ராமஜெயம் பாரதி**
உதவிப்பேராசிரியர் (தவில்)
இசைத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

திருப்புகழ் இசைக்களஞ்சியம் தாளக்கலைக்கு ஒரு பொக்கிஷமாகும். தாளக்கலை மிகவும் விரிவானது. இந்தத் தாளங்களைப் பற்றிய விரிவான நூல் இதுவரை வெளிவரவில்லை. தாளக்கலை பற்றிய ஆய்வும் இதுவரை முழுமையாக மேற்கொள்ளப்படவில்லை. இசைக்கலை 'பண், தாளம்' ஆகிய இரண்டையும் மிக முக்கியமாக கூறுகளாகக் கொண்டது. சங்ககால இலக்கியங்களில் தாள வகைகளைப் பற்றிய செய்திகள் அதிகம் இல்லை. எனினும் மிகப் பழங்காலத்திலேயே தமிழர் இசைத்தமிழ்ப் பயிற்சியுடன் இருந்தனர் என்பதற்கு அகத்தியருடைய இந்தப் பழைய இலக்கணநூல் நல்ல சான்றாகும். இந்நூல் பண்டையத் தமிழரின் இசைச் செய்திகளையும், தாளத்தின் வகைகளையும் சுட்டிக் காட்டியுள்ளது. இதிலிருந்து பண்டைத் தமிழகம் இத்தகைய கலைகளுக்கு நல்ல ஆதரவு கொடுத்து வந்துள்ளதை நன்றாக அறிய முடிகின்றது. பண்டைக் காலத்தில் பல தமிழிசை நூல்கள் இருந்து அழிந்துள்ளன என்பதை அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரை வாயிலாக அறிய முடிகிறது. அவற்றில் பண்களைப் பற்றியும், தாளங்களைக் குறித்தும் நல்ல விளக்கங்கள் வேண்டும். சில விளக்கங்கள் மேற்கோள் சூத்திரங்களாக இவற்றைச் சிறப்புடன் புலப்படுத்துகின்றன. சரியான இசைப்புலமை இல்லாத மக்களிடமிருந்து இத்தகைய மிக நுட்பமான நூல்கள் தோன்றுவதற்கு வாய்ப்பில்லை. எனவே பண்டைத் தமிழர் இசைக்கலையில் தேர்ச்சிமிக்கவர்கள் என்பது உறுதியாகின்றது. இதனைத் திருப்புகழ் தாளங்கள் வழி எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**திருப்புகழ் தாளங்கள்**

இதில் 'அதலசேட னாராட' என்ற பாடலின் சந்த அமைப்புப் பதினொரு எழுத்துக்களைக் கொண்டுள்ளது.

*"அதலசேட னாராட அகில மேரு மீதாட .."* *(பா.1299)*
*தனனதான தானான தனன தான தானான*

இத்தகைய பதினொன்று எழுத்துக்களைக் கொண்ட சந்த நடையில் 9 வகை தாளங்கள் அமைந்தள்ளன. அவை (3+3+5), (3+4+4), (4+3+4), (4+7), (4+4+3), (5+3+3), (5+6), (6+5), (6+6+4+6), என்பன. 'வாடையில் மதனை' என்ற பாடலின் சந்த அமைப்பு பதின்மூன்று எழுத்துக்களைக் கொண்டுள்ளது.

*"வாடையில் மதனைய ழைத்துற்று ..."* (பா.1086)
தானன தனதன தத்தத்த

இத்தகைய பதின்மூன்று எழுத்துக்களைக் கொண்ட சந்த நடையில் 9 வகை தாளங்கள் அமைந்துள்ளன. அவை (3+4+6), (4+4+5), (4+5+4), (5+3+5), (5+4+4), (5+5+3), (6+3+4), (6+4+3), (6+7), என்பன. 'கரிய மேக மெனு' என்ற பாடலின் சந்த அமைப்பு பதினைந்து எழுத்துக்களைக் (அட்சரம்) கொண்டது.

*"கரிய மேக மெனுங்குழ வார்பிறை ..."* (பா.646)
தனன தான தனந்தன தானன

இத்தகைய பதினைந்து எழுத்துக்களைக் கொண்ட சந்த நடையில் 16 வகை தாளங்கள் அமைந்துள்ளன. அவை (3+3+5+4), (3+3+4+5), (3+4+4+4), (3+4+5+3), (3+5+3+4), (3+5+4+3), (4+3+3+5), (4+3+4+4), (4+6+5), (4+4+3+4), (5+3+3+4), (5+3+4+4+3), (5+5+5), (6+3+3+3), (7+4+4), (8+7), என்பன. 'பணியின் விந்துளி' என்னும் பாடலின் சந்த அமைப்பு பதினேழு எழுத்துக்களைக் (அட்சரம்) கொண்டது.

*"பணியில் விந்துளி போலவே கருவினுரு ...."* (பா.243)
தனன தானன தானனா தனதனன

இத்தகைய பதினேழு எழுத்துக்களைக் கொண்ட சந்த அமைப்பில் 8 வகை தாளங்கள் அமைந்துள்ளன. அவை (3+3+3+8), (3+4+5+5), (3+5+5+4), (4+4+4+5), (4+4+5+4), (4+5+4+4), (5+4+4+4), (5+5+3+4), என்பன.

*"முகசந்திர புரவஞ்சிலை விழிபுங்கயல் நீல ..."* (பா.639)
தனதந்தன தனதந்தன தனதந்தன தான

என்ற பாடல் 21 எழுத்துக்களைக் கொண்ட சந்தமாகும்.

*"மந்தர மென்குவ டார் தனங்கனி ..."*
தந்தன தந்தன தான தந்தன
*"வார மழுந்திட வேமணம் பெறு ..."* (பா.628)
தான தனந்தன தான தந்தன

என்ற பாடல் 30 எழுத்துக்களைக் (அட்சரம்) கொண்ட சந்தமாகும்.

**ஜாதிகள் அடிப்படையில் தாளங்கள்**

இதில் 'தமரு மமரு' எனத் தொடங்கும் திருப்புகழ் பாடல் மூன்று எழுத்துக்களைக் கொண்ட திரிச்சர (தகிட) நடையாகும்.

*"தமரு மமரு மனையு மினிய*
*தனமு மரசம் -அயலாகத்...."* (பா.122)
தனன தனன தனன தனன
தனன தனன –தனதானா

இத்தகைய திரிச்சிர நடையில் 65 சந்தங்கள் அமைந்தள்ளன. அவை, (3+3), (6), (3+3+3+3), (6+6), (3+4+5), (3+5+4), (4+3+5), (4+4+4), (4+5+3), (5+3+4), (5+4+3) என்னும் 11 வகை தாள அமைப்புக்களில் அமைந்துள்ளன.

**சதுரச்சிரம்**

இதில் நிறைமதி முகமெனு எனத் தொடங்கும் பாடல் நான்கு எழுத்துக்களைக் கொண்ட சதுரச்சிர (தகதிமி) நடையாகும்.

*நிறைமதி முமெனு - மொளியாலே* (பா.217)
தனதன தனதன தன தானா

இத்தகைய சதுரச்சிர நடையில் 175 சந்தங்கள் அமைந்துள்ளன. அவை (4+4), (3+5), (5+3), (4+4+4+4), (3+3+5+5), (3+4+4+5), (3+4+5+4), (3+5+3+5), (3+5+4+4), (4+3+5+4), (4+4+3+5), (4+5+3+4), (5+3+4+4), (5+3+5+3), (5+4+3+4), (6+6+4), என்னும் 16 வகைகள் தாள அமைப்புக்களில் அமைந்துள்ளன.

**கண்டம்**

இதில் 'நிராமய பராதன' என்ற பாடலின் அமைப்பு ஐந்து எழுத்துக்களைக் கொண்ட கண்ட (தகதகிட) நடையாகும்.

*"நிராமய புராதன பராபர வராம்ருத*
*நிராகுவ சிராதிகப் - பிரயையாகி ..."* (பா.355)

தனாதன தனாதன தனாதன தனாதன
தனாதன தனாதனத் - தனனதானா

இத்தகைய கண்ட நடையில் 134 சந்தங்கள் அமைந்துள்ளன. அவை (5+5), (4+6), (6+4), (5+5+5+5), (4+5+6+5), (4+6+4+6), (4+6+5+5), (5+4+5+6), (5+5+4+6), (5+7+4+4), என்னும் 10 வகை தாள அமைப்புக்களில் அமைந்துள்ளன.

**மிச்சிரம்**

இதில் 'அகரமுகமாகி' என்ற பாடலின் அமைப்பு ஏழு எழுத்துக்களைக் கொண்ட மிச்சிர (தகிடதகதிமி) நடையாகும்.

*"அகரமுகமாகி அதிபனுமாகி*
*அதிகமுமாகி – அகமாகி ...."* (பா.444)

தனதனதான தனதனதான
தனதனதான – தனதானா

இத்தகைய மிச்சிர நடையில் 87 சந்தங்கள் அமைந்துள்ளன. அவை (4+3), (3+4), (7+7), (3+3+4+4), (3+4+3+4), (4+4+6), (5+3+3+3), (5+4+5), (5+5+4), (6+3+5), (6+4+4) என்னும் 12 வகை தாள அமைப்புக்களில் அமைந்துள்ளன.

**சங்கீரணம்**

இதில் 'தீராப் பிணிதீர' என்ற பாடலின் சந்த அமைப்பு ஒன்பது எழுத்துக்களைக் கொண்ட சங்கீரண (தகதிமி தகதகிட) நடையாகும்.

"*தீராப்பிணி தீர சிவாத்துமஞான .....*"
தானாத்தன தானா தானாத்தனதானா (பா.966)

இத்தகைய சங்கீரண நடையில் 48 சந்தங்கள் அமைந்துள்ளன. அவை (4+5), (5+3), (3+3+3), (6+3), (5+4+5+4), (5+5+4+4), (3+5+5+5), (3+3+4+8), (3+5+4+6), (4+4+6+4), (4+5+6+3), (4+6+4+4), (5+3+3+3+4), (5+3+5+5), (5+5+3+5), (5+5+5+3), (6+4+4+4), என்னும் 17வகை தாள அமைப்புக்களில் அமைந்துள்ளன. இவ்வகையில் திருப்புகழ்ப் பாடல்கள் ஐந்து சாதிகளின் அடிப்படையில் பிரிக்கப்பட்டு பாடல்களின் (எழுத்துக்கள்) சந்தக் கூறுகள் ஆராயப்பட்டதில் மொத்தம் 509 சந்தங்களும், அவற்றிலிருந்து 66 தாள அமைப்புக்களும் நமக்குக் கிடைத்துள்ளன. இவை 35 வகை தாளங்களில் அடங்குகின்றன. இதில் திரிச்சிரம் (6012 அளவு சந்தங்கள்) ரூபக தாளத்திலும், சதுரச்சிரம் (8,16 அளவு சந்தங்கள்) ஆததாளத்திலும், கண்டம் (10,20 அளவு சந்தங்கள்) ஜம்பதாளத்திலும், மிச்சிரம் (7,14 அளவு சந்தங்கள்) மிச்சிர சாப்பு தாளத்திலும், சங்கீரணம் (9,18 அளவு சந்தங்கள்) சங்கீரண சாப்பு தாளத்திலும் பாடப்படுகின்றன.

## முடிவுரை

திருப்புகழ் பாடல்களில் பெரும்பாலானவை அடிப்படைச் சந்தம் மூன்று முறை மடங்கித் தொங்கலில் முடிவுறும் அமைப்பிலும், சில ஒரே வரியில் தொங்களுடன் முடிவுறும் அமைப்பிலும் உள்ளன. சில பாடல்களில் அடிப்படைச் சந்தம் அதிக கலப்பிலும், சில அடிப்படைச் சந்தம் என்று எதுவும் இல்லாத பாடல்களாகவும் உள்ளன. பாடல்களில் தொங்கல் வரும்பொழுது அவை ஆறு அல்லது ஐந்து அட்சரங்களாக இருந்தாலும், அவற்றையும் பாடலின் ஓர் ஆவர்த்தனத்திற்கு நீட்டியும், சிலவற்றில் தாளத்திலேயே அடக்கியும் பாடப்படுகின்றன. திருப்புகழ் பாடல்களைக் கீதம், கீர்த்தனை போன்ற மற்ற இசை வகைகளைப் போன்று சங்கதிகள் போட்டு பாடக்கூடாது. பாடலின் சொற்கள் எவ்வாறு நெடில், குறிலாக அமைந்துள்ளனவோ அவ்வாறே சுரதாளக் குறிப்புக்களும் அமைக்கப்பெறல் வேண்டும். பாடலிலுள்ள எழுத்துக்களை அனுசரித்தே அவரவர்களுடைய திறமையினால் அழகுபடுத்திப் பாடுதல் வேண்டும். திருப்புகழ்ப் பாடல்கள் பரவலாகத் திருக்கோயில்களில் தேவரடியார்களால் விழாக்காலங்களில் பாடப்பட்டு வந்ததாகத் தெரிகின்றது. இது இசை உலகில் 1914-1915 ஆம் ஆண்டுகளுக்குப் பின்புதான் சிறப்பாக இசைக்கப் பெற்றுள்ளது. திருப்புகழ் பாடல்களைப் பாடி பிரபலமாக்கித் தந்த பெருமை காஞ்சிபுரம் நயினாபிள்ளை (1889-1934) அவர்களையே சாரும். இவர் நிகழ்த்திய கச்சேரிகளில் திருப்புகழ் பாடல்களைத் தவறாது பாடிவந்தார். இதன் மூலம் தாள ஜாம்பவாங்கள் திருப்புகழைப் பல்வேறு கோணங்களில் தாள நோக்கத்துடன் பயன்படுத்தியிருப்பது நிருபணமாகிறது.

# வள்ளியம்மை கலியாண வாழ்த்து - கருத்தும் கவித்திறனும்

சு. ராஜேஸ்வரி,
தமிழ் ஆய்வாளர்,
சி66, அரசு அலுவலர் குடியிருப்பு,
9வது குறுக்குத்தெரு,
பாளையங்கோட்டை - 627007

திருமணம் என்பதை மக்கள் "கல்யாணம்" எனக் கூறுவர். திருமண வீட்டில் மக்களை வாழ்த்தி வாழ்த்துரை வழங்கும் வழக்கம் இன்றும் காணக்கூடியது. முருகன் வள்ளியைத் திருமணம் செய்யும் நிகழ்வில் "வள்ளியம்மை கலியாண வாழ்த்து" வாசிக்கப்படுவதாய் கற்பனையில் எழுதப்பட்டுள்ள ஓலைச்சுவடி ஒன்று கிடைத்துள்ளது. இதனைப் பேராசிரியர் வே. கட்டளை கைலாசம் அவர்கள் படியெடுத்துப் பதுப்பித்துள்ளார்கள். (கட்டளை கைலாசம், முனைவர் வே, "வள்ளியம்மை கலியாண வாழ்த்து" பக் 60–69 சுவடிகளின் சுவடுகள், "மேலும்" வெளியீடு, 9 இரயில்வே ஸ்டேஷன் ரோடு, பாளையங்கோட்டை, முதல் பதிப்பு 29.06.2017) அதன் கருத்தையும் கவித்திறனையும் ஆய்வதாய் இக்கட்டுரை அமைகிறது.

### ஓலைச்சுவடி வாழ்த்து

தூத்துக்குடி மாவட்டம் சாத்தான்குளம் அருகில் உள்ள விஜயராமபுரம் என்ற ஊரில் வாழ்ந்த ச.ஆ. ஐயப்பன் சந்தனக்குமார் "வள்ளியம்மை கலியாண வாழ்த்து" என்பதை ஓலைச்சுவடியில் எழுதி வைத்துள்ளார். 26 செ.மீ நீளமும் 3 செ.மீ அகலமும் கொண்ட ஒன்பது ஒலைச்சுவடியில் இவ்வாழ்த்து எழுதப்பட்டுள்ளது.

### திருச்செந்தூர் முருகன்

தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள திருச்செந்தூர் கடற்கரையில் "செந்தில் மாமலையுறும் செங்கல்வராயன்" கோயில் உள்ளது. திருமுருகாற்றுப்படையில் இவ்வூர் திருச்சீரலைவாய் எனக் குறிப்பிடப்படுகிறது. சங்க இலக்கியங்கள் இவ்வூரை "செந்தில்" எனக் கூறுகின்றன. திருநாவுக்கரசர் நம் "செந்தில் மேய வள்ளிமணாளற்குத் தாதை கண்டாய்" என்பார். பிற்காலப் புலவர் பலரும் முருகனைப் பாடியுள்ளனர்.

### திருச்செந்தூர் தல திருக்கல்யாணம்

திருச்செந்தூரில் கந்த சஷ்டி விழாவின் ஏழாம்நாள் தெய்வயானைத் திருமணம் நடைபெறுகின்றது. ஆனால் வள்ளியம்மை கலியாண வாழ்த்து என்ற சுவடி வள்ளியம்மைக்குத் திருச்செந்தூரில் நடைபெறும் திருக்கல்யாணத்தை எடுத்துரைக்கின்றது. வள்ளி கல்யாண நாடகம், ஒயில்கும்மி என பல உள்ளன.

**கலியாண வாழ்த்துப்பாடலின் கருத்து**

வள்ளியம்மை கல்யாண வாழ்த்துப் பாடல் கணபதி வாழ்த்துடன் தொடங்கி திருமணத்தில் நடைபெற்ற நிகழ்வுகளைக் கூறுவதாய் அமைந்துள்ளது. ஆசிரியர் கலியாண வாழ்த்து பாடுவதற்கு விநாயகப் பெருமானும், சரசுவதியும் வந்து அருள்புரிய வேண்டுகிறார்.

**திருமண மணமேடை**

தெய்வத் தச்சனை அழைத்து, ஊர் முழுவதும் பூப்பந்தலமைத்து திருச்செந்தூரைச் சிவலோகமாக மாற்றினர். அவ்வூர் கைலாயமாக காட்சியளித்தது. ஊரின் நடுவில் விநாயகர் தம்பியின் திருமணத்திற்கு எழுந்தருள சந்தனத்தால் மெழுகி தாமரைப்பூ விரித்து வைத்தனர். தென்னை, வாழை, மாம்பழம், தேங்காய், பொரி, அவல், நவதாணிய முளைப்பாரி, குடம், கண்ணாடி இவை அனைத்தும் வைத்தனர். மேடையில் வெற்றிலையும், அரசு மரத்தளிரையும் கட்டினர், சிந்தாமணிப் பசுவின் இனிமையான பாலையும் வைத்திருந்தனர்.

**மணமகள் அலங்காரம்**

கழுத்தில் மஞ்சளையும் சந்தணத்தையும் பூசினர், திருமாங்கிலியம், திருப்பூ, சவடி, ஆபரணமாலை அணிவித்தனர், தோலுடன் மான்கறி சுவைத்த வாயினுக்கு பாலும் தேனும் கொடுத்தனர். காலில் அணிந்திருந்த செருப்பைக் கழற்றிவிட்டு பொன்னாலான சிலம்பை அணிவித்தனர். கவணைக் கழற்றி எறிந்தனர். கைதனில் கணையாழியை அணிவித்தனர். பீதாம்பரத்தை உடுத்தினர். மான் தோலினால் ஆன பக்கர், மாறாப்பு கழற்றினர். மோகனமாலை அணிவித்தனர். பன்றிக்கொழுப்பு இருந்த கொண்டையில் புனுகு, கஸ்தூரியினால் மணக்கச் செய்தனர்.

**மணமகன் வருகை**

மாப்பிள்ளைக்குச் சுருள் கொடுக்க, மாப்பிள்ளை திருச்செந்தூர் தெரு முழுவதும் சுற்றிவந்தார். விநாயகர் வரிசை சடங்கு செய்தார். நந்தியும் நாரதரும் இசை முழக்கம் செய்தனர், முருகனை மேடையில் அமரவைத்து தீபம் ஏற்றி அவன் அழகினை அனைவரும் காணச்செய்தனர், மணமகளை அழைத்துவர ஆணையிட்டனர்.

**மணமகள் அழைப்பு**

வேடர்கள் ஒன்றாகக்கூடி வள்ளியைப் பட்டு சுற்றிய பலகையில் அமரவைத்தனர். வேடர்குல சடங்குகளைச் செய்தனர், முறைப்படி கை பிடித்து தங்கக் கலசத்து தண்ணீரை வார்த்தனர். முருகன் தாலி கட்டியபின் கானகத்தைச் சுற்றி வந்து மணியிலான கட்டிலில் அமரச் செய்தனர், வானவர்கள் பூச்சொரிந்தனர், பாலும், கற்பூர பஞ்சாச்சரமும் மணமக்களுக்குக் கொடுத்தனர்.

**சீர்வரிசை**

மணமக்களுக்கு, மாமியாரும், மைத்துனரும் வட்டில் பணம் போட வேண்டுமென உரைத்தனர். பணத்துடன் மா, பலா, வாழை முதலியவற்றையும் கொடுத்தனர். சீதனமாக ஆனை பிடித்துவந்தால் ஆறில் ஒன்றும், தோட்டத்தில் எட்டில் ஒன்றும், தேன் எடுத்து வந்தால் அதில் ஒரு பகுதியும், கொள்ளையிட்டு வரும் பொருளில் இரண்டு பங்கும் மணமக்களுக்கு சீதனம் என்றனர். வேங்கை அடியில் உள்ள தோட்டத்தில் விளைந்த பொருள்களும், மலையிலுள்ள பொருட்களும் மாதந்தோறும் தருவோம் என்றனர். வாளேந்தி எப்பொழுதும் காவலாக இருப்போம் என்றும் உரைத்தனர், முருகன் வேங்கை மரமாக நின்ற இடத்தில் கோயில் கட்டி தினந்தோறும் விளக்கு ஏற்றுவோம் என்றும் கூறினர்.

**வாழ்த்து**

தெய்வயானை, இலட்சுமியைக் கண்காட்டி வாயாற வாழ்த்து என்றார். இலட்சுமியைத் தொடர்ந்து சரஸ்வதி சங்கீதம்பாடி வாழ்த்தினாள்.

*"அன்னமே தேனே யமுதமே மலைக்கிளியே*
*பொன்னே திருவே பூவிலதிக மணமே....."*

எனப் பலவாறு வாழ்த்தினர்.

**வாழிபாடல்**

மணமக்களை வாழ்த்தி முடிந்த பின்னர் வாழி பாடி, திருமண வாழ்த்து நிறைவுறுகின்றது.

*"படியேழும் தான் வாழி பலகைத் திருவாழி*
*தேவொராடு மானிடவா சிவசோதி தான் வாழி"*
..........................................................................
*செந்தூர்க்குமரன் செந்தூரும் வாழியதே*

என திருச்செந்தூர் முருகனை வாழ்த்துவதால் இக்கல்யாண வாழ்த்து திருச்செந்தூர் முருகனுக்குப் பாடப்பட்ட கலியாண வாழ்த்து என்பதனை அறிய முடிகிறது.

**கலியாண வாழ்த்துக் கவித்திறன்**

நுண்கலைகளுள் ஒன்று கவிதைக்கலை. கவிதையின் உள்ளடக்கம், உருவம், உணர்த்தும் முறை இவைக்கு மெருகூட்டுகின்றன. வள்ளியம்மை கல்யாண வாழ்த்தின் உள்ளடக்கம் வள்ளியின் திருமணத்தை விளக்கி உரைக்கின்றது. திருமணச் சடங்கை உள்ளடக்கமாகக் கொண்டு பண்பாட்டின் ஒரு கூறினைப் பதிவு செய்துள்ளது.

உருவம் என்பது கவிதையின் யாப்பினையும் வகைமைப் பாட்டையும் குறிக்கும். வள்ளியம்மை கலியாண வாழ்த்து கிராமிய இசைவடிவம் கொண்ட பாடல். பாடல் வரிகளின் இறுதிச் சொல்லில் ஓர் இசை கட்டு அமைகின்றது. "கணபதியே, மூலமுதல் பொருளே, என்று சொற்கள் ஓசை நயத்தை எழுப்புகின்றன.

பெரும்பாலும் ஏகரத்தில் முடிவதைக் காணலாம். வாழ்த்தின் இறுதியிலும் “வாழியதே” என்ற சொல்லைக் காணலாம்.

கணபதி, சரஸ்வதியை வணங்கி தொடங்கும் இவ்வாழ்த்துப்பாடலில் திருமண நிகழ்வு ஓர் ஒழுங்கு முறையுடன் உரைக்கப்படுவதைக் காணலாம். கணபதி காப்போடு தொடங்கி, வாழி பாடி நிறைவு பெறுகிறது இவ் கல்யாண வாழ்த்துப்பாடல்.

உருவகம், உவமை போன்றவற்றைக் கையாண்டு கவிதையைக் கவிஞன் உணர்ச்சிமிக்கதாக மாற்றுகின்றான். பெண்கொடியே, அன்னமே, தேனே, அமுதமே, மலைக்கிளியே, பொன்னே போன்ற பல சொற்களால் வள்ளியை விளித்து ஆசிரியர் கவிதையைச் சிறப்புற செய்கின்றார் “ஆல்போல் தழைத்து அருகதுபோல வேரு[illegible]ன்றி மூங்கில் போலன்னை சுற்றம் மூசியாமல் வாழியதே” என உவமைகளை அடுக்கிக் கூறுகின்றார் ஆசிரியர்.

**வள்ளியம்மை கலியாண வாழ்த்து மொழி நடை**

ஒவ்வொருவருக்கும் ஒரு தனி மொழி நடை உண்டு. அதுவே அப்படைப்பாளியின் சிறப்பாகும். ஆசிரியரின் சொல்லாட்சி, கூறும் முறை, இவை கவிஞனின் தனித்திறனை வெளிப்படத்துவன. இதனைப் புலப்பாட்டு நெறி என்று கூறுவர். இக்கல்யாண வாழ்த்துப் பாடலில் “கன்னி வள்ளியம்மை கலியாண வாழ்த்திற்கு”, “சாமி வள்ளியம்மை கலியாண வாழ்த்திற்கு”, “வெண்டாமரைக் கோயில் வெள்ளைச் சரசுபதி”, “கானமலையேறிக் கன்னமிட்டு” என்பன போன்று மோனைத் தொடர்கள் பல உள்ளன. எதுகையும் இவ்வாழ்த்துப்பாடலில் நிறைந்துள்ளது. இதில் அமைந்துள்ள சொற்றொடர்கள் வாசிக்கும்பொழுது ஒருவகை கிராமியப்பாடல் ஓசைக் கொண்டு ஒலிக்கின்றது. இது கல்யாண வாழ்த்துப்பாடலின் தனிநிலையாகும். வாசிப்பவரும் ஏற்றம் இறக்கம் கொடுத்து வாசித்து சுவையூட்டுவார்.

இறைவனை, அன்னையாக, தந்தையாக, தோழனாக, தோழியாக, காதலனாக, காதலியாக, சேவகனாக பாடும் பல்வேறு மரபுகள் இலக்கியங்களில் உண்டு. மனிதர்களின் திருமணவிழாக்களில் வாழ்த்துமடல் வழங்குவதுபோல வள்ளியம்மை திருமணத்திலும் வாழ்த்து பாடுவதாக கற்பனை செய்து கவிபாடுவது திருச்செந்தூர் வட்டாரத்தின் தனிச்சிறப்பாகும். இக்கல்யாண வாழ்த்தில் குறவர் இனமக்களின் திருமணச் சடங்கு முறைகளும் வைதீகமுறை திருமணச் சடங்குகளும் இணைத்துப் பாடப்பட்டுள்ளன. இவ்வள்ளியம்மை கல்யாண வாழ்த்து கருத்துச்செறிவும் கவித்துவமும் கொண்டுள்ளது. இதுபோன்ற முருகன் பற்றிய ஓலைச்சுவடிகளைச் சேகரித்து பதிப்பிக்க வேண்டும்.

# தணிகைப் புராணத்தில் குறிப்பிடும் முருகன் திருக்கோலங்கள்

**கோ. லதா**
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழியல்துறை
அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம்
கொடைக்கானல்.

குறிஞ்சி நிலக் கடவுள் முருகப் பெருமானின் திருக்கோலங்கள் பதினாறாகும். இந்தப் பதினாறில் முருகனின் உருவ வடிவங்கள், ஆடை அணிகளன்கள், திருக்கோலங்கள், வாகனங்கள் போன்றவற்றை முருகனின் தணிகைப் புராணம் விளக்குகின்றன.

**ஞான சத்திதரமூர்த்தி**

ஒரு முகம். இரண்டு திருக்கரங்களுடன் வலது திருக்கரத்தில் சத்தி வேல், இச்சை, கிரியை, ஞானம் என்ற மூன்று இலை கொண்ட வேலும். பகைவரை அழிக்கும் இடது கை தொடையிலும் உள்ளன. இது திருத்தணிகை மூலவர் திரு உருவமாகும். இதனை

*"இச்சா ஞானக் கிரியை எனும்*
*இவை மூன்று இலையாய் கிளைத்து எழுத்திட்டு*
*அச்சான் ஆழி அறச் சுவற்றும்*
*அயில்வேல் ஒரு கை வலத்து அமைத்து*
*நச்சாதவரைத் தெறும் ஒருகை நளினம்*
*குறங்கின் அமைத்து இமையோர்*
*விச்சாதரர் சூழ்ஞான*
*சத்திதரனது உருவம் விதிப்போகும்"* (த.பு அகத் -64)

என்னும் பாடல் வரிகளில் தணிகைப்புராணம் விளக்குகிறது.

**கந்த மூர்த்தி**

ஒரு முகம் இரண்டு திருக்கரங்களுடன் மழுப்படை போன்ற கோவணத் தண்டு வலக்கரத்திலும் இடது கரம் இடுப்பிலும் வைத்து பழநி தண்டாயுதபாணியின் திருக்கோலம் இதனை விளக்குகிறது.

*"வைவாய்க் கணிச்சிப்படை என்ன*
*வதிவித்திடும் கோவணத்தண்டு*
*கைவாய் வலத்தின் அமைத்து அருளி*
*கடிகையில் இடக்கை பதித்து அருளி*

*ஐவாய் வழங்கும் பொறி புலனை*
*அவித்த உறுவர் இமையவர்கள்*
*உய்வான் இறைஞ்ச அருள்*
*வழங்கும் கந்தன் உருவம் உஞற்றுநரும்"* (த.பு அகத் -65)

என்னும் பாடல் வரிகளில் காணமுடிகின்றது.

**ஆறுமுக தேவ சேனாபதி**

ஆறுமுகம் பன்னிரண்டு திருக்கரங்களுடன் ஒரு கை, வலது தொடையில் தேவசேனையைத் தழுவி அணைப்பது போல உள்ளது. ஒரு கை அபயத் திருக்கையும் ஏனைய பத்துத் திருக்கைகளில் கேடயம், வாள், சூலம், குலிசம், வேல், வில், கதை, சேவல், தாமரை, அம்பு முதலியவற்றைக் கொண்டுள்ளது என்பதை

*"ஒரு கை தனது வலங்குறங்கின் அணங்கைத் தழுவி உகளமுலை*
*மருவ அபயம் ஒன்றாக வளர் தோல் வாள் சூலம் குலிசம்*
*பெருவேல் வாள்வில் கதை புள் அம்புயம் கோல்பத்தும் கரம்பத்தின்*
*இருவும் ஆறுமுகத் தேவசேனாபதி சீர் இழைப்போரும்"* (த.பு -66)

என்ற பாடல் வரிகள் விளக்குவதாக உள்ளது. (குலிசம் - வச்சிரம்)

**சுப்பிரமணிய மூர்த்தி**

ஒரு திருமுகம் இரண்டு திருக்கரம். இடது கை இடுப்பிலும், வலது கை அபயம், இது திருவிடைக்கழி முருகன் திருவுருவம் ஆகும். இதனை,

*இருள்கால் சீக்கும் மணிக்கடக இடக்கை கடியில் கொள இருவி*
*வெருள்கல் உளத்தோர்க்கு அஞ்சல்என விரவும் பயம்சாட அபயம் எனத்*
*தெருள்கோல் ஒருகை வலத்து அமைத்து திகழ்ந்து பணிவோர் தமக்கு எல்லாம்*
*அருள்கால் விழிச் சுப்பிரமணிய அண்ணல் உருவம் அமைப்போரும்"*
(த.பு அகத்-67)

என்ற பாடல் வரிகளில் காணமுடிகின்றது.

**களிறு ஊர்திப் பெருமான்**

ஒரு திருமுகம், நான்கு திருக்கரங்களுடன் இடது கரங்களில் கோழி, வரதம் வலது கரங்களில் வேல், வாள், யானை வாகனத்தின் மீது முருகன் அமர்ந்திருக்கும் திருக்கோலத்தில் உள்ளதை

*'ஒற்றை முகமும் இணை விழியும் மும்மைப் பயனும் ஒருங்கு அளிக்கும்*
*கொற்ற வரதம் ஊன்தலைக் குக் குடம் ஓரிரண்டும் இடம் கதிர்ப்ப*
*மற்றை வலப்பால் மணிவேலும் வாளும் கதிர்ப்பக் கரநான்கும்*
*பெற்ற மத வெம் களிற்றூர்திப் பெருமான் உருவம் சமைப்போரும்'*(த.பு -68)

என்ற பாடல் வரிகளில் விளக்குவதாக உள்ளது.

**சரவணபவ மூர்த்தி**

ஆறு திருமுகங்கள் பன்னிரண்டு திருக்கரங்கள். திருக்கரங்களில் விளங்குவனவாக வேல், கேடயம், கண்டாமணி, தாமரை, கோழிக்கொடி, கதை, உளி, அம்பு, வாள், வில், விரதம், அபயம் ஆகியவற்றைக் கொண்டுள்ளன என்பதை

*ஞாங்கர்ப் படை கேடகம் கண்டை நளினம் சேவல் கதை இடங்கம்*
*ஓங்கும் பகழி வாள் வரதம் ஒளிரும் அபயம் சிலை அவைதாம்*
*தாங்கும் கரங்கள் ஈராறும் தயங்கும் வதனம் ஓர் ஆறும்*
*ஆங்க விளங்க அருள் சரவ ணபவன் உருவம் ஆக்கநரு* (த.பு -69)

என்ற பாடல் வரிகளில் விளக்குகின்றன.

**கார்த்திகேய மூர்த்தி**

திருக்கரங்களில் குலிசம், கேடயம், வரதம் உள்ளன. வலது திருக்கரங்களில் வேல், வாள், அபயம், உள்ளன. இம்மூர்த்தி பிறவிப் பிணி போக்குவார் என்பதை

*சீர்த்த குலிசம் கேடகமே செழித்த வரதம் இடப்பாலும்*
*கூர்த்த மணிவேல் வாள் அபயம் குலவு வலப்பாலும் கவின*
*ஏர்த்த ஆறு மலர்க்க ரமும் இலங்கும் வதனம் ஓர் ஆறும்*
*சூர்த்த பிணிகள் தபும் கார்த்திகேயன் உருவம் தொகுப்போரும்*
(த.பு அகத் -70)

என்ற பாடல் வரிகளில் விளக்குகின்றன.

**குமாரசுவாமி**

திருமுகம் ஒன்று, திருக்கரங்கள் நான்கு,வலது கரங்களில் வேலும் வாளும் உள்ளன. இடது திருக்கரங்களில் சேவல் கொடியும் கேடயமும் நகைமுக வள்ளி சதேர் உடன் இருப்பதைக் காணமுடிகின்றது. இதனை

*வைத்த சுடர்வேல் வாள் இரண்டும் வலப்பால், இடப்பால், வாரணப் புள்*
*பைத்த மணித்தோல் ஓரிரண்டும் பயில அலர்ந்த நாற்கரமும்*
*முத்த முறுவேல் குறமாது விளங்க முன்னர் தடுத்து மலக்*
*கொத்து விளியக் கடைக் கணிக்கும் குமாரன் உருவம் குயிற்றுநரும்.*
(த.பு -71)

என்ற பாடல் வரிகளில் விளக்குகின்றன.

**ஆறுமுக சுவாமி**

ஆறு திருமுகங்களுடன் பன்னிரண்டு திருக்கரங்களும் மயில் வாகனத்துடன் தேவசேனை ஒருபுறம். மறுபக்கம் வள்ளியுடன் உள்ளார். வலது ஆறு திருமுகங்களுடன் பன்னிரண்டு திருக்கரங்களும் மயில் வாகனத்துடன் தேவசேனை ஒருபுறம். மறுபக்கம் வள்ளியுடன் உள்ளார்.

வலது திருக்கரங்கள் ஆறில் வேல், அம்பு, வாள், திகிரி, பாசம், அபயத்துடனும். இடது திருக்கரத்தில் ஆறில் குலிசம், வில், கேடயம், சேவல், அங்குசம், வரதம் உடன் கொண்டுள்ளதை

*படைவேல் பகழி வாள் திகிரி பாசம் அபயம் வலத்து இடத்துச்*
*சுடர்வார் குலிசம் சிலை தோல் புள் தோட்டி வரதம் இவை பரித்த*
*தடவான் கரகமும் முகம் ஆறும் தனிமா மயிலும் இருமாதர்*
*உடனாம் எழிலும் தரும் ஆறு முகவன் உருவம் உளுற்றுநரும்*
(த.பு அகத் -72)

என்ற பாடல் வரிகளில் காணமுடிகின்றது.

**தாரகாந்தக மூர்த்தி**

ஆறு திருமுகங்கள், பன்னிரு திருக்கரங்ளுடன் வரதம், சேவல் கொடி, கேடகம், அங்குசம், பாசம், குலிசம், அபயம் வாள், சக்கிரம், தண்டம், வேல் முதலிய பன்னிரண்டு திருக்கரங்களில் விளங்குவதாக

*வரதம் கொடி கேடகம் தோட்டி வார்ந்த எறுழ்ப் பாசம் குலிசம்*
*பரவும் அபயம் வாள் சூலம் பரிதி முசலம் வே முந்நூல்*
*கரமும் விளங்க அறுமுகமும் கதிர்ப்ப விழிகள் கருணை மழை*
*தரவென்று அருளும் தாரகாந் தகச் சீர் உருவம் சமைப்போரும்*
(த.பு -73)

என்ற வரிகளில் காணமுடிகின்றது.

**சேனாபதி மூர்த்தி**

ஆறுமுகம், பன்னிரண்டு திருக்கை அபயம், முசலம், வாள், சூலம், அங்குசம் வலது திருக்கரங்களில் உள்ளன. வரதம், குலிசம், வில், தாமரை, தண்டம் பாசம், அம்பு இடது திருக்கரங்களில் உள்ளன என்பதை

*அபயம், முசலம், வாள், சூலம் அயில், வேல், தோட்டி, வலம், வரதம்*
*தபுசீர், குலிசம், சிலை, பதுமம், தண்டம், கதை, மற்று இடமாக*
*உமய இராது கரதலமும் ஒளிர்வித்து ஆறுமுகம் தோற்றி*
*சுப நன்கு அருளி இடர் துமிக்கும் சேனாபதி சீர் தொகப்போரும்*
(த.பு அகத் -74)

**பாலசுப்ரமண்ய மூர்த்தி**

ஒரு திருமுகம் , இரண்டு திருக்கரங்களுடன் இடது கை இடுப்பிலும் வலது கையில் தாமரை மலருடனும் திருவடியில் கிண்கிணியும் பால உருவத்துடன் முருகன் இருப்பதை

*கடியில் இடக்கைத் தலம் இருவிக் கமலம் வலக்கைத் தலம் ஏந்தி*
*அடியில் மணிக் கிணிகிணி கவைஇ அமரும் பால உருத்தோற்றி*
*முடிகள் உரிஞு எதிர் வணங்கும் முகுந்தன் முதலோர்க்கு அருள் சுரக்கும்*
*படியில் எழில் சுப்பிரமண்ய பகவன் உருவம் பயிற்று தரும்*
(த.பு அகத் -77)

என்ற பாடல் வரிகளில் கூறப்பட்டுள்ளன.

**கிரவுஞ்ச பேத மூர்த்தி**

ஆறுதிருமுகம் , எட்டுத்திருக்கரங்களுடன் வலது திருக்கரம் நான்கில் வேல், வாள், அம்பு, அபயம், உள்ளன. இடது திருக்கரங்கள் நான்கில் குலிசம், கேடயம், வில், வரதம் என்ற எட்டுத்திருக்கரங்களின் சிறப்பினை,

*அடிலும் நெடுவேள் வாள் பகழி அபயம் வலநாற் கரத்து அமைத்து*
*தழல் வச்சிரம் கேடகம் வரதம் சாபம் இடம் நாற்கரத்து ஆக்கி*
*எழில் மிக்கு ஒழுகுமுகம் ஆறும் இலங்கத் தோற்றிக் கிரவுஞ்சம்*
*புழைபட்டு அழியப் படைவிடுத்த புத்தேள் உருவம் பொறிப் போரும்*
(த.பு 78)

என்ற பானல் வரிகளில் காணமுடிகின்றது.

**மயில் வாகன மூர்த்தி**

ஒரு திருமுகம். நான்கு திருக்கரங்களுடன் வலது திருக்கரங்கள் இரண்டிலும் வேலும் அபயமும் உள்ளன. இடது திருக்கரங்கள் இரண்டிலும் வரதம், குலிசம், மயில் வாகனம் உள்ளன இதனை,

*புலிங்கம் கதிப்பத் தீத்தும்மும் பொருவேல் அபயம் வலத்திருகைத்*
*தலங்கொண்டு இடப்பால் இரு கரத்தும் தக்கவரதம் வச்சிரமும்*
*இலங்க அணிந்து திரைக்கடலும் எழு பல் வரையும் உலகு அனைத்தும்*
*குலுங்கக் கடவும் மயில் ஊர்திக் கோமான் உருவம் இயிற்று தரும்*
(த.பு அகத் -79)

என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

**முடிவுரை**

முருகன் திருக்கோலங்கள் பதினாறு என்பதையும் அவை ஞான சத்திதர மூர்த்தி, கந்த மூர்த்தி, ஆறுமுக தேவ சேனாபதி, குமாரசுவாமி, ஆறுமுக சுவாமி, தாரகாந்தக மூர்த்தி, பிரம சாத்த மூர்த்தி, வள்ளி கல்யாண மூர்த்தி, பாலசுப்ரமணிய மூர்த்தி, கிரவுஞ்சபேத மூர்த்தி, மயில்வாகன மூர்த்தி என்பதை தணிகைப் புராணத்தின் வழி காணமுடிகின்றது.

# திரு. பெரியசாமித் தூரன் கீர்த்தனைகளில் முருகன்

முனைவர் **செ. லலிதாம்பாள்**
இணைப்பேராசிரியர்
இசைத்துறை
சீதாலட்சுமி இராமஸ்வாமி கல்லூரி
திருச்சிராப்பள்ளி-2

ஆதிசங்கரர் வகுத்த அறுவகை சமயங்களில் கௌமாரம் முருகக் கடவுளை முழு முதற்கடவுளாக கொண்டு வழிபடும் சமயம். முருக வழிபாடு தமிழ்நாட்டில் பரவலாகக் காணப்பட்டாலும் கொங்கு நாட்டில் மிக அதிகமாக உள்ளது. கொங்கு நாடு ஈன்ற இயல் இசைப் புலவர்கள் பலர் தங்கள் பாடல்களில் முருகனுக்கு முக்கியத்துவம் அளித்து பாடல் இயற்றியுள்ளனர். அவர்களுள் பெரியசாமி தூரன் தனி இடத்தைப் பெற்றுள்ளார். பல்துறை வித்தகரான இவர் பல தெய்வங்களைத் தனது பாடல்களில் பாடினாலும் முருகனைப் புகழ்ந்து ஏராளமான கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். இவர் இயற்றிய முருகன் பாடல்களை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பெரியசாமி தூரன் வாழ்க்கை மற்றும் பணிகள்**

தமிழ் ஆர்வம் கொண்ட திரு பெரியசாமித் தூரன் ஈரோடு மாவட்டத்தில் மஞ்சக்காட்டுவலசு என்ற கிராமத்தில் 1908-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 26ம் நாள் பிறந்தார். இவர் ஒரு விவசாயக் குடும்பத்தில் பிறந்தார். பெற்றோர் பழனியப்ப கவுண்டர், பாவாத்தம்மாள் அம்மையார் ஆவார். திரு. தூரன் அவர்கள் தனது உயர்நிலைக் கல்வியை ஈரோட்டிலும், இன்டர்மீடியேட் கல்வியை சென்னை பிரஸிடென்சி கல்லூரியிலும் முடித்தார். இலக்கியப் பணி வாயிலாக தேசிய இயக்கத்தில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். இவர் இளநிலை பட்டப்படிப்பு படிக்கும் போதே பத்திரிகை ஆசிரியராக பணிபுரிந்துள்ளார் மாணவர் இயக்கத்தையும் நடத்திவந்துள்ளார். இவர் இளநிலை பட்டப்படிப்பும் மற்றும் ஆசிரியர் பயிற்சியை முடித்து ஆசிரியராகவும் பின்னர் தலைமை ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார். தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் ஆசிரியராகவும் பணியாற்றி உள்ளார். மேலும் இவரின் பன்முக ஆற்றலால் அகில இந்திய வானொலி நிலையம், தமிழ் நாடு இயல் இசை நாடக மன்றம், தமிழ் இசைச் சங்கம், சென்னை கர்நாடக இசைக் கல்லூரி, தமிழ் கல்லூரி, சென்னை பல்கலைக் கழகம், மதுரை பல்கலைக் கழகங்களில் பணியாற்றி 1977ம் ஆண்டு ஓய்வு பெற்றார்.

**இசை ஆர்வம்**

திரு. தூரன் அவர்கள் தமிழுக்காகவே தனது வாழ்வை அர்ப்பணித்தார். இறைவன் மேல் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். இசை தான் இறைவனைத் தொழ சிறந்த வழி என நம்பினார். அதனால் தனது

இளம்வயதில் திரு. சிவராமகிருஷ்ண பாகவதரிடம் இசை பயின்றார். மேலும் தனது உருப்படிகளை ஸ்வரப்படுத்த தனது குருவின் உதவியோடு, திரு டி.கே கோவிந்தராவ், திரு டி.எம். தியாகராஜன், கே.வி. நாராயணசாமி மற்றும் கும்பகோணம் எஸ். விஸ்வநாதன் ஆகியோரின் உதவியை நாடினார்.

அவரவர் தாய் மொழியில் பாடல்களைக் கேட்கும்போது அப்பாடல் கருத்தை முழுமையாக புரிந்து கொள்ள முடியும் என்பதில் திரு. பெரியசாமி தூரன் மிக உறுதியாக இருந்தார். இவர் தாய்மொழியாம் தமிழில் பெரும்பாலும் அனைத்து தெய்வங்களின் மீதும், பாடல்கள் இயற்றியுள்ளதுடன் சில தேசபக்திப் பாடல்களையும் இயற்றியுள்ளார்.

திரு. பெரியசாமித் தூரன் தனது பாடல்களைப் பல்வேறு இசை வடிவங்களான கீதம், வர்ணம், கீர்த்தனைகள், பதம், ஜாவளி, தில்லானா, விருத்தம், இராகமாலிகை, காவடி சிந்து ஆகியவற்றில் அமைத்துள்ளார்.

**பாடல் கருத்து**

ஆழ்ந்த தத்துவக் கருத்துக்கள் இவரின் பக்திப் பாடல்களில் பொதிந்து கிடக்கின்றன. இவரின் பாடல்கள் அழகும், பாவமும், நிரம்பியதாக இருக்கின்றன. இவர் பக்தியின் சிறப்பை இறைவனை பக்தியுடன் ஒன்றி உரிமையுடன் எழுதப்பட்டுள்ள பாடல்களைப் படிக்கும் போது உணரலாம். பல இசைக் கலைஞர்கள் தங்களின் நிகழ்ச்சியில் இவரின் பாடலைப் பாடிவருகின்றனர்.

**பெற்ற விருதுகள்**

இவர் பத்மபூஷண், கலைமாமணி, இசைப்பேரறிஞர், பெருந்தமிழ் செல்வர், செந்தமிழ் கலைச் செல்வர், தமிழ் பேரவை செம்மல் போன்ற விருதுகள் பெற்றுள்ளார்.

**திரு. பெரியசாமித் தூரன் கீர்த்தனைகளில் முருகன்**

தமிழ்க் கடவுள் முருகனுடைய வழிபாடானது தொன்று தொட்டு இருந்து வந்ததை நாம் புராணங்கள் மற்றும் இலக்கியங்களின் வாயிலாக அறிகிறோம். இத்தகைய தொன்மை நிறைந்த முருகனைத் தனது பாமாலையால் திரு. தூரன் அவர்கள் பல்வேறு இசைவடிவங்களை மாலையாகக் கோர்த்து அணிவித்துள்ளார். பெரியசாமித்தூரன், முருகன் பெயரில் கீதம் -3, கீர்த்தனை -70, இராகமாலிகை -3, பதம் - 6, ஜாவளி – 3, தில்லானா -1, விருத்தம் ஆகியவை இயற்றியுள்ளார்.

**கீர்த்தனை அமைப்பு**

இவரின் கீர்த்தனைகள் பொதுவாக பல்லவி, அனுபல்லவி, சரண அமைப்பில் உள்ளன. சரணமானது இரண்டு வரி மட்டும் உள்ளவை காணப்படுகின்றன. சில கீர்த்தனைகளில் அனுபல்லவி இல்லாமலும் காணப்படுகின்றன.

**இராகம் மற்றும் தாளம்**

திரு. பெரியசாமித் தூரன் தனது கீர்த்தனைகளில் பல அபூர்வ இராகங்களைக் கையாண்டுள்ளார். அவை ஸ்வர்ண தீபகம், கலிகா, விலாசினி, அம்ருததன்யாஸி, நாதப்ரம்மம், தேசிய ரஞ்சனி, சமந்த தீபரம், ரவிஸ்வரூபிணி, ரஸிகரஞ்சனி, போகவசந்தம், சுத்தமனோஹரி போன்றவையாகும். இவரின் பாடல்கள் பெரும்பாலும் ரூபகம், ஆதி போன்ற தாளங்களிலும், சில பாடல்கள் மிஸ்ரசாபு, கண்டசாபு தாளங்களிலும், சில பாடல்கள் ஜம்பு, திரிபுட, மட்ய தாளத்திலும் உள்ளன.

**இயல், இசைச் சிறப்புக்கள்**

திரு. தூரன் அவர்களின் கீர்த்தனைகளில் முதலாம் எழுத்து, இரண்டாம் எழுத்து மற்றும் இறுதி எழுத்து ஒன்றி வந்து எதுகை, மோனை போன்ற இயல்அணிகள் மிகுந்து காணப்படுகின்றன. மேலும் ஒரே வார்த்தை இரண்டு முறை ஒன்றி அடுக்குத்தொடராக வந்து அழகிய நடையை அளிக்கின்றது. உ.ம்: (கொஞ்சிக் கொஞ்சி - கமாஸ்- ஆதி)

"வேலை பிடித்த – காபி ராகம் – ஆதி தாளம் பக் -202" (தொகு -2) என்ற கீர்த்தனையில் வேலை என்ற சொல் பல பொருளில் வருவது சிறப்பானதாகும்.

**உவமை**

திரு. தூரன் அவர்கள் கீர்த்தனைகள் இரண்டாம் தொகுதியில் "கதிர் பகலோன் முன் இருளென மறையும்" (வேலும் மயிலும் - சாருகேசி ராகம் – ஆதி தாளம் பக் -78 தொகுதி 2) என்ற உவமையைக் கையாண்டுள்ளார். திரு. தூரன் அவர்கள் பழனி மலை வாழ் முருகனை உள்ளம் உருகி பாடல்களால் தனது பக்தியை வெளிப்படுத்தியுள்ளார். மேலும் அவர் சென்னிமலை முருகனை இரண்டு பாடல்களால் புகழ்ந்துள்ளார். பக் - 121, 239 (தொகுதி 2), இலங்கையில் உள்ள கதிர்காம வேலவனைத் தன் கீர்த்தனைகளில் பாடியுள்ளார். பக் - 162 (தொகுதி 2).

**முத்திரை**

சில பாடல்களில் இராக முத்திரை காணப்படுகின்றன. இயற்றியவரின் முத்திரையான வாகேயகார முத்திரை "பழனி மலை தனில் - பைரவி – ஆதி" பக் 60 (தொகு 1) என்பதில் "**தூரனைக்** காத்திடும் துய்யனே" என்று இடம்பெறுகிறது. மேற்கூறிய இப்பாடலிலேயே தல முத்திரையான **பழனி** என்றும் இடம்பெற்றுள்ளது.

**புராணக் கதைகள்**

திரு. பெரியசாமித் தூரன் கீர்த்தனைகள் அவரது மகன் திரு சுதந்திர குமார் என்பவரால் இரண்டு தொகுதிகளாக தொகுக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. இதில் முதல் தொகுதியில் அம்பிகையிடம் வேல்

வாங்கியது, சூரனை வென்றது, வள்ளியை மணந்தது (பக் 60), ஞானப் பழம் பெற உலகை வலம் வந்தது (பக்.76), தந்தைக்கு உபதேசம் செய்தது, பிரம்மாவைச் சிறை பிடித்தது (பக்.157), வள்ளியை மணம் புரிந்தது, முருகன் நெற்றிக் கண்ணில் தோன்றியது, கார்த்திகை பெண்கள் வளர்த்தது (பக்-273) ஆகிய குறிப்புகள் காணப்படுகின்றன.

திரு. தூரன் கீர்த்தனைகள் இரண்டாம் தொகுதியில் வேங்கை மரமாகி நின்றதையும் கிழவனாக வந்ததையும் கூறியுள்ளார். மேலும் இராமாயணத்தில் சீதையை தேடிய அனுமான் உன் திருவருளால் அரும்பணி முடித்தார் (பக்.163) என்று அனுமனுக்கு முருகன் அருளியதாகக் காணப்படுகின்றன.

**காவடிச் சிந்து**

முருக வழிபாட்டில் காவடி எடுத்தல் என்பது முக்கியமான ஒரு வழிபாடாகும் திரு. பெரிசாமித்தூரன் காவடி எடுக்கும் போது பாடப்படும் காவடிச்சிந்து பாடலை இயற்றியுள்ளார். இதில் "அழகு தெய்வமாக வந்து பழனிமலை மீதில் நிற்போன்" என்ற பாடலில் பழனி முருகனின் மிகச்சிறப்புக்கள் மிகுந்த கவிதை நயத்தோடு வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

**முடிவுரை**

ஒருவர் எந்தத் துறையில் இருந்தாலும் இசை கலந்த பக்தியினாலேயே இறையோடு எளிதில் ஒன்றிட முடியும் என்பதை திரு. தூரன் அவர்களின் வாழ்கை வரலாறும் அவரின் பாடல்கள் வாயிலாக அறியலாம். தீந்தமிழுக்கும், இசைக்கும் தொண்டாற்றிய திரு. பெரியசாமி தூரன் அவர்கள் 1987-ம் ஆண்டு தனது 79ம் வயதில் இயற்கை எய்தினர்.

**பார்வை நூல்கள்**

திரு. தூரன் கீர்த்தனைகள் தொகுதி 1, 2 திரு. பெரியசாமி தூரன், தொகுப்பு திரு.சுதந்திர குமார் 2008.

# முருக வழிபாட்டில் நாட்டுப்புறக் கலைகள்

**அ. வசந்த்.**
முனைவர்பட்டஆய்வாளர்,சிற்பத்துறை,
தமிழ்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

வழிபாடு என்பது மனிதனுக்கு ஒரு புதிய பழக்கம் அன்றி ஆதி மனிதனிடம் ஏற்பட்ட இயற்கையின் மீது கொண்ட அச்சத்தாலும் பயன்பாட்டினாலும் ஏற்பட்டது என்றும், இயற்க்கையைச் சார்ந்த நிலம், நீர், தீ, காற்று, வெளி எனும் பஞ்ச பூதங்களின் தாக்கத்தாலும், பயன்பாட்டாலும் வழிபாடு நடைபெற்று இருந்து இருக்கும் என்றே கருதத் தோன்றுகிறது.

ஐவகை வழிபாட்டில் மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி என்றும் இவ்வகை வழிபாட்டுக் கடவுள் முருகன் என்றே வழிபட்டு வரப்பட்டிருக்கிறது, இருப்பினும் குன்று இருக்கும் இடம் எல்லாம் முருகன் இருக்கும் இடம் என்று நம்பப்பட்டு வழிபடவும் பட்டது. இம்முருக வழிபாட்டுடன் மலைவாழ் மக்கள் மேற்கொண்ட சமூக பழக்க வழக்கங்கள் இவ்வழிபாட்டில் இடம்பெறுவதைக் கருதுவதாக இக்கட்டுரை அமைவதாகிறது.

**நம்பிக்கை**

மக்களின் வழிபாட்டுச் சடங்குகளில் உயரமான மரம், உயரமான கல், உயரமான மதில். உயரமான மலை, வழிபடுவது இன்றும் பழக்கத்தில் இருப்பதால்தான் பல்வேறு ஆலயங்கள் மலைமீது இடம்பெற்று இருந்தாலும் பக்தர்கள் இன்றும் விரதம் இருந்து படியேறி வழிபடுவதை எல்லோரும் அறிந்ததே அதோடு மட்டுமின்றி முருக வழிபாட்டில் இடம்பெறும் காவடி தூக்குதல் என்பது தனியொரு தெய்வம் முருகனுக்கு மட்டுமே பொருந்தும் என்பது சாலச் சிறந்ததாகவே இன்றுவரை இருந்து வந்து இருப்பினும் இக்காவடி தூக்குதல் கிராமியக் கலைகளில் இடம்பெற்று இருப்பது மற்றொரு சிறப்பான நிலையையும் வழிபாட்டையும் வழியுருத்துவதை காண்போம்.

**தமிழ்கடவுள்**

இயற்கை வழிபாட்டினரான நாம் சமூதாய மாற்றத்தாலும் நாகரீகத்தின் வளர்ச்சியினாலும் நீத்தார் வழிபாட்டில் மாற்றம் கொண்டு வழிபாடு வளர்ச்சியுரும் காலத்தில் போர் ஆயுதங்களை வழிபடும் பழக்கம் ஏற்பட்டு இருக்கவேண்டும். இதன் காரணமாகவே முருகக் கடவுள் கையில் வேல் கொடுத்து வேலன் என்று அழைக்கப்படும் காலத்தில் வீர வழிபாடு வளர்ச்சியுற்றதை அறிய முடிகிறது.

இவ்வகை மாற்றங்களைபோல் தமிழ்கடவுள் என்று அழைக்கப்பட்ட, வேலன், முருகன், திராவிடக் கடவுள் என்னும் நிலையில் இருந்து ஆரிய

மதத்தால் பல்வேறு பெயர்களையும், புராணங்களையும் பெற்று முருகன் என்னும் முன்னுக்கு இருந்த கடவுள் சிவபிரானின் மகனாக சித்தரிக்கப்பட்டு மக்கள் மத்தியில் இது தொடர்பான புராணங்கள், ஓவியங்கள், சிற்பங்கள் உருவாக்கப்பட்டதால் தமிழ்க்கடவுள் எனும் நிலைமாறி சைவக் கடவுள் சிவபெருமானையும் திராவிட மக்களின் தாய்த் தெய்வத்தையும் இணைத்து முருகனுக்குத் தாய், தந்தையாக சித்தரித்து மக்களிடம் உளவவிடும்படி செய்துவிட்டனர். இருப்பினும் மலையும் மலைசார்ந்த கடவுள் முருகன் எனும் நிலையை அறிய இவ்வழிபாட்டில் மேற்கொள்ளப்படும் அலகு குத்துதல், காவடி எடுத்தல், மயிலாட்டம், காளை ஆட்டம் எனும் நிகழ்வுகள் அனைத்தும் மலைவாழ் மக்களைச் சார்ந்ததாகவே அமைகிறது அவ்வகையில் கிராமிய கலைகளான கரகம், காவடி, மயிலாட்டம், காளை ஆட்டத்தைத் தற்போது பார்ப்போம்.

**காவடி எடுத்தல்**

ஆதி கால மனிதன் ஒரு இடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்கு இடம் பெயரும் போது தனக்குத் தேவையான உணவுப் பொருட்களையும், நீர்களையும் ஒரு மரக்கட்டையின் இரு முனைகளிலும் பொருத்தி பாரம் இல்லாமல் தூக்கிச் செல்வதற்காக உருவாக்கப்பட்ட ஒரு யுத்தியே காவடி அமைப்பு இவ் அமைப்பு பிற்காலங்களில் வழிபாட்டிற்குத் தேவையான அபிசேகப் பொருட்களைக் கொண்டு செல்லும் போது பால்காவடி, பன்னீர்க்காவடி என்றும் அழைக்கப்பட்டு முருகனோடு காவடி என்பது ஒரு இணைப்ப சொல்லாக வழங்கப்பட்டது. மேலும் இக்காவடி எடுத்தல் என்பது கிராமிய கலைக்குள்ளே மக்களிடம் பல்வேறு தாக்கங்களை ஏற்படுத்துவதை இங்குக் காண்போம்.

காவடி என்பது தோளில் தூக்கிச் சென்றது போக உடலின் எல்லா பாகங்களிலும் காவடியை ஆடவிடுவதும், காவடியை நிறுத்துவதும் இசைக்கும் மேளத்திற்கு ஏற்ப ஆடுவதும் பார்க்கும் பக்தர்களும் கலைஞர்கள் முருக வழிபாட்டில் ஒரு அங்கமான காவடியைச் சீர்த்தூக்கிப் பார்க்கும் அளவிற்குக் கிராமியக் கலைஞர்கள் காவடி ஆட்டம் இடம்பெருகிறது. வேறு எந்த தெய்வத்திற்கும் காவடி எடுப்பது இல்லை என்றாலும் முருகக் கடவுளுக்கே காவடி உரித்தாக இருப்பது காவடிக்குச் சிறப்பை அளித்து வருகிறது. இதனோடு மட்டும் இல்லாமல் மயில் ஆட்டம், காளை ஆட்டம், கரகாட்டம் இணையும் போது பார்க்கும் மக்கள், வாசிக்கும் நாதஸ்வரம், தவில் இசை கருவிகளுக்கேற்ப கால்ஆட்டம் இடம்பெறுவது கிராமிய கலைகளுக்கும் முருக வழிபாட்டிற்கும் வளர்ச்சி நிலையை எட்டுவதாகவே இருந்து வருகிறது.

**மயில் ஆட்டம்**

மயில் முருகனின் வாகனம் என்ற நிலையில் பார்க்கும் பக்தர்கள் முருக வழிபாட்டில் வீதி உலாவில் மயில் ஆட்டம், கரகாட்டம், இன்றியமையாத ஒன்றாக இருப்பது போல காவடியாட்டம் இடம்பெறுகிறது. வாத்தியம் வாசிக்கும் இசைக்கு ஏற்ப காவடியைச் சுழற்றி ஆடும்போது மக்களைப் பரவசத்தில்

ஆழ்த்தும் என்பது நிசப்த்த உண்மை என்பதை கிராமியக் கலைகளில் இன்றும் காணமுடிகிறது.

வழிபாடு என்ற நிலையை மட்டும் பார்க்காமல் அதனோடு தொடர்புடைய கிராமியக் கலைகள் மக்களைக் கவலைகள் மறந்து உற்சாகம் பெறச் செய்யும் ரசவாத வித்தை என்று கூறினாலும் மிகையாகாது இருப்பினும் மயில் என்றால் அழகு, முருகன் என்றால் அழகு, தமிழ் என்றல் இனிது ஆகவே தமிழ்க் கடவுள் முருகன் என்று கூறினாரோ என்றும் அறிய தோன்றுகிறது.

**முடிவுரை**

இசைக்கு மயங்காத உயிர் இல்லை என்பது சான்றோர் கூற்று அதற்கேற்ப முருக வழிபாட்டில் உருவாக்கும் இசை தொடர்புடைய ஒலி பார்க்கும் கேற்கும் பக்தர்களை முருக வழிபாட்டில் லயிக்கும் ஒரு கருவியாக இருந்தாலும் கிராமிய கலைகளான காவடியாட்டம், மயில் ஆட்டம், காளை ஆட்டம், கரகாட்டம், இவை எல்லாம் நம்முன்னோர்களின் வழிவழியே வந்து இடம்பெற்று இருப்பதாலே கிராமியக் கலைகள் முருக வழிபாட்டில் அழியா இடம்பெறுவதாக இருந்தாலும் அலகு குத்துதல், பால்குடம், தேர் இழுத்தல் இவைகள் எல்லாம் நம்மை உற்சாகபடுத்தும் விதமாகவும் இருப்பதாலே முருக வழிபாட்டில் கிராமியக் கலைகள் முக்கிய இடம் தரப்படுகிறது என்றே கருதத் தோன்றுகிறது.

**துணைநூல்பட்டியல்**


1. கந்தன் .கி. தமிழக சிற்பக்கலை வரலாறு, தஞ்சாவூர், 2017.
2. சந்திரகுமார்.த. தமிழகக் கோயில் ஆய்வுகள், தஞ்சாவூர், 2007.
3. சாமி.பி.எல். தமிழ் இலக்கியத் தாய்தெய்வ வழிபாடு, சென்னை- 2017.
4. பவண்துரை. தமிழக ஓவியகலை மரபு பண்பாடு, தஞ்சாவூர், 2004.

# கலியுகவரதன் கந்தன்

முனைவர் இரா. வள்ளி
உதவிப்பேராசிரியர்
ஸ்ரீமத்.சி.பா.சு.த.க.அ.கல்லூரி,
மயிலம்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்துவானுறையும் தெய்வத்துள் ஐக்கியப்பட, மானுட சமூகத்திற்குப் பெரியோர் காட்டிய வழிகள் மிகப்பல. மனிதனை ஆற்றுப்படுத்துவதற்குத் தோன்றிய நெறிகளே சமயம் எனப் பெறுகின்றன. இந்து மதத்தில் எண்ணற்ற சமயங்கள் உள்ளன என்பதை அரிய சமயம் ஒருகோடி என்பர். அவற்றுள் எளிதில் இறைவனை அடைவதற்கு அகச் சமயங்கள் ஆறனை அத்வைதம் கண்ட ஆதிசங்கரர் வகுத்தளித்துள்ளார். சைவம், வைணவம், காணாபத்யம், கௌமாரம், சாக்தம், சௌரம் எனும் ஆறு சமயங்களுக்கும் தனித்தனியே கடவுளரைக் குறிப்பிட்டாலும் ஆறனுக்கும் தனிப்பெருந் தலைவன் ஆறுமுகனே என்பதை, அறுசமயநீதி யொன்றும் அறியாமல், அறுசமய சாத்திரப் பொருளோனே (திருப்புகழ்) எனும் தொடர்கள் மெய்ப்பிக்கும்.

கலியுகத்தில் பக்தி செலுத்தினால் முக்தி கிட்டும். பக்தித் தத்துவம் பயன் மிக்கது. வேலை வணங்குவதே எமக்கு வேலை எனப் பாடிய பாரதி எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா! எனப் புளகாங்கிதம் அடைகிறார். பெரியோர் வகுத்த நான்கு யுகங்களில் கலியுகம் மிகக் கொடுமையானது. பிறவிப் பிணியில் வாடுபவர்க்கு மிக்க துயரத்தை மேன்மேலும் அளிக்கவல்லது. தரும தேவதை ஒரு பாதத்தில் நிற்கக் கூடியதும் அறம் குன்றியதுமாகிய இக்கலியுகத்திலே விசேட பிரத்யட்ச தெய்வமாக இருந்து ஒருமுறை நினைத்தாலும் அன்பர்க்கு நல்லருள் பாலிப்பதால் கலியுகவரதன் என்ற காரணப் பெயரும் உண்டாகியுள்ளது. ஆதலால் ஒருமை மேவி இறைவனை நினைக்குந் திருவுடையீர்! இக்கலியுகத்தில் எந்தையாகிய கந்தவேளை எந்த வேளையும் மறவாது இருமை யின்பமும் எளிதில் அடைவோமாக (முருகன் பெருமை. 21) என்பார் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்.

*சுக்குக்கு மிஞ்சின வைத்தியமு மில்லை*
*சுப்ரமண்யத்திற்கு மிஞ்சின தெய்வமு மில்லை*
*"ஒருகால் நினைக்கின் இருகால் தோன்றும்"*
*"வேலுண்டு வினையில்லை மயிலுண்டு பயமில்லை"*
*"அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்"*

எனும் தொடர்கள், முருகப்பெருமானின் அருளைச் சுட்டுகின்றன.

**கௌமாரம்**

சூரபத்மன் முதலான அசுரர்களை வதம் செய்து அமரர்களைக் காப்பதற்கு அவதரித்தவனே ஆறுமுகன். அமரர் இடர்தீர அமரம் புரிந்த

குமரனடி நெஞ்சே குறி என்பார் பாலன் தேவராயன். அதர்மத்தை வேரறுத்து தர்மத்தைக் காப்பதற்குத் தோன்றிய வள்ளிமணாளன் முருகப்பெருமானைத் தலைவனாகக் கொண்டு தனிப்பெருஞ் சமய நெறியாகக் கௌமாரம் விளங்குகின்றது. முருக வழிபாடு பழங்காலந் தொட்டே இருந்து வந்துள்ளமையைச் சேயோன் மேய மைவரை உலகு எனத் தொல்காப்பியம் சுட்டுவதிலிருந்து அறிய இயலுகின்றது. பரிபாடலிலும் கலித்தொகையிலும் சிவகுமாரன் எனப் போற்றப் பெறுகிறான் முருகன். திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளான சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து உருவான ஆறு தீப்பொறிகள் வாயுவாலும் அக்னியாலும் தாங்கப் பெற்று, இடையில் கங்கா தேவியாலும் தாங்கப் பெற்று (மந்தாகினி தந்த வரோதயனே கந்தரனுபூதி.) நிறைவாக சரவணப் பொய்கையில் ஆறு தாமரை மலர்களில் குழந்தைகளாக உருவெடுத்து கார்த்திகைப் பெண்கள் அறுவரால் வளர்க்கப் பெற்று, அன்னை பார்வதியின் அணைப்பில் ஆறு குழந்தைகளும் ஓருருவாகி ஒப்பற்ற தனி முதலாகிக் கந்தன் எனப் பெயர் பெற்றது. கற்பனை என்றாலும் கற்சிலை என்றாலும் கந்தனே உனைமறவேன் எனக் கவிஞர்களால் பாடப் பெற்ற கந்தப் பெருமானின் கருணை அளவிடற்கரியது.

*இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்*
*என்ன பயத்ததோ சால்பு.* (குறள்.)

எனும் வள்ளுவரின் வாய்மொழிக்கிணங்க, கடலின் நடுவே மாமரமாக நின்ற சூரனைச் சம்ஹாரம் செய்ததோடு மட்டுமின்றி அவனை மயிலாகவும் (வாகனம்), சேவலாகவும் (கொடி) தன்னுடனேயே ஐக்கியப்படுத்தி மயில்வாகனன், சேவற்கொடியோன் எனும் பெயர்களால் புகழப்பெறுகிறான் கந்தன்.

*ஆடும் பரிவேல் அணிசேவல் எனப்*
*பாடும் பணியே பணியா அருள்வாய்* (கந்தரனுபூதி.1)

கருணை வள்ளலாகிய கந்தனை வழிபடும் மரபு தொன்மைக் காலம் தொட்டு இருப்பதனை, சங்க இலக்கியங்களாகிய புறநானூறு, குறுந்தொகை, திருமுருகாற்றுப்படை, பரிபாடல் போன்ற நூல்களிலும், சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி ஆகிய காப்பியங்களிலும் காணமுடிகிறது. பிற்காலத்தில் அருணகிரிநாதரும், குமரகுருபரரும், பாம்பன் சுவாமிகளும் முருக வழிபாட்டைப் பற்றி விரிந்த அளவில் வலியுறுத்தியுள்ளார்கள். அருட்பெருஞ்சோதி கண்ட வள்ளலாரும் தமது ஆன்மீகப் பயணத்தின் ஆரம்ப கால கட்டத்தில் கந்தகோட்டம் சண்முகப் பெருமானையும் அவனது அடியவர்களையும் குறித்து,

*ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற*
*உத்தமர்தம் உறவு வேண்டும்*

எனப் பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கது. சிவபெருமானுடைய முற்றிய திருவே முருகக் கடவுளது அவதாரம். ஈசானம் (ஆகாயம்), தற்புருடம் (கிழக்கு), அகோரம் (மேற்கு) வாமதேவம் (வடக்கு) சத்தியோசாதம் (மேற்கு) எனும்

ஐந்து முகங்களுடன் கீழ்நோக்கிய அதோ முகத்தையும் முருகப் பெருமானை கொள்ளுமாறு அருள்புரிகிறார் சிவன் என்பதை, ஐந்து முகத்தோடு அதோ முகமும் தந்து எனக் கந்தர் கலிவெண்பா மொழிகின்றது. ஆறு திருமுகங்கள், பன்னிரு திருக்கரங்கள், பன்னிரண்டு திருக்கண்கள், இரண்டு திருவடிகள் என முப்பத்திரண்டு இலக்கணங்களுடன் தோன்றியவர் முருகப்பெருமான்.

சிவபெருமானுக்குரிய எண்குணங்களுள், தன் வயத்தனாதல், இயல்பாகவே பாசங்களிலிருந்து நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலா ஆற்றலுடைமை, வரம்பிலா இன்பமுடைமை எனும் ஆறு குணங்களும் முருகனுக்கு உரியன. இந்த ஆறு குணங்களும் முருகப் பெருமானுக்கு ஆறு முகங்களாக அமைந்தன என்பதை,

*ஏவர்தம் பாலுமின்றி யெல்லைதீர மலற்குள்ள*
*மூவிருகுணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்ததென்னப்*
*பூமியில் சரவணத் தண்பொய்கையில் வைகுமையன்*
*ஆவிகள் அருளுமாற்றால் அறுமுகங் கொண்டானென்றே*

எனக் கந்தபுராணம் எடுத்துரைக்கின்றது.

சிவகுரு

முருகப் பெருமான் அனைவருக்கும் குருவாக அமைகிறார். எல்லோருமே அப்பெருமானைக் குருவாக ஏற்றுக் கொள்ளவேண்டும் என்பதற்காகவே, சிவனும் முருகனிடம் பிரணவ மந்திரத்தின் உட்பொருளைக் கேட்டு உபதேசம் பெறுகிறார். சிவபெருமானுக்கு வேறல்லாதவராகிய முருகப்பெருமான், சிவனுக்கு உபதேசித்தது உலகினருக்குச் சான்றாக விளங்குவதற்கே ஆகும். இவ்வகையில் முருகப்பெருமான் சிவகுரு, சிவகுருநாதன் ஆகிறார். அதே சமயம், உலகங்கள் எல்லாவற்றிற்குமே குருவாகி அருள்கிறார்.

*உலகங்கள் யாவும் உன் அரசாங்கமே* எனும் பாடல் அடி எண்ணத்தக்கது. உருவம் - அருவம், உளது - இலது, மலர் - மரு, மணி ஒளி, கரு - உயிர், கதி - விதி எனப் பலவாகப் பரந்து நிற்கும் கந்தப் பெருமான் குருவாய் வந்து அருள்புரிய வேண்டுமென அருணகிரிநாதர் பாடியுள்ளார்.

*உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்*
*கருவாய் உயிராய் கதியாய் விதியாய்க்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.* (கந்தரனுபூதி. 50)

சஷ்டி, கிருத்திகை, வெள்ளிக்கிழமை போன்ற நாள்கள் முருகனுக்கு விரதமிருக்க உகந்தவை. சட்டியிலிருந்தால் அகப்பையில் வரும் என்பது பழமொழி. முருகப் பெருமானுக்குரிய திதி சஷ்டி என்பதாகும். சஷ்டியை நோக்கச் சரவணபவனார் சிஷ்டருக்குதவும் செங்கதிர்வேலோன் எனக் கந்தசஷ்டி

கவசத்தின் தொடக்கம் நினைவு கூறத் தக்கது. முருகனுக்கு உகந்த சஷ்டியில் விரதமிருந்தால் (மனம், மொழி, மெய்களின் அடக்கம்) அகமாகிய பையில் முருகப் பெருமானின் அருள் சுரக்கும் என்பது வாரியாரின் வாக்கு.

*மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்*
*நிலமிசை நீடுவாழ் வார்.* (குறள்.3)

எனும் குறள் உள்ளமாகிய மலரில் உறைபவன் இறைவன் என்பதைச் சுட்டுகின்றது. வெள்ளை நிற மலருமல்ல: வேறெந்த மலருமல்ல *உள்ளக் கமலமடி* உத்தமனார் வேண்டுவது என்பார் விபுலானந்தர். கந்தனை வழிபடுபவர்க்கு மரண பயமில்லை என்பதைப் பின்வரும் பாடல் சுட்டுகின்றது.

*கார்மா மிசைக் காலன் வரில் களபத்*
*தேர்மா மிசைவந்து எதிரப் படுவாய்*
*தார்மார் பவலா ரிதலாரி எனும்*
*சூர்மா மடியத் தொடுவே லவனே* (கந்தரனுபூதி.10)

எல்லா உயிர்களும் விரும்புவது ஆனந்தம் ஒன்றையே. ஆனந்த வடிவாக இருந்து ஆன்மாக்களுக்கு அருள் புரியும் ஆண்டவன் முருகப்பெருமான், திருக்கண்களில் ஒன்றிரண்டு மலர்ந்தாலும் என்னிரண்டு விழிகளிலே இன்ப ஒளி உண்டாகும் எனப் பாடுவார் கவிஞர் வாலி.

முருகா என்னும் திருநாமமே மெய்ம்மை குன்றா மாழிக்குத் துணை முருகா முருகா என்று உள்ளம் கசிந்து உருகுபவர்கள் இவ்வுலகில் அளவற்ற செல்வத்தைப் பெறுபவர். முருகன் குமரன் குகன் என்று மொழிந்து உருகும் செயல் தந்து உணர்வென்று அருள்வாய் என வேண்டுவார் அருணகிரிநாதர். உலகங்களுக்கெல்லாம் தலைவனாக விளங்கும் கந்தப்பெருமானைத் தமிழ்க் கடவுள் முருகன் எனப் போற்றப் பெறுவது வெள்ளிடைமலை, உலக வாழ்வு வெறுத்து உயிரைவிடத் துணிந்த அருணகிரிக்குக் காட்சி கொடுத்து, தமிழில் கவி பாடும் ஆற்றலையும் கொடுத்து வாக்கிற்கு அருணகிரி என உலகினரால் புகழப்பெறும் வாழ்வு தந்த வள்ளல் முருகனின் அருள் பெற்றோர் பலராவர்.

*முருகா எனஓர்தரம் ஓது அடியார்*
*முடிமேல் இணைதாள் அருள்வோனே.*

எனத் திருப்புகழ் செப்பும்.

கலியுகவரதனாம் கந்தப்பெருமான் ஒருவனுக்கே உயிர், உலகம் இவற்றைப் பொருளாக உடையவன் எனும் பொருள் தரும் *சாமி* எனும் திருப்பெயர் வடமொழியிலும் தெய்வத்தன்மை எனும் பொருள் தரும் *முருகன்* எனும் திருப்பெயர் தென்மொழியிலும் சிந்திப்பவர் சித்தம் களிக்க விளங்குகின்றன. அம்முருகனது நாமத்தை மறவாதவரே பிறப்பென்னும் பேதமை நீங்கி சிறப்பென்னும் செப்பொருளைச் சார்ந்தவராவர்.

## காவடியாட்டத்தின் புலப்பாடு

முனைவர் ஜா. வளர்மதி,
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லூரி,
வாலாஜாபேட்டை, 632513.

பழங்காலந்தொட்டே மக்கள் இயற்கையை வணங்கி வழிபட்டனர். தமிழர்களின் குறிஞ்சி நிலத் தெய்வமான சேயோன் வழிபாட்டினைச் சைவசமயம் இணைத்துக் கொண்டதாகக் கருதலாம். தமிழ் இலக்கியங்களில் மக்கள் நிலத்தை ஐந்திணையாக பகுத்து அவற்றிற்குரிய தெய்வங்களை மரபு வழியாக வழிபட்டனர் என்பது புலனாகிறது. மனித சமுதாயத்தில் கதைகள் நம்பிக்கைகள், சடங்குகள், மரபுகள் போன்றவை நாட்டுப்புற இலக்கியங்களில் பரிமாணங்களாக இருந்து வருகின்றன. பண்பாட்டுப் பின் புலன்களைக் கொண்ட மக்களின் நாட்டுப்புற கலைகளை ஆராய்வதின் நோக்கம் பொதுமையை இனங்கண்டு அறிவதேயாகும். பல்வேறு வடிவங்களில் காவடி ஆட்டம் என்பது முருக வழிபாடோடு பக்தியில் திளைத்து ஆடுவர். காவடி எடுப்பவர் இளைய வயது முதல் முதிய வயது வரை பேதமில்லாமல் தொடர்ந்து ஆடும் ஆட்டமாக காவடி ஆட்டம் நிகழ்ந்து வருவது நடைமுறையில் உள்ள ஒன்றாகும். காவுவதற்கான தடி என்னும் பொருள் பட இத்தடியை காவுதடி என அழைப்பர்.

### புராண நோக்கில் காவடி

அகத்திய முனிவரின் வேண்டுகோளுக்கிணங்க சூரபத்மனின் நன்பனும், முருக பக்தனுமான இடும்பன், சிவகிரி, சப்தகிரி, என்னும் இரண்டு மலைகளைக் காவுதடிகளில் சுமந்து கொண்டு பொதிகை மலை சென்றானாம் பழநியில் சுமையை இறக்கி வைத்து விட்டு இளைப்பாறிய பின் தூக்க முடியவில்லையாம். அங்கு முருகப் பெருமான் மலை மேலிருந்து இடும்பனைக் கேலி செய்ய சிறுவனை நோக்கி பாய்ந்த இடும்பன் தவறி மலையிலிருந்து உருண்டு இறந்தான். இறந்தவனை உயிர்ப்பித்த முருகன் இடும்பனின் கோரிக்கைக்கு இணங்கி இடும்பன் அங்குக் காவல் தெய்வமாக இருக்கவும் கோயிலுக்குக் காவடி எடுத்து வரும் பக்தர்களின் குறைகள் தீரவும் வரம் அளித்தானாம். இவ்வழக்கு இன்றளவும் நிலவி வருகிறது.

### நேர்த்திக் கடன்

தாங்கள் செய்த குறைகள் நிவிர்த்தி அடையவும், முருகனை மகிழ்விக்கவும் குழந்தைப் பேறு வாய்க்கவும் நேர்த்திகடன் செலுத்தவும் காவடி எடுக்கும் முறையைப் பக்தர்கள் பின்பற்றினர். ஆண்களைப் போலவே பெண்களும் காவடி எடுப்பதுண்டு. கால் நடையாகவே முருகனின் கோயிலுக்குச் சென்று நேர்த்திக் கடன் செலுத்திய பின்னர் மீண்டும் கால் நடையாக திரும்பவும் இன்றளவும் இம்முறை வழக்கத்தில் காணப்படுகிறது. தம்பதியினர்

இருவருமாக சேர்ந்து நேர்த்திக் கடன் செலுத்துகிற பழக்கமும் உண்டு. குழந்தைப் பேறு கிடைத்தவுடன் கரும்பைத் தடியாகப் பயன்படுத்தி புடவையில் தூளி கட்டி குழந்தையைக் கிடத்தி காவடியாக எடுத்துச்செல்வர். எனவே இன்றளவும் பழநி மலைக்குச் செல்வோர் வீதிகளில் இந்த கரும்புக் காவடி எடுப்பதைக் கண்கூடாக மற்றும் வழக்கமாக நடந்தேறி வருகிறது என்பது தெளிவாகிறது.

**செடில் குத்துதல்**

ஆறு அங்குலம் நீளம் கொண்ட வெள்ளி வேல்களை ஒரு கன்னத்திலிருந்து மறு கன்னத்திற்குக் குத்திக் கொண்டு நாக்கின் ஊடாக குத்திய படியும் காவடி எடுப்பர். அலகு குத்துதல் எனப்படும் தூண்டில் போல் வளைந்த வெள்ளி ஊசிகள் பலவற்றை முதுகில் குத்தி அந்த ஊசிகளுடன் இணைக்கப்பட்ட கயிறுகளுடன் இன்னொருவர் பிடித்து இழுத்த படி இருக்கக் காவடி ஆடுவர். கயிறுகளின் மூலம் காவடி எடுப்பவரை சில்லுகள் பொருத்தப்பட்ட உயர்ந்த அமைப்புகளிலிருந்து தொங்கிய நிலையில் ஊர்வலமாக கொண்டு செல்வர். இதற்குப் பறவைக் காவடி, தூக்குக் காவடி என்று சுமைகளைச் சுமந்து காவடி எடுக்கும் வழக்கம் உள்ளது.

**நாட்டுப்புற நடனம்**

பல்லவி அனு பல்லவி மூன்று கண்ணிகள் அடங்கிய சரணமாக ஐந்து உறுப்புகள் கொண்டு காவடி சிந்து பாடப்பட்டிருக்கும்.

*பழநி மலையோரம்*
*பசுமையான வயலிருக்கும்*
*பழநி மலை ஆண்டவரே*
*பக்க துணை வருவாரா*
*மயில் உறங்கும் மடி மேலே*
*குயில் உறங்கும் குண்டு மேலே*
*ஒயிலாக நடந்து போறேன்*
*ஓம் முருக காக்குமய்யா*
*கள்ளாக்கா தோட்டத்திலே*
*கந்தருக்கு கோயில் கட்டி*
*காக்கா குருவிக் கெல்லாம்*
*காய்ச்ச சோறு போடலாண்டி*

என முருகப் பெருமானின் சிறப்புகளைச் சிறுவர்கள் தெருவிளையாட்டில் பாடுவது மற்றொரு சிறப்பு. அது பின்வரும் பாடல் மூலம் நன்கறியலாம்.

*வாருமைய்ய கந்தனே*
*வரம் கொடுமைய்யா வேலவனே*
*தீருமைய்யா இவன் குறையை*
*திருச்செந்தூர் வேலனே*

*வடிவேலா வா வா*
*வள்ளி மலை தேடி வா*
*மயில் மேலே ஏறிக்கோ*
*மலை மேலே ஏறிபோ*
*மனசு இருந்தா வெச்சுக்கோ*
*மறந்து போனா போச்சி கா.......*

காவடிப் பாடல்களைச் சிறப்பாகப் பாடும்போது பம்பை, உடுக்கை, தம்புரா, ஜால்ரா போன்ற இசைக்கருவிகள் முழங்குவதைக் காணமுடிகின்றது. ஒருவர் பாட இரண்டாமவர் அரோகரா என்று சத்தம் போட மூன்றாமவர் ஆட நான்காம் கூட்டம் வேடிக்கையோடு தொழுது செல்ல இவ்வகையானப் பாடல்கள் துணை நிற்கின்றன.

| | | |
|---|---|---|
| அரகரனே முருகய்யா | என்ற சப்தம் | (2) |
| அரும் பரனே முருகய்யா காவடிகள் | அரோகரா | |
| நெத்தியில திருநீறு நின்றிருக்கும்... | அரோகரா | (2) |
| நெனைவெல்லாம் முருகய்யா உம் மேல... | ஆரேரிரோ | |
| பால் காவடி முருகய்யா உந்தனுக்கு | அரோகரா | (2) |
| பன்னீர் காவடி முருகய்யா உந்தனுக்கு | அரோகரா | (2) |
| புஷ்பக்காவடி முருகய்யா உந்தனுக்கு | அரோகரா | (2) |
| அன்னக் காவடி முருகய்யா உந்தனுக்கு | அரோகரா | (2) |

என்று பாடித் துதிப்பதைக் காணமுடிகின்றது.

காவடிப் பாடல்கள் பாடிச் செல்கின்ற வேளையிலே அந்தக் கிராம மக்கள் பின் தொடர்ந்து சென்று முருகப் பெருமானின் சிறப்புகளைப் பின் பாட்டாகப் பாடுவது வழக்கம். மேலும் காவடியாட்டத்தின் போது தடியின் இருபக்கத்திலும் இருக்கின்ற கூடை போன்று இருக்கின்ற வடிவத்தில் முருகனை வழிபடுகின்ற பூசை பொருட்கள் இருக்கும். காவடி எடுத்துக் கொண்டே சென்று முருக கோயிலை அடைந்து வழிபடுவர்.

**தொகுப்புரை**

காவடியாட்டத்தின் மூலம் முருகப் பெருமானின் வழிபாடு மட்டுமல்லாமல், மக்களின் நேர்த்திகடனும் முடிவுறாமல் இருக்கும். காவடி ஆட்டத்தால் தோள்கள் வலிமை பெறவும், உடற்பயிற்சி, மற்றும் நா பயிற்சியும் மக்கள் பெறுவது மட்டும் இல்லாமல் முழுமையான மன வலிமையோடு நிறைவான மகிழ்ச்சியோடு காவடியாட்டத்தை நிறைவேற்றுவர். மேலும் வள்ளி முருகன் வீற்றிருக்கும் திருத்தலங்களின் சிறப்பும், மலை, குன்றுகளில் முருகனின் குரவை கூத்து போன்றவைகளும் காவடியாட்டத்தில் முக்கியத்துவம் வாய்ந்ததாக அமையும். முருகனின் அழகைச் சித்தரிக்கும் வேளையில் மலையில் வீற்றிருக்கும் பறவைகள், இயற்கை வளங்கள், மரம் செடி கொடிகள் போன்றவைகளும் வர்ணிக்கப்பட்டு அவைகள் கூட முருகனின் அருளோடு பங்கு பெற்று மானிடம் செழிக்க வீற்றிருபன போல காவடிப் பாடல்கள் சித்தரிக்கின்றன.

# திருச்சீரலைவாய் முருகன்

முனைவர் ம வான்மதி
தமிழ்த்துறை, உதவிப்பேராசிரியர்
காமராஜ் கல்லூரி, தூத்துக்குடி

வாழ்க்கை என்ற பெருங்கடலைக் கடப்பதற்கு ஆண்டவன் அருள் வேண்டியுள்ளது. வாழ்க்கைக் கடலில் விழுந்த மாந்தர்கள், கையாள வேண்டிய தருமங்கள் எத்தனையோ இருந்தாலும், பொன்னும், பொருளும், மனைவி, மக்களும் தேகமும் நிலையில்லாதவை என்று அறிந்தும், இவ்வுலக வாழ்வில் பற்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். செல்வச் செருக்கால் நான் என்ற ஆணவம், அகம்பாவம், மமதை முதலியவற்றிற்கு அடிமையாகி தீராத பாவத்திற்கு ஆளாகின்றார்கள். வாழ்க்கை என்னும் பிறவிப் பெருங்கடலில் மூழ்கிக் கொண்டிருக்கும் மனிதனை மீட்கவல்ல செந்தில் ஆண்டவன் திருச்செந்தூரின் கடலோரம் அரசாட்சி புரிகின்றான்.

### மகிமை மாநகர் செந்தில்

ஆறுபடைவீடுகளுள் இரண்டாவது படைவீடான திருச்செந்தூர், தூத்துக்குடியிலிருந்து 40 கிலோமீட்டர் தொலைவில் உள்ள மிகப்பழைய தலம். திருச்சீரலைவாய் என்பது திருச்செந்தூருக்குப் பெயர்.

திருச்செந்தூருக்கு அலைவாய், செந்தில் என்ற இரண்டு நாமங்களும் சங்க காலத்து நூல்களில் காணப்படுகிறது. எப்போதும் அலைமோதுகின்ற இடத்தில் திருக்கோயில் அமைந்திருப்பதால் அலைவாய் என்ற பெயர் வந்தது. அது அடைமொழியுடன் திருச்சீரலைவாய் என்று வழங்கப்படுகிறது. இங்குதான் முருகப்பெருமான் தங்கி தேவ குருவாகிய வியாழப் பகவனால் பூசிக்கப்பட்டு சூரபத்மனுடைய வரலாற்றைக் கேட்டு அறிந்ததாகக் கந்தபுராணம் கூறுகிறது. இங்கிருந்தே வீரவாகுத் தேவரைத் தூதனுப்பியும் பயன் இல்லாததால் பின்னர் சூரனிடம் போர்க்குச் செல்ல நேரிட்டது. போரில் வெற்றி கண்ட பின்னர் பெருமானைத் தேவர்கள் இத்தலத்தில் தான் பூசித்தனர். முருகப்பெருமான் சூரபன்மனோடு போராடி வெற்றி பெற்று ஜெயாபிஷேகம் செய்து கொண்ட இடமாதலால் அதற்கு ஜெயந்தி என்று பெயர் வந்தது. அதுவே நாளடைவில் செந்தி என்று ஆயிற்று. ‘மகிமை மாநகர் செந்தில்’ என்பது அருணகிரிநாதப் பெருமான் திருவாக்கு.

### திருக்கோயில் அமைப்பு

திருச்செந்தூரில் மூல மூர்த்தி ஒரு முகமுடைய திருக்கோலத்துடன் எழுந்தருளியிருக்கிறான். உற்சவ மூர்த்தி ஆறு திருமுகங்களோடு, பன்னிரு கைகளோடும் காட்சி தருகின்றான். அந்தப் பெருமானுடைய சந்நிதி சண்முக விலாசம் என்று வழங்கப்படுகிறது. செந்திலம்பதி சூரசம்ஹாரம் நடந்த இடமல்ல. மாபெரும் தவத்தினால் அழியாவரம் பெற்ற சூரபத்மனுடைய அகங்காரத்தை

அழித்து, கர்வத்தை அழித்து சூரனைச் சேவலும், மயிலுமாக்கி, தன்னை வணங்குபவர்கள், மயிலையும் சேவலையும் வணங்கும் மாபெரும் பேற்றினை இத்தலத்தில்தான் ஆண்டவன் அருள் செய்தான். இவ்வுலக வாழ்க்கையின் மீது நாம் கொண்ட பற்றுகள் ஆண்டவனை உணரவிடாமல் தடுக்கின்றது. எனவே, இவைகளைப் படிப்படியாக இறக்கி வைக்கவேண்டும் என்பதற்காக சண்முக விலாசத்திலருந்து, ஒவ்வொரு படியாக கீழே இறங்குகிறோம். அகங்காரம், மாயை இவற்றை விட்டு வந்தால் நமக்குக் கிடைப்பது திருச்செந்திலாண்டவன் தரிசனம். கருணைக்கடலான கந்தவேள் பெருமான், நிறைவான இக வாழ்க்கை அத்தனையும் அருளி, படிப்படியாக நம்மை மேலே ஏற்றி விடுகிறான்.

**தீர்த்தம்**

திருச்செந்தூரில் உள்ள சமுத்திர தீர்த்தத்தில் நீராடி ஐந்து தலைகளில் ஒன்றிழந்த பிரமதேவனுக்கு நான்கு தலை கிடைத்ததாலும், பாண்டியராஜன் மகளாகிய அங்கசுந்தரி என்பவளுக்குச் சாபத்தினால் வந்த குதிரை முகம் மாறி அழகிய முகம் கிடைத்ததாலும் அத்தீர்த்தத்திற்கு 'வதனாரம்ப தீர்த்தம்' என்று பெயர். சூரபத்மன் உடலைத் தீண்டிய வேலுக்கு ஏற்பட்ட பாவம் தீர்வதற்காக, அந்தவேலையே நிலத்தில் ஊன்றி, கங்கையை வரவழைத்த தீர்த்தமே நாழிக்கிணறு ஆகும். இதுவே நாழிக்கிணறு எனும் 'ஸ்கந்த புஷ்கரிணி' ஆகும். இங்கு முதலில் நீராடிவிட்டுத் தான், கடலில் நீராட வேண்டும். அப்படி நீராடினால்தான் நாம் செய்த பாபங்கள் நம்மைவிட்டு அகலும்.

**செந்திலாண்டவன் பெருமை**

குமரகுருபரர் ஐந்துவயதுவரை ஊமையாக இருந்தார். அவருடைய தாய் தந்தையர் அவரைத் திருச்செந்தூர் ஆண்டவனுடைய சந்நிதியில் கொண்டு போய்க் கிடத்தி 48 நாட்கள் கடுமையாக விரதமிருந்து செந்திலாண்டவனை மனமுருக வேண்டினர். 48 நாட்கள் விரதம் முடிந்தது. குழந்தையிடம் எந்த மாற்றமும் முன்னேற்றமும் தெரியவில்லை. இறுதியாக குழந்தையைத் தூக்கிக் கொண்டு பெற்றோர் இருவரும் கடலில் உயிர் துறக்க எண்ணிக் கடலில் இறங்கினார்கள் அச்சமயம் செந்திலாண்டவர் அர்ச்சகர் வடிவில் வந்து குழந்தையிடம் ஒரு பூவைக் காண்பித்து இது என்ன? என்று கேட்டார் குழந்தையோ 'பூ' என்று முதல் முறையாக வாய் திறந்து பேசியது. 'பூமேவு செம்மங்கலம்' எனத் தொடங்கும் சுந்தர் கலிவெண்பா பாடினார் குமரகுருபர சுவாமிகள்.

**திருச்செந்தில் இலை விபூதி மகிமை**

ஸ்ரீ சுப்பிரமணியருடைய பெருமையைப் போதிக்கின்ற சகல வேதங்களும் ஒன்று சேர்ந்து, அந்த முருகக் கடவுளினுடைய மகிமையை விளக்க பன்னீர் மரங்களாக இத்தலத்தில் தோற்றம் கொண்டன. இலையில்

காணப்படும் 12 நரம்புகளும் முருகனது 12 திருக்கரங்களையும் நினைவூட்டுவது. செந்திலில் வேதங்களே பன்னீர் மரங்களாகத் தோன்றி விளங்குவதால் பன்னீர் இலையும் வேதமந்திர சக்தியைப் பெற்று தன்னுடன் சம்மந்தப்படும் விபூதியும் பெறும்படி செய்கிறது. விசாகனுக்கு விபூதி அபிஷேகம் செய்து அந்த விபூதியைப் பன்னீர் இலையில் வைத்து தருவதால் அந்நீறு வேத மந்திர சக்தியைப் பெறுகிறது. மந்திர சக்தி பெற்ற இலை விபூதியைக் கண்டதும் சகல வித நோய்களும் ஓடி விலகி விடுகின்றன. காசநோயால் பீடிக்கப்பட்ட ஸ்ரீவிசுவாமித்திரர் திருச்செந்தூர் சென்று, ஒரு மண்டலம் தங்கியிருந்து ஸ்ரீசுப்ரமணியரை ஸ்தோத்திரம் செய்து வரும்போது ஒரு நாள் வைகறையில் செந்தில் முருகன் வயோதிக வடிவில் முனிவர் முன் தோன்றி 'இந்த விபூதியைப் பூசி கொஞ்சம் உள்ளுக்கும் அருந்துக' என்று சொல்ல, முனிவரும் அப்படியே செய்ய காசநோயும் உடனே குணமாயிற்று. தன்முன் தோன்றியவர் செந்திலாதிபனே என நினைத்து வணங்கி ஆடிப்பாடினார்.

### கோபுர தரிசனம்

கோபுர தரிசனம் கோடி புண்ணியம் மற்றும் பாபவிமோசனமும் அளிக்கும் கோபுரத்தின் உச்சி முனையில் புனிதத் தன்மை நிறைந்த கலசம் இருக்கும். மேல் நோக்கிப் பார்த்தால் அந்தக் கலசம் மிகத் தெளிவாகத் தெரியும். எனவே நம் பார்வையை உயர்த்தி மேல் நோக்கி செலுத்துமாறு செய்வது கலசம். அதாவது இதன் மூலம் உயர்ந்த பார்வை ஏற்படுகிறது. பார்வை உயர உயர மனிதன் புனிதனாகிறான். அதாவது தெய்வீகப் பேரருள் நிலையை அடைகிறான். இதுவே கோபுரத்தின் தத்துவம் ஆகும்.

யானையின் மேல் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமானுடைய மகுடம் பலவகை மணிகளால் அமைந்தது. திருமுடியிலுள்ள மணிகள் முருகன் எப்படித் திரும்பினாலும் பளபளவென்று ஒளிவீசுகின்றன. திருமுடிக்குக் கீழே முகங்கள் உள்ளது. முகத்தின் இரு பக்கங்களிலும் இரண்டு குழைகள் விளங்குகின்றன. திருமுகம் சந்திரன் போல விளங்க, ஒளிபடைத்த நட்சத்திரங்கள் சுடர்விடுவது போல குழைகள் ஒளியை வீசுகின்றன. இதனை,

*'நகை தாழ்பு துயல்வருஉம் வதை அமை பொலய்குழை*
*சேண் விளங்கு இயற்கை வான்மதி கவைஇ*
*அகலாமீனின் அவிர்வன இமைப்ப'*

என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

### திருமுகங்கள்

சோதி மயனாகிய இறைவன் ஒரு திருமேனியுடையவனாகிக் கருணைகூர் முகங்கள் ஆறும், கரங்கள் பன்னிரண்டும் கொண்டு எழுந்தருளி உள்ளான். அவனுடைய முகங்கள் ஆறினுள் ஒன்று இயற்கையாக அமைந்த இருளைப் போக்கி, உலகம் குற்றம் இன்றி விளங்கும்படியாகப் பல வகையான கதிர்களை விரிக்கின்றது. முருகப்பெருமான் சுடர்களுக்கெல்லாம் ஒளி

வழங்கி உலகில் இருளைப் போக்கும் திருமுகத்தையுடையவன்.' 'பிரம்மாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகி' என்று முருகனைக் கந்தப்புராணம் கூறுகிறது.

**ஆர்வலர்க்கு அருளும் முகம்**

*'ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகிக்*
*காதலின், உவந்து வரம் கொடுத்தன்றே'*

அன்புடையவர்கள் தன்னைத் துதிக்கத் துதிக்க அவர்களுடைய மனம் விரும்பும்படி, மிக்க விருப்பத்துடன் அவர்களுக்கு வரம் அளிக்கக் கூடியது முருகனுடைய இரண்டாவது முகம். தன்னுடைய பக்தர்களுக்கு எவ்வாறு சென்று அருள் செய்தால் நலம் உண்டாகுமோ அவ்வாறு சென்று வரம் கொடுப்பவன். அடியார்களுக்கு ஏவலாளனாகவும் நடக்கும் இயல்புடையவன்

**வேள்வியைக் காக்கும் முகம்**

அந்தணர்கள் வேத மந்திர முறைப்படி வேள்வி செய்வார்கள். வேள்வியில் தேவர்களை மந்திரங்களால் அழைத்து அவியுணவு வழங்குவது மரபு. தேவர்களுக்கு உணவு கிடைப்பதால் மக்களுக்கு மழையும் நன்மையும் கிடைக்கின்றன. வானமும் வையமும் வாழவேண்டுமென்ற திருவுள்ளம் படைத்த முருகன் தேவர்களுக்கு வரும் இடையூறைப் போக்கக்கூடியவன். வேள்வியில் 'சுபரம்மண்யோம்' என்று முழங்குவார்கள். முருகன் யாகத்தைப் பாதுகாக்கும் பேராளன். அவனுக்கு ஸ்தோம ரட்சகன் என்பது பெயர். அதற்கு வேள்வி காவலன் என்று பெயர். இதனை, 'அந்தணன் மறை வேள்வி காவற்கார' என்று அருணகிரிநாதர் பாராட்டுவார்.

**மெய்ஞ்ஞானம் உணர்த்தும் திருமுகம்**

தட்சிணாமூர்த்தி யாவருக்கும் மேலான குருநாதர். அந்த குருநாதரையே தம் மாணாக்கராக்கி உபதேசம் செய்த பெருமையுடையவர் முருகப்பெருமான். முருகப்பெருமான் தனக்குமேல் குருவின்றி, தான் யாருக்கும் மாணாக்கன் ஆகாமல், பெரிய குருவாக, குமரகுருபரனாக, விளங்குபவன். தீராத ஐயங்களை எல்லாம் தீர்த்துவிடுபவன். இதனை, "எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித் திங்கள் போலத் திசை விளக்கும்" என்ற பாடல் வரிகள், தெளிவில்லாமல் உள்ள பொருள்களை விளக்கும் செயலை முருகனுடைய திருமுகங்களில் ஒன்று செய்கிறது என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

**வீரத்திருமுகம்**

முருகனுக்குப் பன்னிரண்டு தோள்கள். வலிமைக்குரிய தோள்களின் மிகுதியால் பகைவர்களை அழித்து வெற்றி பெறுகிறான். போரில் வெற்றி பெற்றவர்கள், வெற்றி மகளாகிய கொற்றவையை வழிபட்டுக் களவேள்வி செய்வது ஒரு மரபு. களவேள்வி செய்வது வெற்றியை நிலைநிறுத்திக் கொள்வதும், கொற்றவையைப் போற்றுவதும், பேய்களுக்கு விருந்தளிப்பதும்

போரின் முடிவில் நிகழ்பவை. இதனை, "செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக் கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே" என்ற பாடல் வரிகளால் கூறுகிறார் நக்கீரர்.

### மகிழும் முகம்

உலகமெலாம் இன்ப வாழ்வு பெறுவதற்காக வள்ளி நாயகியோடு மகிழ்ந்து விளங்குகிறது ஆறாவது முகம். "மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே, வள்ளியை மணம்புணர்ந்த வந்த முகம் ஒன்றே" என்று முருகனின் ஆறுமுகங்களின் செயல்களாகத் திருப்புகழ்ப்பாடல் விளக்குகிறது.

### திருக்கரங்கள்

திருமுகங்கள் எந்த எந்தச் செயல்களில் ஈடுபட்டிருக்கின்றனவோ, அவற்றிற்கு ஏற்ற காரியங்களையே திருக்கரங்களும் செய்கின்றன.

### முனிவர் இடர் தீர்க்கும் கரங்கள்

திருக்கரங்களில் ஒன்று வானத்திலே செல்லும் முனிவர்களைப் பாதுகாக்கும் பொருட்டு மேலே நீண்டு காணப்படுகிறது. மற்றொரு கையைத் தன் இடையிலே வைத்துக் கொண்டிருக்கிறான் முருகன். இதனை, "விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒருகை உக்கம் சேர்த்தியது ஒரு கை'" என்ற பாடல் வரிகள் மூலம் திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

### யானையைச் செலுத்தும் முகம்

முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கும் பிணிமுகமானது (யானை) அவன் கருத்தை அறிந்து கொண்டு வேகமாகச் செல்கிறது. சண்டப் பிரசண்டமாகக் காற்று அடிப்பது போல வேகமாகச் செல்லும் ஆற்றலுடையது. . இவ்வாறு எழுந்தருளும்போது முருகப்பெருமானுடைய ஒரு கை துடையின் மேல் வைத்து கொண்டும், மற்றொரு கை அங்குசம் என்னும் யானைத் தோட்டியைப் பிடித்து விளங்குகிறது.

### படை ஏந்தும் கைகள்

முருகன் திருக்கரத்திலுள்ள வேலை 'ஞானசக்தி' என்று கூறுவர்.. முருகன் தன் திருக்கரத்தில் வேலை வைத்து சுழற்றிக் கொண்டும், அதற்கு இணையான கையில் கேடயத்தையும் வைத்திருக்கிறான். வேலும் கேடயமும் ஏந்தும் கைகளை, 'இருகை, ஐயிரு வட்டமொடு எ.்.கு வலம் திரிப்ப' என்று இரண்டு கைகள் கேடயத்துடன் வேலாயுதத்தையும் வலமாகச் சுழற்ற! என்று நக்கீரர் கூறுகிறார்.

### ஞான முத்திரைக் கைகள்

'ஒருகை மார்பொடு விளங்க, ஒருகை தாரொடு பொலிய' என்ற வரியில். ஞான குருவாக எழுந்தருளியிருக்கும் போது, ஒரு திருக்கரம் மார்போடு ஒட்டி, சின்முத்திரையைக் காட்டி மோன குருவாகவும் முருகன் விளங்குகிறான்.

இடக்கை மாலையைப் பற்றிக் கொண்டும் விளங்குகிறது. இந்த இரண்டு கரங்களும் முருகனுடைய ஞானச் சிறப்பைக் காட்டுகின்றன.

**களவேள்வியை நடத்தும் கைகள்**

முருகனுடன் போர் செய்த சூரபத்மன பேராற்றல் பெற்றவன். அவனை வென்று, தேவர்களுக்கு நன்மை செய்தவன் முருகன். முருகனின் திருக்கரம் ஒன்று 'மேலே தூக்கிச் சுழற்றுகிறது. கையைச் சுழற்றுவது களவேள்வியை நன்கு நடத்துவதற்கு உத்தரவு கொடுக்கும் அடையாளம். களவேள்வி நடக்க ஏவும் கைக்கு இணையாக மற்றொரு கையானது, களவேள்விக்கு வராமல் இருக்கும் பூத பிசாசங்களை உணவு பெறும்படி அவற்றிற்கு அழைப்பு விடுப்பதுபோலப் பேரொலியுடன் ஒலிக்கும் மணியை அடிக்கிறது.

**இன்பம் வழங்கும் கைகள்**

முருகனுடைய திருக்கரங்களில் ஒன்று வானத்திலிருந்து மழையைப் பொழிகிறது இதனை, 'ஒருகை நீலநிற விசும்பின் மலதுளி பொழிப' என்கிறார் நக்கீரர். அடுத்த கை சூரபத்மனால் வாழ்விழந்த தேவர்களைக் காப்பாற்றி தேவலோக மகளிரின் மங்கல வாழ்வு முருகனே காரணமாக விளங்குகிறான் .இவ்வாறு தன் பன்னிருகைகளாலே ஆறுமுகங்கள் செய்யும் செயல்களுக்கு ஏற்றவகையில் நலம் செய்யும் முருகன் திருச்சீரலைவாயில் எழுந்தருளுகிறான்.

**முடிவுரை**

அரக்கன் சூரபத்மனின் ஆணவத்தை ஒடுக்கி அகம்பாவத்தை அழித்து 'நான்' என்ற செருக்கை அழித்து வெற்றியின் இருப்பிடமாக வினை தீர்க்கும் வேலவனாகத் திருச்செந்தூரில் ஆட்சிப் புரியும் முருகன் தஞ்சமென்று வந்த நெஞ்சங்களுக்கு 'அஞ்சாதே' என அபயக்குரல் கொடுப்பவன். மானிடர்களின் வாழ்க்கைக்குக் கலங்கரை விளக்கமாக நிற்கும் செந்திலாண்டவனைத் தினந்தோறும் உள்ளார்ந்த பிரார்த்தனை செய்யும்போது வழிகாட்டியாக, காவலனாக நம்முடன் வருகின்றான். கேட்டவர்க்குக் கேட்டபடி வாழ்வு தருகிறான். நமக்கு என்றும் உறுதுணையாக வரும் செந்திலாண்டவன் அருள் பெற்று வாழ்வில் வளம்பெறுவோமாக.

# கழுகுமலையில் கழுகாசல மூர்த்தி

**ச. விக்னேஷ்**
(இளங்கலைத் தமிழ் இரண்டாம் ஆண்டு)
பேரறிஞர் அண்ணா அறிவியல் கல்லூரி,
தாருகாபுரம், திருநெல்வேலி மாவட்டம்.

தமிழ்மொழி மீது மிகுந்த ஈடுபாடு கொண்ட கடவுளாக முருகப் பெருமான் குறிப்பிடப்பட்டு வருகின்றார். "முத்தமிழ் வைதாரையும் வாழவைப்பான் முருகன்" என்று அருணகிரிநாதர் குறிப்பிடுகின்றார். குன்றுதோரும் குமரக் கடவுள் குடி கொண்டிருக்கும் தலங்கள் பலவற்றுள் மிகச் சிறந்ததாக விளங்குவது தூத்துக்குடி மாவட்டத்திலுள்ள அருள்மிகு கழுகாசலமூர்த்தி எழுந்தருளியிருக்கும் கழுகுமலையே யாகும். இவ்வூர் கோவில்பட்டிக்கும் சங்கரன்கோவிலுக்கும் இடையில் உள்ள ஒரு சிறந்த முருகத்தலம். இது ஒரு யாத்திரை தலமும் ஒரு காணிக்கை தலமும் கூட.

## கழுகுமலை

சம்பாதி என்ற கழுகு முனிவர் இவ்வூர் முருகனை வழிபட்டதால் இந்த ஊர் கழுகுமலை என்று பெயர் பெற்றது என்று கூறுவர். இங்கு உள்ள மலையின் கற்பாறையைக் குடைந்து குகைக்குள் மூர்த்தி அமைக்கப பட்டிருப்பதால் இது குடைவரைக் கோவிலாகும். இக்கோவிலுக்கு மலையே விமானமாகத் திகழ்கிறது. குடவரைக் கோவிலானதால் கோவில் பிராகாரம் சுற்றிவர வேண்டுமானால் மலையைச் சுற்றி வர வேண்டும். அதற்கு கிரிவலம் என்று பெயர். இம்மலை 300 அடி உயரம் உள்ளது. கருவறையும், அர்த்த மண்டபமும் மலையைக் குடைந்து செதுக்கப்பட்டுள்ளன. கருவறையில் வள்ளி தெய்வானையோடு முருகன் காட்சியருளிக்கிறார். மற்ற கோவில்களில் உள்ளதுபோல் முருகனின் வாகனமான மயில் வலது பக்கத்தில் காணப்படாது. இடது பக்கத்தில் தோற்றம் அளிப்பது தனி சிறப்பு. இங்குள்ள மூர்த்திக்கு ஒரு முகமும், ஆறுகரங்களும்தான் உள்ளன. தென் இந்தியாவிலேயே இம்மாதிரியான திருக்கோலம் கொண்ட முருகன் கோவில் காணமுடியாது. தாரகாசுரனை வதம் செய்வதற்காகவே முருகன் இக்கோலத்துடன் காட்சியளிக்கிறார் என்று கூறப்படுகிறது. இப்புண்ணியத்தலம் மிகப் பழமையானது. கல்வெட்டுக்கள் மூலம் இவ்வூர் கோவில் கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது என ஆராய்ச்சியாளர்கள் கூறியுள்ளார்கள். மலையின் உச்சியில் பிள்ளையார் கோவிலும், கோவிலுக்குச் செல்லும் வழியில் சமணர் சிலைகளும் அய்யனார் கோவிலும், குகையும் சுனையும் உள்ளன.

## இராஜபோக முருகனின் தலம்

தன்னிடத்தில் பிறந்தாருக்கு இறந்தாருக்கும் வாழ்ந்தாருக்கும் தன்னை இறை உணர்வோடு கண்டு காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி புகழ்ந்து

மனமார நினைத்து உருகுவார்க்கும் (முக்தி) அளிக்க இறைவன் எழுந்தருளி இருக்கின்ற சீரிய இடமே தலம் என்பர். முருகன் மேற்கு முகமாக இருக்கும் கருவறையையுடைய மலை சிவ சொரூபம் என்று கிழக்கு முகமாக இருக்கும் மலை சக்தி சொருபம் என்றும் வேதாகம நூல்களில் கூறப்பட்டுள்ளது. கந்தபுராணத்தின் ஆசிரியர் கச்சியப்ப முனிவர் தாம் அருளிய கந்தபுராணத்தில் குன்று தோராடிய குமரன் மேற்கு முகமாக உள்ள தலங்கள் மூன்று என்றும் அவற்றில் இராஜபோகமாக முருகன் வீற்றிருக்கும் தலம் கழுகுமலை என்றும் குறிப்பிடுகிறார்.

**இத்தலத்தின் பெயர்கள்**

இத்தலம் கழுகுமலை, தென்பழனி, கழுகாசலம், உவணகிரி, சஜமுகபர்வதம், சம்பாதி'ே்த்திரம், என்று பல பெயர்களால் வழங்கப்படும். இத்தலத்தைத் தென்பழனி என்று புராணங்களில் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. இதனைத் தென்பழனி என வழங்கக் காரணம் வடபழனியைப் போல மேற்கு முகமாக முருகன் சன்னிதானம் உள்ளது.

**தீர்த்தம்**

நீரினை மூர்த்திகளுக்கு நீராட்டுவாருக்கும், தன்னிடம் நீராடப் பெற்றாருக்கும் வீடுபேறு அளிக்கவல்லது தீர்த்தமாகும். இவ்வூர் மலைக்கு ஓரமாக உள்ள தடாகத்தை ஆம்பல் நதி என்பர். இந்தத் தடாகத்தைக் கச்சியப்ப சிவாச்சாரியார் தம் கந்தபுராணத்தில் ஆம்பல் என்று குறிப்பிட்டுள்ளார். ஆம்பல் ஓர் மலராகும். நீர் வற்றாத வள்ளி சுனை என்ற நீர் ஊற்று ஒன்றும் இங்கே உண்டு. இக்கோவில் வளாகத்தினுள் ஒரு அழகிய தெப்பம் உள்ளது. இதனைக் குமாரத் தெப்பம் என்றழைப்பர். இக்குளத்தின் நான்கு பக்கமும் அடிக்கற்களால் வெகு அழகாக அமைக்கப்பட்டுள்ளது. இது கருங்கல் மலைப்பாறைக்கு அருகில் கண்களைக் கவரும் தன்மையில் அமைந்துள்ளது. தண்ணீர் குடிக்க இனிய சுவையுடன் கூடியதாக இருக்கின்றது. இதன் தரையில் அப்ரேக் போன்ற உலோகப்பொருள் காணப்படுகிறது. இத் தண்ணீர் இவ்வுலோகத்தினால் கெட்டுப்போவதில்லை. உடலுக்கு நன்மை செய்கிறது.

**ஊரார்களின் செவிவழிச் செய்தி**

அதிமதுரபாண்டியன் என்ற ஒரு அரசன் வெகுகாலத்திற்கு முன் பழங்கோட்டையைத் தலைநகரமாகக் கொண்டு ஆண்டு வந்தான். இம்மன்னனுடைய அரண்மனைக்குச் சுமார் ஒரு கல் தூரத்தல் உவண வனம் என்று ஒரு காடு இருந்தது. இக்காட்டில் ஒரு மலை 300 அடி உயரத்தில் கம்பீரமாக காட்சியளித்து வந்தது. இம்மலையை உவணகிரி (உவணம்: கழுகு. கிரி: மலை) என்றழைப்பர். ஒரு நாள் அதிமதுர பாண்டியன் வேட்டையாடி களைப்புற்று உவண வனத்திலுள்ள மலையின் அடிவாரத்தில் ஒரு வேங்கை மரத்தடியில் தங்கி இளைப்பாறினார். அப்போது அங்கு அவன் ஒரு அதிசயங்கண்டான்.

ஒரு பசு தானாகவே ஒரு பாறையில் மேல் பால் சுரப்பதைக் கண்டான். பசு பால் சுரப்பதைக் கவனித்துக் கொண்டிருக்கையில் பூசை நடக்கும் பொழுது ஏற்படும் மணியோசை போல் மணியோசையும் அவன் காதில் விழுந்தது. மன்னன் வியப்புற்றான். சுற்றும் முற்றும் பார்த்தான். பின்னர் பசு பால் சுரந்த பாறையை அடைந்தான். உற்று நோக்கினான். பசு அரசன் வருகை கண்டதும் மருண்டு ஓட ஆரம்பித்து பூசை மணியின் ஓசையும் குறைந்தது.

மன்னர் தன் ஊர் திரும்பினான். அன்று இரவே முருகன் இரண்டு அடியார்கள் கனவில் தோன்றி அவ்விருவரையும் உடனே சென்று மன்னனைக் கண்டு பசு பால் சுரந்த பாறை அமைக்கும் இடத்தில் தனக்கு ஒரு அழகான ஆலயம் அமைக்கும் படியும் இச்செய்தியை வேந்தனிடம் நேரில் சொல்லுமாறும் கட்டளையிட்டு மறைந்தான்.

இறைவனின் கட்டளைப்படி இவ்விரு அடியார்களும் மன்னனை சந்தித்துச் செய்தியை முற்றும் விளம்பினார்கள். இச்செய்தியைக் கேட்ட அரசன் காலம் தாழ்த்தாது உடனே தனது பரிவாரங்கள் சூழ பசு பால் சுரந்த பாறைக்கு விரைந்து போய் பாறையைப் பெயர்த்துப் பார்த்தான். அப்பாறையில் ஒரு குகையும், அக்குகையினுள் மயில்வாகனத்தில் அமர்ந்த முருகன் சிலையும் கண்டான். நெஞ்சார வாழ்த்தி வனத்தைத் திருத்தி முருகனுக்கு நல்ல முறையில் கோயில் ஒன்று அமைத்தும், ஊரைத் திருத்தியும் உவனவனம் என்ற பெயரைக் கழுகுமலை என மாற்றியும் அமைத்தான். இது ஊர் தோன்றிய வரலாறு பற்றி செவிவழியாக கேட்ட செய்தி.

**இது சம்பாதி சண்டாளத்துவம் நீங்கிய தலம்**

இரவணனால் ஜடாயு கொல்லப்பட்டதையும், இராமனால் சகல தருமங்களும் செய்யப்பெற்று ஜடாயு ஜென்ம சாபல்யமுற்றார் என்பதையும் அனுமன் மூலம் அறிந்த ஜடாயுவின் சகோதரன் சம்பாதி வழியில் இராமபிரானைத் தரிசித்து வணங்கி நின்று தான் சகோதரனுக்கு ஈமகிரிகைகள் செய்யாத கரும சண்டாளன் ஆகிவிட்டேன் என்று அதற்கு ஒரு வழி கூற வேண்டும் என்று வேண்ட இராமன் சம்பாதியை நோக்கி நீ கஜமுக பர்வதத்தில் மயில் மீது அமர்ந்திருக்கும் முருகனை அவ்விடத்திலுள்ள ஆம்பல் நதியில் மூழ்கி பூஜை செய்தால் உன் சண்டாளத் தன்மை நீங்கி மோட்சம் அடைவாய் என்றார். இராமன் இட்ட கட்டளைப்படி சம்பாதி ஆம்பல் நதியில் தீர்த்தமாடி கழுகாசலமூர்த்தியை பூசித்து சண்டாளத்தன்மை நீங்கினார் என்பது புராண வரலாறு.

**கழுகுமலையில் வெட்டுவான் கோவில்**

இக்கோவில் பல சிறந்த சிற்ப வேலைப்பாடுகளுடன் வெட்டப்பட்டு உள்ளது. இதன் நீளம் 47 அடி, உயரம் 30 அடி மலையைக் குடைந்து அதன் நடுப்பகுதியில் 30 அடி ஆழத்தில் சதுரமாகப் பல வேலைப்பாடுகளுடன்

வெட்டப்பட்டுள்ளது. இதில் இரண்டு நிலை விமானம் காணப்பெறுகின்றது. இதனை எல்லோராவில் உள்ள கைலாசநாதர் கோவிலுக்கு ஒப்பிட்டுச் சொல்லலாம் என்று பல சிற்ப வல்லுனர்கள் கூறுகின்றனர்.

**இலக்கியச் சிறப்பு**

தேவார காலத்திற்குப் பிறகு பாடப்பட்ட பக்திபாடல்களுன் மிகவும் புகழ் பெற்று விளங்கி வருபவை திருப்புகழ் பாடல்களாகும். இது 13-ஆம் நூற்றாண்டில் தோன்றிய அருணகிரிநாதர் அவர்களால் இயற்றப்பட்டாகும். இந்தப் பாடல்கள் அனைத்தும் முருகப்பெருமானைப் போற்றுவதாகும். கழுகுமலை முருகப் பெருமானைக் குறித்து மூன்று திருப்புகழ் பாடல்களை அருணகிரிநாதர் இயற்றியுள்ளார். 15-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கச்சியப்ப சிவாச்சாரியார் பதினாயிரத்துக்கும் மேற்பட்ட பாடல்களைக் கொண்ட கந்தபுராணத்தினை இயற்றியுள்ளார். இதில் குன்று தோராடிய குமரன் மேற்கு முகமாக உள்ள தலங்கள் மூன்று என்று அவற்றில் இராஜபோகமாக முருகன் வீற்றிருக்கும் தலம் கழுகுமலை எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. 18-ம் நூற்றாண்டில் வாழ்ந்த எட்டயபுரம் காளிப்புலவரும், சிதம்பரகவிராயர் எனும் புலவரும், "கழுகுமலை பிள்ளைத்தமிழ்" என்ற இரண்டு நூல்களைப் படைத்துள்ளார்கள். இசைவாணர்களில் சிறப்பு பெற்ற நாதஜோதி முத்துசாமி தீட்சிதர் அவர்களால் கீர்த்தனைகளும், பாம்பன் சுவாமிகளால் திருப்பாக்களும் பாடப்பட்டுள்ளன. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் கழுகுமலை முருகன் மீது காவடி சிந்து இயற்றியுள்ளார். காவடி சிந்துவின் தந்தை என்று போற்றப்படும் அண்ணாமலை ரெட்டியார் தனது நண்பராக விளங்கிய ஊத்துமலை மன்னர் இருதாலய மருதப்பதேவர் கழுகுமலை முருகனை வழிபட வந்தபோது, இசையோடு கூடிய, கேட்பவரை கிறுகிறுக்க வைக்கும் மெட்டுடன் இக்காவடிச் சிந்தினை பாடினார். பிற்காலப் புலவர்களாக விளங்கிய முகவூர் மீனாட்சிசுந்தர கவிராயராலும், மு.ரா. கந்தசாமிக் கவிராயராலும் தமிழ்நாடு சித்த வைத்திய சங்க அமைச்சராக விளங்கிய சுவாமி விருதை சிவஞான யோகிகளாலும். நாடக உலகில் புகழ் பெற்று விளங்கிய எம்.ஆர். கோவிந்தசாமி அவர்களாலும் கழுகுமலை முருகப்பெருமான் மீது பாடல்கள் பாடப்பட்டுள்ளன.

**கல்வெட்டுச் சிறப்பு**

திருக்கோயில் மற்றும் மலைக்குன்றுகளில் நூற்றுக்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் இருக்கின்றன. இதனைத் தொல்லியல் துறையினர் கள ஆய்வு செய்து தென் இந்தியக் கல்வெட்டுகள் என்ற நூலில் தொகுதி 5 மற்றும் 14ல் வெளியிட்டுள்ளனர். திருக்கோயில் தொடர்புடைய கல்வெட்டுக்களாக இவ்வாலயத்தில் உள்ள ஜம்புலிங்கேஸ்வர சந்நிதியின் தெற்குச் சுவரில் 11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு உள்ளது. மேற்கண்ட கல்வெட்டில் சோழ, பாண்டியர் ஆட்சிக் காலத்தில் சிவபிராமணர்கள் பூசை செய்து பராமரித்து வந்ததாகக் குறிப்பிடப்பட்டள்ளது. திருக்கோயிலின் தெற்கு வாசலில் காணப்படும் கல்வெட்டு நில விற்பனை குறித்து ஆவணக் கல்வெட்டாகும். இக்கல்வெட்டும்

11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. திருக்கோயிலின் தெற்கு வாசலில் 1902ஆம் ஆண்டு எட்டயபுரம் மன்னரால் நிறுவப்பட்ட கல்வெட்டு ஒன்றும் உள்ளது. இக்கல்வெட்டு திருக்கோவிலுக்குள் சனீசுவர சிலா விக்கிரமம் பிரதிஷ்டை செய்யப்பட்ட செய்தியை எடுத்தியம்புகிறது.

**வரலாற்றுச் சிறப்பு**

மதுரையைத் தலைமையாகக் கொண்ட பாண்டிய நாட்டின் தென்பகுதியல் அமைந்திருந்தது கழுகுமலையாகும். இத்தலத்திற்குத் தெற்கே உள்ள திருநெல்வேலியும், அதனைச் சார்ந்த பகுதியம் தென்பாண்டி நாடு என்று அழைக்கப்பட்டது. பாண்டியர்களை வென்ற சோழ மன்னர்கள் தங்களைச் சோழப் பாண்டியர்கள் என்று குறிப்பிட்டு 11ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டை ஆட்சி செய்தனர். அந்நூற்றாண்டில் சோழ நாட்டுத் தலமாகிய திருவானைக்காவல் அமைந்துள்ள அகிலாண்டேசுவரி அம்மன் திருக்கோயில் போன்று கழுகுமலையின் ஜம்புலிங்கேசுவரர், அகிலாண்டேசுவரி அம்மன் ஆகியோருக்குக் கோயில் எழுப்பியுள்ளவைகள் வரலாற்றுச் செய்தியாகும். 10ஆம் நுற்றாண்டில் கழுகுமலை பெருநெற்சுரம் என்ற பெயரில் தலைநகராக விளங்கியது. அதனை ஆண்ட பாராந்தக வீரநாராயணன் ஆட்சிக்காலத்தில் தளவாய்புரச் செப்பேடு வெளியிடப்பட்டுள்ளது. செப்பேடுகள் வாயிலாக கோவிலின் பணிபுரிவோருக்கு மானியம் வழங்கியதை இருபது "கழஞ்சு பொன்பெறும் பூமியை அட்டிக்கொடுத்தான்" என்ற செப்பேட்டில் பொறிக்கப்படுகிறது. முதலில் பாண்டியநாடு நாயக்கர் ஆட்சிக்கு உட்பட்டு இருந்தது. பின்னர் 16ஆம் நூற்றாண்டில் மதுரை மன்னர் கிருஷ்ணநாயக்கர் தனக்குப் போரில் உதவி செய்து உயிர் நீத்த எட்டயபுர மன்னரின் வாரிசகளுக்குக் கழுகுமலை, அதை சுற்றியுள்ள ஊர்கள், கழுகுமலை திருக்கோயில் ஆகியவைகளை இரத்த மானியமாக அளித்தார். திருமாலை குலதெய்வமாகக் கொண்ட எட்டயபுரத்து மன்னர்கள் கழுகுமலை முருகப் பெருமானையும் குலதெய்வமாகக் கொண்ட திருக்கோயிலுக்கு மண்டபங்கள் வாகனங்கள் செய்வித்ததோடு கழுகுமலை கிராமம் முழுவதையும் கழுகாசலமூர்த்தி கிராமம் என்று பதிவு செய்திருந்தது வரலாற்றுச் சிறப்பாகும்.

**தனிச்சிறப்பு**

மயில் மீது அமர்ந்த காலத்தில் விற்றிருக்கும் முருகப்பெருமான் ஒருமுகமும், ஆறு கைகளும் கொண்டு விளங்குவதும், மயிலின் தலைப்பகுதி இறைவனின் இடப்பக்கத்தில் இருப்பதும் இத்தலத்தின் தனிச்சிறப்பாகும். தேவியர் இருவரும் முருகப் பெருமானின் முன்பு பக்கவாட்டில் நின்ற கோலத்தில் இறைவனை நோக்கும் விதத்தில் அமைந்திருப்பது தனிச்சிறப்பாகும். பொதிகை மலையில் உறையும் அகத்திய முனிவருக்க ஞானத்தை அருளும் ஞான குருவாகவும். செவ்வாய் தோஷம் உள்ளவர்களின் தோஷத்தை நீக்கி மங்கள வாழ்வளிக்கும் மூர்த்தியாகவும் விளங்குவதால் இத்தலம் 'குருமங்கள சேத்திரம்' என்று போற்றப்படும் சிறப்பு அம்சத்தை கொண்டதாகும். கருவறை மலையின் குகையில் அமைந்திருப்பதால் இக்கோயிலின் மலையே கோபுரமாக விளங்குகிறது.

# ஐம்முகச் சிவனும் ஆறுமுகச் சிவனும்

சு. விஜயகாந்தி,
முதல்வர்,
ஸ்ரீமத். சிவஞான பாலய சுவாமிகள்
தமிழ், கலை அறிவியல் கல்லூரி,
மயிலம் - 604304

தமிழகத்தில் சைவம், வைணவம், சாக்தம், காணாபத்யம், கௌமாரம், சௌரம் முதலிய அறுவகைச் சமய நெறிகள் பின்பற்றப்பெறுகின்றன. இவற்றுள் சிவனாகிய பரம்பொருள் வழிபாடு சைவம் என்றும் செந்தமிழ்க் கடவுள் முருகன் வழிபாடு கௌமாரம் என்றும் வழங்கப்பெற்று வருகின்றது. ஐம்முகச் சிவனாகிய சிவபெருமானையும் ஆறுமுகச் சிவனாகிய முருகப் பெருமானையும் முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடுவதால் சிவமே முருகன்: முருகனே சிவம் என்பதைத் தெளிவிப்பதாக இக்கட்டுரை அமைகிறது. இவ்வாய்வுரைக்குச் சான்றாகச் சீகாளத்திப் புராணத்தில் உள்ள நக்கீரச் சருக்கம் அமைகின்றது.

கி.பி.17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரும் "கற்பனைக் களஞ்சியம்", "கவிதாசார்வ பௌமர்" என்று தமிழ்கூறு நல்லுலகால் அடையாளம் காணப்பெற்றவரும், தம் சிற்றிலக்கியப் படைப்புச் சிறப்பால் சிவஞான முனிவர், குமரகுருபரர் ஆகியயோருடன் ஒருங்கு வைத்துப் பிரபந்த மூவருள் ஒருவராகப் போற்றப் பெறுபவருமான துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் சீகாளத்திப் புராணத்தில் கண்ணப்பச் சருக்கம், நக்கீரச் சருக்கம் ஆகிய இரண்டு பகுதிகளைப் பாடியுள்ளார். இவற்றுள் நக்கீரச் சருக்கமானது திருவிளையாடல் புராணம் சுட்டும் 'நெற்றிக்கண் திறப்பினும் குற்றம் குற்றமே' என்று சிவபெருமானிடம் வாதிட்ட நக்கீரர், 'திருமுருகாற்றுப்படை' பாடிய நக்கீரர், 'கையிலை பாதி காளத்தி பாதி அந்தாதி' பாடிய நக்கீரர் ஆகிய மூவரும் ஒருவரே என்ற கருத்தில் இம்மூன்று இடங்களிலும் நக்கீரர் குறித்த செய்திகளை ஒருங்கிணைத்துப் படைக்கப்பெற்றுள்ளது.

### பாடுபொருள் மாற்றம்

திருவிளையாடல் புராணம் சுட்டும் தருமிக்குப் பொற்கிழி அளித்த திருவிளையாடலில் இறைவனோடு சொற்போர் நிகழ்த்திய சங்கப் புலவர் நக்கீரர், நெற்றிக்கண் திறப்பினும் குற்றம் குற்றமே என்று வாதிட்டு இறைவனின் சினத்திற்கு ஆளாகி வெப்பு நோயால் வருந்தி பொற்றாமரைக் குளத்தில் விழுந்தார். வீழ்ந்தவர் தம் அறியாமையால் விளைந்த பிழையை உணர்ந்தார். அவரது நிலையைக் கண்ட புலவர்கள் வருந்தி இறைவனிடம் வேண்ட, நக்கீரர் பாடிய கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதியைச் செவிமடுத்த சிவபெருமான் நக்கீரரை மன்னித்து அவரது பிணி நீக்கி ஏற்றருளினார். பெரும்பற்றப்புலியூர் நம்பி அருளிய இப்புராண நிகழ்வோடு பரஞ்சோதி முனிவர்

அருளிய திருவிளையாடற் புராண நிகழ்வும் ஒத்து அமைந்துள்ளது. மேற்குறித்த இப்புராண நிகழ்வை,

*"அருந்தமிழ்க் கீரன் பெருந்தமிழ்ப் பனுவல்*
*வாவியல் கேட்ட காவியங் களத்தினான்"* (கல்லாடம்,52)

என்று கல்லாட ஆசிரியரும் குறிப்பிட்டுள்ளார். சிவப்பிரகாசர் இப்புராண நிகழ்வை நீட்டித்துப் பாடுபொருள் மாற்றம் செய்து நக்கீரச் சருக்கத்தை அமைத்துள்ளார்.

நக்கீரர் செருக்குற்றுப் பேசியதைக் கேட்ட சிவபெருமான் அவரை நோக்கி, 'இறைவியின் கூந்தலை நீ பழித்தமையால் குட்டநோய் கொண்டு அலைந்து வருந்துக' எனச் சினந்துரைத்தார். அதனைக் கேட்ட நக்கீரர் தம் அறியாமையை உணர்ந்து இறைவனிடம் தம் அறியாப் பிழையைப் பொறுத்தருள வேண்டினார். இறைவனும் மனமிரங்கி நீ கயிலையைக் கண்டு வணங்கினால் இப்பிணி தீரும் என்றருளி மறைந்தார். தம் பிணியைத் தீர்க்கக் கருதிய நக்கீரர் சங்கப் புலவர்களிடத்து விடைபெற்றுக் கயிலை நோக்கித் திருத்தலப் பயணம் மேற்கொண்டார். கயிலைக்குச் செல்லும் வழியில் கங்கையில் புனித நீராடி காசி, கேதாரம் முதலிய திருத்தலங்களை வழிபட்டுப் பின்பு கயிலை நோக்கிச் செல்லும்போது வழியில் அழகிய தடாகம் ஒன்றைக் கண்டு அதன் கரையில் உள்ள ஆலமர நிழலில் சற்று நேரம் இளைப்பாறினார். அப்போது ஆலமரத்திலிருந்து வீழ்ந்த இலையொன்றின் பாதி நீரில் மீன் வடிவமாகவும் நிலத்தில் இருந்த மீதி இலை பறவை வடிவமாகவும் இருந்த அதிசயக் காட்சியைக் கண்டு வியந்தார். அவ்விசித்திரக் காட்சியில் தம்மை மறந்திருந்தபோது பூதமொன்று அவ்விடத்து வேகமாக வந்து நக்கீரரைப் பிடித்துச் சென்று தான் முன்பே மலைக்குகையில் சிறைப்பிடித்து வைத்திருந்த தொள்ளாயிரத்துத் தொன்னூற்று ஒன்பதின்மரொடு இவரையும் சேர்த்துச் சிறை வைத்தது. பூதம் குகையினுள் இருந்த ஆயிரம் பேரையும் ஒருசேர உண்ணும் பொருட்டு நீராடச் சென்றது. குகைக்குள் புதிதாக வந்த நக்கீரரை நோக்கிச் சிறைப்பட்டிருந்தவர்கள் 'உன்னால் எண்ணிக்கையில் இங்குள்ளோர் ஆயிரமாகித் தற்போது பூதத்திற்கு உணவாகப் போகிறோம்' என்று உள்ளம் வருந்திக் கூறினர். இதனைக் கேட்ட நக்கீரர் அவர்களது துயர் கண்டு வருந்திச் செந்தமிழ்க்கடவுள் சேயோனை நினைந்து திருமுருகாற்றுப்படையைப் பாடிப் பரவினார். நக்கீரரின் செந்தமிழ் அமுதில் திளைத்த முருகப்பெருமான் மயில் மீது அவர் முன்பு தோன்றிப் பூதத்தை அழித்து அனைவரையும் காத்தருளினார். நக்கீரர் முருகப்பெருமானை வணங்கி, தனது பிழையால் ஏற்பட்ட குட்டநோயானது அகல கயிலாயத்தைத் தரிசிப்பதற்கு அருளவேண்டி இரந்து நின்றார். நக்கீரரின் வேண்டுகோளை ஏற்ற முருகப்பெருமான், 'எந்தையாகிய சிவபெருமான் திசையைக் காட்டி இன்ன கயிலாயம் என்று சுட்டிக் கூறாமையால் தென் கயிலையைத் தரிசித்தாலும் குட்டநோய் நீங்கும்' என்றருளி ஒரு தடாகத்தைக் காட்டி, 'இதில் மூழ்கினால் சிவபெருமானின் கயிலாயத்தைக் காணலாம்' என்றருளினார்.

முருகப்பெருமானின் அருளாணையின்படி, அவரைத் தொழுது நக்கீரர் தடாகத்தில் மூழ்கித் தென் கயிலாயமாகிய திருக்காளத்தியிலுள்ள பொன்முகலி ஆற்றில் தேவர்கள் மலர் மாரி பொழிய எழுந்தார். தாம் உற்ற குட்டநோய் நீங்கி மாசற்ற உடம்பினைப் பெற்றுத் தலைமேல் கை குவித்துச் சிவபெருமானையும் அம்மையையும் பஞ்சாக்கரத்தையும் உளத்தில் தியானித்து அளவற்ற அன்பினால் திளைத்தார் நக்கீரர். முருகப்பெருமானின் அருளால் சீகாளத்தி வந்த புலவர் கயிலை வேறு, காளத்தி வேறு என்ற கருத்தின்றிக் காளத்தியைக் கயிலையாகக் கருதிக் 'கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி' பாடினார். சிவபெருமான் அவரது இருவினை நீக்கித் தம் திருவடி நிழலில் இருக்க ஆட்கொண்டருளினார். நிரம்ப அழகிய தேசிகர் பாடிய திருப்பரங்கிரிப் புராணத்தில் பூதம் குறித்த இப்புராண நிகழ்வு திருப்பரங்குன்றில் நிகழ்ந்ததாகவும் நக்கீரர் முருகன் அருளால் திருமுருகாற்றுப்படை பாடினார் என்றும் குறிப்பிடப் பெற்றுள்ளதும் ஈண்டு நினைவு கொள்ளத்தக்கது.

**கருத்து உருவாக்கம்**

சிவப்பிரகாசர் தாம் கற்பனைக் களஞ்சியம் என்பதற்கியைய 'சிவமே முருகன்: முருகனே சிவம்' என்ற கருத்தினை மெய்ப்பிக்கவே இப்புராண நிகழ்வை நீட்டித்துப் பாடுபொருள் மாற்றத்துடன் கருத்து உருவாக்கம் செய்துள்ளார். மேலும், தம் பிற படைப்புகளிலும் ஆங்காங்கே புராண நிகழ்வுகளை நீட்டியும், சுருக்கியும், பொருண்மை அடிப்படையில் பாடியிருப்பதும் நினைவு கொள்ளத் தக்கது. தலயாத்திரை மேற்கொள்ளும் தமிழர்கள் வடகாசி விசுவநாதரையும், தென்காசி விசுவநாதரையும் வழிபட்டு யாத்திரையை நிறைவு செய்யும் சமயம் சார்ந்த பண்பாட்டு மரபு நம்மிடையே இன்றும் வழக்கில் உள்ளது. இப்பண்பாட்டு ஒருங்கிணைவு அடிப்படையில் வடதிசையில் உள்ள கயிலையை வழிபடும் எண்ணத்தில் கயிலையை நினைக்கத் தூண்டிய திருக்காளத்தியையும் நினைத்து 'கயிலைபாதி காளத்தி பாதி அந்தாதி'யும் பாடப்பெற்றுள்ளது.

*"கயிலாயத்து உச்சியுள்ளான் காளத்தியான் அவன் என் கண்ணுள்ளான்"*

என்ற திருநாவுக்கரசரின் கருத்து ஈங்கு ஏற்புடையதாகத் திகழ்கிறது. (க.வெள்ளைவாரணன், பன்னிரு திருமுறை வரலாறு, தொகுதி - 2, ப.811) இக்கருத்தினை மனத்தில் கொண்ட சிவப்பிரகாசர் திருவிளையாடற் புராணம் சுட்டும் நக்கீரர் தம் பிணி அகல கயிலை செல்லும் வழியில் கங்கையில் நீராடி காசி, கேதாரம் போன்ற திருத்தலப் பயணம் மேற்கொண்டு நிறைவாகத் தென்கயிலாயமாகிய திருக்காளத்தி இறைவனால் ஆட்கொள்ளப்பெற்றுக் 'கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி' பாடிய செய்திகளை ஒருங்கிணைத்துச் சீகாளத்திப் புராணத்தில் நக்கீரச் சருக்கத்தைப் பாடியுள்ளார்.

**சிவமே முருகன்: முருகனே சிவம்**

சிவமே முருகன்: முருகனே சிவம் என்பதை உணர்த்தும் நோக்கில் சிவப்பிரகாசர் நக்கீரச் சருக்கத்தில் சிவபெருமானையும் திருமுருகாற்றுப்படை

பாட்டுடைத் தலைவன் முருகப் பெருமானையும் ஒருங்கிணைத்துப் பாடியுள்ளார். சிவபெருமானால் குட்டநோய் உற்ற நக்கீரரும் குகையில் பூதத்திற்கு இரையாகவிருந்த பிறரும் முருகப்பெருமானின் அருளாற்றலால் காத்தருளப் பெறுகின்றனர். மேலும், முருகனின் பெருங்கருணையாகிய நெறிகாட்டுதலின் பேரில் தடாகத்தில் மூழ்கித் திருக்காளத்திப் பொன்முகலி ஆற்றில் இருந்து குட்டநோய் நீங்கப்பெற்று 'கயிலைபாதி காளத்தி பாதி அந்தாதி' பாடி திருக்கயிலைக் காட்சி கண்டு இருவினை நீங்கிப் பேரானந்த வெள்ளத்தில் மூழ்கிச் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பெற்றார். இக்கருத்தை,

*"கயிலை வேறு காளத்தி வேறு என்று எண்ணும் கருத்திலனாய்*
*கயிலை பாதி காளத்தி பாதியாகக் கலந்து உறழ்ந்து*
*மயலில் கரும்பா மொழிபாகண் மகிழ வெண்பா வந்தாதி*
*மயிலில் வருவோன் பேரருளால் வந்த புலவன் பாடினான்"*

(சீகாளத்திப் புராணம், நக்கீரச் சருக்கம், பா.133)) என்னும் பாடல் வலியுறுத்தும்.

சிவபெருமான் தன் ஐந்து முகத்துடன் ஆறாவது முகத்தோடு தோன்றி, ஆறு முகங்களின் நெற்றிக்கண்களில் இருந்து தோற்றுவித்த தீப்பொறியில் இருந்து ஆறுமுகத்தோடும் பன்னிருகரங்களோடும் முருகன் அவதரித்தார் என்பது சிவனும் குகனும் ஒன்று என்ற கருத்தானது ஈங்கு பொருத்தமுடைத்து. இக்கருத்தினை,

*"பிரமமாய் நின்று சோதிப் பிழம்பதோர் மேனியாக்*
*கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டு கொண்டே*
*ஒருதிருமுருகன் வந்தாங்(கு) உதித்தனன் உலகம் உய்ய"*
(கந்தபுராணம், பா.92)

என்னும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. மேலும் கந்தர் அனுபூதியும் இதனை வலியுறுத்துகிறது. மும்மூர்த்திகளும் தத்தம் தொழில்புரியும் தலைவராகும்படி முருகன் தோன்றினான் என்பதும் (பத்துப்பாட்டு ஆராய்ச்சி: ப.39) என்பதும் ஈண்டு கருதத்தக்கது.

*"ஞாலம் காக்கும் காலமுன்பின்*
*தோலோ நல்லிசை நால்வர்"* (புறநானூறு - 56)

எனும் இச்சங்கப்பாடலை அடியொற்றி, நக்கீரர் நன்மாறனைப் பாடிய புறப்பாடலில், "முருகனே தோலா நல்லிசை நால்வருள் ஒருவனாகச் சமநிலை தந்து போற்றியிருப்பது முருகன் முழுமுதற் கடவுள் என்பதை உறுதிப்படுத்தும்" (மு.பெரி.மு.இராமசாமி, நக்கீரர் ஓர் ஆய்வு, ப.38) எனும் கருத்தும் இவ்விடம் எண்ணத்தக்கது. மேலும், "சிவமே முருகன் என உமையம்மைக்குச் சிவபெருமான் உபதேசிப்பதாக வரும் 'நான் ஐந்து திருமுகந்தாங்கி ஐந்தொழி லாற்றும் சதாசிவன். நீ பலவாறாக இருப்பினும் ஒருமுகமுடைய பராசக்தி. முருகன் இருவர் முகங்களையும் ஒருங்கு கொண்டுள்ள நமது குமாரன் நாமே அவன்' எனக் கூறுவதாக வரும் சம்பவ காண்டத்தின் சுலோகங்களாலும்

தெளியலாம்" (முருகன், திருவாவடுதுறை ஆதீனம், ப.61) எனும் கருத்தும் சிவமும் முருகனும் ஒருவரே எனும் கொள்கைக்கு அரண் சேர்ப்பதாகத் திகழ்கிறது. சிவ வழிபாடும் முருக வழிபாடும் ஒன்றே எனும் கருத்தை,

> *"சுருதி முடி மோனஞ்சொல் சிற்பரம் ஞான சிவ*
> *சமயவடிவாய் வந்த அத்துவிதமான பர*
> *சுடரொளியதாய் நின்ற நிட்கள சொருப முதல் வாழ்வே"*
>
> (பழநி. பா. 140)

என்று திருப்புகழ் இயம்புகிறது. சிவமே முருகன்: முருகனே சிவம் என்னும் ஒருமைச் சிந்தனையை,

> *"தூய அம்பல லீலா நமோநம*
> *தேவ குஞ்சரி பாகா நமோநம"* (திருப்புகழ், பழநி, பா.104)

என்ற பாடல் வலியுறுத்துகிறது.

முடிபு

மேற்குறிப்பிட்டவற்றால் ஆய்ந்தறிந்த முடிபுகள் பின்வருமாறு:

1. வடதிசையிலிருந்து தென்திசை வரை ஒருங்கிணைத்துப் பாடும் சமயம் சார்ந்த சமுதாயப் பண்பாட்டு இணைவு.
2. தல யாத்திரை மேற்கொள்ளும் அருளாளர்களின் இறையனுபவம் கூறும் சமயக் கொள்கை.
3. சிவனையும் முருகனையும் முழுமுதற் கடவுளாகக் கருதி வழிபடுதல்.
4. சிவனே முருகனாக அவதரித்தமையின் சிவனே முருகன்: முருகனே சிவன் எனல்.
5. சிவனும் முருகனும் ஒன்றென்ற ஒருமைச் சிந்தையை முருகனைப் பாடிப் பரவும் இலக்கியங்கள் நிருபிக்கின்றன.

இவ்வடிப்படையில் சிவப்பிரகாசரும் மூன்று இலக்கியங்களை ஒருங்கிணைத்து ஐம்முகச் சிவனும் ஆறுமுகச் சிவனும் ஒன்றென்ற பொருண்மையை மெய்ப்பித்துள்ளார் என்பது தெளிவு.

# மன்னர் மருதுபாண்டியர்களின் பக்தியும் தொண்டும்

**த. விஜயகுமார்**
(காவல்துறை, புதுச்சேரி)
112, கடலூர் மெயின் ரோடு,
தவளக்குப்பம், புதுச்சேரி– 605 007.

தமிழ்நாட்டில் ஆங்கிலேயர்க்கு எதிரான விடுதலைப் போராட்டத்தை முதல் முதலில் தொடங்கியவர்கள் மன்னர் மருது சகோதர்கள் மட்டும் ஆங்கிலேயரைத் தமிழ் மண்ணிலிருந்து விரட்ட 1780 முதல் 1801 முடிய ஆயுதம் தாங்கிப் போராடினார்கள். இன்றைய விருதுநகர் மாவட்டம் நரிக்குடிக்கு அருகில் உள்ள முக்குளம் என்ற ஊரில் வாழ்ந்த உடையார் சேர்வை என்ற மொக்க பழநியப்பன் என்பவருக்கும் அவரது மனைவி ஆனந்தாயி என்ற பொன்னாத்தாள் என்பவருக்கும் மகனாக 1748 ஆண்டில் பெரியமருது பிறந்தார். 1753ல் சிறியமருது பாண்டியர் பிறந்தார்.

அந்தக் காலத்தில் பெரியமருது பாண்டியருக்கு ராசபிளவை நோய் மூலம் உடல்நிலை குறைவு ஏற்பட்டு அரண்மனையிலே வருத்தத்துடன் இருந்தார். மன்னர் மருது பாண்டியர்கள் ஏற்படுத்திய புலவரவையில் இருந்து ஒரு புலவர் இந்த செய்தியைக் கேட்டு மருதுபாண்டியர்கள் சந்தித்து மன்னரிடம் உங்கள் நோய்க்கு ஒரே தீர்வு குன்றக்குடியில் உள்ள முருகப் பெருமானை வழிபாடு செய்துவிட்டு வருங்கள் என்று கூறினார். அன்று இரவே பெரியமருது தூங்கிக் கொண்டு இருக்கும் பொழுது பாலகுமாரன் ஒருவர் மயில் தோகையுடன் வந்து பிளவைநோயின் மீது திருநீறு வைத்து விட்டதாகக் கனவு கண்டு திடீரென்று எழுந்து பார்க்கும் பொழுது அச்செயல் கனவாகவோ நினைவாகவோ இருக்கும் என மகிழ்ந்தார். மறுநாள் பிளவைநோய் ஏற்பட்ட வடு காணாமல் போய்விட்டது.

முருகப் பெருமானின் அருளால் தன் பிளவை நோயை நீக்கிய நன்றிகடனாக பெரியமருது பாண்டியர் தன் படைகளுடன் புலவர்களை அழைத்துக் கொண்டு அங்குத் திருபணி மேற்கொள்ள முடிவு செய்தனர். முதல் வேலையாக தாங்கள் தங்குவதற்கு ஒரு அரண்மனை கட்டினர். மருது பாண்டியர்கள் தன்னோடு இருந்த காடன் செட்டியாருடனும் குன்றக்குடியில் தங்கி கோவில் திருபணிகளைத் தொடங்கினார். குன்றக்குடி மலை அடிவாரத்தில் அடர்ந்து இருந்த காடுகளை வெட்டிசீர் செய்தனர். சண்முகநாதன் எழுந்தருளியிருக்கும் பீடத்தின் கீழ் இடம் பெற்றிருந்த தகட்டைச் செப்பம் செய்வித்து முருகப் பெருமானை எழுந்தருள்வித்தனர். மலைக்கோவில் மூலவர் கருவறை மயில் மண்டபம், உற்சவ மூர்த்தியுள்ள அலங்கார மண்டபம்,உயர்ந்த சுற்றுமதில்களும் இராஜகோபுரமும் ஆகியவற்றை மருது பாண்டியர்கள் குன்றக்குடியில் செய்த திருப்பணிகள் ஆகும். மலையின் தெற்கே மிகப்

பெரிய தென்னந்தோப்பை உண்டாக்கினர். குன்றக்குடி கோவில் பராமரிப்பு செலவுக்காக செம்பொன் மாறிக் கிராமத்தைத் தானமாக அளித்தனர். கீழரத வீதியில் இப்போது பேருந்து நிலையமாக விளங்கும் இடம் மருது பாண்டியர் அரண்மனை இருந்த இடமாகும். மருது பாண்டியர்களின் புலவர் அவையில் இருந்த சாந்துப் புலவர் அவர்கள் குன்றக்குடி முருகனின் பெருமைகளும் மருது பாண்டியர் செய்த கோவில் திருபணிகளும் பற்றி" மயூரகிரிக் கோவை" என்ற நூலைப் பாட்டுவித்தனர்.

குன்றக்குடி சண்முகநாதன் கோவில் சம்மந்தமான மூன்று ஓலைச் சாசனங்கள் பெரிய மருதுபாண்டியர் 1790ம் ஆண்டு வெளிடப்பட்ட ஓலைச்சாசனம் ஒரு பகுதியாகும். "மலையில் காடு செடிகளை வெட்டி, கோயில் குளம் உண்டாக்க உதவிகரமாக இருந்து திருடர்பயம் தீர காவலுக்குக் கைப்பிடியாகக் கொண்டு வந்த தளவாய் வெள்ளையன் அம்பலகாரனுக்கு அம்பல் மரியாதையும் அம்பலத்தோடு உம்பலம் பெரிய கண்மாய்ப் பாசனத்தில் இரண்டு காணி நஞ்சை நிலமும் செடிவெட்டுக்காக மேற்படி பாசனத்தில் 3 3-8 காணி நன்செய் நிலமும் சர்வ சுதந்தர பாத்தியமாக விடப்படுவதால் ஆண்டு அனுபவித்துக் கொண்டு கோயில் ஊழியம் உழைப்பைத் தவறாது பார்த்துக் கொள்ள வேண்டும்" காடாக புதர் மண்டிக் கிடந்த குன்றுப் பகுதியில் செடிகொடிகளை அழித்து, அழித்து கோவில் குளம் உண்டாக்கி உதவியாய் இருந்தவருக்குப் பெரிய மருதுபாண்டியர் நிலம் வழங்கினார்.

*"மருது நாதிபன் றாமரைப் பொய்கையின் மற்றவனே*
*கருதிய வாயிரத்தூண் மண்டபத்திற் கடம்பணிவேள்*
*வருதிசெய் தோகைமலை யிலரச வனத்தினிதம்*
*பருதியை நோக்கு மலர்போற் கிளிசென்று பார்ப்ப தென்னே"*

இந்த மயூரகிரிக்கோவை பாடலில் குன்றக்குடி ஆயிரங்கால் மண்டபம் மருதுபாண்டியர் அவர்களால் எழுப்பப்பட்டது என்று பாடல் மூலம் சொல்லப்படுகிறது.

*"அருணிதிப் பாலினுமேற் பாரினுமறி யாமையினுன்*
*மருதுதுரை பணிசேர்ந்தன் மயூரவரைந் திருவே*
*யிருவரை யேந்தியொரு வரையுட்கொண் டிருந்தவளோர்*
*வரைதலை மேற்கொண் டனளென்று வெஞ்சொல் வழங்கினரே"*

என்று மயூரகிரிக்கோவை பாடலில் மருதுபாண்டியர் அவர்களால் குன்றக்குடி முருகன் கோவில் திருபணி மேற்கொள்ளபட்டது எனத் தெரிய வருகிறது.

*"வள்ளி மயில்சேர் மயின்மலைக்கே மருதையன் செய்த*
*வெள்ளி மயிலை விரும்புங் குகனளுள் வேந்தன் மறந்பொற்*
*தெள்ளி மயிலி லென்பொன் மயிலைப் புணர்ந்த தேகினும்*
*புள்ளி மயிலி னமேமற வீரன் புபோற்றுதலே"*

என்று மயூரகிரிக்கோவை பாடலில் மருதுபாண்டியர் அவர்களால் குன்றக்குடி முருகன் பெருமானுக்குச் செய்து அளித்த வெள்ளி மயில் வாகனச் சிறப்பைப் பற்றிப் போற்றப்படுகிறது.

*"மேல்எதிர்தும் ஆயிரம்கட் கோபுரமும் மிதக்கலங்கிவிலங்குவாழ்க*
*மால்அனயை மருதுபாண்டியன் செய்திடுக் கோபுரமும் மதுரமேன்மைப்*
*பாலைகொள் கடலைவிடு தாபுரியும் படிபடிகள் பண்பிஎனுங்கிக்*
*சாலும்கெடுக் துடமருதா புரியும் ஒருகொடியி னலண்புதழி இச்செல்வோமே"*

என்று மயூரகிரிக் கலம்பக வரிகளில் மருதுபாண்டியர்கள் முயற்சியால் மலைமேல் இராஜகோபுரம் கட்டிய பெருமை விளங்கும் பாடல் ஆகும். மன்னர் மருது பாண்டியர்கள் முருகப் பெருமான் மீது உள்ள பத்தியால் குன்றக்குடி முருகர் கோவில் மட்டும் இல்லாமல் மற்ற முருகன் கோவில்களிலும் திருப்பணிகள் செய்ய தனிக் கவனம் செலுத்திவந்தார். சிவகங்கை மாவட்டத்தில் சிவஞான சுப்பிரமணிய சுவாமி கோவில் மருது பாண்டியர்களால் கட்டப்பட்ட கோவில் ஆகும். இந்த முருகன் கோவில் பராமரிப்பிற்கென கண்ணாம்பூர் எனும் கிராமத்தை மானியமாக மருதுபாண்டியர் அளித்தனர்.

மானாமதுரையில் இருந்து மிளகனூர் வழியாக நரிக்குடி செல்லும் வழியில் மானூர் என்ற கிராமத்தின் உள்ள சுப்பிரமணிய சுவாமி கோவில் சன்னதி முன் மண்டபத்தை மருது பாண்டியர்கள் கட்டினார்கள், மேலும், மானூர் முருகன் கோவில் திருபணிகள் செய்து புதியதேர் ஒன்று அளித்தனர். பழனியில் உள்ள தண்டபாணி சுவாமிகள் பழனிமலை பண்டார சந்நதி ஆதீனத்திற்குப் பெரியமருது பாண்டியன் 1793-ல் இரு கிராமங்களில் சில நிலங்களை அளித்து அம்மடத்தில் உள்ள பிள்ளையார் கோவில் பூஜை வழிபாடுகள் செய்ய உத்தரவிட்டார்.

மருது பாண்டியர்கள் உலகப் புகழ் பெற்ற காளையார் கோவில் ராஜகோபுரம், மதுரை மீனாட்சி அம்மன் கோவிவில் சேர்வைகாரர் மண்டபம், திருபத்தூர் பைரவர் கோயில், மதுரை திருமோகூர் காளமேகப் பெருமாள் கோயில் போன்ற பல நூற்றிர்க்கும் மேற்பட்ட கோவில்களில் திருபணிகளை, மண்டபம் கட்டுதல், தேர்கள் செய்தல், அன்ன சத்திரம் கட்டுதல் போன்ற பல ஆன்மீக பணிகளைத் தன் ஆட்சி காலத்தில் சிறப்பாகச் செய்தனர். இந்தியாவில் சுதந்திரம் அடையும் நோக்கில் ஆங்கிலேயரை எதிர்த்து முதல் போராட்ட வீரர்கள் மருது பாண்டியர்கள் பயன்படுத்திய வேலும் வளரிகளும் ஆங்கிலப் படைகளின் துப்பாக்கிகளும் ஆங்கிலேயர்களின் தலைகளைச் சிதறடிக்கச் செய்தது.

ஆதாரம்

1. குன்றக்குடித் தலவரலாறு தேவஸ்தான வெளியீடு, பக்.17,26,27,28,29.
2. குன்றக்குடி அரண்மனை ஓலைச்சாசனம், ஆய்வுநூல், பக்.256, 262.
3. சாந்துப்புலவர், மயூரகிரிக் கோவை, பாடல்கள் 82, 200, 407.
4. அ. இராமநாதன் செட்டியார், மயூரகிரிக் கலம்பகம், பாடல் 80.
5. மருதுபாண்டியமன்னர்கள், மீ. மனோகரன், பக்.236, 240, 255, 268, 271, 276, 277.

# சுப்ரமணியர் பரிவார தேவதை நிலைகள் - ஓர் பார்வை

**தி. விஜயமாலா**
முனைவர்பட்ட ஆய்வாளர்,
சிற்பத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சை.

தமிழகத்தில் சங்ககாலம் தொடங்கி நிலவி வந்த முருகன் வழிபாடு ஏறக்குறைய கி.மு 300 முதல் கி.பி 300 வரையிலும் இருந்து வந்ததைச் சங்க இலக்கியங்களான புறநானூறு, அகநானூறு, பரிபாடல், பதிற்றுப்பத்து, பெருநராற்றுப்படை, திருமுருகாற்றுப்படை உள்ளிட்ட பல்வேறு சங்க இலக்கியங்களில் காணக்கூடிய சான்றுகளின் வாயிலாக அறியமுடிகிறது. முருகனைக் குறிப்பிடும்போது சேயோன்,[1] இளமையானவன்,[2] வேலினை ஏந்தியவன், வேலன்[3] முருகன்,[4] என்று பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

தமிழ் இலக்கியங்களில் முருகனை அழகு, அழகன் என்று எந்த அளவிற்குப் பெருமைப்படுத்திப் பேசுகின்றதோ அதுபோன்று குறிஞ்சி நிலக்கடவுளான முருகனை வீரமிக்கவன் என்றும் சினம்கொண்டவன் என்றும் அவரின் செயல்பாடுகளின் இயல்பினை விரிவாக எடுத்துரைக்கின்றன.[5]

தமிழகத்தின் முருக வழிபாடு வடஇந்தியாவில் ஸ்கந்தன், சுப்ரமணியான் வழிபாட்டுடன் இணைப்படுத்தப்பட்டு பிற்காலத்தில் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடதக்க ஒன்றாகும். வடஇந்திய இலக்கியங்களில் எதிலும் தமிழ் இலக்கியங்களில் காணப்படுவது போன்று முருகன் என்ற சொல் இடம்பெறவில்லை. அவ்விலக்கியங்கள் இப்பெயர் பெரும்பாலும் அக்னியுடன் தொடர்புப்படுத்தும் தன்மை பெற்றதாகவே அமைந்துள்ளது. உதாரணமாக சண்டயோக உபநிஷத்தில் (இதன் காலம் கி.மு 8 முதல் 6ம் நூற்றாண்டு வரை இருக்காலம்) சனத்குமாரன் என்பவன் ஸ்கந்தன் என்றும் இவர் அக்னியின் ஒன்பதாவது அம்சம் என்ற வகையிலும் குறிக்கப்பட்டது.[6]

தைத்ரிய ஆரண்யக உபநிஷத்தில் சுப்ரமணியரை ருத்ரனுடன் தொடர்புப்படுத்தியும், ஸ்கந்தனை சண்முகன், ஜெயந்தன், விஷாகன், சுப்ரமணியார், மகாசேனன் என்ற பெயா?களாலும் குறிக்கப்படுகிறது.[7] பௌதாயன தர்ம சூத்திரத்தில் ஸ்கந்தனைக் குறித்திடும் சொல்லாக அமைகிறது. இக்குறிப்புகளில் முன்னார் சொன்னது போன்று முருகன் என்ற சொல் இடம் பெறவில்லை.[8] மேலும் சங்க இலக்கியங்களில் முருகனின் இயல்புகளைச் சுட்டிக் காட்டப்படும் சிலவற்றுடன் ஸ்கந்தனின் இயல்புகள் ஒன்றிணைந்து போகும் தன்மை பெற்றுள்ளதால் பிற்காலத்தில் முருகன், ஸ்கந்தன் ஒருங்கிணைப்பு ஏற்படக் காரணமாக அமைகிறது.

கி.பி 5-ம் நூற்றாண்டில் குப்தர் ஆட்சி எழுச்சி பெற்ற நிலையில் வடஇந்தியப் பகுதியில் ஸ்கந்தன், சுப்ரமணியார் வழிபாடு சிறப்புப் பெற்று இருந்துள்ளதை அறியமுடிகிறது. ஏனெனில் இவ்வரலாற்றுக் காலத்தில் குமரன் என அழைக்கப்படும் ஸ்கந்தனின் தோற்றத்தினை மையப்படுத்தி எழுதிய குமாரசம்பவம் உருவாக்கப்பட்டது.[9] இதற்கு இணையான வரலாற்று காலத்தில் தமிழகத்தில் சங்ககாலம் நிறைவு பெற்று களப்பிரர்கள் வளர்ச்சி பெற்றனர். இந்நிலையில் தமிழகத்தில் நிலவி வந்த முருக வழிபாடு தனது சிறப்புத் தன்மையிலிருந்து விலகத் தொடங்கியது. ஏனெனில் களப்பிர மன்னர்கள் புத்த மற்றும் சமண மதப் பிரிவினைச் சார்ந்தவர்களாக இருந்திருக்கலாம்.

களப்பிரர்களைத் தொடர்ந்து தமிழகத்தில் ஆட்சிக்கு வந்த பல்லவர் காலத்தில் சைவத்தின் நாயன்மார்களின் எழுச்சியின் விளைவாக சைவம் தழைத்தோங்கிடும் நிலையில் சிவனை முதன்மைப்படுத்தி வழிபாடு தோற்றம் பெற்றது. அந்நிலையில் சங்க காலத்தில் தனிப்பெரும் கடவுளாக திகழ்ந்து வந்த முருகன் சிவன் மற்றும் உமையின் மகன்[10] என்ற நிலையிலயே வைக்கப்பட்டது. இதன் வெளிப்பாடாக சோமாஸ்கந்தர் படிமம் தமிழக கலைவரலாற்றில் புதியவரவாக அமைந்து.

கி.பி 6ம் நூற்றாண்டு தொடங்கி ஏறக்குறைய 10ம் நூற்றாண்டு வரை எழுச்சிப் பெற்று வந்த பக்தி இயக்க காலத்தில் சைவத்தை முதன்மைப்படுத்தி பதிகங்கள் பாடிய நாயன்மார்கள் முருகன் சிவனின் மகன் என்ற நிலையிலே வைத்து போற்றி உள்ள நிலையில் முருகனின் வழிபாடு முதன்மை இடத்தில் அமைக்கப்படவில்லை.

இக்கால இடைவேளியில் வடஇந்திய இலக்கியங்களிலும், வழிபாட்டிலும் சிறப்புடன் திகழ்ந்து வந்த சுப்ரமணியரின் வழிபாடு தமிழகத்தின் உட்புகுந்தது. இவ்வழிபாட்டில் ஏற்பட்ட வடஇந்திய தாக்கத்தின் விளைவாக முருகன் வழிபாடு என்பது சுப்ரமணியர் வழிபாடு என்ற நிலைக்கு மாற்றம் பெற்றது. இதனை உறுதிச் செய்யும் வகையில் முதலாம் ஆதித்தன் கி.பி.எட்டாம் நூற்றாண்டில் இன்றைய புதுக்கோட்டை மாவட்டத்தில் கண்ணனூர் என்ற இடத்தில் சுப்ரமணியருக்குத் தனிக் கோயிலினை எடுப்பித்தார். இதன் தொடர்ச்சியாக கி.பி 12ம் நூற்றாண்டு வரை முருகனுக்கென்று தனிக் கோயில் எடுப்பிக்கவில்லை. இலக்கியத்தில் முருகன் வழிபாட்டிற்கு ஏற்பட்ட நிலைப்பாடு என்பது கலையில் தெள்ளத்தெளிவாகடக காட்சிபடுத்தப்பட்டதைச் சோழர்களின் கலைப்படைப்புகளின் வாயிலாக அறியமுடிகிறது. சோழர்கள் காலத்தில் கட்டப்பட்ட கற்றளிகள் பலவும் வடஇந்திய ஆகமங்கள் மற்றும் சாஸ்திரங்கள் நெறிமுறைகளுடன் கட்டபட்டவையாகும். இதன் விளைவாகச் சங்க காலத்தின் முருகன், சோழர் கட்டுமானங்களில் வடகிழக்குத் திசையில் பரிவார தேவதைகளின் ஒன்றாக தேவக்கோட்டத்தில் படிமமாக நிலைநிறுத்தப்பட்டார்.

கருவறை கட்டுமானத்தில் உள்ள தேவக்கோட்டங்களிலும் மற்றும் மையக் கோயிலில் மூன்று புறங்களிலும் பரிவார ஆலயங்கள் அமைத்து

பரிவார தேவதைகள் நிலைநிறுத்தும் மரபு முற்கால சோழர்களில் முதலாம் ஆதித்தன் கோயில்களில் அதிகளவில் காணக்கூடியதாகும்.[11] உதாரணமாக திருக்கட்டளை சுந்தரேஸ்வரர் கோயிலின் ஏழு உபசன்னிதிகளில் படிமங்கள் வைக்கப்பட்டுள்ளன. இச்சன்னிதியில் வைக்கப்பட்ட படிமங்கள் சூரியன், சப்தமாதர்கள், கணபதி, சுப்ரமணியர், ஜேஷ்டா, சந்திரன், சண்டேஸ்வரர், போன்ற படிமங்கள் அமைந்துள்ளது.[12]

கீழையூர் அவனிகந்தர்ப ஈஸ்வர கிரகம் கோயிலின் சுற்றுப் பகுதியில் இடம்பெறும் உபசன்னிதியில் கணபதி, சப்தமாத்ரிகள், சுப்ரமணியர், சண்டேஸ்வரர் போன்ற படிமங்கள் காணப்படுகிறது.[13]

திருப்பாறைத்துறை கோயிலின் முதலாம் ஆதித்தனின் 27-வது ஆட்சியாண்டு கல்வெட்டில் சப்தமாதர்கள், கணபதி, சுப்ரமணியர், ஜேஷ்டாதேவி, சூரியன் (ஆதித்தியபிடாரர்) போன்ற படிமங்களுக்குப் பிரசாதம் வழங்க நிலங்கள் தானமாக்க் கொடுத்தசெய்தி கூறப்படுகிறது.[14]

கீழுர் வீரட்டனேஸ்வரர் கோயிலின் உபசன்னிதிகளில் கணபதி, சுப்ரமணியர், சந்திரன், சூரியன், சப்தமாதர்கள் படிமங்கள் அமைந்துள்ளது. கொடும்பாலூர் முச்சுகுந்தேஸ்வரர் கோயிலின் எட்டு உபசன்னதிகளில் நான்கு சன்னிதிகளில் ஒன்றில் படிமங்கள் இடம்பெறவில்லை. மற்ற மூன்று சன்னதிகளில் சுப்ரமணியர், சண்டேஸ்வர், பைரவர் போன்ற படிமங்கள் காணப்படுகிறது.[15] நங்காவரம் சுந்தரேஸ்வரர் கோயிலின் நான்கு பரிவாரங்களில் சுப்ரமணியர், மகாலெட்சுமி, சப்தமாதர்கள், கணபதி, போன்ற படிமங்கள் அமைந்துள்ளது.[16] காசியப்ப சில்ப சாஸ்திரத்தில், பல்வேறு கோயில்களின் காணப்படும் இவ்வமைப்பு முறையினை, உறுதி செய்திடும் வகையில் ரிஷபதேவர், அக்னி, சப்தமாதர்கள், வீரபத்ரர், கணபதி, சுப்ரமணியர், ஜேஷ்டாதேவி, விஷ்ணு அல்லது காத்யாயனி, சூரியன் போன்ற படிமங்கள் அமைக்கப்பட வேண்டுமென்று குறிப்பிடுகிறது.[17]

மயமதம் என்னும் சிற்ப சாஸ்திரத்தில் குறிப்பிடும் போது ரிஷப, கணாதிபன், பிரம்மா, மாத்ரிகள், குகன், ஆர்யன், அச்சுதன் சண்டேசன் போன்ற அமைக்கப்பட வேண்டுமென்று குறிப்பிடுகிறது.18

இவ்வாறாக வடஇந்திய ஆகமங்கள், சாஸ்திரங்கள் தமிழக வழிபாட்டு மரபில் ஏற்படுத்திய மாற்றம் சோழ மன்னர்கள் கலை மற்றும் வழிபாட்டு போக்கில் மாற்றத்தினை ஏற்படுத்தியது. குறிஞ்சி நிலக்கடவுளாகவும், தமிழர்களின் முதன்மை வழிபாட்டிற்குரிய முருகன் தனது சிறப்பு நிலையினை இழந்ததைத் தொடர்ந்து சுப்ரமணியர் என்ற பெயரில் பரிவார தேவதை என்ற நிலைக்குத் தள்ளப்பட்டார். இத்தகைய மாற்றம் தமிழர்களின் வழிபாட்டு மரபில் வடஇந்திய இலக்கியங்களின் தாக்கத்தினால் ஏற்பட்ட ஓர்மாற்றம் என்பதையும் கடந்து இம்மண்ணுக்குரிய தெய்வமான முருகன் வழிபாடு என்பதுதான் பெற்றிருந்த நிலைப்பாட்டினை இழந்துவிட்டதாகவே கருதமுடிகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. தொல்காப்பியம்,பொருளதிகாரம் .5.
2. சூடாமணி நிகண்டு செய்யுள்.32.
3. தொல்காப்பியம், நூற்பா.1006
4. புறநானூறு -259
5. புறநானூறு -16.
6. சண்டயோகஉபநிஷத் 7.26.2.
7. Subothkapoor, Indian Encyclopedia Vol I, p.7815.
8. Santhiajain, Arya Devata, A Panoramic view of tribal Hindu Cultural Interface, p.196.
9. The birth of Kumara by Kalidasa, (TR) David SmithP.15
10. திருமுருகாற்றுப்படை 256-257.
11. S. R. Balasubramanyan, Early Chola Temples, p.327.
12. S. R. Balasubramanyan, Early Chola Art, p.89.
13. S. R. Balasubramanyan, Early Chola Art, pp.3-38.
14. A R E No. 246 and 258/1903
15. S. R. Balasubramanyan, Early Chola Temples, pp.24-117.
16. S. R. Balasubramanyan> Early Chola Temples, p.2-24.
17. T. A GopinathaRao, Elements of Hindu Iconography, Vol I Part II, pp.422-423.

# முருகனின் ஆறுபடை வீடுகள்

அ. விஜயலட்சுமி
முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்,
கலை அறிவியல் கல்லூரி, மயிலம்

சங்க கால மக்கள் தெய்வத்தின் மீது நம்பிக்கை கொண்டவர்களாகவே படைக்கப்பட்டுள்ளனர். தங்களின் ஆற்றலுக்கு உட்படாத தீய சக்திகள் மற்றும் சம்பவங்கள் ஆகியவற்றிடமிருந்து தம்மைக் காத்துக் கொள்ளவும் அவ்வாறு பெறும் உதவிக்கு நன்றி தெரிவிக்கவும் தெய்வ வழிபாடானது பண்டைத் தமிழ் மக்களிடம் பெருமளவில் இருக்கின்றன. திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்ச்சோலை என்ற முருகனின் ஆறுபடை வீடுகளும், முருகன் செயல்களும் அவனது பெருமைகளும் விரிவாக இக்கட்டுரையில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**ஆறுபடை வீடுகளின் சிறப்புகள்**

**1. திருப்பரங்குன்றம்**

திருப்பரங்குன்றப் பகுதியில் முருகனின் திருவுருவச் சிறப்பும் சூரரமகளிர் ஆடலும், சூரசம்காரமும், முருகனிடம் செல்வார் பெறும் பரிசிலும் திருபரங்குன்றச் சிறப்பும் கூறப்பட்டுள்ளன.

*"உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாங்கு"*

என்று தொடங்குகிறது. முதலாவதாக கூறப்பட்டுள்ள திருப்பரங்குன்ற படை வீட்டில்.

*"செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை*
*மறுஇல் கற்பின் வாள்நுதல் கணவன்"*

முருகன் அடியவர்களைக் காப்பவன், அடியவர்களின் மனமாசுகளைப் போக்கும், அருள் வழங்கும் திருவடிகளை உடையவள். பகைவரை வென்ற கரங்களைக் கொண்ட தெய்வானையின் கணவனாக விளங்குகிறான்.

*"இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை*
*அறுவேறு வகையில் அஞ்சுவர"*

முருகன் போர்க்களத்தில் குதிரை முகமும் மனித உடலும் கொண்ட சூரன், பதுமன் என்னும் இரு அரக்கர்களின் உடல் இரு கூறாக அவர்களை அழித்து, அசுரர்கள் வலிமையை அடக்கி ஒழித்த மாமரமாகி நின்ற அசுரனை வெற்றி கொண்ட புகழ் உடையவன் முருகப் பெருமான்.

*"எய்யா நல்இசைச் செவ்வேல் சேஎய்*
*சேவடி படரும் செம்மல் உள்ளமொடு"*

இப்படிப்பட்ட எல்லாம் வல்ல முருகனைப் பாடி, ஆடி செல்பவர்களுக்கு வேண்டும் வரங்களை அலிப்பவன் முருகப் பெருமான் ஆவான்.

**2. திருச்செந்தூர் - திருச்சீரலைவாய்**

முருகப்பெருமான் கோயில் கொண்டுள்ள படை வீடுகள் ஆறினுள் இரண்டாவதாக விளங்குவது திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூர் ஆகும். இதைச் சுவாதிட்டானத் தலம் என்பர். மன்னார் வளைகுடா கடற்கரையில் அமைந்து அல்லும் பகலும் அலைகளால் மோதப்பெற்று விளங்கும் காரணத்தால் இத்தலம் 'அலைவாய்' என்னும் பெயர் பெற்றது. திருச்செந்தூர் என்ற இரண்டாம் வீட்டில் யானை மீது முருகன் அமர்ந்து உலா வருவதை அறியலாம்.

"கூற்றத்து அன்ன மாற்றமும் மொய்ம்பின்கால் கிளர்ந்து அன்ன வேழம் மேல் கொண்டு" யானை மேல் பொன்மாலை நெற்றிப் பட்டத்துடன் அசைந்தாட, இருபக்கமும் தொங்கக் கட்டிவிடப்பட்ட மணிகள் மாறி மாறி ஒலி எழுப்ப, வலிமை மிக்க காற்றைப் போல் விரைந்து செல்லும் யானை மேல் மாலை, மகுடம், தாமரை, கமண்டலமும், கோடகம் என்ற ஐந்து வகை அலங்காரப் பொருள்களும் அமைந்திருக்க அதன் மேல் முருகன் அமைந்திருப்பதே அழகிய காட்சி ஆகும். முருகப் பெருமான் தமது அவதார நோக்கத்தை நிறைவேற்றியருளிய பெருஞ்சிறப்புடைய திருத்தலம் திருச்செந்தூர். அடியவர் வினையும் அமரர்கள் துயரும் அற அருளும் அருட்சிறப்பும், அற்புதச் சிறப்பும் மிகுந்த இத்தலத்தில் முருகன் கண்கண்ட தெய்வமாக எழுந்தருளி அருள் புரிகிறார். திருச்செந்தூரின் சிறப்பை,

*"நெடுவேல் திகழ்பூண் முருகன் தீம்புனல் அலைவாய்"*
*"வெண்டலைப்புணரி அலைக்குஞ் செந்தில்"*
*"திருமணி விளக்கின் அலைவாய்"*

திருச்செந்தூரில் அவர் பக்தர்களைக் காக்கும் பாலமுருகனாக எழுந்தருளியுள்ளார். இங்குதான் அவர் சூரபத்மனைச் சம்ஹாரம் செய்தார். தேவர்களை முருகப் பெருமான் காத்து நின்ற அருமையான தலமாக திருச்செந்தூர் விளங்குகிறது.

**3. திருவானன்குடி - பழநி**

பழநியில் வீற்றிருக்கும் முருகனைத் தேவர்களும் முனிவர்களும் வணங்குவதை இப்பகுதியில் காணலாம். பிரம்மன், திருமால், சிவன், தேவேந்திரன் ஆகிய நான்கு பெரும் தெய்வங்களும் உலகத்தைக் காக்கின்றனர். தேவலோகத்தில் உள்ள முப்பத்து மூன்று தேவர்களும், பதினெண் தேவ கணங்களும், நட்சத்திரம் போன்ற வாழ்வும், கடலின் புயல் காற்று போன்ற வேகமும், இடி குரலும் பெற முருகனிடம் தேவர்களும், முனிவர்களும் அருள்பாலிக்க வேண்டுவது இப்படை வீட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**4. திருவேரகம் - சுவாமிமலை**

அந்தணர்கள் முருகனை வணங்குவது இப்படை வீட்டில் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். சாத்திர விதிகளை மீறாமல், அவை கூறியபடி, தாய் தந்தையை வணங்கி குடிப்பிறப்பு, குலப்பெருமை குன்றாதபடி பாதுகாத்து 48 ஆண்டுகள் இளமையைக் காத்து, கல்வி கேள்விகளில் சிறந்து, தரும நூல் கூறும், காட்டுத்தீ, வீட்டுத்தீ, ஞானத்தீ என்ற மூன்று வகை தீயையும், சதுரம், முக்கோணம், வில் என்னும் மூன்று குண்டங்களிலே, வளர்ந்து, வணங்கி, முப்புரி, நூல் அணிந்து, சமயச் சடங்கு வழிப்பிறந்த அந்தணர்கள், வழிபாடு செய்யும் போது குறித்த நேரத்தில் நீரில் மூழ்கி, நனைந்த ஈர உடையைச் சுற்றிக் கொண்டு, அது தானாக காற்றில் காய, தலைமேல் கை கூப்பித் தொழுது சரவணபவ என்ற ஆறெழுத்து மந்திரம் கூறி, மலரிட்டு முருகனை வணங்குவார்கள். இப்படி சுவாமி மலையில் இருக்கும் இறைவனான முருகனை அந்தணர்கள் வணங்குவதை அறிய முடிகிறது.

**5. குன்றுதோறாடல்**

குரவைக் கூத்து பற்றி இப்படை வீட்டில் அறிய முடிகிறது. பச்சிலை கொடியில் வாசனை உள்ள சாதிக்காயை இடையியே சேர்த்துக்கட்டி, காட்டு மல்லிகையோடு வெண்ணிறக் கூதாள மலரையும் சேர்த்துக்கட்டி முருகன் மாலையாக அணிந்திருக்க மார்பில் சந்தனம் பூசி, வேட்டையாடும் வில்லை கொண்ட வேட்டுவர்கள் மூங்கிலில் பாதுகாக்கப்பட்ட நாள்பட்ட தேனை உண்டு மலையடிவாரத்தில் உள்ள சிற்றூரில் சுற்றத்தார் உடன் வாழும் வேடுவார்கள் குறிஞ்சிப்பறை கொட்டி குரவைக் கூத்தாடி மகிழ்வார்கள்.

**6. பழமுதிர்ச்சோலை**

ஆறாம் படை வீட்டில் உண்மையும் பக்தியும், தூய்மையும் நிறைந்த இடத்தில் சேவல் கொடியுடன், செவ்வேள் முருகன் குடி கொண்டிருப்பான். முருகனுக்கு ஆடப்படும் நடனம் வெறியாட்டு, அந்த வெறியாடுதல் குறித்த செய்தி இப்படை வீட்டில், வேலன் இயவெறி அயர்களனும் என்று கூறப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. முருகனுக்கு நெய்யோடு, சிறுவெண்கடுகு சேர்த்து நெற்றியில் பூசி, மந்திரம் கூறி மலர்களைத் தூவி, புது ஆடை உடுத்தி, கையில் சிவப்பு காப்பு கட்டி, வெண்பொரி தூவி, கடாவின் இருதியில் வெள்ளை அரிசி சோற்றையும் சேர்த்து படைத்து, இன்னும் பலவகை உணவு பலியிட்டு, சந்தனம் தெளித்து, மாலை அணிவித்து தங்கள் மலைநாடும், நகரும் நலமாக இருக்க வாசனை தூபங்கள் காட்டி, குறிஞ்சிப்பண் பாடி முருகனை வழிபட்ட செய்தி கூறப்பட்டு உள்ளது.

சூரனைக் கொன்றவன், பன்னிருகை கொண்டவன், வேண்டியதை வழங்கும் வேலவன், பாடிப் பிரிசில் பெற வருவோர்க்குப் பல வளமும், நலமும் வாரி வழங்குபவன் முருகா, குகா, கந்தா, கதிர்வடிவேலா என்று முருகனை வழிபட்டமையும் உணரமுடிகிறது.

**முருகனின் ஆறுமுகம் பற்றிய சிறப்புகள்**

"மா இருள் ஞாலம் மறு இன்றி விளங்கப் பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம், ஒருமுகம் ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகி"

1. முதல் முகத்தின் சிறப்பு இருள் சூழ்ந்த இவ்வுலகின் துன்ப, துயரங்களைப் போக்கி, அடியவர்களுக்கு வழிகாட்டி அருள்வதாகும்.
2. இரண்டாவது முகம் அவனை வாழ்த்தி, வழிபடும் பக்தர்களுக்கு வேண்டும் வரம் தருவது.
3. மூன்றாவது முகம் வேள்விகள் செய்யும் அந்தணர்க்கு உதவுவது.
4. நான்காவது முகம் கற்றவர்கள் மனத்திருளைப் போக்கி, அவர்களின் அறிவு ஒளியை மிளிரச் செய்வது.
5. ஐந்தாவது முகம் பகைவர்களை அழித்து பக்தர்களைக் காப்பதாகும்.
6. ஆறாவது முகம் வள்ளியோடு அன்புறவிடுவது ஆகும். ஆறு படைகள் போல் ஆறு முகங்களின் சிறப்பு இதுவாகும்.

**வரம்தரும் முருகனின் பன்னிருகைகள்**

1. முதல் கரம் - வானத்துத் தேவர்களுக்கு வரம் தருவது
2. இன்னொருகரம் இடுப்பில் ஊன்றியது
3. மற்றொன்று பட்டாடை சூடிய தொடைமேல் வைத்தபடி இருக்க
4. இன்னொரு கரம் அங்குசம் ஏந்திருக்க,
5. இருகரங்கள் கேடயமும், வேலாயுதமும் தாங்கியிருக்கும்.
6. ஒரு கரம் மார்பொடு பொருத்தி ஞான முத்திரை காட்டுவது
7. இன்னொரு கரம் மார்பில் புரளும் செபமாலையைப் பற்றுவது,
8. ஒருகரம் வளையல் அசைய மேல் சுழற்றிக் களவேள்வி முத்திரைகாட்ட
9. அதற்கு இணையான இன்னொரு கரம் இனிய ஒலி எழுப்பும் மணி தங்கி இருக்க
10. ஒரு கரம் நீல நிறவானம் அமுத மழைபொழிய அருள,
11. இன்னொரு கரம் தேவ மகளிர்க்குத் திருமண வாழ்த்து கூறும். இப்படி திருமுருகனின் பன்னிருகைகளும் அவற்றிற்குரிய பணிகளைச் செம்மையாக செய்கிறது.

**முடிவுரை**

ஆறுபடை வீடுகளின் சிறப்புகளும், அவற்றில் குடிகொண்டுள்ள முருகப் பெருமானின் ஆறுமுகங்களும், பன்னிருகைகள் பற்றியும், வெறியாடல் பற்றியும், முருகனின் வழிபாடு குறித்தும், முருகனை நாடி வந்து வழிபடுபவர்களுக்கு முருகன் ஒரு அரசனைபோல் அல்லது ஒரு வள்ளலைபோல் வேண்டிய வரங்களையும் வேண்டிய நலத்தையும், பொருள்களையும் வழிங்கியமை பற்றியும் இக்கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

# முருகன் திருத்தலங்கள்

சீ. விஜயலட்சுமி,
17/133L, சாமி நகர், போத்தனூர்,
கோவை-641023.

இயற்கை வழிபாடுகளுள் சிறந்த வழிபாடு அறிவுப் பொருளான அழகுப் பொருளே, இறைவனை எட்டு வடிவமாகப் போற்றுவது வழக்கம். நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி திங்கள், ஞாயிறு, உயிர் என்பன. நில நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன் புலனாய மைந்தனோடு எண் வகையாய்ப் புணர்ந்து நின்றான்.

## விராலிமலை

திருச்சியில் இருந்து மதுரை செல்லும் வழியில் ஆங்காங்கே மயில்களின் நடமாட்டத்தைக் காணலாம். சுமார் 2000 வருடப் பழைமை வாய்ந்த ஆலயம். ஆறுமுகங்களுடன் அசுர மயிலில் அமர்ந்தபடி அற்புதமாகக் காட்சி தருகிறார் மயில்வாகனன். ஆயிரத்து ஐநூறு மயில்களுக்கு மேல் இருப்பதாக பக்தர்கள் தெரிவிக்கிறார்கள். திருச்சியில் உள்ள வயலூர் தலத்துக்கு வந்த அருணகிரி நாதரிடம்... விராலி மலைக்கு வா என்று முருகப் பெருமான் அழைக்க அந்த மலையைத் தேடிச் சென்றாராம் அருணகிரிநாதர். வழி தெரியாமல் தவித்தவருக்கு வேடனாக வந்து தலத்தை அடையாளம் காட்டி அருள்புரிந்தார் கந்தவேள். அருணகிரியாருக்கு அஷ்டமா ஸித்திகளையும் தந்தருளிய தலம் என்றும் போற்றப்படுகிறது. ஐப்பசியில் வரும் கந்தசஷ்டி விழா மிகப் பிரம்மாண்டமாகக் கொண்டாடப்படுகிறது. குழந்தையின் ஆயுள் ஆரோக்கியம் இவற்றுக்காக குழந்தையைத் தத்துக் கொடுப்பதும், தாய்மாமனுக்கு தவிட்டுக்குக் குழந்தையைக் கொடுப்பதும் இன்றைக்கும் நடைமுறையில் உள்ளன. இந்தத் தலத்தில் மட்டுமே முருகப் பெருமானுக்குச் "சுருட்டு" நைவேத்தியம் செய்யப்படுகிறது.

## குட்டிப் பழநி

திருச்சி, தஞ்சை தேசிய நெடுஞ்சாலையில் உள்ளது "துவாக்குடி." இந்த ஊருக்கு அருகில் உள்ள செடிமலை எனும் பகுதியைக் 'குட்டிப் பழநி' என்று அழைக்கின்றனர். இங்கே முருகப் பெருமானின் திருநாமம் "ஸ்ரீபாலதண்டயுதபாணி." மேற்குப் பார்த்த ஆலயம். பங்குனி உத்திரம், தைப்பூசம், கந்த சஷ்டி ஆகியவை சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. கந்தசஷ்டி நாளில் பக்தர்கள் காவடி எடுத்தும், பால்குடம் ஏந்தியும் தங்கள் நேர்த்திக் கடனைச் செலுத்துகிறார்கள். ஆரம்ப காலத்தில் படியேற படிக்கட்டுகள் இல்லாமல் இருந்தன. பிறகு பக்தர்களின் முயற்சியால் படிக்கட்டுகள் அமைக்கப்பட்டன. செடிமலையின் கீழே உள்ள விநாயகப் பெருமானையும் மலையின் மேல் உள்ள ஸ்ரீபாலதண்டாயுதபாணியையும் வணங்குபவர்கள் குறையின்றி வாழ்வர்.

**தபசுமலை**

புதுக்கோட்டை - திருமயம் சாலையில் லேணாவிலக்கு என்னும் பேருந்து நிறுத்தம் உள்ளது. அங்கிருந்து விராச்சியைச் செல்லும் சாலையில் சுமார் 8கி.மீ. தொலைவில் உள்ளது தபசுமலை. இந்த ஆலயத்தின் முக்கியமான விசேஷம் "மூலிகை கலந்த பிரசாதம்." இந்தப் பிரசாதத்தை உட்கொண்டால் சர்க்கரை நோய் குணமாகும். குடல்புண்ணில் இருந்து விடுபடலாம். வலிப்பு போன்ற நரம்புத் தளர்ச்சி நோயையும் கட்டுப்படுத்துகிறது. மேலும் கிரகதோஷம், நாகதோஷம் உள்ளவர்களுக்கு இங்கே முருகப் பெருமானின் சந்தியில் சிறப்புயாகம் செய்யப்படுகிறது. கந்த சஷ்டி நாளில் விரதமிருக்கும் பெண்கள் ஒரேயொருமுறை தபசுமலைக்கு வந்து முருகப் பெருமானைத் தரிசித்துப் பிரார்த்தித்தால் விரைவில் கல்யாணவரம் கூடும் எனவும், கடவுளின் திருப்பாதத்தில் வைத்த எலுமிச்சம் பழத்தைச் சாறாக்கிச் சாப்பிட குழந்தை பாக்கியம் கிடைக்கும் என்பதும் நம்பிக்கை. மலை அடிவாரத்தில் சப்தரிஷிகள் வழிபட்ட இடத்தில் குடைவரைக் கோயிலும் உள்ளது. இந்த இடத்தில் தியானித்தால் உள்ளம் அமைதி பெறும் என்பது உறுதி.

**புத்தூர்**

மதுரையில் இருந்து சுமார் 35 கி.மீ. தொலைவில் உள்ளது உசிலம்பட்டி. இங்கிருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ளது புத்தூர் என்னும் கிராமம். பச்சைப் பசேலென இயற்கை எழில் சூழ்ந்த இந்தக் கிராமத்தில் இருக்கிறார் ஸ்ரீசுப்ரமணியசுவாமி. சுமார் 900 வருடங்கள் பழைமை வாய்ந்த கோயில். நாகாசுரனை வேடனாக வந்து அம்பு தொடுத்துக் கொன்ற தலம். கருவறையில் முருகப் பெருமான் வேடனாகவேக் காட்சி தருகிறார்.

தைப்பூசம், வைகாசிவிசாகம் திருக்கார்த்திகை, பங்குனி உத்திரம் ஆகியவை விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. பயந்தசுபாவம் உள்ளவர்கள், மனதில் குழப்பத்துடன் உள்ளவர்கள், வாழ்வில் முன்னேற்றம் தடையாக உள்ளவர்கள் இங்கு வந்து ஸ்ரீசுப்ரமணிசுவாமியைத் தரிசித்தால் வாழ்வில் சுபிட்சம் நிலவும் எனப் பக்தர்கள் நம்புகிறார்கள். பாம்பு வடிவில் வந்த அரக்கனை அழித்த தலம் என்பதால் சர்ப்பதோஷம் உள்ளவர்கள் வணங்கி வளம் பெற வேண்டிய சிறப்புத் தலமாகும்.

**கொங்கணகிரி**

உலகில் வேறு எந்த மொழிக்கும் இல்லாத சிறப்பு தமிழுக்கு உள்ளது. இம்மொழிக்கென்றே உள்ள தனிப்பெருத் தெய்வம் முருகன் ஆகும். முருகன் தமிழ் மொழியை அகத்தியருக்கு உபதேசித்தார். அகத்திய முனிவர் வாசம் செய்த முருகன் எழுந்தருளிய தலம். திருப்பூர் மாவட்டத்தில் உள்ள மலைக்கோவிலும் ஒன்று. கொங்கு மண்டலத்தைச் சேர்ந்த 24 நாடுகளில் ஒன்றான வாரக்க நாட்டில் பாயும் "காஞ்சிமா நதி" என்கின்ற "நொய்யல்" நதியின் தென்கரையில் "சாமளாபுரம்" என்ற கிராமம் உள்ளது.

இதன் அருகில் சிறுமலையில் 16-ம் நூற்றாண்டிற்கு முன்பிருந்தே முருகப் பெருமானை மக்கள் வேலாயுதசுவாமி என்ற பெயரில் வணங்கி வருகின்றனர். அகத்திய முனிவர் இங்கிருக்கும் சுனையில் நீர் எடுத்து அபிஷேகம் செய்ததனால் 'கொங்கணகிரி' என்று வழங்கப்பட்டது. அருணகிரிநாதரின் திருப்புகழில் "ஐங்கரனைபொத்தமன" எனத் துவங்கும் பாடலில் குறிப்பிடுகின்ற கொங்கணகிரி இத்தலம்தான். குழந்தை வேலாயுத சுவாமியை வழிபட்டால், குழந்தை பாக்கியம் நிச்சயம்கிட்டும். தைப்பூசம், பங்குனி உத்தரம், கிருத்திகை, வளர்பிறை சஷ்டி, அமாவாசை, பௌர்ணமி ஆகிய தினங்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.

**திருமுருகன் பூண்டி**

கோவை மாவட்டத்தில் புராதனச் சிறப்போடு... அமைதியாய் வீற்றிருக்கிற திருத்தலங்கள் நிறையவே உண்டு. அவற்றில், மண்ணின் மணத்தையும் அசாத்தியமான மகிமைகளையும் தன்னகததே கொண்டிருக்கும் ஒரு சில கோயில்களில் *திருமுருகன் பூண்டி* முக்கியமானது. கோவையிலிருந்து திருப்பூர் செல்லும் பாதையில் அவினாசிக்குக் கிழக்கே 5 கி.மீ. தூரத்தில் இந்தத் தெய்வ சன்னதி எழுந்தருளியிருக்கிறது. 1200 ஆண்டுகளுக்கு முன்னர் இக்கோயில் தோற்றுவிக்கப்பட்டதென ஸ்தலபுராணம் தெரிவிக்கிறது. பழங்காலத்தில் இந்தக் கோயிலின் பகுதிக்கு முல்லைவனம், முருகாபுரி, கந்தமாபுரி பட்டினம் என்றெல்லாம் பெயர்கள் வழங்கப்பட்டு வந்திருக்கினறன. பிறகு 'திருமுருகன் பூண்டி' எனும் பெயரே நிலைத்து விட்டது.

முருகப் பெருமான், சிவபெருமானை வழிபட்ட இடம் இது. திருச்செந்தூர, சேய்ஞ்ஞலூர் எனும் முருகன் வழிபட்ட தலங்களின் வரிசையில் இதுவும் ஒன்றெனச் சிறப்புப் பெற்றது ஆகும். பல வருடங்களாகவே இக்கோயில் 'பைத்தியங்கள்' எனப்படும் மனநோயாளிகளைக் குணப்படுத்துகிற மன மருத்துவ நிலையமாகவும் செயல்பட்டு வருகிறது. இங்குள்ள தீர்த்தங்களில் குளிப்பாட்டலும், இறைவழிபாடுமே... அவர்களைக் குணப்படுத்துகிற சக்திகளாக விளங்குகின்றன! 12 நாட்களிலிருந்து 48 நாட்கள் வரையிலும் இங்குத் தங்கியிருந்து நலம் பெற்றுச் செல்கின்றனர். இத் திருத்தலத்திற்கு வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் சென்ற நூற்றாண்டில் பதிகம் பாடியுள்ளார்!

**பொன்மலை வேலாயுத சுவாமி**

கோவையிலிருந்து 21 கி.மீ. தொலைவில் பொள்ளாச்சி செல்லும் மெயின்ரோட்டில் உள்ளது கிணத்துக்கடவு! இங்கேயுள்ள சிறிய குன்றின் மீது கோயில் கொண்டுள்ளார் *வேலாயுத சுவாமி . . . !* கொங்கு நாட்டிலுள்ள மலைகளுக்கும், குன்றுகளுக்கும் ஏதேனும் ஒரு வகையில் தனித்துவமான மகிமைகள் உண்டு! அந்த வகையில் இந்தக் குன்றும் 'பொன்மலை' என்னும் பெயரினைக் கொண்டு வரலாற்றுக் காலத்திலிருந்து விளங்கி வருகிறது.

குன்றிருக்கும் இடங்களிலெல்லாம கோயில் கொண்டுள்ள முருகக்கடவுள்... இந்தப் பொன்மலையின் மீதிருந்தும் அருள்புரிகிறார்!

வணங்கிவிட்டு வருவோர்க்கு மனநிறைவையும், வாழ்க்கை நலங்களையும் உண்டு பண்ணித் தருகிறார்!

**அனுவாவி சுப்பிரமணியர்**

கோவையிலிருந்து வடக்கே 12 கி.மீ. தூரத்தில் பெரிய தடாகம் உள்ளது. அந்தக் கிராமத்திற்குச் சற்றுத் தெற்கே உள்ள மலைப்பகுதியில் சுமார் இருநூறு அடி உயரத்தில் *அனுவாவி சுப்பிரமணியர்* கோயில் அமைந்துள்ளது. மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி வருகிற இந்த மலையானது மருதமலைக் கோயில் அமைந்துள்ள மலையின் வடபுறத்துப் பகுதியேயாகும்! இயற்கையான சூழலில் எளிமையும், குளிர்ச்சியும் கொண்டு இக்கோயில் விளங்குகிறது. மூலிகை தேடி வந்த அனுமனின் தாகத்தைத் தீர்த்து, அவனுக்கு அருள் தந்து சுப்பிரமணியக் கடவுள் இங்கு திருவுள்ளம் கொண்டதால் 'அனுவாவி சுப்பிரமணியர்' என்ற திருப்பெயர் பூண்டு... துதிக்கப்பட்டு வருகிறார். ஆதிகாலத்தில் இந்தப் பகுதி மாமரங்கள் நிறைந்த சோலையாக இருந்திருக்கிறது. சஞ்சீவிக்காக வந்த அனுமனுக்கு, மாமர நிழலில் முருகப் பெருமான் தன் வேலாயுதத்தால் தீர்ததம் உண்டாக்கி கொடுத்ததும்: அனுமன் தாகம் தீரந்து, இவருக்கு நன்றி செலுத்தியதுமான அடிப்படையில் முன் மண்டபத்தில் வடக்குப் பார்த்த நிலையில் அனுமனுக்குக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. இப்படிக் கடவுளால் உண்டாக்கப்பட்ட அந்தச் சுனையின் தண்ணீர் இப்போதும் தொடர்ந்து வந்து கொண்டிருப்பது கவனத்திற்குரிய முக்கிய காட்சியாகும்.

**குருந்தமலை**

கோவையிலிருந்து மேட்டுப்பாளையம் செல்லும் பாதையில் 28 கி.மீ. தூரத்தில் காரமடை உள்ளது. அங்கேயிருந்து மேலும் 5 கி.மீ. தூரத்தில் அத்திக்கடவு செல்லும் பாதையில் புங்கம்பாளையம் எனும் ஊரையடுத்து அழகிய மலையாக *'குருந்தமலை'* அமைந்துள்ளது. இங்கே முருகக் கடவுள், *'குழந்தை வேலாயுதசுவாமி'*யாக கோயில் கொண்டு அறுநூற்று ஐம்பது வருடங்களாகிறது. குருந்தமலைக்குத் தெற்கே சஞ்சீவிமலையும், வடக்கே பகாசூரன் மலையும் தெரிகின்றன! அங்கே பகாசூரன் வசித்ததாகவும்: நீலமலைத் தொடரின் ஒரு பகுதியாக விளங்குகிற அதன் அடிவாரத்தில்... ஆரவல்லி, சூரவல்லி கோட்டைகள் இருந்ததாகவும் அறியப்படுகின்றன. குருந்தமலைக்குக் கீழ்ப்புறம் இருக்கிற வள்ளிமலையில் 'காணாச் சுனை' எனப்படும் தீர்த்தம் உள்ளது. பல மூலிகைச் செடிகளும் அங்கு இருக்கின்றன. கருநொச்சி எனும் மூலிகை அதில் முக்கியமானது. இங்குள்ள குகையில் வள்ளி குடிகொண்டிருக்கிறாள்! தைப்பூச விழாவில் திருக்கல்யாண உற்சவம், வள்ளிக்கு நடத்தப்படுகிறது. கோயிலின் எதிரே தெரியும் இன்னொரு மலைச் சரிவில் கஜபுஷ்கரணி, அனுமன் சுனை ஆகியவை உள்ளன. அருகில் அனுமன் கோயிலும் உள்ளது! அனுமன் இந்த மலையில் ஒரு பாதமும், அடுத்துள்ள சஞ்சீவி மலையில் ஒரு பாதமும் வைத்துச் சென்றதாக ஐதீகங்கள் கூறப்படுகின்றன.

**செஞ்சேரிமலை**

கோவை மாவட்டம், பல்லடத்திலிருந்து உடுமலைப்பேட்டை செல்லும் பாதையில்... மேற்கே பதினெட்டு கிலோமீட்டர் தூரத்தில் செஞ்சேரிமலை அமைந்துள்ளது. சூலூரிலிருந்து சுல்தான்பேட்டை வழியாகவும் இந்த மலைக்குச் செல்ல பாதை வசதி உண்டு.

'தென்சேரி கிரி' என்று பழம்பெயர் கொண்ட இத்திருத்தலமானது முருகக்கடவுள் அருள் புரியும் தலங்களில் முக்கியமானது. 'மந்திரகிரி' எனவும் இம்மலைக்கு சிறப்புப் பெயர் குறிக்கப்படுகிறது.

திருக்கோயிலின் வட பக்கத்தில் 'சயிலோதகம்' எனப்படும் ஞான தீர்த்தம், சுனை வடிவத்தில் காணப்படுகிறது. எந்தச் சூழலிலும் இந்தச் சுனை வற்றாமலிருப்பது சிறப்புக்குரியது. அபிஷேகத்திற்கும், பூஜைக்கும் இந்த நீரையே பயன்படுத்துகின்றனர்.

**மருதமலை**

பாம்பாட்டிச் சித்தரின் வாசஸ்தலமும் முருகக் கடவுளின் ஏழாவது படைவீடாகச் சிறப்புப் பெற்றுள்ள மருதமலையானது கோவையிலிருந்து வடமேற்கில் 12 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியாக இருக்கிற இந்த மலையின் மத்தியப் பகுதியில் மருதாசலக் *கடவுளின் திருக்கோயில்* மகிமையோடு விளங்குகிறது. 800 ஆண்டுகளுக்கு முற்பட்ட திருமுருகன் பூண்டிக் கல்வெட்டில் மருதமலை பற்றிய குறிப்பு காணப்படுகிறது. பேரூர் தலபுராணத்தில் அபயப்படலம், மருதவரைப்படலம் ஆகியவற்றில் மருதமலை பற்றிய சிறப்புகள் இடம் பெற்றுள்ளன.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் முருகன் வண்ணப் பதிகமும், கௌமாரமடாலயம் கந்தசாமி சுவாமிகளின் மருதமலை அலங்காரம் நூறு, யமக அந்தாதி நூறு, சந்தப்பதிகம் ஆகியவைகளும், சுந்தர சுவாமிகளின் பதிகமும், நடேசக் கவுண்டரின் கீர்த்தனைகளும், கந்தசாமி முதலியாரின் மருதாலபதி உயிர் வருக்க மாலையும் - இந்த மருதமலை ஆண்டவனின் பக்தி மணத்தைப் பரப்புகிற இலக்கியங்களாகத் திகழ்கின்றன.

**முடிவுரை**

இன்றும் கண்டறியப்படாத, வெளியில் தெரியாத ஏராளமான முருகன் கோயில்கள் நம் தமிழ் நாட்டில் உள்ளன. அவற்றை எல்லா மக்களும் அறியும் வண்ணம் செப்பனிட்டும், புதுப்பித்தும் ஆன்மீக மக்களையே உழவாரப் பணியில் ஈடுபடுத்திக் கொள்ளவும் அரசு ஆவண செய்ய வேண்டும். அனைவரும் முருகன் அருள் பெறுவோமாக.

# கந்தசாமிசுவாமிகளின் இரங்கசாமிக்கவுண்டன் புதூர் தண்டபாணி மாலை

முனைவர் **சு.வேங்கடராமன்**
மேனாள் தமிழ்த்துறைத் தலைவர்
காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை.

சிரவையாதீனத்தின் இரண்டாவது குருமகாசன்னிதானமாக விளங்கியவர் கந்தசாமி சுவாமிகள். இவர் காலம் கி.பி.1892 - 1948. இவர் சிறந்த கவிஞராக இருந்தார். கொங்கு நாட்டுக் கச்சியப்ப முனிவர் எனப் போற்றப்படுபவர். 55 கவிதை நூல்களையும் இரண்டு உரைநடை நூல்களையும் படைத்தவர். மேலும் இரு நூல்களுக்கு உரைகளும் பல தனிப் பாடல்களும் பல தலங்களுக்குரிய தோத்திரப் பாடல்கள் படைத்தவர். இத்தனை பெரிய படைப்பாளரைத் தமிழ் இலக்கிய வரலாற்று நூல்கள் பதிவு செய்யவில்லை. எனவே, தமிழ்க் கல்வி மரபில் இப்புலவரின், படைப்புகள் பெரும்பாலும் அறியப்படவில்லை. இக்கட்டுரை இந்த நூலை தண்டபாணி மாலை அறிமுகம் செய்வதாக அமைகிறது. தமிழ் முருக நெறி கௌமாரம், பரிபாடல் முதல் வரும் தமிழ் மரபுகள் காலப் போக்கில் மாற்றம் பெற்றதை இந்த நூல் கொண்டு விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம்.

## நூல் அறிமுகம்

இரங்கசாமிக் கவுண்டன் புதூர், கோவைக்குக் கிழக்கே அவிநாசி சாலையில் உள்ளது. இங்குள்ள இறைவன் தண்டபாணிமீது பாடப்பட்டது இந்நூல். இம்மாலையில் 36 பாடல்கள் எழுசீர் விருத்தம் உள்ளன. இவை தவிர காப்புச் செய்யுள், நூற்பயன் ஆகிய இரண்டு பாடல்கள் உள்ளன. இந்த நூல் அமைப்பில் பாடல் தோறும் 36 பாடல்களில் கந்தபுராணம் கூறும் முருகன் வரலாறு - பிறப்பு முதல் தெய்வானை, வள்ளி திருமணம் வரை வரிசையாகப் பாடப்பட்டுள்ளது. எனவே, இது கந்தபுராண சாரம் எனப்படுகிறது. இது வழிபாட்டிற்குரிய பாராயண நூல். பொதுவாகத் தமிழ் மரபில் சமய நூல்களுக்கு இவ்வாறு சுருக்கம் அல்லது சாரம் பாடும் மரபு உள்ளது. சாரத்தை வழிபாட்டில் பாடினாலே முழு நூலையும் பாராயணம் செய்ததின் பயன் கிடைக்கும் என்பது நம்பிக்கை. இந்த நூல் 1929ல் இத்திருக்கோயில் குடமுழுக்கு விழாவில் சுவாமிகளால் பாடப்பட்டது.

முருக நெறி மரபு தமிழ் நாட்டில் மிகப் பழங்காலந்தொட்டு நடைமுறையில் உள்ளது. தொல்காப்பியம் கூறும் குறிஞ்சி நிலத் தெய்வமான சேயோன், தொடக்கநிலையில் மலைப்பகுதி இனக் குழுவின் வழிபடு கடவுள். பின்னர் படிப்படியாக வளர்ச்சி பெற்று முருகன் தனிப்பெருங்கடவுளாக, பரம்பொருளாக உருப் பெறுகிறான். மேலும், ஆய்வாளர்கள் சிந்து சமவெளி நாகரிக மரபிலே மூலத் திராவிட நெறியிலே, பழந்தமிழிலே முருக வழிபாடு இருந்ததற்கான சான்றுகளைக் கூறுவர். பரிபாடல், முருகாற்றுப்படைக்குப் பின்னர் படிப்படியாக வடமொழி புராணத் தாக்கம் பெற்றுச் சேயோன், முருகன்,

கந்தன், சுப்பிரமணியன் என வளர்ச்சி பெற்றது. அதற்கேற்பத், தொன்மக்கதைகள், கதை நிகழ்வு நடந்த இடங்கள் என யாவும் மாற்றம் பெற்று, ஒரே படித்தாகத் தரப்படுத்தப்பட்டன. அருணகிரிநாதர், கச்சியப்பர் முதல் கந்தசாமி சுவாமிகள், பாம்பன் சுவாமிகள், தேவராயர் என் அனைவரிடமும் இந்தப் பிற்கால மரபை - முருகன் தனிப்பரம்பொருளாக - சுப்பிரமணியனாக உருப் பெற்றதைக் காணலாம். இது இலக்கியம், வரலாறு, சிற்பம், ஆகமம் குமார தந்திரம், நாட்டார் மரபு என அனைத்தையும் ஒரு சேரக் கண்டு ஆராய வேண்டும். அது தனி ஆய்விற்குரியது.

முருகன், சிவ மைந்தன் என்பதிலிருந்து முருகனே சிவன், சிவனே முருகன் என வளர்ந்து, சிவனிலும் மேலானவன் முருகன் - ஒரே பரம்பொருள் சுப்பிரமணியன் என்பதாக முருக நெறி வளர்ந்தது. சிவனுக்குக் குருவான முருகன் என்ற தொன்மக் கதையிலே இதைக் காணலாம். "அரன் வேண்ட தன்மம் ஆர் உபதேசம் புரி" (தண்டபாணி மாலை, பா. 9) முருகன் ஈசனுக்குப் பிரணவ உபதேசம் செய்து குரு ஆகிறான்; தென்முகக் கடவுளுக்குக் குருவானான் என்பது இதன் மையம். கற்பதற்கும் சீடன் கற்பிப்பதற்கும் ஆசான் வயது வேறுபாடில்லை: ஞானமே அடிப்படை என்ற கல்வி மரபையும் இது விளக்குகிறது.

**தண்டபாணி மாலை அமைப்பு**

இந்த நூல், முன்னர் குறிப்பிட்டபடி 36 பாடல்களிலும் பின்னிரு அடிகளிலும் முருகன் வரலாற்றைக் கந்தபுராண அடிப்படையில் அதன் சாரமாகக் கூறுகிறது. ஒவ்வோரு பாடலும் ஈற்றில் "இரங்கசாமியூர்த் தண்டபாணியனே" என முடியும். 36 வது பாடலில் மட்டும் கந்தபுராணச் சுருக்கமின்றி மாறாக 'கடம்புமாலை சூடும் பன்னிரு புயத்தில் கிளி வடிவம் பெற்ற அருணகிரியாரை: வைத்துள்ளான்" (பாடல் 36) என்கிறார். தமிழ்க் கடவுளாக முருகனைக் கட்டமைத்த தமிழ்ப் பெரும் புலவரான அருணகிரியைக் கிளியாக்கி, முருகன் தோளில் வைத்துள்ளான் எனத் தமிழ் முருக நெறி மரபு உருவாக்கியது. கொற்றவை வழிபாட்டு மரபில் இவ்வாறு தோளில் கிளி வைத்து வழிபடும் மரபைச் சிலம்பு தொடங்கி வைக்கிறது வேட்டுவவரி. பின்னர் மதுரை மீனாட்சி கையிலும், ஆண்டாள் கையிலும் கிளியை வைத்துச் சிற்ப, இலக்கிய ஆகம நூல்கள் மரபாக்கின. ஒருநிலையில் இது முழுவதும் தமிழ் மரபு.

36 பாடல்களிலும் முதலிரு அடிகளில் கவிஞர் தன் வேண்டுதலை முன் வைக்கிறார். இறைத் திருவடிகளை மறவாத அன்பு - பத்தி வேண்டும், உலகப் பற்றுகளை, சிற்றின்ப வேட்கையை முழுவதுமாக விட்டொழிக்க வேண்டும், தான் தவறு செய்தாலும் இறைவனை நினைக்காது - வழிபடாது இருப்பினும் தன்னையும் ஆட்கொண்டு அருள் செய்ய வேண்டும் எனக் கவிஞர் மீண்டும் மீண்டும் தண்டபாணியிடம் வேண்டுகிறார். இது பொதுவான சமய நூல் - தோத்திரப்பாடல் மரபு. அறப் பெரியவனான - கருணைமிக்க இறைவன், குற்றங்களே செய்யும் - வழிபடாது, இறைப் பணி செய்யாது இருக்கும் மனிதனைத் தேடி வந்து தானாக அருள் செய்கிறான். இது அவனுடைய எல்லையற்ற கருணை.

பத்திமரபின் அடிப்படை இது. சங்க இலக்கிய அகப்பாடல் மரபில் முறையே தலைவன், தலைவி உறவும் புறப்பாடல் மரபில் அரசன் வள்ளல்

புலவன் பாணன் உறவும் இந்த அடிப்படையிலே உள்ளது. எனவே, தமிழ்ப் பத்தி மரபு, பழைய சங்கப் பாடல் மரபிலிருந்தே உருவாகிறது. தண்டபாணி மாலையில் கவிஞர் மீண்டும் மீண்டும் வேண்டுவது அவனுடைய அருளையும் அன்பையும் தான். ("நின் மெய்த் திரு அருள் கடலில் உறங்கும் நாள்" - பா. 3). இதுவும் பரிபாடல் தொடங்கி ("அருளும் அன்பும் அறனும் மூன்றும் தாராய் - பா.) திருமுறை, திவ்யப்பிரபந்த அருளாளர்கள் வளர்த்த மரபு. இறைவனிடம் வேறேதுவும் வேண்டாமல் அருளை வேண்டினால், அதுவே அனைத்தையும் தரும் என்ற மெய்யான பத்தி மரபு இது. அதனால் தான் சுவாமிகள் "கரி பரி தேர் ஊர்ந்து ஏகுநர் வாழ்வும் கடைபடு கனவு - பா. 7 என அழுத்தமாக வேண்டுகிறார். மேலும் அதுவே, 'உண்மைத் திட அனுபவம்" (பா. 7) எனக் கூறுகிறார். கவிஞர் பல பாடல்களில், பெண்கள் மீது கொள்ளும் சிற்றின்ப நாட்டத்தால் துன்புற்றதாகவும் முருகன் அதிலிருந்து மீட்டு தனக்கருள வேண்டும் எனவும் கூறுகிறார். (பா.9,19.26,30,33). ஆனால், அவர் துறவி. மணிவாசகர், அருணகிரி எனப் பலரும் இவ்வாறு பாடுவர். உலக மக்களின் துன்பங்களைத் தன் மேல் ஏற்றித் தான் அதை அனுபவிப்பதாகப் பாடுவது சமய இலக்கிய மரபு. இந்த அடிப்படையில் தான் இதைக் காண வேண்டும். அதைப் போலவே பெண்கள் தம் உடலழகைக் காட்டி, ஆண்களிடம் சிற்றின்ப வேட்கையைத் தூண்டிப் பணம் பறிக்கும் பண்புடையவர் "பணத்தினைப் பறித்திடும் வஞ்சகமடவார்" (பா.26) என விலைமாதரைப் பாடுகிறார். பட்டினத்தார் போன்றோர் பாடிய மரபு இது.

முருகனின் அருளை வேண்டுபவர், அவனைப் பாடத் தமிழ்ப் புலமை கொடு ("தமிழ் கொடு", பா - 8) என வேண்டுகிறார். அடிப்படையில் அவர் கவிஞர். முருகன் தமிழ் மரபில் அகத்தியன், அருணகிரி என அனைவருக்கும் குருவாக வந்து தமிழ் கற்பித்தவன். ஞானம் மட்டுமின்றி இலக்கண இலக்கியப் புலமைக்கும் அவனே ஆசான். அதனால் தான் கந்தசாமி சுவாமிகள் தண்டபாணியிடம் இவ்வாறு வேண்டுகிறார். 'பொதிகைத் தமிழ்முனி அன்பால் வணங்கிட'' (பா.10) எனக் கவிஞர் அகத்தியனைச் சுட்டுகிறார்.

தமிழ் மரபில், ஞானசம்பந்தர் முருகனின் அவதாரம் எனக் குறிப்பிடும் போக்கு உள்ளது. ஒட்டக்கூத்தர், தக்கயாகப் பரணியில் இதை முதன் முதலில் கூற பின் வந்த அருணகிரி உட்பட முருக நெறியினர் இதை "வெம்பாலை நெய்தலாச் செய்வோய்" (பா.13) என்கிறார். சம்பந்தர் திருநனி பள்ளியில் பாலையை நெய்தலாக்கினார். முருகன் வள்ளியைத் திருத்தணிகையில் மணந்ததாகக் கவிஞர் பாடுகிறார். (பா - 34) முருகாற்றுப்படை தொடங்கி வரும் மரபு இது ஆனால் முற்பட்ட பரிபாடல் வள்ளி திருமணம் திருப்பரங்குன்றத்தில் நடந்ததாகக் கூறுகிறது. இது, முன்னர் கூறியபடி, தொன்ம நிகழ்வு வெவ்வேறு முறையில் வழங்கிப் பின்னர் பொதுமைப் படுத்தப்பட்டது. என்பதற்குச் சான்று. தமிழ் முருக நெறி மரபை அடிப்படையாகக் கொண்டு விளக்கவும் ஆராயவும் இத்தகைய வாய்ப்புகள் இப்படைப்புகளிலே உள்ளன. இக்கவிஞரின் பல்வேறு முருகப் பனுவல்களையும் இவ்வாறு ஆராய இது உதவும். (தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பனுவல் திரட்டு, தொகுதி 1,2012, சிரவைக் கௌமார சபை, கோயம்புத்தூர்).

# சங்க இலக்கியத்தில் முருகன்

**முனைவர் ஆ. வேணிஸ்ரீ**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லூரி,
வாலாசாப்பேட்டை.

முருக வழிபாடு தொன்மைக்காலம் கொண்டே தமிழர்களின் வாழ்வில் கலந்த ஒன்றாகும். தமிழர்களின் பண்பாட்டோடும் மொழியோடும் தத்துவத்தோடும் பழக்க வழக்கங்களோடும் முருக வழிபாடு கலந்த தன்மைமையச் சங்க இலக்கியங்கள் சுட்டிக்காட்டுக்கின்றன. மொழியைத் தெய்வத்தோடு தொடர்பு படுத்திக் கூறும் தனிச்சிறப்பு தமிழ் மொழிக்கே உரியதாகும். "முருகன் என்ற சொல்லே வியக்கத்தக்க பொருள் சிறப்பினைக் குறிப்பிடும். முருகு, முருகன் என்பது பல பொருள் குறிக்கும் ஒரு சொல். அப்பல பொருளுள் சிறப்பாகக் குறிக்கப்படுவது மணம், இளமை, கடவுள் தன்மை, அழகு" என்பன ஆகும். இவை அனைத்திற்கும் பொருத்தமான முருகனுக்குப் பழந்தமிழ் மக்கள் பலவிதமான சிறப்புப் பெயர் சூட்டி அழகு பார்த்தனர் எனலாம்.

**முருகனின் சிறப்புகள்**

முருகனின் பன்னிருகரங்களும், பன்னிருதோள்களும் உயிர் எழுத்தையும் மெய்யெழுத்தையும் குறிக்கும் என்பர். ஆறுமுகங்களும் ஆறு இன எழுத்துக்கள் என்றும் வேல் ஆயுத எழுத்து என்றும் போற்றுவர். மேலும் முருகு எனும் சொல் மு-மெல்லினம், ரு-இடையினம், கு-வல்லினம் என்று போற்றி மொழியோடு 'தமிழ் கடவுள் முருகன் எனும் பொருத்தத்தை ஏற்படுத்தினர். அன்பின் ஐந்திணையின் முதல் நிலமான குறிஞ்சியின் தலைவனாகவும் பண்டையக் காலத்தில் 'கௌமாரம் எனும் தனித்த மதமாக இருந்த முருகன் வழிபாடு பின்பு சைவ சமயத்துடன் இணைந்தது. பழந்தமிழர்கள் இயற்கை அழகையே உயர்ந்த பொருளாகவும் கடவுளாகவும் வழிபட்டனர். செம்மைகள் நிறைந்த இயற்கை அழகினைக் கொண்டு 'சேய்' என்று போற்றினர். அதுவே பிற்காலத்தில் சேயோன் வழிபாடாக மாறியது. மக்கள் தங்களுக்குப் பிடித்த ஒன்றினையே வணங்குகின்ற இடத்தில் வைத்தனர். தொல்காப்பியர் அகத்திணையியலில்,

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்"*

என்கிறார். சங்க இலக்கியங்களில் முருகனைத் தமிழ் இறை, முத்தமிழோன், குறிஞ்சிக் கிழவோன், மலைக் கிழவோன் என்று குறிப்பிட்டாலும் முருகன் அழகுக் கடவுள் என்பதும். தமிழ்கடவுள் என்பதும் மலைக் கடவுள் என்பதும் போற்றுதற்குரியதாகும்.

**அக இலக்கியங்களில் முருகன் வழிபாடு**

சங்க இலக்கியங்கள் அகம், புறம் எனப் பிரித்து தமிழர்தம் வாழ்வினை மிக அழகாய் வெளிப்படுத்துவர். அவ்வகையில் அக இலக்கியங்கள் எனும் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குநூறு, அகநானூறு ஆகிய நூல்களிலிருந்து முருகனுக்கு வேலன் வெறியாட்டு எடுக்கும் முறைமையைக் காணலாம். ஐங்குறுநூற்றில் 'வெறிப் பத்து' எனும் பத்துப்பாடல்களும் வேலனை வரவழைத்து வெறியெடுத்தல் தொடர்பானதாக குறிக்கப்படுகிறது. களவொழுக்கத்தைத் தாய்க்கு வெளிப்படுத்தித் திருமணம் நடத்தவும், தலைவனைத் திருமணம் மேற்கொள்ளத் தூண்டவும் தோழி வெறியாட்டைக் கருவியாகக் கொள்கிறாள். இதில் முருகப் பூசாரியாகிய வேலன் செய்யும் சடங்குகள் விரிவாகக் கூறப்படுகின்றது. இச்சங்கப்பாடல்கள் வழி முருகனின் வழிபாட்டு நிலையை அறிய முடிகின்றது.

*"பொய்யா மரபின் ஊர் முதுவேலன்*
*கழங்கு மெய்ப்படுத்து, கன்னம் தூக்கி*
*'முருகு' என மொழியும் ஆயின்'*

எனும் பாடலில் ஊரில் வாழும் முதுமைக்குரியோன் கழங்கு நிறுத்தி அதன் மூலம் தான் வழிபடும் வேலனை வரச்செய்து குறி சொல்லும் முறையை குறிக்கின்றது. கழற்காய்களை முருகன் முன் வைத்து அள்ளியெடுத்து கூறும் ஒருவகைக் குறி எனவும் கூறுவர்.

*"வேலனின் கழங்குக் குறியை மெய்யாக்*
*கோடல்; பொய்படுபறியாக் கழங்கே"*

எனவும் முருகனின் பெருமையைத் தலைவனுக்கு அருளிட அவனை மேம்படுத்தும் போக்கையும் காணலாம். அகநானூற்றில்,

*"அறியா வேலற் றரீஇ அன்னை*
*வெறியயர் வியன்களம் பொலிய ஏத்தி"*

என்று அறியாத வேலனுக்கு அன்னை அறிவித்தனள் என்ற குறிப்போடும் முருகனை முன் வைத்து தலைவியின் நிலையை அறிய முற்படும் கூற்று இங்கு விளக்கப்படுகின்றது. மேலும் குறுந்தொகையில்,

*"வேலன் நோய்மருந்து அறியான்*
*வெறியென உணர்ந்த நோய்மருந்து*
*அறியா னாகுதல் அன்னை காணிய"*

என்ற பாடலில் தலைவியின் மாறுபாடு கண்டு தாய் வேலனை அழைத்து வெறியாட்டு எடுத்து, வேலனும் உண்மையறியாமல் தலைவியின் மெலிவு தெய்வத்தால் வந்தது என்றான். வெறியாடலால் வரும் துன்பம் இது அன்னைக்கு உண்மையை வெளிப்படுத்தும் என்று சிறைப்புறமாய் நிற்கும் தலைவனுக்கு அவன் அறியும் படி தலைவி கூறுகின்றாள்.

இவ்வாறு அகத்துறையில் முருக வழிபாட்டை அறிய முடிகிறது. அவரவர் வீட்டின் முற்றங்களிலேயே வழிபாடு நடந்திருக்கிறது. வேலன் என்பான் வளநகரையும் முருகனின் புகழையும் பாடுவதாகவும். தெய்வம் கொண்டு ஆடுவதாகவும் வேலிற்குக் கடம்ப மலர் சூட்டுவதாகவும் சுட்டிக்காட்டப்படுகின்றது. அகன்ற பந்தல் அமைத்து கள்ளும் பூமாலையும் அணிவித்து கடம்பங்கொடி எடுத்து தினையரிசி பரப்பி ஆட்டுக் குட்டியைப் பலி கொடுக்கின்றான்.

செந்தினையை இரத்தத்தோடு கலந்து தூவுகிறான். அதோடு பல இசைக்கருவிகள் இசைத்து வெறியாட்டு நிகழ்ச்சிகள் சங்க இலக்கியத்தில் முருகனின் இடத்தைத் துல்லியமாய்க் காட்டும். முருகனின் பெருமையை விளக்கும்.

**புற இலக்கியங்களில் முருகன் வழிபாடு**

புற இலக்கியங்களில் முருகனின் தோற்றம், வெற்றி கொள்ளும் நேர்த்தி, புகழின் முதன்மை, வீரம், அருள், கொடையென ஏராளமான குறிப்புகள் காணப்படுகின்றது. பத்துப்பாட்டு என்னும் சங்க இலக்கியத்தில் ஆற்றுப்படை நூலில் முருகாற்றுப்படை முதலாவதாக அமைகிறது. இந்நூல் முருகனின் புகழினைப் பாடுவதையே நோக்கமாக கொண்டுள்ளது. இவ்வாற்றுப்படையில் வீடுபேறு பெறக் கருதிய சான்றோர் ஒருவரை முருகன் திருவருளால் வீடுபேறு அடையச் செய்வதாகும். முருகனின் திருவுருவச் சிறப்பும் அவனை வழிபடும் முறையும், வழிபாட்டின் முடிவில் அப்பெருமான் அருள்புரியும் திறமும் விளக்கப்படுகிறது. இந்நூலின் சிறப்பிற்காக சைவத் திருமுறைகளில் பதினோராம் திருமுறையாக இது சேர்க்கப்பட்டுள்ளது.

முருகனைத் தரிசிக்கும் முறையாக கூடல் நகருக்கு மேற்கிலுள்ள திருப்பரங்குன்றத்தில் காலையில் தோன்றுவதாகவும், திருச்சீரலைவாயில் மக்களின் புகழால் நிலைத்து இருப்பான் என்றும் தேவரும் முனிவரும் வந்து காணும்படியாக திருஆவின் குடியில் இருப்பான் என்றும் அந்தணர்கள் ஆறெழுத்து மறையை ஓதி மலரிட்டு வழிபடும் திருவேரகத்தில் எழுந்தருளுவான் என்றும் குறமகளிராடும் குரவைக் கூத்தில் குன்றுதோறும் விளையாடுவான் என்றும் முருகனின் அறுபடை வீட்டின் சிறப்பினைக் கூறலாம். முருகன் அறுபடை வீடுகள் தோறும் தன் அழியாத சிறப்பின் அருளை அடியவர்களுக்கு அளித்து ஊர்தோறும் மக்கள் செய்யும் விழாக்களிலும், வெறியாடும் இடங்களிலும், கடம்ப மரங்களிலும் வேண்டுவார் வேண்டும் வடிவத்தில் எழுந்தருளுவான் என்ற குறிப்புகளெல்லாம் முருகப்பெருமான் தமிழர்களோடும் தமிழோடும் இணைந்த தமிழ்க் கடவுள் என்பது புலப்படும்.

"சீரை தைஇய வுடுக்கையர் சீரோடு
வலம்புரி புரையும் வாரை முடியினர்
மாசற இமைக்கும் உருவினர் மானி"

என நக்கீரர் திருவாவினன்குடியில் முனிவர்கள் முருகனை வழிபடும் முறையினைக் குறிப்பிடுகின்றார். இம்முனிவர்கள் மரவுரி உடுப்பர், வலம்புரிச் சங்கைப்போல வெளுத்த நரைமுடியினர், யாரிடமும் பகைமை கொள்ளாதவர் எனச் சிறப்பிக்கின்றார். இம்முனிவர்களிடையே முருகன் திருப்புகழைப் பாடும் இசைவாணர்கள் உள்ளனர். அவர்கள் யாழை இசைக்க அங்குள்ள மகளிர் இனிய குரலில் முருகனைத் துதித்துப் பாடி வழிபடுகின்றனர்.

*"வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ*
*விழையணி சிறப்பிற் பழையோன் குழவி*
*வானோர் வணங்கு வில்தானைத் தலைவ!"*

எனப் போற்றி முருகனின் பெருமைகளைக் குறிப்பிட்டு தொழுகின்றனர். பதிற்றுப்பத்தில் கடலில் மாமரமாக நின்று சூரனைக் கொன்று பெருமிதத்துடன் பிணிமுகம் என்னும் களிற்றின் மேல் ஏறி வரும் முருகனைப் பகைவரைக் கொன்று களிற்றின் மேல் ஏறி வரும் சேரலாதனுக்கு உவமித்து கூறுகின்றார்.

*"சூருடை முழு முதல் தடிந்த பேர் இசை*
*கடுஞ்சின விறல் வேள் களிறு ஊர்ந்தாங்கு"*

எனக் குறிப்பிடும் பாடல் விளக்கம் தரும். மதுரைக் காஞ்சியில் சூல் கொண்ட மகளிர் தெய்வத்திற்கு வழிபடு பொருள்கள் வைத்து வணங்குகின்றனர் என்றும் யாழும் முழவும் ஒலித்து ஆகுளி என்னும் இசைக் கருவியினை ஒலிக்கச் செய்து விளக்குகளை ஏற்றி முருகனை வழிபடுகின்றனர். கருவுற்ற மகளிர் மென்மையான மயிலைப்போல நடந்து இறைவனைக் கைதொழுது வணங்கியும் வேலன் குறிஞ்சிப் பூ சூடியும் கடம்ப மரத்தின் அடியிலுள்ள முருகனை வழிபடுகின்றனர். பட்டினப்பாலை பூம்புகாரிலிருந்து பல்வேறு கொடிகளைப் பற்றிக் கூறி அங்குள்ள பெண்கள் முன்கை கூப்பி செவ்வேளை வணங்குகின்றனர் என்ற செய்தியும் அங்கு வெறியாடு மகளிரின் ஆட்டத்திற்கு ஏற்ப குழல் அசைய யாழ் இசைக்க முழவு அதிர, முரசு ஒலிக்கின்றது எனப் பட்டினப்பாலையில் குற்றமற்ற முருகனைத் தொழும்படியான கொடிகள் நாட்டப்பட்டிருப்பதை குறிக்கின்றது.

*"செவ்வேள், வெறி ஆடு மகளிரோடு செறியத் தாஅய்,*
*குழல் அகவ, யாழ் முரல*
*முழவு அதிர முரசு இயம்ப*
*விழவு அறா வியல் ஆவணத்து"*

என வரும் பாடல் முருகனின் பெருமைகளை உணர்த்தும். பரிபாடலில் முருகனைப் பற்றி எட்டுப் பாடல்கள் விளக்குகிறன. இந்நூல் முருகனின் பிறப்பு, சூரபத்மனை அழித்தல், வள்ளியை மணத்தல், தேவயானை அழுதல், வள்ளி தேவையானை ஊடல் முதலிய பகுதிகள் சிறப்பாகக் கூறப்படுகின்றது.

*"பொருளும் பொன்னும் போகமும் அல்லநின்பால்*
*அருளும் அன்பும் மறனும் மூன்றும்*
*உருளினர்க் கடம்பின் ஒலிதாரோயே"*

எனப் பரிபாடலில் முருகனை நினைத்து வணங்கும் போக்கு காணப்படுகின்றது. மேலும் திருப்பரங்குன்றத்தில் மகளிர் சென்று வழிபடும் நிலை போற்றப்படுகின்றது. முருகனைத் தொழ விரும்பும் மகளிர் சந்தனம், பூஜைக்குரிய பொருட்கள், காற்றால் அணையாத விளக்குகள், நறுமண மலர்கள், முழவம், மணி, பாசம், மயில், கோடரி, பிணிமுகம் ஆகிய முருகன் விரும்பும் பொருள்களை எடுத்துக் கொண்டு திருப்பரங்குன்றம் சென்று வேண்டி அவன் அருளைப் பெற்று முருகப் பெருமானின் புகழைப் பாடிக் களித்தனர்.

திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள முருகனை வழிப்பட்டும் போற்றப்பட்டும் தங்கள் குறைகளைக் கூறியும் மனஆறுதல் பெற்றனர் பக்தர்கள். அதற்குக் காணிக்கை செலுத்தியும் மகிழ்ந்தனர். இன்று நாம் வழிபடும் முறை பரிபாடல் காலத்திலேயே தொடங்கியது என்பதை உணர முடிகின்றது.

*"கடம்பு அமர் அணி நிலை பகர்ந்தேம்*
*உடங்கு அமர் ஆயமொடு ஏத்தினம் தொழுதே"*

என முருகப் பெருமானை வணங்கியும் வாழ்த்தியும் அவன் அருளை நாடி தன் சுற்றத்தோடு தொழும் மக்களின் பக்தி இப்பரிபாடலின் மூலம் அறியலாம்.

**தொகுப்புரை**

முருக வழிபாடு என்பது தொன்மை மிக்கது. தமிழர்களுக்கும் முருகக் கடவுளக்கான உறவு வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்டதாகும். தமிழர்களின் பண்பாட்டோடும் மொழியோடும் தத்துவத்தோடும் பழக்க வழக்கங்களோடும் முருகனை வணங்கும் முறை போற்றப்பட்டு வருவதாகும். சங்க இலக்கியங்கள் மக்களின் வாழ்க்கை முறையை உணர்த்தும் நிலையோடு கடவுள் வழிபாட்டினையும் போற்றுவதாக அமைந்துள்ளது. இன்றளவும் முருகன் தமிழர்களுக்கும் தமிழ் இனத்திற்கும் கடவுளாகத் திகழ்கின்றான் என்பது வெளிப்படையாகும்.

# திருப்புகழில் மனமகிழ் இசைத் தமிழ்

**J. வேணுகோபால்**
உதவிப்பேராசிரியர் (தவில்)
இசைத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

இசைத்தமிழ் இலக்கியம் கதைப்பாடல்களால் வளர்ச்சி கண்ட காலத்தில் திருப்புகழ் இசைத்தமிழ் முன்னோடியாக திகழ்ந்தன. அருணகிரிநாதர் குமரனைப் பாடும் நோக்கில் முத்தமிழையும் வளர்ச்சி பெறச்செய்தார். இயல், இசை, நாடகம் என்னும் மூன்று கூறுகளும் இசைத்தமிழ், நாடகத்தமிழ், இயல்தமிழ் எனத் தழைத்தன. சைவமும், வைணவமும் வளர்ச்சி கண்ட காலத்தில் திருப்புகழ் இசைத்தமிழ் மாபெரும் வளர்ச்சியடைய காரணம் அதில் அடங்கிய இசை, இலக்கிய, இலக்கண செழுமையாகும். சுவாமிகள் பல தலங்களுக்குச் சென்று திருப்புகழ் பாடி முருகப்பெருமானுடைய அருளப்பெற்றார். சுவாமிகள் பழநிக்கு வந்தார், அங்கு முருகப்பெருமான் திருவடியை வணங்கி திருப்புகழ் பாட முருகப்பெருமான் தான் அணிந்திருந்த உத்திராட்ச மாலையை அருணகிரியிடம் கொடுத்தார், "ஜபமாலை தந்த சற்குருநாதா" எனப் பாடினார் சுவாமிகள், இத்திருத்தலத்தில் சுவாமிகள் 97 திருப்புகழினைப் பாடினார். இது மணிப்பூரக சேத்திரமாகும். இது பெரும்புகழுடையதும் சிவமலை என்றும் பெயர் கொண்டது. பல சித்தர்களும் முத்தர்களும் வாழுகின்ற மகிமை உடையது. போக முனிவர் அருள்பெற்ற ஸ்தலம். முருகன் ஞானப்பண்டிதனாக இங்கே விளங்குகிறார், ஞானமலை "அதிசயம், அநேகம் உற்ற பழநி, காசியை மீறிய பழநி, பிரகாசம்புரி பழநி, சேரும் அழகர் பழநி" என்றெல்லாம் இத்தலம் போற்றப்படுகிறது. இவ்வாறு முருகப்பெருமான் அருளால் அருணகிரியார் முத்தமிழைப் போற்றும் விதத்தை இக்கட்டுரை எடுத்துரைக்கிறது.

**அருணகிரியார் வாழ்க்கை வரலாறு**

அருணகிரிநாதருக்கு அண்ணாமலைப் பெருமான், திருநீறு அளித்தார். உண்ணாமலை அம்மையார் உன் பிறப்பறுக என்றருளிப் பாசத்தடைகளை அகற்றினார். வள்ளியம்மை தன் ஸ்பரிச தீட்சையால் சுவாமிகளை அற்புதமாக்கினார். அருணகிரி பெருமான் முருகப்பெருமானிடம் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நெறிகளையும் வேண்டுகிறார். சிவஞானப் பேற்றுக்குத் தீட்சை மிகவும் இன்றியமையாதது என்கிறார். சூரியன் முதலான சுடர்களை நினைவுறுத்தி அவற்றுள் ஒளிர்பவனே! என்று முருகனைப் போற்றுகிறார். கணபதியைப் பாடி அப்பெருமானது தம்பியே என்று கந்தனைப் பரவினார். சிவபெருமானது தம்பியே என்று கந்தனைப் பரவினார். சிவபெருமானைத் துதித்து வருணித்து அப்பரம்பொருளின் அருட்செல்வனே என்றும் அவரின் குருநாதனே என்றும் போற்றுகிறார். அம்பிகையை பலபட போற்றி அவள் தன் செல்வனே என்று செவ்வேளைப் பரவினார். திருமாலின்

பல பராக்கிரமங்களையும் போற்றித் துதித்து அப்பெருமானின் அருமை மருகனே என முருகனை போற்றினார். ஆறுமுகம் ஆன பொருள் நீ அருளல் வேண்டும் என்று அருணகிரிநாதர் பாடும்போது இவ்வறுவகைச் சமயங்களையும் தம் திருமுகங்களாகக் கொண்டு முருகன் திகழ்கின்ற நலத்தையும் காட்டுகின்றார். தமது குறைகளை எடுத்துக்கூறியும் தாம் தவநிலையில் பெற்ற பேற்றினை எடுத்து ஓதியும், தாம் அடைந்த மௌனநிலையின் பெருஞ்சிறப்பை எடுத்துக் கூறியும் நாம் பெற்ற இன்பத்தை நீங்களும் வழிபாட்டால் பெற்று உய்யலாம் என உபதேசித்தார் அருணகிரிநாதர்.

**நீறுநுதல் மீதிடலிலாமுடன்**

திருநீறு மனித குலத்தை உய்விக்கும் புனிதமான பொருள். ஒரு துணியை நெருப்பிட்டால் அது வெந்து கருமையாகிவிடும். ஆனால் கருமையாயுள்ள சாணத்தை நெருப்பிலிட்டால் அது வெண்மையாகிவிடும். எனவே கருமையான அறியாமை நிறைந்த உள்ளத்தைப் பரிசுத்தமான வெண்மையுறச் செய்வதே திருநீறு. ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் என்று பூதி என்கிறார் திருப்புகழில் சுவாமி. ஆறுமுறை ஆறுமுகம் எனச் சொல்லி திருநீறு அணியவேண்டுமாம். உள்ளத்தின் தூய்மையைத் தெள்ளிதின் உணர்த்தும் சின்னம் திருநீறு. இதன் பெருமையை வேதாகமங்கள் யாவும் வியந்து ஓதுகின்றன.

*அருள்செய் நீறிடார் அமுதுனக் கிடினும்*
*அம்மலத்தினை அருந்துதல் ஒழிக*
*தெருள்கொள் நீறிடுஞ் செல்வர் கூழிடினும்*
*சேர்ந்து வாழ்த்தியத் திருவமுதுணக*

*முத்து நீறிடார் முன்கையால் தொடினும்*
*முள்ளுறுத்தல் போல் முனிவுடன் நடுங்க*
*பத்திநீறிடும் பக்தர்கள் காலால்*
*பாய்ந் துதைக்கினும் பரிந்ததை மகிழ்க* (இராமலிங்க அடிகள்)

*முத்தி தருவது நீறு, முனிவரணிவது நீறு,*
*சத்தியமாவது நீறு, தக்கோர் புகழ்வது நீறு*
*பக்தி தருவரு நீறு, பரவ இனியது நீறு*
*சக்தி தரவது நீறு, திருவாலவாயான் திருநீறே* (தேவாரம்)

எல்லா நிலையினரும் அவசியமாகத் திருநீறு தரித்தல் வேண்டும். திருநீற்றின் பெருமையை விளக்குவதற்காகவே, ஓர் உபநிடதம் எழுந்துள்ளது அது பஸ்மஜாபாலம் என்பதாகும். அதில் அடியிற் கண்டவாறு ஒரு விஷயங் குறிப்பிடப்பட்டுள்ளது.

*யதிர் பஸ்மதாரணம் த்யக்த்வா ஏகதா உபோஷ்ய*
*த்வாதாச ஸஹஸ்ர ப்ணவம் ஜபீத்வா சுத்தோ பவதி*

ஒரு சந்நியாசியும் ஒருவேளை விபூதி தரித்துக் கொள்ள மறந்தால் உபவாசமிருந்து அப்பாவம் நீங்கி பரிசுத்தனாகக் கடவன். சிவபெருமான் எக்காலத்தும் நீங்காது நின்று நடனம் புரியும் இடம் எது என்றால் எப்பொழுதும் திருநீறு பூசி பஞ்சாட்சர ஜபம் செய்யும் அன்பர்களுடைய திருவுள்ளமேயாகும்.

*போதுவார் நீறணிந்து பொய்யாத ஐந்தெழுத்தை*
*ஓதுவார் உள்ளம் எனவுரைப்பாம் - நீதியார்*
*பெம்மான் அமரர் பெருமான் ஒரு மான்கை*
*அம்மான் நின்று ஆடும் அரங்கு*
*யாது பாதகம் புரிந்தவராயினும் இகழும்*
*பாதங்களிற் பஞ்சமா பாதக ரெனினும்*
*பூதி போன்றிடில் செல்வராய் உலகெலாம் போற்றத்*
*தீது தீர்த்தனர் பவித்திர ராகியே திகழ்வார்* (உபதேச காண்டம்)

கூன் பாண்டியனை வெப்பு நோயின்று காப்பாற்றியது திருநீறே.

**ஏதுமிலி**

இந்த சொல் மிகவும் உருக்கத்தைத் தருகின்றது சுவாமிகள் ஒரு நற்குணமும் இலாதவன் என்கிறார்கள். மலர், மரம், இலை, காய்கனிகள் நமக்கு உதவுகின்றன. மாடு பொதி சுமக்க உதவுகின்றது. குதிரை வண்டியிழுக்கப் பயன்படுகின்றது. கிழித்தல் கந்தல் துணி விளக்கு துடைக்க உதவுகிறது. கிழிந்த காகிதம் பற்பொடி மடிக்க உதவுகிறது. சாணம் வயலுக்கு உதவுகிறது. இப்படி எல்லாம் ஒவ்வொன்றும் மனிதனுக்கு உதவுகின்றது. ஆனால் ஆறறிவு படைத்த தான் ஒன்றுக்கும் உதவாமல் ஒரு நற்குணமும் இன்றி இருக்கிறேன் என்று சுவாமிகள் வருந்துகின்றார். ஆனாலும் நாயேன் உமது அடிமையானவன் அடியேன் ஈடேறக் கழல்கள் தருவாயே. கடைத்தேறும்படி தேவரீரது திருவடிகளைத் தருந்தருளுவீர் என்ற கருத்தால் உணர்த்துகிறார்.

**முடிவுரை**

அருணகிரிநாதர் சுவாமிகள் பல சேத்திரத்தில் முருகப்பெருமானுடைய தரிசனத்தைக்கண்டு ஆனந்தமடைந்தார் மனம், மொழி, மெய் என்னும் மூவகையிலும் திருப்புகழே கதி எனும் வாழ்பவர்கள் மேற்குறிப்பிட்ட பாடல் வரிகளில் முழுபொருளையும் அடைவர். தியானம், வாழ்க்கைத் தத்துவம், ஞானம், பிரகாசம், ஏக்கம், கடவுள் பக்தி உறவுமுறைகள் இவற்றை அடைவதற்கு முருகப்பெருமானின் அனுகிரகம் இன்றியமையாத ஒன்று. அருணகிரிநாதர் சுவாமிகள் முருகப்பெருமானின் அனுகிரகத்தால் திருப்புகழ் இசைத்தமிழ் படைத்தாலும் அவர் கெஞ்சிய மொழிகள் அருள்தாராய், புரிவாய், பெருவேனோ, தகுமோ, கடவேனோ, உடல் மெலிவேனோ, அடிசேராய், சிவபதம் தருவாய், அழிவேனோ, இசைவாயே, உழல்வேனோ, சடமாமோ, தந்திடாயோ, ஞானமேதருவாயே, மறவேனே, உஓர்வேனோ, முதல்வோனே, படலாமோ, என்ற மேதகு விலாசங்கள் இறைவன் செவியை மடியச் செய்த பெருமை அருணகிரியாருக்கு உண்டு.

# பழந்தமிழ் குடிமக்களின் முருக வழிபாடு

**து. வைரமணி,**
கீழக்காடு-அஞ்சல், தம்பிக்கோட்டை,
திருத்துறைப்பூண்டி வட்டம், திருவாரூர் மாவட்டம்.

தமிழ்க் குடிமக்கள் போர்க் கடவுளைக் கொற்றவை என்ற பெயரில் வணங்கினர். தமிழில் கொறவை என்றால் போரில் வெற்றி என்ற பொருளும் உண்டு. தொல்காப்பியத்தில் கொறவை வழிபாட்டைப் பற்றிக் குறிப்பிடுகையில் கொற்றவை நிலை அல்லது கொற்றவை என்ற போர்க் கடவுளின் வாயில் இருந்து காற்று போல வெளிவந்தவர் முருகப்பெருமான் என்று அவரைக் குறித்துக் கூறப்பட்டு உள்ளது. பெரும்பாணாற்றுப்படை என்ற நூலில் முருகப்பெருமான் கொற்றவையின் புதல்வன் என்ற குறிப்பு காணப்படுகின்றது. அவருக்குத் தந்தை கிடையாது. சமஸ்கிருத (வடமொழி) நூல்களின்படி அவர் எந்த தாயாருக்கும் பிறக்கவில்லை அகநாநூறு நூலின்படி தனக்கு அடிபணிந்து நடக்காதவர்களை அழித்துவிடும் பராக்கிரமசாலியானவர் போரக் கடவுள் என்றும், அவர் பெரும் திறமை மிக்கவர் எனவும் தெரிய வருகின்றது. இலவாண்டிகைகுடி நன்மரம் என்ற சோழ மன்னனைப் பற்றிக் கூறுகையில் அவரும் முருகனைப் போலவே தான் நினைத்ததை வெற்றிகரமாக நடத்திக் கொள்பவர் என்று கூறுவார்கள். அத்தகைய சிறப்பு வாய்ந்த முருக வழிபாட்டையும், வீரர்களுடன் முருகக்கடவுள் ஒப்பிடப்படுவதையும் பற்றி இக்கட்டுரையில் அறியப்படுகின்றது.

**சங்க கால மன்னர்களுடன் முருகக் கடவுளை ஒப்பிடுதல்**

சங்க காலக் கவிஞரான கபிலரின் கூற்றின்படி சங்க காலத்தைச் சேர்ந்த மன்னரான ‘பரம்பு’ மலையைச் சேர்ந்த வேல்பரம்பு எனும் மன்னனும் முருகனைப் போலவே பராக்கிரமசாலியாக இருந்தவர் என்றும் அவர் யுத்தத்தில் எதிரிகளைத் தோற்று ஓடச் செய்பவர் என்றும், ஆனால் அப்படி தோற்று ஓடும் எதிர்ப் படைவீரர்களைத் துரத்திச் சென்று அழிப்பது தனது கௌரவத்திற்கு இழுக்கு என்றும் நினைத்தவராம். மதுரைக்காஞ்சி என்ற சங்க காலப் பாட்டில் தலையானங்கானத்து சிறுவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்பவருடைய பராக்கிரமத்தைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது. அதில் அந்த மன்னனின் பெருமையைக் குறித்துக் கூறுகையில் அவர் முருகனைப் போலவே எதிரிகளை அடக்கி அழித்து, அவர்களின் கோட்டைகளைத் தன்வசமாக்கிக் கொண்டு, அவர்களை ஆதரிப்பவர்களையும் அழிப்பது மட்டும் அல்லாமல் அவர்களது பெயரையும், புகழையும் முற்றிலுமாக அழித்து விடுபவர் எனக் கூறியுள்ளது.

**பண்டைய கால தமிழ் குடிமக்களின் முருக வழிபாடு**

பண்டைய கால தமிழ்க்குடி மக்களின் சமூக, கலாச்சார, ஆன்மீக வாழ்க்கை முறைகள் அனைத்தும் முருக வழிபாட்டு முறைகளுக்கு ஏற்பவே

அமைந்து இருந்தன. தமிழ்நாட்டின் அழகானல்லூர் என்ற இடத்தில் இருந்த மிக முக்கியத்துவம் வாய்ந்ததும், மிகப் பழமையுமான மயானங்களில் இருந்த கல்லறைகளில் வேல் மற்றும் சேவல் சின்னங்கள் கிடைத்துள்ளன. பண்டைய காலத் தமிழர்களைப் பற்றிய வரலாற்று ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளவர்களில் மிக முக்கியமானவரும், பெரும் வல்லுனருமான பேராசிரியர் பி.டி.சீனிவாசன் என்பவருடைய கூற்றின்படி, அழகானல்லூரில் இருந்த அந்தக் கல்லறைகள் 7000 ஆண்டுகளுக்கு முற்பட்டவை. ஆரியர்கள் மேற்குக் கணவாய் வழியாக இந்தியாவிற்கு வந்த பின் முன்னர் அவர்கள் பின்பற்றிய வழக்கத்தைப் போன்றே இறந்து போன பிணங்களை எரிக்கத் துவங்கினர். அதற்கு முன்னர் அந்த இடத்தில் பிணங்கள் எரிக்கப்பட்டன என்பதற்கான எந்தவிதமான ஆதாரங்களும் கிடைக்கவில்லை. சரித்திர காலத்திற்கு முன்னரே வேல் வழிபாடும், முருக வழிபாடும் தமிழர்களிடம் இருந்தது. அதில் அவர்கள் தீவிர ஆர்வமும் கொண்டு இருந்தனர். தொல்காப்பியம், பத்துப்பாட்டு மற்றும் எட்டுத்தொகை முதலிய நூல்களில் கூறப்பட்டுள்ள செய்திகளில் இருந்து அந்தக் காலத்தில் முருக வழிபாட்டு முறையைச் சார்ந்தே பண்டைய தமிழக் குடிமக்களுடைய சமூக, கலாச்சார, ஆன்மீக வாழ்க்கை முறைகள் அமைந்து இருந்தன எனத் தெரிய வருகிறது.

**போர்முனையில் வெற்றி கொள்ள முடியாத கடவுள்**

பண்டைய தமிழர்களின் முருகன் வழிபாட்டு முறைகளைப் பற்றி தொல்காப்பியமே முதலில் நமக்கு எடுத்துக் காட்டியது. முருகனைச் சீயன் என்று அதில் குறிப்பிடப்பட்டு உள்ளது. முருகனின் உடல் சிவப்பு ஒளி போல ஜொலித்தபடி காட்சிதர, அவருடைய உடைகள், ஆபரணங்கள், மாலைகள் மற்றும் அவர் கைகளில் வைத்திருந்த வேல் போன்ற அனைத்துமே சிவப்பு வண்ணங்களில் அமைந்து இருந்தன என்று பண்டைய தமிழ்க்குடி மக்கள் நம்பினர். திருமுருகாற்றுப்படையில் கூட முருகன் சிவப்புத் துணிகளை அணிந்திருந்தவர் எனவும், அவர் சிவப்பானவர் எனவும் கூறப்பட்டுள்ளது. அரக்கர்களையும், அசுரர்களையும் அழித்த முருகப் பெருமான் கோபம் கொந்தளித்து, கண்கள் சிவப்பேற, ஆக்ரோஷத்துடன் மனித குலத்தின் மேம்பாடுகளுக்கும் நன்மைக்காகவும் அவர்களை அழித்தார் எனப் பண்டைத் தமிழ்க் குடிமக்கள் நம்பினர். மேலும் 'முருகனை' அருள் திருக்கடவுள் அதாவது அபாரமான சக்தி கொண்டவர், பராக்கிரமான செயல்களைச் செய்து முடிப்பவர் எனவும், அப்படிப்பட்ட அபார சக்தியும், பராக்கிரமத்தையும் கொண்ட அவரை யுத்தத்தில் எவராலும் வெல்லமுடியாது என்றும் நம்பினார்கள்.

மலைபடுகடாம் என்ற மற்றொரு சங்க நூல் மலைப் பகுதியில் இருந்த ஒரு தலைவனின் பெருமை பற்றிக் கூறுகையில் அவன் முருகக்கடவுளுக்கு இணையான பராக்கிரமசாலியாகவும், வீரனாகவும் விளங்கினான் என்று கூறியது. கபிலரின் குறிஞ்சிப்பாட்டு பாடல்களில் முருகனின் வேல் குறித்துக் கூறுகையில், அது மின்னலைப் போல் வெளிச் சென்று எதிரிகளை அழித்தது என எழுதினார். சங்க கால இலக்கியங்களில் வீரர்களும்,

மன்னர்களும் மட்டும் அல்ல, குடும்பத் தலைவர்களைக் கூட முருகனோடு ஒப்பிட்டுப் பார்த்தனர்.

**அழிக்கப்பட்ட தீய சக்திகள்**

சங்க கால இலக்கியங்களில் சூர் அல்லது சூரபத்மனை அழித்த முருகனின் பராக்கியங்களைக் குறித்து எழுதப்பட்டுள்ளன. அது பற்றிய செய்திகள் அவற்றில் நிறையவே உண்டு. பண்டைய மக்கள் சூர் மற்றும் சூரபத்மனைத் தீய சக்திகள் என்று கருதினார்கள். அவர்களை அழித்தவர் முருகன் என்றும் அதனால் மனித குலம் மேன்மை அடைய அவர் அவசியம் தேவை என்றும், விவசாயி ஒருவன் எப்படி நிலங்களில் இருந்து விஷ விதைச் செடிகளைக் களைந்து எடுத்து எறிந்து விடுகின்றானோ அதுபோல ஒரு மாவீரனும் சமூகத்தில் அப்படிப்பட்ட செயல்களைச் செய்வதற்கு வேண்டும் எனவும் பண்டைய தமிழ்க் குடிமக்கள் நினைத்தார்கள். அதற்கு உதாரணமாக 'நிலத்தில் இருந்து விஷ விதைகளைக் களைந்து எறிவது போன்றதுதான் ஒரு மன்னன் கடுமையான தண்டனையை ஒரு கொடுமையான கொலைகாரனுக்குக் கொடுப்பதும்' என்று திருவள்ளுவர் எழுதி உள்ளதைக் காணவேண்டும்.

**முருகு மற்றும் முருகன்- இயற்கையாக அமைந்த அழகான பெயர்கள்**

தமிழில் பல வார்த்தைகள் இருந்தாலும், சொல் தொடர்கள் இருந்தாலும் பண்டையக் கால மக்கள் முருகனைப் பற்றிக் கூறுகையில் அவரை முருகு மற்றும் முருகன் என்றால் எளிமை, அழகு, இளமை, உண்மையிலேயே துடிப்பு, புறச்செவி மடிப்பில் காதணி மற்றும் நல்ல மணம் என்ற பொருட்கள் உண்டு. சேந்தன் திவாகரம் என்ற தமிழ் இலக்கியம் இந்தக் கடவுளுக்கு இருபத்தி ஏழு பெயர்களைக் கொடுத்துள்ளது. முருகு மற்றும் முருகன் என்ற பெயர்கள் சங்க கால இலக்கியங்களில் காணப்படுபவை. இந்த வார்த்தைகள் மூலம் பண்டைய காலத் தமிழர்கள் எந்த அளவு எளிமையான வாழ்க்கையைக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள் என்பதும், அவர்கள் முருகனின் மீது பெரும் மதிப்பை வைத்து இருந்தார்கள் என்பதும் புலனாகும். முருகனுக்கு இயற்கையிலேயே மணம் உண்டு என்றும் ஜொலிக்கும் உடலமைப்பும், கவர்ச்சி மிக்க தோற்றமும் கொண்டவர் என்றும் அவரைப் பற்றிக் கருதினார்கள்.

தமிழ்த்தென்றல் திரு.வி. கல்யாணசுந்தரனார் முருகன் அல்லது அழகு என்னும் தனது படைப்பில் முருகு என்பது பல அர்த்தங்களை உள்ளடக்கிய சொல், அது முருகனுக்கு இயற்கையாக அமைந்து இருந்த உடல் அழகையும், இளமையையும், தோற்றத்தையும் விவரிக்கின்றது என்று கூறி உள்ளார். திருமுருகாற்றுப்படை எனும் பாடலிலோ முருகனை ஒளிருட்டும்படி இருக்கும் சூரியனுடன் ஒப்பிட்டு, கடலில் இருந்து வெளிச் சிதறியபடிக் காட்சி தரும் சூரிய ஒளி போல முருகனின் உடலும் ஒளி வீசியது என்று அவரைக் குறித்து வர்ணிக்கின்றது. முருகன் இயற்கையிலேயே

மிக அழகானவர், இளமை ததும்பியவர், உண்மையிலேயே துடிப்பு மிக்கவர் என்பதாக பழங்குடி தமிழ் மக்கள் கருதியது உண்மையே உறுதி செய்வது போல அதில் உள்ள பாடல் அமைந்துள்ளது.

**பழங்குடி தமிழ் இனத்தவர் பார்வையில் வெறியாடல்**

'தொல்காப்பியம்' எனும் தமிழ் நவவியாகரண நூலில் கூறப்பட்டுள்ள வேலன் வெறியாடல்கள் என்ற நடன நிகழ்ச்சி முருக பக்தர்களான பழங்குடி மக்களின் சமூக கலாச்சாரங்களுடனும் பெரிதும் சம்மந்தப்பட்டு இருந்தது. வேலன் வெறியாடல் என்ற நடன நிகழ்ச்சி அகம் மற்றும் புறத்தைக் காட்டும் முறையில் அமைந்து இருந்தாலும் குறிஞ்சி என்பதில் அவர் குறிஞ்சிப் பூக்களை அணிபவராகவே காட்டப்பட்டுள்ளார். இந்த வெறியாடல் நிகழ்ச்சி பழங்கள் மற்றும் மலர்களால் அலங்கரிக்கப்பட்ட ஆடுகளம் என அழைக்கப்படும் நாட்டிய மேடை மீது நடைபெறும். அப்போது அந்த நடனமாடுவோருக்கு வண்ணமிக்க அரிசி உணவும், இறைச்சியும் தரப்படும். முருகனைப் போலவே நடனமாடுபவரும் தன் கையில் வேல் ஒன்றை வைத்திருப்பார். ஆகவே அவரை அங்குள்ளவர்கள் அவரை முருகனின் அவதாரம் என்றே நினைத்தார்கள். இந்த நடன நிகழ்ச்சியைப் பற்றிற குறிப்புகள் எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டு போன்றவற்றில் நிறையவே காணப்படுகின்றன.

புறம் எனும் தலைப்பில் நடைபெறும் ஆட்ட நிகழ்ச்சியின் போது யுத்த களத்தில் கிடைக்க உள்ள வெற்றியைக் குறித்து வேலன் முன்னதாகவே ஆருடம் கூறி விடுவார். இந்த நடன நிகழ்ச்சியின் போது குறிஞ்சிப் பூக்களுக்குப் பதிலாக நடனமாடுபவர்கள் கண்டல் பூக்களைக் கொண்ட மாலைகளை அணிந்து கொண்டு இருப்பார்கள். அங்குள்ள படைவீரர்கள் (நடன நிகழ்ச்சியில்) முருகனின் ஆருடத்தை அப்படியே ஏற்றுக் கொள்வார்கள். வேலன் வெறியாடலில் அகம் என்ற தலைப்பின் கீழ் காதல் வயப்படும் திருமணம் ஆகாத வயதுக்கு வந்த பெண்களின் மன நிலை மற்றும் உடல் நிலையை பற்றித் தெளிவாகக் கூறுவார்கள். அதனால் கவலையுறும் செவிலித் தாயார்களும் தங்களுடைய சொந்தப் பிரச்னைகளை அந்த வேலன் வேடத்தில் உள்ள பண்டிதரிடம் கூறி அதற்கான பரிகாரம் கேட்டு நிற்பார்கள். தாய்மார்கள் அங்குள்ள வேலனின் உதவியை நாடுவார்கள். அவரே அவற்றுக்கான தீர்வைத் தர வல்லவர் என்றே நம்பினார்கள். பழங்குடி தமிழர்கள் தங்களுக்கு ஏற்பட்டு இருக்கும் மனத் துயரங்களுக்கு வேலனின் அருளினால் தீர்வு கிடைக்கும் என நம்பினர்.

**வள்ளி திருமணம் அல்லது வள்ளிக்கூத்து**

பழங்குடித் தமிழர்கள் வள்ளிக் கூத்து எனும் நடன நிகழ்ச்சியை நடத்தி வந்தனர். முக்கிய கதாநாயகி பாத்திரமாக இருப்பது வள்ளியே எனும் விதத்தில் அது அமைந்து இருந்தது. ஆகவே பண்டைக் காலத்தில் வள்ளி-முருகனின் காதலை உத்தமமான காதல் என்று ஒரு மேற்காட்டி.

அதை ஒரு உதாரணமாக வைத்து இருந்தனர். சங்க நூல்களில் வெற்றிவேல், செவ்வேல், வீரவேல் என முருகனை குறிப்பிட்டுள்ளனர். பழங்குடித் தமிழர்களுக்கு முருகனிடம் அளவு கடந்த மோகம் இருந்தது. ஏன் எனில், திருமணத்திற்கு முன் நெருக்கமாக இணைந்து இருந்து அதன் பின் இணைந்த அவதார புருடராகவே அவரைக் கண்டனர். ஒரு காதல் தோற்றால் அது வாடிவிடும் வள்ளிச்செடி போலவும் வெற்றி பெற்றால் காதலினால் இணைந்த அந்த வள்ளி தெய்வத்தைப் போலவும் என அவர்கள் கருதியதில் வியப்பேது. இத்தகைய கூத்தானது தொன்று தொட்டு நிலவி வந்ததாகும். இடைக்காலத்தில் வள்ளித்திருமணம் என்னும் பெயரில் நிகழ்த்தப்பட்டு வந்தது. தமிழ் நாடக உலகின் தந்தையாகிய பம்மல் சம்மந்தமும், தமிழ் நாடக ஆசிரியராகிய சங்கரதாச சுவாமிகளும் வள்ளித்திருமணக் கதையை மேடை நாடகங்கள் வாயிலாக பட்டி தொட்டி எங்கிலும் தொடர்ந்து அரங்கேற்றினர். தற்போது தொலைக்காட்சியிலும் தமிழ்க்கடவுள் முருகன் என்னும் பெயரில் நெடுந்தொடராக ஒளிபரப்பப்பட்டு வருகிறது. இதற்கு முன்னதாகவே 'கந்தன் கருணை', 'திருவிளையாடல்', 'வருவான் வடிவேலன்' ஆகிய திரைப்படங்களும் வெளிவந்தன என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## முடிவுரை

இவ்வாறு பல்வேறு கால கட்டங்களில் தொடர்ந்து பின்பற்றி வந்த முருக வழிபாடானது இன்றும் தொடர்ந்த வண்ணம் உள்ளது. இத்தகைய வழிபாடானது உலகளாகிய அளவிலும் பரவி உள்ளது குறிப்பிடத்தக்க அம்சம் ஆகும். முருகனுக்குரிய திருவிழாக்களின் போது காவடி எடுத்தும், பால், பன்னீர், சந்தனம், பஞ்சாமிர்தம் ஆகியவற்றால் அபிஷேகம் செய்தும் தொடர்ந்து முருக வழிபாட்டினைக் கடைபிடித்து வருகின்றனர். இத்தகைய வழிபாடானது தமிழ் கூறும் நல்லுலகம் மட்டுமன்றி இப்பூவுலகம் முழுவதும் பரவி பரிணமித்து மிகவும் சிறப்புற்றுத் திகழ்கின்றதை நம்மால் நன்கு உணர முடிகின்றது அல்லவா. நாம் அனைவரும் நமது முன்னோர்களின் நெறியைப் பின்பற்றி கந்தர் சஷ்டி கவசம் பாடி நாள்தோறும் முருகனை வழிபடுவோமாக.

## துணை நின்ற நோக்கீட்டு நூல்கள்

1. கந்த புராணம் - கச்சியப்ப சிவாச்சாரியார். கோ.பொற்கிழி, காசிஸ்ரீ, அரு.சோமசுந்தரன் (தொ.ஆ), பொன்முடி பதிப்பகம், காரைக்குடி, 2007.
2. திருப்புகழ்- அருணகிரிநாதர், நாஞ்சில் விஷ்ணு (தொகுப்.), லியோ புக் பப்ளிஷர்ஸ், சென்னை, 2012.
3. கந்தர் சஷ்டி கவசம்- தேவராய சுவாமிகள், கங்கை புத்தக நிலையம், சென்னை, 1991.
4. தெய்வீக வழிபாடு, டாக்டர்.கே.தியாகராஜன் மற்றும் இராம.சந்திரசேகரன், தஞ்சை சோழா லயன் சங்கம் வெளியீடு
5. முருகன் முப்பது-மெல்லிசைப் பாடல்கள், புலவர்.கோ.சுவாமிநாதன், முத்தமிழ் பதிப்பகம், கடம்பூர், சித்தமல்லி, திருவாரூர் மாவட்டம், 2013.

# இயற்கையோடு இயைந்த முருக வழிபாடு

**து.வைரமணி,**
கீழக்காடு-அஞ்சல், தம்பிக்கோட்டை வழி,
திருத்துறைப்பூண்டி வட்டம், திருவாரூர் மாவட்டம்.

'ஆலயம் தொழுவது சாலவும் நன்று', 'நம்பினார் கெடுவதில்லை, நான்கு மறை தீர்ப்பு, 'கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது ஆன்றோர்களின் வாக்கு. உலகில் பல்வேறு சமயங்கள் தோன்றினாலும் அவற்றில் மிகவும் தொன்மைச் சிறப்பு வாய்ந்தது இந்து மதம் ஆகும். இந்து மதத்தில் சிவலிங்க வழிபாடு, சக்தி வழிபாடு, விஷ்ணு வழிபாடு, விநாயகர் வழிபாடு, சூரிய வழிபாடு என்று பல்வேறு வழிபாட்டு முறைகள் இருப்பினும், இவற்றில் முருக வழிபாடு இன்றியமையாத தொன்மைச் சிறப்புடன் கூடியதாக அமைகின்றது. சிவனின் மகனாகிய முருகனுக்கும், தமிழர்களுக்கும் இருக்கக்கூடிய தொடர்பு என்பது வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்டதாகும். தமிழர்களின் பண்பாட்டோடும், மொழியோடும், தத்துவத்தோடும், பழக்க வழக்கங்களோடும் இம்முருக வழிபாடு பின்னிப் பிணைந்திருந்த தன்மையைச் சங்ககால இலக்கியங்களான திருமுருகாற்றுப்படை, பரிபாடல் ஆகியன மிகச் சிறப்பாகக்கூறி நிற்கின்றன. அத்தகைய உன்னதச் சிறப்பு வாய்ந்த முருகவழிபாடு குறித்து இக்கட்டுரையின் வாயிலாக ஆராயப்படுகின்றது.

## சூரிய வணக்கமும்-முருக வழிபாடும்

இயற்கை வழிபாட்டில் ஒரு கூறான சூரிய வணக்கமே பின்னர் முருக வழிபாடானது என்பர். அதனைப் பரிபாடற்திறன் என்னும் நூலில் செவ்வேல் வணக்கம் பற்றி எழுதிய சாரங்கபாணி பின்வருமாறு விவரித்துள்ளார். 'மாக்கடலின்று நிவர்தெழுந்த இளஞாயிற்றின் இயற்கை அழகில் உள்ளந் தோய்ந்த அன்பர்கள் அதனையே இறை என வழிபட்டு வழங்கினர். அதுவே பின்னர் நீலமயில் மீது வீற்றிருக்கும் செவ்வேல் வழிபாடாக மலர்ந்தது. இதிலிருந்து மலைவாழ் மக்களுக்கும் பெரும் துன்பத்தை உண்டாக்கியது 'இருள்' என்றும் அந்த இருளாகிய துன்பத்தை அகற்ற இளஞாயிறாகிய முருகனை வழிபட்டனர் என்பதும் பெறப்படுகின்றது. இதனையே மறைமலை அடிகளும் குறிப்பிட்டுள்ளார். பழந்தமிழ் நிலம் 'நானிலம்' என வழங்கப்பட்டிருந்தது. அதில் குறிஞ்சி நிலத்திற்கு உரிய தெய்வமாக முருகன் போற்றப்பட்டு இருக்கின்றான். 'சேயோன் மேய மைவரை உலகமும்' என்னும் தொல்காப்பியப் பாடல் அடியானது இதனை விளக்கி நிற்கின்றது.

## முருக வழி பாட்டின் தன்மை

முருகனை மலைக்கடவுளாகவும், தமிழ்க்கடவுளாகவும் பார்க்க முடிகின்றது. மக்களின் வாழ்வு முதன்முதற் தொடங்கப்பட்ட இடம் மலை என்பது அறிஞர்கள் கருத்து. ஆதிகால மனிதர் குன்று சார்ந்த குறிஞ்சி

பகுதிகளில் வாழ்ந்த காலத்தில் முருகன் கடவுளாகப் படைக்கபட்டு இருக்கலாம் என்பர். இதனையே 'விண் பொரு நெடு வரை குறிஞ்சிக் கிழவ' என்று திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் குறிப்பிடுகின்றார். மானுடவியல் ஆய்வாளர்களின் கருத்துப்படி முருகன் ஒரு குழுமத்தின் தலைவனாக இருந்து பெரும் வெற்றிகளை ஈட்டித் தெய்வத்தன்மைக்கு உயர்த்தப்பட்டு நாளடைவில் ஒரு தெய்வமாக வணங்கப்பட்டிருக்கலாம். சமூக அடிப்படையில் மலையைத் தெய்வமாகவும், முருகனை மலைவாழ் இறையாகவும் வழிபட்டிருக்கலாம் என்றும் கருதப்படுகின்றது.

ஆதிகால மக்கள் தமக்கு விளங்காத சக்திகளைப் பார்த்து அஞ்சினர். தங்களைவிட அதிசக்தி வாய்ந்தவர்களைக் கவுரவித்தனர். அக்கவுரவம், அச்சம் யாவும் பக்தியானது. 'சிக்மன்ட் பிரைட்' என்ற அறிஞரின் மானுடவியற் கொள்கைப்படி தெய்வ வழிபாடு என்பது தனி மனிதனின் உள் மனப்போராட்டத்தின் எதிரொலி ஆகும் என்கிறார். இதன் அடிப்படையில் தங்களுக்குள் ஒரு தலைவனை உருவாக்கிக் கொண்ட ஆதிகால மக்கள் அவனை 'முருகன்' என்று அழைத்தனர். ஒரு தலைவனுக்குரிய அழகு, கம்பீரம், வலிமை, கடமை உணர்வு, ஒரு கூட்டத்தை நடத்தும் ஒழுங்கு முறை என்பன யாவும் இத்தலைவனுக்கு இருந்தன. இதிலிருந்து இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்த் தேசியக் கடவுளின் தொடக்கம் 15 ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பது தெரிகின்றது.

முருக வழிபாடு குறித்துத் தார்பர் கூறும்போது முருகனைப் போர் நிலத் தெய்வமான கொற்றவையின் மகன் என்று போற்றியதோடு தங்கள் போர்த் தெய்வமாகவும் வணங்கினர் என்று குறிப்பிடுகின்றார். மலைவாழ் வேடர்கள் வேட்டையாடும் போது வேலினைக் கொண்டு செல்வர். அதே வேலை தம்குலக் கடவுளின் ஆயுதமாகவும் வேல் ஆயுதத்தையே கொண்டனர். அந்த வேலவன் பகைவர்களை அழித்துச் சம்காரம் செய்வான் என்பது அவர்களின் அசைக்க முடியாத நம்பிக்கையாக இருந்தது. மனித வடிவில் முருகனைக் காண தமிழர் மிகவும் விரிவான தத்துவத்தை உள்ளடக்கி இருக்க வேண்டும். இத்தத்துவம் ஒரு சமத்துவ அடிப்படையில் வளர்ந்திருக்கின்றது என்பதனை அது காட்டுகின்றது. 'அமரர் இடர் நீர்த்தே அவர்க்கருளும் வெற்றிக்குமரனடி சிந்திப்பாய் சமர்ந்து' என்கின்றது சைவ நெறி. 'என்னிருளை நீக்கி இமையோக்கிடர்க்கடியும் பன்னிரு தோட்பாலன் பாதம்' என்கின்றது சங்கற்ப நிராகரணம். முருகனுக்கும், தமிழர்களுக்கும் இருந்த இறுக்கமான பிணைப்பினை முருகன், கந்தன் என்றும் வேலன், குகன் எனவும் அழைக்கப்படுவதில் இருந்து அறிந்து கொள்ளலாம்.

**முருக வழிபாட்டின் பல கூறுகள்**

திராவிடர்களின் முருக வழிபாட்டில் பல்வேறு கூறுகள் உண்டு. அதாவது, பூஜை முறைகள், நம்பிக்கைகள், வள்ளி-முருகன் பற்றிய காதல் கதை, முருகனின் வீரம், அழகை விவரிக்கும் முறை இவை அனைத்தும்

முருகனை வழிபட்ட சமுதாயத்தின் மன நிலையை உணர்த்துகின்றது. மேலும் சாதி அமைப்பற்ற நிலையும், பெண்டிரையும், காதலையும், தமிழர் மதித்துக் கவுரவித்ததையும் காட்டுகின்றது. குறிப்பாக, மந்திர தந்திரம் அற்ற வழிபாட்டு முறை இங்கு இன்றியமையாத தன்மை பெற்றிருக்கிறது. காடு, வெறியாடுகளம், சோலை, மரத்தடி, அம்பலம் போன்ற இடங்களில் முருகன் உறைவதாகக் கருதப்பட்டு அங்கு அவனுக்கான பூஜைகள் நிகழ்ந்தன. வேலன், வெறியாடல், குன்றக்குரவை, வெறியாட்டு என்பன சிறப்பிடம் பெற்றன. இவ்விழாக்களின் போது ஆட்டைப் பலியிட்டுத் தேன், திணைமா போன்றவற்றைப் படைத்து ஆடிப்பாடி வழிபட்டனர். இவற்றை மரபுசார் வழிபாட்டு முறைமைகளின் மிச்ச சொச்சங்கள் எனலாம். ஆகையால் தான், முருகன் என்றால் அழகன் என்று தமிழ்மொழி கூறும். அந்த அழகன் எந்தன் தெய்வம் என்று மனமொழி கூறும் என்று கந்தன் கருணை என்னும் திரைப்படத்தில் பாடல் வரிகளும் இடம் பெற்றிருக்கிறது இங்கே குறிப்பிடத்தக்கதாகும். 'ஆடும் மயிலில் ஆடி வருபவன் முருகன், பாடும் தமிழில் பரவசமூட்டுபவன் முருகன்' பன்னிரெண்டு உயிரெழுத்துகளுக்கு இணையாக 12 கரங்களையும் 18 உயிர்மெய் எழுத்துகளுக்கு இணையாக கரம், சிரம் சேர்ந்த உடலமைப்பு கொண்டவனாய், சதாசிவத்தின் ஐந்து முகங்களோடு, சக்தியின் ஒரு முகமும் சேர்ந்து ஆறுமுகமாக காட்சி அளிப்பதை நாம் காண்கின்றோம் அல்லவா.

### தமிழ்ச் சங்கங்களும்-முருகக்கடவுளும்

தமிழ் கூறும் நல்லுலகில், சங்கம் வைத்து தமிழ் வளர்த்த பாண்டி நாட்டுச் சீமையில் தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்று மூன்று சங்கங்கள் இருந்தன. இதில், முதலாவதாக உருவாகிய தலைச்சங்கத்தில் அகத்திய முனிவர், விரிசடைக் கடவுளாகிய சிவபெருமான், தமிழ்க் கடவுளாகிய முருகவேல் மற்றும் முரஞ்சியூர் முடிநாகராயன் உள்பட 549 பேர் உறுப்பினர்களாய் இருந்தனர். கடல்கொண்ட தென் மதுரையில் இது அமைந்திருக்கிறது. இச்சங்கம் இருந்த கால கட்டம் 4440 ஆண்டுகள் ஆகும். அதேபோல் இடைச்சங்கம் தோற்றுவிக்கப்பட்ட போது 3700 பேர் உறுப்பினர்களாக இருந்தனர். கபாடபுரத்தில் இச்சங்கமானது நிறுவப்பட்டது. 3700 ஆண்டுகள் இச்சங்கம் இருந்தது. இதனைத் தொடர்ந்து கடைச்சங்கம் உத்தர மதுரையில் அமைந்திருந்தது. 1850 ஆண்டுகள் வரை நீடித்த இச்சங்கத்தில் நக்கீரனார், சிறுமேதாவியார் உள்ளிட்ட முக்கியப் புலவர்கள் இருந்து தமிழை வளர்த்தனர். இதில்தான் இறையனார் அகப்பொருள் உரை கூறும் வரலாறு இடம் பெறுகிறது. இத்தகைய தமிழ்ச்சங்கங்கள் தோன்றிய காலத்தில்தான் பரிபாடல், திருமுருகாற்றுப்படை, மலைபடுகடாம், குறிஞ்சிப்பாட்டு போன்ற முருகக் கடவுளைப் பற்றிப் பாக்கள் இடம்பெறும் சங்க இலக்கிய நூல்களும் இயற்றப்பட்டன என்பது மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

### முருகக் கடவுளைப் போற்றும் தமிழ் பக்தி இலக்கிய நூல்கள்

முருக வழிபாட்டுடன் தொடர்புடைய பக்தி இலக்கிய நூல்களில் திருமூலரின் திருமந்திரம், குமருகுருபரரின் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்,

தேவராய சுவாமிகளின் 'கந்தர்' சஷ்டி கவசம்' இதற்கு உரை நல்கியவர் பாணர்), அருணகிரிநாதரின் திருப்புகழ் மற்றும் கந்தர் அலங்காரம், கந்தர் அனுபூதி, கந்தர் அந்தாதி, சண்முகக் கவசம், சுப்பிரமணிய புஜாங்கம், தணிகை புராணம், குமாரரசம், முருகனின் 108 போற்றி மந்திரங்கள், மற்றும் முருகனின் ஆலய தல புராணங்கள், மூல நிலை ஆதாரங்கள், ஆறுபடை வீடுகள் மற்றும் பிற தலங்களில் இடம்பெறும் முருகனைப் பற்றிய புராண வரலாற்றுப் பின்புலங்கள் யாவும் முருகக் கடவுளின் சிறப்பினை விவரிக்கும் அரிய, அளப்பரிய ஆன்மீகப் படைப்புகள் ஆகும். இது தவிர, முருகனைப் பற்றி எண்ணில் அடங்காத மெல்லிசைப் பாடல்களும், திரைஇசைப் பாடல்களும், இசைத் தட்டில் பதிவாகி செவிகளில் கேட்பதற்கு மிகவும் இனிமையாக ஒலித்துக் கொண்டிருப்பதையும் நாம் அன்றாடம் காண்கிறோம். மேலும், கந்தன் கருணை, திருவிளையாடல், வருவான் வடிவேலன் ஆகிய திரைப்படங்களும் முருகனின் புகழைப் பரப்பும் விதமாய் அமைந்தன எனலாம். தற்போது சின்னத்திரையாகிய தொலைக்காட்சியிலும் தமிழ்க்கடவுள் முருகன் என்கிற ஆன்மீக நெடுந்தொடர் ஒளிபரப்பப்பட்டு வருவதும் குறிப்பிடத்தக்கது. இவற்றில் இடம்பெறும் திருப்புகழுக்கு முருகப் பெருமானே முதல் அடி எடுத்துத் தந்து அருணகிரிநாதரின் நாவில் வேலினால் முத்து என்று எழுதி பாட வைத்ததாகவும் அறிய முடிகின்றது.

*'முத்தைத்திரு பத்தித்திருநகை*
*அத்திக்கிறை ஈ சத்திச் சரவணா*
*முத்திக்கொரு வித்துக்குருபர (என வோதும்)*

*முக்கட்பரமற்குச் சுருதியின்*
*முற்பட்டது கற்பித்திருவருள்*
*முப்பத்து மூவர்க்கத்தமரும் (அடிபேண)*

என்று 'காத்தருள' என்னும் தலைப்புடன் அப்பாடல் வரிகள் தொடர்கின்றன. இவற்றைப் பாடிய அருணகிரிநாதர், மேலும் கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம், கந்தர் அந்தாதி, மயில் விருத்தம், வேல் விருத்தம், சேவல் விருத்தம், வேல் வகுப்பு, திருவகுப்பு ஆகிய நூல்களையும் இயற்றி முருகக் கடவுளுக்குரிய சிறப்புகளை விவரித்துக் கூறியுள்ளார். இவரது அரிய படைப்பாகிய திருப்புகழைத் தொடர்ந்து மற்றுமொரு கச்சியப்ப சிவாச்சாரியாரின் அரிய படைப்பாகிய கந்தபுராணத்தையும் சேர்த்து கிருபானந்தவாரியார் 'எம்பெருமான் அப்பன் முருகன்' எனத் துதித்து நீண்ட நெடியச் சொற்பொழிவினையும் நிகழ்த்தி விளக்க உரை ஆற்றி முருக பக்தர்களை மகிழச் செய்ததை நம்மால் என்றென்றும் மறக்க இயலாது. அதே போல் திரு.வி. கல்யாணசுந்தரனாரின் முருகன் அல்லது அழகு என்னும் நூலிலும் எளிமையாகவும், இனிமையாகவும் கூறப்பட்டுள்ளது. இதனைத் தொடர்ந்து, ஆறுபடை வீடுகளைக் கொண்டிருக்கும் திருமுருகக் கடவுளின் சிறப்பம்சங்களை விவரிக்கும் திருமுருகாற்றுப்படை சங்க இலக்கிய நூல்களின் வரிசையில் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். அவற்றின் படைப்பு மற்றும் இடம்பெறும் செய்திகள் பற்றி இதில் விரிவாகச் சுட்டிக்காட்டப்படுகின்றது.

## முடிவுரை

தமிழ்த் தேசியக் கடவுளாகவும், மலை சார்ந்த பகுதியை ஆட்சி புரியும் குறிஞ்சி நிலக் கடவுளாகவும், முருகவேள் வழிபடப்பட்டுள்ளான் அல்லவா. அதே பண்புகளுடன் இன்றைய கலியுகத்திலும், சர்வ தேசக் கடவுளாக தமிழ்க் கடவுள் முருகன் திகழ்கின்றான். 'ஓம்முருகா' என்று அன்புடன் முருகனை நினைந்து வழிபடும் பக்தர்களும் உலகளாவிய அளவில் பெருகிவிட்டனர் என்பதை இத்தகைய முருக வழிபாட்டின் மூலம் நம்மால் அறிய முடிகிறது.

## நோக்கீட்டு நூல்கள்

1. கந்த புராணம், கச்சியப்ப சிவாச்சாரியாா, புலவர்.வ.ஞானப்பிரகாசம் (தொ.ஆ) பிரபாத் புகஸ், சென்னை, 2002.
2. திருப்புகழ், அருணகிரிநாதர், நாஞ்சில் விஷ்ணு (தொ.ஆ), லியோ புக் பப்ளிஷர்ஸ், சென்னை, 2012.
3. கந்தர் சஷ்டி கவசம், தேவராய சுவாமிகள், கங்கை புத்தக நிலையம், சென்னை, 1991.
4. தெய்வீகச் சிந்தனைகள், எம்.நாராயணவேலுப்பிள்ளை (ஆசிரியர்), புவனா பதிப்பகம், காட்பாடி-வேலூர், 2002.
5. முருகன் முப்பது-மெல்லிசைப் பாடல்கள், புலவர்.கோ.சுவாமிநாதன், முத்தமிழ் பதிப்பகம், கடம்பூர், சித்தமல்லி, திருவாரூர் மாவட்டம், 2013.

# முருக வழிபாட்டில் இலங்கை வாழ் மக்களின் கிராமிய நடனங்கள் - ஓர் ஆய்வு

திருமதி. **ஸோபனா. தர்மேந்திரா**
விரிவுரையாளர், நடனத்துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

இலங்கை வாழ் மக்களாக தமிழர், சிங்களவர், முஸ்லீம் ஆகிய மூவின மக்கள் வாழ்ந்து வருகின்றனர். தமிழர்களும், சிங்களவர்களும் வணங்கும் தெய்வமாக முருகன் விளங்குகிறார். இலங்கையிலுள்ள மிகவும் பழமையான முருக வழிபாட்டுத் தலங்களாக கதிரமலையில் உள்ள கதிர்காமமும், யாழ் மாட்டத்தில் உள்ள நல்லூர், செல்வச்சன்னதி, மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயில் என்பன விளங்குகின்றன. கதிர்காமத்தில் உள்ள தலமானது மலையில் உள்ளது. கீழே உள்ள முருகன் கோயிலில் கதிர்காமக் கந்தனின் திருவிழா நடைபெறும். இங்குதான் தமிழர்களும் சிங்களவர்களும் ஆடிப்பெருவிழாவின் போது கிராமிய ஆடல்களை ஆடி வழிபடுவார்கள். இவ்விழாவின் போது யானையின் மேல் கதிர்காமக் கந்தனின் இரகசியப் பெட்டியை வைத்து வலம் வரும் போது சிங்கள மக்களின் கிராமிய நடனங்களான தீயாட்டம், மயிலாட்டம், கம்பாட்டம், லீகலீ எனப்படும் கோலாட்டம், காவடி, மேளவாத்திய நடனம் என்பன இடம்பெற்று வருகின்றன. தமிழர்களின் கிராமிய நடனங்களான காவடியும் பக்திபூர்வமாக இடம்பெறும். யாழ் குடாவில் உள்ள முருக தலங்களில் தமிழர்களின் கிராமிய நடனங்களான காவடியாட்டம், உருவேறிய நடனம், வேலனாட்டம் போன்றவை நேர்த்திக்கடனுக்காக நிகழ்த்தப்படுகின்றன. வசந்தனாட்டம் நோய் பிணியில் இருந்து தம்மை பாதுகாத்துக் கொள்வதற்காக இந்துக் கடவுள்களை வேண்டி ஆடப்படுவதாகும். அதிலும் கதிர்காமக் கந்தனை வேண்டி கதிர்காமக் கந்தனின் சிறப்புக்களைப் பாடி ஆடுவது இவ்வசந்தனாட்டத்தின் ஒரு கூறாகும்.

**காவடியாட்டம்**

காவடியாட்டமானது முருக வழிபாட்டோடு இணைந்தது. பூக்காவடி, பாற்காவடி, பன்னீர்க்காவடி, பழக்காவடி, தானியக்காவடி, செதில்காவடி, ஆட்டக்காவடி, தூக்குக் காவடி எனப் பல்வகைக் காவடிகள் யாழப்பாணத்து முருகன் கோயில்களில் இடம்பெற்று வருகின்றன. காவடி நடனத்தின் தோற்றம் பூர்வீகமான செயற்பாட்டோடு இணைந்தல் என்றவாறு படிமுறை வளர்ச்சி கண்டது. சுமை தூக்கியோர் உள்ளத்தில் தோன்றிய ஒருவித மறுதலிப்புக் கலைவடிவமாகவே காவடியாட்டம் முகிழ்ந்தெழுந்தது.

*"கந்தனுக்கு சுமை தூக்கிச்*
*சுகம் கண்டோம் - கதிரை*
*வேலனுக்கு சுமை தூக்கிச்*
*சுகம் கண்டோம்"*

மேற்கூறிய காவடிப் பாடல் அளவெட்டி ஊர் மக்களால் பாடப்பட்டது[1]. காவடியாட்டம் எந்த வயது நிரலைச் சேர்ந்தவர்களும் ஆடப்படக்கூடியதாக இருப்பதற்குரிய தொன்மம் காணப்படுகிறது. முருகனைக் குழந்தையாக, குமரனாக, விருத்தனாக பல்வேறு வயது வீச்சுக்களில் காணும் தொன்மம் காணப்படுகிறது. காவடி நடனத்தின் அடிப்படை அசைவுகள் அடி, அடிகள், அடியளவு என்ற எண்ணக் கருக்களால் அழைக்கப்படும். நேரடி, பக்கடி, நிலை அடி, சாய்வு அடி, கிறுங்கல் அடி, தட்டடி, குதித்த அடி, சறுக்கல் அடி, பிறை அடி, ஈரடி, நான்கடி, எட்டடி, அண்டி அடி என்றவாறு பாத அசைவுகள் காவடியாட்டத்தில் காணப்படுகிறன. காவடியாட்டத்திற்குரிய நடை வகைகளும் அண்ணாவிமார்களாலேயே உருவாக்கப்பட்டிருந்தன. இசை அளவுப் பிரமாணங்கள் மூச்சுக்கள் என்று அழைக்கும் மரபு காணப்பட்டது. சில உதாரணங்கள் வருமாறு:

மூன்று மூச்சு - தகிட, நான்கு மூச்சு - தகதிமி, ஐந்து மூச்சு - தகதகிட, ஏழு மூச்சு - தகதிமிதகிட, ஓன்பது மூச்சு - தகதிமிதகதகிட.

காவடியாட்டத்திலே பல்வேறு சொற்கட்டுக்கள், சொற்கோவைகள் பயன்படுத்தப்பட்டன. தெய்யாத் தெய், தா தெய் தெய் தா, தத்தெய் தா, தா. தத்தெய் தாம், கிடதக்க தரிகிடதோம், தெய்த் தெய்யும் தத்த, தித்தெய்தாம் முதலியவை சில உதாரணங்களாகும். சிறார்கள், நடுத்தர வயதினர், முதியோர் போன்றோர் காவடி எடுக்கும் மரபு யாழ்ப்பாணத்தில் காணப்படுகிறது. சிறுவர்களுக்கான ஆடலில் கெந்தியாடும் அசைவுகளும், நடுத்தர வயதினர் சுழன்றாடும் அசைவுகளும், முதியவர்களுக்கான அசைவுகள் மெல்லசைவுகளும் அபிநயங்களும் செயற்படுத்தப்படுகின்றன.

*"கந்தன் அருள் சுரக்க கெந்தியாடு*
*காந்தன் அருள் சுரக்கக் கெந்தியாடு"*

என்ற உடுக்கடிப்பாடல் சிறாரின் கெந்தியாடலைப் புலப்படுத்தும்.

*"வீரக்கழலணிந்த வெற்றிவேல்!*
*சூரன் பகையறுக்கச் சுற்றி வா!*
*சுற்றி வா !*

என்ற உடுக்கடிப் பாடல் இளைஞர் சுழன்றாடும் ஆடலுடன் தொடர்புடையது. முதலாம் அடியானது எழுநடனத்துடனும் இரண்டாம் அடியானது சுழன்றாடுவதுடனும் தொடர்புடையதாகவும் காணப்பட்டது. "வீரக் கழலணிந்த வெற்றிவேல்" என்று பாடும்பொழுது காவடியுடன் ஓம் என்ற ஒலி எழுப்பிக்கொண்டு தொங்கி மேலேழுவர் மேலேழுந்த பாதம் நிலத்திலே பதிந்தவுடன் "சூரன் பகையறுக்கக் சுற்றிவா" என்றதும் வலம்சுற்றி ஆடுவர். இது மிகுந்த கடின ஆட்டமாக அமைவதால் இளைஞர்களுக்கே பொருத்தமானதாக அமைந்தது. முதியவர்களது ஆடல்கள் பெரும்பாலும் புராணக் கதைகளோடு தொடர்புடைய அபிநயம் மிகுந்த ஆடல்களாக இருந்தன.

*"தங்க விண்வெளியும் சண்முகனார் கோயிலிலே*
*வெள்ளி விளக்கெரியும் வேலனார் கோயிலிலே"*

என்று பாடும் பொழுது முதியவரின் தோளில் இருக்கும் காவடியைப் பின்னால் நிற்கும் இருவர் தாங்கிக்கொள்ள முதியவர் தங்க விளக்கெரிதல், வெள்ளி விளக்கெரிதல் சங்கு முழங்குதல் முதலியவற்றைக் கைகளால் அபிநயத்து ஆடுவார்கள்.[2]

**வேலாட்டம்**

வேலாட்டம் என்பது கழியாட்டம் அதாவது கோலாட்ட வகையைச் சார்ந்ததாகும். "கோலின் நுனியிலே வேலைச் சொருகி முருகையன் கோயிலிலே ஆடும் ஆட்டம் வேலாட்டம்" எனப்பட்டது. வேலாட்டத்தில் கழியாட்டத்திலுள்ள சில பண்புகள் வேலின் தூய்மை கருதி கைவிடப்பட்டன. வேலை ஒன்றுடன் ஒன்று மோதுவதுமில்லை. வேலை நிலத்திற்போட்டுக் கடந்து ஆடுவதில்லை. கோலாட்டம் விரதமிருந்து ஆடும் சடங்கு ஆடலாகவும் வளர்ச்சி பெற்றது. இது பக்தி வீரம் நிரம்பிய ஆடலாகவே இருந்தது. விரைந்த வேகமான அசைவுகளை இது கொண்டிருந்தது. இந்த ஆடலிலே,

*"வேலுண்டு வினையில்லை*
*மயிலுண்டு பயமில்லை"*

என்ற அடிகள் மீள மீள வந்து வீரமும், பக்தியுணர்வும் ஊட்டும். வேலாட்டத்தில் தத்தல், தாண்டல், துள்ளல், எகிறல், உதறல் முதலாம் வலிமையான அசைவுகள் பயன்படுத்தப்படும். தவளைபோல் பாய்தல் தத்தல் எனப்படும். ஒரு காலை ஊன்றியும் மறுகாலை உயர்த்தி விரைந்து ஊன்றிய காலுடன் சேர்த்தல் தாண்டல் எனப்படும். இரு கால்களாலும் மேலும் கீழும் உயர்த்தி ஆடல் துள்ளல் எனப்படும். இரு குதிக்கால்களையும் உயர்த்திக் குதித்தல் எகிறல் என்றும், ஒரு பாதத்தை ஊன்றி மறுகால்களை உயர்த்தி பின்னோக்கித் தள்ளல் உதறல் எனப்படும்.[3]

**வசந்தனாட்டம்**

இதுவும் ஒரு வகை கோலாட்டத்தைச் சார்ந்ததாகும். ஆண்களால் ஆடப்படுவது. பொழுது போக்கிற்காக ஆடப்படுவதில்லை நீர்வேலி, கட்டுவன் பிரதேசத்தில் ஆடப்படுவது ஆகும். பொக்களிப்பான், அம்மை நோய்களில் இருந்து மக்களின் துயர் போக்க நினைத்து வசந்தன் பாட்டுப்பாடி ஆடுவர். இவ்வசந்தனாட்டத்தில் 20 பாடல்கள் காணப்படுகின்றன. ஒவ்வொரு பாடல்களும் வாய்க்கால்தரவை விநாயகரை வேண்டியும் அவரின் அருட்கடாச்சத்தைச் சிறப்பித்தும் மகிழ்வித்தும் பாடப்படுகிறது. நீர்வேலி அரசகேசரிப் பிள்ளையார், அச்செழு கண்ணகை அம்மன், கதிர்காம வேல்முருகன், குருநாதசுவாமி, காத்தவராயசுவாமி, பூதவராயசுவாமி, வைரவர் ஆகிய தெய்வங்களையும் வாழ்த்திப் பாடப்பட்டுள்ளதனை இறுதிப்பாடலினூடாக அறிய முடிகிறது. வசந்தனாட்டமானது இருபது வகையாக பிரிக்கப்பட்டுள்ளது. அவையாவன:

தோடயம் (பிள்ளையார் வசந்தன்), துணிதனடி, வசந்தன், நடனம், தனித்தொங்கல், இருகை வாங்கி, சீர்னிமேனியம், பிறமங்கலம், தூக்கினிவசந்தன், இருநிரைக்கும்மி, தனிக்கும்மி, பல்லக்கு, சிக்குறுட்டி, முசுறு, அருவி, ஊஞ்சல், அனுமார், குறவன், முளைத்தமிழ், துனித நெடுவசந்தன், களவசந்தன்.

இந்த ஒவ்வொரு வகை வசந்தனிற்கும் தனித்தனியான பாடல்களும் அதற்கேற்ற முறையில் தரு, தாளம் என்பனவும் தனியாக அமைக்கபட்டு ஒவ்வொரு வசந்தனும் வெவ்வேறு வகையான அமைப்பு முறையில் ஆடப்படும். முதலாவது வசந்தனாகிய தோடயம் வட்டவடிவமாக சோடியில்லாது கோல்களைத் தட்டி ஆடுவது தனித்தொங்கல் இருநிரைக்கும்மி, பல்லக்கு, ஊஞ்சல், முளைத்தமிழ் ஆகிய வசந்தன்கள் சோடியாக நிரையில் நின்று ஆடப்பட்டும். ஒவ்வொரு வசந்தனுக்குரிய ஆட்ட முறையானது வேறுபட்டிருக்கும். ஆனால் கால்மிதிப்பு ஒன்றாக இருக்கும் இம்மிதிப்பு முறை கச்சை மிதிப்பு என்று கூறப்படும். இவ்வாறு இருபது வகையான வசந்தன்களும் ஆடப்பட்ட பின்னர் இறுதியாக கும்பத்துக்கு முன்னின்று காப்புச் சொல்லிய பின்னர் பறை முழங்கப்பட்டு கும்பமானது இருப்பிடத்தில் இருந்து தூக்கப்பட்டு ஆலய வீதியைச் சுற்றி எட்டுத்திக்குகளிலும் கர்ப்பூரம் எரிக்கப்பட்டு ஆலய நுழைவாயிலில் கும்பம் ஊற்றப்பட்டு வேப்பிலையில் எல்லோர்க்கும் கும்பநீர் தெளிக்கப்பட்டு திருநீறு, சந்தனம் முதலான பிரசாதங்கள் வழங்கப்படுவதுடன் இவ்வசந்தனாட்டம் நிறைவடையும். இவை களவாய்வின் மூலம் நீர்வை அண்ணாவியார் பரராஜசிங்கம் அவர்களிடம் இருந்து பெறப்பட்ட தகவல்கள் ஆகும்.

**உருவேறிய நடனம்**

தெய்வமேறிய நடனம், உருவாட்டல், அனுபூதியாட்டம், உட்புகுந்த நடனம் போன்ற பல பெயர்களால் இந்நடனம் அழைக்கப்படுகிறது. பொங்கல், மடை, வேள்வி, குளிரித்தி, திருவிழா முதலிய நிகழ்ச்சிகளில் ஒருவர் உருக்கொண்டு ஆடுதல் என்பதைக் குறிக்கும். தெய்வீகப் பாங்கும் கலைப்பாங்கும் கலந்த நடனகங்களாக இவை அமையும். ஆடும் ஆற்றல், ஆழ்ந்த தெய்வ ஈடுபாடு பக்தியை ஆடலால் வெளிப்படுத்தும் உந்தல் முதலியவை உருவேறிய நடனம் ஆடுவதற்குரிய விசைகளாகும். உருவேறிய ஒருவர் நடனமாடத் தொடங்கும் பொழுது மடைதிறந்தாச்சு என்று சொல்லும் மரபு வடமராட்சியில் உண்டு. தங்குதடையில்லாத வெளிப்பாட்டின் ஆரம்பத்தை அது குறிக்கும். உருவேறிய நடனம் முன்கூட்டியே திட்டமிட்டு ஆடப்படுவதன்று. சன்னதி முருகன் கோயில் மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயில் நல்லூர் கோயில்களில் இவற்றைக் காணலாம். மனவெழுச்சியின் உந்தலானது உள்ளார்ந்த ஆடல் ஆற்றலை அவிழ்த்து விடுகிறது. ஆழ்மனமும், இறையனுபவங்களும் நடனங்களிலே காட்டப்படும். புதிய தரிசனத்தை அவர்கள் அனுபவிக்க முடிகிறது.

*"வேலனுக் குள்ள வேலன் வாறான்"*

மேற்கூறிய உதிர்வுகள் புதிய உருவாடுவோர் வாயிலிருந்து கிளரும் மேற்கூறிய உதிர்வுகள் புதிய தரிசனத்தை அவர்கள் அனுபவிக்கின்றனர் என்பதைப் புலப்படுத்துகிறது.

*"தெருவில் வாறாண்டி - வேலன்*
*தெருவில் வாறாண்டி*
*உருவில் வாறாண்டி - வேலன்*
*உருவில் வாறாண்டி*
*கலையில் வாறாண்டி- வேலன்*
*கலையில் வாறாண்டி*[4]

மேற்கூறியவாறு புதிய தரிசனங்களைக் காட்டும் அடிகள் அவர்களால் உதிர்க்கப்படுகின்றன. பேச்சுவழக்கில் "உரு" என்ற சொல்லுக்கு இணையாக "கலை" என்ற சொல்லும் பயன்படுத்தப்படுகிறது.

சிங்கள மக்களின் கிராமிய நடனங்கள் சிங்கள மக்களின் பாரம்பரிய நிகழ்வுகளிலும் மேடை நிகழ்ச்சிகளிலும் இடம்பெற்று வருகின்றன. இலங்கைத் தமிழர்களின் முருக வழிபாட்டோடு தொடர்புடைய கிராமிய நடனங்கள் பொழுது போக்கிற்காக ஆடுவதன்று. முருக பக்தியின் உளக்கிளர்ச்சியின் மேலீட்டால் ஆடப்பெறும் ஆடல்களாக இவை விளங்குகிறது. முருக வழிபாட்டில் இலங்கை வாழ் மக்களான சிங்களவர், தமிழர்கள் ஆகியவர்களின் கிராமிய நடனங்கள் பக்தியின் மேலீட்டாலும் உளக்கிளர்ச்சியின் உந்துதலாலும் ஒரு இலக்கண வரையின்றி சுயமாக ஆடக்கூடியதாகவும் இறைத்துவமிக்க புனித நடனக் கலையாக விளங்குகிறது என்பது இவ்வாய்வின் மூலம் கண்டறிந்த முடிவாகும்.

**அடிக்குறிப்பு**

1. ஜெயராசா.சபா, ஈழத்தமிழர் கிராமிய நடனங்கள், போஸ்கோ பதிப்பகம், யாழ்ப்பாணம் -2000 ப.30.
2. மேலது, ப.34.
3. மேலது, ப.52.
4. மேலது, பக்.71-72.

# முருக வழிபாடும் நாட்டுப்புற மரபுகளும்

முனைவர் **செ. ஜெயந்தி,**
உதவிப்பேராசிரியா, தமிழ்த்துறை,
விவேகானந்தா கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி
வீராச்சிபாளையம், சங்ககிரி (மேற்கு),
சேலம் மாவட்டம்-637 303..

நாட்டார் தெய்வங்களின் வழிபாட்டு முறையானதைப் பெருவழக்காண்மைச் சமய தெய்வங்களின் வழிபாட்டு முறை மரபுளினின்று பெரிதும் வேறுபட்டது எனலாம். நாட்டார் மரபுப்புடி அவர்களின் தெய்வமானது பெரும்பாலும் அவனது உருவத்தை ஒத்தே இருக்கும். அதன் கையில் காக்கும் ஆயுதங்கள் இருக்கும். அது ஊருக்கு வெளியே குடிகொண்டிருக்கும். அதற்கு நிரந்தரக் கோயில், கொடி, மரம், கருவறை, ஆவாகானம் செய்யப்பட்ட தெய்வம் இவையெல்லாம் மரத்தினாலோ, மண்ணலோ மட்டுமே அமைக்கப்பட்டிருக்கும். அவனை நினைத்து கொடையெடுக்கும் போது அங்கு உடனே தெய்வீகச் சூழல் வரும். முருகன் வழிபடும் இடங்களும், வழிபாட்டு முறைகளும், இன்றைய நிலையில் முருக வழிபாட்டில் நாட்டுப்புற மரபுகள் ஆகியவற்றை ஆராய்ந்து இக்கட்டுரையில் ஆராயப்படுகிறது.

**தொன்மை நிலை**

தொன்மை காலந்தொட்டே தமக்கெனத் தனிப்பெரும் பண்பாட்டினையும் நீண்ட நெடும் வரலாற்றினையும் கொண்டிலங்கிய இனங்கள் ஒரு சிலவே. அவற்றுள்ளும் ஊழிக் காலங்களால் உருக்குலைந்து போனவையும் உள. காலப் புனலிடையே மாறுபட்டுத் தம் காலூன்ற ஒண்ணாது கடிதே நொடிந்து மடிந்து ஓய்ந்தலையும் உள, ஊழிப் பல பெயர்ந்த பின்னும் ஆழி இருமுறை சூழ்ந்த பின்னும் தன்னிலையில் கடுகளவேனும் வீழ்வும் தாழ்வும் கொள்ளாது இன்றளவும் சீரிளமைத் திறத்தோடு நின்றுலவும் தகைசால் தனிப்பெரும் இனம் தமிழினமாம். தொல் பழங்காலந் தொட்டே இத்தமிழினம் அக வளமையும் புறச்செழுமையும் பெற்றிருந்ததை இன்றைக்கு ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பெழுந்த சங்க இலக்கியங்களும் அவற்றிற்குப் பன்னூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றிய தொல்காப்பியமும் நன்கு விளங்கும். அற்றை நாள் தமிழரின் வழிபடுதெய்வங்களுள் சில இற்றை நாளில் இல்லாமல் ஒழிந்தன. பல உருத்தெரிந்தன. வேறு சில புதியதாய்ப் புகுந்தன. எனினும் அன்றுபோன்றே இன்று வரை தமிழர் வழக்காற்றில் வழங்கி வரும் தெய்வங்களும் உண்டு. தமிழர்தம் ஒப்பில்லாப் பண்பிற்கும் தாழ்வில்லா வாழ்விற்கும் அவர்தம் கடவுட் கொள்கையே காரணம் எனத் துணியலாம். பழந்தமிழர் கடவுட் கொள்கைகள், சமய நம்பிக்கைகள், சடங்குகள் ஆகியனவற்றை நமக்குத் தெளிவுறுத்தும் குறிப்புகள் பழந்தமிழ் இலக்கியங்களிடையே மலிந்து கிடக்கின்றன.

அந்தணர்கள் நிகழ்த்தும் ஆறு காலப்பூசை இருக்காது. நிவேதனம் என்பது பெரும் உணவுக் குவியலாக முன் படைக்கப்படும். கடா வெட்டுதல், கோழி, சேவல் பலியிடல் போன்றவை நடைபெறும். மந்திரம் அர்ச்சனை இருக்காது. கடவுளோடு நேரடியாகப் பேசும் "சாமியாடல்" இங்கு இடம் பெறும். மொத்தத்தில் தெய்வத்தோடு நெருக்கமாய் உள்ள உறவே இந்நாட்டார் மரபுகளில் பெரிதும் பேணப்படுகிறது. நாட்டார் மக்களின் முருக வழிபாடானது முற்றிலும் நாட்டார் மரபகளின் அடிப்படையிலேயே மேற்கொள்ளப்பட்டது. திருமுருகாற்றுப்படை கூறுவது போல், நாட்டார் தெய்வங்களின் இருப்பிடமானது ,

*காடும் காவும் கவின் பெறு துருத்தியும்*
*சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்*
*யாறும் குளனும் வேறுபல் வைப்பும்"* (திருமுருக. 223-224)

என்பது போல் முருகனுக்கென்று கட்டிட வடிவிலான கோயில் நாட்டார் மரபுப்படி இல்லை. நாட்டார் மரபுப்படி முருக வழிபாடு அமைந்த முறையே நக்கீரரின் திருமுருகாற்றுப்படையில் வரும் "சிறுதினை மலரொடு என்று தொடங்கி, ஆண்டாண்டு உறைதலும் அறிந்தவறே" என்று முடியும் ஒரு பாடலே விளக்கத்திற்குப் போதுமானதாக உள்ளது.

## வழிபடும் இடம்

மக்கள் தத்தம் விருப்பத்திற்கேற்ற இடங்களில் முருக வழிபாட்டை நடத்தினர். படிமத்தான் ஆகிய வேலன் ஆடும் வெறியாடு களத்திலும் காட்டிலும், பொழிலிலும் அழகிய ஆற்றிடைக் குறைகளிலும், ஆறுகளிலும், பூக்கள் பூத்த கடம்ப மரத்தின் அடியிலும், ஊருக்கு அடியிலும் ஊருக்கு நடுவில் அம்பலத்திலும், இறைவன் அருட்குறியான கல்நட்டிருக்கு கந்துடை நலை எனப்படும் இடத்திலும் முருகன் தொழப்பட்டான்.

## வழிபாட்டு முறை

முருக வழிபாட்டிற்குரிய இடத்தைத் தூய்மையாக்கி அங்கு முருகனுக்குரிய கோழிக்கொடியை நாட்டினர். அக்கொடி மீது நெய்யோடு வெண்சிறு கடுகை அப்பினர். இரண்டு ஆடைகளை உள்ளொன்றும், புறமொன்றும் உடுத்தினர். சிவந்த நூலைக் கையில் கட்டினர். வெள்ளிய பொரியைத் தூவினர். ஆட்டுக்கிடாயின் குருதியோடு பிசைந்த தூய வெள்ளரிசியைச் சிறுபலியாய் இட்டனர். மஞ்சளோடு சந்தனமும் தெளித்தனர். சேவற்கொடிக்குத் தூபம் கட்டினர். குறிஞ்சிப் பண்ணில் முருகனைப் பாடினர். குறமகள் சிவந்த நிறமுடைய பல பூக்களையும், தூவிக் குருதியளைந்த சிவந்த தனையைப் பரப்பினள். முருகன் விரும்பும் வாத்தியங்கள் முழங்க முருகனை வழிபடடனர். உடனிருந்தவர்கள் அவ்வெறியோடு களமானது ஆர்பரிக்கும்படி பாடினர். கொம்புகள் ஊதினர். மணியை ஒலிக்க வைத்தனர். இம்முருக வழிபாட்டின் உச்சகட்டமாக, நாட்டார் மரபின் வெறியாட்டு நடைபெற்றதை திருமுருகாற்றுப்படை மூலம் அறியமுடிகிறது.

**கூத்து**

நாட்டார் மரபில் கூத்தின் இடம் மிக முக்கியமானது. அது முருக வழிபாட்டோடு இரண்டறக் கலந்துவிட்டதெனலாம். கடல் நடுவே வஞ்சனையால் மாமரமாக நின்ற சூரபன்மனை முருகன் இரு கூறாகப் பிளந்தான். அதன்பின் முருகன் ஆடியகூத்து, துடிக்கூத்து எனப்படும். சிலப்பதிகாரத்தில் கோவலனை மகிழ்விக்க மாதவி ஆடும் பதினோரு வகைக் கூத்தில் இரண்டு வகைக்கூத்து முருகன் பற்றியதாக அமைகிறது. முருக வழிபாட்டு மூலமாக நாட்டார் மரபப்படியே நடந்ததை அறியமுடிகிறது. பெருவழக்காண்மைச் சமய மரபிலருந்து பெரிதும் வேறுபட்டு முருகனுக்குப் பலியிடல் நடைபெற்றதையும், முருகனோடு நேரடித் தொடர்பு கொள்ளும் வெறியாடல் நடந்ததையும் உணரமுடிகிறது.

**சடங்குகள்**

தமிழர் வாழ்க்கையில் சிறப்பான நிகழ்ச்சிகள் நிகழும் பொழுதெல்லாம் தெய்வ வழிபாடு சார்பான சடங்குகளை நிகழ்த்துதல் வழக்கம். அவற்றுள் குறிப்பிடத்தக்கன சோறு உண்பித்தல், காது குத்துதல், மயிர் கழித்தல், கல்வி பயிற்றுதல் போன்றவையாகும். மேலும் நீத்தார் கடன் செய்தலும் அவர்களுக்கு நற்கதி கிடைக்கும் பொருட்டும் இறைவனை வேண்டுதலும், உடலைத் தூக்கும் போது *அரகர* என்று சொல்வதும் குறிப்பிடத்தக்கன.

இறப்பிற்குப்பின் வருகின்ற மறு உலக வாழ்வே பேரின்பம். இதனை வீடுபேறு மோட்சம் என்கின்றனர். இவ்வுலக வாழ்வு குச்சுவீடு, மறுஉலக வாழ்வோ மச்சுவீடு. எனவே மச்சுவீடு அடைய முருகன் துணையை வேண்டுகின்றனர். இப்பேரின்பத் தத்துவத்தை,

"எட்டடிக்குச்சுக்குள்ளே - முருகா
எப்படி நான் இருப்பேன் - ஒரு
மச்சுவீடு கட்டித்தாரும் - திருத்தணி
மலையின் வேலவனே"

என இப்பாடல் வாழ்வை எட்டடிக்குச்சு என்கின்றது.

**வழிபாட்டுக் கலைகள்**

நாட்டுப்புறக்கலைகள் மூலம் இறைவன் வரலாறு, புராணக்கதைகள் கூறப்படுகின்றன. இறைவன் அருமை பெருமைகள், சிறப்புகளைப் பாடி ஆடுதலும், உண்டு. கரகாட்டம், ஒயிலாட்டம், மயிலாட்டம், தப்பாட்டம், காவடியாட்டம், சிலம்பாட்டம், கும்மியாட்டம், கூத்து, நடனம், வேடாட்டம், சாமியாட்டம், முதலிய கலைகளின் வாழ்விடமாக வளர்விடமாக விழாக்கள் அமைகின்றன. வழிபாடுகள் மூலமாக சத்தியம் பலித்திடும், துன்பம் நீங்கும், பிள்ளை வரம், மழைவரம், நோய் நீங்குதல், முதலிய பல நல்ல பலன்கள் ஏற்படும் என்ற நம்பிக்கைகள் நாட்டுப்புற மக்களிடையே ஓர் ஒற்றுமையையும்

ஒருவர்மீது ஒருவருக்கு இயல்பாக நல்லது செய்ய வேண்டும் என்ற நல்லுணர்வும் ஏற்டுபத்துகின்றன.

**இன்றைய நிலையில் முருக வழிபாட்டில் நாட்டுப்புற மரபுகள்**

1. சங்க காலத்தில் நாட்டார் மக்களோடு ஒன்றிப் போயிருந்த தனித்துவம் மிக்க தமிழரின் முருக வழிபா அதன்பின் காலப் போக்கில் மாற்றம் பெறத் துவங்கியது. தமிழ்க்கடவுள் முருகன் பழ நாட்டில் வழங்கி வந்த சுப்பிரமணியர், கார்த்திகையரோடு ஒன்றிணைத்துப் பேசப்பட்டார். அதன்பின்னர் நாட்டார் தெய்வமானது மெல்ல மெல்ல பெருவழக்காண்மை தெய்வமாக உருமாற்றம் பெற்று வருகிறது.

2. மக்களால் பேணி வணங்கப்பட்ட முருக வழிபாடு, மன்னர்களின் கோயில் வழிபாடாக மாறியபோது நாட்டார் மரபுகள் பின்னுக்குத் தள்ளப்பட்டன.

3. தம் மனம் போன போக்கில் தம் களத்து மேட்டிலும், மரத்தடியிலும் வணங்கிய வேலனை அதன்பின் ஆகம விதிகளின்படி வணங்கப்படும் பெருவழக்காண்மை வழிபாட்டு முறையாகவே அவர்கள் எதிர்கொள்ள நேரிட்டது.

4. தமிழகத்தில், குறிப்பாகச் சிலப்பதிகாரக் காலகட்டத்தில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்ட இந்திர விழா அதன்பின்னே நலிவுற்று இன்று முற்றிலும் கைவிடப்பட்ட சூழலைப் பார்க்கமுடிகிறது. காரணம் அது மக்கள் கொண்டாடிய விழா என்பதை விட மன்னர் விழாவாக இருந்ததால் மக்களாட்சியில் அது வழக்கிழந்தது. ஆனால் முருக வழிபாடு அடித்தட்டு மக்களின் வாழ்வியலோடு தொடர்பு கொண்டதால் இன்று வரை மிகச் சிறப்பாக நடைபெறுவதை அறியமுடிகிறது.

5. நாட்டார் மக்கள், கோயிலில் நுழைவதற்கு அனுமதிக்கப்பட்டதே 1930 க்கும் 40க்கும் இடையேதான் அதற்கு முன்பு முருகனைக் கோயிலில் சென்று பார்க்கக் கூட உரிமையற்றிருந்த காரணத்தால் நாட்டார் சமய அடிப்படையில் முருகனைக் கோவியலில் சென்று பார்க்கக்கூட உரிமையற்றிருந்த காரணத்தால் நாட்டார் சமய அடிப்படையிழல் முருகனை தம் ஊரிலேயே வணங்கினர். இன்று யாரும் எந்தக் கோவிலுக்கும் போகலாம் என்ற உரிமை வந்துவிட்டதால் நாட்டார் மரபுப்படியான முருக வழிபாடுகள் குறையத் துவங்கி இருக்கலாம்.

6. இத்தகைய நிலையில் வேதம், வேள்வியை மையமிட்ட வைதீக சமயத்தின் முன் நாட்டார் மக்கள் பார்வையாளர்களாய் மாறிவிட்டனர். அன்று தொடர்பாளர்கள் தேவையற்ற நிலை இருந்ததால் அவர்களே நேரடியாய் முருகனை வழிபட முடிந்தனது. இன்று இந்நிலை இல்லை.

7. இழப்பை ஈடுகட்டும் முயற்சியை நாட்டார் மக்கள் இன்னும் மேற்கொண்டு வருவதை நம்மால் காணமுடிகிறது. முருகன் கோயிலுக்கு மாலைபோட்டு பாதயாத்திரையாகவே நடந்து சென்று வணங்கல் என்பது சமீக காலமாய்

முருக வழிபாட்டில் அதிகம் நடைபெறுகின்றது. அவர்கள் அணிந்து செல்வது செவ்வாடை, திருமுருகாற்றுப்படை கூறும் நாட்டார் மரபிலான முருக வழிபாட்டின் நடந்தது போலவே செவ்வாடை பனைவு இன்றும் நடக்கிறது. இதுவே மாற்றம் பெற்ற மறுமுறையாகும்.

8. தன்னை வருத்தி இறைவனை வணங்குதல் என்பது நாட்டார் மரபினை வழிபாட்டு முறை, விரதமிருந்து ஐம்புலனடக்கல் பல மைல் தூரம் நடந்து முருகனை வணங்கல் அம்மரபின் வெளிப்பாடே. அதோடு கன்னத்தில் வேல் குத்துதல், அலகு குத்துதல் ஆகியவையும் நாட்டார் மரபுகளே. இது அறுபடை வீடுகளில் இன்றும் நடைபெறுகிறது.

9. ஆடிப்பாடி தெய்வத்தை வழிபடல் என்பது நாட்டார் வழிபாட்டு முறை. இன்றும் பழநிதிருக்கோயிலுக்கு வரும் பக்தர்கள் காவடி ஏந்தி முருக நாமம் கூறி ஆடிப்பாடி வருவதைக் காணமுடிகிறது.

10. முன்பு நாட்டார் வழிபாட்டில் முருகனுக்குப் படையல் போட்டு உணவை மலையாய் குவித்து வணங்கிய நாட்டார் மக்களுக்கு "நைவேத்தியம்" எனும் முறை தடையாய் அமைந்தாலும் அதை அன்னதானம் என்ற வகையில் இன்னும் முருகன் திருத்தலப் பகுதிகளில் மேற்கொண்டு விடுகின்றனர்.

**நேர்ச்சை**

நேர்ச்சை என்பதும் நாட்டார் மரபே. அம்மை நோய் வந்தாலோ, வைசூர் கண்டாரோ நேர்ச்சை நேர்ந்து நாட்டார் தெய்வங்களை வேண்டல் என்பது காலம் காலமாய் நடப்பது. சேவல் பலயிடல் தடைபட்டுப் போனதால் திருச்செந்தூர், திருப்பரங்குன்றம் போன்ற கோயில்களில் உயிருடன் சேவலை நேர்ச்சையாய் தருவதும் நடக்கிறது. தம்மால் மேற்கொள்ளப்படட முருக வழிபாடு தறபோது ஆகம வழிபாட்டு விதிப்படி நடைபெற்றாலும் தாம் பேணி வந்த மரபுகளை நாட்டார் மக்கள் விடுவதாய் இல்லை. அதை வேறுவடிவில் செயலாற்றி மனத்திருப்தி கொள்கின்றனர். எந்த ஆகமத்தோடும் சமரசம் செய்து கொள்ளாமல், தான் தொன்றுதொட்டு வழங்கிவந்த மரபிலிருந்து சற்றும் வழுவாமல் பெருவழக்காண்மை சமயத்தின் எல்லைக்குள் போகாமல் வணங்கிய தெய்வத்தின் பெயரையும், வடிவவையும் மாற்றிக்கொண்டுவிட்ட நாட்டார் மக்ளை இன்றும் காணமுடிகிறது.

**முடிவுரை**

குறிஞ்சி நிலத் தெய்வமாகவும், தமிழகத்தில் தனிப்பெரும் மதிப்புடைய தெய்வமாகவும் விளங்குகின்ற முருகப் பெருமானுடைய வழிபாட்டில் ஆகம விதிகளுக்கு மாறாக இன்று நாட்டுப்புற மரபுகள் மிகுந்து காணப்படுவதை காணமுடிகிறது. நாட்டுப்புற மக்கள் முருகன் வழிபாட்டைத் தங்கள் வாழ்வியல் நெறிமுறைகளிலிருந்து பிரிக்க முடியாதவாறு தங்களுக்குப் பிடித்த வகையில் தங்கள் பண்பாட்டோடும், மன உணா?வோட்ட அடிப்படையிலும் வழிபட்டு வரும் தன்மையை அறியமுடிகிறது. நாட்டார் மக்களின் முருக வழிபாடானது முற்றிலும் நாட்டார் மரபுகளின் அடிப்படையிலேயே மேற்கொள்ளப்படும்.

# சங்க இலக்கியத்தில் முருக வழிபாடு

**து. ஜெயமாதவி**
முனைவர் பட்ட ஆய்வாளர்
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சிராப்பள்ளி

ஆன்மீகம் என்பது ஆத்மாவை மேம்படுத்தும் செயல் ஆகும். பொறாமை, கோபம், சுயநலம் முதலியவற்றை மனதில் இருந்து அகற்ற வேண்டும் அல்லவா. இதற்கு ஆன்மீகம் என்கிற தெய்வீக வழிபாடு சாலச் சிறந்ததாக அமைகின்றது. உண்மையான பக்தியோடு வழிபாட்டினைக் கடைபிடித்தோமானால் இறைவனின் திருவடியை அடைய முடியும். பக்தி மார்க்கத்தை கடைபிடிப்போர் மனதை தூய்மைப் படுத்திக் கொள்ள வேண்டும். குறிப்பாக, சைவம்-வைணவம் சார்ந்த இந்துமத வழிபாட்டில் சிவலிங்க வழிபாடு, விநாயகர் வழிபாடு, சக்தி வழிபாடு, விஷ்ணு வழிபாடு, சூரிய வழிபாடு, இயற்கை வழிபாடு என்று பல்வேறு வழிபாட்டு முறைகள் இருப்பினும் இதில் முருக வழிபாடு மிகவும் தொன்மைச் சிறப்பு வாய்ந்த வழிபாடு எனலாம். பல்வேறு சிறப்பு அம்சங்கள் நிறைந்த முருக வழிபாடு குறித்து இக்கட்டுரையின் வாயிலாக அறியப்படுகின்றது.

## உருவ வழிபாட்டில் தொன்மைமிகு முருக வழிபாடு

தமிழ்க்கடவுளாகிய முருகனை அன்புடன் வழிபட்டு முருகா.. முருகா.. என எப்போதும் கூறித் தியானிப்பவர்கள் என்றும் குறையாத பெரும் செல்வத்தையும் பெறுவார்கள் என்பது ஐதீகம். மனித இனம் முதன் முதலில் தோன்றிய இடம் மலைக்குன்று பகுதிகளாகிய குறிஞ்சி நிலம் ஆகும். ஆகவே முதன்முதலில் மக்கள் குறிஞ்சி நிலத்திலேயே தெய்வ வழிபாட்டை தொடங்கினர். ஒரு குழந்தை வடிவம் படைத்து அதை கடவுளாக வழிபாடு செய்ததையே முருக வழிபாடு எனவும் கூறுகின்றனர். உருவ வழிபாட்டில் தொன்மையானதும் முருக வழிபாடு என்பதும் தெரிய வருகின்றது. முருகன் குறிஞ்சி நிலக்கடவுள் ஆவார். பொதுவாக மலையும் மலை சார்ந்த இடங்களாகிய குன்று இருக்கும் இடம் எல்லாம் குமரக்கடவுளாகிய முருகனே அந்நிலத்திற்குக் கடவுளாகப் போற்றப்படுகின்றார். அதனால் முருகனைக் குறிஞ்சிக்கிழவன் (தலைவர்) என்றும், மலைக்கிழவோன் என்றும் தமிழ் நூல்கள் கூறுகின்றன. முருகன் தமிழ்க்கடவுள். முருகனே தமிழ் மொழியை முதன் முதலில் அகத்தியருக்கு அறிவுறுத்தினான் என்பது வரலாறு. மேலும், சிவபிரானுக்கு 'ஓம்' என்னும் மந்திரத்துக்குரிய பிரணவப் பொருளையும், தமிழிலேயே முருகன் உபதேசித்தான்.

## முருகன்-பொருள் விளக்கம்

'முருகு' என்ற சொல்லுக்கு அழியாத அழகும், குன்றாத இளமையும், இயற்கை மணமும், எல்லாப் பொருள்களிலும் கடவுள் தன்மை உண்டு என்பதையும் உணர்த்தும் விதமாய் இவற்றின் பொருள் விளக்கமானது அமையப் பெற்றுள்ளது.

'மு' என்பது திருமாலையும், 'ரு' என்பது சிவபெருமானின் அம்சத்தையும், 'க' என்பது பிரம்மனையும் குறிக்கும் தமிழின் மெய்யெழுத்துக்கள் பதினெட்டும் தன்னுடைய கண்களாகவும், தமிழில் வல்லினம், மெல்லினம், இடையினம் ஆகியவற்றில் உள்ள எழுத்துக்கள் யாவும் ஆறு முகங்களாகவும், 'தனிநிலை' எனப்படும் 'ஆயுதமே' ஒப்புயர்வற்றுத் திகழும் வேலாகவும் கொண்டு, தமிழ்க்கடவுளாகிய முருகன் தமிழ் வடிவமாகவே திகழ்கின்றான்.

ஞானமே உடலாகவும், இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞான சக்தி என்னும் முச்சக்திகளே மூன்று கண்களாகவும், இப்பெரிய உலகமே கோயிலாகவும் கொண்டு நிற்கும் ஒப்பற்ற தனிச்சுடராகத் திகழ்பவர் முருகன் ஆவார்.

கந்தன் காலடியை வணங்கினால், கடவுள்கள் யாவரையும் வணங்குதல் போல், சுருங்கக்கூறின், நூறாயிரம் சூரியன்கள் ஒரே காலத்தில் ஒளி வீசுவது போன்ற பேரழகு வாய்ந்த தெய்வீக வடிவம் கொண்டவன் முருகன். முருகனை வணங்கினால் எல்லா கடவுள்களையும் வணங்கி அடையும் பயன்களை ஒருங்கே பெறலாம் என்பது ஐதீகம். மகனுக்குச் செய்யும் சிறப்பால், தந்தை-தாயாகிய சிவபெருமானும், உமாதேவியும், தம்பியைப் போற்றுதலால் சகோதரனாகிய விநாயகரும், மருமகனை வழிபடுதலால் மாமனாகிய திருமாலும், தலைவனை வணங்குவதால் தேவர்கள், முனிவர்கள் உள்பட அனைவரும் மகிழ்ச்சி அடைவர். எனவே முருக வழிபாடு மிகவும் சிறப்பு வாய்ந்தது. முருகன் தன் பக்தர்கள் வேண்டும் கோரிக்கைகளை எல்லாம், அவர்கள் வேண்டியவாறே விரும்பிக் கொடுத்து அருளும் தன்மை வாய்ந்தவன். முருகனை அடைந்தால் அவன் நம் துன்பத்தை அழிப்பான். அவர்களை ஒரு போதும் எத்தகைய துன்பமும் அணுகாது என்பது தெய்வீக நம்பிக்கை ஆகும்.

**முருகனின் சிறப்பு பெயர்கள்**

தமிழ்க்கடவுள் முருகனுக்குப் பல்வேறு சிறப்பு அடைமொழிப் பெயர்களும் உண்டு. சக்தி தேவியின் செல்லப்பிள்ளை, கணேசரின் அருமைச் சகோதரன், அசுரர்களை அழித்தவர், தேவர்களின் படைத்தலைவர் (தேவ சேனாதிபதி), தந்தைக்கு உபதேசம் செய்த சுவாமிநாதன் என்ற 'தகப்பன் சாமி' சுப்ரமணியர், தண்டாயுதபாணி, சக்திவேல், வீரவேல், ஞானவேல், வெற்றி வேல், கந்தவேல், வடிவேல் என்று பல்வேறு சிறப்புப் பெயர்களும் உள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

**வேல் வழிபாடு**

வெல்- வேல். வெல் என்னும் வினைச் சொல்லானது நீண்டு வேல் என்று பெயர்ச்சொல் ஆயிற்று எனலாம். ஆகையால், வேல் என்றாலே கூர்மையானது. வெற்றிக்குரியது. தமிழ்த் தொன்மம் மிக்கது. சங்க காலத்தமிழ் மண்ணில் வேல் வழிபாடே மிகுந்து இருந்தது. தமிழ் மன்னர்களின் தனித்த பெருமிதம் வேல் ஆகும். இதற்கு என்று சிலப்பதிகாரத்தின் மூலம் தனிக்கோட்டமே இருந்ததாக அறிய முடிகிறது. வேலும், சங்கும் சங்கத் தமிழர்களின் போர் மரபில் தொடர்ந்து பின்பற்றும் கருவிகளாகத் திகழ்ந்தன.

திருமங்கை ஆழ்வார் கையிலும் வேல் இருந்தது குறிப்பிடத்தக்கதாகும். ஆண்டாள் பாடிய பாசுரங்களில் 'வென்று பகை கெடுக்கும் நின் கையில் வேல் போற்றி' என மாயோனாகிய கண்ணனைப் பாடுகிறார்.

சிலை இல்லாத வேல் வழிபாட்டு முறைகள் குறிப்பாக பழமுதிர்ச்சோலை, திருச்செங்கோடு, இலங்கையில் உள்ள செல்வர் சந்நிதி, மலேசியாவில் உள்ள பத்துமலை முருகன் கோவில் மற்றும் பல்வேறு கிராமங்களிலும் சிற்சில இடங்களில் சிலைக்குப் பதிலாக வேல் வழிபாடு கடைபிடிக்கப்பட்டு வருகிறது குறிப்பிடத் தக்கதாகும்.

**முருகனுக்கு நடத்தப்படும் விழாக்கள்**

தைப்பூசம், பங்குனி உத்திரம், ஆடி கார்த்திகை, ஐப்பசி மாதம் கொண்டாடப்படும் சூரசம்ஹாரம், (சூரபத்மனை வதம் செய்து தேவர்களைக் காத்தல்) திருக்கார்த்திகை ஆகிய விழாக்கள் முருகக் கடவுளுக்குரிய இன்றியமையாத விழாக்கள் ஆகும். இந்நாட்களில் பக்தர்கள் காவடி எடுத்தல், பால்குடம் தூக்குதல், அலகு குத்தி வருதல், அங்க பிரதட்சனம் செய்தல், காது குத்தல், மொட்டை அடித்தல், அன்னதானம் வழங்குதல் போன்ற நிவர்த்திக் கடன்களைச் செய்வதோடு பெருமளவில் காணிக்கைகள் உண்டியலில் செலுத்துவதும் பக்தர்களிடையே வழக்கமாய் இருந்து வருகிறது. முல்லை மலர்களைக் கொண்டு வழிபட்டாலும், வேலினைக் கொண்டு நாவில் பெயர் எழுதினாலும் நன்கு பேச்சுத் திறன் வரும் என்பதும் நமது முன்னோர்களின் ஐதீகங்களில் உள்ள நம்பிக்கை ஆகும்.

இராமபிரானின் தூதுவனாகிய அனுமன் இராவணனால் கடத்தப்பட்ட சீதையை இலங்கையில் கண்டுபிடித்து பார்த்துவிட்டு வரும் வழியில் இருந்த முருகன் கோவிலில் வழிபாடு செய்து வந்தார் என்று இராமாயணத்தில் குறிப்பிடப்படுகின்றது. அதேபோல், திருநெல்வேலிச் சீமையில் முதன் முதலாக வெள்ளையனை எதிர்த்துப் போராடிய வீரபாண்டிய கட்டபொம்மன் திருச்செந்தூர் முருகக்கடவுளாகிய செந்தில்நாதனின் தீவிரப் பக்தராக இருந்து வழிபாடு செய்தார். போர்க்களத்திலும் வேலினையும், சூலத்தையும் போர்க்கருவிகளாகக் கொண்டு வீரவேல்! வெற்றிவேல்! என்று முழக்கம் இட்டார். இது ஓர் வரலாற்றுப் பின்புலம் ஆகும். அதேபோல், பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரும் முருகக்கடவுளின் தீவிரப் பக்தராய் இருந்தார் என்பதும் குறிப்பிடத்தக்கது. கிருபானந்தவாரியார் முருகக்கடவுளை 'எம் பெருமான் அப்பன் முருகன்' என்று விழித்து, கந்தப்புராணச் சொற்பொழிவினை நிகழ்த்தி அளப்பரியளவில் பக்தி கொண்டிருந்தார். அதேபோல் திரைப்படத் துறையிலும், மேடை நாடகக் கச்சேரிகளிலும், ஔவையார் வேடம் புனைந்து தமிழ்க்கடவுளாகிய முருகன் மீது தீவிர பக்தி கொண்டு பல்வேறு பாடல்களையும் பாடிய பெருமை ஈரோடு கொடுமுடியைச் சேர்ந்த கே.பி.சுந்தரம்பாள் அவர்களையே சாரும்.

**காவடி எடுக்கும் வழக்கம்**

புராண வரலாறு பின்புலம். அகத்திய முனிவர் ஒரு சமயம் இடும்பனை அழைத்து கயிலாய மலையில் உள்ள முருகனுக்குச் சொந்தமான

கந்தமலையில் இருக்கும் சப்தகிரி, சிவகிரி ஆகிய இரு சிகரங்களையும் கொணர்ந்து தன்னிடம் சேர்க்குமாறு கூறினார். அதனை இடும்பன் சுமந்து வந்தபோது அவை இரண்டும் வில்லினைப் போல் வளைந்து தொடங்கியவாறு இருந்தன. அவற்றை மிகவும் சிரமப்பட்டுச் சுமந்து வந்த இடும்பனின் வேண்டுகோளை முருகக்கடவுள் நிறைவேற்றினார். மேலும், இதேபோல் வடிவம் செய்து தன்னை நாடிவரும் பக்தர்களைக் காவடி எடுத்து வரவும், சிகரங்களின் குறைகளைச் சுமந்து வந்து சேர்த்த இடும்பனையும் நினைத்து வழிபட வேண்டும் எனவும் முருகக்கடவுள் அருள் வாக்கு அளித்தார். அதேபோல் தொன்றுத்தொட்டு இன்று வரையிலும் முருகனை வழிபட குன்றுகளின் படியேறிச் செல்லும் பக்தர்கள் காவடிகளைச் சுமந்து முருகனுக்கு அரோகரா, கந்தனுக்கு வெற்றிவேல், முருகனுக்கு அரோகரா, இடும்பனுக்கு அரோகரா என்று பக்தி பரவசத்துடன் முழங்கிச் செல்வதை வழக்கமாய் கொண்டு உள்ளதும் குறிப்பிடத்தக்கது. இவ்வாறு காவடி எடுக்கும் வழக்கமானது முதன் முதலாக முருக வழிபாட்டின் வாயிலாகத் தோன்றியதை புராண வரலாற்றுப் பின்புலங்களில் இருந்து தெரியவருகிறது.

### ஸ்கந்த கார்த்திகேய வழிபாடு

இத்தகைய வழிபாட்டு முறையை ஆரியர்கள் கடைபிடிக்கத் துவங்கியதற்கு வெகுகாலம் முன்னரே தமிழர்கள் முருக வழிபாட்டைத் தொடர்ந்து கொண்டு இருந்துள்ளனர். சங்க காலத்தில், குறிஞ்சி மலையில் இருந்த திணை எனக் கூறப்பட்ட நிலப்பரப்பில் முருகனே முதற்கடவுள் எனப் போற்றப்பட்டு வந்துள்ளார் என்பதும் அறிய முடிகிறது. (கவிதாசா-1976-58) அவருக்கு சூட்டப்பட்டு இருந்த பலவிதமான பெயர்கள் பல இலக்கிய நூல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. அவரை 'முருகன்' (அகநானூறு 22-11), (புறநானூறு 56-11), (நற்றிணை 47-10) எனவும், 'மன்னையன்' (திருமுருகாற்றுப்படை 1-201) எனவும், 'வீர மயில் மேல் ஞாயிறு' அதாவது 'வீரமயில் மீது ஏறிய சூரியன்' (பரிபாடல் 18-25) என்றும் அழைக்கும் பல குறிப்புகள் (காளிதாசர் 1999,73-96) உள்ளன.

சமஸ்கிருத ஸ்கந்த கார்த்திகேயர் வழிபாடு என்பது தமிழ் முருகன் பக்தி இயக்க வழிபாட்டுடன் ஒத்து இருந்தது என்கிற கருத்து (காளிதாசனின் குமார சம்பவம்) வாயிலாகவும், திருமுருகாற்றுப்படை போன்ற சங்க இலக்கிய சான்றுகளின் மூலமாகவும் அறியப்படுகின்றது. தமிழ் முருகன் வழிபாடு மற்றும் ஸ்கந்த கார்த்திகேய வழிபாட்டு முறைகள் ஆகிய இரண்டும் எப்படி அனைத்திலும் ஒத்து இருந்தன என்பதை 'கமில் ஸ்வெலபெல்', 'பிரெட் க்லோத்தி' மற்றும் 'ராசுகலிதாஸ்' என்பவர்கள் கோடிட்டுக் காட்டி உள்ளதும் குறிப்பிடத்தக்க சான்றுகளாக எடுத்துக் கொள்ளலாம். ஆகையால் தமிழகத்தில் எப்போது முதல் முருக வழிபாடானது துவங்கியதோ அப்போது முதலே இலங்கையிலும் முருக வழிபாடு துவங்கியது என்பதை, அப்பகுதியைச் சேர்ந்த அனுராதபுரா, பூப்பறிப்பு, பின்விவா, கந்தரோட்டை மற்றும் புனாக்கரி போன்ற இடங்களில் கிடைத்த பொருட்களைக் கொண்டு ஒப்பிடுகையில் அவை முருகனைக் குறிக்கும் வேல், சேவல் போன்றவற்றுடன் ஒத்து உள்ளதை வைத்து நம்மால் அறிய முடிகின்றது. மேலும், உலகில் எங்கும் இல்லாத

140 அடி உயர முருகன் திருவுருவம் மலேசிய நாட்டின் மலைக்குகையில் உள்ள பத்துமலைத் திருத்தலத்தில்தான் உள்ளது. உலகளாவிய இத்தகைய மிகவும் தொன்மை வாய்ந்த முருக வழிபாட்டில் பக்தி நெறியை உணர்த்தும் விதமாய், கடந்த 2012ஆம் ஆண்டு ஆகஸ்டு 9, 10, 11, 12 ஆகிய நான்கு தினங்களில் 'அனைத்துலக முருக பக்தி மாநாடு' மலேசியாவில் உள்ள கோலாலம்பூர் மலாயப் பல்கலைக்கழகத்தில் சிறப்பாக நடைபெற்றது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

**முடிவுரை**

கந்தர் சஷ்டி கவசத்திலும் கதிர்காமனைக் குறிக்கும் விதத்தில் அவரை கதிர்வேல் முருகன் எனக் குறிப்பிடப்பட்டு உள்ளது. அருணகிரி நாதர் 15ஆம் நூற்றாண்டில் எழுதிய நூலில் இலங்கையில் உள்ள தெற்குத் திரிகோணமலை, ஜாப்னா மற்றும் கதிர்காமம் என்ற மூன்று இடங்கள் முருக வழிபாட்டில் சிறந்து விளங்கியதாக குறிப்பிட்டுள்ளதையும் நம்மால் அறிய முடிகின்றது. எல்லாவற்றிற்கும் மேலாக உலகத்தின் தொன்மைச் சிறப்பு வாய்ந்த தமிழ்த் தேசியக் கடவுளாகவும், கலப்புத் திருமணம் செய்து புதியதொரு மாற்றத்தை ஏற்படுத்திய உன்னதம் வாய்ந்த, ஒருமைபாட்டுக்குரிய கடவுளாகவும் 'முருகன்' போற்றப்படுகின்றார். அத்தகைய முருகனுக்கு வழிபாடு செய்ய உலகம் முழுவதும் பக்தர்கள் தொடர்ந்து முருகனின் மீது அன்பு கொண்டு அனுதினமும் வழிபாடு செய்து வருகின்றனர் என்பதை அறியும் போது நாம் அனைவருக்கும் மிகவும் மகிழ்வூட்டுவதாக அமைகின்றது அல்லவா. நாமும் முருகனைக் 'கந்தர் சஷ்டி கவசம்' பாடி அனுதினமும் வழிபடுவோமாக.

**துணை நின்ற நோக்கீட்டு நூல்கள்**

1. கந்த புராணம், கச்சியப்ப சிவாச்சாரியாா, புலவர்.வ.ஞானப்பிரகாசம் (தொ.ஆ) பிரபாத் புகஸ், சென்னை, 2002.
2. திருப்புகழ், அருணகிரிநாதர், நாஞ்சில் விஷ்ணு (தொ.ஆ), லியோ புக் பப்ளிஷர்ஸ், சென்னை, 2012.
3. கந்தர் சஷ்டி கவசம், தேவராய சுவாமிகள், கங்கை புத்தக நிலையம், சென்னை, 1991.
4. தெய்வீகச் சிந்தனைகள், எம்.நாராயணவேலுப்பிள்ளை (ஆசிரியர்), புவனா பதிப்பகம், காட்பாடி-வேலூர், 2002.
5. முருகன் முப்பது-மெல்லிசைப் பாடல்கள், புலவர்.கோ.சுவாமிநாதன், முத்தமிழ் பதிப்பகம், கடம்பூர், சித்தமல்லி, திருவாரூர் மாவட்டம், 2013.

## அறுபடை வீட்டின் சிறப்பு

**கி. ஜெயலெட்சுமி.**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஓலைச்சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

தமிழர்களின் முழுமுதற் கடவுளாக முருகன் விளங்கியமையினைச் சங்க கால இலக்கியங்களின் வழி அறிய முடிகிறது. மலையிலும் மலையைச் சார்ந்த இடத்திலும் வாழ்ந்த மக்கள் வேலனைக் காக்கும் தெய்வமாகக் கருதி வழிப்பட்டதாகக் தமிழ் இலக்கியங்கள் செப்புகின்றன. பரிபாடல் என்ற சங்க இலக்கியம் முருகனின் தோற்றம் சிறப்பு வழிபாடு குறித்து எட்டு நீண்ட பாடல்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. மேலும் பத்துப்பாட்டில் ஒன்றான திருமுருகாற்றுப்படையானது முருகனின் சிறந்த தலங்களைப் பற்றியும் விழாக்கள் மற்றும் வழிபாட்டு முறைகள் பற்றியும் விரிவாக உரைக்கின்றது. அதன் அடிப்படையில் முருகனின் அறுபடை வீட்டின் சிறப்புக்களை இக்கட்டுரையின் வாயிலாக காண்போம்.

**திருப்பரங்குன்றம்**

ஆறுபடை வீடுகளில் முதன்மையானதாகக் கருதப்படுவது திருப்பரங்குன்றம் ஆகும். இது பழந்தமிழர் வளர்த்த பாண்டியராண்ட மதுரைக்கு மேற்கில் 8 கி.மீ தொலைவில் உள்ளது. இத்தலத்தினைப் பற்றி நக்கீரர், அருணகிரிநாதர், பாம்பன் சுவாமிகள், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோர் இத்தலத்தைப் பாடியுள்ளனர். போர் செய்து வெற்றி வாகை சூடிய வேலவனுக்கு வானவர் தலைவன் தன் திருமகள் தெய்வானையைத் திருமணம் செய்துக் கொடுத்த இடமே திருப்பரங்குன்றமாகும். 'திரு' என்ற அடைமொழி (மங்களச் சொல்) பெற்றுத் திருப்பரங்குன்றம் என்ற பெயரோடு விளங்குகிறது. அன்று தொட்டு இன்று வரை இம்மலை திருப்பரங்குன்றம் என்று வழங்கப்பட்டு வருகிறது. இக்குன்றத்தைப் பற்றிக்

*"கோடி னுடங்கு மறுகிற் கூடற்குடாஅது*
*பல்கொடி மஞ்சை வெல்கொடி உயரிய*
*ஓடியா விழாவின் நெடியோன் குன்றம்"* (அகம்.59)

என்று அகநானூற்றுப் பாடல் சுட்டுகிறது. இக்கோயிலின் முகப்பில் எழுநிலை கோபுரம் எழிலோடு விளங்குகிறது. இதன் வாயில் அகன்றும் உயர்ந்தும் காணப்படுகிறது. மேலும் கலையுள்ளத்தோடு சிற்பங்கள் அமைந்துள்ளது. இக்கோயிலுக்கு முன்னால் பெருமன்றம் அல்லது அரசவை ஒன்று அமைந்துள்ளது. இம்மண்டபம் 'சுந்தரபாண்டியன்' மண்டபம் என்ற பெயரோடு

விளங்குகிறது. அவற்றுள் அறுபத்தாறு தூண்கள் உள்ளன. ஒவ்வோரு தூணும் பருத்தும் உயர்ந்தும் கலைவேலைப்பாடுகள் மிக்கனவாய் காணப்படுகின்றன. இதிலுள்ள சிற்பங்களில் அனைத்து சிற்பங்களிலும் தெய்வானையின் திருமணக் கோலக்காட்சியே காணப்படுகின்றது. இம்மண்டபத்தை அடுத்து கோபுரம், கொடித்தூண் மண்டபம், மகாமண்டபம், திருமண மண்டபம் போன்றவை அமைந்துள்ளன.

இம்மகாமண்டபத்தின் படிக்கட்டுகளை அடுத்து வியாசர் கோயிலும், பூதகணங்களின் தலைவி கோவிலும் அமைந்துள்ளன. மகாமண்டபத்தில் நடராசர், சண்டிகேசுவரர் (காளியின் தலைவன்), ஒன்பான் வீரர்கள் (நவவீரர்கள்), தென்முகக்டவுள் (தட்சிணா மூர்த்தி), பைரவர் (சிவன்), சந்திரன் சாயாதேவி (கதிரவன் மனைவியருள் ஒருவர்), சூரியன் போன்ற தெய்வங்களின் திருமேனிகள் அமைந்துள்ளன. இம்மண்டப வாயிலின் இருமருங்கும் இரட்டை விநாயகரும் நந்தி தேவரும் இனிதே வீற்றிருக்கின்றனர். இதனை அடுத்து அர்த்தமண்டபம் அமைந்துள்ளது. இம்மண்டபத்திற்குச் செல்ல ஆறு படிகள் உள்ளன. அப்படிகள் ஆறு சரவணபவ என்ற ஆறெழுத்தைக் குறிப்பிடுகின்றன.

இதற்கு அடுத்து கருவறை அமைநுள்ளது. இக்கருவறையில் பொழிவும் பொருந்திய பாறை ஒன்று அமைந்துள்ளது. அப்பாறைக்கு இடையில் மகிஷாசுரமர்த்தினி வடிவமும் அதையடுத்து மூலவரான முருகப் பெருமானின் திருமணக் கோலமும் அதன் மேற்பகுதியில் கற்பக விநாயகரின் திருவுருவமும் அமைந்துள்ளது. இவை அனைத்தும் ஒரே பாறையைக் குடைந்து அமைக்கப்பட்டுள்ளன. மேலும் முருகனின் திருவடிக்கீழ் அவனின் ஊர்தியான மயில் நீங்கலாக யானை ஆடு ஆகியவற்றின் வடிவங்களை அழகு பெற வடித்துள்ளனர். திருமால் திருமகளோடும் மதங்க முனிவரோடும் அமைந்துள்ளவாறு செதுக்கப்பட்டுள்ளன. கோவில் புறச்சுவரில் திருமால் பாற்கடலில் பன்னகாதிபப்பாயலில் பற்றிக் கொண்டுள்ள தோற்றத்தின் ஏற்றம் சிலவும் சிறப்புற்று விளங்குகின்றது. வராக மூர்த்தியின் வடிவமும் அமைந்துள்ளது

**திருச்செந்தூர் (திருச்சீரலைவாய்)**

முருகனின் ஆறுபடை வீடுகளில் இது இரண்டாவது படைவீடாகும். இந்தத் தலத்தை அருணகிரிநாதர் மற்றும் நக்கீரர் இருவரும் பாடியுள்ளனர். இத்தலம் முருகன் சூரபத்மனை வதம் செய்த இடமாகும். சங்க நூற்களில் திருச்செந்தூரின் பெருமை பேசப்படுவதால் அவ்வூர் ஏறக்குறைய நான்காயிரத்துக்கு முந்தியதாக இருக்கக்கூடும் என்பது உண்மையாகும். இவற்றிற்கு அலைவாய் என்பதே பழைய பெயராகும். இதனைப் பிற்காலத்தில் செந்தில் அல்லது திருச்செந்தூர் என்ற பெயரால் அமைத்துள்ளனர். இத்திருசெந்தூரின் கடலில் வீரமசேதிரம் என்னும் கோட்டை இருந்ததாகப் புராணம் கூறுகிறது. மேலும் சூரர் குலத்தை வேரொடு பெயர்த்தெறிந்த வேலவன் அமைதியுற்றவனாய் இத்தலத்திற்கு வந்து தந்தையை வழிபட்டு வந்ததாகக்

தலபுராணம் கூறுகிறது. இக்கோயில் கட்டுவதற்கு செந்நிறங் கொண்ட பாறைகளை அடித்தளமாகக் கொண்டு அதைக் குடைந்தனர். அங்கு ஒரு பகுதியில் கருவறை கட்டப்பட்டுள்ளது. மேலும் திருச்செந்தூர் இரண்டு மூன்று சுற்றுக்கள் பிற்காலத்தில் தோன்றியவனயோகும்.

இத்திருக்கோவிலில் பொருந்தியுள்ள இறைவன் கந்தனாகவும் கருணைக்கடலாகவும் வெற்றி வேலனாகவும் கமாரணாகவும் பாலசுப்பிரமணிய னாகவும் விளங்குகின்றார். இக்கோயிலில் இருந்து அரை கிலோ மீட்டர் தூரத்தில் விநாயகர் கோயில் ஒன்று அமைந்துள்ளது. இக்கடவுளுக்குத் துண்டு கை விநாயகர் என்ற பெயர் உண்டு. இக்கோயிலில் மூன்று சுற்றுகளோடு ஒன்பது நிலைக்கைக் கொண்ட இராசகோபுரம் முதற் சுற்றில் காணப்படுகிறன. திருச்செந்தூர் முருகன் கோயில் முதல் சுற்றின் முகப்பில் அமைந்துள்ள இராசகோபுரத்தைத் திருவாவடுதுறை ஆதீனம் தேசிகமூர்த்தி சுவாமிகள் கட்டத் தொடங்கியதாகக் கூறப்படுகிறது.

சண்முக விலாச மண்டபத்தைக் கடந்து இரண்டாம் சுற்றுக்குச் சென்றால். அங்குத் தெற்குப் பார்திருக்கும் ஆறுமுக சுவாமியையும் கீழ்திசையைப் பார்த்திருக்கும் பெருமாளையும் வடக்குப் பார்த்த வண்ணம் வீற்றிருக்கும் செந்தில் நாதனையும் ஒருசேரக் காணலாம். கிழக்கு நோக்கியிருக்கும் கோவிலின் தென்புறம் வடபுரம் வள்ளி தெய்வயானை இருவருக்கும் தனித்தனி கோவில்கள் உள்ளன. முதல் சுற்றின் வடபகுதியில் பெருமாள் (திருமால்) கோவிலுண்டு இங்குச் சிவனையும் திருமாலையும் ஓரிடத்திலிருந்தே வழிபடுவதை சைவமும் வைணவமும் ஒன்றென்பதைக் காட்டுகிறது.

**பழனி (திருவாவினன்குடி)**

பழனி முருகனின் மூன்றாம் படை வீடாகும் இதற்கு திருவாவினன்குடி என்ற மற்றொருப் பெயரும் உண்டு. நாரதர் அளித்த ஞானப்பழம் தனக்குக் கிடைக்காததால் முருகர் கோபம் கொண்டு ஆண்டியின் கோலம் பூண்டு இத்திருத்தலத்தில் தங்கிவிட்டதாகப் புராணங்கள் கூறுகின்றன. இது இறைவனின் அருள் பெற்ற இடமாதலால் இதற்குத் திருவாவினன்குடி எனப் பெயர் வந்ததாகக் கூறப்படுகிறது. வையாவிக் கோப்பெரும் பேகன் என்னும் சங்க கால வள்ளல் வாழ்ந்த இடமாதலின் இதற்கு ஆவினன்குடி என்ற பெயர் வந்தது என்றும் கூறுவர். பொதினி என்ற மற்றொரு பெயரும் உண்டு அவற்றைப் பற்றி,

*"முருகன் நற்போர் நெடுவேளாவி*
*அறுகோட்டியானைப் பொதினியாங்கண்"* (அகம்.1)

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இத்தலத்தில் முருகன் கோவில் ஒன்றுள்ளது. இக்கோவிலில் வீற்றிருக்கும் ஆண்டவனின் பெயர் குழந்தை வேலாயுத சுவாமி என்பதாகும். கோவிலை அடுத்துள்ள மலைக்கே பழனிமலை என்ற பெயரும் வந்துள்ளது. பழனி என்பது பொதினி என்ற சங்க காலச் சொல்லிருந்து தோன்றியது என்று கூறுகின்றனர்.

கருவறையின் மேலுள்ள விமானத்திற்குப் பொன் தகடு வேய்யப்பட்டுள்ளது. இக்கருவறையில் உள்ள கடவுள் கோவணத்தோடு விளங்கும் இளைஞனாகக் காட்சியளிக்கிறார். ஒருகையில் தண்டையையும் மற்றொருகையை இடையில் வைத்தும் மேற்கு நோக்கிய வண்ணம் காட்சி அளிக்கிறார். இக்கோயில் வளர்ச்சிக்குப் பலர் பொன்னும் பொருளும் நிலங்களும் வழங்கியுள்ளனர். வரலாறு மறையாமலிருக்க செப்பேடுகளிலும் கல்லிலும் அவரவர் செய்த செயல்களைச் செதுக்கி வைத்துள்ளனர். அருணகிரியார் பழனி முருகனின் பெருமையைத் திருப்புகழில் பாடியுள்ளார்.

**சுவாமிமலை (திருவேரகம்)**

கும்பகோணத்திலிருந்து மேற்கே 7 கிலோமீட்டர் தொலைவிலுள்ளது சுவாமிமலை. இது திருவேகரம், ஏரகம், சுவாமிமலை, கருமலை, சுந்தராசலம் (அழகுமலை), தாத்ரிகிரி (நெல்லி மரங்கள் மிக்க மலை) போன்ற ஆறும் சுவாமிமலை என்பதைக் குறிக்கும். இத்தலத்தில் தகப்பன் சாமியாக இருந்து தந்தைக்கு அனைத்து மறை பொருள்களையும் ஓங்காரத்தின் உண்மைப் பொருளையும் விளக்கிக் கூறியதால் ஏரகத்திற்குச் சுவாமிமலை என்ற பெயரும் சுட்டப்பட்டுள்ளது. இதனை

*"சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமும் நீங்கா இறைவன்"* (சிலம்பு கு.கு.7)

என்ற வரிகள் சுட்டுகின்றன. மேலும் சுவாமிமலை கோயில் மூன்று கோபுரங்களோடு அமைந்துள்ளன. தென்பகுதியில் அமைந்துள்ள கோபுரமே இராசகோபுரமாகும். இது ஐந்து நிலைகளையுடையது. வரலாற்றை விளக்கும் சிற்பங்கள் பல இக்கோபுரத்தில் பொருந்தியுள்ளன. சிற்பங்கள் அனைத்தும் உயிர்ப்புச் சக்தியைப் பெற்றுள்ளன. கீழ்த்திசைக் கோபுரமும் மேல்திசைக் கோபுரமும் இன்றும் முற்றுப் பெறாமலேயே காணப்படுகின்றன.

**திருத்தணிக்கை (குன்றுதோராடல்)**

தொண்டை நாட்டைச் சேர்ந்தது திருத்தணி. இதை பெறுத்தணி, கணிக்கை, வெற்பு, பூரணகிரி ஸ்கந்த கிரி, இந்திரகிரி, செங்கல்கிரி என்னும் பெயர்களால் வழங்கப்படுகிறது. இம்மலை தெற்கே காஞ்சிபுரத்தையும் மேற்கே வள்ளி மலையையும் கிழக்கே திருவாலங்காட்டையும் வடக்கே திருப்பதி திருக்காளத்தி ஆகிய நான்கு மலைகளுக்கும் இடையில் இக்கோயில் அமைந்துள்ளது. முருகனைப் பாராட்டும் தமிழத்தொண்டர்களில் கடைச் சங்கப் புலவர்களில் ஒருவரான கபிலர் இயற்றிய குறிஞ்சிப்பாட்டில் முருகனின் பெருமை விளங்குகிறது. பரணர் முருகனைப் புகழ்ந்து பாடியுள்ளார். குறுந்தொகை, அகநானூறு முதலிய நூல்களிலும் முருகனின் பெருமை இடம்பெற்றுள்ளது. முருகாற்றுப்படை முருகனையும் அவன் அமைந்துள்ள குன்றங்களையும் சிறப்பிக்கின்றன. தேரோடு வீதியின் கிழக்குப் பக்கம் நாவாப் வாத்திய மண்டபம் ஒன்றுண்டு. காதர் என்ற நாவாப்குமரின் அருள் பெற்றதன் அறிகுறியாக

இவ்வாத்திய மண்டபத்தை அமைத்துள்ளனர். ஸ்தாபன மண்டபம் மற்றும் அரை மண்டபங்களும் இங்குக் காணப்படுகிறன.

**பழமுதிர்ச்சோலை**

பழமுதிர்ச்சோலை முருகனின் ஆறாம் படைவீடாகும். இதனை நக்கீரர்,

*"இழுமென இழிதரும் அருவிப்*
*பழமுதிர் சோலை மலைகிழ வோனே."* (திரு.316-317)

என்று பழமுதிற்ச்சோலையைச் சுட்டுகின்றார். இத்தலம் விஷ்ணு கோயிலான அழகர் கோயில் மலை மீது அமைந்துள்ளது. இத்தலத்தில் முருகப்பெருமான் வள்ளி தெய்வானையின் சிற்பமாக காட்சியளிக்கிறார். இங்கு முருகனின் மூன்று அடி உயர வேலுக்குத் தனிச் சன்னிதி ஒன்று காணப்படுகிறது. முன்னர் முருக வேல் மட்டும் இருந்ததாகவும் பின்னர் முருகன் வள்ளி தெய்வானைக்குத் தனிச் சன்னதி அமைக்கப்பட்டதாகவும் கூறுவர்.

நக்கீரர், அருணகிரிநாதர், அவ்வையார் போறோர் முருகனைத் துதித்துப் பாடிய பெருமை வாய்ந்த தலமாக அமைகிறது. இக்கோயிலில் இருந்து சிறிய தொலைவில் ராக்காயி அம்மன் என்ற கோவிலும் காணப்படுகிறது. முதலில் கணபதியைத் தரிசித்து ஆசி பெற்று அடுத்து சோலைமலை ஆண்டவனைத் தரிசிக்கின்றனர். ராஜகோபுரம் கொடிமரம் தாண்டியவுடன் காணப்படும் மண்டபத்தில் முருகனின் திருவிளையாடல் வரையப்பட்டுள்ளது. இங்குத் திருமாலின் திருக்கோவில் இரண்டு சுற்றுகளோடு அமைந்துள்ளது. கோவிலுக்கு மூன்று கோபுரங்களும் அமைந்துள்ளன. இராஜகோபுரவாயில் எப்பொழுதும் சாத்தப்பட்டிருக்கும் இக்கதவுக்கு அண்மையில் கருப்பண்ண சுவாமி காவல் தெய்வமாக வீற்றிருக்கின்றார்.

கருப்பண்ண சுவாமி கோவிலுக்கு வடக்குப் பாண்டி வாசல் வழியாகக் கோவிலுக்குச் செல்லுதல் வேண்டும். இவ்வாயிலின் இருபுறங்களிலும் கறடர் ஆஞ்சநேயர் ஓவியங்களும் காணப்படுகின்றன. இக்கோயிலின் கல்யாண மண்டபத்தில் திருமால் இரணியன் வதம் கிருஷ்ணர் இரதி-மன்மதன் சிற்பங்களும் காணப்படுகிறன. கருவறைக்கு மேலுள்ள சிற்பம் பொன்னால் வேயப்பட்டுள்ளன. அதற்குச் சோமசுந்தர விமானம் என்று பெயர். முகமண்டபத்தில் வலம்புரி விநாயகர், பைரவர் விசுவசேனர் கோவில்களும் காணப்படுகின்றன. அக்கோவிலின் கருவறையில் சுந்தரராசப் பெருமாள் சிற்பம் வீற்றிருக்கிறது.

**முடிவுரை**

முருகன் கோயில் கொண்ட இடங்களாக குன்றுகள் அமைகின்றன. இக்குன்றுகளில் அமைந்துள்ள கோயிலின் தோற்றம், கருவறையின் அமைப்பு, விமாணத்தின் அமைப்பு, மண்டபங்களின் அமைப்பு, சிற்பங்களின் வரலாறு போன்றவை இடம் பெற்றுள்ளன. இதன் வாயிலாக அறுபடைவீட்டின் சிறப்பு நமக்கு புலனாகிறது.

# யாழ்ப்பாணத்து மாவைக் கந்தனின் இசைப் பனுவல்கள் ஓர் பார்வை

முனைவர் **ஸ்ரீநாகபூஷணி அரங்கராஜ்,**
22 ரங்கசாமி பிள்ளை தெரு
தொண்டிக்கரடு, திருச்செங்கோடு
நாமக்கல் மவட்டம்.

ஈழத்தின் வடபாகத்தமைந்த மாவை ஆலயம் என்று அழைக்கப்படும் மாவிட்டபுரக் கந்தசுவாமி கோயில் உக்கிர சோழராசன் புத்திரியாகிய மாருதப் பிரவாகவவ்வி தனக்குற்ற குதிரைமுக மென்னும் நோயினாலே வருந்துக் காலத்திற் கீரிமலையிலேயுள்ள ஆற்றில் நீராடி அந்நோய் நீங்கப் பெற்றான், தந்தைக்கு இச்செய்தியை அறிவித்தான். கந்தசாமிக் கடவுளின் அருளினால் குதிரை முகம் நீங்கியமையால் சுப்பிரமணியர் சிலை பிரதிட்டை செய்ய விரும்பி கந்தனாலயமொன்று செய்வித்து சுற்றி மதில் முதலியன் கட்டி அவ் ஊருக்கு குதிரை முகம் விட்ட காரணத்தால் மாவிட்டபுரம் எனப் பெயருஞ் சூட்டி சுப்பிரமணியத் திருவுருவம் ஒன்றை சிற்ப இலக்கணம் வல்லராற் செய்வித்து அங்குக் கடல் வழியாக வருவித்து அக்கடற்கரைக்குக் காங்கேயன் துறையெனப் பெயருமிட்டான். அன்றிலிருந்து, மாவிட்டபுரக் கந்தசாமி கோயில் என்று அழைக்கப்படுகிறது. இவ் ஆலயம், திருச்செந்தூர்த் தலத்திற்கு இணையாக விளங்கும் சிறப்பை உடையது எனக் கூறப்படுகிறது.

மாவைக் கந்தனின் பிரபந்தங்கள், புராணம், சிந்து பதிகம், குறிஞ்சி, பிள்ளைத்தமிழ், கீர்த்தனைகள் என்று பல பாடல்கள் பல புலவர்களால் இயற்றப்பட்டுள்ளன. இப்பாடல்கள் ஒவ்வொன்றிலும் ஓசை நயம், பக்தி நயம், இசை நயம் என்பன அடித்தளமாகின்றன. மாவைக் கந்தனின் பக்திரசக் கீர்த்தனைகளை இயற்றி அதற்கு இசையமைத்தவர் மயிலிட்டி சி.வேலுப்பிள்ளை ஆவார். "திருவடிக்கபயம்", "கந்தா இரக்கமில்லையோ உன் பொற்கால் பணிகின்றேன்". "விண்ணொடு தீக்கிரையாக்கிய சூரனை வேல்கொடுத்தம் பண்ணூறு மாமுருகனைத் திருமாவை பதிய மருங் கண்ணாயிரத்கருட்செய் முருகையனைக் காண கொண்ணயிரங்கண் படைத்திலலே யவ்விறைவனே". இவ்வாறாக 35 கீரித்தனைகளைக் கொண்டமைவது இந்நூல் இலகுதமிழ் மொழி நடையில் அமைந்ததாக உள்ளது.

## மாவைநகர் முருகவேள் பதிகம்

மாவைநகர் முருகவேள் பதிகம் நவாலியூர் சோமசுந்தரப் புலவரால் இயற்றப்பட்டுப் பலகாலமாகக் கையெழுத்துப் பிரதியாக இருந்து வந்தது. புலவர்கள் நவாலியிருந்து ஒற்றைத்திருக்கல் (மாட்டு) வண்டியில் அடிக்கடி தனது மகளையும் குடும்பத்தையும் சந்திக்க வருவதுண்டு. அத்தருணங்களில் மாவைக்கந்தனைத் தரிசிப்பர். இப்படியான காரணகாரியங்களின் தொடர்பால்

எழுந்த "இப்பதிகத்தினை அன்னாரது மருகரின் (வைத்தியகலாநிதி ஆறுமுகம் சின்னையா) நினைவுமலரில் வெளியிடுவது ஆகும்"என்ற குறிப்புக்களுடன் நூல் இலங்குகின்றது.

மாவைநகர் முருகவேள் பதிகம் மூன்று காப்பு வெண்பாக்களோடு தொடங்குவது. நூல் அறிமுகச் செய்யுள் ஆறுமுகங்களினதும் பேரொளிப் பிரகாசஞ்சுட்டி ஆரம்பிக்கின்றது. ஆயிரங்கோடி சூரியவொளிகளாலும் ஆறுமுகம் என்ற கருத்தமைந்த தொடர் வருகின்றது.

*"ஒராயிங்கோடி கிரண சூரியரென்ன வொளிகாலு மாறுமுகமும்."*

என்று ஆரம்பித்து,

*"வாராத சித்தியருள் பேராயிரங் கொண்ட வள்ளலே மாநகர் வாழ்*
*மங்கையுமை பாலனே செங்கைவடிவேலனே மயில் வானக் கடவுளே"*

என வருந்துதல் முருகனுக்குரிய திருப்பெயர் கூறி அவனது விசாலித்த அருளைக் கூறுவது.

*"பாவணர் தருகின்ற செந்தமிழ்த் தொடையமுது*
*பருகு மாறிரு காதனே."* என்றும்,

*"மூவா முகுந்தற்கு மருகனே யொருகைமா*
*பருகு மாறிரு காதேனே"* என்றும்,

*மூவா முகுந்ததற்கு மருகனே யொருகைமா*
*முகவனுக் கொரு துணைவனே"* (செய் 3) எனவும்

ஏத்திப் பாடுங் கவிஞர் தம் கடைசிப் பாடல் சிறந்த ஓசை நயச் சிறப்பும் சொல்லாட்சிவலாவகமும் விளங்கிப் பதிக நூல் முழுவதுந் திருவருள் நலஞ் சுரப்பதென உணர்த்தி நிற்கும் பெற்றிமிக்கது.

**மாவைப் பதிகம்**

மாவைப் பதிகத்தினைப் பாடியவர் வறுத்தலைவிளான் க. சரவணமுத்து ஆவார். இக்கால உணர்வுடன் முருகனிடத்துக் குறையிரந்து கேட்கும் பண்பு இரண்டாவது பாடலில் ஆரம்பமாகின்றது. தெய்வீகத்தால் மட்டும் இயலக்கூடிய காரணமாயிற்றே என்று காண்போரெல்லாம் அங்கீகாரம் கொடுப்பது போலவும் அமைக்கப்பட்டுள்ளது இப்பாடல்.

*"பஞ்சமா பாதகம் வஞ்சகங் கொஞ்சமும்*
*பற்றின்றியோடி விடவும்"*

என்பது பாடல். இப்பதிகந் தவிர இன்னுமொரு மாவைப் பதிகம் மயிலிட்டி க. மயில்வானப் பிள்ளையினாற் பாடப்பட்டுள்ளது. அதன் இயல்புகளை இனி நோக்குவோம். இப்பதிகத்தின் பாடல்களின் இறுதி வரிகள் "மாவையம் பதியமல தேவருந்துதி குமரவள்ளலே ஞானவடிவே" என நினைவு கூறுகின்றது முதற் பாடல்,

*"உலகெலாந் நொடியில் வரு சித்ரக்கலாபமயி*
*லூர்தி மேலிவரு முருகா"*

**மாவை சுப்பிரமணியக் கடவுள் பதிகம்**

மாவை சுப்பிரமணியக்கடவுள் பதிகம் என்னும் நூலின் ஆசிரியர் செல்லக் குருக்கள் என அன்புடன் அழைக்கப்படும் மாவைக் குருமணி சுவாமி, குமாரசுவாமிக் குருக்கள் இந்நூல் 1965 ஆம் ஆண்டு இரண்டாம் பதிப்பாக மாவை வேதாகம நூல் நிலைய வெளியீடாக வெளிவந்துள்ளது.

**மாவைக்கந்தன் பதிகமும் அதன் உரையும்**

மாவைக்கந்தன் பதிகமும் அதன் உரையும் என்ற நூலில் ஆசிரியர் தென்மயிலை இலக்கண வித்தகர் இ. நமசிவாயம். இதன் உரையாசிரியர் மேலைத்தெல்லி விழிசிட்டிப் பண்டிதர் வே. சங்கரப்பிள்ளை.

காப்புச் செய்யுள் "மன்னுந் திருமாவை" என்று தொடங்கி விநாயகப் பெருமானை இறைஞ்சுவதாயுள்ளது. "மன்னுந் திருமாவை வாழ்வுகந்தகந்தன்" என்னுந் தொடர் நிலை பெற்ற செல்வத்தினையுடைய மாவிட்டபுரத்தாரும் அங்குச் சென்று தம்மை வழிபடுகின்றவர்களும் ஆகிய யாவருஞ் சிறந்து வாழ்தலை விரும்பிய கந்தன் என்னும் பொருளும் கொள்ளக் கிடைக்கின்றது என்பதனைப் புலப்படுத்துகின்றது. "மன்னுந்திரு மாவை"யைத் திருமன்னும் மாவை என மாற்றி – கொண்டு கூட்டி - இலக்குமி விரும்பி நிலைபெற்றிருக்கின்ற மாவை எனவுங் கொள்ளலாம்.

**யாழ்ப்பாணத்துத் தமிழ்ப்பிரபந்த இலக்கியங்கள்**

*"மாகமுகு வாழை பல வானளாவியே நிறையும்*
*மாவைநகர் வாழ்முருகனே"*

என முதலாவது செய்யுளில் வருதல் காணலாம். மாவை என்பது புதுமையானதொரு மாமரம் தலவிருட்சமாய் அவ்வாலய உட்பிரகாரத்திலே தொன்மையதாய் நிற்றல் பற்றி அவ்வாலயத்துக்காய பெயராய் அவ்வாலயம் உள்ள ஊருக்கும் ஆயிற்று. அம் மாமரம் தொன்மையானதாயினும் இளமைத் தோற்றத்தோடு ஆலய உட்பிரகாரத்து வடபாலில் வானுறை வோங்கி வளர்ந்து நிற்றலை இன்றுங் காணலாம். முதியவர்களும் அம்மாமரம் இளமைக் காலத்தும் இன்றுள்ள தோற்றமாகவே காணப்பட்டதென்பர். எப்பருவத்தும் பூ, பிஞ்சு, காய் கனிகளோடு சிறந்து விளங்கும் சிறப்பினையுடையது. மேலும் அவ்வாலயப் பூஞ்சோலைகண் காம்பு தோன்றாது பனங்குலை போலக் காய்கள் நெருங்கிய குலைகளை ஈனுகின்ற தென்னையொன்று நிற்றலையும் இத்தலமகிமையாகக் கொள்ளலாம்.

மாவைக்கந்தன் பதிக நூற்பாடல்கள் பன்னிரு கழிநெடிலடியாகிய சீரிய விருத்தத்தால் இயைத்துள்ளதோடு, எளிமையும் சந்தச் சிறப்பும் கொண்ட நடையில் இயல்வன. தலச் சிறப்புக் கூறுவதும், துதி செய்யும் பண்புகள் கொண்டமைவதுமான பதிகமுமாகும்.

மாவைமுருகனே தாரகாசுரனையும் கிரவுஞ்சமலையையும் சேர அழித்துத் தேவகிரி சென்று அங்குத் தேவர் செய்த பூசனையை மகிழ்ந்து ஏற்று மண்ணியாற்றங்கரையிலே குமாரபுரியாய நகரைத் தேவதச்சனைக் கொண்டு அமைப்பித்தருளி அங்கு விஷ்ணு முதலியோர் செய்த பூசனைக்கு உவந்து அவர்களுக்குத் திருவருள் பாவித்தருளிக் கருணையோடும் விரும்பி அங்கு எழுந்தருளுகின்ற குகனே நாங்களும் தேவரீரது திருவடிகளைப் பணிவோம். எமக்கும் திருவருள் புரிவீராக என்று வரும் ஐந்தாவது பாடலிது. இப் பாடலிலே வரும் கதை மரபு வட நாட்டிலே பிரசித்தி பெற்ற கதை மரபாகும்.

**மாவைச்சுப்பிரமணியர் தோத்திரம்**

மாவைச்சுப்பிரமணியர் தோத்திரம் என்னும் நூலின் ஆசிரியர் மயிலணி முத்துக்குமார கவிராயர். தமிழ் மக்களது நெஞ்சங்கொண்ட முருகப்பெருமானின் தலங்களுட் பிரசித்தி வாய்ந்தது. மாவிட்டபுரம், இத்தலத்துறை முத்துக்குமாரப் பெருமானைக் கவிதையால் ஆராதனை செய்த கவிஞர்களுட் காலத்தால் முற்பட்டவர். சுன்னாகத்து மயிலணிப்பதியிலே தோன்றிய முத்துக்குமார கவிராசராவார். பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த இவரது புலமைச் சிறப்பினை நோக்கி மக்கள் இவரைக் கவிராசர் எனவும் வராகவி எனவும் பாராட்டி மகிழ்ந்தனர். முத்துக்குமார கவிராசர் குமரப்பெருமான் மீது பாடிய மாவைச் சுப்பிரமணியர் தோத்திரப் பாடல்கள் மாவையில் நடைபெறும் திருவிழா நிகழ்ச்சிச் சிறப்புக்கள் இறைவன் பவனிவருங் காட்சி மக்கள் அதனைத் தரிசித்துப் பெறும் பேருவகை எனும் செய்திகளை விபரித்துக் கூறுவன. பாடல்கள் ஓசை நயம், சொல்வனப்பு, பொருட் செறிவு, அணியலங்காரம் ஆகிய பண்புகளைக் கொண்டு மிளிர்வனவாய்ப் படிப்போரைத் தம்வயப்படுத்ததவன.

யாழ்ப்பாணத்திலுள்ள திருவிழாச் சிறப்புக்குப் பேர்போன கோவில் மாவிட்டபுரம். இங்கு ஆனிமாத பூர்வபக்க சஷ்டிதிதியில் இடம்பெறும் கொடியேற்றம் முதல் இருபத்தைந்து நாட்கள் திருவிழா நடைபெறும். கொடியேற்றம் முதல் கொடியிறக்கம் வரை நடைபெறும் பலவகைத் திருவிழாக்கள் உலக்தின் நிமித்த காரணனாகிய இறைவன் நடத்தும் ஐந்தொழிற் தத்துவங்களை விளக்குவனவாகவுள்ளன. மண்ணெடுத்தல், முளையிடுதல், கொடியேற்றம் முதலானவைகள் படைத்தற்றொழிலைக் குறிக்கின்றன. வாகன உற்சவங்கள் காத்தற்றொழிலை உணர்த்துவன. வேட்டை, தேர்த்திருவிழா முதலியன அழித்தலைப் புலப்படுத்தவன. தீர்த்தத் திருவிழா அருளலைப் புலப்படுத்தும் மௌனோற்சவம் மறைத்தற்றொழிலைக் குறிக்கும்.

கண்ணுக்கு இனிமையும் கருத்துக்குப் பக்தியுணர்வும் ஊட்டுகின்ற மாவைத் திருவிழாக்களைக் காண்பவர்கள் மானிடப்பிறவிப்பயனை முழுமையாகப் பெற்றவர்களாவார். உடம்பு அழிந்துபோதற்கு முன்னர் ஒரு முறையேனும் மாவைப்பதிசென்று வணங்க வேண்டும். விழாக்கோலம் பூண்டு வருபவன், விளாமரமாகி நின்ற கபித்தாசுரனை, கன்றின் வடிவாக நின்ற

வத்சாகரனால் மோதி இருவரையும் அழித்துக் கபடநாடக சூத்திரதாரியாகிய கடல் வண்ணனின் மருமகனாகிய வேற்பெருமானுக்கு மாவைப்பதியில் நடக்கும் திருவிழாவைக் காணவல்லவர் யமபயத்தை வெல்லவல்லவராவார். இவ்வாறு திருவிழாச் சிறப்பைச் சித்தரிக்கிறது பாடலொன்று,

*"கருவிழா உலகிடைப் பிறந்து மெய்மை ......"*

மாவைப்பதியில் நடக்கும் உற்சவங்களுடன் விசேடமாகக் குறிக்கப்படுவது இருபத்து மூன்றாம் நாள் நடைபெறும். சப்பரத்திருவிழாவாகும். இதனைக் காண நாட்டின் நாலாபக்கங்களிலிருந்தும் மக்கள் திரண்டு வருவார். ஒவ்வொன்றும் நூறுயாரளவிதமான நான்கு வடக் கயிறுகள் பூட்டிய இச்சப்பரத்தை இழுப்பதற்குப் பத்தாயிரத்திற்கும் அதிகமானோர் வேண்டுமென்பர். இத்தகு சிறப்பு வாய்ந்த சப்பரமஞ்சத்திலே எழுந்தருளும் முருகனைத் தரிசிக்க அடியார் கூட்டம் நெருங்கித் திரள்கிறது.

அடியார் கூட்டத்தோடு கலந்து நின்று தள்ளுண்டு நெருக்குண்டு அவத்தையுற அஞ்சி நெடுந்தூரத்தே நின்ற கவிஞர் சப்பர மஞ்சத்தில் முத்துகுமரன் ஆரோகணித்துவரும் காட்சியைக் கண்ட போது அவரின் கற்பனைக்கண் மடைதிறந்து [illegible] வெள்ளம் பிரவகித்துப் பாய்வதாயிற்று.

*"குகனார் கண்ணீர் ஆறினார்*
*திருமுகங்க ளாறினார்*
*படைக்கஞ்சா வயிலார் சங்கத்து ஏறினார்*
*சப்பரமஞ்சத் தேறினார்*
*ஆடியவரீ டேறினாரே"*

என்ற வார்த்தைகள் காதுவழிப் புகுந்து நெஞ்சத்தை நிறைத்த இனிமை செய்வதை உணரலாம்.

சப்பரத்திருவிழாவை அடுத்து தேர்த்திருவிழா, விநாயகர் கந்தவேள், சந்திரசேகரர், ஷண்முகர், சண்டேசுரர் ஆகிய மூர்த்திகள் வரிசையாக ஐந்து தேரின் மீது அமர்ந்து வரும் எழிற்கோலத்தை நாம் இற்றை நாட்களிற் கண்டுகளிக்கின்றோம். கவிராசர் காலத்தில் கந்தவேள் ஒருவரே காட்சிகொடுத்திருப்பார்போலும் பல்வகை வாத்தியக் கோஷ்டிகளும் முரக நாமக் கீர்த்தனைக் குழுக்களும் பக்தர் குழாங்களும் புடைசூழ முருகவேள் தேரிற் பவனிவருங் காட்சியைக் கண்டு கண்ணுங் கருத்தும் களிபேருகை கொள்ளல் உடன் நிகழ்ச்சி இன்பம் பின்னர் கிட்டும் பலனோ பேசுந்தரத்தன்று.

காட்சிக்கும் கருத்துக்கும் இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் பயப்பதாகிய எழிற்பவனியைக் காணுகின்றாள். ஓர் இளவாலைப் பருவத்தினள். தேரில் வருகின்ற திவ்விய சொருபனின் சிறப்புக்களை ஒவ்வொன்றாக அவள் நெஞ்சம் எடைபோடுகின்றது. அவனது நீபத்தொடை செறிந்தமார்பு வனப்பே அவள் நெஞ்சை முதலிற் கொள்ளை கொள்கின்றது. ஆயினும் தனது அடிமனத்தெழுந்த வேட்கையைத் தனது நனவு என அறிந்து கொள்ளவியலாது

தடுப்பவள் போன்று அந்த அழகு வர்ணனைத் திடீரென முருகனது மாமன் மேலேற்றித் திருமாது அகலா மார்பினனாகிய மாவின் மருமகன் எனக் குறிப்பிட்டுச் சாதூரியமாகத் தனது நாணுடைமையைப் பேணிக்கொள்ளுகிறாள். தனது இச்சையை எடுத்த எடுப்பிலேயே வெளிக்காட்டலாகாது என்ற குறிப்பினைக் கொண்டது அவள் நாணம். அடுத்து வெள்ளிமலையிறைவன் மகன் எனக் குறிக்கின்றாள். உண்மையில் இதனையே முதலில் அவள் குறிப்பிட்டிருக்க வேண்டும். ஆனால் அவள் நெஞ்சத் தடுமாற்றத்திற்கான காரணந்தான் புரிந்துவிட்டதோ. இனிப்புலவர்களாலும் விதந்தோத வொண்ணா அருட்கொடையாகிய செயலை உடையவன். கரும்பு வில்லை உடைய மன்மதனுக்கு மைத்துனன் வண்டுகள் மொய்க்கும் கருமுகிலைவென்ற இருண்ட கூந்தல் பொருந்திய குறப்பெண்ணிடத்தே ஆராமத காதல் உடையவன். மயில்வாகனனாகிய முத்துக் குமரனை மாவிட்டபுரத்தே வரக்கண்டு கொண்டேன் என ஒரு பெண் கூறுவதாகக் கவிராசர் பாடுகின்றார்.

முத்துக்குமார கவிராசரது கவிச்சித்திரங்கள் இறையருட் குறிப்பையும் கோயிற் சிறப்பையும் திருவிழா வனப்பையும் ஒருங்கே எடுத்துக் கூறுவனவாகிய, சமயமும் வாழ்வும் ஒன்றோடொன்று பின்னிப்பிணைந்தவை என்பதனையும் இம்மூன்றும் இணைந்த வாழ்வையே மக்கள் நடத்தினார்கள் என்பதனையுஞ் இம்மூன்றும் இணைந்த வாழ்வையே மக்கள் நடத்தினார்கள் என்பதனையுஞ் சமுதாயநெறி நின்று புலப்படுத்துகின்றன.

**உசாத்துணை நூல்கள்**

1. மாவைக்கந்தன் பிள்ளைத்தமிழ், நூலாசிரியர் திரு.வ. கோவிந்தபிள்ளை அவர்களுடன், நேர்முக உரையாடல்.
2. மாவைக்கந்தன் பக்தி ரசக்கீர்த்தனைகள், மயிலிட்சி.சி. வேலுப்பிள்ளை, 1917
3. மாவைப் பிள்ளைத்தமிழ் - பண்டிதர்.மு.கந்தையா - 1920
4. மாவைநகர் முருகவேள் பதிகம், நவாலியூர்.க.சோமசுந்தரப்புலவர், 1935
5. மாவைக் கதிர்காம வடிவேலர்பதிகம் - வறுத்தலைவிளான் சரவணமுத்து, 1928.

# கல்லல் ஸ்ரீ குகமணிவாசக சரணாலய சுவாமிகளின் வாழ்வும் வாக்கும்

**பா. ஸ்ரீராமகிருஷ்ணன்**
உதவிப் பேராசிரியர், தமிழ்த் துறை
பேரறிஞர் அண்ணா அறிவியல் கல்லூரி
தாருகாபுரம் - 627755

"அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது" என்பது ஔவைப் பிராட்டியாரின் அமுத மொழி. எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேத பிறப்புகளிலே மனிதப் பிறப்பினைச் சிறந்த பிறப்பாகக் கொண்டாடுவார்கள் நம்மவர்கள். மனிதப் பிறப்பின் நோக்கம் மகத்தான காரியங்களைச் செய்வதற்காகவே என்பது சுவாமிஜி விவேகானந்தரின் கூற்று. இருப்பினும், மனித வாழ்வு நிலையில்லாதது என்பது ஆன்றோர்களின் துணிபு. "வாழ்வாவது மாயம், மண்ணாவது திண்ணம்" என்பது சுந்தரமூர்த்தி நாயனாரின் உபதேசமொழி. "பேதாதி பேத பிறவிகள் தோறும் பிறந்து இளைத்தேன்" என்பது வரதுங்கராம பாண்டியரின் ஞானவாக்கு. நிலையில்லா மனித வாழ்க்கையில் எளிய வாழ்வு, உயரிய சிந்தனை என்பதற்கு உதாரணமாக வாழ்ந்தவர்கள், வாழ்ந்து வருபவர்கள் மகான்கள், அடியார்கள், ஞானிகள், துறவிகள் எனலாம்.

எந்தை சிவபெருமானின் அடியவர்கள் என்று சுந்தரமூர்த்தி நாயனாரால் தொகுத்து அடையாளம் காட்டப்படும் அறுபத்து மூன்று நாயன்மார்களும், ஒன்பது தொகையடியார்களும் "ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார், ஆரம்கண்டிகை ஆடையும் கந்தையே, பாரம் ஈசன் பணிஆல தொன்றிலார், ஈர அன்பினர் யாதும் குறைவிலர்" என்ற ஞான மொழிக்குச் சொந்தக்காரர்கள் இவர்கள்.

இவர்கள், வழிவந்த யாவரும் புண்ணியச் சீலர்கள் ஆவார்கள். ஆசைகளுக்கு அடிமையாகிப் போன மானிடர்களைக் பிறவிக் குழியில் இருந்து மீட்டு அவர்களது வாழ்வில் நிம்மதியையும், மனநிறைவையும் மற்றும் நிறைந்த செல்வம் பலவற்றையும் அருளிச்செய்தவர்கள் இத்தகைய புனிதர்கள் ஆவார்கள். புனிதமான இப்பாரத பூமியிலே எண்ணற்ற மகாதவஞானிகள் வாழ்ந்து வற்றாத கருணையை வழங்கி இருக்கிறார்கள். அவர்கள் யாவரும் இறைத்தொண்டினை மட்டும் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்து காட்டினார்கள். அத்தகைய இறைத் தொண்டில் சமய வரம்பு மீறாமல் வழுவாது வாழ்ந்த பல அடியார்களின் வாழ்வியல், முழுமையாக இப்பாரத தேசத்திற்குக் குறிப்பாக, தமிழகத்திற்குக் கிடைக்காமல் போனது நாம் செய்த தவக்குறைவே. ஞானிகளின் குல தெய்வமாக விளங்குகின்ற முருகப்பெருமானின் குகபரத்துவத்தையும் கௌமார சமயத்தின் தனித்துவத்தையும் தனியொருவராக நின்று இவ்வுலகிற்கு வழங்கிய உத்தமர்களில் குறிப்பிடத் தகுந்தோர் கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகள் என்போர் ஆவார்கள்.

ஆதியில் தோன்றிய அருளாளர்கள் முதல் யாவரும் உயர்வு, தாழ்வு, இனம், மொழி, மதம் என்று பாராமல் உயிர்கள் உய்வடைய வேண்டும் என்ற பெருநோக்கில் வாழ்ந்து காட்டி அருள் மழையை அற்புதமாகப் பொழிந்து கொண்டுதான் இருக்கிறார்கள் என்பது உணர்பவர்களுக்கு நன்கு தெளிந்த விஷயமாகும். அந்த வரிசையில் போற்றி வழிபடத் தக்கவர்கள் கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகள் அவர்களும் ஆவார்கள். பெருங்கீர்த்தி கொண்ட திருவடிகளைத் தனது இருதயத்தில் சதாகாலமும் பொருத்தி மாணிக்கவாசகரின் மகத்துவத்தை நன்கு உணர்ந்தவராக திகழ்ந்தவர்கள் கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகள் ஆவார்கள்.

**ஆண்டானும் அடிமையும்**

கல்லல் என்பது சுவாமிகள் வாழ்ந்த திருத்தலமாகும். குகமணிவாசக சரணாலய சுவாமிகள் என்பது அப்பிரபு குன்றக்குடி மேலமடம் நான்காவது பட்டம் கணபதி ஞானதேசிக சுவாமிகள் என்போரிடம் தீட்சை பெற்ற போது அப்பிரபுவிற்கு வழங்கிய தீட்சாநாமமே குகமணிவாசக சரணாலய சுவாமிகள் என்பதாகும். சிவபெருமானே தன் திருக்கரம் கொண்டு எழுதியருளிய திருவாசகத்தின் ஆசிரியராகிய மாணிக்கவாசகரின் திருவடியைக் கல்லல் சுவாமிகள் இருதயத்தில் ஆலயமாக கொண்ட காரணத்தாலும், இயல்பாகவே, முருகப் பெருமான் மீது அத்யந்த பக்தியைக் கொண்டதாலும் கணபதி ஞானதேசிக சுவாமிகள் கல்லல் சுவாமிகளுக்குக் குகமணிவாசக சரணாலய சுவாமிகள் என்ற தீட்சா நாமத்தினை அருளியுள்ளார்கள். தினந்தோறும் திருவாசகத்தையும், திருக்கோவையாரையும் பாராயணம் செய்த பிறகே உணவு உண்பார்கள் என்கிற செய்தி மேற்கண்ட தீட்சாநாமத்திற்கு அரணாக அணி செய்கின்றன.

பாராயணம் என்பது வேறு, படிப்பது என்பது வேறு, படிப்பது என்பது நூல்களைப் பார்த்துச் செய்வது, பாராயணம் என்பது மனம், மொழி, மெய்களை ஒருங்கே கூட்டி நூலினைப் பார்க்காமல் படிப்பது பாராயணம் என்பதாகும். எனவே தான் கல்லல் சுவாமிகளுக்கு இத்தகைய பொருத்தமான தீட்சா நாமத்தினைக் கணபதி ஞானதேசிக சுவாமிகள் அருள்நோக்கோடு சூட்டி அருளிச்செய்துள்ளார்கள்.

**திருக்கருவை அந்தாதிகளுக்குக் குட்டித் திருவாசகம் என திருநாமம் சூட்டல்**

குன்றக்குடி மேலமடம் நான்காவது பட்டத் தலைவர் கணபதி ஞானதேசிக சுவாமிகளின் குருவருளைப் பெற்ற பிறகு குருநாதர் வழியில் நிழல் போல் தொடர்ந்த கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகள் திருக்கருவையம்பதியில் சில ஆண்டுகள் தங்கியிருந்து குருநாதருக்குத் தொண்டுகள் பல செய்துள்ளார்கள். அச்சமயத்தில் தான் களாவீசர், ஒப்பனையம்பாள், வீரசண்முகநாதராகிய இறைவனுக்குக் குருவருளால் பதிகங்கள் பாடியுள்ளார்கள். மேலும், *தென்கருவை பால்வண்ணர் ஆயிர

நாமக்கலிவெண்பா எனும் நூல் ஒன்றையும் அருளிச்செய்துள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

திருக்கருவையம்பதியின் சிறப்பினை உணர்ந்து கொண்ட கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகள் திருக்கருவை அந்தாதி நூல்களையும் திருக்கண் சாற்றியுள்ளார்கள். திருவாசகத்தின் கருத்துப் பேழையில் தோய்ந்திருந்த கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகள் திருக்கருவை அந்தாதிகளின் வேத, ஆகம கருத்துக்கள், தத்துவக் கூறுகள், இலக்கண அமைப்புகள், உயிர்கள் இறைவனைத் தொழும் பாங்கு, உயிர்களின் நிலையாமை செய்திகள் மற்றும் பல்வேறு சிறப்புகள் யாவும் திருவாசகத்தோடு ஒன்றி இருந்த காரணத்தால் திருக்கருவை அந்தாதிகளுக்குக் "குட்டித் திருவாசகம்" என்று திருநாமம் சூட்டி இருப்பார்கள் என்பதனை யூகித்து தெய்வாதீனமாக உணரமுடிகிறது. அறிஞர்களிடம் தீராக்காதல் கொண்ட கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகள் "குட்டித் திருவாசகத்தின்" சிறப்பினைத் தன்னுடன் நன்கு பழகும் அறிஞர்களிடமும், புலவர்கள் நடத்தும் சபைகளிலும் எடுத்துச் சொல்லி மாண்புடைய மனதால் அளவளாவி மகிழ்ந்து இருப்பார்கள். குட்டித் திருவாசகத்தின் சிறப்பினைத் தமிழறிஞர்கள் பின்னர், வெளியுலகிற்கு அறிமுகம் செய்திருப்பார்கள் என்பதனை மேலும் அனுபவித்து உணர முடிகின்றது எனலாம்.

**சுவாமிகளின் முன்னோர்**

வேதாந்த நூல்களை நன்கு ஓதி உணர்ந்தவர்கள், நாநாசீவவாதக் கட்டளை என்னும் நூலை ஆனந்தக்களிப்பாகப் பாடி மகிழ்ந்தவர்கள், கம்பராமாயணம் முதல் ஏனைய பிற காப்பியங்களையும் கற்றவர்கள் சிறந்தயோகிகளாகவும், ஞானியாகவும் திகழ்ந்த சின்னைய தேசிகரின் பேரனின் மகன் குகமணிவாசக சரணாலய சுவாமிகள் ஆவார்கள்.

**சுவாமிகளின் வாழ்வியல்**

சுவாமிகளின் தந்தையார் திருநாமம் சோனைமுத்தம்பலக்காரர், தாயார் திருநாமம் இலக்குமியம்மாள் என்பர். 23.08.1885ஆம் ஆண்டு பார்த்திப வருடம் ஆவணித் திங்கள் ஆறாம் நாள் திசை எட்டும் முருகப்பெருமானின் குகபரத்துவத்தை மறுமலர்ச்சியுடன் பரப்பவும், கௌமார சமயத்தின் தனித்துவத்தை மீண்டும் மெருகூட்டவும் சின்னைய தேசிகரின் அருளால், குகமணிவாசக சரணாலய சுவாமிகள் அவதரித்தார்கள். சுவாமிகளின் இளமைக்கால திருநாமம். ஆண்டவன், மதுரகவி ஆண்டவர், ஆண்டவன் அம்பலம், முத்தையாபாவலர் என்பதாகும். தனது ஐந்தாம் அகவையில் கற்றுக் கொள்ள வேண்டிய கல்விகளைக் கற்ற கல்லல் சுவாமிகள் கொழும்பு, ரங்கூன் போன்ற இடங்களுக்குச் சென்று நாட்டுக்கோட்டை நகரத் தனவைசியர்களிடம் கணக்குப் பிள்ளையாகவும், மேலாளராகவும், பணி செய்துள்ளார்கள். பெரும் பொருள் ஈட்டிய கல்லல் சுவாமிகள் பரம்பொருளைக் காட்ட இப்பெரும் பொருள் உதவாது என்று தரும்பொருளை நாடிச் சென்றார்கள்.

சிவபரத்துவம், சைவ மகத்துவம் போன்றவற்றைப் பறைசாற்றும் பெரியபுராணம், திருவிளையாடல் புராணம், சைவ சித்தாந்த நூல்களை மட்டும் அல்லாது நன்னூல்கள் மற்றும் இலக்கண நூல்களை வாசுதேவநல்லூர் மணிமுத்து ஓதுவாரிடம் பயனுறும் வகையில் கற்றுத் தேர்ந்தார்கள் கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகள்.

**திருமடம் அமைத்தலும் தேர்த்திருப்பணி செய்தலும்**

ஞானிகள் வரிசையில் மிளிர்கின்ற குகமணிவாசக சரணாலய சுவாமிகள் சைவமும் தமிழும் தழைத்தோங்க வேண்டும் என்ற பெருநோக்குடன் கல்லல் பதியில் சோமசுந்தரப் பெருமான் உறையும் திருக்கோவிலுக்கு நிருதி திக்கில், "ஞானவாணி விலாசம்" என்ற பெயரில் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள், நாட்டார்களின் உதவியாலும் திருமடம் ஒன்றைச் சமைத்துள்ளார்கள். தன்னுடைய ஆன்ம நாயகனாகிய மாணிக்கவாசகருக்கு அம்மடத்தில் விநாயகர், முருகர், அம்மையப்பர், ஆடல்வல்லான் மற்றும் நால்வர் பெருமக்களுடன் ஓவியத் திருவுருவினை வரைந்து வழிபாட்டிற்குரிய திருச்சந்நிதி ஒன்றையும் ஏற்படுத்தியுள்ளார்கள். இன்றும் அத்திருச்சந்நிதியில் மாணிக்கவாசகப் பிரபு தம்மை நாடி வந்தோர் யாவரையும் வளம் பெறச் செய்கிறார் என்பதனைச் சந்நிதியில் மனமுருகி நின்று வழிபாடு செய்தால் உணரலாம்.

கல்லல் பதியில் எழுந்தருளும் சௌந்தரநாயகி சமேத சோமசுந்தரப் பெருமானுக்குத் திருத்தேர் ஒன்றையும் செய்து அளித்துள்ளார்கள். திருத்தேரின் தத்துவம் "அனைவரும் ஒற்றுமையுடன்" வாழ வேண்டும் என்பதாகும். திருத்தேரின் உள்ளார்ந்த தத்துவம் சிவபெருமான் முன்பு ஆணவம், கன்மம், மாயமலம் இம்மூன்றும் கணப்பொழுது கூட நிற்க முடியாது என்பதே யாகும். இத்தத்துவத்தினை விரிவாக தெரிந்து கொள்ள வேண்டுமானால் வாரியார் சுவாமிகள் ஆக்கியருளிய பழனித் திருப்புகழ் விரிவுரையிலும், நாகர்கோவில் கே.ஆறுமுகநாவலர் அளித்த இந்துமத இணைப்பு விளக்கம் என்ற நூலிலும் படித்து பயன்பெறலாம். சிவகங்கைச் சீமை மருது சகோதரர்களின் ஆஸ்தான ஸ்தபதியாக விளங்கிய குப்பமுத்து ஆசாரியின் வழித் தோன்றலைக் கொண்டு கல்லல் சிவபிரானுக்குத் திருத்தேர் ஒன்றை செய்துள்ளார்கள் என்பதனை அறிகின்றோம். தேர்த் திருப்பணிக்கு எந்தவித எதிர்பார்ப்புமின்றி சிவகங்கையை அடுத்துள்ள கீழைப்பூங்குடியில் பெருந்செல்வந்தராக வாழ்ந்த இராமையா என்னும் அம்பலக்காரர் பெரும் உதவி செய்துள்ளார்கள். அவருக்கு நன்றி தெரிவிக்கும் விதமான "இயன்மொழி வாழ்த்து" என்னும் நூலியற்றி அவருடைய அறப்பணியையும் பாராட்டியுள்ளார்கள் கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகள்.

**சுவாமிகள் அருளிச் செய்த தெய்வத் தமிழ்த் தொண்டுகள்**

உலகில் பேசப்படும் இரண்டாயிரத்து எழுநூற்று தொண்ணூற்றாறு மொழிகளில் சிறந்த மொழியாக கருதப்படும் மொழி தமிழ் மொழி என்பர்கள் நம்மவர்கள். உலகம் தோன்றிய நாள் முதலாகவே தமிழ் மொழிக்கென்று

சிறப்புகள் பல உள்ளன. பெயர், இனிமை, எளிமை, தனிமை, தொன்மை, சுழி, எழுத்து, சொல், ஒலி, கவிதை, கலை, மருத்துவம், இசை, நாடகம், இலக்கியம், இலக்கணம் என்றவாறு எண்ணிரெண்டு கவின் மிகுந்த சிறப்புகளைக் கொண்டது நமது தமிழ் மொழி என்பார் முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் அவர்கள்.

### செந்தமிழ் நாட்டுச்சிறப்பு

தமிழின் அருமை பெருமைகளைப் பற்றி நிறைந்த நிறைய நூல்கள் பல உள்ளன. இருப்பினும், தமிழின் மீதுள்ள ஈரக்காதலால் கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகள் "செந்தமிழ் நாட்டுச் சிறப்பு" எனும் தலைப்பிலே நூல் ஒன்றை ஆக்கியுள்ளார்கள். அந்நூலின் பயனிலை என்பது "மொழி துவேசம் கூடாது" "சமய வாதிகள் அனைவரும் ஒற்றுமையுடன் நாட்டிற்காக பாடுபட வேண்டும்" என்பதனை இலைமறை கனிபோல் இயல்பாக உணர்த்தியுள்ளார்கள். செந்தமிழ் நாட்டுச் சிறப்பு தமிழ் இலக்கிய வரலாற்றிக்கு முக்கிய முன்னோட்டமாக அமைந்துள்ளது. கற்றறிந்த தமிழறிஞர்கள் அனைவரும் அந்நூலினைப் படித்துணர்ந்தால் கண்டிப்பாக, ஒரே மனதுடன் பள்ளி, கல்லூரி பாடங்களில் செந்தமிழ் நாட்டுச் சிறப்பு என்கிற நன்னூலை பாடமாக வைக்க வேண்டும் என்று தீர்மானம் செய்வார்கள். தித்திக்கும் தீந்தமிழ் வரலாற்றில் செந்தமிழ் நாட்டுச் சிறப்பு என்ற நூல் தமிழன்னைக்கு மற்றுமொரு மணி மகுடமாகும்.

பதிகங்கள் என்பது பத்துப் பாடல்களின் தொகுதி. பதிகம் என்பதற்குப் பழைய இலக்கிய வகை என்பர். பத்து என்னும் இலக்கிய வகையும் பத்துப் பாடல்களால் பாடப் படுவது என்றாலும் "பதிகம்" என்பது ஒரு பொருள் நூதலிய பத்துப் பாடல்கள் அமைய தொடர்ந்து பல பதிகங்களாகப் பாடப்படும் இலக்கிய வகையாகும். தேவார மூவர் முதலிய பாடல்கள் அனைத்துமே பதிகங்களாகவே தொகுக்கப்பட்டுள்ளன. பதிகங்களிலே மூத்த பதிகமாக விளங்குவது சிவபெருமானுக்கு அன்னையாக திகழும் காரைக்கால் அம்மையார் அருளிச்செய்த திருஆலங்காட்டு மூத்த திருப்பதிகம் ஆகும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆயிரத்தி இருநூற்று முப்பத்து ஏழு பதிகங்கள் பாடப் பெற்றுள்ளன என்று தமிழ் இலக்கிய வரலாறு பட்டியல் தருகின்றது. தேவார மூவர் முதலிகளைப் போல் பதிகங்கள் பலர் பாடியுள்ளனர் அவர்களுள், கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகளும் குறிப்பிடத்தகுந்தவர் ஆவார்.

### சோடச பிரபந்தங்கள்

"பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ்க" என்று பெரியோர்கள் வாழ்த்துவது மரபு. அத்தகைய பதினாறு பேறுகள் தான் என்ன? என்பதனை அறிந்து கொள்ள வேண்டுமானால் காளமேகப் புலவரின் தனிப்பாடல் திரட்டினைப் படிப்பது நலம் பயக்கும். எல்லா உயிர்களும் இன்புற்றிருக்க சிவபெருமானிடம் நம் குருமரபிற்கெல்லாம் முதற் குருநாதராகிய நந்தீஸ்வரர் பெற்ற வரங்கள் பதினாறாகும். இறைவனுக்கு ஆலயங்களில் காட்டப்படும் தீப உபசாரங்கள் பதினாறு என்று வகைப்படுத்தியுள்ளனர். சணகலிங்க வழிபாட்டின் பயன்கள்

பதினாறு என்பது சிவபூஜாவிதி. முருகப்பெருமானின் திருவுருவ வகைகள் பதினாறு என்று வகைப்படுத்துகிறது குமார தந்திரம் என்கிற ஆகம நூல். மேலும், சனத்குமார பிரசன குமார தந்திர நூலில் முருகப் பெருமானின் வடிவங்கள் பதினாறு என்று சுட்டிக் காட்டுகிறது. கச்சியப்ப முனிவர் அருளிச் செய்த தணிகைப் புராணத்தில் சிறப்பாக பேசப்படும் முருகப்பெருமானின் திருவுருவங்கள் பதினாறு ஆகும்.

கச்சியப்ப சிவம் அருளிச் செய்த கந்தபுராணத்தில் முருகப் பெருமானின் உறைவிடங்கள் பதினாறு என்று அருளிச் செய்துள்ளார்கள். கந்தபுராண யுத்த காண்டத்தில் படலங்கள் பதினாறு என்பதேயாகும். முருகப் பெருமானின் புகழினைப் பாடிப் பரவும் முதன்மை அடியார்களில் ஒருவரான அருணகிரிநாதர் அருளிச்செய்த கந்தர் அந்தாதியிலும், திருவகுப்பிலும் இடம் பெற்றுள்ள திருத்தலங்கள் பதினாறு ஆகும். இங்கே, முருகப் பெருமானின் குகபரத்துவத்தையும், கௌமாரசமயத்தின் தனித்துவத்தையும் மீண்டும், மீண்டும் பொலிவுறச் செய்து மெருக்கேற்ற கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகள் அருளிச்செய்த பிரபந்தங்கள் பதினாறு ஆகும். பதினாறு திருத்தலங்களில் உள்ள முருகப் பெருமானின் மீது கல்லல் குக மணிவாசக சரணாலய சுவாமிகள் அருளிய சோடச பிரபந்தங்கள் யாவும் சொற்சுவையும், பொருட்சுவையும் நிறைந்தவையாகும். அருணகிரிநாதர், தண்டபாணி சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள் ஆகியோரின் அடியொற்றிக் கவிதை புனையும் ஆற்றல் கைவரப் பெற்ற பாக்கள் யாவும் சந்தப்பாக்கள் ஆகும். சங்கடங்கள் யாவற்றையும் தீர்க்கும் ஆற்றல் கொண்ட சோடசப் பிரபந்த பாடல்கள் யாவும் முருகப் பெருமானின் தோத்திரச் செய்யுள்கள் ஆகும்.

சோடசப் பிரபந்தங்களில் கவின்மிகுந்த செய்யுள்களை நிறையக் காணலாம். சோடச பிரபந்தங்கள் என்று அழைக்கப் பெறும் கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகளால் பாடப் பெற்ற திருத்தலங்கள் பின்வருமாறு. திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருப்பழநி, திருவேரகம், பழமுதிர்ச் சோலை, குன்றுதோறாடல், குன்றக்குடி, குமாரமலை, விராலிமலை, கொடுமளூர், கழுகுமலை, கதிர்காமமலை, எட்டிக்குடி, திருச்சிக்கல், புள்ளிருக்கு வேளூர், திருத்தணிகாசலம் என்பனவாகும்.

கல்லல் குக மணிவாசக சரணாலய சுவாமிகளின் ஞானசமாதி திருக்கோவில் திருப்பணி சிறப்புடன் பக்தர் குழாம் வழியே, திருவருளும் குருவருளும் துணை நிற்க நடைபெற்று வருகின்றன. கருணைக் கடலாகிய குன்றக்குடி கணபதி சுவாமிகளும், கல்விக் கடலாகிய கல்லல் குகமணிவாசக சரணாலய சுவாமிகளும் அனைவருக்கும் எல்லா நலன்களையும் அருளிச் செய்கிறார்கள் என்பதனை உணர்வோமாக.

# அருள்மிகு கொளஞ்சியப்பர் முருகன் தலபுராணம்

**செ. ஹரிஹரன்**
உதவிப் பேராசிரியர்
இசைத் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

நானிலங்களில் முதன்மையானது குறிஞ்சி. அந்தக் குறிஞ்சி நில மலைத் தெய்வம்தான் முருகன். முருகனுக்கு என்று அறுபடைவீடுகள் இருப்பினும் குன்றுதோறும் குடியிருப்பவன் குமரன் முருகனே. மலையின் தெய்வமாயினும் பிற நிலங்களுக்கும் உரிய தெய்வமாக விரிந்துள்ளான். பின்னர் தமிழ் நிலங்களைக் கடந்து இந்தியத் தெய்வமாகவும், உலகத் தெய்வமாகவும் வளர்ந்துள்ளான். எனினும் மலைமக்கள் இன்றும் தம் சொந்த தெய்வமாகவே வழிபட்டு வருகின்றனர். அத்தகைய மலைத்தெய்வமும், கலியுகத் தெய்வமுமான சுந்தரப் பெருமான் மாணவாளநல்லூர் காட்டுப் பகுதியில் புதர்களுக்கு இடையே மறைந்து கிடந்து மக்களுக்கு அருள் வழங்கித் திருவுளங் கொண்டுள்ள கொளஞ்சியப்பரின் மேன்மை மேன்மைக்கும் மேன்மையானதே.

**அச்சம் தரும் காடு**

சுமார் அறுபது அல்லது எழுபது ஆண்டுகளுக்கு முன் தற்போது கொளஞ்சியப்பர் கோயில் கொண்டுள்ள நெடுஞ்சாலையை ஓட்டிய மணவாள நல்லூர் பகுதி காட்டுச் செடிகளும் மரங்களும் அடர்ந்து வனப்பகுதியாகவே விளங்கியிருந்துள்ளது. இருட்டிய பிறகு அப்பகுதிக்குச் செல்வதற்கே மக்கள் அஞ்சுவர். பகலில் மாடு மேய்க்கும் இடமாகவே இப்பகுதி விளங்கியுள்ளது. விருத்தாசலம் சேலம் பேருந்துத் தடத்தில் இன்று கோயில் அமைந்திருக்கும் இடத்திற்குத் தெற்கே இரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் தான் மணவாள நல்லூரின் மக்கள் வாழும் பகுதி அமைந்துள்ளது. அவ்வூரின் வடக்கில் கிராமத்தின் எல்லையாகச் சாலை ஓரம் அமைந்த காட்டுப் பகுதியிலிருந்தே அருள்மிகு கொளஞ்சியப்பர் வெளிப்பட்டார். இதுபற்றி வழங்கும் ஐதிகச் செய்தி மிகவும் சுவையானது.

**பசுவை வழிபடுதல்**

இந்தியத் திருநாட்டில், இந்துப் பெருமக்களால் பெரிதும் போற்றிக் கொண்டாடப்படும் விலங்கு பசுவாகும். இதனைத் தெய்வீகம் நிறைந்ததாகக் கருதி வணங்குவது நமது மரபு. கோமாதா என்ற மக்கள் இதனைப் போற்றுவர். தேவர்கள் காமதேனுவாகப் போற்றிக் கொண்டாடுவர். திருக்கோயில்களில் நித்திய பூசைகளோடு கோபூஜை நிகழ்த்துதலும் உண்டு. பசு பூசித்த தலங்களும் தமிழகத்தில் உண்டு. பசுவால் பெயர் பெற்ற நகரங்களும் இங்கே உள்ளன. கட்டுப்பகுதியில் மறைந்துறைந்த கொளஞ்சியப்பர் வெளியிட்ட ஒரு பசு காரணமாக அமைந்தது என்பது வியப்பூட்டும் செய்தியாகும்.

**பாலாபிடகம்**

மணவாளநல்லூர் காட்டுப்பகுதியில், கருங்கல்லால் சமைந்த சிறிய ஒரு பீடம் புதர்களின் இடையே மறைந்து கிடந்தது கலியுகத் தெய்வமான கந்தப்பெருமான் அப்பீடத்தில் எழுந்தருளி மக்களுக்கு அருள் வழங்கத் ஓட்டிக்கொண்டுவந்து அப்பகுதியில் மேயவிட்ட பசுக் கூட்டத்திலிருந்து ஒரு பசு, மந்தையை விட்டுப் பிரிந்து தனியே புதர் மண்டிய பகுதியில் சென்று மேய்ந்து திரும்பியது. முதலில் அதைச் சாதாரணமாகக் கருதியிருந்த அச்சிறுவர்களில் ஒருவன், நாளும் ஒரு பசு மட்டும் தனியே பிரிந்து குறிப்பிட்ட ஒரு இடத்தில் சென்று மேய்வதைக் கவனித்து வந்தான். அண்மையில் கன்று ஈன்ற அப்பசுவின் செயல் அவனுக்கு விநோதமாகத் தோன்றிற்று. மற்றைய சிறுவர்களிடம் அவன் இதனைக் கூற அனைவரும் அதன் உண்மைகான ஒருநாள் அப்பசுக்களைப் பின் தொடர்ந்தனர். பசுவின் கண்ணில் படாது மறைந்திருந்தனர். சிறிது நேரம் அப்பகுதியில் மேய்ந்த பசு சிறிய தூரம் நடந்து ஓரிடத்தில் ஆடாது அசையாது நின்றது. என்ன வியப்பு கன்று முட்டாமல் கறப்பார் இல்லாமல் மனம் குழைந்து நின்ற பசு மடியிலிருந்து பால் காம்புகள் வழியே பீரிட்டது கண்டவர்கள் கண்கள் அகல விரிந்தன. மெய்சிலிர்த்தனர். வியப்போடு நடந்ததை ஊரவர்களுக்குக் கூறினர். அனைவரும் ஒருங்கு திரண்டு மறுநாளும் சென்று மறைந்துநின்று அதே காட்சி கண்டு வியப்பெய்தினர். பசு அகன்ற பின் பயபக்தியுடன் அருகில் சென்று பார்த்தனர்.

**கந்தனை வழிபடுதல்**

புதர்களுக்கு இடையே கருங்கல் பீடம் ஒன்று ஆவின் பாலால் அபிடேகிக்கப்பட்டு. ஒளிவீசிக்கிடக்கக் கண்டனர். அப்பகுதியே விளக்கமுற்றுத் திகழ்ந்தது. இது வெறும். பீடம் அன்று, தெய்வம் ஒன்று இதில் ஆவேசித்திருக்கிறது என்று உணர்ந்தனர். செடி கொடிகளை அகற்றினர். தரையிலிருந்து சுமார் 2 அடி உயரத்தில் அமைந்திருந்த பீடத்தில் கோயில் கொண்டுள்ள பெருமாள் யார் எனத் திகைத்தனர். ஆவின் பால் அபிடேகம் கொண்ட ஐயன். அபிடேகப் பிரியனாகிய முருகப் பெருமானே என்று உளங்கொண்டனர். அப்பனே முருகா! என்று அன்புடன் வங்கினர். ஊர்மக்களுக்கு இச்செய்தி பரவியது. மணவாள நல்லூராரும், விருத்தாசலத்தினரும் கூட்டம் கூட்டமாக வந்து, பீட வடிவில் தன் கோலம் காட்டாது, கரந்து உறையும் கந்தனை இனங்கண்டு போற்றினர். சிறு கொட்டகை அமைத்துக் கோயில் செய்தனர். கொளஞ்சி அப்பா! எனக் கூறித் துதித்தனர்.

**நெல்லையப்பர் வெளிப்படல்**

ஒருநாள் இடைக்குலப்பெண் ஒருத்தி பசுவின் பால் நிறைந்த பாத்திரத்தைத் தலையில் சுமந்து அவ்வழியே சென்றாள். ஏதோ ஒன்று காலில் தடுக்க நிலைகுலைந்தாள். பாற்குடம் கீழே சாய்ந்தது. கீழே பார்த்தாள். ஒன்றும் தெரிந்திலது. அடுத்த நாள் விழிப்போடு வந்தவள் அன்றும் அதே இடத்தில் வீழ்ந்தாள். பால் சிந்தியது பலநாளும் ஒரே இடத்தில் நடக்க ஐயுற்ற அப்பெண் உறவினர்களுடன் வந்து பாற்குடம் வீழும் இடத்தினை

அகழ்ந்து பார்த்தாள் சிவலிங்கத் திருமேனி கண்ணில் பட்டது. வியந்து திருமேனியைக் கோயிலில் சேர்ப்பித்தர். இதனை

*தவேயீன்ற முத்தரை வெட்டினா னேயீடைய*
*தாயீன்ற மேனித தயாங்கவே-பேயாகேள்*
*எத்தனைநாள்என்றே இடறுவான் பாற்குடத்தை*
*அத்தனையும் வேண்டும் அவற்கு*

என்ற இரட்டைப் புலவர் பாடல் இதனை மெய்ப்பிக்கின்றது. அன்று நெல்லையப்பர் பாற்குடத்தை இடற்வைத்து அபிடேகம் கொண்டு வெளிப்பட்டார். இன்று கொளஞ்சியப்பர் பாற்பசுவை தாமே பால் சுரக்கவைத்து அபிடேகம் கொண்டு வெளிப்பட்டார்.

**மூவகைத் திருமேனி**

மணவாள நல்லூரில் கோயில் கொண்டுள்ள கொளஞ்சியப்பர் உருவத்திருமேனி கொண்டவர் அல்லர். கண்ணுக்குப் புலப்பட அருவத் திருமேனியினரும் அல்லர். உருவமும் அருவமும் கலந்த அருவுருவத் திருமேனி கொண்டு ஒரு பீடத்தின் வடிவில் இங்கே காட்சி தருபவர் சிவபெருமான் கொண்டருளிய திருமேனிகள் இருபத்தைந்து என்பர் இவற்றைச் சிவமூர்த்தங்கள் என்பர். இவற்றுள் சிவலிங்கத் திருமேனி ஒன்றே அருவுருவம். ஏனைய உருவத் திருமேனிகள் பெரும்பாலும் முருகப்பெருமான் உருவத் திருமேனி கொண்டே காட்சி தருவர். ஒரு திருமுகம் அல்லது ஆறு திருமுகத்துடன் முருகன் திருமேனி அமைந்திருக்கும் மணவாள நல்லூரில் முருகன் : அருவுருவத் திருமேனி கொண்டு எழுந்தருளியிருப்பது பெருஞ்சிறப்பாகும்.

**கந்துடைநிலை**

ஒரு பீடத்திருமேனி கொண்டு இங்கே முருகன் எழுந்தருளியிருப்பது நம்மனோர்க்கு வியப்பினைத் தருவதாயினும். இது புதுமை அன்று என்பதைத் திருமுருகாற்றுப்படை புலப்படுத்துகின்றது. இதன் ஆசிரியர் நக்கீரர் பழமுதிர்சோலை பற்றிக் கூறும் போது முருகன் விரும்பி உறையும் இடங்களைப் பட்டியல் இட்டுக் காட்டுகிறார்.

*ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்*
*ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்*
*வேலன் தைஇய வெறியர் களனும்*
*காடும் காவும் கவின்பெறு துருத்தியும்*
*சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்*
*மன்றமும், பொதியினும் கந்துடை நிலையினும்...*

**குறிஞ்சி அப்பன்**

தமிழக நிலப்பகுதியை நான்காகப் பிரிப்பர். இது பற்றியே உலகியையும் நானிலம் என முன்னோர் குறித்தனர் இவற்றை முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என அகப்பொருள் நூலார் குறித்தனர்.

அவற்றுள் குறிஞ்சி என்பது மலையும் மலையைச் சார்ந்த பகுதியும் ஆகும். நம் முன்னோர் ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு தெய்வம் முருகன். இப்பெருமானைக் குறிஞ்சிக்கோ, குறிஞ்சி கிழவன், குறிஞ்சிவேள், குறிஞ்சிக் காவலன் எனப் பலவாறு அழைப்பர். 'குறிஞ்சி அப்பன்' என்ற பெயரே நம்மவர்களது உச்சரிப்பில் மெல்ல மெல்லத்திரித்து கொளஞ்சியப்பராக மாறியிருக்கக் கூடும் என்பது ஒரு சிலர் கருத்தாகும்.

**கொளாஞ்சி மரம்**

இரண்டாவதாகக் கூற்ப்படும் கருத்து சிந்திக்கத் தக்கது. தமிழ்நாட்டு மர வகைகளில் நார்த்தை என்பதும் ஒன்று. நார்த்தை இனங்களில் சற்றே இனிப்பா காய் காய்க்கும் ஒரு வகையைக் கொளஞ்சி நாரத்தை என்பர் அத்தகு நார்த்தை எலுமிச்சை வகைகளுள் ஒன்றாகவும் குறிக்கப்படும் இவற்றின் இலைகள் ஏறத்தாழ ஒன்று போலவும், காய்கள் மட்டும் வேறுபட்டும் அமையும், அவ்வாறான கொளஞ்சிச் சிறு மரங்கள் இப்பகுதியில் இன்றும் காணப்படுகின்றன. கொளஞ்சி மரக்காட்டில் எழுந்தருளியிருந்த அப்பர் என்ற கருத்தில் மக்கள் கொளஞ்சியப்பர் என அழைத்திருக்கலாம் என்பதும் ஒரு கருத்து. நன்செய் வயல்களுக்கு உரமாகப் பயன்படுத்தப்படும் ஒருவகைப் பசுந்தாள் உரச்செடிக்குக் 'கொளஞ்சி' அல்லது 'குளஞ்சி' எனப் பெயர் கூறுவர். இத்தகு கொளஞ்சிச் செடிகள் மத்தியில் எழுந்தருளிய பெருமான் 'கொளஞ்சியப்பர்' வழங்கபெற்றிருக்கலாம் என்பர்.

**ஏறழஞ்சி எனும் மரம்**

வேறு ஒரு செய்தியும் கொளஞ்சியப்பர் என்ற பெயர்க்காரணம் தொடர்பாய் இன்றும் மணவாள நல்லூர் கொளஞ்சியப்பர் திருக்கோயில் வளாகத்தில் வேறு எங்கும் காணப்படாத ஏறழஞ்சி என் ஒருவகை மரம் காணப்படுகிறது. சுமார் 15 அடி உயரம் வளர்ந்துள்ள இம்மரம் இக்கோயில் வளாகத்திலேயே சுமார் 40 வரை உள்ளன. இதன் காய்கள் மரத்திலிருந்து கீழே விழுந்து பின்னர்த்தாமே மேலெழுந்து மரத்தைச் சாரும் என்று கூறப்படுகிறது. இந்த ஏறழஞ்சி மரக்காட்டுள் உறையும் பெருமான் பெயர் மரப்பெயரின் திரிபாக அமைந்திருக்கக்கூடும் என்பதும் சிந்திக்கத்தக்கதே.

**குஞ்சிப்பிள்ளை**

ஒரு கடைக்குட்டி மற்றும் சிறு பிள்ளைகளைக் குட்டி-குஞ்சு என்று அழைப்பது இன்றும் வழக்கில் உள்ளது. ஆனேறு உயர்த்திட்ட ஐயர்க்கும் அம்மைக்கும் அருமருந்தாக வந்த ஆதிப்பிரனாகிய முருகன் சிவனார் குடும்பத்தின் கடைசிப் பிள்ளை அல்லரோ! எனவே குஞ்சியப்பன் கொளஞ்சியப்பன் ஆனதோ என்றும் ஒரு சிலர் கருதுகின்றனர்.

**உள்ளம் குழைவித்தல்**

பக்தியில் உள்ளம் கரைவதைக் குழைதல் என்று கூறுவர். நாட்டு வழக்கில் சோறு கொழஞ்சி போச்சு என்பர். தன்னை நாடி வழிபடும் அடியாரின் நெஞ்சக்கனகலை நெகிழ்ந்து உருகவைத்துக் குழைவிக்கும் பெருமான் முருகன், அதுமட்டுமல்லாமல் தன்னை நாடி வழிபடும் அன்பர்களின் அன்பில்

குழைபவன் முருகப்பெருமான். தானும் அகம் குழைந்து, தன்னை வழிபடும் அடியாரையும் குழைவிக்கும் அப்பன் என்ற பொருளில் - சற்றே திரிந்து கொளஞ்சியப்பர் என வந்திருக்கக்கூடும் என்று சிந்திக்கலாம்.

### முருகன் செய்த வழிப்பறி

விருத்தாசலத்தின் நாற்றிசைகளினும் கோயில் கொண்டுள்ள வேடப்பர் முதலிய தெய்வங்களைப் பற்றி முன்றே குறிக்கப்பட்டது. இத்தெய்வாங்கள் பற்றி வழங்கப் பெறும் செவிவழிச்செய்தி ஒன்று குறிப்பிடத்தக்கது திருமுதுகுன்றம். தேவார மூவரில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாற்றோடு தொடர்புடையது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுதுகுன்றப் பகுதிக்கு வந்தகாலை - இதுவோ முதுகுன்றம் பழமலை! இறைவரோ நாதர்! அம்மையோ விருத்தாம்பிகை (விருத்தம் - முதுமை) எனவே ஊரும் கிழம். இறைவனும் கிழம். இறைவியும் கிழம் என்று கருதி இத்தலத்தைப் பாடாது போயினர். இதுகண்டு வருந்திய! பழமலைநாதர் முருகனைக் சிந்தித்தார்.

தந்தையைப் பாடிய வாயால் தன்னையும் பாட வற்புறுத்திப் பாமாலை பெற்ற பண்ணவன் முருகன். இறைவன் திருவுளக் குறிப்பறிந்த முருகன் ஒருவேட்டுவக்குமராக சுந்தரர் எதிர்சென்று அவரது பொன்னையும் பொருளையும் கவர்ந்துகொண்டு, பழமலைக்கு வந்து பெற்றுக் கொள் என்று கூறிச் சென்றார். சுந்தரர் குற்றம் உணர்ந்து திருமுதுகுன்றம் சேர்ந்து பழமலைநாதரைப் பாடி பிழை பொறுக்க வேண்டினார். அவ்வாறு சுந்தரரை வழிமறித்து வேட்டுவக் குமராக வந்த முருகனே சிவனார் ஆணைவழி. விருத்தாசலத்தின் நாற்றிசைகளினும் வேடப்பர் முதலிய காவல் தெய்வாங்களாகக் கோயில் கொண்டர் என்று கூறப்படுகிறது. சுந்தரர் வரலாறு கூறும் பெரியபுராணத்தில் இதுபற்றிச் சிறு குறிப்பும் இல்லை. இக்கதை எக்காலத்தில், யாரால் தோற்றுவிக்கப் பெற்றது என்பதை அறியகூடவில்லை.

### வளர்ச்சிநிலை

சிறிது சிறிதாக வளர்ந்த கொளஞ்சியப்பர் வழிபாடு இன்று மேலும் மேலும் சிறந்து தமிழகத்தின் தலையாய முருகத் தலங்களுள் ஒன்றாகச் சிறந்து விளங்குகின்றது. தன்னை அண்டி வழிபடும் அன்பர்களின் தீராநோய் தீர்த்தருளும் கொளஞ்சியப்பர். நாடிவரும் அன்பர்களுக்கும் பொன்னும் மெய்ப்பொருளும், போகமும், தீர்வும் வழங்கும் கருணைக் கடலாகவும் திகழ்கின்றான். மன நோயாளிகளும் இங்கே வழிபட்டுக் குணம் பெற்று வருகின்றனர். இங்கே நிகழ்த்தப்படும் அன்பர்களின் நேர்த்திக் கடன்கள் வித்தியாசமானவை.

### கருவறைகள்

இன்று கொளஞ்சியப்பர் திருக்கோயில் விரிந்து பரந்த நிலப்பரப்பில் சுற்றுச்சுவர் சூழ அழகிய நிலையில் விளங்குகின்றது. கிழக்குப் பார்த்த சந்நிதியின் கருவறையுள் பீடத்திருமேனி கொண்டு கொளஞ்சியப்பர் அருள் வழங்குகின்றார். கருங்கற் பீடத்தின் கீழே முருகனது சடாட்சரம்

பொறிக்கப்பெற்ற ஶ்ரீசக்கரம் ஒன்றும் இடம் பெற்றுள்ளது. அபிடேக ஆராதனைகள் யாவும் பீடவடிவில் திகழும் முருகப்பெருமானுக்கே நிகழ்த்தப் பெறுகின்றன. கொளஞ்சியப்பரின் வலப்பாகத்தில் கிழக்கு நோக்கிய சந்நிதியில் அருள்மிகு சித்திவிநாயகர் பெரியதிருமேனி கொண்டு காட்சி தருகிறார் இருவருக்கும் தனித்தனி விமானங்கள். கருவறைக்கு எதிரில் தற்கால அமைப்பில் மிகப்பெரிய தூண் அமைத்துக் கட்டப்பெற்ற மகாமண்டபம் அமைந்துள்ளது. மகாமண்டப முகப்பில் அழகிய கதைகளவு அமைக்கப்பட்டு உள்ளன.

**பங்குனி உத்திரம் காவடிகள்**

மணவாளநல்லூர் கொளஞ்சியப்பர் திருக்கோயிலில் நிகழும் பெருவிழா பாங்குனி உத்திரத் திருவிழாவாகும். பல்வேறு நலங்குறித்துப் பிரார்த்தித்து ஐயனை வேண்டி நலம் பெற்ற பல்லாயிரக் கணக்கான அன்பர்கள் தாங்கள் நேர்த்திக் கடன்களை இவ்விழா நாட்களிலேயே நிகழ்த்துகின்றனர் மணவாள நல்லூரைச் சுற்றிச் சூழ உள்ள ஐம்பது கிலோமீட்டர் தொலைவில் இருந்தெல்லாம் பாங்குனி உத்திர நாளன்று இங்கே ஆயிரக்கணக்கான காவடிகள் எடுத்து வரப்பெறுகின்றன. அன்று ஒரு நாள் மட்டும் மூவாயிரம் முதல் ஐயாயிரம் காவடிகள் வருகின்றன. ஆண்களும், பெண்களும் குழந்தைகளும் காவடிகள் சுமந்து பரவசத்தோடு ஆடிப்பாடி வரும் காட்சி மெய்சிலிர்க்க வைக்கும் தன்மையது. அவற்றுள் பெரும்பாலானவை பால் காவடிகளே! மற்றும் இளநீர். பன்னீர், புஷ்பம், அலகுக் காவடிகளும் வருகின்றன. உடலெங்கும் அலகுகள் குத்திக் கொண்டு எடுத்து வரப்பெறும் செடல் காவடிகள் கொளஞ்சியப் பக்தர்களின் பக்தி வைராக்கியத்திற்குச் சான்று கூறி கண்டாரைப் பரவசபடுத்துவன். பங்குனி உத்திரத்தன்று காவடி எடுக்க இயலாதவர்கள் அதற்கு எட்டாம் நாள் மறு உத்திர நாளன்று காவடி சுமந்து வந்து நேர்த்திகடன் செலுத்துவர்.

**முடிவுரை**

கலியுகத் தெய்வமாகிய கொளஞ்சியப்பர் நம் அன்பர்களின் காணிக்கையில் மகிழ்வதைவிட அவர்கள் அன்பில் நிறைகிறான். அவர்கள் ஆர்த்தில் நிறைகிறான். நாளும் அவன் அருள் வீச்சு அதிகரித்துக்கொண்டே வருகிறது. கூட்டம் நிறைகிறது. கோயில் வளர்கிறது. ஐயன் தன்னருள் வெள்ளம் தரணி எல்லாம் பாய்கிறது.

# முருகனின் பொருள் மற்றும் வேறு பெயர்கள்

பு. ஹேமாவதி
முனைவர் பட்ட ஆய்வாளர்
ஓலைச்சுவடித் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

மொழிக்குத் துணை முருகா என்னும் நாமம் என்பது ஆன்றோர் வாக்கு, "சேயோன் மேய மைவரை யுலகமும" என்று தொல்காப்பியத்தில் குறிஞ்சி நிலக்கடவுளாகக் கூறப்பட்ட முருகன், குன்றுதோறாடுங் குமரனாக இன்றும் விளங்குகின்றான். அவன் ஆறுமுகச் செவ்வேளாக அணிதிகழ் கோயில்களில் பாடல்களில் காட்சியளிக்கின்றான். உருவம், பெயர், தொழில் ஒன்றும் இன்றி எங்கும் நிறைந்திருப்பவன் இறைவன் அவன் உண்மை அறிவு இன்பமாக சச்சிதானந்தமாகத் (சத் - சித் - ஆனந்தம்) திகழ்கின்றான். உயிர்கட்கும் போகம் தந்து [illegible] இழிவினை உணர்ந்தி அதனினும் மேம்பட்ட வீடுபேறு விழைவு வரச்செய்து, அதற்குரிய சாதனம் தந்து ஒழுக வைத்து வீடு நல்க. அவன் உருவம் கொள்வான் என்பர் அவன் உருவம் அருவம் அருவுருவம் ஆனவன் மிக்க அருளால் மேனி கொண்டான். அத்தகு முருகனைப் பற்றியது இக்கட்டுரை ஆறுமுகத்தின் தத்துவக் கருத்துக்களைக் காண்பதோடு, முருகு பற்றியும், முருகனுக்கு வழங்கும் வேறு பெயர்கள், பல்வேறு கதைகள் ஆறு என்ற எண்ணின் சிறப்பு, ஆறுபடை வீடு, இந்து சமயத்தில் முருக வழிபாடு பெறும் இடம் ஆகியவற்றையும் ஓரளவு ஆய்ந்து சொல்கின்றது. இக்கட்டுரையில் ஆறுமுகங்களின் தனித்தனிச் செயலாக நக்கீரர், அருணகிரிநாதர், குமரகுருபரர் கூறும் செய்திகள் ஒப்பீட்டு முறையில் அணுகப்பட்டுள்ளன.

## முருகு

முருகு என்ற சொல்லுக்கு அழகு, இளமை, மணம், கடவுள் தன்மை என்ற பொருள்களுண்டு. இயற்கையிலுள்ள அழகை முருகை, முதன் முதல் கண்டவர் தமிழ் நாட்டார். இயற்கை மணமும், மாறா இளமையும், கடவுள் தன்மையும், அழியா அழகும், எச்சமயத்தவரும் ஏற்றுப் போற்றும் ஆண்டவனுக்குரிய இயல்புகளாகும். இவ்வியல்புகள் அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்றவன்.

இயற்கை முதல்வனாகிய முருகன் ஆறுமுகம் கொண்டது வேல் தாங்கியது. சூரனைத் தடிந்தது. இரு மாதரை மணந்தது முதலிய வரலாறுகளிலுள்ள உண்மைகள், குமார தந்திரம், கந்தபுராணம், திருப்புகழ், சுப்பிரமணிய பராக்கிரமம், பாம்பன் குமரகுருதாச சுவாமிகளின் பிரபந்தங்கள் ஆகியவற்றில் காணக்கிடக்கின்றன.

வட நாட்டினர் கார்த்திகேயன் என்ற பெயரில் பெரும்பாலும் முருகனை அழைக்கின்றனர். அங்குள்ள முருகன் பிரம்மச்சரிய நிலையில் உள்ளான். பெண்கள் அவனைத் தரிசிப்பதில்லை. தென்னகத்தில் முருக வழிபாடு மிகச் சிறந்து விளங்குகின்றது. தமிழ்ப் பண்பாட்டில் மலர்ந்த முருகனுக்கு வள்ளியின் காதல் திருமணமும், சூர் தடிந்த தன்மையும் சிறப்பான கூறுகளாகும். இவை வட இந்திய ஸ்கந்தனிடம் காணப்படவில்லை.

வள்ளியின் தேனூறு சொல்லுக்கு வாயூறி நின்ற முருகன் தமிழ் நாட்டவரால் முதன்முதல் காணப்பட்ட இறைவனாயினும், அவன் எல்லா உயிர்களையும் நடத்தும் ஆண்டவனாயிருக்கின்றான். அவனது நோன்பும் வழிபாடும் எல்லார்க்கும் உரியன. அவனை அந்த அந்த நாட்டவர்கள் அவரவர் நாட்டு மொழியில் பல பெயரிட்டு வழிபடுகிறார்கள்.

**வேறு பெயர்கள்**

ஒரு நாமமும் ஒருருவும் இல்லா இறைவனை ஆயிரம் பெயர்கள் சொல்லி அழைப்பர். ஆறுமுடிக்கும் அரனை அடியார்கள் பல பெயரிட்டு அழைத்தது போல, ஆறுமுகக் குமரனையும் நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந்துருக அழைத்து மகிழ்கின்றனர். வேலன் கந்தன், சுப்பிரமணியன், கார்த்திகேயன், சரவணபவன், குமரன், சண்முகன், தாரகாரி, கிரௌஞ்சயேதனன், சக்திதரன், தேவசேனாதிபதி, சேனாதிபதி கஜவாகனன், மயில்வாகனன், சேனாளி, பிரம்மசாஸ்தா, பாலசுவாகி, சீகிவாகனன், வள்ளி கல்யாணசுந்தரன், அக்கினிஜாதன், சாரபேயன், குகன், பிரம்மச்சாரி, தேசிகன், காங்கேயன் எனப் பல பெயர்களில் முருகன் அழைக்கப்படுகிறான்.

இப்பெயர்களில் ஒரு முகம், ஆறுமுகமும் உள்ள வடிவாக விளங்குவதுடன், இரண்டு கைகள், பன்னிரண்டு கைகள், ஆறு கைகள், பத்துக் கைகள், பன்னிரண்டு கைகள் உள்ள வடிவாகவும் முருகன் வடிக்கப்பட்டுள்ளான். சத்துவ நிலையும் ஒரு கரங்களும், இராஜச நிலையில் நான்கு கரங்களும் அமைக்கப்பட்டுள்ளன. எல்லப்பன் என்ற பெயர் முருகனைக் குறிக்கும் என்றும் எல்லக் கதிர்காமமே பின்னர் செல்வக் கதிர்காமமாகத் திரிந்தது என்றும் கூறுவர்.

மேற்குறித்த பெயர்களுள் கந்தன் என்பது சேர்க்கப்பட்டு சத்துருக்களை அழிப்பவன் என்றும், வேள் என்பது விரும்பப்படுபவன், தலைவன் என்றும், சாமி என்பது எல்லாம் உடையவன், உலக உயிர்கள் எல்லாவற்றையும் தனது உடைமைப் பொருளாகக் கொண்டவன் என்றும், குகன் என்பது காப்பவன், இருதயக் குகையில் இரகசியமாக அருள்பவன் என்றும், கார்த்திகேயன் என்பது கார்த்திகைப் பெண்களால் வார்க்கப்பெற்றவன் என்றும், சரவணபவன் என்பது கங்கைக் கரையிலுள்ள தருப்பைவனத்தில் அருவுடன் காட்சியளித்தவன் என்றும், கடம்பன் என்பது கடம்ப மலர் மாலையைத் தரித்தவன் என்றும், விசாகன் என்பது விசாக நாளிற் பிறந்தவன் என்றும், காங்கேயன் என்பது கங்கையில் தோன்றியவன் என்றும், குமரன் என்பது என்றும் இளமையுடைய குமரத்தன்மை உடையவன், தாழ்ந்த குறிக்கோளை

அழிப்பவன் என்றும் பொருள்படும். இப்பெயர்களே, ஆறுமுகங்களின் பண்புகளில் விளக்கமாக அமைகின்றன. இவ்வாறு பொருள் கொள்வதற்குக் கந்தபுராணம் செய்யுட்கள் பலவும் சான்றாக உள்ளன.

**தோற்றம் பற்றிய பல்வேறு கதைகள்**

காலத்துக்குக் காலம் முருகனைப் பற்றிய வரலாறு வேறுபடுவது போலவே இடத்துக்கு இடம் கூட வேறுபடுகிறது. சூரபத்மனை அழிக்கத் திருவுளங் கொண்ட வரம் பொருள் ஆறு ஆதாரங்களிலுள்ள ஆறு ஆற்றல்களையும் ஆறு முகங்களாக்கி, அவற்றின் நெற்றிக் கண்களிலிருந்து ஆறு தனித்தனித் தீப்பொறிகளை வெளிவரச் செய்து அவற்றால் ஆறு தனித் தனிக் குழந்தைகள் தோற்றம் பெறச் செய்து இவ்வாறு தோற்றம் பெற்ற ஆறு குழந்தைகளையும் 'அறுவர் பயந்த சூறமர் செல்வ' என்று ஆறுபேர் பெற்று ஆறு குழந்தைகளாகவே முருகனை முதன்முதல் அமைத்துக் காட்டுகின்றது திருமுருகாற்றுப்படை.

இறைவன் பல காலத்தில் பல இடங்களில் பல அன்பர்களுக்குப் பல வகைப் பேறுகளை அளிப்பதற்கென்றே கொண்ட திருவுருவங்களுள் முருகன் திருவுருவமும் ஒன்று. ஈசனே அவன் ஆடலால் குழந்தையாக ஆனான். தனக்குத் தானே மகனாகிய தத்துவன் அவன். பரமனோடு வேறுபட்டவன் அல்லன். மாற்றம் மனம் கழிய எங்கும் நீக்கமற நின்று எல்லாவற்றையும் தன்னகத்தே தாங்குவதால் பிரம்மம் எனப்படுகின்ற இந்த நிலை யோகிகளுக்குப் புருவ மத்தியில் ஆயிரம் இதழ்களையுடைய தாமரை மேல் சோதியாகக் காட்சியளிக்கும் அந்த சோதியே இவ்வுலகம் உய்ய அழகிய உருக் கொண்டு குழந்தை உருவில் வந்ததென்பர்.

*"அருவமும் உருவமாகி அனாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்*
*பிரம்மமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாக"*

என்ற வரிகள் இதனை விளக்கும். ஞானியர் அடிகள், மனவாசமும் கடந்தவன் பரமசிவத்தின் புருவ மத்தியில் அழற் கண்ணினின்றும் சோதியாகத் தோன்றிய நிலம், நீர், தீ, வளி, வான் ஆகிய ஐம்பொருள் உறவு கொண்டு, சரவணப் பொய்கையில் தாமரை மலர் மேல் ஆறுமுகமும், பன்னிரண்டு கைகளும் கொண்டு முருகனாகத் திரு அவதாரம் செய்தான் என இதற்கு விளக்கம் தருகின்றார்.

*மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினால் அளக்கொணாமல்*
*நிறைவுமா் யாண்டும் ஆகி நின்றிடும் நிமல மூர்த்தி*
*அறுமுக உருவாய்த் தோன்றி அருளொடு சரவணத்தில்*
*வெற்றிகமழ் கமலப் போதில் வீற்றிருந் தருளினானே.*

காளிதாசர், தமது குமார சம்பவத்தில், பார்வதி தன் அழகால் சிவனைக் கவர முடியாமற் போகத் தன் பணிவிடையின் மூலம் அவர் உள்ளத்தில் அன்பு பெற்று அதன் விளைவால் குமரன் தோன்றியதாகக் கூறுவர்.

மகாபாரதம் வன பருவத்தில் கந்தன் பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது. அதில் தட்சனுடைய மகள் 'சுவாகா' என்பவள் அக்னி பகவானிடம் காதல் கொண்டதாகவும் ஆனால் அக்னிபகவான் ஏற்கனவே கிருத்திகைப் பெண்களிடத்தில் காதல் கொண்டமையால் சுவாகாவின் காதலை மறுக்க, அதனைக் கண்டு அவள் தானே ஏழு கார்த்திகைப் பெண்களைப் போல் உருவெடுத்து அக்னியுடன் கூடியதாகவும் அதன் விளைவே ஸ்கந்தனுடைய குணங்களையெல்லாம் வாய்க்கப் பெற்ற ஒரு மகவு உதித்தது என்றும் சொல்லப்படும் முருகன் தோற்றத்திற்கும் வடமொழி ஸ்கந்த புராணத்தில் சொல்லப்படும் முருகன் தோற்றத்திற்கும் வேற்றுமை இருக்கிறது.

முருகன் தோற்றம் மற்றுமுள்ள புராணங்களில் இன்றும் பலவாறு பேசப்படுகிறது. பரிபாடல் முருகனைப் பற்றிப் பதிப்புரை பகர்ந்திருக்கின்றது. சிவாகமங்கள் சில தேவருள் முருகன் ஒருவன் என்று சொல்லுகின்றன.

**ஆறு என்ற எண்ணின் சிறப்பு**

ஆறு என்ற எண்ணிக்கை மிக்க மகிமை வாய்ந்தது. இறைவனுக்குரிய பண்புகள் ஆறு. அவை மங்கலம் நிறைவு, இளமை, இடர் களைதல், ஆற்றல், பேரொளி என்பன. எனவே இவனைப் பகுவன் என்பர். பகம் என்றால் ஆறு எனப் பொருள்படும். வள்ளலாருக்கு அருள் கிடைத்தது நூறு வயதில் 'சகரமொடு ஆறும் ஆனோன்' என்று பாடிய குமரகுருதாசரின் மொத்தப் பாடல்கள் 6666 அருட்பா திருமுறை ஆறு, துரிய நிலையும் ஆறு, சமயங்கள் ஆறு, ஆதாரங்கள் ஆறு, தத்துவங்கள் ஆறாறு. அருள் காரணத்தால் தோன்றிய இறைவன் திருவடிவம் மந்திரம் பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை ஆகிய அத்துவாக்கள் (வழிகள்) ஆறு. படிமத்தை அழகுற அமைப்பதற்குத் தேவையான அளவுகள் (மானங்கள்) ஆறு. இச்சிறப்புக் கருதியே ஆறுமுகக் கடவுளோடு தொடர்புடைய பலவற்றை ஆறாகக் கருதுவதில் இன்பங்கண்டனர். ஆறு நட்சத்திரங்களைக் கொண்டது கிருத்திகை. திதியில் ஆறாவது 'சஷ்டி' இரண்டும் ஆறுமுகப் பெருமானுக்கு உரிய நாளாவது போல் அவன் உறையும் இடங்களை, ஆறு படைவீடு என்கின்றனர். பெரும்பொழுது ஆறு, சிறுபொழுது ஆறு, ஆறு என்ற எண் பலவகைகளில் சிறப்புடையதாய் இயங்குகின்றது.

**முடிவுரை**

கந்த புராணத்தில் ஆறுபடைகள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு துதியைக் கச்சியப்ப சிவாசாரியார் அமைத்திருக்கின்றார் என்பது குறிப்பிடத்தக்கது.

